உ

கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள் அருளிச்செய்த

# கந்தபுராணம்

நான்காவது

# யுத்தகாண்டம்

உரையுடன்

(முதற்பகுதி)

卐

உரையாசிரியர்:

நவாலியூர் வை. நல்லையா அவர்கள்

ஆனந்த வருஷம் ஐப்பசித்திங்கள் 29ம் நாள் வெள்ளிக்கிழமை
(15–11–1974.)

# முகவுரை

உன்னற் கரிதாகி உயிர்க்கு உயிராய் நின்றருளும்; வள்ளல் முருகப்பெருமான் இன்னருள் நிலையால் மானிப்பாய் வேலக்கை பிள்ளையார் கோவிலில் நடைபெற்று வந்த கந்தபுராண விரிவுரையின் போது; அங்குதினமும் வந்து அப்புராணத்தை கேட்டு உவந்த அடியார்கள் அங்குகாட்டிய ஆதரவினுல் கந்தபுராணம் முழுமைக்கும் ஓர் உரை எழுதி வெளியிடவேண்டும் என்னும்ஆசைகொண்டு இப்புராணத்திற்கு உரை எழுதி அச்சிட்டுவெளியிடத் தொடங்கி இப்போது நான்காவது பகுதியாகும் யுத்தகாண்டம் வெளியிடப்படுகின்றது.

இப்பணியை அடியேன் எம்பிரான் அடியார்கள் அவரின் திவ்விய சரிதத்தை படித்து இன்புற வேண்டும் என்பதற்காக கந்த புராணப் பாடல்களுக்கு யாவரும் விளங்கிக் கொள்ளக்கூடிய முறையில் மிகு இலகுவான வார்த்தைகளால் இப்புராணத்திற்கு உரை எழுதியுள்ளேன். அடியேனுடைய இந்த உரையை எல்லாம் வல்ல ஈசன் ஏற்றருள்வார் என எண்ணியே இப்பணியைச் செய்துள்ளேன்.

கந்தபுராணத்தில் உள்ள 6 காண்டங்களில் பாடலால்தொகை பெற்றது நான்காவது யுத்தகாண்டமே. அடுத்தபடி பாடல் தொகை குறைவாக உள்ளது ஐந்தாவது தேவகாண்டம். முன்னது 2967 பின்னது 421 திருவிருத்தங்களாக உள்ளமையின் இப்போது இதில் 1922 பாடல்களைக் கொண்டதாக யுத்தகாண்டத்தின் முதற் பகுதிவெளியாகின்றது. யுத்தகாண்டத்தில் மிச்சமாக உள்ளஅதன் இரண்டாம் பகுதியும் தேவகாண்டம் முழுமையும்சேர ஐந்தாவது புத்தகமாக வெளியிடப்படும். அவைகள் அச்சாகி வருகின்றன.

இந்த யுத்த காண்டத்தின் பெருமையைப்பற்றி இங்குஎடுத்து விரித்துக் கூறல் அரிது. அன்பர்கள் அதனை ஓதும்போது உணர்வார்கள். போரினது சிறப்பும் விறுவிறுப்புமே பாடல்களில் தொனிக்கும்படி அப்பாடலியல்பே அமைந்துளது. இங்கு இப்போர் சிறைப்பட்டதேவரைச் சிறை நீக்கி தருமமும் தவமும் தழைத்தோங்கிட வேதநெறியை உலகிற்கு தந்திடும்படி அல்லற்பட்டாரை ஆதரித்து அருளிட நடந்த போராகும். உலகில் பிறந்த எமக்கெல்லாம் இனிதாகப் பெறவேண்டியது இறைவனுடன் பெறுகின்ற இன்பம். அந்த இன்பத்தை பெறமுடியாதபடி எம்மைத் தடுத்து அடிமைப்படுத்துகின்ற மாயபந்தங்களை அநேகமாக எல்லா இடங்களிலும் இதனைப் பாடிய ஆசிரியர் அசுரர் தாங்கிடும் படைகளுக்கும் அசுரரின் சேனைகட்கும் எடுத்து உவமிக்கின்றார். (உ-ம்) அக்கினிமுகாசுரன் வதைப்படலம் 22-31 பாடல்களை நோக்குக.

இதுவன்றியும் சிவபிரானது மேன்மைகளையும் முருகப்பிரானது மேன்மைகளையும் இரணியன் யுத்தப்படலம்முற்பகுதியில் அற்புதமாக பேசுகிறார் ஆசிரியர். உன்னவும் முடியாத சோதியே ஆறுமுகமுடைய கடவுளாகவந்தது. அதனை நாம் முருகன் என்றும் கந்தன் என்றும் காங்கேயன் என்றும் பேரிட்டழைப்பதே எமது பேதைமையைக்காட்டும் எனக் கூறுவதால் எத்துணைச் சிறப்புடைய ஞானஉணர்வு பெற்றுள்ளார் இதன் ஆசிரியர் என்பது தெளியப்பெறுகின்றது.

இரண்டாம்நாட் சூரபன்மன் யுத்தப்படலத்து சூரபன்மன் முன் எம்பிரான் போர்க்கோலமுடன் தோன்றிடும் அதனையும் அதனைப்பெறு கின்ற சூரனின் பேறுபற்றிய கருத்துக்களையும் இதன் ஆசிரியர் பேசிடும் போது எவரது சிந்தையையும் உருக்கி மலரவைப்பதுடன் உவகைக் கண்ணீருடன் இன்பம் விளங்கும்படியிருக்கிறது. இறைகளோடு இயைந்த இன்பமும்; அலைப்புறும் மனைவாழ்க்கையில் நாம்நன்றென எண்ணும் அவ்வின்பமும் எத்துணை வித்தியாசமுடையதென்றே; கொடிய சூரபன் மனை ஆ! இவன் தவத்திற்கன்றி அறத்திற்கும் முதல்வன் என எம்பி ரானுடையதரிசனம் எத்துணை மேலானது என சொல்லாமல் சொல் கிறுர் இதன் ஆசிரியர். இக்கருத்தை அருணகிரிநாதரும் புவிக்குன் பாத மதுதனை நினைப்பவர்க்குன் பாததரிசனைபுலக்கண்கூடும் அதுதனை நினை யாதே புரட்டும் பாவ சமயிகள் நெறிக்கண்போது படிறரை; என அறபுதமாகப்பேசுவதை நாம் அறிவோம்.

இவ்வுலகில் உண்டு உடுத்து மகிழ்ந்து கொண்டாடி உலகில் பலசு கங்களை போகங்களை பெருமையை பதவியை வேறுள்ள சிறப்பை சீரை அனைத்தையும் அடைகின்ற பேறுடைய பெருவாழ்விலும் மேலாக இன் னென்று இறவாதஇன்பமாக உளது. அதை இந்த உடலுடன் நாடிக் காணலே புத்தியின் கூர்மையாகும் என்று பலவிடங்களில் அதிநுட்பமாக இதன் ஆசிரியர் பேசுகின்ருர்.

எத்துணைச் சிறப்புமிலா அடியேன் எடுத்துக்கொண்ட இப்பணியோ மிகவும் பெருமையும் மேன்மையுமுடையது, ஆகவே பல்லாயிரக்கணக் கான ரூபாய் செலவுடைய இப் புராணத்தை வெளியிடும்பணி எப் படி நடைபெறுகிறது எனக் கூறினுல் அது நின் விதியின் விளையாட்டு என நான் சொல்வேன். இந்தப்பணியை யான் செய்திடுதற்கு எத் தனையோ பெருமக்கள் இலங்கை நகரின் பலபாகங்களிலுமிருந்து ஊக்கு வித்தனர். இப் பணியின் சிரமத்தைநோக்கி நான் சலிப்புற்றபோதெல் லாம்கூட இனிய நன்மொழிகளாலும் உதவிகளாலும் எனைக் கைதூக்கி உதவிய பெருமக்களுக்கு எனது பணிவான வணக்கத்தை செலுத்து கின்றேன்.

இப் பாடலால் மிகுந்து விளங்கிய இந்தயுத்தகாண்டத்தை அச்சி டுவதற்கு மிகு சிரமப்பட்டபோது எமது தோன்ருத்துணையான பெரு மானுக்குப் பெரிய அன்பரானஸ்ரீ லங்கா அச்சக முதல்வர் எனது நிலை கண்டு தமது அச்சகத்தில் இதை அச்சிட்டுத் தந்து உதவியமைக்காக அவருக்கும், இப்புராணத்தை மிகு அன்புடன் அச்சிடத் துரிதமுடன் பணிபுரிந்த ஊழியர்களுக்கும், அதேபோல் சண்முகநாத அச்சக முதல்வ ருக்கும் அதன் ஊழியர்களுக்கும் எனது நன்றியை தெரிவிக்கின்றேன். அடியேனுடைய இந்தப் பதிப்பை ஏற்று ஓதி இன்புற்று அனைவரும் வாழ்ந்திடுக.

இப்படிக்கு
**வை. நல்லையா**
**உரையாசிரியன்.**

**உயரப்புலம்,**
**கொக்குவில் மேற்கு,**
**கொக்குவில். (இலங்கை)**

**15-11-74.**

## இதனுள் அடங்கியவை



ஆகத்திருவிருத்தம் 1922.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம்

---

நான்காவது

## யுத்த காண்டம்

### 1. ஏமகூடப் படலம்

நாரண னென்னுந் தேவும் நான்முகத் தவனும் முக்கட்
பூரணன் தானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
ஆரண முடிவுந் தேரு அநாதியாய் உயிர்கட் கெல்லாம்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.

உலகினைக் காக்கும் நாராயணன் என்னும் தேவனும் படைத்தருளுகின்ற பிரம தேவனும் சங்காரம் செய்தருளும் மூன்று கண்ணுடைய சிவமூர்த்தியும் தானேயாகி பூமியைப் படைத்தும் காத்தும் அழித்தும் நிகழ்த்துகின்ற பேராடலைச் செய்து நின்றானும்; அன்றும் இன்றும் என்றும் வேதங்களின் முடிந்த முடிபு என்னும் நிலையாலுமே உணர்ந்திடமுடியாதபடி எப்பொருட்கெலாம் அநாதியாய் உயிர்கள் யாவும் தோன்றி கண்டு கேட்டு உண்டு உயிர்த்து வாழ்தற்கெல்லாம் காரணனாகியே மேலாம் சோதியாய சிவசுப்பிரமணியப் பெருமானின் திருவடி மலர்களை எம் கருத்தில் வைப்பாம்.

நிலையில்லா உடலின் எடுத்துள்ள இப்பிறவியின் பேறுகும் நித்தியப் பொருளாகும் சோதியும் அறிவும் அறியாமையும் கடந்த திருமேனியுடையவருமான முருகன் சேவடிகளை நினைவில் கொள்வாம்.

உடலின் இயல்பு நிலையற்ற பொருள்கள் மேல் இச்சை கொண்டு நிற்றல். அவ்வண்மையும் அழிவிலாத நித்தியா நித்திய விவேகத்தை நாடுவோம் என்று கூறிப் பிட்டார் என்க.

திண்ணிய அவுணர் தம்மைச் செற்றிட இன்னே செவ்வேற்
பண்ணவன் ஏகும் எல்லா அமரரும் பாங்கிற் செல்வர்
துண்ணென யானும் ஏகா தொழிவது சூழ்வன் றென்று
எண்ணிவந் திடுவான் போல இரவிவந் துதயஞ் செய்தான். 1

(திருச்செந்தூரில் முருகப்பிரான் அமர்ந்தருளிய அன்று இரவு கழிந்து சூரிய உதயம்.)

நின்மை குன்றாது உலகினை உலையவைத்த அசுரர் கிளையை அழித்தருள இப் பொழுது செம்மையான வேலைத் திருக்கரத்து ஏந்தியருளிய கடவுள் செல்வார். எல் லாத் தேவர்களும் எம்பிரான் பாங்கராக சூழ்ந்து செல்வார்கள். அக்காலையில் சடுதி யாக யாரும் போகாது நிற்பது புத்தியுடைய சருமம் அல்ல என்று எண்ணிக் கொண்டு விரைவுடனாக வருவான் போல சூரியதேவன் வந்து உதயம் செய்தான். 2

இரவிவந் துதய வெற்பின் எய்திய காலை தன்னின்
அரியணை மிசையே வைகும் அறுமுகங் கொண்ட அண்ணல்
பிரமன் மால் மகவான் தேவர் முனிவரர் பிறருங் கேட்ப
வரமிகு சிறப்பின் வீர வாகுவை நோக்கிச் சொல்வான்.

இத்தன்மையாகி வருவான் போன்று உதய மலை மீது சூரியதேவன் சேர்ந்து உலகில் வெளியாகித் தோன்றிடும் காலையில் திருச்செந்தூரிடத்து சிம்மாசனத்தில் வீற் றிருந்தருளிய ஆறு முகமுடைய அண்ணல் தமது பக்கராக வணங்கியவாறு இருந்தி டும் பிரமன் திருமால் இந்திரன், முனிவர்கள் பிறர் யாவரும் கேட்கும்படி வரத் தால் மிகு சிறப்புற்ற வீரவாகுதேவரை நோக்கிச் சொல்லியருள்கின்றார்.

வீரவாகுதேவர்க்கு முருகப்பெருமான் அருள் புரிந்த இந்த வாக்கியம் எல்லா ரும் அறியும்படியாக இருந்தது. 3

பாவமே பயிலுஞ் சூர பன்மனும் அவுண ரானோர்
ஏவரும் முடிவா ராக இமையவர் இடும்பை நீங்க
மாவியல் கின்ற வீர மகேந்திர புரத்துக் கின்னே
போவது புரிது நந்தேர் பொள்ளெனக் கொணர்தி என்றான்.

பாவமே செய்து வாழ்வை நடத்தும் சூரபன்மனும் அசுரரானோர் எல்லாரும் முடிவாகிப் போகிடவும், தேவர்கள் இடும்பைகள் யாவும் நீங்கவும், மகாலெட்சுமி வாழ்கின்ற வீரமகேந்திரபுரம் என்னும் நகரத்திற்கு இப்பொழுது போவதைச் செய் வோம். எனது தேரை இங்கு விரைவாகக் கொணர்வாய் என்று எம்பிரான் அருள் புரிந்தார். 4

வள்ளல்மற் றிதனைச் செப்ப மாலயன் மகவா னாதி
உள்ளபண் ணவர்கள் கேளா உவகையங் கடலின் மூழ்கித்
தெள்ளிதின் எமது துன்பந் தீர்ந்தது தீர்ந்த தென்னாத்
துள்ளினர் ஆடிப் பாடி அவனடி சூட லுற்றார்.

அருள் வள்ளலான முருகப்பெருமான் மற்று இந்த திருவார்த்தையைச் செப் பியருள அதனை திருமால், பிரமன், இந்திரன் ஆதியாக உள்ள கடவுளர்கள் கேட்டு ஆனந்தம் என்னும் கடலிலே மூழ்கியவராய்; அம்மவோ மிகு விரைவாக நமது துன் பம் தீர்ந்துள்ளது. தீர்ந்துள்ளது என்று துள்ளினார்கள். ஆடினார்கள், பாடினார்கள். முறைமுறையாக எம்பிரான் திருவடிகளில் தாழ்ந்து வணங்கி ஐயனுடைய பாதங்களை உச்சிமேல் சூடிக்கொண்டார்கள். 5

ஆயது காலை தன்னின் அரும்பெருங் கயிலை போற்றும்
நாயக நந்தி அண்ணல் நற்கணத் தலைமை பூண்டோன்
சேயதேர் மனவே கப்பொற் றேரொடு வலவன் தன்னைக்
கூயினன் கொண்டு வல்லே குமரவேள் முன்னர் உய்த்தான்.

அவ்வாறாகிய நேரத்தில் அடைதற்கு அருமையாகி நிலவிடும் பெருங் கைலாய மலையைக் காவல் புரிந்தருளுகின்ற நாயகரான நந்தியெம்பெருமானின் நல்ல கணத்தில் தோன்றிய வீரர்கட்கு எல்லாம் நல்ல தலைமைப் பாட்டைப் பெற்றுடையவரான வீரவாகுதேவர் செவ்வொளியால் நிறைகின்ற அரியதான மனோவேகம் என்னும் பொற்தேருடன் வரும்படி அதன் சாரதியான வாயு பகவானைக் கூவி அழைத்திட்டு அத்தேரைக் கொண்டு விரைவுடன் குமரக்கடவுள் திருமுன்பு சேர்த்தார். 6

முன்னுற மருத்தன் தூண்டு முரண்டரு தடந்தேர் நண்ண
அன்னதை அருளின் நோக்கி அறுமுகம் படைத்த அண்ணல்
பன்னெடுஞ் சீயந் தாங்கும் பைம்பொனின் தவிசு தன்னின்
மன்னினன் இருத்தல் நீங்கி எழுந்தனன் மறைகள் போற்ற.

எம்பிரான் திருமுன்பாக வாயுபகவான் செலுத்திடுகின்ற வலிமை மிகுந்த மனோவேகம் என்னும் தேர் வந்து சேர்ந்துகொள்ளலும் அத்தேரை அருளால் பார்த்து ஆறு முகம் கொண்ட எமது ஐயன் பலவாகிச் சிறந்த நெடிய சிங்கங்கள் தாங்கிடும் பசும் பொன்னினால் செய்துள்ள சிம்மாசனத்தில் பொருந்தி இருத்தலை விடுத்து எழுந்தருளினார். வேதங்கள் யாவும் ஓம் சரவணபவா சண்முகா என ஆர்ப்பெடுத்து போற்றிட. 7

மாறில்பொன் சுடரும் மேரு வரைமிசை இருமூ வெய்யோர்
வேறிலா தொருபாற் பட்டு விளங்கிவந் திவரு மாபோல்
ஆறுமா முகத்தெம் மையன் அனையதொல் இரத மீக்கண்
எறினன் ஏறிச் சூழ்வோர்க் கினையதொன் றியம்பு கின்றான்

இவ்வாறு எழுந்தருளிய ஆறு முகமுடைய எம்பெருமான்; மாறுபாடு இலாது பொன்னொளியாய்ப் பரவிடும் மேருமலையின் மீதாக ஆறு சூரியர்கள் வேறுபாடின்றி ஒருங்குடன் சேர்ந்து விளங்கி வந்து ஏறிடும் தன்மை போன்று; அந்த மனோவேகம் என்னும் மிக முதியதான ஒளி கொண்ட தேர் மீது ஏறியருளினார். அருள் நிறைவுடன் தேர் மேலாக எம்பிரான் ஏறிக்கொண்ட பின்னர் தம்மைச் சூழ்வோராகின்ற திருமால் பிரமன், வீரவாகுதேவர் முதலியோர்க்கு இனையதோர் வார்த்தையை விளம்பியருள்கின்றார். 8

வார்திரை அளக்கர் நாப்பண் வரம்பிலா அளவைத் தாகிச்
சீர்திகழ் மகேந்தி ரப்பேர்த் திருநகர் முன்னர் ஏகிச்
சூர்தனை அடுவான் போதுந் துண்ணென நீவிர் நுந்தம்
ஊர்திகள் தம்மில் மேவி ஊர்ந்திவண் வருதி ரென்றான்.

நாம் இவ்வேளை ஓயாது தோன்றிடும் திரைகளையுடைய கடலின் நடுவணாக எல்லை காண்பரிய அளவுடையதாய் சிறப்புடன் திகழ்ந்திருக்கும் வீரமகேந்திரம் என்னும் பெயருடைய திருநகர் முன்பாகச் சென்று சூரபன்மனைச் சங்காரம் செய்யுமாறு போகின்றோம். விறுவிறென நீவிரும் உங்களது ஊர்தியாகும் வாகனங்கள் மீது ஏறி எம்முடன் இவ்விடத்து வருவீராக என்று அருள் புரிந்தார். 9

இப்படி முகமாறுள்ள எம்பிரான் இசைத்த லோடும்
அப்பணி இசையா வேதன் அன்னத்தும் ஆழி மேலோன்
ஒப்பரும் உவண மீதும் உம்பர்கோன் மான மீதுஞ்
செப்புறும் ஏனை விண்ணோர் தத்தமூர் தியினுஞ் சேர்ந்தார்.

இப்படியாக ஆறு முகம் உள்ள எம்பெருமான் இசைத்தவுடன் அத்தம் பணியினை ஏற்றுச் சம்மதித்து பிரமதேவன் தனது வாகனமாகும் அன்னத்தின் மீதும் பாற்கடற் துயில்வோனும் விஷ்ணு மூர்த்தி ஒப்பற்ற பெருமையுடைய கருடன் மீதும் தேவர்க்கு அரசன் இந்திரன் விமானத்தின் மேலும் இன்னும் அங்கு நின்ற ஏனைய தேவர்கள் தங்கள் தங்கள் வாகனங்கள் மீதும் ஏறிக்கொண்டார்கள். 10

அந்தமில் இலக்கத் தோரும் அவரலா எண்மர் தாமும்
மந்தரம் உறழும் வீர வாகுவாம் வன்மை யோனும்
எந்திர வயமான் தேரின் வீற்றுவீற் றேறி யார்க்குஞ்
சிந்தையி னானும் எட்டாத் தேவர்க டேவற் சூழ்ந்தார்.

எக்காலமும் முடிவிலாத இலக்கம் வீரரும் அவர் அல்லாத மற்றையோராகும் வீரவாகுதேவரின் தம்பிமார் எட்டுப்பேரும் மந்தரமலையை ஒத்த வலுவுடைய வீரவாகு என்னும் வன்மையுடையவரும் இயந்திரங்கள் போன்ற வீரக்குதிரைகள் பூண்ட தேர் மேலாக ஒவ்வொருவரும் முறையாக ஏறிக்கொண்டு; யாவருடைய சிந்தைக்கும் எட்டொணாது திகழ்ந்திருக்கும் தேவாதி தேவனை ஆறு முக நாதனைச் சூழ்ந்துகொண்டனர். 11

சுப்பிரன் மேக மாலி சுவேதசி ரீடன்க பாலி
அப்பிர சித்துச் சித்தி ராங்கனே சுவால தாலு
ஒப்பில்வச் சிரனே வீமன் உக்கிரன் உக்கி ரேசன்
பிப்பிலன் நந்திசேனன் பிரமசன் பிரம சேனன்.

( இப்பால் நூற்றெட்டு பூத சேனாதிபதிகளின் வருகை: )

இவ்வாறான காலையில் பூதசேனைத் தலைவர்களாகும் சுப்பிரன் மேகமாலி சுவேத சிரீடன் கபாலி அப்பிரசித்து சித்திராங்கன் சுவாலதாலு ஒப்பில்லாத வலியுடையவச்சிரன் வீமன் உக்கிரன் உக்கிரேசன் பிப்பிலன் நந்திசேனன் பிரமசன் பிரமசேனன் என்பாரும். 12

பதுமனே கராளன் தண்டன் பத்திரன் பரிக நேமி
உதவகன் புட்ப தந்தன் உருத்திரா காரன் வீரன்
மதிசயன் கேது மாலி வக்கிரன் பிரம கேசன்
அதிபதி கலிங்கன் கோரன் அச்சுதன் அசலன் சாந்தன்.

பதுமன் கராளன் தண்டன் பத்திரன் பரிகன் நேமி உதவகன் புட்பதந்தன் உருத்திராகாரன் வீரன் அதிசயன் கேதுமாலி வக்கிரன் பிரமகேசன் அதிபதி கலிங்கன் கோரன் அச்சுதன் அசலன் சாந்தன் என்பாரும், 13

சித்திர சேனன் பூரி சுசிலன்மா சயனே சிங்கன்
உத்தர மடங்கற் பேரோன் உபதிட்டன் சயனே ஈசன்
மத்தகன் மதங்கன் சண்டி மகாபலன் சுவேதன் நில
பத்திரன் சுவாகு அண்டவா பரணனே காச பாதன்.

சித்திரசேனன் பூரி சுசிலன் மாசயன் சிங்கன் உத்தரசிங்கன் என்னும் பெயருடையவன் உபதிட்டன் சயன் ஈசன் மத்தகன் மதங்கன் சண்டி மகாபலன் சுவேதன் நீலபத்திரன் சுவாகு அண்டவாபரணன் காசபாதன் என்பாரும். 14

பிங்கலன் சமானன் மாயன் பிறங்கிய நிகும்பன் கும்பன்
சங்கபா லன்வி சாகன் சதநாவன் அயக்கி ரீவன்
அங்கையா யிரத்தன் செங்கண் ஆயுதத்தன் அனந்தன் வாமன்
மங்கல கேசன் சோமன் வச்சிர மாலி சண்டன்.

பிங்கலன் சமானன் மாயன் பெருமை விளங்கிய நிகும்பன் கும்பன் சங்கபாலன் விசாகன் சதநாவன் அயக்கிரீவன் ஆயிரங் கையன் பதினாயிரஞ் செங்கண்ணன் அனந்தன் வாமன் மங்கலகேசன் சோமன் வச்சிரமாலி சண்டன் என்பாரும், 15

அசமுகன் சரபன் குந்தன் ஆடகன் கவந்தன் மேகன்
விசயன்வித் துருமன் தண்டி வியாக்கிரன் கால பாசன்
தசமுகன் குமுதன் பானு தனஞ்சயன் இடப ரூபன்
சசிமுகன் அனல கேசன் சுபத்திரன் கேது மோகன்.

அசமுகன் சரபன் குந்தன் ஆடகன் கவந்தன் மேகன் விசயன் வித்துருமன் தண்டி வியாக்கிரன் காலபாசன் தசமுகன் குமுதன் பானு தனஞ்சயன் இடபரூபன் சசிமுகன் அனலகேசன் சுபத்திரன் கேதுமோகன். 16

மத்தனுன் மத்தன் நந்தி மனோபவன் வாயு வேகன்
பத்துநூ றடிகள் பெற்றோன் பானுகம் பன்ப தங்கன்
சுத்தனே அனிகன் சீதன் சுஜாதனே சுமாலி மாலி
அத்திரி அவுணர் கூற்றன் அரிகேசன் சுவால கேசன்.

மத்தன் உன்மத்தன் நந்தி மனோபவன் வாயுவேகன் ஆயிரம் காலன் பானுகம் பன் பதங்கன் சுத்தன் அனிகன் சீதன் சுஜாதன் சுமாலி மாலி அத்திரி அவுணகாலன் அரிகேசன் சுவாலகேசன் என்பாரும். 17

இங்கிவர் பூத வெள்ளத் திறையவர் ஒருநூற் றெண்மர்
பொங்குவெஞ் சினத்தர் எல்லாப் புவனமும் அடவென் றாலும்
அங்கொரு நொடிப்பின் முன்னர் அடுபவர் ஆடல் மிக்கோர்
சங்கையில் வலியோர் யாருஞ் சண்முகத் தவனைச் சூழ்ந்தார்.

பூதங்களாய வெள்ளங்கட்கு சேனாதிபதியாகும் இந்த பெருடைய ஒரு நூற்றெட்டுந் பேர்களும் எவ்வகையாகும் இயல்புடையோர் என்றால்; பொங்கியெழுகின்ற கொடும் சினமுடையவர்கள். இவர்கள் எல்லா உலகங்களையும் அழிக்க என்றாலும் அங்கு அச்செயலை ஒரு நொடிப் பொழுதின் முன்பாக முடிக்கவல்லவர். பெருமையுடைய போர்களைச் செய்யவல்லவர்கள். எத்தகைய குறைவுமில்லாத பெருவலியுடையவர்கள் இவர்கள் எல்லாருமாக சண்முகப்பெருமானைச் சூழ்ந்துகொண்டனர். 18

ஏயெனப் பகரும் முன்னம் இவ்வகை எவருஞ் செவ்வேத்
சேயினைச் சூழ்ந்த லோடுஞ் செய்கைமற் றதனைக் காணாஉ
மாயிருட் பரவை ஞாலம் வரைக்குலம் பனிப்ப ஆர்த்திட்
டாயிரத் திரட்டி வெள்ளத் தனிகமும் எழுந்த அன்றே.

'ஏ' என்று சொல்வதற்கு முன்பாக இந்த வகையில் பூதசேனுதிபதிகளும் இலக்கம் வீரருமாகிய எல்லாரும் செம்மை பொருந்திய அருள் நிறைவாகும் வேலினைத் திருக்கைக்கொண்ட குழந்தை வடிவாகும் பெருமானைச் சூழ்தலோடும் இவரின் செய்கையைக் கண்டு கண் களிப்பாகிப் பரவசமுற்று அரகரா என ஆரவாரிக்கத் தொடங்கியது அங்கிருந்த பூத வெள்ளம் யாவும். அந்தப் பூதங்கள் போட்ட சத்தத்தினால் மலைக்குலமும் பெரும் இருள்வடிவாகும் கடல் சூழ்ந்த உலகமும் நடுங்கியது. இவ்வாறு அன்பின் பெருக்கால் ஆறுமுக ஐயனைத் தொழுது இரண்டாயிரம் வெள்ளம் பூதங்களும் எழுந்துகொண்டன. 19

எழுந்தன அனிக வெள்ளம் ஈண்டிய எங்கும் விண்ணோர்
பொழிந்தனர் பூவின் மாரி பூதர்தங் தெழிப்பு விண்ணும்
ஒழிந்திடு திசையும் பாரும் உற்றன உலைந்த தாழி
அழிந்தன கருவி வானம் அண்டம்நெக் குடைந்த மாதோ.

எழுந்துகொண்ட பூதவெள்ளம் எங்கும் பரந்தது. தேவர்கள் யாவும் பூக்களினைப் பல திக்கிலிருந்து எம்பிரான் தேர்மீது பொழிந்தார்கள். பூதங்கள் போடுகின்ற சத்தம் வானமெங்கும் அவை நீங்கிய திசையும் பூமியும் எங்கும் செறிந்தன. சமுத்திரம் நிலைகெட்டு உலைந்தது. சூரிய சந்திரர் முதல் சகலமும் சிறந்திடும் கருவியாகும் வானம் தன் நிலையழிந்தது. அண்டங்கள் யாவும் நெக்கி உடைந்தன. 20

கல்லென இரங்கு பேரி கரடிகை துடியே காளஞ்
சல்லரி திமிலை தக்கை தண்ணுமை படகங் கோடு
வல்லியல் உடுக்கை சங்கம் வான்குட முழவ மாதிப்
பல்லியம் அனந்த கோடி பாரிடம் இயம்பிச் சென்ற.

கல்லென்று இரங்குவதுபோல் ஒலித்திடும் பேரிகை கரடிகை துடி காளம் சல்லரி திமிலை தக்கை மத்தளம் படகம் கொம்பு வலிய இயல்புடைய உடுக்கை சங்குகள் உயர்ந்த ஓசை தரும் குடமுழா ஆதியாகும் வாத்தியங்கள் அனந்த கோடிகளை பூதங்கள் முழக்கிக்கொண்டு சென்றன. 21

கள்ளலம் புற்ற தண்டார் கவினிய மொய்ம்பிற் பூத
வெள்ளமங் கேக லோடும் விரித்தெழு பூழி மாலை
தள்ளருஞ் சுடர்கள் மாற்றி அகிலமுந் தானே யாகி
அள்ளலங் கடலின் பேழ்வாய் அடைத்தது திடரே யாக.

தேன் துளிக்கின்ற மலர்களாலாய மாலைகளை அழகுடன் அணிந்து எழிலுடன் விளங்கும் பூதங்களாகும் வெள்ளம் அங்கு ஏகலோடும் அவர் செல்லும் வேகத்தால் எழுந்துள்ள புழுதியின் வரிசைகள் திரண்டு திரளாகச் சென்று நீக்கிட அரிய சூரிய சந்திரரின் ஒளிகளை மாற்றி எங்கும் பரந்து ஓரே புழுதிமயமாய்ச் சென்று சமுத்திரத்திலும் புகுந்து அதனையும் அடைத்து தூர்த்து திடராகச் செய்தது. 22

கலகல மிழற்றும் நோன்றுட் கழல்புனை பூத வெள்ளம்
வலவயின் எஃகம் ஏந்தும் வள்ளல்தாள் வழுத்திச் சூழ்ந்து
செலவுறு கிரிகள் மானச் சென்றுதந் தலைவ ரோடும்
அலைபொரும் அளக்கர் வேலை அகன்கரை இறுத்த தம்மா.

கலின் கலின் என ஓசை தரும் சிலம்பணிந்த வலியான பாதங்களையுடைய பூதங்களின் வெள்ளம் வலத்திருக்கரத்திலே வேலை ஏந்திடுகின்ற அருள் வள்ளல் ஆறுமுகப் பெருமானின் திருவடிகளை வணங்கிச் சூழ்ந்து செல்கின்ற மலைகளைப்போன்று சென்று சென்று தங்கள் சேனாதிபதிகளோடும் அலைகள் மோதி பொருதிடுகின்ற சமுத்திரத்தின் அகன்ற கரையை நெருக்கி அடைந்திட்டது. 23

மடங்கலை உறழும் மொய்ம்பின் மாபெரும் பூத வெள்ளந்
தடங்கழல் கலிப்பத் தாளிற் சலசல ஒலிப்ப மாறு
நெடுந்திரை அலமந் துள்ள நேமியங் கடலே ஆறு
நடந்தன பொறையாற் றாது சேடனும் நடுக்கம் உற்றான்.

சிங்கங்களை ஒத்திடுகின்ற வலிகொண்ட பெரும் பூதங்களாய சேனையாகும் சமுத்திரமானது இவ்வணம் வீரக்களிப்புடன் புறப்பட்டு தங்கள் கால்களில் அணிந்துள்ள சிலம்புகள் கலின் என ஒலிப்ப அதற்கு மாறாக கடல் நீருடு நடக்கின்ற விசையால் சல சல என நீர் ஒலிப்பச்செல்லும் போக்கினால் சகிக்கொணாது அலமந்து இடர்படும் சமுத்திரமே வழியாகக் கொண்டு பூதங்கள் நடந்தன. இந்நிலையில் இவர்கள் ஏகவும் அதைத் தாங்கிடாது ஆதிசேடனாகிய பாம்பும் நடுக்கங் கொண்டான். 24

படிதவிர் பூத வெள்ளம் படர்தலும் பரட்டின் காறுக்
கடலள வமைந்த தன்றே கனல்விழிச் சுறவு சின்னை
கெடலருந் திமிங்கி லாதி கிடம்போல் உலவா நின்ற
அடியுறை பரலே போன்ற அதற்படு கிரிகள் முற்றும்.

நிகர் பிறிதிலாத பூதமாகும் சேனை வெள்ளம் செல்லுதலும் அந்த பூதங்களின் காலின் பரடு அளவில்தான் சமுத்திரத்தினுடைய அளவு அமைந்தது. இப்போது நெருப்புப் போலும் கண்ணினையுடைய சுறா மீன் சின்னை மீன் கெடுதலில்லாத அருமையான திமிங்கிலங்கள் ஆதிய பெருமீன்கள் எல்லாம் இப்பூதங்களின் பெருவடிவிற்கு ஒப்பிடுகையில் புழுக்கள் போன்று அம்மீன்கள் உலாவிக்கொண்டு நின்றன. அந்த சமுத்திரங்களில் உள்ள மலைகள் முழுவதும் பூதங்கள் காலின் கீழ் உழக்கப்படுகின்ற சிறு பருக்கைக் கற்கள் போன்று விளங்கி நின்றன. 25

தந்திரப் பூத வெள்ளந் தடங்கட லாற்றிற் சார
வெந்திறல் துணைவர் யாரும் விரிஞ்சனும் மாலும் மற்றை
இந்திரத் தலைவன் தானும் இமையவர் பலருஞ் சூழ
அந்தரத் தாற்றிற் சென்றான் அறுமுகன் அணித்திண் தேர்மேல்.

தங்கள் நிலையில் மிகுதிடம் உடைய பூதசேனைகளான வெள்ளங்கள் விசாலித்த கடல் மார்க்கமாக வழிக்கொண்டு செல்ல மிகு திறனுடைய வீரவாகுதேவர் முதலாய இலக்கத்து ஒன்பது துணைவர்கள் எல்லாரும் பிரமதேவனும் நாராயணக் கடவுளும் மற்றைய இந்திரபோகங்களின் தலைவன் இந்திரனும் தேவர்கள் பலரும் சூழ்ந்து உடன்வர அந்தரமார்க்கமாக வழிக்கொண்டு ஆறுமுகமுடைய பெருமான் அழகிய வலுக்கொண்ட தேர்மேல் சென்றருளினார். 26

மாறுபட் டனர்மேற் செல்லும் வயப்பெரும் பூதர் ஏக
ஆறுபட் டமரும் முந்நீர் அலமந்து தெளிவின் றாகிச்
சேறுபட் டிறைய தொன்று தேய்ந்திடு முன்னம் அஃதே
நீறுபட் டெழுந்து சென்றெவ் வுலகமும் நிமிர்ந்து சூழ்ந்த.

தம்முடன் மாறுபட்டார் யாவரெனினும் அவர்மேற் பாய்ந்து போர் புரியும் வெற்றியை உடைய பூதங்கள் செல்ல அவர்கள் சென்றிடும் வழியாக அமைந்த கடல் நீர் அமைந்து கலங்கி தெளிவில்லாது போய் சேறுபட்டது. அப்படி அது இறைப் பொழுது ஒன்றிலே சேறுபட்டதோடு அமையவில்லை. சேறு பட்ட அந்த இறைப் பொழுதின் முன்பே அந்தச் சேறு மேலும் நீருகி எழுந்து சென்று எவ்வுலகங்களி லெல்லாம் நிமிர்ந்து பரந்து சூழ்ந்துகொண்டது. 27

இவ்வகை அயில்வேல் அண்ணல் இராயிரம் பூத வெள்ளங்
கவ்வையின் அமைந்து செல்லக் கனைகடல் வரைப்பின் ஏகி
எவ்வம தடைத்த தொல்லை இலங்கையங் குவடு நீங்கி
மைவரை புரைசூர் மேவு மகேந்திர புரமுன் போந்தான்.

இவ்வகையாக கூரிய வேலுடைய எமது அண்ணல் முருகக் கடவுள் இரண் டாயிரம் வெள்ளம் சேனையாகும் பூதங்கள் வீரத்துடன் ஒழுங்காக அமைந்து சென் றிட கனைத்து இரைகின்ற கடல் மார்க்கமாகச் சென்று முன்னர் இழிகோலத்தை அடைந்துகொண்ட மிக முதுமையான இலங்கை என்னும் மலைநகரத்தையும் நீங்கிக் கடந்து சென்று இருண்ட மலையை ஒத்த சூரபன்மன் வாழ்கின்ற வீரமகேந்திர புரம் என்னும் ஊர் முன் சென்ருன். 28

வேறு

போந்தகாலை அயலின்வந்து போற்றியங்கை கூப்பியே
நாந்தகஞ் சிலைகதை நலங்கொள் சங்குசக்கரம்
ஏந்திஞனும் நான்முகனும் இந்திரத் தலைவனும்
ஆய்ந்துதேடி இன்னதன்மை ஆர்வமோ டியம்பினர்.

இவ்வாறு எமது ஆறுமுகப்பெருமான் வீரமகேந்திரபுர நகரிடத்து போயருளிய நேரத்து எம்பிரான் பக்கராக; வாளும் வில்லும் கதாயுதமும் நலம்கொண்ட சங்கும் சக்கரமும் முதலாய படைகளைத் தாங்கிய கையுடைய நாராயணக் கடவுளும் நான்கு முகமுடைய பிரமதேவனும் இந்திரனுய தேவர் தலைவனும் வந்து தமது அழகிய கை களைக் குவித்து எம்பிரானை வணங்கியவராய் முன்னர் தாங்கள் யாபேரும் ஆராய்ந்து நிச்சயித்துக்கொண்டபடி இந்த தன்மைகளை மனதில் எழுகின்ற பெரும் ஆர்வத்தோ டும் சொல்வாராயினர்; 29

காண்டியீது சூரனூர் கடுங்கண்நீசர் செறிதலால்
ஆண்டுசேறல் முறையதன் றதற்கடுத்த எல்லையாம்
ஈண்டுபாச றைத்தலம் இயற்றுவித் திருந்தபின்
வேண்டுமாறு புரிதிஐய வினையநாடி என்னவே

பெருமானே இதைப் பார்த்தருள்க. இதுவே சூரபன்மனுடைய ஊராகும். இங்கு கொடும் தன்மை மிகுந்த நீசராகும் அசுரர் செறிந்து வாழ்கின்றமையால் அங்கு ஊரின் நடுப்புறமாக நாம் போதல் முறையல்ல. அவ்வாறு அசுரர் நெருக்க மாக இருக்கும் இருப்பிடங்கட்கு அடுத்துள்ள எல்லையாகும் இவ்விடத்து ஓர் பாச றைத் தளத்தை செய்வித்துக்கொண்டு அதில் இருந்தபிற்பாடு தேவரீர் வேண்டுமாறு மேற்கொள்ளும் கருமங்களை நாடியறிந்து செய்தருள்வீராக என யாவரும் வணக்கத் துடன் சொல்லி நிற்றலும். 30

குன்றெறிந்த முருகன் அன்ன கூற்றுணர்ந்தி சைந்திடா
நன்றிதென் றருட்கண்வைத்து நாகர்கம்மி யன்தனை
மன்ற அன்பொ டேவிளித்து வல்லைஈண்டு பாசறை
ஒன்றுசெய்தி டென்னலும் உளஞ்சிறந்து புகலுவான்.

கிரவுஞ்ச மலையை வேலால் பிளந்திட்ட முருகப் பெருமான் அவர்களது கூற்றை உணர்ந்து அப்படியே அங்கு தங்கிட இசைவுகொண்டு நல்லது என மொழிந்தருளி அருள் நோக்கம் வைத்தருளியபடி தேவர் தச்சனை திருவுளத்துப் பெருகிடும் அன்புடன் அழைத்து தேவதச்சனே! நீ விரைவுடனாக இவ்விடத்து ஓர் பாசறை ஒன்றினை செய்திடுவாயாக என்று அருள் புரிதலும் அது கேட்ட தேவ தச்சன் தனது உள்ளம் சிறந்து மகிழ்வாகி இனையவற்றை கூறுவான். 31

தாரகற் கடந்தவேற் றடக்கைவீர ஈண்டியான்
ஓரிறைக்கு முன்னமாக ஓங்கு பாசறைத்தலஞ்
சீரிதிற் படைக்குவன் தெரிந்துகாண்டி உனதுபேர்
ஆரருட் டிறத்தினென் றடித்தலம் பணிந்துபின்.

தாரகாசூரனைக் கொன்றருளிய வேலினைக் கையிலேந்தியருளிய வீரனே! அடியேன் இவ்விடத்து ஓர் இறைப்பொழுது ஒடுங்குமுன்பாக ஓர் பாசறைத் தலத்தைத் தேவரீரது பேரருளின் திறத்தால் சீருடன் படைத்தருள்வேன். அதனைத் தெரிந்துகொண்டு காண்பீராக எனக் கூறியவாறு எம்பிரானுடைய திருவடி மலர்களில் தாழ்ந்து வணங்கிய பின்னாக 32

மாடகூட மண்டபம் வயங்கொள் சோலை வாவிகள்
பீடுலாய கோபுரம் பிறங்குவீதி ஓர்திசை
கோடிகோடி ஆக்கிமற்றோர் கோநகர் இயற்றியே
நாடுமேம கூடமென்று நாமமொன்று நாட்டினான்.

மாட கூடங்கள் மண்டபங்கள் வளங்கொள்ளும் சோலைகள் வாவிகள் பெருமை நிலவும் கோபுரங்கள் பொருந்தி விளங்கிடும் வீதிகள் ஆகியன ஒவ்வோர் திக்கிலும் கோடி கோடி எனும் கணக்கில் ஆக்கி இவற்றால் தலைசிறந்த ஓர் நகரினை படைத்து எல்லாராலும் நாடப்பெறும் அந்த நகரத்திற்கு ஏமகூடம் எனும் நாமமும் ஒன்று நிலைபெறும்படி சூட்டினான். 33

ஏமம் — இன்பம் கூடம் — நகரம்

கருத்திலன்ன வன்செயுங் கவின்கொள்பாடி வீடுகண்
டருத்தியான் மகிழ்ச்சியெய்தி அருள்புரிந்து கந்தவேள்
திருத்தகுஞ் சனங்கள் போற்றி செய்ய ஆண்டு சென்றபின்
மருத்தன் உந்து தேரிழிந்து மந்திரத்தை நண்ணினான்.

தனது மனதின் கற்பனையால் தேவதச்சன் உடன்படைத்து விட்ட பேரழகு விளங்கிடும் பாசறை வீட்டைக் கண்டருளி அன்பினால் எம்பிரான் மகிழ்ச்சி கூர்ந்து அருள் புரிந்து அங்கு நின்ற திருத்தமாகும் வாழ்வுடைய சனங்கள்போற்றி செய்திட அப்

பாசறைத்தலம் சென்றீட்ட பிறபாடு வாயுபகவான் செலுத்திட வந்த தமது தேர் நின்றும் இறங்கியருளி தமது மூல இருப்பிடமாகும் சபையைச் சேர்ந்தருளினர். 34

அந்தமற்ற பூதர்தம்மை ஆவணங்கள் நிறுவியே
முந்துகொற்ற வயவர்நான் முகத்தனாதி அவரொடும்
மந்திரத்துள் ஏகியே மகிழ்ந்துவீற் றிருந்தனன்
இந்திரப்பெ ருமடங்கல் ஏறுதாங்கு தவிசின்மேல்.

அளவு கடந்த பூதங்கள் யாவையையும் வீதிகள் தோறும் நிற்கும்வண்ணம் நிற்பாட்டிய பின்னர் எம்பிரான் திருமுன்பு நின்ற வீரம் மிகுந்த வீரவாகு தேவர் முதல் இலக்கத்து ஒன்பது வீரரும் நான்முகனும் பிரமன் திருமால் ஆதியாகும் அவர்களுடன் சபையுள் சென்று மகிழ்வாகி இந்திரநீலத்தால் இழைத்திட்ட சிங்கங்கள் தாங்கிடும் சிம்மாசனத்தின் மீது இருந்தருளினன் ஆறுமுகப்பெருமான். 35

ஒன்பதோடி லக்கவீரர் ஓங்கலாளர் அறுவர்கள்
அன்புசெய்து போற்றிசெய்ய அறுமுகேசன் அமரர்கள்
முன்புசெய் பணித்திறம் முறைப்படப் புரிந்திட
இன்பினோடும் ஏமகூட வெழிலிருக்கை வைகினன்,

இலக்கத்தொன்பது வீரர்களுடன் திருப்பரங்குன்றத்திருந்து தவஞ்செய்து தரிசனப் பேறுடைய ஆறு முனிவர்கள் ஆகியோர் எம்பிரானை அன்புசெய்து வணங்கிப் பணிந்து போற்றி செய்திடவும் தேவர்கள் யாவரும் எம்பிராற்கு முன்பு செய்திடுகின்ற பணிகளாகும் செய்கைகளை முறையாகப் புரிந்திட எம்பிரான் இன்பத்தோடும் ஏமகூடம் எனப்படும் எழில்கொண்ட இருப்பிடத்து இருந்தருளினர். 36

ஏமகூடப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்: 36

---

## வரவுகேள்விப் படலம்

ஏகநா யகனும் ஐயன் இவ்விடை இருந்த எல்லை
நாகர்மேல் அளிவைத் துள்ள நாரதன் அவற்றை நாடி
மாகநீள் புரிசை சூழ்ந்த மகேந்திர புரத்திற் சென்று
போகமார் உலகின் மேலாம் புரவலன் கோயில் புக்கான்.

எல்லார்க்கும் ஒரு கடவுளாகும் குமரன் இவ்விடை பாசறைத் தலத்து இருந்த எல்லையில் தேவர்கள் சார்பாக அன்பு வைத்துள்ள நாரத முனிவன் இத்தன்மைகளை எல்லாம் அறிந்துகொண்டு பெரிதும் நீண்ட மதில் சூழ்ந்த மகேந்திரபுரத்திற் சென்று போகம் நிரம்பிய தேவ உலகிலும் மேலாகும் சூரபன்மன் வாழ்ந்திடும் அரண்மனைக் கோயிலூடாகப் பிரவேசித்தான். 1

புக்கனன் அவுணர் உய்ப்பப் பொருவிலா இகல்வெஞ் சூரன்
மிக்குயர் திருவி னோடும் வீற்றிருந் திடுதல் காணூஉ
இக்கென இனைய தீயோன் இறப்பவென் றுன்னி வாயால்
தக்கதோர் ஆசி கூறிச் சார்ந்தனன் தவத்தின் மேலோன்.

உட்பிரவேசித்த நாரத முனிவனை அசுரர் அங்கு உள் செல்லுமாறு விடை கொடுப்ப உட்சென்று தனக்கு நிகரில்லாத வலியுடைய சூரபன்மன் மிக உயர்வாகும் திருவினோடும் வீற்றிருக்கும் சிறப்பினை நோக்கி தனது மனதிலே இந்தத் தீய சூரபன்மன் கரும்பு உக்கி தன்பாட்டில் பட்டுப்போவதுபோன்று இறந்துபோகட்டும் என நினைந்து ஆனால் தனது வாயில் மட்டும் தகுதி வாய்ந்த ஓர் ஆசி மொழியினைப் பாசாங்குடன் கூறி தனது கைகளை மலரக் காட்டியவாறு சூரமன்மன் முன்பாக வந்தான். 2

அங்கைகள் மலர நின்றே ஆசிசெய் தானை நோக்கி
எங்குளை இங்கு வந்த தென்னைநீ யாரை யென்ன
மங்கையோர் பங்கன் மேவும் வடபெருங் கயிலை வாழ்வேன்
நுங்குலத் தலைமையாக வைகலும் நோற்றல் செய்வேன்

தனது அழகிய கைகள் மலரும்படி நின்று ஆசி செய்த நாரத முனிவனைச் சூரபன்மன் நோக்கி "நீ எங்கு இருப்பவன், இங்கு வந்த காரணம் யாது. "நீ யார்" எனக் கேட்டலும் அது வேளை நாரத முனிவன் சொல்வான் யான் உலக மாதாவை பாகத்திருத்திய சிவபிரான் இருக்கும் மேலாகும் வட பெருங் கைலை மலை இடத்து வாழ்வேன். உங்கள் குலம் தலைமையாக வாழும்பொருட்டு நித்தலும், நான் தவம் செய்வேன். 3

கைதவம் புகலேன் வெய்ய காமமே முதல நீத்துச்
செய்தவம் பலவும் உள்ளேன் தேவருக் கிடுக்கண் செய்வேன்
மைதவிர் புகரி னோடும் மருவுநண் புடையேன் நின்பால்
எய்திஒன் றுரைக்க வந்தேன் நாரதன் எனும்பே ருள்ளேன்.

நான் வஞ்சனை ஏதும் பேசமாட்டேன். கொடிய காமம், குரோதம், மோகம் லோபம், மதம், மாத்சரியம் முதலிய அறுவகைக் குற்றங்களையும் நீக்கிச் செய்கின்ற பல தவப்பேற்றினை உடையேன். தேவர்கட்கு இடுக்கண் செய்வேன். குறைகள் தவிர்த்த சுக்கிரபகவானோடு நெருங்கிய நண்புடையேன். நீன்பாலடைந்து செய்தி ஒன்று சொல்ல வந்தேன், நாரதன் என்னும் பேருடையேன். 4

சிந்துவான் மதிதோய் வேணிச் செல்வன்நின் அடுவ தாகக்
கந்தனும் முருகன் தன்னைக் காமர்கண் ணழலால் நல்க
வந்தமா மதலை தன்பால் ஐயஉன் பணியதாற்றும்
இந்திரா தியர்கள் ஏகி இறைஞ்சியே எத்தி யுற்றார்.

அது யாதெனில் கங்கையும் வானில் தோன்றிடும் இளம் பிறையும் நிறைகின்ற சடை முடியுடைய செல்வன் சிவபிரான் நின்னைச் சங்கரிக்கும் பொருட்டாக

கந்தன் என்னும் பெயருடைய குமரனைத் தனது அழகிய நெற்றிக்கண்ணின் நெருப்பினால் தந்தருளி விட, அவ்வாறு தோன்றிய குழந்தை வடிவாகும் ஈசனை, ஐயா சூரனே! கேள் உனக்கு இதுகாறும் ஏவல்பணி புரிந்த இந்திராதியர்கள் சரணுகச் சென்றடைந்து அவனை வணங்கி அங்கு இருந்தனர். 5

உற்றுளார் தமக்கு நின்னால் உறுதுயர் குமரன் கேட்பச்
சொற்றலும் அஞ்சல் என்று தொல்சிவன் அருள்மேற் கொண்டு
கொற்றமெம் பூத வீரர் குழாத்தொடும் புவியின் ஏகி
மற்றுன திளவல் தன்னை வரையொடும் வேலாற் செற்றான்.

அவ்வாறு குமரக்கடவுளை அடைந்துகொண்ட தேவர் அனைவரும் தங்கட்கு உன்னால் நிகழப்படும் துயரங்களை குழந்தை வடிவாகும் ஈசன் கேட்ப மொழிதலும் அது வேளை அஞ்சாதீர் என்று அபயம் கொடுத்து முன்னைப் பொருளாகும் சிவனருள் மேற்கொண்டு கொற்றம் மிக்க பூதவீரர் கூட்டத்தோடும் இப்பூமியில் தோன்றி உனது இளையோனை தாரகனை கிரவுஞ்சமலையோடும் சேர வேலினால் கொன்றருளினான். 6

ஆண்டது புரிந்த பின்னர் அறுமுகன் செந்தி மேவித்
தூண்டினன் நினக்கோ ரொற்றைத் தூணெனை அவனும் வந்து
மீண்டபின் புகுதி நாடி வேலையைக் கடந்து தன்பால்
ஈண்டிய படையொ டன்னான் இந்நகர் வடபால் வந்தான்.

அவ்விடத்து அதனைச் செய்த பிற்பாடு ஆறுமுகமுடைய கடவுள் திருச்செந்தூரிடத்துச் சென்று வீற்றிருந்து உன்னிடத்து ஓர் தூதுவனை செலுத்தினான் அந்தத் தூதுவனும் இங்கு வந்து மீண்டபிற்பாடு எல்லா நிலையையும் நன்கு அறிந்து கொண்டு திருச்செந்தூரிடத்து நின்றும் இவ்விடத்து வருவதற்கு எண்ணம்கொண்டு சமுத்திரத்தைக் கடந்து தன்னை நெருங்கிச் சூழ்ந்துள்ள பூதப்படையுடன் இந்த நகரின் வடபால் வந்து சேர்ந்தான், 7

ஆங்கனம் பாடி வீடொன் றாற்றுவித் தனிகம் யாவும்
பாங்குற இருந்தான் செவ்வேள் பார்த்தனன் இனைய வெல்லாம்
ஈங்கிது நிகழ்ந்த வண்ணம் என்றலும் அவுணர் கோமான்
தீங்கன லென்னச் சீறி நகைத்திவை செப்ப லுற்றான்.

அப்படியாக இந்த நகரின் வடபால் வந்து அவ்விடத்து ஓர் பாசறையை அமைத்து அதனிடம் தனது சேனை சூழ்தர வீற்றிருந்தருளினான் முருகப் பெருமான். அவற்றை எல்லாம் நான் நேரில் பார்த்தேன். இதுவே இங்கு நிகழ்ந்த செய்திகளாகும் என்று நாரத முனிவர் கூறி நிற்றலும் அதனைக் கேட்டுக்கொண்ட சூரபன்மன் கொடிய நெருப்பைப்போன்று சீறிக் கோபமுற்று நகைத்து இவற்றைச் சொல்லுகின்றான். 8

வேறு

மேனிமிர் கொண்டல் உயர்த்தவன் அம்புய மிசைவேதா
நீனிற மாயவன் ஊரது போல நினைந்தானோ
ஆனதொல் அண்டமொ ராயிர கோடியும் அரசாள்வேன்
மாநகர் மேலொரு பாலக னும்பொர வருவானே.

என்ன நாரத முனிவரே! அந்த ஆறுமுகன் எனது நகரையும் வானில் நிமிர்கின்ற மேகங்களை வாகனமாக உடைய இந்திரனது ஊரினைப் போன்றோ அன்றித் தாமரை மலர்மேல் இருக்கும் பிரமதேவனது ஊரைப்போன்றோ அல்லது நீலநிறமுடைய விஷ்ணு மூர்த்தியின் உலகைப்போன்றோ யாரேனினும் உட்பிரவேசிக்கலாம் என நினைந்து கொண்டானோ? நானோ இந்த நகரத்திலிருந்து கொண்டு யாவர்க்கும் முந்திய மிகப் பழமையுடைய ஆயிரங்கோடி அண்டங்களையும் அரசாள்வேன், அப்படியாகும் மகா சக்கரவர்த்தியாகிய எனது ஊர்மேலாக ஓர் குழந்தையா போர் செய்ய இங்கு வரக்கூடியவனாய்விட்டான்.

அரியின் இனஞ்செறி சூழலின் அன்னவை அடலுன்னி
கரியது கன்றுழை கலைபிற வற்றொடு கடிதேகில்
பொருது வயங்கொள வல்லது கொல்அது போலன்றோ
முருகனும் வெம்படை யுடன்இவண் வந்திடு முறைதானே.

இது எதுபோல் இருப்பதென்றால் சிங்கங்கள் செறிந்திருக்கின்ற ஓர் வனத்திடத்தாக; அந்த சிங்கங்களைக் கொன்றிட நினைந்து கொண்டு யானைக்குட்டி ஒன்று சிறு மான் கலைமான் முதலியவற்றின் துணையுடன் விரைவாகச் சென்றிடுமேல் அந்த யானைக்குட்டி சிங்கங்களைப் போர்செய்து வென்றிட வல்லமையுடையதோ? அதுபோல் அல்லவோ முருகனும் கொடிய படைகளுடன் இவ்விடத்து வந்திட்ட முறையாகும். 10

வேலை கடந்தென தாணை இகழ்ந்து வியன்பூதச்
சால நெடும்படை தன்னுடன் இந்நகர் சார்வானுங்
காலம் இதங்கவன் வீரம் அழிப்பல் கருத்தில்லாப்
பாலகன் என்றும் விடேன்வசை என்பதும் பாரேனல்.

சமுத்திரத்தைத் தாண்டி எனது ஆணையை அவமதித்து பருத்த வடிவு கொண்ட பூதப்படையுடன் முருகனும் இங்கு எனது நகரில் வருவானோ? இப்பொழுதே நான் அந்த முருகனின் வீரத்தை அழித்திடுவேன். பாவம் நல்ல கருத்தில்லாத குழந்தைப் பிள்ளை என்று எண்ணி அவனை விடமாட்டேன். அந்த குழந்தையுடன் போர் செய்வது வசையாகும் என்பதைக்கூட நான் பார்க்கமாட்டேன். 11

முன்னொரு சூழ்ச்சியின் அசமுகி ஒண்கரம் முரிவித்தே
ஒன்னல ராய்அமர் உம்பர்கள் யாவரும் உய்ந்தாரோ
என்னினை யாரொடும் வெற்பினை அட்டன மெனவுன்னித்
தன்னுயிர் போவ தறிந்திலன் இந்நகர் தனின் வந்தான்.

முனிவரே! இன்னமும் பாரும்! முன்னொருநாள் தேவர்கள் பலர் சூழ்ச்சி செய்து அசமுகி என்பவளின் வலிய கையினை வெட்டி முரிவித்தார்கள். அவ்வணமாகச் செய்வித்த பகைவர்களாகும் தேவர்கள் யாரும் தப்பிவிட்டார்களா? அதை மனதில் நினையாமல் எனது இளைய சகோதரனை கிரவுஞ்ச மலையுடன் சேர அழித்துவிட்டும் இந்த நகரில் போனால் தன்னுடைய உயிர் போகுமே என்பதை அறியாமல் முருகன் இந்நகரில் வந்துகொண்டான். 12

ஆழிய தெண்டிரை ஆழி கடைந்தவன் அலகில்லா
வேள்வி புரிந்திடு வாசவன் அம்புய மிசைமேயோன்
வாழிய நம்பெயர் கூறினும் அஞ்சினர் மறைகுற்றார்
பூழி புனைந்தவர் பாலக னேஅமர் புரிவானே.

ஆழமுடைய தெள்ளிய திரைக்கடலினைக் கடந்தவரான விஷ்ணுமூர்த்தி; அளவிலாத வேள்விகளைப் புரிந்திடும் இந்திரன் தாமரை மேலவரான பிரமன் ஆகிய இக்கடவுளர் யாவரும் வாழ்வுடைய எனது பெயரைக் கூறக்கேட்டாலும் பயப்படுவார்கள். அவர்கள் யாரும் என்னைக் காணுகபடி மறைந்திருக்கின்றனர். அப்படியிருப்ப புழுதியான நீற்றினை அணிந்த சிவபெருமானது பாலனே என்னோடு போர் புரிய வல்லமையுடையவன். 13

அந்தர மேல்வரு செங்கதி ரைச்சிறை அமர்வித்த
மைந்தனை நாற்படை தன்னொடு மேவி வயப்போரால்
முந்திய பூதரை ஏனைய வீரரை முடிவித்தே
கந்தனை யொல்லையின் வெற்றிகொள் வேன்இது காண்கிற்பாய்

அந்தரத்தே வானின்மேல் வருகின்ற செங்கதிருடைய சூரியனைச் சிறையில் வைத்த எனது மகன் பானுகோபனை: தேர் யானை குதிரை காலாள் என்னும் நான்கு வித படையுடன் விடுத்து வெற்றி தரும் போரால் இங்கு முற்பட்ட பூதரை ஏனைய வீரரை முடிவுசெய்து முருகனை மிக விரைவில் வெற்றிகொள்வேன். முனிவரே இதனைக் காண்பீராக. சிவகுமாரனை எனது குமரனைக் கொண்டு வெற்றி பெறுகின்றேன். 14

என்றசு ரேசன் இசைத்தலும் நாரதன் இவைகேளா
நன்றிது நன்றிது தாழ்க்கலை இன்னினி நகர்சூழச்
சென்றவ னைப்பொர நின்படை ஏவுதி செல்கின்றேன்
வென்றி நுமக்குற நோற்றிடு வானென விண்போனான்.

என்று இன்னவாறு அசுரர் தலைவனான சூரபன்மன் கூறுதலும் நாரதமுனிவன் அவற்றைக் கேட்டு அது நல்லது அது நல்லது இனி நீ தாமதம் பண்ணாதே. உனது நகரை வளைத்து போரிட வந்திடு சிவகுமாரனை நேரிட்டு போர்செய்ய உனது படையை அனுப்புவாய். நான் போகின்றேன். உங்களுக்கே வெற்றி வருமாறு நான் தவஞ் செய்வேன் எனக் கூறிக்கொண்டு நாரதமுனிவன் விண்ணில் எழுந்து சென்றான். 15

வேறு

நாரதன் இனைய கூறி நகையொடு போத லோடுஞ்
சூரருள் ஆற்றல் மிக்கோன் துண்ணென அயலின் நின்ற
கோரன்உற் கோரன் என்னும் ஒற்றரைக் குறித்து நோக்கி
வாரிதி இறைவற் பற்றி வல்லையிற் கொணர்தி ரென்றான்.

நாரதமுனிவன் இவற்றைக் கூறி நகையுடன் அவ்விடம் விடுத்து போதலோடும் அதுவேளை அசுரர்களில் மிக வலுவுடைய சூரபன்மன் விறுக்கென அயலாக நின்ற கோரன் உற்கோரன் என்னும் தூதுவரைக் குறி பால் பார்த்து நீங்கள் உடனாகச் சென்று சமுத்திரங்கட்கு அரசனான வருணனை விரைவுடன் பிடித்து இங்கு கொணர்வீர் என்றான். 16

என்றலும் அனைய ரோடி எறிகடற் கரசைக் கூவி
வன்றிற லோடு பற்றி வல்லைமுன் கொணர்ந்தே உய்ப்பக்
கன்றிய மனத்த னாகிக் கைதொழு தவலங் கூர்ந்து
நின்றனன் அவனை நோக்கி நெருப்பெழ விழித்துச் சொல்வான்.

என்று சூரபன்மன் கட்டளையிடலும் அத்தூதுவர் ஓடிச்சென்று திரைகள் மோதும் கடல்களின் அரசனான வருணனைக் கூவி அழைத்து அவனை மிகு கெட்டியாகப் பற்றிப் பிடித்து விரைவுடன் சூரன் முன்பு கொண்டு சென்று சேர்த்து விடுதலும் அதுவேளை வருணன் சூரனைக் கண்ட மாத்திரத்தே கருகிய மனமுடையனாய் கைகளை குவித்து சூரனை வணங்கி பெரும் அவலமடைந்து பயத்துடன் நின்றான். அப்போது சூரன் வருணனை நோக்கி நெருப்புத் தோன்றிட கண்ணால் முழுசிப் பார்த்து இதனைச் சொல்கின்றான். 17

பவ்வநீடு அரச கேண்மோ பங்கயத் தவனும் மாலுஞ்
செவ்விதின் உணரா வண்ணம் ஒளித்தவன் சிறுவன் தன்னை
வெவ்வலி கடந்தபூத வெள்ளத்தை நமக்கு மாறா
இவ்விடை விடுத்த தென்னை என்னலும் இசைக்க லுற்றான்.

பெரும் ஆழமுடைய சமுத்திரங்கட்கு அரசே கேள். பிரமதேவனும் திருமாலும் இன்னமும் தாம் தாம் காண்போமெனத் தேடியும் காணமுடியாதபடி ஒளித்து நின்றோனாகும் சிவபெருமான் பாலனாகும் முருகனை, அவனைச் சூழ்ந்துவந்த கொடிய வலி எல்லாவற்றையும் கடந்த பூதங்களாய சேனை வெள்ளங்களை எனக்கு மாறாக இங்கு வரும்படி விடுத்த காரணம் என்ன? என்று சூரன் கேட்டலும் வருணதேவன் சூரனிடம் இவற்றைச் சொல்லத் தொடங்குவான். 16

மண்படு புவனம் போற்றும் மன்னகேள் புயங்க மீது
கண்படு முகுந்தன் வேதாக் கடவுளர் தலைவ னோடும்
எண்படு துணைவ ரானோர் யாவரும் புடையிற் சூழ
விண்படு நெறியிற் சென்றான் வீரவேற் றடக்கை அண்ணல்.

மண்ணால் நிறைவு கொண்ட இப்பூமி முதல் சகல உலகமும் போற்றிடும்படி வாழ்கின்ற அரசே கேட்பீராக; அனந்தன் என்னும் பாம்பின்மீது பள்ளிகொண்ட

நாராயணக் கடவுளுடனும் வேதம் ஓதிய பிரமனுடனும் தேவர்கள் தலைவன் இந்திரனோடும் இலக்கத்து ஒன்பது என்று யாவராலும் மேலாக எண்ணப்படும் துணைவர்களாகும் வீரவாகுதேவர் முதலியோர் பக்கராகச் சூழ்ந்து வந்திட வான மார்க்கமான வழியால் சென்றார் எல்லாத் தீமையையும் சங்கரிக்கும் வேலைக் கையிலுடைய கடவுள் முருகன். 19

மடல்கெழு நீபத் தண்டார் வள்ளல்வான் நெறியிற் போத
மிடல்கெழு பூதர் என்பால் மேவினர் சென்றார் அன்னோர்
அடிகளின் பரட்டின் காறும் அமைந்திலன் அவரை யானே
தடைசெய வல்லேன் போலுந் தக்கதே இதுமற் றன்றே

இதழ்கள் மணம் கமழும் கடப்ப மாலையணிந்த வள்ளலாகும் முருகன் வானவழியால் சென்றிட மிடல் கொண்ட பூதங்கள் என்னிடத்தாக நடந்து சென்றனர். அவர்களது காலடிகளின் பரடு வரையிலும் ஆழமாக உடைய யான் அமையவில்லை என்றால் அவர்களை யானே போகாதீர் இவ்வழியால் என்று தடை செய்ய வல்லவன் போலும். அம்மம்மா இது தக்கதான ஒரு காரியமுமா? 20

ஊழியும் உலையாப் பூதர் ஒல்லெனச் செல்லத் தாளிற்
பூழியால் அளறு பட்டாங் கிடையறப் புலம்ப லுற்றேன்
ஆழியன் என்னும் பேரும் அற்றனன் வசையே பெற்றேன்
ஏழையேன் செய்வ தென்கொல் எதிருண்டோ வலியர்க் கம்மா.

எல்லாம் ஒடுங்கும் ஊழியிலும் உலைவுறாது வாழும் பூதங்கள் சுறுக்குடன் சென்றிட அவர் காலின் நான் அகப்பட்டு கலங்கி சேறாகி புழுதியாகி ஐயோ ஐயோ என இடையறாது புலம்பி இருந்தேன். ஆழமுடையவன் என்னும் என் பேரும் கெட்டுப் போனேன் அவர் போக்கால். கடலும் சேறாய் விட்டது எனும் வசையும் பெற்றேன். ஐயனே! ஏழையேனான யான் என்செய்வேன் வலிமையுடையார்க்கு யாரேனும் எதிராக இருப்பார்களா? அன்றியும் வலியார்க்கு எதிராக எது நிற்க முடியும்? 21

தெள்ளிதில் தமிழ்தேர் காட்சித் திருமுனி கரத்தில் வாரி
உள்ளுறக் கொண்ட தேபோல் ஒல்லையின் மிசைவர் போலாங்
கொள்ளையிற் செறிபூ தர்க்குள் ஒருவரோர் குடங்கை தன்னின்
அள்ளுதற் காற்ற கில்லேன் ஆதலின் உய்ந்தேன் அன்றே.

தமிழின் இன்ப நிலையை தெளிவாகத் தேர்ந்து கொண்ட மேலாம் ஞானக் காட்சியுடைய அகத்தியமுனிவர் கையில் முன்னர் என்னை வாரி உழுந்தளவாக்கி உட்கொண்ட அதே போல என்னையும் விரைவாக வாயில் இட்டு மிசைவார் கொள்ளைக் கணக்கில் வந்த பூதங்களின் ஒருவர். ஆனால் அப்படி அவர் செய்வதற்கு அந்தப் பூதத்தின் உள்ளங்கைக்கு நான் போதாது போனமையால் அவர்கள் என்னை கைக்கு பற்றாது என்று விட்டபடியால் நான் தப்பி இருக்கின்றேன் அல்லவோ. 22

உடல்சின வசனி தன்னை ஒண்பணி விலக்க வற்றோ
கடுமுரண் அரிமான் ஏற்றைக் களிறெதிர் விலக்கிற் றுண்டோ
மிடல்கெழு விதியைப் புந்தி விலக்குமோ அஃதே அன்றோ
அடல்மிகு பூதர் தம்மை அளியனேன் தடுப்ப தென்றான்.

உடலெல்லாம் கொடும் சினமுடைய இடியை அழகிய நாகபாம்பு தடுக்குமா? மிகு வலிகொண்ட ஆண் சிங்கத்தை யானை எதிர்த்து விலக்குதல் முடியுமா? வலிமை கொண்ட விதியின் பிரகாரம் நடக்கவேண்டியதை புத்தியால் தடுக்கலாமா? அதைப் போன்று முடியாததொரு கருமம்தான் எளியேனுக்கும் யானும் அடல் மிகுந்த இப் பூதர் இனத்தைத் தடுக்கமுடியாததாகும் என்றான் வருணதேவன். 23

இற்றெலாம் அளக்கர் கோமான் இசைத்துமெய் துளக்க மெய்தி
நிற்றலும் நெடுவேல் அண்ணல் நீள்நகர் நணிய தன்மை
ஒற்றரிற் சிலவர் காணூ ஓடினர் ஒல்லை சென்று
கொற்றவற் பணிந்து நின்றே இவையிவை கூற லுற்றார்.

இந்த வார்த்தையை எல்லாம் சமுத்திர அரசன் இசைத்து மேனி நடுங்கிக்கொண்டு நிற்றலும்; அதுவேளை நெடிய வேற்படைக்கு முதல்வனான கடவுள் நீண்ட நகரிடத்து நண்ணிய தன்மையைத் தூதுவரில் இவர் கண்டு கொண்டு விரைவுடன் ஓடிச் சென்று அரசனான சூரபன்மனைப் பணிந்து முன் நின்று இந்த வார்த்தைகளைக் கூற லுற்றார். 24

அராவணை அண்ணல் வேதா அரிமுதல் அமரர் சூழ
விராவுறும் இலக்கத் தொன்பான் வெலற்கரும் வீரர் போற்ற
இராயிரம் பூத வெள்ளம் ஈண்டிட எறிநீர்ச் சென்னிப்
பராபரன் மைந்தன் நந்தம் பதிவட திசையிற் போந்தான்.

அரசே கேட்பீராக: அனந்தன் என்னும் பாம்பணையில் பள்ளிகொண்ட நாராயணக் கடவுள் பிரமதேவர் இந்திரன் முதல் தேவர் சூழ நெருங்கிடும் இலக்கத் தொன்பது வென்றிடற்கரிய வீரர்கள் போற்றி செய்ய இரண்டாயிரம் பூத வெள்ளம் நெருங்கி வந்திட திரை எறிகின்ற கங்கையைச் சடையில் வைத்த சிவபிரான் திருக்குமரன் நம்முடைய நகரின் வடதிசையில் வந்திட்டார். 25

வடதிசை அதனிற் போந்து வானவர் புனைவற் கொண்டே
படிபுகழ் தகைமைத் தான பாசறை புரிவித் தாங்கே
புடைதனின் அனிக மான பூதவெவ் வீரர் மேவ
நடுவணோர் நகரந் தன்னின் நண்ணிவீற் றிருந்தா னன்றே.

எமது நகரின் வடதிசையில் சென்று தேவர் தச்சனைக் கொண்டு இப்பூமி புகழும்படியான பாசறைத் தலத்தை உண்டாக்கி அவ்விடத்து பூதங்களான கொடிய சேனைகள் பெருவீரருடன் சூழ்ந்து பக்கரில் மேவிக் காவல் கொள்ள நடுவணதும் ஓர் நகரத்தில் முருகக்கடவுள் வீற்றிருந்தருளினார். 26

கண்டனம் இதனை இன்னே கடவது புரிதி யென்னாத்
திண்டிறல் வெய்ய தூதர் செப்பலும் அதனைக் கேளா
அண்டமும் புவனம் யாவும் அலமர வழலிற் சீறிப்
புண்டிகழ்ந் தனைய கண்ணான் இவையிவை புகல லுற்றான்.

அரசே இதனை நாங்கள் இங்கு கண்டனம். இதற்கு ஆவனவாகிய செயலை நீ இப்போது செய்வீராக என்று திண்மையாகும் வலுவுடன் கூடிய தூதுவர்கள் கூற

லும் அதனைக் கேட்ட மாத்திரத்தே அண்டங்களும் புவன வைப்புகளும் யாவும் அலமந்து ஏங்கிட நெருப்பைப் போன்று சீறி புண்ணென்று சிவந்து விளங்கிய தன்மை போல கண் சிவப்பேறியவனாய் இந்த இந்த வார்த்தையைச் சொல்லலுற்றான். 27

வரவு கேள்விப்படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் 63

---

# முதனுட் பானுகோபன் யுத்தப்படலம்

கோதை வேலுடைக் குமரன தாற்றலுங் கொற்றப்
பூதர் ஆற்றலும் ஏனையர் ஆற்றலும் போர்செய்
தூதன் ஆற்றலுந் தொலைக்குவன் துண்ணென நீவிர்
ஆத வன்தனிப் பகைஞனைக் கொணர்திரென் றறைந்தான்.

தூதுவர் வார்த்தை கேட்ட சூரபன்மன் அவரை நோக்கிச் சொல்வான். மாலையணிந்த வேலுடைய குழந்தையாகும் முருகனின் ஆற்றலும் அவனுடன் வந்த கொற்றம் மிகுந்த பூதரின் ஆற்றலும் ஏனைய வீரரின் ஆற்றலும் முன் இங்கு வந்து போர்செய்த தூதுவன் ஆற்றலும் நான் தொலைப்பேன். இப்பொழுதே நீவிர் சுறுக்காகச் சென்று சூரியன் பகைவனை என்மகன் பானுகோபனை இங்கு அழைத்துக்கொண்டு வாருங்கள் என்றான். 1

ஆன காலையில் நன்றெனத் தூதுவர் அகன்று
பானு கோபன திருக்கைபுக் கனையவற் பணிந்து
மேனி லைப்படு தந்தைதன் பணிவிடை விளம்ப
மான வாலரித் தவிசுவிட் டெழுந்தனன் மன்னோ.

அவ்வாறு சொன்ன காலையில் தூதுவர் அரசே! அது நன்று எனப்பணிந்தனராய் அவ்விடம் நீங்கி பானுகோபனுடைய இருப்பிடத்தில் புகுந்து அவனை வணங்கி மேலாகும் நிலையில் நிற்கும் தந்தையான சூரபன்மன் கட்டளையை எடுத்து விளம்பிடுதலும் அதுகேட்ட பானுகோபன் மேலாகும் சிறந்த சிங்காசனத்தை விடுத்து எழுந்தான். 2

தொல்லை மந்திரத் தலைவருஞ் சுற்றமா யினரும்
எல்லை தீர்தரு தானையந் தலைவர்கள் யாரும்
ஒல்லெ னப்புடை சூழ்ந்தனர் உருமுகான் றென்னப்
பல்வி யங்களும் ஆர்த்தன போர்த்தன பதாதி.

மிக முதிய உணர்வுடைய மந்திரிமாரும், தனது சுற்றமாகிய நண்பரும் எல்லை கடந்த சேனைத தலைவர்கள் யாவரும் விரைவுடன் எழுந்து பானுகோபனை பக்கராக சூழ்ந்துகொண்டனர் அதுவேளை இடி இடித்தாற்போன்று பல வாத்தியங்ளுகம் முழங்கி ஆர்த்தன. காலாட் படைகள் நெருக்கமாக வளைந்துகொண்டன. 3

அக்க ணத்தினில் இரவியம் பகைஞரே ரணித்தேர்
புக்கொ ராயிர கோடிவீ திகளொரீஇப் புடையின்
தொக்க வீரரிற் கண்டுளோர் வயின்வயின் தொழப்போய்
மிக்க தாதைதன் திருநகர் அடைந்தனன் விரைவின்.

அக்கணத்தினில் பானுகோபன் ஓர் அழகிய தேரில் புகுந்து ஆயிரகோடி வீதிகள் எல்லாம் கடந்துசென்று பக்கராக தொகுதியுடன் வந்த வீரர்களிற் பானுகோபனைக் காண்பார்களாகும் நிலைகொண்டுளோர் முறை முறை தொழுதிடச்சென்று மிக மேம்பாடுடைய தந்தையின் இருப்பிடமான நகரை விரைவில் அடைந்தான்.

தேரின் நின்றிழிந் தண்ணலங் கோயிலுட் சென்று
சூர பன்மனை அணுகியே அவனடி தொழுது
வீர வீரநீ யெனையிவண் விளித்ததென் னென்ன
வாரி ருங்கழல் மன்னவன் இன்னன வகுப்பான்.

தேரில் நின்றும் பானுகோபன் இறங்கி மேலாம் திருவுடைய சூரபன்மன் கோவிலுட் சென்று சூரபன்மனை அணுகி அவன் திருவடிகளைத் தொழுது முன்னின்று சொல்வான், வீராதி வீரனே! நீ என்னை இங்கு அழைத்த காரணம் யாது என்னலும் அப்போது வாருடைய பெரும் வீரக்கழல் அணிந்திட்ட சூரபன்மன் இவற்றை பானுகோபனுக்கு வகுத்துக் கூறுவான். 5

மூந்து தாரக ம்பியை வரையொடு முடித்த
கந்த வேள்செந்தி நீங்கியே அளக்கரைக் கடந்து
நந்தி தன்கணத் தலைவரும் பூதரும் நணுக
இந்த மாநகர் வடதிசை வாயில்வந் திறுத்தான்.

எனது மகனே கேள்! முன்னர் எனது தம்பியாகும் தாரகனை சிரவுஞ்ச மலையோடு முடிவு செய்த கந்தவேள் திருச்செந்தூரை விடுத்து நீங்கி இடையில் நின்ற பெரும் சமுத்திரத்தைத் தாண்டி அவருடன் நந்தி தேவனின் கணத்தில் தோன்றிய வீரவாகு முதல் தலைவரும். பூதரும் உடன்வர இந்த பெரிய நகரின் வடக்கு திசையில் உள்ள பெருவாயிலில் வந்து அடைந்துகொண்டான். 6

சிந்து போன்றுல களந்திடு கள்வனுஞ் செயிர்தீர்
கந்த மாமலர்க் கடவுளும் எண்பணி கடந்த
இந்தி ராதியர் யாவரும் பிறருமாம் ஈண்டி
வந்து ளார்களாம் அறுமுக மதலைதன் மருங்கு.

குறள் போன்ற வடிவு கொண்டு உலகெலாம் அளந்துகொண்ட கள்வனாகும் நாராயணனும் குறை தீர்ந்த வாசனை மிகுந்த பெரும் தாமரை மலரில் ஆசனம் கொண்ட பிரமனும் கடவுளும் இந்திரன் முதலாய தேவர்கள் யாவரும் இன்னும் பிறருமாக எல்லாரும் சேர்ந்து இந்த நகரில் வந்துகொண்டார்களாம் ஆறுமுகமுடைய குழந்தையாகும் அவன் பக்கராக புடை சூழ்ந்தபடி. 7

எளிய ராகிய அமரரும் அரன்தரு மகவும்
ஒளிறு வாட்படை நந்திதன் கணத்தினுள் ளோரும்
களியின் மூழ்கிய பூதருங் கடிதுவந் தடைதற்
கெளிறு பட்டதோ நன்றுநன் றினையமா நகரம்.

மகனே! எம்மைக் கண்டால் பயந்து ஒழித்தோடுகின்ற எளியராகிய தேவரும் சிவபிரான் தந்தருளிய குழந்தையும் பிரகாசமுடைய வாட்படையை ஏந்திய நந்திதேவனின் கணத்திலே தோன்றிய யாவரும் களிப்பினால் மகிழ்வுறுகின்ற பூதங்களும் விரைவாக வந்து இங்கு அடைந்து கொள்வதற்கு என்னே! அவ்வளவு எளிதாகிவிட்டதா எனது நகரம். இது நல்லது, நல்லது! 8

பின்னை தன்னுடன் அடுக்கலை மைந்தனைப் பிறரை
முன்னம் அட்டிடும் மாற்றலர் தங்களை முருக்கச்
சென்னெறிக்கொடு போதலென் கடன்அவர் சிறியர்
மன்னர் மன்னன்யான் ஆதலின் இருந்தனன் வறிது.

என் பின்னவனாகும் தாரகனுடன் கிரவுஞ்ச மலையை; என் மகன் வச்சிரவாகுவை இன்னும் பிறரை முன்னே கொன்று நின்ற என் பகைவர்களாகும் இவர்கள் தங்களை அழித்துவிடுதற்கு முறையாக செப்பமான நெறியில் போகவேண்டியது எனது கடனாகும். ஆனால் அப்படியாக போரிட செல்வதற்கு அவர்கள் சிறியர்கள் நானோ அரசர்க்கரசன். ஆதலால் யான் செலல் தகவுடையதல்ல என உணர்ந்துகொண்டு இங்கு வீணே இருக்கின்றேன் 9

அந்தண் மாமுகில் உயர்த்தவன் வேண்டலும் அமலன்
தந்த கந்தனைச் சாரதத் தலைவர்க ளோடு
நந்த மைப்பொர விடுத்தனன் ஆதலின் நானும்
மைந்த நிற்கொடு வென்றிபெற் றிருந்திடல் வழக்கே

அழகுடன் குளிர் தங்கி விளங்கிடும் மேகவாகனத்தையுடைய இந்திரன் கைலைமலையையடைந்து சிவபிரானை வேண்டலும் சிவபிரான் என்னுடன் போரிடும் காரணமாகத் தந்த அந்த கந்தனை பூதத் தலைவர்களுடன் என்னோடு போரிட விடுத்துள்ளார். ஆதலின் யானும் அதேபோன்று என் மகனே உன்னைப் போரிட அனுப்பி வெற்றி பெற்றுக்கொண்டிருத்தல் முறையாகும். 10

ஆத லால்இப் படையொடும் அமர்க்களத் தடைந்து
நாதன் மைந்தனை நந்திதன் கணத்துளார் தம்மைப்
பூதர் தங்களைப் பொருதழித் தடல்வயம் புனைந்து
காதல் மைந்தநீ மீடியால் நம்முனங் கடிதின்,

ஆனதன்மையின் எனது காதல் மகனே! இனி உனது பெருப்படையுடன் புறப்பட்டு போர்க்களத்தை அடைந்து சிவபிரான் திருக்குமரனை நந்தி கணத்துள்ளார் தங்களை பூதங்களை போர் செய்து அழித்துவிட்டு பெருவெற்றியினைச் சூடிக்கொண்டு மீண்டு நம்முனம் மிகு விரைவுடன் வருவாயாக. 11

### வேறு

என்றிவை சூர்முதல் இசைப்பக் கேட்டலும்
பொன்றிகழ் தடம்புயம் பொருப்பிற் சேட்செல
ஒன்றிய குமிழ்வடி வுடலம் போர்த்திட
நின்றிடு திருமகன் இவைநி கழ்த்துவான்.

என்று இந்த வார்த்தையைச் சூரபன்மன் சொல்லிட பானுகோபன் கேட்டலும் உடனே பானுகோபனுடைய பொன்திகழும் விசாலித்த தோள்கள் மலைபோன்று பருத்து மேலாகி விரிந்திட உடல் எங்கும் ஒரே தன்மை போன்று கூச்செறிதலால் விளங்கிய குமிழ் வடிவுகள் உடலினை மூடிக்கொள்ள அங்கு பரவசத்துடன் நின்றிட்ட திருவுடைய மகன் பானுகோபன் இதனைச் சொல்வான்.

போர் செய்யச் செல்வாய் என்ற வார்த்தை கேட்டு தோள் பூரித்து உடலம் சிலிர்த்து குமிழ் கொள்ள மகிழ்கால் பரவசமுற்றான் பானுகோபன். 12

இருளுறு மிடற்றினன் ஏவும் மைந்தனை
மருளுறு பூதரை மற்று ளார்தமை
வெருவுறு சமரிடை வென்று மீள்வதோர்
பொருளென நினைத்துகொல் புகறி இற்றெலாம்

நஞ்சுண்டமையால் இருள் கொண்ட கண்டத்தையுடைய சிவபிரான் எம்மீது போரிடும்படி விடுத்துள்ள மைந்தரான முருகனை பசிப்பிணியால் மயங்குகின்ற பூதங்களை மற்றுள்ள படைகளின் சேனாதிபதிகளை இலக்கத்து ஒன்பது வீரர் யாரையும் போரில் வெல்வது ஓர் பொருள் என்று ஐயனே நீர் நினைந்துகொண்டோ இவ்வளவு வார்த்தைகளையும் என்னிடம் பேசினீர் என்றான் பானுகோபன். 13

பன்னுவ தென்னினிப் பரமன் கான்முளை
இந்நகர் நணுகுமுன் எதிர்ந்து போர்செய்வான்
நென்னலே வினவினன் நீய தோர்ந்திலை
பின்னிது புகலுதல் பிழைய தாகுமால்.

நான் இனி என்னதை எடுத்துச் சொல்வேன். பரமனுக்கும் சிவனுடைய சிறு குழந்தை இந்த நகரில் வருமுன்பாக அப்பிள்ளையோடு அங்கு திருச்செந்தூரில் சென்று போரிடுவதற்கு உன்னிடம் நேற்ற நான் உத்தரவு கேட்டேன். ஆனால் நீ அப்படிச் செய்வது நன்று என உணர்ந்தாயில்லை பிறபாடு இன்று நீ சிவகுமாரனும் பூதமும் வந்து சேர்தற்கு அவ்வளவு எளிதாய் விட்டதோ எனது நகரம் எனச் சொல்லுதல் பிழையாகும். 14

படைப்பெருந் தொகுவொடும் படர்ந்து கந்தனை
அடுத்தனன் பேரமர் ஆற்றி வென்றிகொண்
டிடுக்கணில் பூதரை எனையோருடன்
முடித்திவண் வருகுவன் முதல்வ காண்டி நீ.

ஆனாலும் அசுரப் படைகளாய பெருங்கூட்டத்துடன் நான் சென்று கந்தசுவாமியை அடுத்து எதிர்ந்து பெரும் போரினைச் செய்து வெற்றிகொண்டு இடுக்கட்படாதிருக்கும் பூதங்களை மற்றைய வீரருடன் முடிவு செய்து இவ்விடம் வருவேன். எங்கள் முதல்வா நீ இதைக் காண்பாயாக. 15

கந்தனை விறல்கொடே அவன்றன் கட்படு
செந்திரு மார்பனைத் திசைமு கத்தனை
இந்திரக் கள்வனை இமைப்பில் பற்றிமுன்
தந்திடு கின்றனன் தகுவ செய்தியால்.

கந்தனை வெற்றி கொண்டபின் அவனிடத்து தஞ்சம் புகுந்திருந்த இலக்குமியை மார்பில் வைத்த நாராயணனை திசைக்கொரு முகமுடைய பிரமனை இந்திரன் என்னும் கள்வனை ஒரு நொடிப் பொழுதில் பற்றிப் பிடித்து உன்முன் கொண்டுவந்து தரு வேன். அதன்பின் அவர்கட்கு தகுதியான தண்டனைகளை நீ செய்வாய். 16

என்றிவை கூறியே இறைஞ்ச மைந்தனே
சென்றனை வருதியால் திறலி னோடென
நன்றென விடைகொடு நடந்து நன்கமை
பொனறிகழ் தனதுதேர் புகுந்து போயினான்.

என்று இவைகளைக் கூறி பானுகோபன் சூரபன்மனை வணங்கிட அதுவேளை சூர பன்மன் பானுகோபனை நோக்கி; மகனே நீ சென்று வெற்றியுடன் வருவாயாக என மொழிதலும் பானுகோபன் அதுகேட்டு நன்று என்று விடை பெற்றுக்கொண்டு நடந்து சென்று நன்குடன் அமையம்பெற்று பொன்னின் திகழும் தனது தேர்மேல் ஏறிக்கொண்டு போயினான். 17

தொல்லையிற் பரிசனம் புடையிற் சூழ்தரப்
பல்பதி னாயிரத் துணைவர் பாற்பட
ஓல்லென இயம்பல ஒலிப்ப ஏகுறா
எல்லையம் பகைதன திருக்கை எய்தினான்.

மிக முதியதான தனது பரிசனராகும் வீரரும் பக்கரில் சூழ்தர அவருடன் பல பதினாயிரக் கணக்கான சேனாதிபதிகளும் பக்கராக வந்திட கலீரென்று வாத்தியங்கள் முழங்கிட சென்று சூரியன் பகைவனான பானுகோபன் தனது இருப்பிடத்தை அடைந்து கொண்டான். 18

பண்டியங் தேரினும் தணந்து பாங்கரின்
மண்டுறு தூதரை வல்லை கண்ணுறீஇ
எண்டரு நம்படை யாவும் இவ்விடை
கொண்டணை வீரெனக் கூறிப் போயினான்.

விசாலித்த தனது தேரினின்றும் பானுகோபன் இறங்கி பக்கராக நெருங்கி நின்ற தூதுவரைப் பார்த்து நீங்கள் உடன்சென்று எண்ணிக்கை மிகுந்த எனது அசுரச் சேனைகளை போரிடச் செல்ல இவ்விடம் கொணர்வீராக எனக் கூறிவிட்டு அப் பால் சென்றான். 19

ஏயிரும் பரிசனர் யாரை யும்நிறீஇ
மாயிருங் கலைமகள் வதிந்து வைகிய
ஆயுத சாலையின் அவுணர் கோன்மகன்
போயினன் தொழுதனன் பூசை ஆற்றினான்,

தன்னுடன் துணையாக வந்த வரிசை தாங்குங் பரிசனரை அவ்விடம் நிறுத்தி விட்டு மிகவும் பெருமையுடைய கலைமகள் நிலைபெற்றுத் தங்கியிருக்கின்ற ஆயுதசாலை யிடத்து அசுரர் தலைவன் சூரபன்மன் மகன் பானுகோபன் போயினன். அங்கு விச யத்திற்குரிய கலைமகளைத் தொழுதான்; பூசைகள் புரிந்தான். 20

கயிரவ நிறத்தபூங் கச்சு வீக்கினன்
வயிரவொள் வாளினை மருங்கு சேர்த்தினன்
வெயில்விடு பொன்துகில் மீது சுற்றினன்
துயிலறும் அமரரைத் துளக்கங் கண்டுளான்.

பூசனை முடித்தபின் நீலநிற’முடைய மிருதுவான கச்சை (போருடை) முதல் எடுத்துக் கட்டிக்கொண்டான். வயிரம் கொண்ட கூரினால் ஒளி வீசிடும் வாளை உறை யுடன் அரையில் கட்டினன். அதன்பின் ஒளி வீசிடும் பொன்னுடை ஒன்றை தனது மேனி மேல் சுற்றினன். இந்த பானுகோபனே நித்திரையை அறவே நீக்கிய தேவர் களை நடுக்கம் கொள்ளும்படி செய்த வீரனவான். 21

செல்லிடை உருமெனத் தெழிக்கும் கோன்கழல்
கல்லென அரற்றிடக் கழலிற் பூட்டினன்
வல்லிதிற் சாலிகை மருமஞ் சேர்த்தினன்
சொல்லினும் நிவந்தெழு தூண்செய் தோளினன்.

முகிலிடையே இடி இடித்தாற்போன்று முழங்கிடுகின்ற வீரகெண்டை கலீரெ னச் சத்தமிட காலிலே அதைப் பூட்டினன். வலியாயதோர் கவசத்தை நெஞ்சின் மீது அணிந்துகொண்டான். சொல்லினும் பார்க்க விரிந்தெழுந்த தூண் போன்ற தோளினையுடைய பானுகோபன். 22

கோதையை அங்கையிற் கொளுவிச் சுற்றினன்
போதுறழ் அங்குலி புட்டில் தாங்கினன்
சோதிகொள் சரம்படு தூணி யைச்சுவல்
மீதுற வீக்கினன் விறலின் மேலையோன்.

வில் பிடித்தற்காய உறையை எடுத்துக் கொழுவி அழகிய கையில் சுற்றினன்; பூப்போலும் மிருதுவாகும் விரல்களிலே புட்டில் எனும் விரல் உறைகளை போட்டுக் கொண்டான், சோதி போல் மினுங்கிடுகின்ற அம்புகள் வைத்த அம்புக்கூட்டை முது கின் புறமாகச் சேர்த்துக் கட்டினன். வலிமையில் மிக்க மேலவனாகும் இந்த பானு கோபன். 23

வெம்பெரு நுதல்மிசை விசயப் பாலதாஞ்
செம்பொனின் பட்டிகை திகழச் சேர்த்தினன்
பம்புறும் அணிகலம் பலவுந் தாங்கினன்
தும்பையஞ் சிகழிகை மவுலி சூட்டினன்.

கொடுமை நிறைந்த தனது பெருநெற்றி மேல் வெற்றி தரும் திறமை வாய் ந்த பொன்னினாலான பட்டிகையை திகழ்ந்து விளங்கிடுமாறு அணிந்துகொண்டான்.

ஒளி காலும் ஆபரணங்கள் பலவற்றையும் மேனியில் பொலிவுற அணிந்தான். தும்பை மலரினால் கட்டிய பூமாலையை முடிமேல் சூடிக்கொண்டான். 24

வடித்ததோர் பெருஞ்சிலை வயமுண் டாகஎன்
றெடுத்தனன் விடுத்திடின் யாவர் தம்மையும்
படுத்திடு மோகமாம் படையொன் றேந்தினன்
அடுத்திடு செறுநர்தம் மாற்றல் உன்னலான்

மிகு திறம்பாட்டுடன் வடித்துச் செய்யப்பெற்றதோர் வில்லினை வெற்றி உண்டாகட்டும் என மொழிந்தவாறு கையில் எடுத்தான். யார்மேலாக விடுத்தாலும் அவர்களை மயக்கி கொலை செய்கின்ற மோகனாஸ்திரம் என்னும் படை ஒன்றை எடுத்து கையில் ஏந்திக்கொண்டான். தனக்கு முன்பாக எதிர்த்து வரும் எத்தகையவரதும் வீரத்தைப் பற்றி கொஞ்சமும் அக்கறை கொள்ளாத பானுகோபன். 25

ஆனதோர் போரணி அணிந்து வாய்தலிற்
பானுவின் மாற்றலன் படர முன்னரே
போனதோர் தூதுவர் எழுதி போர்க்கெனத்
தானையோ டெழுந்தனர் தகுவர் யாவரும்.

அவ்வாறான பெரும் போர்க்கோலத்தை அணிந்துகொண்டு தனது அரண்மனை வாய்தலிற் பானுகோபன் சிறந்த நடைகொண்டு வருதலும் இதற்கு முன்பாக அவனால் அனுப்பிடச் சென்ற தூதுவர் சேனைகளின் இருப்பிடங்களை அணைந்து நீங்கள் போருக்கு எழுங்கள் என மொழிதலும் அதுவேளை சேனைகளுடன் அங்குள்ள சேனாதிபதிகள் புறப்பட்டனர். 26

வேறு

விசையன் நேமியன் மிகுந்திறல் மாயன்
முசலி கண்டகன் முரன்கரன் மூர்க்கன்
தசமுகன் கனலி சண்டன் விசண்டன்
அசமுகன் மகிடன் அக்கிர வாகு.

அசுர சேனாதிபதிகளாகும், விசையன் நேமி மிகு திறலுடைய மாயன் முசலி கண்டகன் முரன் கரன் மூர்க்கன் தசமுகன் கனலி சண்டன் விசண்டன் அசமுகன் மகிடன் அக்கிரவாகு என்பாரும். 27

விசையசே னன்விட சேனன் விமோகன்
வசைகொள் சோமகன் மதுச்சசி சித்துச்
சுசிமுகன் அசனி சூனிய கேது
அசுரசே னன்இவர் ஆதியர் ஆனோர்.

விசையசேனன் விடசேனன் விமோகன் வசைகள் கொண்ட சோமகன் மது சசிசித்து சுசிமுகன் அசனி சூனியகேது அசுரசேனன் எனப்படும் இவர்கள் ஆதிய இன்னும் பல சேனாதிபதிகள் தத்தமது அணிகளான அசுரப் படையுடன் எழுந்தனர். வசைகொள் சோமகன்— எத்தனையோ! போரில் வஞ்சனைகள் புரிந்து உலகத்தவர் இகழும் படி நின்றவன். 28

தடுக்கொ ணுவகை தடிந்திடு தெய்வப்
படைக்கலங் களவை பற்பல பற்று
உடைத்தவன் மையுடன் ஒய்யென வந்தார்
கிடைத்த தோவமர் எனக்கிளர் கின்றார்.

விடுத்திடில் எவராலும் தடுக்கமுடியாதபடி யாரையும் கொலை புரிகின்ற தெய்வப் படைகள் பலவற்றையும் கையில் பிடித்துக்கொண்டு உறுதியாகும் வலியுடன் ஒய்யென விரைந்து வந்தனர். இவர்கள் அச்சோ பலநாட்களின் பின்னர் இன்று போர் எமக்கு இடைத்ததோ என மனம் மலர்கின்றனர். 29

ஆனகா லைபதி னுயிர வெள்ளந்
தானவப் படைஞர் சார்புதொ றேகி
மீனவே லைகளும் வெள்குற ஆர்த்து
மானவத் தலைவர் மாடுற வந்தார்.

அவ்வாறுகிய நேரத்து பதினுயிர வெள்ளம் என்னும் கணக்குடைய சேனையாகும் அசுரப்படைகள் போர்ப் படைகளை ஏந்தியவாறு முறையாக வந்து மீன் வாழும் சமுத்திரமும் வெட்கிடும்படி ஆர்த்திட்டு வீரம் கொண்ட தங்கள் சேனுதிபதிகளின் மருங்காக வந்தனர். 30

கோல வார்சிலை கொடுங்கதை நீடுஞ்
சூல நேமி அயில் தோமரம் ஈட்டி
ஆலம் வாள்கணையம் ஆரெழு நாஞ்சில்
கால பாசமிவை கைக்கொடு சென்றார்.

கோலம் மிகுந்த நாண் கொண்ட வில் கொடிய கதாயுதம் நீண்ட சூலம் சக்கரம் வேல் தோமரம் ஈட்டி ஆலப்படை வாள் அம்பு அழகிய கூருடைய மழுவாயுதம் நாஞ்சில் காலபாசம் ஆகிய இப்படைகளைக் கையில் ஏந்தி இந்த அசுரர்கள் சென்றனர். 31

கந்து கத்தொகை கடங்கலும் கைம்மா
எந்தி ரத்திரதம் ஈங்கிவை மூன்றும்
ஐந்தொ கைப்படுமி ராயிர வெள்ளந்
தந்தி ரத்தலைவர் தம்புடை சூழ்ந்த

குதிரைப் படையும் மதம் பொழியும் நீண்ட துதிக்கையுடைய யானைப்படையும் எந்திரம் பூட்டிய தேர்ப்படையும் ஆகிய இந்த படைவகை மூன்றும் பதினுயிர வெள்ளம் என்னும் தொகையுடையனவாய் முன் புறப்பட்ட சேனுதிபதிகளுடன் சூழ்ந்துகொண்டன. 32

ஐந்து நான்குடைய ஆயிர வெள்ளத்
திந்த நாற்படையும் ஈண்டுபு செல்ல
மைந்தின் ஏற்றமிகு மானவர் தத்தஞ்
சிந்தை போற்கடிது சென்றனர் அம்மா.

இருபதாயிரம் என்னும் கணக்குடைய தேர் குதிரை யானை காலாள் என்னும் நான்கு பெரும் படையும் கூட்டாகச் செல்ல மலையினும் வலிகொண்ட வீரர்கள் தங்கள் தங்கள் மன வேகம் போல் விரைவுடன் சென்றார்கள். 33

சென்ற காவலர்கள் சேனையி னோடும்
என்ற வன்பகைஞன் எய்துழி நண்ணி
ஒன்ற அங்கைதொழு தொல்லென ஆர்த்துத்
துன்றி வந்துபுடை சூழ்ந்தனர் அன்றே.

சென்ற அசுரகாவலராகும் வீரர்கள் சேனையினோடும் சென்று சூரியன் பகைஞனை பானுகோபன் இருந்த இடத்தை அடைந்து எல்லாரும் ஒருமித்து அழகிய தமது கைகளைக் கூப்பி பானுகோபனை வணங்கி பேரோசையுடன் வேகமாக ஆரவாரித்துக் கொண்டு நெருங்கி வந்து சூழ்ந்துகொண்டனர். 34

இரவிதன் பகைஞன் ஈங்கிவை காணா
ஒருதன்ஏ வலனை ஒல்லையின் நோக்கித்
திருமைபெற் றதொரு தேரினை வல்லே
தருகஎன் னஇனி தென்று தணந்தான்.

சூரியன் பகைவனை பானுகோபன் இவற்றைக் கண்டு தனது ஒரு தூதுவனை விரைவுடன் பார்த்து சிறப்புப்பெற்ற எனது ஒரு தேரினை விரைவாக இங்கு கொண்டு வந்து தருவாயாக என்னலும் அத்தூதுவன் அரசே அப்படியே செய்வேன் அது நன்று என்று கூறிப் போயினன். 35

செப்பும் அத்தொழில் சிரங்கொடு சென்றே
மெய்ப்படைக் கருவி மேவுழி நண்ணி
முப்ப தாயிர முரட்பரி பூண்ட
ஒப்பிலா இரதம் ஒன்றினை உய்த்தான்.

சொல்லப்பெற்ற அப்பணியைத் தலைமேல் ஏற்று அத்தூதுவன் சென்று அழிவற்ற போர்ப்படைக் கருவிகள் இருக்கின்ற இடத்தைச் சேர்ந்து அங்கு முப்பதாயிரம் வலியுடைய குதிரைகள் பூட்டப்பெற்ற ஒப்பு வேறிலாத தனிப்பெருமையுடைய ஓர் தேரினைக் கொணர்ந்து பானுகோபன் முன்பு சேர்த்தான். 36

உய்த்த தேரின்உத யக்கிரி வாவு
மொய்த்த வெங்கதிரின் மொய்ம்பொடு பாய்ந்தான்
மெத்து பேரனிக வெள்ள மியாவும்
அத்துணைப் பொழுதில் ஆர்த்தன அன்றே.

மூன்ஞல் கொண்டுவந்து நிறுத்திய தேரில் உதய மலையினைத் தாண்டி மேலெழும் மொய்த்திட்ட வெய்யதான கிரணமுடைய சூரியனைப் போன்று பானுகோபன் பாய்ந்து ஏறினான். அதுவேளை அவனுக்கு படைத்துணையாக வந்த பெரு வெள்ளங்களாய சேனைகள் யாவும் அந்த தகுதியுடைய நேரத்தில் ஆரவாரித்தன 37

உரத்து கந்திகள் ஓராயிர கோடி
பெருத்து நீண்டசைவு பெற்றிடு பாளை
விரித்து நீட்டியென வெவ்வசு ரேசர்
கரத்தின் எண்ணில்கவ ரித்தொகை வீச.

உரத்துடன் வளர்ந்தோங்கிய தென்னை மரங்கள் பெருத்து நீண்டு அம்மரங்கள் தங்களிடம் உள்ள அசைவு பெற்றிடுகின்ற பாளைகளை விரித்து நீட்டி அசைத்து நின்ற தன்மை போன்று; கொடிய அசுரர்கள் கைகளில் எண்ணற்ற தொகையாகும் வெண் சாமரைகளை வீசவும். 38

மற்ற வன்தனது மாசிருள் மேனி
உற்றி டற்கருமை யால்அவண் ஒண்சீர்
சுற்றிமீ துலவு தோற்றம தென்னக்
கற்றை வெண்குடைகள் காவலர் ஏந்த.

பானுகோபன் வெற்றிகள் பல முன் பெற்று சிறந்துள்ள சீர்த்திகளையுடையவன். ஆனல் அவனது மேனியோ இருள் போன்று கருமை கொண்டது. இதனலே அவன் சீர்த்தியாகிய ஒளி கருமையாகும் உடலில் தங்கியிருத்தற்கு அருமையால் மேல் எழுந்து சுற்றி நிலவி நிற்கும் தோற்றம் என்னும்படி ஒளியாய கற்றைகளைப் பரப்பிடும் குடைகளை அசுரத் தலைவர்கள் பிடித்து வரவும். 39

அடைப்பை கோடிகம் அடுஞ்சுடர் ஒள்வாள்
கடிக்கொள் பீலிகவின் உற்ற களாசித்
தொடக்கம் ஏந்திமுறை சுற்றி அனந்தம்
படைப்பெ ருந்தலைவர் பாங்கொடு போற்ற.

அடப்பை பூந்தட்டு கொலை புரியும் ஒளியுடைய கூரிய வாள் உரமுடைய மயிற் பீலி அழகிய காளாஞ்சி ஆகிய இத்தகைய வரிசைகளை அனந்தம் அசுரர்களின் பெரும் படைத் தலைவர்கள் கைகளில் ஏந்தி பானுகோபனை முறைப்படி சூழ்ந்து பாங்காக போற்றி வந்திடவும். 40

எழில்செ றிந்தஇர தத்திடை வைகும்
அழலின் வெங்கதிரை ஆற்றமு னிந்தோன்
உழைய ரிற்பலரை ஒய்யென நோக்கி
விழுமி தோர்மொழி விளம்புதல் உற்ருன்.

இவ்வாறு எழில் விளங்கிடும் தேரின் மீது [ வைகியவரும் நெருப்பை ஒத்த வெப்பக் கிரணங்களையுடைய சூரியனை முன்னர் மிகவும் கோபித்த பானுகோபன் தனது பக்கல் நின்ற தூதுவரிற் பலரை விறுக்கென பார்த்து மிகவும்முக்கியமான ஓர் வார்த்தையை சொல்லத் தொடங்குவான், 41

காமர் வெம்பணிட கணிப்பில கொண்ட
சேம மாகியமர் தேரொரு கோடி
ஏம மோடுகொணர் வீரென லோடுந்
தாம வேலுழையர் தாழ்ந்தனர் சென்றார்.

தூதுவர்களே! நீங்கள் உடனுகச் சென்று அழகுடைய கொடும் தன்மை வாய்ந்த பெரும் படைகள் அளவற்றதை தன்னிடத்தில் கொண்ட சேமத் தேராய் இருப்பனவற்றில் ஒரு கோடி தேரை மிகு மகிழ்வுடன் இங்கு கொண்டு வருவீர்களாக என கூறுதலோடும் அந்நேரத்து மாலையணிந்த வேலைக் கையில் கொண்ட தூதுவர் அரசே அது நன்று என்று தாழ்ந்து வணங்கிச் சென்றனர். 42

அண்ட ரும்படை அளப்பில உய்த்துத்
திண்டி றற்கெழுமு தேரொரு கோடி
கொண்டு வந்துழையர் கொற்றவன் மைந்தற்
றெண்டி சைப்புறமும் ஈண்டுற வித்தார்.

அவ்வாறு சென்ற தூதுவர் எவரும் முன்னிற்க முடியாத படைகள் அளவற்றதை அந்த சேமத் தேர்களில் எடுத்து வைத்து மிகும் திண்மை வாய்ந்ததாய் விளங்கிடும் தேர்கள் ஒரு கோடியையும் கொண்டுவந்து அவர்கள் சூரபன்மன் மைந்தன் பானுகோபனின் எந்தப் பக்கலிலும் சூழ்ந்துடன் செல்லுமாறு நிறுத்தி வைத்தனர். 43

ஆண்ட கைக்குமரன் அன்னது காலை
மாண்ட சீர்வலவன் மாமுகம் நோக்கிப்
பாண்டின் மாத்தொகுதி பண்ணின இத்தேர்
தூண்டு கந்தன்அமர் சூழலின் என்றான்.

ஆண்டகைமையுடைய அசுரகுமரன் பானுகோபன் அந்தக் காலையில் மாட்சிமையுடைய சீருடன் கூடிய தேர்ச் சாரதியின் பெருமுகத்தை நோக்கி சாரதியே பெரும் சில்லுடன் வலிகொண்ட பல குதிரைகள் பூட்டப்பெற்ற இத்தேரைச் செலுத்திடுவாய் கந்தன் வந்து தங்கியிருக்கும் இருப்பிடத்தின் சார்பாக என்றான். 44

என்ன லும்விழுமி தேயென மூட்கோல்
மன்னு மத்திகையின் வன்றெழில் காட்டித்
துன்னு வாம்புரவி யின்றொகை தூண்டிப்
பொன்னந் தேர்கடவி னான்புகழ் வெய்யோன்.

என்று பானுகோபன் கூறுதலும் சாரதி அதுகேட்டு நன்று என்று முட்கள் கொண்ட சவுக்கினின் கொடுமையை வீசிக் காண்பித்து வேகமுடன் செல்லும் பெருங் குதிரையின் கூட்டங்களை எழச் செய்து பொன்னுய் விளங்கிடும் தேரினைச் செலுத்தினுன் சாரதியத் தொழிலில் புகழ் கொண்ட கொடிய அசுரன். 45

வெய்ய வன்தனை வியன்சிறை இட்ட
கையன் ஏகஅது கண்டு புறஞ்சூழ்
மையல் மால்அவுண மாப்படை யாவும்
ஒய்யெ னப்பெரிது லம்பின அன்றே.

கொடுமை கொண்ட சூரியனைச் சிறைவைத்த வஞ்சகனுன பானுகோபன் இவ்வணம் தேர் மேல் சென்றிட அதுகண்டு புறத்தே சூழ்நின்ற மாயஞ் செய் நிலை கொண்ட பெரும் அசுரராகும் படைகள் யாவும் விரைவாக பெரிதும் ஆர்த்து இரையத் தொடங்கின. 46

எழுந்த தானவர் இகற்படை வெள்ளம்
எழுந்த தேர்நிரை எழுந்தன கைம்மா
எழுந்த வாசிகள் எழுந்தன ஓதை
எழுந்த கேதனம் எழுந்தன பூழி.

இவ்வணமாக வலிகொண்ட போர்ப்படைகள் யாவும் புறப்பட்டு எழுந்தன. வரிசையுடன் நின்ற தேர்கள் புறப்பட்டு எழுந்தன. நீண்ட துதிக்கையுடைய யானைகள் புறப்பட்டு எழுந்தன. குதிரைப்படைகள் புறப்பட்டு எழுந்தன. இவைகள் ஆரவாரத்துடன் புறப்பட்டு எழுததால் பேரோசை எழுந்தது. கொடிகள் யாவும் வானில் விளங்கிட எழுந்தன. இவர்கள் வேகத்தால் புழுதிகள் எழுந்தன. 47

அறைந்த பேரிகை அறைந்தன சங்கம்
அறைந்த காகலம் அறைந்தன திண்கோ
டறைந்த சல்லிகை அறைந்த தடாரி
அறைந்த தண்ணுமை அறைந்தன தக்கை.

பேரிகைகள் முழங்கின. சங்குகள் ஊதுப்பெற்றன. காகளம் என்னும் வாத்தியம் அறைந்தது. வலியான கொம்பு வாத்தியம் ஊதின. சல்லிகை முழங்கின. தடாரி முழங்கின. மத்தளம் முழங்ியது. தக்கையும் முழங்கியது. 48

ஆர்த்த தேர்த்தொகுதி ஆர்த்தன வாசி
ஆர்த்த தந்திநிரை ஆர்த்தனர் வெய்யோர்
ஆர்த்த வால்துவசம் ஆர்த்தன கண்டை
ஆர்த்த தார்நிரைகள் ஆர்த்தது மூதூர்.

தேர்க்கூட்டங்கள் ஆர்த்தன, குதிரைகள் கனைத்தார்த்தன. யானைகள் வரிசையாக முழங்கின. கொடிய அசுரர்கள் ஆரவாரித்தனர் மேல்நின்று கொடிகள் படபடத்து ஆர்த்தன. வீரர்கள் காலில் கட்டிய கண்டைகள் ஆர்த்தன. அவர் கழுத்தில் அணிந்த மாலை நிரைகளில் வண்டுகள் ஆர்த்தன. இந்தப் பேரோசைகளால் அந்த முதிய ஊரே ஆர்த்தது. 49

அதிர்ந்த மாநிலம் அலைந்தன நாகம்
உதிர்ந்த தாரகை உலைந்தனர் தேவர்
விதிர்ந்த மேகநிரை விண்டது மேருப்
பிதிர்ந்து போயின பிறங்கல்கள் ஏழும்.

இப்பெரிய பூமியே நடுங்கி அதிர்ந்தது. பூமியைத் தாங்கிடும் நாகங்கள் அச்சத்தால் அலைந்தன. வானில் [வெள்ளிகள் உதிர்ந்தன. தேவர்கள் கண்டு நடுங்கி உலைந்தனர். மேக நிரைகள் பிரிந்து சிதறின, மேருமலை நிலைகுலைந்தழிந்தது. அதனைச் சூழ்ந்த மற்றைய ஏழு மலையும் பிதிர்ந்து போயது. 50

ஊழி யான்மதலை ஒங்கு படைப்பேர், ஆழி யோடுற அருக்கன் வெருண்டே
பூழி வான்முகடு போர்த்தெழல் காணா, வாழி என்றதின் மறைந்து படர்ந்தான்.

ஊழிகள் பல வாழ்ந்த சூரபன்மனின் மைந்தன் இத்தன்மையாக தேர்மேலாகி பெரும் படையுடன் வருதலும் சூரியன் இவனைக் கண்டு வெருண்டு என் செய்வேன் என நடுங்கினான் அவ்வேளை அங்கு எழுந்த புழுதி வானின் உச்சியெலாம் சென்று மறைத்துப் பரந்து எழுதலைச் சூரியன் கண்டு புழுதியே! நீ நன்றுடன் வாழ்க என்று அதனுள் மறைந்து தன்னைக் காட்டிக் கொள்ளாது சென்றான். 51

வாழி மாநகர் வளைத்திடு தொல்பேர், ஆழி யாங்கடை அவப்படை யாகிச்
சூழும் வேலையிடை தோன்றி யுலாவும், பூழி தூர்த்துளது பூதர்க ளேபோல்.

இப்பொழுது வாழ்வு தரும் பெருநகராகும் வீரமகேந்திரபுரத்தை வளைந்து கொண்ட பெரும் கடல் அங்கு நாற்படையுமாகிச் சூழ்ந்து எழுந்துவரும் பானுகோபனது படை வெள்ளத்திடையே தோன்றி எழுந்து உலாவிய புழுதியால் அக்கடல் அடைபட்டது. பூதர்கள் முன்பு அக்கடலூடு வருங்கால் கடலைக் கலக்கி திடராக்கியதே போன்று.
52

விட்ட சோதிநிமிர் விண்மிசை தாக்கப், பட்டு லவாரு பதாகையின் ஈட்டம்
வட்ட வானமெனும் வான்பட கத்தைக், கொட்டு மண்மகள் குலாவுகை போலும்

வானில் நிறைத்து ஒளி மிகுந்து விளங்கிவரும் கொடிகளின் தொகைகள் வானில் முட்டச் செல்லும் தன்மை எதுபோன்றிருப்பதென்றால் வட்ட வடிவாகும் வானம் என்னும் உயர்ந்த மேளத்தை முழக்கிடும்படி பூமி தேவியாகும் பெண் தனது கைகளை அசைத்திடுகின்ற தன்மை போன்று விளங்கியது. 53

தாழும் வீரர்படை தம்மின் உரிஞ்சப், பாழி வெங்கனல் பரந்த பதாகைச்
சூழல் வானநதி தோய்ந்தசை காலை, வீழு மாலிகளின் வீழ்ந்திடு கின்ற.

மாலைகள் தாழ்கின்ற மார்புடைய வீரர்கள் கையில் ஏந்திய படைகள் தம்மில் ஒன்றுடன் ஒன்று உராய்ஞ்சுதலால் எழுகின்ற கொடிய நெருப்புப் பொறிகள்; கொடிகளின் கூட்டங்கள் மேலெழுந்து வானில் விளங்கிடும் ஆகாய கங்கையில் தோய்ந்து அசையுங்கால் எழுந்து கீழே வீழ்கின்ற நீர்த்துளிகளினைப் போன்று வீழ்கின்றன. 54

வான மோடியன மால்கரி தள்ளுந், தான மோடின சரங்களின் ஓடி
மீன மோடுதிரை வேலையி னேடும் கான மோடின களிற்றின மென்ன.

மேலாகும் காளிபோல் உருக்கொண்ட அடல் மிகுந்த மதயானைகள் தள்ளிய மதநீரானது பெருகி ஓடியது. அம்மதநீர் அம்புகள் போன்று அங்குமிங்குமாக வளைந்தோடி சில மீன்கள் ஓடிடும் கடல் மேல் சென்றன. அன்றி காட்டினிடத்தேயும் அம்மதநீர் ஓடின. எப்படியெனில் காட்டானைக் களைப்போன்றே காட்டினிடத்தாக அம் மதநீர் ஓடின. 55

செப்பு தற்கரிய சேணகர் தன்னில் துப்பு மிக்கெழுவு தொல்படை வெள்ளம்
இப்பு றத்துநெறி யன்றிஅவ் வானத், தப்பு றத்தினும் அளப்பில சென்ற.

சொல்லுதற்கரிய மிக தூரமாகிய எல்லையில் இருக்கும் வீரமகேந்திரபுரம் என்னும் அந்நகரத்தில் மிக திண்மையுடன் எழுந்துகொண்ட மிகு தொன்மை வாய்ந்த பெரிய சேனை வெள்ளம் இப்பக்கராக உள்ள பூமி மார்க்கம் அன்றி அப்பால் அப்புறமாகிய வானத்திலும் எழுந்துசென்றது. 56

மறந்த ருங்கதிரை வன்சிறை செய்தோன்
செறிந்த தானையுடன் இவ் வகை செல்ல
இறந்த சீர்நகரின் இத்திற மெல்லாம்
அறிந்து நாரதன் அகன்றிடு கின்றான்.

கொடுமை தருகின்ற வெப்பமுடைய சூரியனைச் சிறை செய்த பானுகோபன் தன்னுடன் சூழ்ந்து பரந்த சேனையுடன் இவ்வகையாகச் சென்றிட சீர் நீங்கிய இந்த நகரின் இத்திறங்கள் யாவற்றையும் நாரத முனிவன் கண்டு கொண்டு அப்பால் செல்கின்றான். 57

வான மேல்நெறி வழிக்கொடு பூதர்
மேன பாசறை வியன்பதி யுட்போய்
ஞான வாலறிவின் நாரதன் விண்ணோர்
சேனை காவலன் அமர்ந்துழி சென்றான்.

ஞானமாகும் பேரறிவினைக் கொண்ட நாரத முனிவன் வான மார்க்கமாக வழிக்கொண்டு பூதங்கள் காவலாகப் பொருந்திய பாசறைத் தலமாகும் மேலாகிய பதியுட் சென்று தேவர்களின் சேனைகட்கு எல்லாம் காவலனாகிய கருணைக் கடலாம் முருகப் பெருமான் இருந்தருளிய இடத்தைச் சென்றடைந்தான். 58

சிந்து ரப்பகை சிரத்தவி சுற்ற
கந்த வேள்இரு கழற்றுணை காணப்
புந்தி நாரொடு புகழ்ந்து வணங்கி
எந்தை கேட்கவென இன்ன துரைப்பான்

யானையின் பகை எனும் சிங்கங்களின் சிரசின் மீதுள்ள சிம்மாசனத்தில் வீற்றிருந்தருளிய முருகப்பெருமானின் திவ்வியமாகும் இரு திருவடிகளையும் கண்டு மனதில் எழுகின்ற அன்புடன் புகழ்ந்து வணக்கம் செய்து எந்தை பிரபுவே இதைக் கேட்டருள்க என இப்படிச் சொல்கின்றான். 59

பூத சேனையொடு பொள்ளென ஏகி
ஆதி நீயிவண் அமர்ந்தன யாவும்
தூதர் கூறஉயர் சூரபன் மாவென்
றோது தீயவன் உணர்ந்து வெகுண்டான்.

பூத சேனைகளோடும் விரைவுடனாக இங்கு வந்து ஆதியான அப்பனே தேவரீர் இங்கு அமர்ந்தருளிய செய்கைகள் யாவையும் தூதுவர்கள் அறிந்துசென்று கூறிட அது கேட்டுணர்ந்த உயர்வுடைய சூரபன்மா எனச் சொல்லப்படும் தீயவனானவன் மிகு கோபங் கொண்டான், 60

நிகண்ட முற்பகல் நெடுங்கதி ரோன்பால்
உகண்டதன்மகனை ஒல்லை விளித்தே
அகண்ட சேனையொடும் அன்பிலன் நின்மேல்
வெகுண்டு போர்செய விடுத்தனன் அம்மா.

பெருமை மிகுந்திட முன்னொரு காலத்தில் நெடிய கிரணங்களையுடைய சூரிய தேவனைச் சிறை செய்த தனது மகன் பானுகோபனை உடன் அழைத்து மிக பரந்து விளங்கிய பெரும் சேனை வெள்ளங்களுடன் அன்பு என்பதில்லாத அந்தச் சூரபன்மன் தேவரீர்பால் வெகுட்சியுடன் போரிட விடுத்துள்ளான்.

அன்பு என்பதுதான் ஈசனை அறிதற்கு ஏதுவாகும் ஓர் பொருள். அன்பு இல்லாதபோது அருளுக்கு இடமில்லை. ஆதலின் அன்பு இலான் என கூறினர். 61

விடுத்த காலையவன் வெஞ்சமர் ஆற்றற்
கடுத்த கோலமொ டளப்பில வான
கடற்பெ ரும்படை கலந்துடன் ஏகத்
தடுப்ப ரும்வெகுளி தன்னொடும் வந்தான்.

சூரபன்மன் பானுகோபனைப் போரிடும்படி விடுத்த காலையில் அப் பானுகோபன் மிகு கொடிய போரினைச் செய்திடற்கு ஏற்ற போர்க்கோலங்களுடன் புறப்பட்டு அளவிட முடியாத கடல் போன்ற பெரிய படை தன்னோடும் துணையாகக் கலந்து சூழ்ந்து வந்திட யாவராலும் தடுத்து ஆறுதல் படுத்த முடியாத பெருங் கோபத்துடன் வந்தான். 62

இவனு டன்சமரின் ஏற்பவர் நீயுஞ்
சிவனும் அன்றியெவர் தேவரின் உள்ளார்
அவனை வெல்வதரி தாகும்முன் ஓர்நாட்
புவனி யுண்டவர் புறந்தர வென்றான்.

இந்த பானுகோபனுடன் நேரிட்டு போர் புரிய ஏற்றுக்கொள்ள வல்லமையுடையோர் தேவரீரும் சிவபிரானும் அல்லாமல் வேறு எவர் தேவர்களில் இவனுடன் போர் செய்ய வல்லவர் உள்ளார்கள். இந்த பானுகோபனை வெல்வது மிகவும் அரிதாகும். ஏனெனில் இப்பூமியை முன்னாளில் உண்டவரான திருமால் பிரமன் முதலியோர் இந்த பானுகோபனுக்குத் தோற்று புறமுதுகு காட்டினவராயிற்றே. 63

கரையி லாவமர் கடந்திசை கொண்டான்
வரைவி லாதபல மாயைகள் வில்லான்
உரக வேத்தினும் உரம்பெரி துள்ளான்
பிரமன் ஈந்துடு பெரும்படை பெற்றான்.

அளவு காணமுடியாத போரினை வென்று அதனல் பெரும் புகழ் கொண்டவன் பானுகோபன். முடிவு என்பதில்லாத பல மாயைகளில் மிக வல்லவன், உலகம் யாவையும் தாங்கிடும் நாக அரசனிலும் பார்க்க வலியுடையவன். பிரமதேவன் கொடுத்த பிரமாஸ்திரம் எனும் பெரிய படையை உடையவன். 64

அறைக டற்கிறைவன் அங்கைகொள் பாசம்
மறலி தன்பரசு வவ்வினன் மாயோன்
விறலின் நேமிகொள வேண்டலன் முன்னஞ்
சிறிய தந்தையணி குற்ற சிறப்பால்

ஒலிக்கின்ற கடலிற்கு அரசனுன வருணன் தனது அழகிய கையில் கொண்ட பாசமும் யமனுடைய மழுவாயுதத்தையும் முள்பொருளாகி பறித்து பிடுங்கிக்கொண்டவன். நாராயணக் கடவுளின் சக்கரப்படையை அவன் பறித்தெடுக்க விரும்பவில்லை, ஏனெனில் முன்னம் சிறிய தந்தையான தாரகன் அந்த சக்கரப்படையைத் தனது கழுத்தில் அணிந்துகொண்ட சிறப்பால். 65

ஆகை யால்அவனை ஆள்கொடு வல்லே
வாகை கொண்டிடலும் மற்றரி தம்மா
பாகு பட்டபடை பாங்குற நீயே
ஏகல் வேண்டுமட வென்று பகர்ந்தான்.

ஆகையால் பெருமானே தேவரீர் அந்த பானுகோபனை வேறு ஆளை அனுப்பி வென்றிடலும் அரிதாகும். ஆதலின் அணிகளாக வகுக்கப்பட்ட பெரும் படை சூழ்ந்து வர அவனைக் கொன்றிடநேரில் நீரே போதல் வேண்டும் என நாரதமுனிவன் கூறினன்.

நார தன்இவை நவின்றிடு காலை
மூரல் எய்திமுரு கன்புடை நின்ற
வீர வாகுவை விளித்தருள் செய்து
சீரி தாஇனைய செப்புதல் உற்றான்.

நாரதமுனிவன் இவற்றைச் சொல்லிநின்ற காலையில் எம்பிரான் அதுகேட்டு புன்சிரிப்புக் கொண்டருளி தனது பக்கராக நின்றருளிய வீரவாகுதேவரை உற்று நோக்கியருளி அருள் புரிந்து சீர்பொருந்தும்படியாக இந்த வார்த்தைகளைச் செப்பியருளத் தொடங்கினர். 67

ஈண்டு பூதரொ டியாம்வரு தன்மை
யாண்டு சூரனுணர்ந் தந்நகர் தன்னின்
மாண்ட தானையுடன் மைந்தனை நம்மேல்
தூண்டி னுன்அமர் தொடங்கிய மன்னே.

இவ்விடத்து பூத கூட்டங்களுடன் யாம் வருகின்ற தன்மையை அவ்விடத்து சூரபன்மன் உணர்ந்துகொண்டு மாட்சிமையுடைய சேனையுடன் தனது மகன் பானுகோபனை நம்முடன் போரிடும்படியாக செல்வதற்கு அனுப்பியுள்ளான். ஆகையால் போர் இனி ஆரம்பிக்கப்பட்டது. 68

எள்ளு தற்கரிய எண்மர் இலக்கர்
உள்ள பேர்களும் ஓராயிர பூத
வெள்ள மும்புடையின் மேவர நீ போய்ப்
பொள்ளெ னப்புரிசை யின்புடை சூழ்தி.

ஆனமையால் நீ இகழமுடியாத வலிமை கொண்ட எட்டு வீரர்கள் மற்றும் இலக்கம் வீரர்கள் ஆகவுள்ள இலக்கத்தெட்டுப் பேர்களும் இங்குள்ள பூதசேனைகளில் ஓராயிரம் வெள்ளமும் உனது பாங்கராகச் சூழ்ந்துவர நீ சென்று விரைவாக நகரின் புற மதிலின் பாங்கராக வளைந்து கொள்வாய். 69

சென்று முன்கடை சிதைத்தனை அங்கண்
வன்றி நேரவுணர் காவலன் மைந்தன்
துன்று சேனைகள் தொலைத்தமர் ஆற்றி
வென்றி கொண்டவனை மீளுதி யென்றான்.

அவ்வாறு நகர மதிலை அணுகி முன் கடை கோபுரவாய்தலை சிதைத்து அங்கு வந்த சூரபன்மனின் மகனின் சேனைகளைத் தொலைத்து போர் புரிந்து வெற்றி கொண்டு மீண்டு இவ்விடம் வருவாயாக என விளம்பியருளினர். 70

ஈரும் வேல்முருகன் இவ்வகை கூறி
வீர வாகுவை விடுத்திளை யோரைச்
சார தத்தலைவர் தம்முடன் ஏவி
நார தற்கிது நவின்றருள் செய்வான்.

உள்ளத்தே ஈர்கின்ற வேலினைக் கையில் ஏந்தியருளிய முருகப்பிரான் இவ்வகை கூறியருளி வீரவாகுதேவரை பானுகோபனுடன் போர் புரிய விடுத்து அவரின் தம்பிமாராகும் இலக்கத்து எண்மரையும் பூதத் தலைவருடன் புறப்பட்டு போர்க்குச் செல்லுமாறு விடுத்து பின்னர் நாரத முனிவனை நோக்கி இவற்றை மொழிந்தருள்கின்ருர். 71

கேட்டி யான்முனிவ கேழ்இளர் சிம்புட்
கூட்ட மீதுசில கோளரி மேவின்
வாட்ட வல்லனகொல் மாய்குவ தல்லால்
காட்டு வாமுடிவு காண்டிய தென்ருன்.

நாரத முனிவனே கேட்பாயாக! வலியுடன் செறிந்து விளங்கிடும் சரபப்பட்சிகளின் கூட்டத்திலே சில சிங்கங்கள் சென்ருல்! அச்சிங்கங்கள் சரபப்பட்சிகளை வாட்டி துயருறுத்தவும் வல்லமையுடையனவோ. அவ்வாறு சென்றிட்ட சிங்கங்கள் தாம் மாய்ந்து போவதல்லாது. அதேபோல இங்கு என்ன ஆகும் என்னும் முடிவை நாம் காட்டுவோம் நீ காண்பாயெனக் கூறியருளினர்.

நாரதமுனிவர் வலிமை மிக்க பானுகோபனை வென்றிட தேவரீரே போதல் வேண்டும் எனப் பேசியதற்கிணங்க எம்பிரான் எமலா அப்படியுள்ள காரியம் காட்டுவாம் முடிவு நீ காண் எனப் பகர்ந்தமை காண்க. . 2

குமரன் நல்குவிடை கொண்டு படர்ந்தே
விமல வாலுணர்வின் மேதகு வீரன்
இமைய மேருநிகர் திண்சிலை ஒன்றை
அமரர் கோன்புகழ அங்கை பிடித்தான்.

என்றும் இளநலம் குன்றிடாத கோலமுடைய குமரப்பெருமான் சென்று போரிடப் போதற்கு கொடுத்தருளிய விடையினைப் பெற்றுக்கொண்டு சென்று மேலாகிய நல்லுணர்வின் மேம்பட்ட வீரவாகுதேவர் பெருமையாகும் மேருமலையை ஒத்திடுகின்ற வலியதோர் வில்லினை எடுத்து தேவேந்திரன் அதன் இயல்பு கண்டு புகழும்படியாக தமது அழகிய கையிலே பிடித்துக்கொண்டார். 73

வீக்கி னன்கவசம் வெந்நிடை தன்னில்
தூக்கி னன்பகழி பெய்திடு தூணி
நீக்க மில்விரலின் நீடுகை தன்னில்
தாக்கு கோதையொடு புட்டில் தரித்தான்.

வீரவாகுதேவர் கவசத்தை மார்பில் அணிந்து இறுகக் கட்டிக்கொண்டார் முதுகின் மீது அம்புகள் வைத்திருக்கும் கூட்டை எடுத்து தூக்கினார். நீக்கமின்றிய வலியுடைய விரலில்புட்டிலை அணிந்தார். நீண்ட கைகளில் மேலாகிய கோதையை எடுத்துச் சுற்றி அணிந்துகொண்டார். 74

சேம வெம்படை செறிந்திடு வைய
மாம ருங்கினில் வரம்பில செல்லத்
தோமில் வீரமிகு தோளினன் அங்கோர்
ஏம மாமிரதம் ஏறினன் மாதோ.

எடுத்த படை தவறிய வேளை அடுத்து விடுதற்கு ஏற்ற கொடிய சேமப்படைகள் வைத்திருக்கும் தேர்கள் தனது பெருமருங்காக அளவற்றன செல்ல குறைவிலாத வீரம் மிகுந்த தோளுடைய வீரவாகுதேவர் அவ்விடத்து ஓர் இன்பநிலை கொண்ட தேர் மேலாக ஏறிக்கொண்டு புறப்பட்டார். 75

எட்டு வீரரும் இலக்கரும் ஏனை
மட்டில் பூதகண மன்னரு மாக
ஒட்டி ஆடமர் உருக்கொடு கொண்மூ
முட்டு தேர்த்தொகையின் மொய்ம்பொடு புக்கார்.

தனது தம்பிமாராகும் எட்டு வீரரும் இலக்கம் வீரரும் மற்றும் மட்டற்ற பூதகணங்களின் சேனாபதிகளும் பந்தயம் வைத்து போராடும்படியாக வேகம் கொண்டு மேகங்களை முட்டும்படி உயர்ந்திட்ட தேர்த் தொகைகளில் வலியுடன் ஏறிக்கொண்டனர். 76

தேரின் மேற்படு சிறப்புடை வீரர்
வீர வாகுவை விரைந்தயல் சூழ்ந்தார்
நேரில் ஆயிர நெடுங்கதிர் ஒன்றைச்
சூரர் தற்றொகுதி சுற்றிய வாபோல்.

தேர்மேல் ஏறிக்கொண்ட சிறப்புடைய இந்த வீரர்கள் வீரவாகுதேவரை விரைவாக வந்து அயலில் சூழ்ந்து கொண்டனர். எதுபோலுமெனின் நேரில்லாத ஆயிரம் நெடிய சூரியதேவர்கள் திரண்ட ஓர் வடிவத்தை இன்னும் பல சூரியர்கள் சூழ்ந்துள்ளவாறு போன்று. 77

வீரசி யேயமர் விளைத்திட வெஞ்சூர்
அரசன் மாநகரின் ஆயிர வெள்ளம்
பரிச னங்கள்படர் மின்கடி தென்று
முரச றைந்தனர்கள் ஆயிடை மொய்ம்போர்.

அந்நேரத்து அவ்விடத்து வலுவுடைய பூதவீரராயவர்கள்; சிறப்புடன் போர் செய்வதற்கு கொடிய அசுரர் தலைவனாகும் சூரபன்மன் வாழ்ந்திடும் நகரத்திற்குப் போவதற்கு இங்குள்ள பூதசேனைகளில் ஆயிர வெள்ளம் சேனைகள் ஆயத்தமுடன் விரைவக எழுந்து செல்லுங்கள் என்று முரசப்பறையை அங்கு முழக்கினார்கள். 78

அறைந்த காலைதனில் ஆயிர வெள்ளம்
நிறைந்த பூதர்நெடு வேல்முரு கன்பாற்
செறிந்து போற்றியிட ஏனையர் சென்றார்
உறைந்த ஆர்கலி உடைந்தது போல.

முரசப்பறை அடித்த காலையில் ஆயிர வெள்ளம் எனும் கணக்குடன் நிறைந்த பூதங்கள் நெடிய வேலைத் திருக்கரத்து ஏந்திய எம்பிரான் முருகன் பாலாக செறிந்து காவலாகப் புறம் சூழ்ந்து நிற்ப மற்றை ஆயிர வெள்ளம் பூதச்சேனைகளும் போர் நோக்கிச் சென்றார்கள். அவர்கள் போகும் நிலையை நோக்குமிடத்து உலகினைச் சூழ்கின்ற கடல் கரை உடைந்து செல்கின்றதோ எனும் தகமையாகக் காணப்பட்டது. 79

அருந்தி யிற்படரும் ஆயிர வெள்ளக்
கிருத்தி மத்தவர் கிளர்ந்திடு தீப்போல்
உருத்து வேலையின் ஒலித்துயர் ஊழி
மருத்தின் வன்மைகொடு வந்திடு கின்றார்,

மிகு அக்கறையுடன் செல்லும் ஆயிரம் வெள்ளம் பூதங்களும் சுவாலித்து எரிகின்ற நெருப்பினைப் போன்று கோபமுனப்பெற்று கடல்போல் இரைந்து உயர்வாகும் ஊழியில் உலகை அழித்திடுகின்ற ஊழிக் காற்றின் வன்மையுடன் வந்திடுகின்றனர், 80

பைய ராவிறை பரித்திடு கின்ற
வையம் யாவையுமொர் வாகுவின் வைக்குங்
கையர் காலனை அடுந்தறு கண்ணர்
வெய்ய ரானவர்கள் யாரினும் வெய்யோர்.

இப்பூதங்கள் படமுடைய பாம்புகட்கு அரசாகும் ஆதிசேடன் எனும் பாம்பு தாங்கிடுகின்ற இப்பூமி முழுவதையும் ஓர் தோள்மேல் தூக்கி வைக்கின்ற பெருங் கைகளையுடையவர்கள். இயமனையே கொல்லும் கொலைக்கண்ணர், மிகவும் கொடியவ ராய் இருப்பார் யாரினும் கொடியவர்கள். 81

அரத்த வேணியர் அடும்படை ஏந்துங்
கரத்தர் வெங்கழல் கலித்திடு தாளர்
வரத்தின் மேதகையர் மாயை கடந்தோர்
உரத்தின் அண்டமும் உடைத்திட வல்லோர்.

இப்பூதர்கள் சிவந்த சடையுடையவர்கள். கொலை புரியும் படைகளை ஏந்திடும் கைகளையுடையவர். காலில் பொல்லாத பேரோசையுடன் ஒலித்திடுகின்ற சிலம்பினை உடையவர்கள் வரங்கள் பல பெற்று மேம்பாட்டுடன் விளங்கிடுபவர். மாயத் தன்மைகள் யாவற்றிற்கும் அப்பாற்பட்டவர். தங்கள் வலியால் அண்டங்களையும் உடைக்கக்கூடியவர்கள். 82

இனைய தன்மையினில் ஈண்டிய பூதர்
அனைவ ருஞ்செல அவர்க்கிறை யானோர்
தனதுதொல் லிளைஞர் தம்மொடு சென்றான்
வனைக ருங்கழல் வயம்புனை வாகு.

இவ்வாறான நிலையுடையராய் வந்த பூதங்களாயோர் அனைவரும் செல்ல அவர் கட்கு அதிபராயவருடனும் தனது மிக பழமையாய காலம் தொட்டே வீரத்துடன் விளங்கிடும் தம்பிமாருடனும் சென்றார் வெற்றி தரும் விழைவுடைய வீரக்கழலை அணிந்த வீரவாகுதேவர். 83

செல்ல லுந்திமிலை செல்லுறழ் பேரி
கல்லெ னுங்கரடி காகள மாம்பல்
சல்ல ரிப்பறை தடாரி உடுக்கை
பல்லி யம்பிற முழங்கின பாங்கர்.

இவர்கள் இவ்வணம் செல்லலும் திமிலை இடியை ஒத்த ஓசையையுடைய பேரிகை, கலீரென ஒலித்திடுங் கரடிகை, குடமுழா, காகளம், ஆம்பல், சல்லரி எனும் பறை தடாரி, உடுக்கு ஆதியான பல பிற வாத்தியங்கள் பக்கசராக முழங்கப்பெற்றன. 84

மாறில்சே னையிடை வந்தெழு பூழி
நீறுபூ சிமுடி நீடிய கங்கை
ஆறு தோய்ந்தகல் விசும்பிடை ஆடி
ஏறுகொண் டகொடி ஈசனை யொப்ப.

எக்காலமும் மாறுதல் இலாத இந்த பூதசேனைகள் செல்லும் வேகத்தால் எழுந்து புழுதியாய நீற்றினால் இச்சேனையிடத்ததாக உள்ள இடபக்கொடிகள் பூசப்பட்டு கொடிகளின் நுனி ஆகாய கங்கை வரையும் முட்டி நின்று கங்கையை முடிமேல் சூடியவை போன்று விளங்குதலால் இந்த இடபக் கொடிகளானவை நீறணிந்து கங்கை சூடிய கடவுளை ஒப்பன. 85

பாய சாரதர் படைக்குள் எழுந்தே
ஆய பூழிஅவு ணப்படை தன்னில்
சேய பூழியொடு சேர்வன தாமுன்
போயெ திர்ந்தமர் புரிந்திடு மாபோல்.

வேகமுடன் செல்கின்ற பூதப்படைக்குள் எழுந்து செல்வதாகும் புழுதி அங்கு முன் வருகின்ற பானுகோபனின் அசுரப்படைகளினிடத்ததாக எழுந்து மிகத் தூரத்து நிற்கும் புழுதியோடு போய்ச் சேர்வது எதுபோலெனில்; பூதங்கள் போவதற்கு முன்பு புழுதியாய தாங்கள் போய் எதிர்ந்து அமர் புரிவது போன்றது. 86

பான்மை இன்னன படைப்புற எண்ணில்
சேனை வெள்ளமொடு திண்டிறல் வாகு
தூந லம்தவறு சூருறை மூதூர்
வானு லாம்புரிசை மாடுற வந்தான்.

இவ்வாறான பான்மைகள் நிகழ்ந்துவர எண்ணிக்கைக் கடங்கிடாத சேனைவெள்ளமோடு திடங்கொண்ட வலிமையுடைய வீரவாகுதேவர் தூய்மை என்னும் நலன்கள் யாவையும் தவறிக்கொண்ட சூரபன்மனான கொடியவன் வாழ்கின்ற வீரமகேந்திரபுரமென்னும் நகரின் வானை அளவிடும்படி ஓங்கிய மதில் முன்புற வந்தார், 87

வேறு

ஆனதோர் காலையின் அதனை நோக்குறீஇத்
தானவர் ஒருசிலர் தரிப்பின் றோடியே
சேனையங் கடலினைத் தீர்ந்து வல்லைபோய்ப்
பானுவின் பகைஞனைப் பணிந்து கூறுவார்.

அவ்வாறான காலையில் அதனைக் கண்டுகொண்டு அசுரரிற் சிலர் தாமதமின்றி அங்குள்ள அசுரராகும் சேனையங் கடலினைக் கடந்து விரைவாக ஓடிச்சென்று சூரியனின் பகைவனான பானுகோபனைப் பணிந்து இந்த வார்த்தைகளைக் கூறுவார்கள். 88

மாயிருந் தானைகள் மருங்கு சூழ்ந்திட
நீயமர் செயவரு நிலைமை நாடியே
வேயென முந்திவண் மேயி னான்றனை
ஏயினன் குமரவேள் நிகழ்ச்சி ஈதென்றார்.

அரசகுமாரனே கேட்பீராக! மிகப்பெரிய சேனைகள் பக்கராகச் சூழ்ந்திட நீர் போர் செய்ய வருவதன் நிலைமையை நாடிக்கொண்டு முருகக் கடவுள் முன்னர் இங்கு தூதாக வந்த அவனையே உம்முடன் போரிடும்படி திரும்பவும் அனுப்பியுள்ளார். இது தான் நிகழ்ச்சியாகும் எனக் கூறினார்கள் அத்தூதுவர்கள். 89

மற்றிவை அவுணர்கோன் மதலை கேட்டலுங்
கற்றையங் கதிர்மணிக் கடகக் கையினை
எற்றினன் முறுவல்செய் தெயிறு தீயுகச்
செற்றமொ டுயிர்த்திவை செப்பல் மேயினன்.

இவ்வாறு தூதுவர் கூறிய வார்த்தையைச் சூரபன்மனின் மகன் பானுகோபன் கேட்டலும் பிரகாசமுடன் விளங்கிடும் ஒளியுடைய இரத்தினக் காப்பணிந்த தனது கையை ஒன்றோடொன்று அடித்தான். அத்துடன் புன்சிரிப்புங் கொண்டு பின்னர் தனது பற்களை நறநறவென நெருமி பெருமூச்சுடன் இந்த வார்த்தையைச் சொல்வான். 90

இருந்திடு பாலனை என்னொ டேபொர
விரைந்தெதிர் தூதனை வியன்ப தாதியாய்ப்
பொருந்திய பூதரைப் போர்க்க ளத்தியான்
துரந்திடு கின்றனன் தொலைந்து போகவே.

அங்கு பாசறைத் தலத்து இருந்திடுகின்ற குழந்தையானவனை என்னோடு போர் புரிதற்கு விரைந்து வருகின்ற தூதனை மேலாகும் காலாட்படை வீரராக விளங்கிக் கொண்டிருக்கும் பூதங்களை மற்று யாவரையும் போர்க்களத்திலே நான் அவர்கள் பயம் கொண்டு ஓடிட அடித்துக் கலைத்து விடுவேன் எல்லாரும் தொலைந்து போம் படியாக என்றான் பானுகோபன். 91

அந்தர வரைப்பினில் ஆசை யெட்டினில்
வந்திடும் அளக்கரின் மற்றை நேமியில்
கந்தனும் ஒற்றனுங் கணங்கள் யாவருஞ்
சிந்தினர் வெருவியே திரியக் காண்பனால்.

மேலாகும் வானவெளியில் எட்டுத் திக்கில் பலவாக விளங்கிடும் சமுத்திரங்களில் மற்றைய மலையிடங்களில் எங்கும் எங்கும் அந்தக் கந்தனும் அவன் தூதன் வீரவாகுவும் பூதகணங்கள் எல்லாரும் பயந்து சிதறி ஓடி ஓடி ஒளித்து மறைந்தலைந்து திரிய நான் செய்து வைத்து அதைக் காண்பேன். 92

புன்மைய ராகிய பூதர் சேனையும்
வன்மையில் தூதனும் மழலைப் பிள்ளையுந்
தொன்மிடல் ஒருவியே தொலைந்து போகினும்
என்மன வெகுளியும் ஏகற் பாலதோ.

மிக அற்பமாகிய பூதர்களின் சேனையும் வலியில்லாத தூதுவனும் மழலைமொழி மாறாத குழந்தையாகும் முருகனும் தங்களிடம் கொண்ட முதுமையான வலியாவும் குன்றி எனக்கு தோற்று பயந்தோடித் தொலைந்துபோனாலும் என் மனதில் கொண்ட கோபம் ஆறி நீங்கப்போகின்றதோ. அவர்கள் தொலைந்தாலும் என் கோபம் தொலையாது. 93

விடுகிலன் அவர்தமை மேலை ஏழ்பெருங்
கடல்திசை முழுவதுங் கடந்து செல்லினும்
புடையது சுற்றியே போக்கு றாதிவண்
கொடுவரு கின்றனன் குறுகிப் பற்றியே.

அவர்களை நான் ஒருபோதும் விடமாட்டேன். மேல்நிலையில் அப்பாலாய் விளங்கிடுகின்ற எழுபெருங் கடலினையும் எட்டுத் திக்கையும் முழுவதும் கடந்து இவர்கள் பரவெளியில் ஓடிச் சென்றாலும் இவர்களை வளைந்து சுற்றி இவர்கள் தப்பிப்போக முடியாதபடி இவர்களைக் குறுகிப் பற்றி இவ்விடம் கொண்டு வருவேன். 94

மேவலில் அவர்தமை மேலை நம்பெருங்
காவலன் முன்புறக் காட்டி இவ்விடைத்
தேவர்கள் தம்மொடுஞ் சிறையில் வீட்டுவன்
ஏவரும் எனதுசீர் இறைஞ்சி ஏத்தவே.

பெருமையில்லாத அவர்களை மிக மேம்பாடுடைய நம் பெரும் அரசன் முன்பாகக் கொண்டுவந்து தந்தையே இவர்களைப் பார் எனக் காட்டி அவர்களை இவ்விடத்துள்ள மற்றைய தேவர்களோடும் சிறைக்களத்தே இட்டு வைப்பேன். எல்லா உலகில் உள்ள யாவரும் எனது புகழைத் துதித்து வணங்கிப் போற்றும்படியாக என்றான், 95

என்றிவை பற்பல இசைத்துச் சூர்மகன்
கன்றிய மனத்தொடு கடிது சேறலுந்
துன்றிய அவுணர்தந் தொறுமுன் போயின
பொன்றிகழ் வடமதிற் புதவு நீங்கியே.

என்று இவ்வாறு பல பல வார்த்தைகளைச் சூரபன்மன் மகன் பானுகோபன் எடுத்துக் கூறி கறுவியமுடைய மனத்தனுகி அதிவிரைவாகச் செல்லுதலும் அதுவே அங்கு நெருங்கிய அசுரப்படைகளானவை முன்னுகச் சென்று பொன் விளங்கித் திழந்திருக்கும் வடபுறத்து மதிலின் உள்வாயிலின் எல்லையை நீங்கின. 96

ஆனதோர் காலையின் அடையும் பூதவெஞ்
சேனையின் ஆற்றலுந் திறலும் கண்ணுறீஇத்
தானவர் கூறுவார் சமர்கண் டோடிய
வானவர் அன்றிவர் வலியர் போலுமால்.

அவ்வாறாகிய காலையில் அங்கு தமக்கு முன்னால் அடைகின்ற பூதங்களாகும் கொடிய சேனையின் ஆற்றலையும் திறலையும் அசுரர்கள் கண்ணுற்றுக் கூறுவார்கள். ''ஓகோ'' இவர்கள் முன் எங்களுடன் போர் செய்திடும் போது எமது போர்வலிமையைக் கண்டு எடிப்போன தேவர்கள் அல்ல. இவர்கள் வலிமையுடையார்கள் போலவே தெரிகின்றது. 97

என்னினும் இங்கிவர் எம்மொ டேபொரும்
வன்மையும் உடையரோ வரம்பில் குன்றெலாம்
பொன்மலை அதனொடு பொருவ தோயினும்
மின்மினி கதிரினும் விளங்க வல்லதோ.

என்று நாம் சொன்னாலும் இங்கு இவர்கள் யாரும் எம்மோடு போரிடுதற்கு ஏற்ற வலிமையும் உடையவரோ? இது நன்றாயிருக்கின்றது. என்னே! அளவு கடந்த உலகில் உள்ள மலைகள்யாவும் கூடிக்கொண்டாலும் பொன்மயமான மேருமலைக்கு ஒப்பாகுமோ? இன்னமும் மின்மினிப் பூச்சி தனது ஒளியால் சூரியனின் ஒளியிலும் பார்க்க விளங்கிடவல்லதோ? 98

என்றிவை போல்வன இணையில் தானவர்
ஒன்றல பலபல உரைத்து வெஞ்சினங்
கன்றிய அனல்விழிக் கணத்தின் சேனைநேர்
சென்றனர் தெழித்தனர் சிலைத்த பல்லியம்.

என்று இவைபோல்வனவாகும் ஒரு வார்த்தையல்ல பல பல வார்த்தைகளை இணையற்ற வலியுடைய அசுரர்கள் எடுத்துக்கூறியவாறு கொடும் கோபத்தால் சிவந்து நெருப்பு கக்கிடும் கண்ணுடைய பூதங்கள் முன்சென்று கூச்சலிட்டனர். அப்போது போருக்கு ஏற்ப வாத்தியங்கள் முழங்கின. 99

வயிர்த்திடு பூதர்கள் மறலி என்றுள்
கயிர்த்திடும் அவுணரை நோக்கி அம்புவி
உயிர்த்தொகை அலைத்தவர் உவர்கொ லோவெனுச்
செயிர்த்தனர் இடித்தனர் தீயின் வெம்மையார்.

வலியுடன் வேகமாக வந்த பூதங்கள் கூச்சலிட்ட அசுரரைப் பார்த்து ஓகோ உலகிற்கு இயமன் எனும்படி இங்கிருந்து உயிர்களாகும் எல்லாரையும் அலைத்தவர் உவர்தாமோ என வீராவேசமுடன் கோபமாகி இடிபோன்று சத்தமிட்டுக் கத்தினார்கள். இப்பூதங்கள் அம்மவோ நெருப்பிலும் மிகக் கொடியோர். 100

கரையறு தானவர் ஈரமுங் காய்கனல்
புரைதரு சூர்விழிப் பூத வீரரும்
ஒருவரின் ஒருவர்போர் உடன்று சேறலான்
இருவகை அனிகமும் இகலின் ஏற்றவே,

கரை காணமுடியாத பல அசுரரும் கொடிய நெருப்புப்போன்று விளங்கிய கண்ணுடன் வெருட்டுகின்ற பூதவீரர்களும் ஒருவரின் ஒருவரோடு நேரிட்டு போர் தொடங்கிச் சேருதலால் இருவகைப்பட்டோரின் சேனைகளும் வலியால் போர் தொடங்கி ஏற்றுக்கொண்டன. 101

தந்தியின் கரங்களில் தண்டம் ஈந்திடா
வந்தெதிர் தெம்முனை மாய்ந்து வீடுறச்
சிந்துதி யெனுங்குறி செப்பிப் பூதர்மேல்
உந்தினர் மீமிசை உலப்பில் தானவர்.

யானைகளின் துதிக்கைகளில் தண்டாயுதங்களைக் கொடுத்து அத்தண்டினால் தம க்கு முன் போரிட வந்து எதிர்ந்த பூதங்களின் அணி நிரைகள் கெட்டு சிதறி மாயும் படி மோதி அடியுங்கள் என்னும் குறிப்புச் சொல்லி அப்பூதங்கள் மேல் போரிடச் செல்லும்படி என யானைகளைச் செலுத்தினார்கள் அளவு கடந்த பல அசுரர்கள். 102

பகைத்திடு பூதர்கள் பலரும் நாடியே
திகைத்திவை யாவெனச் சிந்தித் தையுறத்
தகைத்தடக் தாளவை தரையின் பாற்படா
துகைத்தனர் பரியெனும் ஓத வேலையே

பகையாகி முன்வந்த பூதங்கள் பலரும் இச்செயலைப் பார்த்து திகைத்து இவை கள் யாது பேய்களோ அன்றி குதிரைகள் தானோ என நினைத்து ஐயுறும்படி தகவு டைய அக்குதிரைகளின் கால்கள் நிலத்தில் பட்டிடாதபடி அக்குதிரைகளைச் செலுத்தி கடல் புரண்டு பூதங்கள் மேல் சென்று மோதுவது போன்று குதிரைகள் எனும் கட லைப் போரிட விடுத்தனர் கொடியவரான அந்த அசுரர்கள். 103

காரிடைச் சென்றெனக் களிற்றி னுந்திரை
நீரிடைச் சென்றென நீடு மாவினும்
போரிடைச் சென்றனர் புறத்துப் போற்றியே
தேரிடைச் சென்றனர் வரையிற் சென்றென.

இந்த அசுரர்கள் எதிர்ந்து வந்த பூதங்கள் மேல் மேகத்தின் மேற் சென்றனர் என யானை மேலும்; திரைகளையுடைய கடல்மேற் செல்வது போன்று குதிரை மேலும் பூதங்களோடு போரிடச் சென்றனர்; அஃதன்றி இப்படைகளின் பின் காவ லாகக் கடைக்கணித்து மலைமேல் செல்வார்கள் போல் தேர்மீதும் சென்றனர். 104

அடுகரி நிரையினை ஆடல் மாக்களைத்
தடநெடுந் தேர்களை தணப்பி லாவகை
கடலினை வளைந்திடு கரைய தாமெனப்
புடைதனில் சுற்றியே புவியின் ஏகினர்.

இவ்வாறு கொலை புரியும் நிலையினையுடைய யானைமேல் செல்வாருடனும் பாய்ந் தோடி வேகமுடன் வரும் குதிரை மேல் செல்வாருடனும் பருத்த நெடிய தேர்மேல் செல்வாருடனும் பக்கராக நெருங்கி சூழ்ந்துகொண்டு கடலினை வளைந்து நின்றிடும் கரையெனும்படி பல காலாட்படை வீரர்கள் சென்றார்கள். 105

அத்திறம் எதிர்த்திடும் அவுணர் பூதர்மேல்
மூத்தலை வேற்படை முசண்டி தோமரஞ்
சத்தியொ டெழுமழுத் தண்ட மேமுதல்
எத்திறப் படைகளும் எடுத்து வீசினர்.

அத்தன்மையாக எதிர்த்திடுகின்ற அசுரர்கள்; தன்முன் வேகமாக வரும் பூதர் மேல் முச்சுடரினை உடைய வேல்களையும் முசுண்டி தோமரம் சத்தி வாய்ந்த எழுவா யுதம் மழுவாயுதம் தண்டாயுதம் எனப்படும் இவை முதலாகவுள்ள எத்தன்மையா கும் படைகளையும் எடுத்து வீசினார்கள். 106

கரங்கொடு பெரும்படைக் கலங்கள் யாவையும்
பரங்கொடு வீசிய பதகர் உட்கிட
மரங்கொடும் எழுக்கொடும் வரைகொ டுந்தம
துரங்கொடும் வீசினர் உலைவில் பூதரே.

அவ்வேளை அதுகண்ட பூதங்கள் கைகளால் இப்படைகளை மிகும் திறனுடன் எடுத்து வீசிய பாதகராகிய அசுரர்கள் உட்கிடும்படி கைகளிலே எடுத்த மரங்களைக் கொண்டும் எழுவாயுதத்தைக் கொண்டும் மலைகளைக் கொண்டும் தமது வன்மையால் வீசினார்கள் உலைவாகிய அழிவு என்பதில்லாத பூதங்கள். 107

வேறு

செறிந்து நேர்ந்து செருச்செயும் எல்லையின்
இறந்த தானவர் எண்ணிலர் ஆவிபோய்த்
தறிந்த தாளுந் தலையுங் காலுமாய்
மறிந்த சாரத ரும்வரம் பில்லையால்.

இவ்வாறு எங்கும் பரந்து ஒருவரோடொருவர் எதிர்ந்து போரிடும் வேளையில் இதனால் இறந்துபோன அசுரர்கள் எண்ணற்றவராயினர். தமது உயிர்கள் நீங்கி கால்களும் கைகளும் அறுபட்டு இறந்துபோன பூதருக்கும் கணக்கில்லையாகும். 108

மாண்ட சாரதர் யாக்கையும் மண்மிசை
வீண்ட தானவர் மெய்களுஞ் செங்களம்
யாண்டு மாய் இருங்கரை போலுற
நீண்ட சேமியின் நின்றது சோரிநீர்.

இறந்த பூதங்களின் உடம்பும் மண்மேல் இறந்த அசுரர்களின் உடல்களும்; இரத்தம் பெருகுதலினால் செந்நிறப்பட்டு காணப்பெறும் போர்க்களம் எங்குமாகி கடலின் கரைபோல் அந்த உடலங்கள் விளங்கிட நடுவணுகப் பொருந்திய இரத்தம் கடல் போன்று நின்றது. 109

விரவு பூதர் வெகுண்டுசென் றுன்னலர்
இரத மோடிர தங்களை எற்றினர்
கரிக ளாற்கரி யின்தொகை காதினர்
பரிக ளோடு பரிகளை மோதினர்.

நெருங்கி எதிர்ந்து நின்ற பூதர்கள் கோபமுடன் சென்று தாக்கி பகைவரான அசுரர்களின் தேரோடு தேர்களை தூக்கி அடித்தார்கள். யானைகளைத் தூக்கி யானை களை மோதிக் கொன்றார்கள், குதிரைகளைத் தூக்கி குதிரைகளை அடித்துக் கொன்றார் கள், 110

ஆனை யாள்கொண் டடர்த்தனர் ஆங்கவர்
தோளை யேதம தோள்கொடு தாக்கினர்
தாளி னால்அவர் தந்தலை சிந்தினர்
கோள ரித்தொகை மான்அடுங் கொள்கையார்.

ஆனை ஆளால் தூக்கி அடித்துக் கொன்றனர். அங்கு அந்த அசுரரின் தோளை தங்களுடைய தோளால் தாக்கிக் கொன்றார்கள். காலால் எற்றி அடித்து அசுரரின் தலைகள் பறக்கச் செய்தனர். இது எதுபோலுமெனில் சிங்கங்களின் தொகைகள் மான் களைக் கொல்லும் தன்மை போன்று அசுரர்களைப் பூதங்கள் கொன்றனர். 111

ஏற்ற சாரதர் எற்றிடத் தானவர்
ஊற்றம் இன்றி உடைதலும் அவ்வழிக்
காற்றொ டங்கி கலந்தன்ன காட்சியான்
ஆற்ற லாளன் அனலிகண் டானரோ.

நேரிட்டு எதிர்ந்த பூதங்கள் அடித்தலும் அதனால் முன்னை அழிந்த அசுரர் வலி யிலாது உடைந்து சிதறிப்போதலும் அவ்வாறாகிய நேரத்து நெருப்போடு காற்றும் கலந்தது எனும்படியான தோற்றமுடைய வலியுடையதோர் அசுரவீரன் அனலி என் னும் பெயருடையான் இதைக் கண்டுகொண்டான். 112

கையின் மேயின கார்முகம் ஒன்றுதன்
மொய்யின் வாங்கி முரண்கெழு நாணொலி
செய்ய லோடுமத் தேவர் வெருக்கொளா
ஐய கோவென் றலக்கணுற் றாரரோ.

கையில் பிடித்திருந்த வில் ஒன்றினை தனது வலியால் வளைத்து அனலி வலிகொண்ட நாணொலி செய்தலோடும் அந்த நாணொலியைக் கேட்ட தேவர்கள் வெருக்கொண்டு நமுங்கி ஐயோ என கதறிக் கூச்சலிட்டு அலக்கண்பட்டார்கள். 113

நாரி யார்ப்பு நணுகலும் நாற்படை
மூரி யார்ப்பு முகிலிடை ஆர்ப்பெனும்
பேரி யார்ப்பும் பிறங்கு பெருங்கடல்
வாரி யார்ப்புந்தம் வாய்மடிந் திட்டவே

வில்லின் ஓசை பரந்து கேட்டலும் அந்நேரம் அங்கு பெருகிநின்ற நால்வகை யாகும் சேனைகளின் இரைச்சல் ஆர்ப்பும் முகில்களிடத்து விளங்கிடுகின்ற இடியின் பேரோசையும் பரந்து விளங்கிய பெருங்கடலின் முழக்க ஓசை தங்கள் ஓசை இரைச்ச லாகும் செயல் மடிந்திட்டன. 114

கொற்ற வில்லிற் கொடுங்கனல் வெங்கணை
முற்று மாரியின் முத்திறத் தூண்டலுஞ்
செற்று பூதர்தம் மொய்ம்பினுட் சென்றன
புற்றி னூடு புகுந்திடு பாந்தள்போல்.

கொற்றம் மிகுந்த வில்லில் அனலி என்பான் கொடிய நெருப்பெனும்படியான அம்புகளை மழை சொரிவது போன்று மும்மையும் தூண்டுதலும் அந்த அம்புகள் யாவும் சென்று அங்கு போரிட்ட பூதங்களின் உடலில் தைத்துருவின, எப்படியெனில் புற்றில் பாம்பு புகும் வேகம் போன்று. 115

அங்கி மாப்படை ஏவலும் அவ்வழிச்
சிங்கன் என்னுந் திறல்கெழு சாரதன்
எங்கன் உய்தி இறந்தனை என்றெனாப்
பொங்கு சீற்றம் புகுந்தனன் புந்திமேல்

நெருப்பின் வடிவான பெரிய படையினை அடுத்து அனலி செலுத்துதலும் அதுவழி சிங்கன் என்னும் திறல் கொண்ட பூதசேனாதிபதி கண்டு அடே அனலி எங் கடா உய்வாய். நீ இறந்தாய் இவ்விடத்து என சத்தமிட்டபடி மனதில் பொங்கியெ ழும் கோபத்துடன் அனலி முன்பு வந்தான். 116

நேர்கொண் டார்த்து நெடுந்தகை தீயவன்
தேர்கொண் டார்க்கும் திறற்புரிச் செக்கையின்
பார்கொண் டார்ப்பப் பருஉத்தடக் கைதனில்
தார்கொண் டார்த்திடுந் தண்டினிற் சாடினான்.

அடைந்தாரைக் காக்கும் பெரியோனான சிங்கன் அசுரர் தலைவனான அனலி முன்பாக நேராக வந்து ஆர்த்து அத்தீயோனுடைய தேரை கனைப்புடன் இழுத்து வரும் குதிரைகளின் சேர்க்கைகளை இப்பூமியில் உள்ளார் யாரும் ஆர்த்துப் புகழ்ந் திட தனது பருத்த கைகளில் கொண்ட தார்கொண்டொலிக்கும் தண்டினால் அடித்துக் கொன்றான் 117

வேறு

சாடும் எல்லையிற் சாரதி உந்திய
ஆடல் வாம்பரி ஆவி யுலர்ந்திட
ஓட லின்றி இரதமங் குற்றதால்
நீடு இன்ற நிலைப்படு தேரென.

அடித்த எல்லையில் சாரதி செலுத்தி நின்ற வேகமுடைய குதிரைகள் யாவும் இறந்து உயிர் நீங்க அனலியின் தேரானது ஓடமுடியாது அவ்விடம் தங்கியது எது போலுமெனில் நெடுங்காலமாக அவ்விடம் நிலைபெற்று நின்றுகொண்ட ஓர் தேர் போன்று. 118

மாக்க ளுற்ற மடிவினை நோக்கியே
தீக்க னற்பெய ரோன்சின மேற்கொளாத்
தாக்க ணங்குறு தாழ்சிலை வாங்கியே
ஏக்கள் பூட்டி இதுவொன்று கூறுவான்.

தேரிற் பூட்டிய குதிரைகளுக்கு நேர்ந்துகொண்ட இறப்பினைப் பார்த்து அனலி என்னும் பேருடைய அசுர சேனாதிபதியாயவன் கோபம் மூளப்பெற்றோனாய் மிக்க வலியாலும் தோற்றத்தாலும் அச்சமுறச் செய்யும் தனது வில்லை வளைத்து அதில் அம்புகளைத பூட்டி இதுவொரு வார்த்தையைக் கூறுவான். 119

தடுக்கொ.ணாஇச் சரஞ்சொரிந் துன்னுயிர்
படுத்து வானவர் பார்த்திடத் தென்றிசை
விடுக்கி லேனெனின் வெஞ்சம ரத்திடை
எடுக்கி லேன்சிலை யானெனக் கூறினான்.

சிங்கனே! விடுத்தால் உன்னால் தடுக்கொணாதபடி விளங்கிடும் இந்த அம்புகளை யான் சொரிந்து உனது உயிரைக் கொன்று தேவர்கள் அதனைக் கண்ணால் காணும் படி தென் திசையிலுள்ள இயமபுரத்து யான் உன்னை விடுக்காதிருந்தால் இனிமேலாக கொடிய போர்க்களத்தில் யான் வில் எடுக்கமாட்டேன் எனக் கூறினான் அனலி என் னும் அசுரவீரன். 120

சூளிவ் வாறு புகன்று தொலைவிலா
வாளி யான்மிசை அங்கியின் பேரினான்
கோளி யார்பய னுமெனக் கூற்றுறழ்
வாளி தூண்டி மறைத்தனன் மேனியே.

இவ்வாறு அனலி எனும் பேரினன் சபதம் புகன்று அழிவிலாத சிங்கம் போலும் வலியுடைய சிங்கன் மேல் ஆலமரம் காய்த்து சிவந்திருக்கும் தன்மை போன்று சிங் கன் மேனி சிவந்து விளங்கிட கொடும் காலனைப் போன்று கெடுதி தரும் அம்புகளை சிங்கன் மேனி முழுவதையும் மறைத்தான். 121

மறைய வேயுடல் வாளிகள் தூண்டவும்
இறையும் உன்னலன் இன்னலுற் றும்ிலன்
பொறையி னோடு பொருக்கெனப் போகியத்
திறையின் நின்ற சயந்தனத் தேறினான்.

சிங்கனின் உடல் முழுவதும் அம்பினால் மறையும்படி அம்புகளை அனலி செலுத்திடவும் அந்த அம்புகள் வந்து படுதலினால் கொஞ்சமேனும் சிங்கன் எனும் பூத வீரன் அதனைப்பற்றி நினைக்கவில்லை அன்றி இப்படி அம்புகள் என்மீது தைக்கின்றனவே என இன்னல் பட்டு வருந்தவில்லை. எல்லாவற்றையும் சகித்திடுகின்ற பொறுமையுடன் மிகு விரைவாகச் சென்று அந்த அனலியின் தேரில் பாய்ந்தேறிக் கொண்டான். 122

நீர்மு கந்த நெடுமுகி லாமெனத்
தேர்மு கந்தனில் தியவன் ஏந்திய
கார்மு கந்தனைக் கைத்கொடு வாங்கியே
பார்மு கத்துப் பதைப்புற வீசலும்.

நீரினை உண்ட பெரியதோர் முகில் எனும்படி தேரின்மேல் வில்லுடன்விளங்கிடும் தீயவனான அனலி எனும்அசுரன் கையில் பிடித்த வில்லை சிங்கன் பறித்தெடுத்து மிகு பதைப்புடன் அவ்வில்லை பூமியின்மீது வீசினான், அவ்வாறு வில்லை சிங்கன் வீசுதலும். 12

வலக்கை யாலொரு வான்கதை பற்றியே
சிலைக்கை ஈர்த்திடுஞ் சிங்கனைத் தீயினான்
தலைக்கண் மோதலுந் தானவர் ஆர்த்தனர்
கலக்க முற்றனர் கண்டஅத் தேவரே.

அதுவேளை அனலி என்னும் அசுரன் தனது வலக்கையினால் ஓர் மேலான தண்டாயுதத்தை எடுத்துப் பிடித்துக்கொண்டு தனது கையிலிருந்த வில்லைப் பறித்த சிங்கன் எனும் பூதசேனாதிபதியின் தலையில் மோததலும் அந்த அடியைக் கண்டு அசுரர்கள் மகிழ்ந்து ஆரவாரித்தனர். அதைக் கண்டுகொண்ட தேவர்கள் கலக்கமடைந்தனர். 124

அடித்த தண்டொ டனலிதன் கைத்தலம்
பிடித்து மற்றோர் பெருங்கையி னலவன்
தடித்த மார்பத் தடவரை சாய்ந்துக
இடிப்பின் மும்மை இசைத்திட எற்றினான்.

தன் தலைமேல் அனலி மோதிய தண்டுடன் அவன் கையினை சிங்கன் எட்டிப் பிடித்துக் கொண்டு வேறோர் பெரும் கதாயுதத்தை எடுத்து அனலியின் தடித்த மலைபோலும் நெஞ்சு முரிந்து சாய்ந்திட இடி இடித்தது போன்று மூன்று முறை அடித்தான். 125

எற்ற வெய்யவன் எல்லையில் துன்புறச்
செற்ற மிக்கெழுஞ் சிங்கனும் செங்கையில்
பற்று தண்டத் தொடுமப் பதகனைச்
சுற்றி வானந் துணுக்குற ஆர்த்தனன்.

சிங்கன் அடித்த நேரத்து கொடியதான அசுர சேனாதிபதி அனலி எல்லையற்ற துன்பமடைந்து வேதனையுறலும் அந்நேரம் கோபமுற்ற சிங்கனும் அனலியைத் தூக்கி சிவந்த கையில் பிடித்த தண்டோடும் அவனைச் சுழற்றிய படிவானில் உள்ளார் திடுக்கிட ஆரவாரித்தனன். 126

மாறி லாத அவுணனை வன்கையால்
சூறை போலவச் சிங்கன் சுலவலும்
ஈறில் பித்தினி லேமரு வோன்மிகத்
தேற லார்ந்தெனத் தேற்றமின் றாயினான்.

மாறிலாத வலியுடைய அசுரவீரனான அனலியை சிங்கன் தன் கையால் தூக்கி சுழற்றலும் அதனால் அனலி முடிவிலாத பித்தம் மேல் கொள்ளப்பெற்று வருந்துவானாய் மிகவும் கொடிய கள்ளை நன்றாகப் பருகியவன் போன்று தெளிவில்லாதவனாயினான். 127

ஆர மூற்பெயர் அண்ணல் அறிவொரீஇச்
சோரும் எல்லையில் துண்ணென ஏறிய
தேரை விட்டுத் திறலரிப் பேரினான்
பாரின் எற்றப் பதைப்பொடு துஞ்சினான்.

அனலி எனும் அசுர சேனாதிபதி அறிவுகெட்டு சோர்கின்ற நேரத்தில் திடீரென அனலியின் தேரின் மேல் பாய்ந்தேறிய திறலுடைய சிங்கன் என்னும் பேருடைய அப்பூதன் தேரை விடுத்து அனலியை பூமியின் மேல் மோதி அடிப்ப அதுவேளை அனலி பதைபதைத்து இறந்து போயினான். 128

வேறு

அண்டருந் திறலின் மிக்க அனலிஅங் கிறந்த வண்ணங்
கண்டனன் கவலா வுள்ளம் அழலெனக் கறங்கு கண்ணான்
சண்டனென் றுரைக்கும் பேரான் தடுப்பரும் படைகள் தன்கை
கொண்டிவன் உயிரை இன்னே குடிப்பனா லென்று சென்றான்.

எவராலும் எதிர்த்துநின்று போர்புரிய முடியாத அனலி என்னும் அசுரசேனாதிபதி இறந்துபோனவிதத்தைக் கண்டு சண்டன் எனப் பேர்கொண்ட மற்றுமொரு அசுரர் தலைவன் உள்ளம் கவலைகொண்டு நெருப்பெனும்படி சுழல்கின்ற கண்ணினை உடையனாய் தவிர்த்து நீக்கமுடியாத கொடிய படைகளைக் கையில் எடுத்துக்கொண்டு இந்த பூதனுடைய உயிரை இப்பொழுதே குடிப்பேன் என வீரம் பேசிக்கொண்டு சென்றான். 129

என்றதோர் மாற்றங் கேளா எரிவிழித் திடியின் நக்குப்
பொன்றிய அனலி யங்கைப் போர்கெழு தண்டம் வாங்கிச்
சென்றனன் விரைவில் அன்னான் தேர்மிசைப் பாய்ந்து நீலக்
குன்றெனும் வயிரத் தோள்மேற் புடைத்தனன் கூற்றம் உட்க.

என்று சண்டன் கூறி வந்த வார்த்தையைக் கேட்டு நெருப்பெழப் பார்த்து, இடிபோன்று சிரித்து; இறந்துபோன அனலி என்னும் அசுரன் கையில் கொண்ட தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு, சிங்கன் என்னும் பூத வீரன் விரைவில் சென்று அந்தச் சண்டனுடைய தேர்மேல் பாய்ந்து, சண்டனின் நீல மலை போன்ற வயிரத் தோள் மேலாகத் தண்டினால் அடித்தான். இயமனும் அந்த அடியின் உறைப்பைக் கண்டு உள்ளம் உட்கிட. 130

புடைத்தலும் உயிர்த்து நெஞ்சம் பொம்மெனப் பொருமலெய்தித்
தடப்பெருந் தேரில் வீழுஞ் சண்டனும் தனது செங்கை
எடுத்ததோர் தண்டந் தன்னால் எதிர்புகுஞ் சிங்கன் மார்பத்
தடித்தனன் அவனுந் தானும் ஆரஞர் உழந்து வீழ்ந்தான்.

தண்டால் அடித்தலும், சண்டன் பெருமூச்செறிந்து, உடனுக நெஞ்சம் வேதனையாக விசாலித்த தனது பெரிய தேரில் வீழ்பவன் தனது சிவந்த கையில் எடுத்துக்கொண்ட ஒரு பெரிய தண்டாயுதத்தால் எதிர்வந்து அடித்த சிங்கன் நெஞ்சிலே அடித்தான். அடித்தலும், அடித்த சண்டனும் சிங்கனும் அறிவு சோர்ந்து மயங்கி வீழ்ந்தார்கள். 131

அப்பொழு ததனை நோக்கி அவுணரின் மாயன் என்போன்
குப்புறு தடந்தே ரோடுங் குறுகலும் பூதர் தம்மின்
ஒப்பிலா நீலன் நேர்போய் ஓச்சினன் கதையொன் றண்ணல்
முப்புரம் அதனில் தூண்டு மூரிவான் பகழி யென்ன.

அப்பொழுது அத்தன்மையைப் பார்த்து, அசுரரில் மாயன் என்னும் பேருடைய தலைவன் என்போன் விரைவுடன் வரும் பெரும் தேர் மேலாக வருதலும், அதுவேளை பூதங்களில் ஒப்பிலாத வலியுடைய நீலன் என்னும் தலைவன், மாயன் நேர் சென்று ஒரு தண்டாயுதத்தைச் செலுத்தினன். அது எவ்வண்ணம் சென்றதெனில், முப்புரம் மேலாகச் சிவபிரான் செலுத்திய வலியாகும் விஷ்ணுவெனும் பெரும் அம்பு போன்று. 132

போந்ததோர் தண்ட மாயன் பொருவகல் மார்பில் தாக்க
மாய்ந்தனன் போல நின்று வருந்திமற் றவன்றன் பாணி
ஏந்துமுத் தலைவேல் ஒன்றை எறிந்தனன் எழிலா கத்தில்
சாய்ந்தது குருதி நீலன் தானுமங் கயரா நின்றான்.

போனதொரு தண்டானது மாயனின் நிகரற்ற நெஞ்சில் தாக்குதலும், மாயன் மாய்ந்துளான் போன்று நின்று வருந்தி உடன் தன் கையில் கொண்ட முச்சுடருடைய சூலவேல் ஒன்றை நீலன்மேல் வீசி எறிதலும். அந்தச் சூலவேல் சென்றுபட்டு உருவியதும் இரத்தம் பாய்ந்தது. அதுவேளை நீலன் தானும் அவ்விடத்தில் அயர்ச்சி கொண்டு நின்றான். 133

சிறிதுபோழ் ததனில் தேறித் திரண்மணிக் கடகஞ் சேர்த்த
எறுழ்வலித் தடக்கை தன்னால் எதிர்ந்தவன் உரத்தின் எற்ற
அறைகழல் மாயன் தானும் அணங்குற நீலன் என்போன்
கறைகெழு நாக மென்னக் கனன்றிது கருதிச் செய்வான்.

சிறிது நேரத்தில் தேறுதல் அடைந்து எழுந்து, திரண்டுள்ள வயிரக்காப்பு அணியப்பெற்று ஒளியுடன் விளங்கும் வலியுடைய பெருங்கையால் எதிர்வந்த மாயன் நெஞ்சில் மோதி அடிப்ப, அந்த அடியால் வீரக்கழல் அணிந்த மாயனும் மயங்குதலும், நீலன் என்பானும் நஞ்சுகொண்ட நாகபாம்பு எனும்படி சீறிக் கோபித்து இதனை நினைந்து செய்வான். 134

மந்தரந் தழீஇய தொல்லை வாசுகி யென்ன மாயன்
சுந்தரத் தடம்பொற் றோளைத் துணைக்கையால் தொடர்ந்து வீக்கிக்
கந்தரந் தன்னில் தீய கறைசெறி எயிற்றில் கவ்வி
முந்துறு குருதிச் செந்நீர் குடித்தனன் மொய்ம்பி னேடும்.

மந்தர மலையைச் சுற்றி வளைந்து தழுவிக்கொண்ட முதுமையாகும் வாசுகி எனும் பாம்பு போன்று மாயனுடைய சுந்தரமாகும் பருத்த பொற்றோளைத் தனது இரு கையாலும் இறுகப் பிடித்துக் கட்டிக்கொண்டு, மாயனுடைய கழுத்திலே தீமையாகும் நஞ்சுடைய பற்களால் கவ்வி, மாயனுடலில் உள்ள இரத்தம் அனைத்தையும் வலியால் உறிஞ்சிக் குடித்தான். 135

சோரிய துண்டு நீலன் தொல்சினந் துறந்து நின்றான்
ஆருயிர் உண்டு போனான் அந்தகன் அனைய காலை
ஆரிவில் தடக்கை மாயன் முடிந்தனன் சண்டன் சிங்கன்
பேரனார் உழந்தோர் தேறிப் பின்னும்போர் புரிய லுற்றார்.

நீலன் இரத்தத்தை உண்டு தனது முன்னைய கோபம் நீங்கி நின்றான். இயமன் அதுவேளை மாயனது உயிரை நீக்கி, எடுத்துப் போயினான். அதுகாலையில் வரிவில்லைக் கையில் பிடித்த மாயன் இறந்துபோனான். பின்னர், சண்டன் சிங்கனாகிய இருவரும் பெரும் அயர்ச்சியைக் கொண்டிருந்தோர்கள் இப்பொழுது தேறுதல் அடைந்து, பின்னரும் போர் புரியலுற்றார். 136

கிட்டினர் தடந்தேர் மீது கிடந்ததண் டேந்திக் கீழ்போய்
ஓட்டினர் ஒருவர் தம்மின் ஒருவர்மேல் உடன்று பொங்கி
முட்டினர் இரண்டு பாலின் முறைமுறை பெயர்ந்தார் மொய்ம்பால்
வட்டணை திரிந்து தண்டில் தாக்கினர் மாற்று கின்றார்.

ஒருவரை ஒருவர் கிட்டிக்கொண்டு பெருந்தேர் மேலாகக் கிடந்த தண்டாயுதத்தை ஏந்தியவாறு கீழே குதித்துச் சென்று, ஒருவரோடு ஒருவர் பந்தயம் பேசி, ஒருவர்பால் ஒருவர் நேரிட்டுக் கோபித்துப் பொங்கிட முட்டிக்கொண்டு இருபக்கமும் அடிபெயர்த்து முறைமுறை வந்தும், வலியால் வட்டமாக வளைந்தும் தண்டால் அடிப்பதும் மாற்றுவதுமாக போரிட்டார்கள். 137

இங்கிது போலப் பல்வே றியற்கையிற் கதையின் வெம்போர்
சிங்கனுஞ் சண்டன் தானுஞ் செய்தனர் திரிந்த வேலைப்
பொங்கிய பூதர் வேந்தன் பொருவரும் அவுணன் பொன்னூர்
அங்கையில் தண்டஞ் சிந்த அடித்தனன் அணிப்பொற் றண்டால்.

இங்கு சொல்லிய இவ்வண்ணம்போன்ற இயல்பில் பல்வேறு வகையாகக் கொடிய தண்டுகொண்டு புரிந்திடுகின்ற போரினைச் சிங்கனும் சண்டனும் செய்து நின்று திரிவுறும் காலையில், பொங்கும் சினமுடைய பூதத் தலைவன் சிங்கன் அவுணனாகும் சண்டனின் பொன்னூர்ந்த அழகிய கையில் பிடித்த தண்டு சிந்திச் சிதறிடத் தனது அழகிய பொற்தண்டால் அடித்தான். 138

வயிர்த்திடு தண்டம் அங்கண் வலிகெழு சிங்கன் மோத
அயிர்த்தொகை ஆத லோடும் ஆற்றல்சேர் அவுணர் யாரும்
உயிர்த்தனர் என்கொ லாமென் றுன்னினர் உருமே றென்னச்
செயிர்த்தனன் சண்டன் என்னுஞ் செருவலான் உரைக்க லுற்றான்.

வலியுடைய தண்டால் அவ்விடத்து வலிகொண்ட சிங்கன் மோதிட சண்டனின் தண்டு துகளாகிப் போதலோடும், வலிகொண்டுள்ள அசுரர் யாரும் அது கண்டு பெருமூச்சுக் கொண்டனர். இது என்னவாகும் என எண்ணி ஐயப்பட்டனர். அதுவேளை சண்டன் என்னும் போர்வல்ல அசுரன் இடியேறு போன்று கோபமடைந்து இதனைச் சொல்லல் உற்றான்: 139

தண்டமொன் றிற்றதென்று தருக்கலை தடம்பொற் றோளாக்
கொண்டதும் அஃதே அன்றோ கூற்றுவன் நகரும் மேலை
அண்டமும் உலையத் தொன்னாள் அடர்த்தனன் உனக்கிங் கஞ்சேன்
மண்டமர் புரிதி என்னா வலிகெழு கரங்கொண் டேற்றான்.

எனது தண்டாயுதமொன்று அழிவுற்றது என நீ பெருமிதம் அடையாதே! எனது பருத்த பொன்தோளாக விளங்குவதும் அந்தத் தண்டமென்றே நினைவிற் கொள் எனது இந்தத் தோளினால் அன்றே இயமனின் நகரமும் மேலுள்ள அண்டமும் உலையும்படி முன்னாளில் செய்தேன்: உனக்கு இங்கு அஞ்சமாட்டேன். என்னோடு இதுபொழுது மல்யுத்தம் புரிவாயாக என வலிகொண்ட தனது கையை மடக்கி முட்டியவாறு போர்செய்ய முற்பட்டான் சண்டன். 140

ஏற்றனன் இகலும் வேலை எரிசினங் கடவிச் சிங்கன்
ஆற்றலை யாங்கொல் நீயென் றூற்றலை அணிபொற் றண்டம்
போற்றுகென் றுய்ப்ப அங்கட் புகாநெறி புடைத்துக் கையால்
கூற்றனும் உட்க ஆர்த்தான் குருமணித் திரள்தோள் கொட்டி.

இவ்வாறு மல்யுத்தம் புரிந்திட ஏற்றுக்கொண்டு வலிபேசிய நேரத்துச் சிங்கனும் நெருப்பெழச் சினந்து, சண்டனே! நீயுமா வலியுடையவன்? எனக்கூறி இதோ என் தண்டைத் தடுத்துப்பார் எனத் தண்டு ஒன்றினை வீசி எறிந்திட, அதுவேளை சிங்கன் செலுத்திய தண்டினைச் சண்டன் தன்மேல் படாதபடி கையால் அடித்துத் தடுத்து நீக்கி, இயமனும் உட்கிடும்படி திரண்ட தோள்களைக் கொட்டி ஆர்த்திட்டான். 141

அந்நெடுந் தகையோன் ஆர்ப்ப அதுபொரு தழன்று சிங்கன்
பொன்னெடுந் தண்டால் அன்னான் புயமிறப் புடைத்த லோடுங்
கன்னெடுந் தோளும் ஓர்சார் கதுமென முரியத் தண்டும்
பன்னெடுந் துணியாய்ச் சிந்திப் படிமிசைக் கிடந்த தன்றே.

அப்பெரியோனான சண்டன் ஆரவாரிப்ப, அது கேட்டுப் பொருது கோபங் கொண்டு சிங்கன் மீண்டும் பொன்னார்ந்த நெடிய தண்டால் அந்தச் சண்டனுடைய தோள் முரிந்திட அடித்தலோடும், சண்டனுடைய கல்போன்ற கடிய பெருந் தோளும் ஒரு பக்கராக விரைவுடன் முரிந்துபோயிட, அடித்த தண்டும் பல் பெரு துகளாகிச் சிந்திச் சிதறிப் பூமியில் கிடந்தது. 142

புயந்தளர்ந் திடலுஞ் சண்டன் போவது கரமென் றுன்னா
அயர்ந்திலன் ஒசிபொற் றோளை அங்கையின் இறுத்து வாங்கி
வயங்கெழு தண்டிற் பற்றி வட்டணை புரிந்தான் வானோர்
வியந்தனர் இவனே கொல்லாம் வீரருள் வீரன் என்றே.

சண்டன் தனது தோள் முரிந்திடலும் ஓர் கை போய்விட்டது என்பதைக் கூட எண்ணாதவனாகியும் அல்லது அதனால் அயர்வுறாதவனாகியும், முரிந்துபோன தனது தோளையும் கையையும் மற்றக் கரத்தால் பிய்த்து எடுத்துக்கொண்டு வலியாகும் ஒரு தண்டைப் போன்று முரிந்த அக்கையைப் பிடித்துக்கொண்டு சுழன்று வட்டணையாகச் சுழற்றினான். இவனது வீரச்செயலைக் கண்ணுற்ற தேவர்கள் எல்லாம் இவ்வசுரனே வீரருள் வீரனாவான் என வியந்து பேசியவாறு நின்றனர். 143

கரங்கெழு புயப்பொற் றண்டால் கார்கெழு சண்டன் காமர்
உரங்கெழு உரத்தின் மோத உருகெழு மடங்கற் பேரோன்
இரங்கிலன் உவன்போல் யானும் எற்றலன் கரங்கொண் டென்னாச்
சரண்கொடே அவன்றன் ஆகத் தடவரை அதனைச் சாய்த்தான்.

மேகம்போலும் கருநிறமுடைய சண்டன் தன் கையிற் பிடித்த தனது தோளாகிய தண்டினால் சிங்கனுடைய வலிகொண்ட நெஞ்சில் மோதி அடித்தலும், அதனாற் கோபமுற்ற சிங்கன் என்னும் பேருடையவன் அடிபட்டதற்கு வருத்தமுறாது, உவன்போல யானும் கைகொண்டு அடிக்கமாட்டேன் என்று தனது காலினாலே சண்டன் என்பான் நெஞ்சில் உதைத்து அவனின் மலைபோன்ற உடல் சாய்ந்திட வீழ்த்தினான். 144

கண்டகன் சாய்த லோடுங் கரமெடுத் தார்த்து வானோர்
புண்டருங் குருதிச் செங்கட் பூதநா யகநீ அன்றேல்
சண்டனை உதைப்பார் யாரோ தாழ்த்திடல் அவன்றன் ஆவி
கொண்டருள் இறையின் என்று குறையிரந் தறைய லுற்றார்.

கொடியவனான சண்டன் சிங்கனின் காலால் உதைபட்டுச் சாய்தலோடும், வானில் நின்று இதனைக் கண்ணுற்ற தேவர்கள் யாவரும் கைகளை எடுத்து வீசி ஆர்ப்பரித்துச் சொல்வார்கள். புண்போன்று சிவந்த கண்ணுடைய பூதங்களின் தலைவரே! நீ ஒருவர் அல்லாமல் சண்டனை உதைப்பார் வேறு யார்? இனியும் தாமதம் செய்ய வேண்டாம். அவனது உயிரை நீக்கிக் கொன்று விடுவீராக ஓர் இறைப் பொழுதில் என்று குறைபட்டு வேண்டி இரந்து சொன்னார்கள். 145

வேறு

வானவர் உரைகேளா மறலியொ டிகல்வெங்கண்
தானவன் இவனேஎன் தனிஉயிர் அடுகிற்பான்
ஈனம துறுதேவர் இவனொடு நுமையின்றே
ஊனுடல் உயிரோடும் உண்குவன் அதுகாணீர்.

தேவர்கள் கூறிய வார்த்தையைக் கேட்டுக் கொண்ட இயமனுடன் போராடும் கொடுங் கண்ணுடைய சண்டன் என்னும் அசுரன் சொல்வான்: ''இவன்தானோ எனது வலிகொண்ட உயிரைக் கொல்பவன்? ஈனப்பட்டு உழல்கின்ற தேவர்களே! கேளுங்கள். போரிட்ட இந்தச் சிங்கனுடன் உங்களையும் உடலும் உயிரும் சேரக் குடிப்பேன்; அதனைப் பார்ப்பீராக'' என்றான். 146

என்னலும் இகல்சிங்கன் எரிகலுழ் விழியான்என்
முன்னிது புகல்கின்றாய் முடிகுவை இனியென்னாக்
கொன்னவில் தருகையால் கொடிறுடை தரமோத
ஒன்னலன் அதுபோழ்தின் ஓலிமுகி லெனவீழ்ந்தான்.

என்று சண்டன் கூறலும், அது கேட்டு இகல்கொண்ட சிங்கன் நெருப்பினைக் காலும் கண்ணுடையவனாய்ச் சொல்வான்: ''சண்டனே! எனது முன் நின்றோ இவை கூறுவாய் இனி நீ முடிகுவாய்'' என்று உயர்வுடன் பலரும் புகழ்கின்ற கையினால் சண்டனது முகம் உடைந்திட மோதுதலும், பகைவனான சண்டன் அதுவேளை ஒலித்திடும் முகில் போன்று கதறிக்கொண்டு வீழ்ந்தான்.

போழுறு பகுவாயில் பொலிதரும் எயிறோடும்
வீழுறு நகையாலும் விரிகுரு தியினாலுந்
தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ
ஊழுற அமர்செவ்வான் ஒத்ததவ் வுழியன்றே.

அடியால் பிளந்திட்ட பெருவாயால் பொலிந்து காண்கின்ற பற்களோடும், சோர்வுறும் சிரிப்பாலும், பெருகுகின்ற இரத்தத்தாலும் கொண்ட வடிவுடன் காணப்படும் சண்டனின் முகம் கிடக்கும் இடம் தாழ்வாகிய தேய்வுடன் காணுறும் சந்திரனை, நட்சத்திரங்களின் நிரைகள் சூழ்ந்திட முறையாகப் பொருந்திடும் செக்கர் வானினை ஒத்திருந்தது.
(ஊழுறஅமர் — முறையாகப் பொருந்திய) 148

சண்டனும் இறலோடும் சமன்விட வருதூதர்
அண்டலர் வெருவாமுன் அலமரல் உறுகின்றார்
கண்டனன் அதுசிங்கன் கையன துயிர்தன்னைக்
கொண்டணை குதிரென்னக் குறுகினர் அதுகொண்டார்.

சண்டன் இறத்தலோடும், அவன் உயிரைப் பிடிக்கும்படி இயமனால் அனுப்பப்பெற்று வருகின்ற தூதுவர் இறந்திடும் சண்டனை அண்டமுடியாதவராய்ப் பயந்து முன்நின்று அலக்கப்பட்டார்கள். இத்தன்மையைச் சிங்கன் கண்டனனாகி, தூதுவரை நோக்கி, ''நீங்கள் இவனது உயிரைப் பயமில்லாது வந்து பிடித்துக் கொண்டு செல்வீராக'' என்னலும், தூதுவர் பயம் நீங்கி வந்து சண்டன் உயிரைப் பிடித்துக்கொண்டனர். 149

ஆனதொர் செயல்பாரா அசமுகன் எனவோதும்
மானவன் இறைநில்நில் வந்துன துயிர்உண்பல்
ஏனைய ரெனவேநீ எண்ணலை எனையென்னுக்
கானிமிர் தருதேர்மேற் கடுவிசை யொடுசென்றான்.

இப்படியான செயலைக் கண்டுகொண்ட அசமுகன் என ஓதப்பெறும் இன்னோர் அசுர சேனாதிபதியான வீரன், "அட சிங்கனே! கொஞ்சம் நில் நில், உங்கு வந்து உன் உயிர் உண்பேன். மற்றையோரைப் போன்று என்னையும் எண்ணாதே!" என்று பெரும் சில்லுடன், வேகமுடன் செல்லும் தேர் மேல் கடுகிய விசையோடும் சென்றான். 150

சிங்கன தெதிர்செல்லுஞ் செல்லுறழ் பகுவாயான்
அங்கணு கிடும்வேலை அதிபல மதுவென்போன்
எங்கினி அகல்வாய்நீ இற்றனை இவண்என்னுப்
பொங்கிய சினமோடும் பொள்ளென விடைபுக்கான்.

சிங்கனை நோக்கி எதிர்த்துச் செல்கின்ற இடியை ஒத்திட முழங்கிடும் பெருவாயினை உடையவனாகும் அசமுகன் அங்கு அணுகிய நேரத்தில், அதிபலம் கொண்ட மது எனும் நாமமுடைய வேறொரு பூதத்தலைவன், "எங்கடா நீ போகிறாய்? இவ்விடம் இறந்தாய் நீ" என்று கூறியபடி பொங்கிடும் கோபத்துடனும் விரைவில் அசமுகன்முன் இடையில் குறுக்கிட்டு வந்தான். 151

செந்தழல் புரைவெங்கட் டிறல்அச முகன்என்போன்
முந்துற மதுவென்னும் மொய்ம்பினன் எதிர்கோடல்
அந்தக னெடுகாலன் அமர்புரி தரவேமுன்
வந்தெதிர் எதிர்தன்மை மானுவ தெனலாமால்.

சிவந்து எரிகின்ற தழல்போலும் கொடிய கண்ணுடைய வலியனாகும் அசமுகன் என்போன் முன்னாக மது எனும் வீரம் படைத்த பூதத்தலைவன் எதிர்த்து வருதல் எதுபோன்றிருந்ததெனில், இயமனோடு காலன் எனப்படும் கொலையில் வல்ல கடவுளராகும் இருவரும் போர் புரிந்திட ஒருவர் முன் ஒருவர் எதிர் எதிராக வந்துற்ற தன்மையை ஒத்திருந்தது. 152

அணுகினர் இருவோரும் அசமுகன் அதுகாலைக்
குணநனி சிலைகொள்ளக் குலவிய சிலைகொள்ளாக்
கணிகையர் மிளிர்வேற்கட் கடைநில வியதென்ன
நுணுகிய நுதிவெங்க ணைன்கணை சிதறுற்றான்.

இவ்வாறு இருவரும் போரிட அணுகினர். அதுகாலை அசமுகன் நன்கு குணங் கொண்டிட வளைத்து விளங்கிடும் தனது வில்லைக் கையில் எடுத்து, தாசிகளினது கூர்மையான வேல்போன்ற கண்கள் கடையின்பால் வெட்டி வெட்டி விறுக்கெனப் பார்த்தல் போன்று மிகவும் கூர்மையான முனையினைக் கொண்ட வலியாகும் அப்பினைச் சொரிந்தான். 153

முன்னது வரலோடும் முகனுறு செயலோரான்
துன்னுபு செறிபோழ்துந் துணைவிழி இமையாதான்
தன்னிலை இறையேனுந் தவிர்கிலன் ஒருதானே
அந்நிலை தனில்நின்ருன் அடுதிறல் முயல்கின்ருன்.

சொரியப்பெறும் அம்புகள் முன்வரலோடும் அந்த அம்புகள் முகத்தில் தைப்பதே எனும் தன்மையை உணராதவனுய் அன்றியும், அம்புகள் முகத்தில் கண்ணிற் சென்று படுவதுபோன்று வரவும்கூட கண்ணை மூடி இமைக்காதவனுய் தான் கொண்டு நின்ற நிலையை இறைப் பொழுதேனும் தவிர்ந்து நீங்கிடானுய் அந்நிலையாக நின்று போரிட முயற்சி செய்கின்ருன். 154

பாலுற நிமிர்கின்ற பழுமர மதுபற்ரு
மேலுறு சரம்வீசான் விடுகணை படமெய்யில்
சாலிகை யெனநின்ருன் தகுவன திரதத்தில்
காலென விசைசென்றே கருமுகி லெனஆர்த்தான்.

பக்கரில் மேல் நிமிர்ந்து நிற்கின்ற பெரியதோர் ஆலமரத்தைப் பற்றிப் பிடுங்கிக்கொண்டு, தனதுமேல் படுகின்ற அம்புகளை அம்மரத்தால் அடித்து வீசிக்கொண்டு, அசமுகன் தொடர்ந்து விடுத்திடும் அம்புகள் படாதபடி மரத்தைச் சுழற்றியவாறு நின்றவன், அசுரனுடைய தேர்மேல் காற்றுப்போன்று விரைவாகப் பாய்ந்தேறி அங்கு கரிய முகில் இடிப்பதுபோன்று உரக்கக் கத்தினுன். 155

ஆர்த்தனன் அதுகேளா அசமுகன் அயர்வெய்தித்
தேர்தனில் நிலமீதிற் சிலையொடு கணைசிந்தி
வேர்த்தனன் வறிதுற்ருன் விம்மினன் மெலிதன்மை
பார்த்தனன் மதுவென்போன் இவையிவை பகர்கின்ருன்.

மது போட்ட சத்தத்தை அசமுகன் கேட்டு ஏங்கிப் பயத்தால் அயர்ச்சி கொண்டு தேரில் நின்றும் பிடித்த வில்லையும் அம்பையும் பூமியில் வீசி எறிந்திட்டு, உடல் வேர்த்துத் தன்னிலை கெட்டுத் தனித்து விம்மினுன். இப்படி அசமுகன் பயத்தால் மெலிந்திட்ட தன்மையை மது என்னும் பூதத்தலைவன் பார்த்து இவை இவைகளைச் சொல்கின்ருன். 156

வீரனும் அலைஎஞ்சா வெஞ்சமர் வலன்எய்தச்
சூரனும் அலைநின்றே சூர்நிலை அதுகாணுந்
தீரனும் அலைஎன்னே செருமுய லுதிநீநின்
ஆருயிர் கொடுபோகென் றவனியின் மிசைபோனுன்.

''அடே! நீ ஒரு வீரனும் அல்ல; குறைவிலாத கொடிய போரில் வெற்றி பெறும் சூரனும் அல்ல. போர்க்களத்தில் அச்சம் விளங்கிடும் நிலையை நின்று பார்க்கக் கூடிய தீரனும் நீ அல்ல. ஏனடா நீ போர்புரிய முயல்வாய். உன் உயிரை விடுத்தேன்; தப்பிப் பிழைத்துப்போ'' எனக் கூறிப் பூமியின் மீது குதித்துச் சென்ருன். 157

பாரிடன் நிலன்மேவப் பகர்அச முகன்என்னும்
பேருடை யவன்வெள்கிப் பெருமிதம் இலனுகிப்
போரிடை வெருவுற்றேன் எனவொரு புரையுற்றேன்
ஆரிடை யிதுதீர்வ னெனஅல மருகின்ருன்.

பூதத்தலைவன் மது நிலத்திற்போக அசமுகன் எனப் பேசப்பெறும் பேருடையவன் வெட்கிப் பெருமிதம் இல்லாதவனுய், 'அம்மவோ! போர்க்களத்திற் பயந்து போனேன் என்றோர் வசை பெற்றுக்கொண்டேன். இனிமேல் யாரிடத்து இந்த வசை தீரப் போகின்றது' என்று பலவாறு நினைந்து கவலையுறுகின்ருன்.

ஆயிடை அவுணன்தான் அமர்புரி கிலனுகிப்
போயினன் அவன்அந்தோ பொன்றுதல் இனிதென்னுக்
காயமொ டுளமானக் கனல்சுட மனம்வேவத்
தீயென வெகுளுற்ருன் செருமுயல் திறல்பெற்ருன்.

அவ்விடத்து அசமுகன் தன்னுடன் போரிட முடியாது இவன் பயந்தான் எனக் கூறி அந்தப் பூதவீரன் போயினனே! அந்தோ! நான் இறத்தலே நன்று என்று உடலையும் உள்ளத்தையும் மானம் சுட்டிட, மனம் வேவுற நெருப்பைப் போன்று வெகுண்டு அந்தக் கோப நிலையால் மீண்டும் போரிட முற்படுகிருன்;

ஒல்லையின் அவன்ஏகி யுழிதனி தொடராநிற்
கொல்லுவன் இனியாண்டுக் குறுகினும் அகலாதே
நில்லுநில் லெனவாரா நீனிற முகிலென்னச்
செல்லுறழ் பகுவாயால் திசைசெவி டுறஆர்த்தான்.

அசமுகன் விரைவுடன், மது போயிட்ட இடத்தில் தனித்துத் தொடர்ந்து சென்று, ''பூதனே! நீ எங்கு சென்ருலும் தப்பவிடாது உன்னைக் கொல்லுவேன். ஓடித்தப்பாது நில் நில்'' எனக் கூறிக்கொண்டு வந்து நீலநிறமுடைய பெருமுகிலென்ன இடிபோன்று பெருவாயினுல் திக்குகள் செவிடுற ஆர்ப்பரித்தான் 160

அற்றமில் மதுவென்போன் அசமுகன் உரைகேளாக்
கற்றதும் உளகொல்லோ கழறினை சிலவீரம்
பெற்றிலை யெனைநாடிப் பெயருதல் பிழையேனும்
உற்றனை இசையெற்கோர் உறுபழி தருகின்ருய்.

குற்றமில்லாத மது என்பவன் அசமுகனின் வார்த்தை கேட்டு, ''அப்போது பயந்த நீ இப்போது வீரம் பேசவும் சில வார்த்தைகள் கற்றிருக்கின்றனையோ! நீ சில வார்த்தையையும் பேசினுய். வீரம் இல்லாதவன் என நாடி உன்னைக் கொல்லாது விடுத்துப் போயது பிழை என்றமையால் நீ இப்போது என் முன்னர் வந்து பேசி இசை கொண்டாய்; ஆனுல், பயந்த உன்னைக் கொல்லவேண்டியதனுல் எனக்கு ஒரு பழியைத் தருகின்ருய்'' என்ருன். 161

என்றிது புகல்கின்ருேன் எதிருற இகலிப்போய்ப்
பொன்றிகழ் சிலைகோலிப் பொறியுமிழ் பிறைவாளி
ஒன்றல பலவுய்ப்ப உருகெழு சினமெய்தி
நின்றனன் அவையாவும் நெடியகை கொடுவீசி.

என்று இவ்வாறு சொல்லியவாறு நிற்கும் மது எனும் பூதவீரன் முன்பு பகையாகும் இகல்கொண்டு சென்ற அசமுகனுயவன் பொன்போன்று ஒளியுடன் விளங்கிடும் தனது வில்லை வளைத்து நெருப்புப் பொறிகளை உமிழ்கின்ற பிறை மூகக் கணைகளை, ஒன்றல்ல பல அம்புகளைச் செலுத்திட மது என்பவன் அது கண்டு இடிபோலும் சினம் கொண்டு தனது நெடிய கையால் முன்வரும் அம்புகள் யாவற்றையும் அடித்து வீசியவாறு நின்ருன். 163

வேறு

வைத்தலைப் பகழிமேல் விடுப்ப மாமது
எய்த்திலன் இறையுமென் றெண்ணி எண்ணலன்
முத்தலைக் கழுவயின் முசலம் ஆதியாங்
கைத்தலப் படையெலாஞ் சிதறுங் காலையே.

கூரிய அம்புகளை அசமுகன் விடுப்பப் பெரிய மது என்பவன் கொஞ்சமும் களைத்தானில்லை என எண்ணிக்கொண்டு பகைவனுன அசமுகன் அதன்மேலாக முச்சுடரினை உடைய கழுமுள்படைவேல் முசலம் ஆதியாகச் சொல்லப்பெறும் பெரும் படைகள் யாவற்றையும் மதுமேல் சொரிந்திடுகின்ற அந்த வேளையில்;

சாரதன் மெய்யுறத் தளர்ந்து தானவன்
தேரினை விரைந்துதன் செங்கை யாலெடா
வாரிதி மேற்செல விடுப்ப வஞ்சகன்
பாரிடை ஒல்லையிற் பாய்ந்து மேயினுன்.

மது என்னும் பூதத் தலைவன், இப்படைகள் மேனி மீது படுதலால் தளர்ச்சியடைந்து விரைவுடன் அசமுகன் தேரினைச் செங்கையால் எடுத்துச் சமுத்திரத்தின் மேலாக விடுத்தலும், அது காலையில் அசமுகனுகும் வஞ்சகன் பூமியிடத்தாக அதிவிரைவுடன் பாய்ந்து கொண்டான்; 164

குப்புறு கின்றவன் கூளி வேந்தன்முன்
வெப்பமொ டணுகுரு வீங்கு தோளினுல்
துப்புறு மற்ருெழில் தொடங்க வானகத்
தப்புறம் அவன்செல அடிகொண் டோச்சினுன்.

பூமியில் குதித்துக்கொண்ட அசமுகன் பூதத்தலைவனுன மதுமுன் வெப்பீ யாரத்துடன் நெருங்கி பருத்த தனது தோளால் இடித்து வலிமைகொண்ட மற்ருெழில் தொடங்கியிடலும், அதுகாலை மது என்பவன் அசமுகனைத் தனது காலால் எற்றி உதைத்து, அவ்வுதையோடு வான உலகிற்கப்புறம் செல்லுமாறு செலுத்தினுன்; 165

வெய்தென இறந்துவான் மீண்டு பூதன்முன்
எய்தினன் அவனுரத் திடியின் எற்றியே
வைதனன் போயினன் மறைந்து மற்ருெரு
கைதவம் நினைந்தனன் ககனம் புக்குளான்.

உதையால் விறுக்கென மயங்கி வானத்தில் போன அசமுகன் பூமியில் மீண்டும் வந்து மதுவின் நெஞ்சின் மீது இடிபோன்று அடித்து அவனை வைது கொண்டு மறைந்து போயினுன். அவ்வாறு போய அசமுகன் யாதோ ஒரு வஞ்சனையாகும் சூழ்ச்சியை நினைந்து வான உலகில் சென்ருன். 166

வரந்தனிற் பெற்றதோர் மாயன் நேமியைக்
கரந்தனில் எடுத்தனன் கருத்தில் அர்ச்சனை
புரிந்தனன் தொழுதனன் போற்றிப் பூதன்மேல்
விரைந்துற விடுத்தனன் விளியுந் தன்மையான்.

வான உலகில் மறைந்துபோய் நின்ற அசமுகன், தான் முன்னர் தவமிருந்து விஷ்ணுபிரானிடம் வரத்தில் பெற்றுக்கொண்ட சக்கரத்தைத் தனது கையில் எடுத்தான். மனதால் அர்ச்சனை புரிந்தான், தொழுதான், போற்றி செய்து அந்தச் சக்கரப் படையைப் பூதவீரன்மேல் விரைவுடன் செல்லுமாறு விடுத்தான். அப்படிப் பூதனைக் கொல்ல விடுத்த அப்படையாலே தானே மாய்ந்து போகும் விதியுடையனுனன். 167

மாசுறும் அசமுகன் மதுவின் ஆகமேற்
பாசனம் வியப்பமால் பரிதி உய்த்தலும்
காசினி அவன்வெறுங் கரத்தன் ஆதலின்
வீசிய அப்படை வெகுண்டு மீண்டதே.

குற்றமே நிரம்பியிருக்கும் அசமுகன் மதுவின் மேனி மேலாக; பார்த்து நின்ற சேனைகள் யாவரும் எங்கிருந்து இச்சக்கரம் வருவதென வியக்கும்படி திருமால் கொடுத்த அந்தச் சக்கரப் படையை விடுத்தலும், பூமியில் நின்ற மதுவென்போன் வெறுங் கையுடன் நின்ருன். ஆதலாலே, மதுவை நோக்கி வந்த சக்கரம் அதுகண்டு கோபமடைந்து திரும்பிப் போயது. 168

கனையிருள் உருவினைக் கனலி சேர்ந்தென
முனைகெழும் அசமுகன் முடியை அட்டதால்
தனதுகை நேமிதன் னுல்உ றுததோர்
வினையில என்பது மெய்மை போலுமாமால்.

திரும்பி அசமுகன்பால் சென்ற அப்படை கொடிய இருளைச் சூரியன் சென்று அணைந்தால் எவ்வாருகுமோ; அதனை ஒத்து விரைவுடன் தன்னை மது மேல் விடுத்த அசமுகனின் தலையை அறுத்து வீழ்த்தியது; இந்த நிகழ்ச்சியால் தனது கைச் சக்கரத்தால் தனக்கு உறுததோர் வினை இல்லை; தன் கைச்சக்கரம் தனக்கே கேடுதரும் என்பது உண்மையாகும் ஒரு வாக்கியம் போலும்; 169

உலந்தனன் அசமுகன் உருமு வீழ்ந்தென
நிலந்தனில் வீழ்தலும் நின்ற தானவர்
புலந்தனர் ஆழிமால் புடையிற் போயது
தொலைந்ததின் றமவரனு அமரர் துள்ளவே.

அசமுகன் தலைவெட்டுண்டு இறந்து இடிவீழ்வது போன்று வான்நின்று பூமியில் வீழ்தலும் அதுவேளை அங்குநின்ற அசுரர் யாவரும் கவலையால் வாட்ட மூற்றனர். சக்கரம் திருமால் பக்கராகச் சென்றது. தேவர்கள் யாவரும் போர் தொலைந்து இன்றுடன் போயது எனத் துள்ளினுர்கள். 170

சாற்றிய அவுணர்தந் தலைவா ஏனையர்
நாற்றிறப் படையொடு நடந்து தம்முளஞ்
சீற்றம தாகியே செருவி ளைத்தலும்
ஏற்றெதிர் சாரதர் இரிந்து போயினுர்.

இதுவேளை சிறந்து சொல்லப்பெறும் அசுர சேனைகளின் தலைவராய் அங்கு நின்ற மற்றையோர் யாவரும் தேர், குதிரை, யானை, காலாள் என்னும் நான்கு திறப்பட்ட படைகளோடும் தங்கள் உள்ளம் கோபமாகிச் சென்று பூதங்களுடன் நேராகப் போர்செய்தலும் இந்த அசுரருடன் போர் ஏற்றுக்கொண்ட பூதங்கள், போரிட முடியாது உடைந்து பின்னிட்டோடினுர்கள். 171

வெற்றிகொள் தானவர் வெகுண்டு போர்செயப்
பற்றல ராகிய பாரி டத்தவர்
இற்றனர் வன்மையை இரிந்து போயினுர்
மற்றது கண்டனன் வலிய தண்டகன்.

வெற்றியினைக் கொண்டுள்ள அசுரர் விடாது வெகுண்டு பெரிய போரைச் செய்திட, அவர்களின் பகைவராக விளங்கிய பூதங்கள் தமது வன்மையை நீங்கினுர்கள். அவ்விடம் விட்டு ஓடிப்போயினுர். இத்தன்மைகள் யாவற்றையும் இலக்கம் வீரருள் ஒருவனுன வலிமைகொண்ட தண்டகன் என்பான் கண்டான். 172

வேறு

ஏற்ற மாகும் இலக்கவில் வீரருட்
சாற்று பேரிசைத் தண்டகப் பேரினுன்
கூற்றை நேர்வ தொருசிலை கோட்டியே
மாற்ற லார்மிசை வாளிகள் தூவினுன்.

அதுபோது முருகப் பிரானின் படைத் துணைவர்களில் மிகவும் ஏற்றமாகும் வலிமைகொண்ட இலக்கம் வில் வீரர்களுள் சிறப்புடன் தண்டகன் எனப் புகழ்ந்து சொல்லப்பெறும் புகழ்கொண்ட பேருடையவன் தனது கையில் பிடித்த இயமனை ஒத்ததோர் வில்லை வளைத்து அதினின்றும் பகைவராகும் அசுரர் மேலாகக் கொடிய அம்புகளைச் சொரிந்தான். 173

மின்னு நாரி வியன்சிலை யேசிலை
துன்னு நாணொலி சூருரு மேற்றொலி
பொன்னின் வாளி மழைபொழிந் திட்டதான்
மன்னு தண்டக மாப்பெருங் கொண்டலே.

அவனது வில்லின் நாண் ஒளி செய்தலால் அது மின்னல் போன்றும் மேலாகும் வில்லை அழகிய வானவில்லாகவும் விளங்கிடும் நாணின் ஓசையே அச்சம் தரும் இடிபோன்றும், இவ்வாறு பொன்னின் வண்ணமுடைய அம்பாகிய மழையை; சிறந்து நின்ற தண்டகன் என்னும் மேகம் பொழிந்திட்டது. தண்டகன் அம்பு சொரிந்தது, மேகம் மழை பொழிந்தது போன்றிருந்தது. 174

தட்டின் மொய்ம்புடைத் தண்டக மேலையோன்
விட்ட வாளிகள் வெய்யவர் தானையுட்
பட்ட காலைப் பரந்தெழு சோரிநீர்
மட்டி லாத குடிஞையின் வந்ததே.

எவராலும் நீக்கிட முடியாத வலிமை உடைய தண்டகன் என்னும் மேலான வீரன் விட்ட அம்புகள் யாவும் கொடிய அசுரர் சேனைகளின் உள்ளே சென்று பட்ட காலையில் அவர்கள் உடலம் ஊடுருவப் படலால் எழுந்துள்ள இரத்த நீர் மட்டிட முடியாத பெரியதோர் ஆறுபோன்று வந்தது. 175

இரதம் இற்றன எண்ணில வண்ணமார்
பரிகள் பட்டன பற்பல மாமதக்
கரிகள் பட்ட கணிப்பில எண்ணிலா
அரிகள் நேர்அவு ணப்படை பட்டதே.

இதனாலே எண்ணற்ற தேர்கள் அழிந்தன. வண்ண வண்ண நிறமுடைய பலபல குதிரைகள் பட்டு இறந்தன. அளவுகடந்த பெரும் மதயானைகள் பட்டு இறந்தன. சிங்கனை வீரத்தில் நேர்கொண்ட அசுரராகும் காலாட் படை பட்டு இறந்தன.
176

இந்த வாறிவர் பட்டிட ஏனையோர்
நொந்து தம்முயிர் காப்ப நுதலியே
சிந்தி யேயெண் டிசையினும் பாரினும்
அந்த ரத்தினு மாய்இரிந் தோடினார்.

இந்தவாறு அசுரச் சேனையாயோர் பட்டு இறந்துபோக பின்னால் நின்ற அசுரர் கண்டு மனம் நொந்து தமது உயிரைக் காத்திட எண்ணி அவ்விடம் நில்லாது சிதறி எட்டுத் திக்கிலும் பூமியிலும் வான உலகிலுமாகப் பயந்தோடினார்கள்.
177

வேறு

தண்டா அவுணப் படையிவ்வகை சாய்ந்த வாறும்
எண்டா னைமள்ளர் பலர் அங்கண் இறந்த வாறும்
விண்டாழ் கதிரைச் சிறைபூட்டிய வீர வீரன்
கண்டான் வெகுண்டான் நகைத்தொன்று கழறு கின்றான்.

குறைவிலாத அசுரப்படை இவ்வாறு சாய்ந்து புறங்காட்டி ஓடியவாறும், பெருமையாக எண்ணப்பட்ட அசுரர்களின் தலைவர் பலர் அங்கு இறந்த வண்ணத்தினையும்; வானவெளியை ஒளியாக்கி விளங்கி நிற்கும் சூரிய பகவானைச் சிறைசெய்து வைத்த வீரவீரனாகும் பானுகோபன் கண்டான். வெகுட்சி கொண்டான். நகை செய்து இது ஒரு வார்த்தையை சொல்கிறான். 178

மட்டார் தெரியல் மகவான் முதல் வானு ளோர்கள்
எட்டாத சேணில் தொலைவெய்தி இரிந்து போக
வட்டாடல் செய்த நமரங்களின் றாவி மாண்டு
பட்டார்கொல் ஈசன் மகன்ஏவு படைகள் தம்மால்.

தேன் சொரியும் மாலை அணிந்த இந்திரன் முதல் வானவர் தலைவர் யாவரும்; எவர்க்கும் எட்டாத வான உலகில் அவர்களுடன் செய்திட்ட போரில் முன்னிற்க முடியாது தொலைவாகிப் பயந்து ஓடிட மிகத் திறமையான போரினைப் புரிந்த எனது அசுர மக்கள் இன்று தமது உயிர் மாண்டு அழிந்தாரோ? ஈசன் சிவன் மைந்தன் ஏவிய படைகளாலே. 179

எல்லார் கதிரைச் சிறைபூட்டிய யானும் நிற்க
ஒல்லார்கள் ஆற்றல் உளராயடும் ஊற்றம் நன்றால்
கொல்லாது சீற்றம் இலதாய்இகல் கொண்டு றாதேல்
வெல்லாது கொல்லோ அரிதன்னையும் வேழம் எல்லாம்.

ஒளிகொண்ட கதிர் உடைய சூரியனைச் சிறை பூட்டிய யானும் இங்கு நிற்க பகைவராயவர்கள் வலிமை கொண்டுள்ளார் போன்று எமது படைகளை மாய்க்கின்ற செய்கை நன்றாயிருக்கின்றது. அம்மவோ! சிங்கமானது கோபங் கொள்ளாது, கொலை புரியாது, பகையும் கொள்ளாது, தணிந்திருக்குமென்றால் அதன் பகையாகும் யானைகள் எல்லாம் அந்தச் சிங்கத்தைக் கொல்லாதோ? கொன்றிடும்தானே? 180

வாரார் கழற்கால் அமரராட மாய்ந்த வெள்ளம்
ஈரா யிரத்தின் மிகுமல்லதை எஞ்சு றாதால்
பேராமல் என்பாங் கரின்நிற்பன பேசில் வெள்ளம்
ஓரா யிரமே இரிகின்ற தொழிந்த தெல்லாம்.

வார் பூட்டிய வீரக்கழல் அணிந்த தேவ வீரராகும் எனது பகைவர் போரிட இறந்துபோன என் சேனைகள் இரண்டாயிரம் வெள்ளத்தின் மேற்படுமன்றிக் குறைவுபடாது. இப்போர் நிலத்தை விட்டுப் போகாது; எனது பக்கராக நிற்கும் சேனைகளின் தொகையைச் சொல்லப்போனால் ஓராயிர வெள்ளம் என்னும் கணக்காகும். மற்றையோர் யாவரும் இவ்விடம் விட்டு ஓடிப்போயினர். 181

ஒன்றே வரிவில் ஒருவேன்பிடித் தொன்ன லார்மேற்
சென்றே அடல்செய் திலன்முன்னமென் சேனை யெல்லாங்
கொன்றே னியானே பொரவிட்டனன் கூழை தன்னின்
நின்றேன் இஃதோர் பொருளென்று நினைந்தி லேனுல்.

ஓர் அழகிய வலியுடைய வில்லை ஒருவனுகிய தமியேன் பிடித்துக்கொண்டு என் பகைவர்மேல் போரிடச் சென்று அவர்களை அழித்திலேன். இவன் என் முன்னுக நின்ற சேனைகள் யாவற்றையும் யானே கொன்றேன். அவர்களைப் போர் புரியும்படி விடுத்தலால் நான் பின்னுகத் தங்கி நின்றேன். இப்படியாக எமது பகைவரை ஒரு பெரிய பொருள் என்று நான் நினைந்து கொள்ளவில்லையே,

தீருஞ் செயலை நினைந்தாவதென் சென்றி யானே
ஓரொன்று கன்னல் முடிகின்றமுன் ஒன்ன லார்தம்
பேரின் றெனவே அடுவேனது பெற்றி லேனேல்
சூரன் குமரன் அலன்யானெனச் சூள்மொ ழிந்தான்.

நடந்தொழிந்த செயலை நினைந்து என்ன ஆகப்போகின்றது. யானே சென்று ஒரு நாழிகைப்பொழுது முடிகின்றதன் முன்னம் பகைவரது பேர் இனி இங்கு இலை எனும்படியாக யாரையும் கொல்வேன். அது செய்யப்பெற்றிலேன் என்றுல் சூரனுடைய குமரன் யான் அல்ல என்று ஒரு சபத வார்த்தையைக் கூறினுன். 183

பானுப் பகைவன் இவைகூறிப் பரிதி மான்தேர்
மானக் கடுங்கோல் வலவன் மரபிற் கடாவச்
சேனைக் கடலி னுடன்சென்றுதன் செங்கை தன்னில்
கூனற் சிலையைப் புருவத் திணெடுங் குனித்தான்.

சூரியன் பகைவனுன பானுகோபன் இவற்றைக் கூறி; சூரிய தேவனுடைய குதிரை பூட்டிய தேரை ஒப்ப விளங்கிடுகின்ற தேரைக் கடுமையாகும் கோலைக் கையிலே உடைய சாரதியாயவன் முறையாகச் செலுத்தியிட சேனையாகும் சமுத்திரத்தினுடன் புறப்பட்டுப் பூதப்படை முன்பு சென்று; தனது அழகிய சிவந்த கையில் உள்ள போருக்கு ஏற்பக் கூனிய வில்லைத் தனது நெற்றிப்புருவமும் வளைந்திட வளைத்துக் கொண்டான். 184

கோபநிலையுடன் வில்லை வளைத்தலும் புருவமும் மேல் நிமிர்ந்து வளைந்தது.

மேதக்க தன்மைச் சிலைவாங்கி விளங்கும் வெள்ளி
சோதிக் கிறையாயுறும் எல்லையிற் சூல்கொள் மேகம்
மூதக்க பாரிற் சொரிந்தென்ன முனிந்து நேரும்
பூதப் படைமேற் சரமாரி பொழிதல் உற்றுன்.

மேன்மை கொண்ட தனது வில்லைப் பானுகோபன் வளைத்து ஒளி விளங்கிய சுக்கிரன், சுவாதி நட்சத்திரத்தில் ஆட்சியாயுறும் காலத்தில் கருக்கொண்ட மேகம் மிக மூடிய இப்பூமியில் எத்துணை வேகமுடன் மழை பெய்திடுமோ அதனைப்போன்று தனது முன்பாக மிக்க முனிவோடும் போரிட வருகின்ற பூதங்கள் மீது அம்புகளைத் தொகையாகப் பொழிதல் உற்றுன். 185

பொழிகின்ற காலைத் திறன்மேதகு பூதர் நோக்கிக்
குழிகின்ற கண்ணின அழல்காலக் குலாசல லங்கள்
ஒழிகின்ற வெற்பு முழுதும்பறித் தொல்லை வீசி
அழகின்ற காலத் துருமேறென ஆர்த்து நின்றார்.

பானுகோபன் அம்புகளைப் பொழிகின்ற காலையில் மேலான திறல் உடைய பூதர் அது கண்டு குழிந்த அவர்களது கண்ணால் நெருப்புக் கக்கிடத் திக்கு மலைகள் மட்டும் நீங்கிட மிச்சமாக உள்ள மலைகள் யாவற்றையும் பறித்து ஏந்திப் பானுகோபன் மேல் உடன் வீசி உலகம் அழிகின்ற காலத்து முழங்கிடும் இடியினைப் போன்று கூச்சலிட்டுக் கத்தி நின்றார்கள். 186

என்றின் பகைஞன் தனைப்பூதர்கள் யாரும் வீசுங்
குன்றம் பலவும் புடைசூற்றக் குறித்து நோக்கி
ஒன்றங் கதனுக் கொருகோடி ஒண்கோல தாகத்
துன்றும் படியே முறைதூண்டித் துகள்செய் திட்டான்.

சூரியன் பகைவன் பானுகோபன்மேல் பூதர்கள் யாவருமாகத் திரண்டு எடுத்து வீசிய மலைகள் பலவும் வந்து புடைசூழ்ந்திடுதலும் அதனைப் பானுகோபன் குறிப்பாகப் பார்த்து அவ்வணம் வீசப்பட்ட ஒரு மலைக்கு ஒரு கோடி சூரிய அம்புகள் எனும்படி சென்றிட முறையாகச் செலுத்தி அம்மலைகள் யாவற்றையும் துகளாக்கி அழித்து விட்டான்; 187

வண்டுது பூந்தாரவன் வாளியின் மாய்ந்த குன்றம்
நுண்டுளி யாகியது வானிடை நொய்தின் ஏகி
விண்டூர்க டோறுஞ் செறிகின்றவர் மேனி தோயக்
கண்டுதி ஆற்ருதவர் விண்ணிடைக் கங்கை புக்கார்.

வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்திடும் பூமாலையணிந்த பானுகோபன் விடுத்துள்ள அம்புகளால் அழிந்த மலை யாவும் நுண்ணிய பொடியாகிப் பறந்து வானத்திடை விரைவுடன் சென்று வானில் உள்ள உலகுகள் தோறும் இருக்கின்ற தேவர்கள் மேல் பட்டுச் செறிந்திடலும், அத்தேவர் அப்புழுதியைக் கண்டு ஊத ஊதப் பின்னரும் புழுதியாக மேனியில் வந்து படுதலால் ஊதி ஆற்ருது வானில் உள்ள கங்கையில் குளித்திடும்படி சென்று புகுந்து கொண்டார்கள். 188

தேவுத் தடந்தேர் ஒருவன்செரு வெல்லை முற்றும்
மேவிக் கறங்கில் திரிவான்றனி வில்லை வாங்கிக்
கோவைத் தொடையொன் றினில்ஆயிர கோடி வாளி
தூவிக் கணத்தின் தொகைமுற்றுந் தொலைவு செய்தான்.

மிக அற்புதம் கொண்ட பெருந்தேர் ஒன்றில் வரும் ஒருவனுகும் பானுகோபன், போர்க்கள எல்லை முழுவதும் சென்று சென்று காற்ருடிபோன்று சுழன்று திரிகின்றவனுய்த் தனது வில்லை வளைத்து ஒரு கோர்வையாகும் தொடுப்பு ஒன்றிலே ஆயிரங்கோடி அம்பினைச் செலுத்தி முன்னின்ற பூதப்படையின் தொகை முழுவதையும் தொலைவு செய்தான்; 189

நன்கா லநீவி மிளிர்கின்ற நறுநெய் தோய்ந்த
மின்கா லதனின் விரைகின்ற செந்தீயின் வெய்ய
முன்காலு கின்ற சுடருள்ளன மூன்று கண்ண
வன்காலன் அஞ்ச அடவல்லன வஞ்சன் வாளி.

நன்குடன் நஞ்சுபூசி ஒளிர்கின்றதும், வாச நெய்யில் தோய்த்திட்டவையாயும் மின்னலினும் காற்றினும் வேகமுடையனவையாயும், நெருப்பிலும் கொடுமை உடையனவாயும், முன்னால் நெருப்புச் சுடர்களை உமிழ்கின்றனவாயும். மூன்று நுதிகளை உடையவையாயும் கொடிய இயமனும் அஞ்சிடும்படி கொலைபுரிய வல்லனவாகவும் ஆகின்ற வஞ்சகனான பானுகோபன் விடுத்திடும் அம்புகள் யாவும். 190

தோளைத் துணிக்குங் கரத்தோடு துணிக்கு மார்பைத்
தாளைத் துணிக்கும் எரிகுஞ்சித் தலைது ணிக்கும்
வாளைத் துணிக்கும் அணிமெய்வயப் பூதர் வாழ்க்கை
நாளைத் துணிக்கும் அசுரன்விடு நாம வெங்கோல்.

இன்னும் இப்பானுகோபன் விடுத்துள்ள அம்புகள் பூதங்களுடைய தோள்களைத் துணித்திடும்; கைகளோடு நெஞ்சையும் துணித்திடும்; காலினைத் துணிக்கும்; நெருப்பு எரிதல் போன்று விளங்கிடும் சிவந்த சடையுடைய தலையைத் துணிக்கும்; கையில் உள்ள வாளைத் துணித்திடும்; அழகிய மேனியுடைய பூதங்களின் வாழ்நாளை அறுத்தெறியும். எனவே, பூதங்களைக் கொன்றிடும்; பானுகோபன் விடுத்திட்ட பெரும் பெயர் கொண்ட அம்புகள். 191

சூரற் கினிய மகன்வாளி துணித்து வீச
வீரத்தின் மிக்க கணத்தின்றலை வீழு முன்னர்ச்
சீருற்ற சோரிப் புனல்சிந்துவ தீயர்சென்ற
பாரைப் புனிதஞ் செயுந்தன்மை படைத்த தன்றே.

சூரபன்மனுக்கு இனிமைதருபவனாகிய மகன் பானுகோபன் விடுத்துள்ள அம்புகள் பூதப்படையினை இவ்வாறு துணித்து வீசிடலும் அதுவேளை வீரத்தில் மிகுந்துள்ள பூதத்தின் தலை துணிபட்டு எழுந்து கீழ் வீழ்வதன் முன்னர் அப்பூதத்தின் கழுத்தில் நின்றும் இரத்தம் சீறிக்கொண்டு பூமியில் பரவுதல் அத்தீயவராகும் அசுரர் சென்ற இந்தப் பூமியைத் தோஷம் நீக்கிப் புனிதம் செய்யப் புனித நீர் தெளிக்கப்படும் தன்மையை மேற்கொண்டிருப்பது போன்றது. 192

பொன்சென் றிலங்குங் கணைதள்ளலும் பூதர் சென்னி
மின்சென்ற வானத் தெழச்சோரியு மீதெ ழுந்த
என்சென் றனையாங் குமரன்படை ஏக லென்னுப்
பின்சென்று பற்றித் தருவான்றொடர் பெற்றி போலும்.

விருக்கென வந்து இலங்கிடுகின்ற ஓர் அம்பு பூதத்தின் தலையை அறுத்துத் தள்ளலும், அத்தலை மின்னல் சென்றிடும் வேகம் போன்று வானத்தில் மேலெழலும் இரத்தமும் கழுத்தினின்றும் உடன் மேலெழுந்தது; எதுபோலுமெனில், மேல் அறுபட்டுச் செல்லும் தலையை அப்பூதத்தின் இரத்தம் பின்தொடர்ந்து எங்கே போகிறாய்? நாம் குமரப்பெருமான் படையாவோம். போகாதே இங்கே வா என்று பிடித்துக்கொண்டு வந்து தருவதற்கு பின்னாகத் தொடர்ந்து செல்லும் தன்மையைப் போலும். 193

எய்யுந் தொழிலுக் கவன்மேலவர் யாவர் எங்கள்
ஐயன் படையாகிய பூதர்தம் மாற்றல் மொய்ம்புங்
கையும் வரையுஞ் சிரமுங் கழற்காலும் மார்பும்
ஒய்யென் றறுக்கும் அவுணன்விடும் ஒன்ளுேர் வாளி.

அம்புகளை எய்கின்ற தொழிலுக்கு அந்தப் பானுகோபனின் மேலாக யாவர் உளர். ஏனெனில், எங்கள் ஐயன் படையாகிய பூதங்களின் வலிமையும்; தோள் களும், கைகளும், அரையும், தலையும், வீரகண்டை அணிந்த காலும், நெஞ்சும் எல்லாவற்றையும் அப்பானுகோபனுடைய ஓர் அம்பானதே உறுதியுடன் ஒய் யென்று விரைவில் அறுத்தெறியும். 194

வானோர் தொகையைச் சிறையிட்டவன் மற்றிவ் வாறு
தானோர் சிலையின் வலியாலடத் தாவில் பூதர்
ஆனோர் அளப்பில்லவர் மாய்ந்திட ஆற்ற லில்லா
ஏனோர்கள் யாரும் உடைவார்இவை எண்ண லுற்ருர்.

வானோர்களாய தேவர்களைச் சிறையிட்ட பானுகோபன் மற்று இவ்வாறு தனது ஒரு வில்லின் வலிமையால் அம்பினைப் பொழிந்து பூதங்களை அழித்தலும் பூதங்களின் படைகள் மிகு விரைவாக அளவுகடந்தன மாய்ந்திடலும், அங்கு அதுவேளை போர் செய்தற்கு வலியிழந்துபோன மற்றப் பூதங்கள் யாவரும் இவை எண்ணலுற்ருர். 195

மின்னும் புகர்வேலவன் அங்குளன் வீர வாகு
பின்னின்றனன் ஈதுண ரான்பிற ராரு மற்றே
முன்னின்ற நம்மை இவன் அட்டிடு மொய்ம்பி லேம்யாம்
என்னிங்கு நிற்ப தெனப்பூதர் இரிந்து போனுர்.

மின்னுகின்ற ஒளியுடைய வேலேந்திய முருகபிரான் அங்கு பாசறையில் அமர்ந்து கொண்டார். வீரவாகுதேவர் எமது அணியின் பின்னுக நின்றனர்; அவருக்கும் எமது நிலை தெரியாது. மற்றைய எந்தொரு வீரரும் எம் நிலை யுணரமுடியாது அவ்வணமாயினர். முன்னுக நிற்கின்ற எம்மை இந்தப் பானு கோபன் இனி நின்ருல் கொன்றிடுவான். நாமும் வலியிழந்து போனேம். ஆன தினல் எதுக்காக நாம் இங்கு நிற்க வேண்டும் எனப் பூதங்கள் பயந்து புற முதுகிட்டு ஓடிப்போனுர்கள். 196

இரிகின்ற பூதர் எவரும் படைக்கீற்றின் நின்ற
வரிகின்ற தண்டார் அடல்மொய்ம்புடை வள்ளல் பாங்கர்ப்
பரிகின்ற நெஞ்சத் தொடுசெல்லவப் பான்மை யாவுந்
தெரிகின்றனன் உக்கிரன் என்பதொர் சேனை வேந்தன்.

பயத்தால் பின்னுல் ஓடிச் செல்கின்ற பூதங்கள் எல்லாரும் படைகளுக்குப் பின்னுல் நின்ற வண்டுகள் மொய்க்கும் பூமாலையணிந்த, வலியோடும் போரிடும் புயங்களையுடைய எம் வள்ளல் வீரவாகுதேவர் பாங்கராகப் பரிதவிக்கின்ற உளத்துடன் ஓடிப்போதலும், அதுவேளை இத்தன்மைகள் யாவற்றையும் கண்டு கொள்கின்ருன் உக்கிரன் என்னும் ஒரு பூத சேனுதிபதி. 197

கண்டுக் கிரனுகிய பூதன் கனன்று செங்கண்
விண்டிற் பெரிது நிவப்புற்று விளங்கு பொன்னநந்
தண்டப்படை ஒன்றினை அங்கையில் தாங்கி யேகி
அண்டத் தவர்கள் புகழத்தனி ஆர்த்து நேர்ந்தான்.

உக்கிரன் என்னும் பூதத் தலைவன் கண்டு கோபமுற்றுச் சிவந்த கண்ணுடைய விஷ்ணுமூர்த்தியிலும் பார்க்கப் பெரிதாக ஒப்ப விளங்கிடுகின்ற ஒரு பொன்னுலாய தண்டாயுதமாகும் படை ஒன்றினைத் தனது அழகிய சிவந்த கையில் ஏந்தியவாறு சென்று, இவனைப் பார்த்து நிற்கும் தேவர்கள் யாரும் புகழும்படி தனியாக ஆரவாரித்துக் கொண்டு பானுகோபன் முன்பு வந்து எதிர்ந்தான். 198

செற்றத்துடன் உக்கிரன் நேர்புகு செய்கை தன்னைக்
கற்றைக்கதி ரைத்தளை இட்டவன் கண்டு தன்கைக்
கொற்றச்சிலை யைக்குனித் தாயிர கோடி வாளி
முற்றத்துரந் தேயவன் யாக்கையை மூடி ஆர்த்தான்.

மிகு கோபத்துடன் உக்கிரன் என்னும் பூத சேனுதிபதி நேரிட்டு வந்து கொண்ட இச்செய்கைதன்னை; கற்றையாகும் கிரணமுடைய சூரியதேவனைச் சிறை வைத்த பானுகோபன் கண்டு, தனது கையில் பிடித்த வெற்றி வில்லை வளைத்து ஆயிரகோடி அம்புகளை முழுவதும் உக்கிரன்மேல் சென்றுபடச் செலுத்தி, உக்கிரனுடைய உடலம் முழுவதையும் அம்பினுல் மூடி மறைத்தான்; 199

மைக்கின்ற மேனி நெடும்பூதனை வஞ்சன் வாளி
தைக்கின்றில வானுதி மாய்ந்து தளர்ந்து வீழ்ந்த
மெய்க்கின்ற இன்பும் அறனும் விளையாது வாளா
பொய்க்கின்ற வன்கைப் பொருள்வல்லையிற் போவ தேபோல்

கருநிறம் கொண்ட மேனி உடைய நெடிய இப்பூதனைப் பானுகோபன் செலுத்திய அம்புகள் சென்று தைக்கவில்லை. பதிலாக அப்புகள் பூதத்தலைவன் மேற் பட்டு கூர்நுனி மழுங்கி, விசையும் தளர்ந்து கீழே விழுந்துவிட்டன. இது எதுபோலுமெனில், உண்மையாகும் இன்பநிலையையும், தருமத்தையும் செய்யாது வீணுக நாப்பிளக்கப் பொய்பேசி, மற்றையோருடைய வருத்தம் அறியாது பொருளை ஈட்டி வந்தோன் கையில் உடைய பொருள் மிகு விரைவாக அழிந்து போதல் போன்றது. இன்பும் — அறனும் உறுதியாய தெய்வநிலை உணர்வால் பிற உயிர்த் துயரம் உணர்ந்து அவரையும் வாழவைத்து வாழ்தல். 200

விடுகின்ற வாளி பயனின்றயல் வீழ்த லோடும்
படுகின்ற தன்மை யதுகண்டனன் பானு கோபன்
அடுகின்ற தெவ்வா றிவன்றன்னையென் றங்கண் வானந்
தொடுகின்ற தாங்கோ ரெழுவத்தைச் சுழற்றி விட்டான்.

பானுகோபன் விடுகின்ற அம்புகள் பயனில்லாது பூதத் தலைவன்மேற் பட்டு வீணே அயலில் வீழ்தலோடும் தனது அம்பு சென்று படுகின்ற தன்மையை பானுகோபன் கண்டனுய், இனிமேல் இப்பூதனை எவ்வாறு கொல்கின்றது என மனத்தில் எண்ணி வானினைத் தொடுகின்றது போன்ற நீண்டதோர் எழுவாயுதத்தை அங்கு எடுத்துச் சுழற்றிப் பூதத்தலைவன் மேல் எறிந்தான். 201

தீயன்முச லந்தனை உக்கிரன் செங்கை தாங்கும்
ஆய்திண்கதை யாற்சிதைத் தேயவன் தேரை அண்மிப்
பாயும்பரி யைப்புடைத் தொல்லையிற் பாரின் வீட்ட
வேயென்று பல்காலிகழ்ந் தார்த்தனர் யாரும் வானோர்.

தீயனுன பானுகோபன் விடுத்த எழுவாயுதம் வருதல் கண்டு உக்கிரன் தனது சிவந்த கையில் பிடித்த எப்படையையும் ஆய்வுடன் அழிக்கவல்ல தண்டால் அடித்துச் சிதைவாக்கியபின், பானுகோபன் தேரை அணுகிப் பானுகோபன் தேரிற் பூட்டிய குதிரைகளைத் தண்டால் மோதி அடித்துப் பூமியில் வீழ்த்திடலும், அது கண்ட தேவர்கள் "ஏ" என்று பலகாலும் கூறிப் பானுகோபனை இகழ்ந்து ஆர்ப்பரித்தனர். 202

புரவித் தொகுதி விளிவாகப் பொருவின் மைந்தன்
எரியிற் கனன்று புடைஓ ரிரதத்தின் வாவி
வரிவிற் குனித்துக் கிரன்ஏந்தும் வலிய தண்டம்
முரிவுற்றிட வேயொரு நூறு மொட்டம்பு தொட்டான்.

குதிரையின் தொகைகள் இறந்துபோக, நிகரில்லா வலியுடைய பானுகோபன் நெருப்பிலும் பார்க்க மிகு கோபங்கொண்டு பக்கராக நின்று இன்னுமொரு தேர்மேல் பாய்ந்து, வரிகொண்ட வில்லை வளைத்து, உக்கிரன் கையில் பிடித்த தண்டாயுதம் முரிவுற்றிடும்படி ஒரு நூறு மொட்டையாகும் அம்பினை உக்கிரன் தண்டின்மேற் பட்டிடச் செலுத்தினன். 203

நூறெண்கணை யால்அவன் தண்டம்நுண் டூள் தாகச்
சீறுந்திறல் உக்கிரன் கைக்கொடு தீயன் மைந்தன்
ஏறுந்தடந் தேர்தனை வானின் எடுத்து வீச
வீறும் பரிதி பதத்தின்துணை மேய தன்றே.

நூறு கூரிய மொட்டம்புகளால் உக்கிரன் தண்டானது நுண்ணிய துகளாகிப் பொடிந்து போதலும், அது கண்டு சீற்றமாகிய உக்கிரன் என்பவன் தீயனுன சூரபன்மன் மகன் பானுகோபனது தேரைக் கையால் எடுத்து வானிலே தூக்கி வீசிடுதலும், அத்தேரானது வீறுடைய ஒளிதரும் சூரியன் பதத்தின் காறும் சென்றது. 204

துன்னுன் மதலை வருகின்றது சூரன் நோக்கி
முன்னுளின் இன்று நமைப்பற்ற முயன்று ளான்கொல்
அன்னுன் புணர்ப்பை உணரேன்அணித் தாகும் இன்னம்
என்னு வதோவென் றுளத்துன்னி இரிந்து போனுன்.

பகைவனுன சூரபன்மனின் மகன் பானுகோபன் தேருடன் எறியப்பட்டு வருதலைச் சூரியதேவன் பார்த்து, 'ஓகோ! இப்பானுகோபன் முன்னொரு நாள் தம்மைப் பற்றிச் சிறை வைத்ததுபோன்று இன்றும் சிறை பிடிக்க முயல்கின்றனனே? அப்பானுகோபன் சூழ்ச்சி எது என்பதை உணரேன்; தேரும் கிட்டவாக வந்திட்டதே! இன்னமும் என்னுகுமோ' எனத் தனது உளத்தில் எண்ணி அப்பால் பயந்தோடிப் போயினுன். 205

தேரோடு சென்ற அசுரன்மகன் சேணின் மீண்டு
பாரோடு சேர்வான் வருகின்ற பரிசு நோக்கில்
காரோடு வானந் தவறுற்றுழிக் காமர் தாருத்
தூரோடு சாய்ந்து மறிகின்றதொர் தோற்றம் ஒக்கும்.

தேரோடு வானஞ் சென்ற சூரபன்மன் மகன் வானில் நின்றும் மீண்டும் பூமியோடு சேர்வதற்காக வருகின்ற தன்மையை நாம் அவதானித்தால். வானில் உள்ள கருமேகத்துடன் வான உலகமும் தவறுற்றபோது மிகு அழகியதொரு வான உலகத்துள்ள தேவதாரு வேரோடு சாய்ந்து வீழ்கின்ற தோற்றத்தின் தன்மை போன்றிருப்பது. 206

வேறு

வீழு கின்றதேர் ஒருவியே வெங்கதிர்ப் பகைஞன்
தாழு மெய்யுடை உக்கிரன் தன்னைவந் தணுகி
மாழை யொண்கையால் எற்றியே எடுத்துவா னுலகோர்
ஏழை யுங்கடந் தப்புறஞ் சென்றிட எறிந்தான்.

வீழ்கின்ற தேரை விடுத்துப் பானுகோபன் நீங்கித் தாழ்ந்து திரண்ட மேனியுடைய உக்கிரனை வந்து அணுகிப் பொன்வண்ணமான தனது கையால் உக்கிரன் மேனிமேல் ஓங்கி அடித்து, உக்கிரனைத் தூக்கி வானுலகம் ஏழையும் கடந்து அப்பால் செல்லுமாறு விட்டெறிந்தான். 207

எறியும் வெய்யவன் வேறொரு தேரின்மே லேறி
வெறிகொள் பங்கயத் தண்ணலார் விதித்துமுன் னளித்த
செறியு மூவிலை இருதலை வேலினைச் சேண்போய்
மறியும் உக்கிரன் எதிர்புக விடுத்தனன் மன்னோ.

உக்கிரனை எறிந்திட்ட வெய்யவனான பானுகோபன் வேறொரு தேர்மேலாகப் பாய்ந்து ஏறித் தேன் துளிக்கும் தாமரை மலர்மேல் இருக்கும் கடவுள் பிரமதேவன் முன்னர் படைத்துக் கொடுத்த, இருபுறமும் இலைபோன்ற மூச்சுடருடைய வேலை எடுத்து வானில் சென்று கீழ் வீழ்ந்திடுகின்ற உக்கிரன்மீது எதிர் சென்று பட்டுருவும்படி விடுத்தான். 208

விடுத்த தெய்வவேல் உக்கிரன் மருமத்தை விடர்போற்
படுத்தி யேபுகுந் தப்புறம் போந்திடப் பாரின்
அடுத்து மற்றவன் சிறிதயர் வுற்றனன் அதுகண்
டெடுத்த குன்றெடுந் தண்டியென் றுரைப்பவன் எதிர்ந்தான்.

விடுத்துள்ள அத்தெய்வ வேலானது சென்று உக்கிரன் என்னும் பூதத் தலைவன் மேற்பட்டு அவன் உடலத்தை மலையைப் பிளப்பதுபோன்று உட்புகுந்து ஊடுருவி அப்புறம் போயிட, உக்கிரன் பூமி மீது வீழ்ந்து சிறிது அயர்வுற்றான். அதனைக் கண்டு தண்டி என்று உரைக்கும் இன்னுமொரு பூதத்தலைவன் கையில் எடுத்தேந்திய மலையுடன் பானுகோபனை எதிர்த்து வந்தான். 209

தண்டி யாகிய பாரிடன் தனதுகைத் தலத்தின்
மிண்டு கின்றதோர் அடுக்கலை அவன்மிசை வீசக்
கொண்ட வார்சிலை வாங்கி ஆயிரங்கணை கோத்துக்
கண்ட துண்டம தாக்கினன் அதனையோர் கணத்தில்.

தண்டி எனக் கூறிடுகின்ற பூதத்தலைவன் தனது கையில் நெருங்கி நின்றிட்ட மலையினைப் பானுகோபன் மேலாக வீசுதலும், பானுகோபன் அது கண்டு தனது கையில் கொண்ட வில்லை வளைத்து ஆயிரம் அம்புகளைத் தொடுத்து விடுத்துத் தண்டி எறிந்த மலையைக் கண்டதுண்டமாகும்படி செய்தான். 210

வெற்பு நுண்டுகள் ஆதலும் விண்ணுற நிமிர்ந்து
கற்ப கம்புரை மராமரம் ஒன்றினைக் களைந்து
வற்பு றுங்கரந் தனிவெடுத் தவுணர்கோன் மணித்தேர்
முற்பு குந்திடும் பரிகளைப் புடைத்தனன் மொய்ம்பால்.

மலையானது நுண்ணிய துகளாகப் பொடிந்துபோதலும், அடுத்துத் தண்டி என்னும் பூதவீரன் வானுற நிமிர்ந்து நின்றிட்ட கற்பகத்தை ஒத்திட்ட பெரியதொரு மராமரத்தைப் பறித்து வலிமைகொண்ட கையில் எடுத்துப் பானுகோபனது மணிகள் கட்டிய தேர் முன்பாக உள்ள குதிரைகளை வலியோடும் அடித்தான். 211

மொய்ம்பி னிற்புடைத் திடுதலுங் கவனமா முழுதும்
அம்பு வித்தலை மறிந்தன அதற்குமுன் அவுணன்
பைம்பொன் முத்தலைப் பலபதி னுயிரம் பகழி
செம்பு னற்கொளத் தண்டிதன் நெற்றியுட் செறித்தான்.

குதிரைகளை வலியால் அடித்திடுதலும், கடிவாளங்கொண்ட வேகமுடைய குதிரைகள் யாவும் இப்பூமியின் இடத்தாக வீழ்ந்திறந்தன. அதற்கு முன்னராகப் பானுகோபன் பசிய பொன்னிலான மூன்று சுடர் முடிகளை உடைய அம்புகள் பலவற்றைப் பதினுயிரக் கணக்கில் தண்டி என்னும் பூதவீரனின் நெற்றியிற் பட்டு இரத்தம் வடியும்படி செலுத்தினுன். 212

செறித்த காலையின் மெலிந்தனன் தண்டியச் செய்கை
குறித்து நோக்கியே பினுகியாம் பூதனோர் குன்றம்
பறித்து வீசுவான் முயறலும் ஆயிரம் பகழி
நிறத்தின் மூழ்குமா றெய்தனன் அனையனும் நின்ருன்.

நெற்றியில் அம்புகளை நேரிற் படும்படி பானுகோபன் செலுத்தியிட்ட காலத்தில் தண்டி மெலிவுற்று வாடினுன். அந்தச் செயலைக் குறிப்பாகக் கண்டு கொண்ட பினுகி என்னும் இன்னுமொரு பூதத்தலைவன் ஒரு மலையைப் பிடுங்கிப் பானுகோபன்மேல் வீசுதற்கு முயற்சி செய்தலும், அதுவேளை பானுகோபன் பினுகியின் நெஞ்சின்மேல் ஆயிரம் அம்புகளை வீசிடுதலும், அவை பட்டுப் பினுகியும் சோர்வுற்று நின்ருன். 213

குன்று கொண்டகைப் பிணுகியுந் தொல்வலி குறைந்து
நின்ற காலையி லேனைய பூதரும நேர்ந்து
சென்று வீற்றுவீற் றமரினைச் சிலபொழு தியற்றி
ஒன்று தீங்கதிர்ப் பகைஞனுக் காற்றலர் உடைந்தார்.

மலையைக் கையில்கொண்ட பிணுகியும் தனது முன்னைய வலி எலாம் தொலைவாகிச் சோர்வுற்று நின்ற காலையில், ஏனைய பூத சேனுதிபதிகளும் முன் வந்து முறைமுறை போரினைச் சிலபொழுது புரிந்து, நெருங்கிடும் வெப்பக்கிரணங்களை உடைய சூரியன் பகைவன் பானுகோபனுக்கு முன் நிற்க முடியாது உடைந்து போயினர்கள். 214

எண்ட ருங்கணத் தலைவர்கள் தொலைதலும் இதனைக்
கண்டு வெஞ்சினந் திருகியே எதிர்ந்தனர் கபாலி
அண்ட லோசனன் நிரஞ்சனன் உருத்திரன் அகண்டன்
தண்ட கன்முதல் இலக்கமா கியபடைத் தலைவர்.

யாவராலும் மேம்பட எண்ணப்பட்ட பூதகணத் தலைவர்கள் தொலைந்து போதலும் இதனைக் கண்டு கொடுஞ் சினம் மேற்கொண்டு பானுகோபன் முன்புற வந்து எதிர்க்கிருர்கள். அண்டலோசன், நிரஞ்சன், உருத்திரன், அகண்டன், தண்டகன் முதலாகப் பேர் பெற்றுக்கொண்ட இலக்கம்வீரர் எனப்படும் வீரவாகுதேவரின் தம்பியராகும் படைத்தலைவர்கள். 215

மிடல்ப டைத்திடும் இலக்கமாம் வீரரும் விரவித்
தடம ணிப்பெருந் தேரொடும் அவுணன்முன் சார்ந்து
சுடரு டைக்கட கங்கிளர் செங்கையில் துன்னுங்
கொடும ரத்தினைக் குனித்தனர் நாணெலி கொண்டார.

வலிமை கொண்டிட்ட இலக்கம் வீரர் எனப்படும் அத்தனை வீரரும் ஒருங்கே பருத்த மணிகள் பதித்துள்ள பெரும் தேரோடும் பானுகோபன் முன் வந்து தங்களுடைய சுடர்கொண்ட காப்பணிந்த செங்கைகளில் இருந்திடுகின்ற வில்லினை வளைத்தார்கள். வில் நாணினைச் சுண்டி நாணின் பேரோசை விளைவித்தார்கள். 216

கவடு பட்டிடும் ஈரிரு மருப்புடைக் கருபக்
குவடு பட்டதை உரைப்பதெ னொருகரிக் கொம்பாற்
சுவடு பட்டிடு மேருவுஞ் சலித்தது துளங்கிச்
செவிடு பட்டன வானமும் வையமுந் திசையும்.

கவடு பட்ட நான்கு தந்தங்களுடைய திக்கிலுள்ள யானைகள் இந்த ஓசை கேட்டுப் பட்டபாட்டை ஏன் சொல்வது. ஒரு யானை வடிவுடைய விநாயகப் பெருமான் திருக்கரத்துக் கொம்பினுல் குற்றிச் சுவடுகொண்ட மேருமலையும் இந்த ஓசையால் நடுங்கிச் சலித்தது. வான உலகும் திசையுலகுமே செவிடுபட்டன. 217

பானு கோபன்மற் றதுகண்டு சிறுநகை படைத்து
மான வெஞ்சிலை யொன்றினைத் தோள்கொடு வணங்கி
மேன லந்திகழ் அண்டங்கள் யாவையும் வெருவத்
தேனின் வீழ்ச்சியை மலைந்திடுங் குணத்தொலி செய்தான்.

பானுகோபன் இதனைக் கண்டு சிறியதொரு முறுவல்கொண்டு மானமிக்க கொடிய வில்லை எடுத்துத் தோள்கொண்டு வளைத்து மேம்பாடாகும் நலமுடைய அண்டங்கள் யாவும் வெருக்கொண்டு விளங்கிட தேன் சொட்டுவதையும் மாற்றிடவல்ல தன்மையால் ஓய்விலாத நிலைபெற்றிடும் வில்லோசையைச் செய்தான்;

உலத்தின் மேற்படு மொய்ம்புடை இலக்கரும் ஒருங்கே
வலத்தில் வெஞ்சிலை இடத்தினில் வடிக்கணை தொடுத்து
நிலத்தில் வந்துகார் நெடும்புனல் சிதறிய நெறிபோற்
புலத்தி யன்முறைப் பேரன்மேல் தலைத்தலை பொழிந்தார்.

மலையிலும் பார்க்க மேம்பட்ட வலியுடைய தோள்கொண்ட இலக்கம் வீரரும் ஒருங்காகச் சேர்ந்துகொண்டு வலக்கையில் கொடிய வில்லைப் பிடித்தும் இடக்கையால் வடிக்கணைகளைத் தொடுத்தும்; இந்நிலத்திலே மேகங்கள் வந்து பெருமழையைப் பொழிந்திடுகின்ற திறம்போன்று புலத்திய முனிவனின் முறையான பேரன் பானுகோபன்மேல் அம்புகளைத் தலைத்தலை பொழிந்தார்கள்; 219

தொடலை அம்புயத் திலக்கமாம் பொருநருந் தொடுத்து
விடுச ரத்தொகை அவுணன்மேல் வீற்றுவீற் றேகல்
நெடிய தெண்டிரைப் பேரியா றெண்ணில நிரந்து
புடவி கொண்டதோர் அளக்கர்மேற் போவன போலும்.

மாலையணிந்த அழகிய தோள்கொண்ட இலக்கம் வீரரும் தொடுத்து விடுகின்ற அம்பின் தொகை பானுகோபன்மேல் வரிசை வரிசையாகச் செல்லல் நீண்ட தெள்ளிய திரையுடைய பெரிய ஆறுகள் எண்ணற்றன நிரையாகச் சென்று இப்பூமியில் உள்ளதொரு சமுத்திரம் மேல் போவது போன்றது;

இலக்கம் வீரரும் விடுத்த அம்புகள் வரிசையாக வருதல் ஆறு போன்றும், பானுகோபன் நிலை கடல்போன்றும் இருந்தது. 220

இலக்கர் விட்டிடு சரமெலாம் அவுணர்கள் எவருங்
கலக்க முற்றிட வருதலுஞ் சூர்மகன் கண்டே
கொலைக்கொ டுஞ்சிலை வளைத்ததில் ஆயிர கோடி
விலக்க ருங்கணை தொடுத்தவை அறுத்தனன் விரைவில்.

இலக்கம் வீரரும் விட்டிட்ட அம்பெல்லாம் அசுரர்கள் எவரும் கலக்கம் அடையும்படி வருதலும் சூரபன்மன் மகன் பானுகோபன் அதைக்கண்டு; கொலை புரிவதற்கேற்ற கொடிய வில்லை வளைத்து அதில் ஆயிரகோடிக் கணக்கில் எவரும் தடுத்திட முடியாத அம்புகளைப் பூட்டிச் செலுத்தி இலக்கர் விடுத்துள்ள அம்புகளை அறுத்துத் தள்ளினான்; 221

அறுத்து மற்றுமோ ராயிர கோடிஅம் பதனைச்
செறுத்து விட்டிட அறுமுகன் பரிசனர் தெரிந்து
விறற்க டுங்கணை யாங்கதற் கெழுமைமால் விடுத்து
மறித்து மீண்டிடு வித்தனர் அவுணர்கோன் வாளி.

அவர்கள் விடுத்த அம்புகளை அறுத்துப் பின்னரும் ஓர் ஆயிரகோடி அம்புகளைப் பகைவர்மீது பானுகோபன் கோபத்துடன் விட்டனன்: அதனைச் சண்முகப் பெருமானின் பரிசனராகும் இலக்கம் வீரரும் தெரிந்து; வெற்றியினையும் வேகத்தையும் உடைய அம்புகள், பானுகோபன் விடுத்துள்ளதிலும் எழுமடங்கு விடுத்து அந்த அசுரர் தலைவன், பானுகோபனது அம்புகளைத் தடுத்து அறுத்து; அம்பினை விட்ட பானுகோபன் மேல் அவைகள் மீண்டு செல்லும்படி செய்திட்டனர். 222

அறந்தி றம்பிய சூர்மகன் வாளிகள் அனைத்தும்
முறிந்து மற்றவன் தன்மிசை உற்றன முழங்கிச்
செறிந்த மாமுகில் உயிர்த்திடுஞ் சீகரஞ் செல்லா
தெறிந்து கால்பொர வந்துழி மீண்டுபோம் இயல்போல்.

தருமத்தை விடுத்து நீங்கிய சூரன் மைந்தன் பானுகோபனது அம்புகள் அனைத்தும் முறிந்து மற்றும் அப்பானுகோபன் மீதே வந்தடைந்தன; எதுபோலுமெனில், முழங்கிச் செறிந்து நெருங்கிய பெருமேகம் தோற்றுவித்த மழைத்துளிகள் சென்றிடவேண்டிய இடத்தினில் சென்றிடாது மாற்றிக் காற்று மோதி அடித்திட அம்மழைநீர் வந்த இடத்திற்கே மீண்டு செல்வது போன்றது. 223

செங்க திர்ப்பகை சீறியே செயிரிலா வயிரத்
துங்க வெங்கணை அபரித மிசைமிசை துரந்து
வெங்கண் வீரர்கள் செலுத்திய சரமெலாம் விலக்கி
அங்கை யிற்கொண்ட கார்முகம் இலக்கமும் அறுத்தான்.

இதுகண்டு சூரியன் பகையான பானுகோபன் சீறிக்கோபித்துக் குற்றமிலாத வயிரத்தினலாய மேன்மையுடைய கொடிய அம்புகள் நேராக மேலும் மேலும் சென்றிடச் செலுத்தி அந்தக் கொடிய கண்ணுடைய இலக்கம் வீரரும் விடுத்துள்ள அம்புகளை விலக்கி அறுத்து. அதுமட்டன்றி அவர்களது அழகிய கையிற் பிடித்த கொடிய இலக்கம் வில்லையும் அறுத்தான். 224

பிடித்த கார்முகம் அற்றுழி மானவர் பெயர்த்துந்
தடத்த தேரிடை இருந்திடுஞ் சேமமாந் தனுக்கள்
எடுத்து வாங்கியே சரந்துரந் திரவியம் பகைஞன்
தொடுத்து மேல்விடுங் கணைகளை இடையிடை துணித்தார்.

இலக்கம் வீரரும் தமது கையில் பிடித்த வில் அறுந்தநேரத்து, மீண்டும் தமது பெருந் தேர்மேல் வைத்திருந்திட்ட துணை விற்களை எடுத்து வளைத்து அம்புகளைச் செலுத்திப் பானுகோபன் தங்கள்மேல் மீண்டும் மீண்டும் தொடுத்து விடுகின்ற அம்புகளை இடை இடையே துணித்தார்கள்; 225

சூரன் மாமகன் தொடுசரந் துணித்தபின் தூண்டுந்
தேரி லாயிரம் பரியினூ றுயிரந் தெழித்துக்
காரு லாவரு பதாகையில் ஆயிரங் கடவி
ஊரும் வன்மைசேர் வலவன்மேல் ஆயிரம் உய்த்தார்.

சூரபன்மனின் பெருமகன் பானுகோபன் தொடுத்துவிட்ட அம்புகளை இலக்கரும் அறுத்த பிற்பாடு அவனது வேகமுடன் செலுத்தப்பட்டு வரும் தேர் மேலாக ஆயிரம் அம்புகளும்; குதிரைகள் மீது இலக்கம் அம்புகளும், முழங்கிக் கொண்டு மேகங்கள் மேல் தொட்டுவரும் கொடியில் ஆயிரமும், தேரினைச் செலுத்தி ஒட்டிவருகின்ற வன்மை சேர்ந்த சாரதியின்மேல் ஆயிரம் அம்புகளுமாகச் சென்று பட்டிடச் செலுத்தினுர்கள். 226

வசையில் வீரர்கள் இவ்வகை விடுத்தலும் மனத்திற்
பசையில் சூர்மகன் இரதமும் பரிகளும் பாகும்
அசனி கொண்டதோர் துவசமும் அற்றன அதற்பின்
விசையில் வேறெரு தேரிடைப் பாய்ந்தனன் வெகுண்டு.

வசைகள் ஏதும் பெற்றிடாத இலக்கம் வீரரும் இவ்வகையாக அம்பினை விடுத்தலும் மனத்தில் இரக்கம் இல்லாத பானுகோபனின் தேரும் குதிரைகளும் சாரதியும் இடிபோன்று முழங்கிடுகின்றதொரு கொடியும் அழிந்தன. அதன் பின்னுக பானுகோபன் மிக்க கோபத்துடன் மிகு விசையுடன் வேறெரு தேர் மீது பாய்ந்தேறிக் கொண்டான். 227

வைய மேற்செலும் அவுணர்கோன் தன்சிலை வணக்கிச்
செய்ய கூர்ங்கணை நூறுநூ றுயிரஞ் செலுத்தி
ஐயன் விட்டவர் தேரொடு சிலைகளை அறுத்து
மெய்யி டந்தொறும் அழுத்தினன் எண்ணிலா விசிகம்.

வேறு தேரில் சென்று கொண்ட பானுகோபன் தனது வில்லை வளைத்துச் செப்பமுடன் கூர்மைகொண்ட அம்புகள் நூறு நூறுயிரத்தைச் செலுத்தி எமது ஐயன் குமரன் போரிட விடுத்த இலக்கம் வீரரின் தேரோடு வில்லையும் அறுத்து மீண்டும் அவர்களின் மேனி எங்கும் பட்டிடும்படியாக எண்ணற்ற அம்புகளைச் செலுத்தினுன். 228

பரிதி மாற்றலன் பகழிகள் மெய்யெலாம் பட்டுக்
குருதி சோர்தலும் இலக்கருந் தொல்வலி குறைந்து
பெரிது நோயுழந் தாற்றல ராகியே பின்னர்ப்
பொருதி றந்தனை நினைந்திலர் உடைந்துபின் போனுர்.

சூரியன் பகைவன் பானுகோபனது அம்புகள் இலக்கம் வீரரின் மேனி எல்லாம் பட்டு இரத்தம் வடிதலும் அவர்கள் முன்னைய வலிகெட்டுப் பெரிதும் துன்பம் கொண்டு போரிட ஆற்றுதவராகிப் பின்னுல் போரிடும் தன்மையை எண்ணமுடியாது நிலைகுலைந்து பின்னிட்டுச் சென்றுர்கள். 229

வற்பு றுத்திய இலக்கம்வில் லாளரும் மலைய
விற்பி டித்தவன் ஒருவனே யாரையும் வென்ருன்
முற்ப கற்புரி தவப்பயன் இஃதென மொழிமோ
கற்பி னுற்றலென் றுரைத்துமோ கழறுவ தெவையே.

இலக்கம் வீரர் என்று வீரமுடையோராக வற்புறுத்தப்பட்டுப் பேசப்படுவோராகும் இலக்கம் வில்வன்மை கொண்டோரும் கூட்டாகப் போரிடத் தனி வில்லைக் கையிலே கொண்ட ஒருவனுகும் பானுகோபனே இவர்கள் யாவரையும் வென்ருன். ஆதலின் இதனை முற்பகல் புரிந்திட்ட தவப்பயன் என்று சொல்வோமா? அன்றி அவனது போர் கற்ற கல்வியின் பயனுவது இது எனச் சொல்வோமா? இதில் எதைத்தான் யாம் கூறுவது? 230

ஆன காலையில் வீரகோ ளரியென அறையும்
மான வீரன்மற் றதுகண்டு தனதுவில் வளைத்துப்
பானு கோபன்முன் னெய்தியே பிறைமுகப் பகழி
சோனை மாரியும் விம்மித முற்றிடச் சொரிந்தான்.

அவ்வாருகிய காலையில் வீரவாகுதேவரின் எட்டுத் தம்பியரில் ஒருவரான வீரகோளரி என்று சொல்லப்பெறும் மானமுடைய வீரன் இதனைக் கண்டு தனது வில்லை வளைத்து பானுகோபன் முன்னர் சென்று பிறைபோன்று வளைந்த நுனியுடைய கணைகளை; சோனுவாரியாகும் மழையும் கண்டு விம்மிதம் அடைந்திடும் படியாகச் சொரிந்தான்; 231

சொரிந்த காலையில் அதுகண்டு சூரன்மா மதலை
சிரந்து ளக்கியே ஈங்கிவன் ஆற்றலுந் திறலும்
பெருந்த னிச்சிலை விஞ்சையும் நன்றெனப் பேசி
வரிந்த கார்முகங் குனித்தனன் பனித்தனர் வானோர்.

பிறைமுக அம்புகளை ஓய்வின்றிச் சொரிந்திட்ட காலையில் அதனைக் கண்டு கொண்ட சூரபன்மனின் பெருமைந்தன் பானுகோபன் அப்படியோ! எனத் தலையை ஆட்டி இந்த வீரனின் ஆற்றலும், திறமையும், பெரிய தனிவில்லைக் கொண்டு புரிந்திடும் வித்தையும் நன்ருயது எனப் பேசிக்கொண்டு வார்கொண்டு வரிந்திட்ட தனது வில்லை வளைத்தான். அதுகண்டு தேவர்கள் நடுங்கினர். 232

குனித்த சாபத்தின் நூறுநூ ருயிர கோடி
நுனித்த வச்சிர நொறிலுடைப் பகழிகள் நூக்கித்
தனித்து நேர்ந்தவன் விடுத்திடு சரமெலாந் தடிந்து
துனித்தி டக்கணை ஆயிரம் அழுத்தினன் தோள்மேல்.

பானுகோபன் வளைத்த வில்லில் நூறுநூருயிர கோடி எனும் கணக்கில் கூர்மையாகும் வச்சிர நுனியினை உடைய வலிகொண்ட அம்புகளை வேகமுடன் செலுத்தித் தனித்துத் தன்னுடன் போரிட வந்த வீரகோளரி விடுத்திட்ட அம்புகள் யாவற்றையும் அறுத்து; வீரகோளரி அச்சம் கொள்ளும்படி அவர் தோள்மேல் ஆயிரம் அம்புகளைச் செலுத்தினன். 233

தோளில் ஆயிரம் வெங்கணை அழுத்தலுந் தோலாக்
கோள ரித்திறற் பேரினன் கோமகன் துரந்த
வாளி யாவையும் விலக்கியே ஆங்கவன் மருமஞ்
சாள ரம்படச் செறித்தனன் ஆயிரஞ் சரங்கள்.

தோளின்மேல் ஆயிரம் கொடிய அம்புகளைச் செலுத்தலும் அஞ்சாத சிங்கத்தின் பேர்கொண்ட வீரகோளரி என்பவர் பானுகோபன் செலுத்திய அம்புகள் யாவற்றையும் தாம் அம்புகளை விடுத்து அறுத்து நீக்கி; பின்னரும் பானுகோபனது உடலம் எங்கும் சல்லடை போன்று துளைபடும்படி ஆயிரம் அம்புகளை விடுத்தார். 234

சரங்கள் ஆயிரம் அகலமேல் அழுத்தலுந் தகுவன்
இரங்கி நோயுழந் தாற்றவும் முனிவுசெய் திவனைக்
கரங்கொள் வில்லினல் வெல்லரி தாமெனக் கருதி
உரங்கொள் விண்டுவின் படைக்கலந் தனையெடுத் துய்த்தான்.

தனது மேனிமேல் ஆயிரம் அம்புகளைச் செலுத்தித் தைத்திட வைத்தலும் பானுகோபன் இரக்கமடைந்து வருத்தப்பட்டு மிகவும் கோபமடைந்தவனாய் இந்த வீரனைக் கையில் கொண்ட வில்லால் வென்றிடல் அரிதாகும் என எண்ணி வலிகொண்ட விஷ்ணுமூர்த்தியின் படையாகும் நாராயணாஸ்திரத்தை எடுத்துக் கொண்டான்; 235

நார ணன்படை ஆங்கவன் உருக்கொடு நடந்து
வீர கோளரி விடுத்திடு சரமெலாம் விழுங்கிப்
பாரும் அண்டமும் நடுக்குற இடிக்குரற் பகுவாய்க்
காரி ரிந்திட ஆர்ப்பொடு கடிதுசென் றதுவே.

அந்த நாராயணாஸ்திரமானது அங்கு நாராயணக் கடவுளின் வடிவு கொண்டு நடந்துசென்று வீரகோளரி விடுத்திட்ட அம்புகள் யாவற்றையும் விழுங்கிக் கொண்டு பூமியும் அண்டமும் நடுங்கிட இடியோசை தருகின்ற பெரு வாயுடைய மேகமும் சிதறியோடிடப் பெரும் ஆர்ப்பரிப்புடன் விரைந்து சென்றது; 236

விண்டு வின்படை அணுகலும் விறலரி யதனைக்
கண்டு மால்படை எடுக்குமுன் அப்படை கடிதாய்
வண்டு லாந்தொடை மார்பிடம் புகுந்துமன் னுயிரை
உண்ட தில்லையால் அவசமாக் கியதவ னுணர்வை.

நாராயணமூர்த்தியின் படை அணுகி வரலும் வீரகோளரி அதனைக் கண்டு தாமும் அதற்கு மாறாக விடுத்தற்குத் தமது நாராயணாஸ்திரத்தை எடுப்பதற்கு முன்பே அந்தப் படை வண்டுகள் உலவிடும் மாலைகள் அணியப்பெற்று விளங்கிடுகின்ற வீரகோளரியின் மார்பினைத் தைத்துருவி அவரது மேலான உயிரை உண்டிடாமல் உணர்ச்சிகளை மயங்கச் செய்தது. 237

அண்ணல் ஏந்திடும் வேற்படை ஆணையால் அனையான்
உண்ணி லாவுயிர் கொளவஞ்சி எருவைநீ ருண்டு
கண்ண ஞர்படை சிறிதுதன் வன்மையுங் காட்டித்
துண்ணெ னப்பின்னர் மீண்டது சூர்மகன் தன்பால்.

அண்ணலாகும் சண்முகப்பெருமான் ஏந்தியிருக்கின்ற வேற்படையின் ஆணை வலியால் அந்த வீரகோளரியின் உயிரை உண்டு இறக்கச் செய்வதற்கு அந்த நாராயணாஸ்திரம் பயங்கொண்டு; வீரகோளரியின் இரத்தத்தை மட்டும் உண்டு, நாராயணாஸ்திரம் சிறிது தனது வலிமையையும் காண்பித்து விரைவுடனுகப் பானுகோபன் பக்கராக மீண்டு கொண்டது; 238

மீண்ட காலையில் வீரகோ ளரிஅவண் வீழ்ந்து
மாண்டு ளான்என மயங்கினன் அங்கது வயமார்த்
தாண்டன் என்பவன் கண்டுதன் தனிச்சிலை குனித்து
மூண்ட செற்றமொ டனுகினன் கதிர்ப்பகை முன்னர்.

நாராயணாஸ்திரம் மீண்டுகொண்ட நேரத்தில் வீரகோளரி என்பவர் அவ்விடத்து வீழ்ந்து இறந்துள்ளார் போன்று மயங்கிக் கிடந்தனர். அது கண்டு அவரின் துணைவராகும் வீரமார்த்தாண்டர் என்பவர் தனது வில்லை வளைத்துக் கொண்டு மனதில் மூண்டிடுகின்ற கோபத்துடன் பானுகோபன் முன்பு போரிட வருவாராயினர்.
239

ஓங்கல் வாகுடை வீரன்நேர்ந் திடுமுன்ஒண் கையில்
தாங்கும் வில்லினை அவுணனே ராயிரஞ் சரத்தால்
ஆங்க னந்துணித் தாயிரங் கணைநுதல் அழுத்த
ஏங்கி னர்சுரர் அனையன்வே றொருசிலை எடுத்தான்.

மலைபோலும் வலியுடைய தோள்கொண்ட வீரமார்த்தாண்டர் அங்கு பானுகோபன் முன்பு நேரிட்டு வர முன்னமே அவரது அழகிய கையில் பிடித்த வில்லினைப் பானுகோபன் ஓராயிரம் அம்பினை விடுத்து அப்படியே துணித்து வீழ்த்தி; அவரின் நெற்றியில் புகும்படி பின்னரும் ஆயிரம் அம்புகளை விடுத்தலும் அதுகண்டு தேவர்கள் ஏங்கினார்கள். தனது வில் முறிந்திடலும் வீரமார்த்தாண்டர் வேறொரு வில் எடுத்தார்.
240

எடுத்த கார்முகம் வாங்குமுன் இரவியம் பகைஞன்
தொடுத்து நூறுகோல் அதனையும் ஓரிரு துணியாப்
படுத்தொ ராயிரம் பகழியால் தேரோடும் பரியை
முடித்து வாளியோ ரேழுநூ றுய்த்தனன் மொய்ம்பில்.

பின்னராகவும் எடுத்துக்கொண்ட வில்லை வீரமார்த்தாண்டர் வளைக்கு முன்பாகப் பானுகோபன் நூறு அம்புகளை வில்லில் தொடுத்து விடுத்து அந்த ஒரு வில்லையும் இரண்டு துண்டாக்கி முறித்து; அவருடைய தேருடன் குதிரையை ஆயிரம் அம்பினை விடுத்து அழித்து முடிவாக்கி; பின்னர் எழுநூறு அம்புகளை அவரின் தோள்மேல் படும்படி விடுத்தான்.
241

தேர ழிந்திடச் சிலையதும் அழிந்திடத் திறல்சேர்
பேர ழிந்திடத் தனிமையாய் நின்றவன் பிரியா
ஊர ழிந்திட வறியனும் பரிதிபோல் உற்றான்
கார ழிந்திட ஆர்த்தனன் கிளர்ந்தெழுங் கதத்தான்.

தேரும் அழிந்திட; வில்லும் முறிந்திட; வலிமையாய வீரமார்த்தாண்டன் என்னும் பேரும் அழிந்திட; தன்னந்தனியாக வீரமார்த்தாண்டன் நின்றனன். அவரின் நிலையாயது தான் பிரியாது வாழ்ந்திடும் ஊரானது அழிந்திட அவ்வேளை தனித்து வறியவனாகும் சூரியன் போன்று நின்றனன். அதுகண்டு மேலெழும் மதத்துடன் பானுகோபன், மிக்க மேகங்களும் தமது ஓசை கெடும்படி ஆர்ப்பரித்தனன். 242

பராக மாப்புவி அகழ்ந்திடு பணைமருப் பிரட்டை
வராக மாயிரத் தாற்றல்பெற் றுடையசூர் மகன்மேல்
விராக நெஞ்சுடை விறற்கதிர் பாய்ந்தனன் விண்மேல்
இராகு வின்மிசைத் தினகரன் வாவினா னென்ன.

அதுகண்டு பரந்த பூமியை அகழ்ந்து சென்றிடும் விஷ்ணுவாகும் இரட்டைக் கொம்புடைய பன்றியின் ஆயிரம் மடங்கு ஆற்றல் பெற்றுடைய பானுகோபன் மீது கோபமிகுதியால் தனித்து நின்ற வீரமார்த்தாண்டன் பாய்ந்தான்; எதுபோலுமெனில், வானமீதில் நின்றிடும் இராகுவின் மீது சூரியன் பாய்ந்து பற்றினாற் போன்று இருந்தது. 243

பாய்ந்து திண்டிறல் வெய்யவன் வெய்யவன் பகைஞன்
ஏந்து வார்சிலை பறித்திரு துணிபடுத் தெறிய
வேந்தன் மாமகன் வெகுண்டுதன் மருங்கிடை விசித்த
நாந்த கம்முரீஇக் குற்றினன் மருமத்தின் நடுவண்.

அவ்வணம் பாய்ந்த வீரமார்த்தாண்டன் வலிகொண்ட வீரன் பானுகோபன் கையில் பற்றிய வார்பூட்டிய வில்லைப் பறித்து, இரு துணியாக முறித்தெறிதலும் அவ்வேளை சூரபன்மன் பெருமகன் பானுகோபன் கோபித்துத் தனது அரையின் பட்டிகை உறையில் செருகிய வாளை உருவி வீரமார்த்தாண்டன் நெஞ்சின் நடுவிலே விறுக்கெனக் குற்றினான். 244

வீர வெய்யவன் உரமிசைச் செலுத்திய வெங்கட்
கூரும் வாட்படை வாங்குமுன் ஆங்கவன் குருதி
சூரி யன்பகை அகலம்வந் துற்றது தூயோன்
தாரை வாளொன்று மாறுபோய்க் குற்றிய தகவின்.

வீரமார்த்தாண்டன் நெஞ்சின் மீது பானுகோபன் குற்றிய கொடுமையாகும் கூரிய வாள்ப்படையை மீள இழுத்து எடுக்குமுன் வீரமார்த்தாண்டனுடைய நெஞ்சின் மீதினின்றும் பீறிட்டுச் சீறிப் பாய்ந்த இரத்தம் பானுகோபன் நெஞ்சிலும் போய்ப் பட்டுக்கொள்வது எப்படி இருப்பதெனில், தூய வீரமார்த்தாண்டனும் பதிலுக்குத் தானுமொரு வாளைச் செலுத்தியிட அதுபோய் பானுகோபன் நெஞ்சினைக் குற்றுவது போன்றிருந்தது. 245

குற்றி வாங்குமுன் வீரமார்த் தாண்டனுங் கொதித்துக்
கற்றை வெஞ்சுடர்ச் சுரிகையை மருங்குறை கழித்து
மற்ற வன்மணி மார்பத்து வயிரவான் கவசம்
இற்றி டும்படி குற்றினன் யாவரும் இரங்க.

பானுகோபன் தனது வாளால் வீரமார்த்தாண்டன் நெஞ்சில் குற்றி இழுக்குமுன் வீரமார்த்தாண்டனும் கோபத்தால் கொதித்தெழுந்து மிகுந்த கூர்மையாகும் ஒளியுடைய தனது வாளை அரையின் உறையில் நின்றும் உருவி எடுத்துப் பானுகோபனது அழகிய நெஞ்சின்மீது அணியப் பெற்றிருந்த வயிரத்தாலாகிய உயர்வுடையதொரு கவசம் நொருங்கிடக் குற்றினார்; இந்தக் குத்தின் இயல்பைக் கண்டோர் யாவரும் கலக்கமடைந்திட்டனர்; 246

கிளைத்தி டுந்திறல் வெய்யவன் குற்றலுங் கேடு
விளைத்த சூர்மகன் தன்னுடைச் சுரிகையால் மீட்டும்
குளத்தில் மூழ்குறக் குற்றினன் அன்னதோர் குற்றிற்
களைத்து வீழ்ந்தனன் கால்பொர மறிந்தகற் பகம்போல்.

விரிவாகிய வலிமையுடைய வீரமார்த்தாண்டன் குற்றுதலும்; கேட்டினையே எங்கும் விளைவிக்கவல்ல பானுகோபன் தனது கைவாளால் வீரமார்த்தாண்டன் நெஞ்சில் மறுகாலும் ஊடுருவும்படி குற்றினான். அந்த ஒரு குற்றுடன் வீரமார்த்தாண்டர் களைப்புற்றுக் கீழே சரிந்து வீழ்ந்தனர். எதுபோலுமெனில் காற்று வீசி அடித்திட, அதனாற் சரிந்து வீழ்ந்திடும் கற்பக மரம் போன்று. 247

தாழ்ந்த சோரியும் அலக்கணும் பெருகுறத் தடந்தேர்
வீழ்ந்த வன்றனை விளிந்தனன் இவனென விடுத்துத்
தாழ்ந்த தோர்பெருந் தனுவினை எடுத்துழி தன்னிற்
சூழ்ந்த தானையோ டேற்றனன் சூரியன் பகைஞன்.

பானுகோபன் இருமுறை சுழல்வாளால் குற்றிட நெஞ்சில் வழிந்து பாய்ந்திடும் இரத்தமும் பெருகிட, துயர வேதனையும் மிகுந்திடப் பானுகோபனது பெரும் தேரின் மீது வீழ்ந்த வீரமார்த்தாண்டனைப் பானுகோபன் பார்த்து இறந்தான் இவன் என எண்ணி விடுத்து, முன்னர் முறிந்த வில்லை விடுத்து, வேறொரு வில்லைக் கையில் எடுத்த உடனேயே தன்னைச் சூழ்ந்துள்ள படைகளுடன் மீண்டும் பகைவருடன் எதிர்ந்து போரிடப் பானுகோபன் சென்றனன். 248

ஏற்று நேர்வரு சூரன்மா மதலையை எதிர்ந்து
போற்ற லார்புகழ் வீரராக் கதன்எனும் பொருநன்
காற்றின் வந்தனன் துணைவர்கள் தொலைந்ததுங் கண்டான்
சீற்றம் உள்ளுற நிமிர்ந்தெழக் குனித்தனன் சிலையை.

எதிர்ந்து போரிடும்படி வருகின்ற சூரன்பன்மன் பெருமகன் பானுகோபனைத் தடுத்தெதிர்துப் பகைவர் பலரும் புகழ்கின்ற வீரராக்கதன் என்னும் வீரர்; காற்று வேகத்துடன் வந்ததுபோன்று வருபவர் தனது தம்பிமார் தொலைந்து போன தன்மையையும் கண்டு, கோபம் உள்ளே பொங்கி எழுந்திடத் தனது வில்லை வளைத்தான்.
249

சிலைகு னித்தொரு பத்துநூ றயிற்கணை தெரிந்தே
ஒலியு டைக்கழற் சூரன்மா மதலைமே லுய்ப்ப
விலகி யத்தொகைப் பகழியால் நம்பிதன் வியன்தேர்
வலவ னைத்தலை துணித்தனன் வாளிநூ றதனால்.

வீரராக்கதன் வில்லை வளைத்து அதில் கூரிய ஆயிரம் அம்புகளைத் தெரிந்து தொடுத்து ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த காலுடைய சூரபன்பனின் பெருமகனும் பானுகோபன் மேல் செலுத்தலும்; அவற்றை அவன் ஆயிரம் அம்புகளால் அறுத்து நீக்கிப் பின்னர் நூறு அம்புகளை விடுத்து வீரராக்கதனுடைய அழகிய தேரைச் செலுத்துகின்ற சாரதியின் தலையினை அறுத்துத் தள்ளினன்.

நூறு வாளியாற் சூதன்மாண் டிடுதலும் நொடிப்பில்
வேறோர் பாகனை வீரராக் கதன்நிறீஇ வெகுளா
ஆறு மாமுகன் அடிநினைந் தாயிரங் கணையால்
கூறு செய்தனன் அவுணர்கோன் குருமணி மகுடம்.

நூறு அம்புகளால் தனது சாரதி மாண்டுபோதலும், அதுகண்டு வீரராக்கதர் நொடிப்பொழுதில் வேறொரு சாரதியை அமைத்துக்கொண்டு மிகுகோபம் பெருகிட ஆறுமுகமுடைய பெருமான் திருவடிகளை நினைந்து துதித்து ஆயிரம் அம்புகளை விடுத்துப் பானுகோபனின் அழகிய இரத்தின முடியை உடைத்தெறிந்தார். 251

உவமை நீங்கிய ஐவகைத் தாயவேற் றுருவின்
மவுலி இற்றிடத் திருவின்றி மன்றநாண் எய்தி
அவதி இல்லதோர் பெருஞ்சினம் மூண்டெழ அவுணன்
குவடி லாமணிக் குன்றுபோல் நின்றனன் குறுகி.

உவமை காண்பரியதாய ஐந்துவகையாகச் சிறந்து சொல்லப்பெறும், செய்யும் தொழில்கள் யாவும் நிறையப்பெற்ற குருமணி மகுடம் அழிந்திடலும், பானுகோபன் அழகு நீங்கியவனாய் மிகவும் வெட்கமடைந்து உள்ளத்து அளவு கடந்ததொரு பெருஞ்சினம் மூண்டு எழ அங்கு முடியிலாத ஒரு மொட்டை மலை போன்று நின்றனன். 252

மணியி ழந்திடும் அரவுபோல் கதிரிலா வான்போல்
பணையி ழந்திடுங் கற்பகப் பழுமரந் தனைப்போல்
துணைம ருப்பினை இழந்திடுந் தந்திபோல் தொல்லை
அணியி ழந்திடு மகளிர்போல் அழகிலன் ஆனான்.

இவ்வாறு முடியிழந்து நின்றிடும் பானுகோபன்; இரத்தினத்தை இழந்த நாகம்போன்றும்; சூரியனில்லாத வானம் போன்றும்; கிளைகளை இழந்து நின்றிடும் பருத்த கற்பக விருட்சம் போன்றும்; துணையாகிய இரட்டைக் கொம்பினையும் இழந்த யானை போன்றும்; பழையதாகும் நகைகளை இழந்துள்ள பெண்கள் போன்றும் அழகற்றவனாய்க் காணப்பட்டான். 253

இற்றெ ழிந்திடு மகுடநீத் தேவலர் அளித்த
கற்றை ஒண்சுடர் மவுலியொன் றினைமுடி கவித்து
வெற்றி வீரராக் கதன்விடு சரமெலாம் விலக்கி
மற்ற வன்சிலை துணித்தனன் வாளியா யிரத்தால்.

பானுகோபன் இப்போது நொருங்கி உடைந்துபோய தனது முடியை நீக்கித் தனது ஏவலாளர் உடனேடிக் கொணர்ந்த வேறொரு முடியினை அணிந்து; பின்னர் வெற்றியாகிய வீரராக்கதன் விடுத்திட்ட அம்பெல்லாம் நீக்கி அறுத்து, ஆயிரம் அம்பினைப் பின்னர் விடுத்து வீரராக்கதனுடைய வில்லை முறித்தான்.

ஆடல் வெஞ்சிலை அறுத்தலும் வயமுடை அரக்கன்
நாடி ஓர்தனு எடுக்குமுன் நாகிளங் கதிரை
வீட ருந்தளை இட்டவன் விசிகமா யிரத்தால்
பாடு செய்தனன் அனையவன் தனதுதேர்ப் பரியை.

போருக்கேற்றதொரு கொடுஞ் சிலையானது அறுத்திடப்படலும் வெற்றியுடைய வீரராக்கதன் வேறொரு வில் எடுக்குமுன்பே; பாலசூரியனை நீக்கிடற்கரிய கொடிய சிறைவைத்த பானுகோபன் ஆயிரம் அம்புகளை விடுத்து வீரராக்கதனின் தேர்க்குதிரைகளை அழிவு செய்தான். 255

மாய்ந்து மாத்தொகை படுதலும் வீரனேர் மணித்தேர்
பாய்ந்த காலையில் இரவிமாற் றலனவன் பாணி
ஏந்து வில்லினை ஆயிரம் பகழியால் இறுப்ப
வேந்தன் மாமகன் தன்மிசை அயிலொன்று விடுத்தான்.

தேர்க்குதிரைகள் யாவும் மாய்ந்திடலும் வீரராக்கதர் இன்னுமோர் அழகிய தேரிற் பாய்ந்து ஏறிய காலையில் பானுகோபன், வீரராக்கதர் கையிற் பிடித்த வில்லை ஆயிரம் அம்பினைச் செலுத்தி அறுத்துவிட; அதுவேளை வீரராக்கதர் விரைவுடன் சூரபன்மன் பெருமகன் பானுகோபன்மீது கூரிய வேல் ஒன்றினை விட்டெறிந்தார். 256

விடுத்த வேலினை நூறுகோல் தொடுத்தவன் வீட்டத்
திடத்தின் மேற்படு வீரராக் கதனது தெரிந்து
தடத்த தேரினும் இழிந்தறை கூவியே தனிபோய்
எடுத்தெ றிந்தனன் பானுகோ பன்தனி இரதம்.

வீரராக்கதர் விடுத்த வேலினைப் பானுகோபன் நூறு அம்பினைத் தொடுத்து விட்டு அறுப்ப; அதுவேளை திடமாகிய உள்ளத்தில் மேம்பட்ட வீரராக்கதன் அதனைக் கண்ணுற்று விசாலித்த தனது தேரினின்றும் கீழே குதித்து அறைகூவியவாறு தனியே பானுகோபன் முன்போய் அவனுடைய தேரினைக் கையால் தூக்கி வானிலே எறிந்தான். 257

எறியும் எல்லையில் தகுவர்தங் குரிசில்விண் ணெழுந்து
வெறிகொள் பங்கயத் தண்ணல்முன் கொடுத்ததோர் வேலைச்
செறுநன் ஆவியை உண்கென விடுத்தலுஞ் சென்று
விறல ரக்கன்மேற் பட்டதங் கவனும் வீழ்ந்தான்.

தேருடன் பானுகோபனை வீரராக்கதர் எறிகின்ற எல்லையில் அசுரர் தலைவனை பானுகோபன் வானில் எழுந்து சென்று, தேனிருக்கும் தாமரை மலரில் ஆசனம் கொண்ட பிரமதேவர் தனக்கு முன் கொடுத்ததொரு வேலை எடுத்து, "வேலே! நீ சென்று என் பகைவன் உயிரை உண்பாயாக" என விடுத்தலும், அந்த வேல் சென்று வீரராக்கதன் மேல் பட்டது. வீரராக்கதனும் வேல் பட்டுச் சாய்ந்து பூமியில் வீழ்ந்தான். 258

தரையில் வீழ்ந்திடும் வீரராக் கதன்நனி தளர்ந்தான்
முருகன் ஆணையாற் போந்தில தவனுயிர் முன்னம்
இரவி யம்பகை திகிரியின் மறிந்துளான் எழுந்து
பொருதல் வன்மையின் ருகியே இடைந்துபின் போனுன்.

பூமியில் வீழ்ந்த வீரராக்கதர் மிகவும் தளர்ச்சி அடைந்தார். இறந்திருப்பார் ஆனல், முருகக் கடவுளின் நல்லருளாய ஆணையால் அவரது உயிர் நீங்கவில்லை. இது நிற்க; முன்னர் பானுகோபன் குற்ற, அவன் தேரில் வீழ்ந்த வீரமார்த்தாண்டன் களைநீங்கி எழுந்து போரிட வன்மை இல்லாதவனுய் அப்பால் போயினுன். 259

போன காலையில் வேறெரு தேரிடைப் புகுந்து
பானு மாற்றலன் வணக்கியோர் கார்முகம் பற்றி
ஊனும் ஆவியுங் கவர்ந்திடு சரமழை ஓச்சி
ஏனை வீரர்கள் தம்மையும் வெல்லுமா றெதிர்ந்தான்.

வீரமார்த்தாண்டனும் போனகாலையில் பானுகோபன் வேறெரு தேர்மீது ஏறித் தனது ஒப்பற்ற ஒரு வில்லை வளைத்து, யாவருடைய ஊனையும் உயிரையும் கவர்ந்தழித்திடும் கொடுமையாகும் அம்பாகிய மழையைச் சொரிந்து, மற்றும் தோற்றவர் போக மிகுதியாக நின்ற வீரர்களையும் வெல்லும்படியாக எண்ணமாகி எதிரிட்டு வந்தான். 260

வீர வந்தகன் வீரமா மகேச்சுரன் வீர
தீரன் வீரமா மகேந்திரன் திறற்புரந் தரனும்
நேரி லதார்இவர் ஐவருஞ் சிலைகொடு நேர்ந்து
சூரி யன்பகை வன்மிசைக் கணைமழை சொரிந்தார்.

இவ்வாறு எதிர்ந்து வரும் பானுகோபனை; வீரவந்தகன், வீரமாமகேச்சுரன், வீரதீரன், வீரமாமகேந்திரன், வலிமிக்க வீரபுரந்தரன் ஆகிய நேரொருவர் பிறிது இல்லாத ஐவரும் திரண்டு வில்லைப் பிடித்து வந்து அம்பினைச் சொரிந்து, பானுகோபனை எதிர்த்து மாறு போரிட்டனர். 261

சொரிந்து வேறுவே றளவையி லாதபோர்த் தொழிலைப்
புரிந்து பின்னுறச் சூர்மகன் சரங்கள்மெய் புதைய
வருந்தி நின்றனர் இருவர்கள் மறிந்தனர் ஒருவர்
இரிந்து தேர்சிலை அழிந்துநொந் தேகினர் இருவர்.

இவ்வண்ணம் அம்பினைச் சொரிந்து வேறு வேறாகும் தந்திர முறையால் அளவிறந்த போர்த்தொழில்களைப் புரிந்து, பின்னர் சூழ்ச்சியால் சூரபன்மன் மகன் பானுகோபன் விடுத்த அம்புகள் தம்மீது பட்டு ஊடுருவித் தைத்திடுதலால், சகிக்கமுடியாதவராய் இரண்டுபேர் வருந்தி நின்றனர். ஒருவர் மயங்கி வீழ்ந்தார். தேர் அழிந்து, வில் முரிந்து, மனம் நொந்து பின்னிட்டு இருவர் ஓடிப் போயினர். 262

வேறு

சாற்றும் இத்திறம் வீரர்கள் யாரையுந் தனிமைந்தன்
வீற்று வீற்றமர் ஆடியே வென்றிகொண் டிடும்வேலை
ஆற்ற லின்றிமுன் பின்றிய அவுணர்தா னைகள்முற்றும்
நாற்றி சைக்கணும் வந்துவந் தவனை நண் ணியவன்றே.

சொல்லப்பெறும் இம்முறையால் இந்த இலக்கத்தெட்டு வீரரையும் தனி ஒருவனாகும் பானுகோபன் வேறுவேறு முறைமுறை போராடியே வெற்றிகொண்டிடும் வேளையில், முன்னர் போரிட வலியின்றிப் பின்னிட்டோடிய அசுரச் சேனைகள் யாவும் நாலு திக்கிலும் நின்றும் இப்பொழுது வந்துவந்து பானுகோபனைக் கூடிக்கொண்டன. 263

பின்று சேனைகள் யாவையுந் தன்னயற் பெயர்த்தும்வந்
தொன்ற வேயிர வியம்பகை வருதலும் உதுகண்டான்
நன்று நன்றிவன் ஆற்றலின் திறமென நகைசெய்தான்
என்று நந்திதன் கணத்தரில் தலைமைபெற் றிருக்கின்றான்.

பின்னிட்டு முன் ஓடிய தனது அசுரச் சேனைகள் யாவையும் மீண்டும் வந்து கூடிக்கொள்ளலும்; அவருடன் சூரியன் பகையாகிய பானுகோபன் வருதலும் அதனைக் கண்டார்; நன்று நன்று இந்தப் பானுகோபனுடைய திறமை எனச் சிரித்தார்; யாரென்றால், எக்காலமுமே நந்தியம்பெருமான் கணத்தவரில் தலைமையோடும் பொருந்தி இருக்கின்ற வீரவாகுதேவர். 264

வாகை மொய்ம்புடை மேலையோன் மாலயன் தனக்கெட்டா
ஏக நாயகன் திருமகன் தாளிணை இனிதுன்னி
ஓகை யால்நனி வழுத்தியே போர்த்தொழில் உளங்கொண்டு
சேகு நெஞ்சுடைப் பானுகோ பன்முனஞ் செலலுற்றான்.

வெற்றிதரும் தோளிணைகளைக் கொண்ட வீரவாகுதேவர் இப்பால் நாராயணன், பிரமன் ஆகிய இருவக்கும் எட்டொணாது நின்ற ஏகநாயகராகும் சிவபிரான் திருக்குமரனின் திருவடி மலர்களை இனிதே தியானித்து, மகிழ்வால் நன்றாக வாழ்த்தி வணங்கிப் பின்னர் போர்த்தொழில் செய்திட உள்ளங் கொண்டவராய்; வஞ்சனை உடைய நெஞ்சினைப் பொருந்திய பானுகோபன் முன்பாகப் போவாராயினர்.
265

அரியும் நான்முகத் தொருவனுங் குனித்திட அறத்தேவுஞ்
சுருதி மாமறைத் தொகுதியுங் குனித்திடச் சுரர்கோவும்
இரவி அண்ணலும் மதியமுங் குனித்திட இகலாடல்
திருவும் மோடியுங் குனித்திடக் குனித்தனன் சிலைதன்னை.

பானுகோபன் முன்பு போந்திட்ட வீரவாகுதேவர் தமது வில்லை எடுத்து; விஷ்ணுவும், நான்குமுகமுடைய ஒருவனுகும் பிரமனும் கூத்தாடவும்; தரும தேவதையும் சுருதிகளாய வேதத்தொகுதியும் கூத்தாடவும், தேவ அரசுன இந்திரனும், சூரிய பகவானும், சந்திரதேவனும் கூத்தாடவும்; போராடற்குரிய வீர இலக்குமியும், துர்க்காதேவியும் கூத்தாடவும்; அவ்வில்லை வளைத்திட்டார்.

இப்போரனது தருமத்தை நிலைநாட்ட நிகழ்வது ஆனதினல் வீரவாகு தேவர் வில் வளைத்தலும், தருமத்தையே நிலைபெறச் செய்யும் கடவுளர் யாவரும் களிகூர்ந்து மகிழ்ந்து ஆடினர்கள். 266

விசையெ டுத்திடும் ஊதையும் வடவையும் வெருக்கொண்டு
வசையெ டுத்திட அளக்கருந் தம்மொலி வறிதாகத்
திசையெ டுத்திடும் அண்டமும் புவனமுஞ் சிதைந்தேமா
றிசையெ டுத்திட எடுத்தனன் சிலையின்நாண் இசைதன்னை.

வீரவாகுதேவர் வளைத்த வில்லில் நின்றும் விசைகொண்டு விளங்கிடுகின்ற ஊழிக்காற்றும், வடவையாகும் நெருப்பும் வலிகெட்டு வசை பெற்றிட; சமுத்திரமும் தனது ஓசை குன்றிட; திசை எங்கும் நிற்புறுகின்ற அண்டங்களும் உலகுகளும் இந்த நாணேசையால் இடிந்து சிதைவுற்றுப் போவதால் எழுகின்ற ஓசை பெருகிட, நாணினைச் சுண்டிப் பெரும் வில்லின் நாணின் ஓசையை எடுத்தார். 267

நாணெ லிக்கொடு வெஞ்சமர் புரியமேல் நடப்பானைக்
காண லுற்றனன் தினகரற் சினவிய கதக்கண்ணன்
ஏனு டைப்பெருங் கார்முகம் ஒன்றுவே றெடுத்திட்டான்
சேணி லத்தவர் பனித்திடக் குனித்தொலி செய்திட்டான்.

தனது வில்லில் நாணின் ஓசையைச் செய்துகொண்டு கொடிய போரினைப் புரியும்படி தேர்மேலாகி நேரிட்டு வருகின்ற வீரவாகுதேவரை; சூரிய பகவானைக் கோபித்துச் சிறைவைத்த உக்கிரமான பார்வை பொருந்திய கண்ணுடைய பானுகோபன் கண்டுகொள்கின்ருன்; உடனேதானும் வலிமை மிக்க வேருெரு வில்லை எடுத்துக்கொண்டு, அவ்வில்லை வளைத்து மேலுலக வாசிகளாகும் தேவர்கள் பயத்தால் நடுங்கிட நாணேசை செய்தான்; 268

முன்பு திண்டிறல் வாகுவின் வாகுவின் முழக்கத்தை
அன்பின் நாடிய அமரர்கள் அளவைதீர் மகிழ்வெய்திப்
பின்பு சூர்மகன் சிலையொலி கேட்டலும் பேதுற்றே
இன்ப துன்பங்கள் ஒருவழிக் கண்டனம் இவணென்றுர்.

முன்னரே திண்மை குன்றாத வீரமுடைய வீரவாகுதேவரின் வில் நாணின் முழக்கத்தை அன்புடன் நாடிக் கேட்டு அளவுகடந்த மகிழ்வால் கூத்தாடிய தேவர்கள் யாவரும் பின்னால் பானுகோபனின் நாணொசை கேட்டலும் பேதுற்றுக் கலக்கங்கொண்டு, ''ஓகோ! இன்ப துன்பங்கள் இரண்டினையும் இப்பொழுதே ஒரே இடத்தில் கண்டு கொண்டோம்'' என்றனர்.

இரண்டு பேருடைய வில்லோசை முழக்கமும் ஒன்று போலத்தான்: ஆனால், ஒன்று மகிழ்வாகியது, மற்றையது துன்பாயது. தீயவன், நல்லவன் செயல் ஒன்றாயினும் உலகிற்கு அவை வேறு விதமாகும். 269

புகழ்ச்சி மேலவன் குணத்தொலி செவிக்கொடு பொலிந்தோர்கள்
இகழ்ச்சி மிக்கவன் குணத்திசை கேட்டலும் இரங்குற்றார்
திகழ்ச்சி ஆரமு துண்டவர் நஞ்சமுண் செயல்போன்றார்
மகிழ்ச்சி ஈற்றினில் துன்புவந் தடைவதோர் வழக்கன்றே.

அருளால் அனைவரையும் வாழவைக்கும் புகழ்ச்சியில் மேம்பட்ட வீரவாகு தேவரின் நாணொசையினைக் காதில் கேட்டு மலர்ந்துள்ள தேவர்கள், எவர்க்குமே துயரம் செய்கின்ற இகழ்ச்சியில் மிக்குள்ள பானுகோபன் நாணொசை கேட்டலும் இரங்கி உளம் வருந்தினார்கள்; இவர்கள் திகழவைக்கும் அரிய அமுதை உண்டோர்கள் நஞ்சினையும் உண்கின்ற செயல்போன்றார்கள். இதை நோக்குங்கால், மகிழ்ச்சி முடிவில் துன்பம் வந்து அடைவது வழக்கமல்லவோ என்பது உண்மை போலும். 270

மாயன் நான்முகன் மகபதி முதலிய வானோர்கள்
காயம் யாவினும் நிரத்தனர் அமர்த்தொழில் காண்பாராய்
ஆய போழ்தினிற் சூரபன் மாவருள் அசுரேசன்
தூய வன்தனை நோக்கியே இனையன சொல்கின்றான்.

இந்நிலையாக வில்லோசை கேட்டலும் இவர்களது போர்ச் செயலைக் காண விரும்பி வானம் நிறைய நாராயணக் கடவுள், நான்குமுகமுடைய பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும் வந்து நெருங்கினார்கள். அவ்வாறாகிய நேரத்தில், சூரபன்மன் பெற்றெடுத்த அசுராதிபனான பானுகோபன் தூயவராகும் வீரவாகுதேவரை நோக்கிய இதனைச் சொல்கின்றான். 271

கோதை வேலினால் தாரகன் தனையடு குகன்அல்லை
ஆதி ஏனமாய்ப் புவியினைக் கிளைத்திடும அரியல்லை
வேத நான்முகத் தவன்அல்லை விண்ணுளோர் வேந்தல்லை
தூத னாகிய நீகொல்என் னெதிர்பொருந் தொழில்வல்லாய்.

வீரனே! உன்னை நோக்குங்கால் மாலையணிந்த, வேலினால் தாரகாசுரனைச் சங்கரித்த குமரன் அல்ல; ஆதியில் பன்றி வடிவங்கொண்டு பூமியைக் கிழித்துச் சென்ற நாராயணக் கடவுளும் அல்ல; வேதமோதும் நான்முகக் கடவுளும் அல்ல; தேவர்களின் அரசன் இந்திரனும் அல்ல; இந்த நகரில் தூதனாக முன் வந்த நீயோ என்னோடு எதிரிட்டு இப்போது போரிடுகின்ற தொழிலில் வல்லமை கொண்டாய். 272

இழைத்த மாயையால் முற்பகற் போந்தனை எங்கோன்முன்
பழித்தி றஞ்சில கூறினை இளவலைப் படுத்திட்டாய்
அழித்தி மாநாகர் யானஃ துணர்ந்திலன் அதனாலே
பிழைத்தி அன்றெனின் உய்ந்திவண் வந்திடப் பெறுவாயோ.

நீ செய்து கொண்ட மாயையால் என் தந்தை முன்பு நேற்றுப் பகல் பொழுது வந்தாய்; அவர் முன் சில பழியான வார்த்தையைக் கூறினாய்; எனது தம்பியைக் கொன்று விட்டாய்; எமது நகரத்தை அழித்தாய்; யான் அதனை எல்லாவற்றையும் அப்போது அறிந்திலேன். அவணம் தற்செயலாக எனக்குத் தெரிந்திருந்தால் நீ இன்று இவ்விடம் தப்பித்தவறி வந்திருப்பாயோ

பொருது வென்றிகொண் டுனதுயிர் நடுவனூர் புகுவிப்பன்
சரதம் இங்கிது பிறந்திடும் அளவையில் தழல்காலும்
பரிதி யைச்சிறை பிணித்தவன் ஒற்றனைப் படுத்தானென்
றொருத னிப்பழி கொள்வதல் லாற்புகழ் உறுவேனே.

உன்னுடன் யான் இப்பொழுது போரிட்டு வெற்றிகொண்டு உனது உயிரை இயமனுடைய ஊருக்கு அனுப்பி வைப்பேன் இது உண்மையாகும். ஆனால் உன்னை யான் வென்றேன் என்றும் சொல். பலருக்கும் தெரிகின்ற அளவில், வெப்பத்தைக் காலுகின்ற சூரியனைச் சிறைசெய்து வைத்த வீரனான பானுகோபன், கேவலம் ஒரு தூதுவனையா கொன்றான்? இதுவா இவன் பெருமை எனப் பலரும் சொல்லப்போகின்ற ஒரு தனியான பழியை நான் கொள்வதல்லாமல் உன்னை வெல்வதால் புகழும் பெறுவேனே என்றான பானுகோபன். 274

முனைமு டித்தநின் துணைவரை வென்றனன் முரட்பூதந்
தனைய டர்த்தனன் சிந்தினன் அனிகமுந் தனிநேர்ந்த
உனைமு டிக்குவன் உனைவிடுத் தோனையும் உலைவித்தென்
சினமு டிக்குவன் மகபதி தன்னையுஞ் சிறைசெய்வேன்.

பல போரில் வெற்றிகொண்டு விளங்கிய உனது தம்பிமாரை யான் வென்றனன்; வலிமையாகும் பூதத்தலைவரை அழித்தேன். பூத சேனைகளைச் சிதறிப் போயிடச்செய்தேன். தனியாக என்னுடன் நேரிட்டுப் போரிட வந்த உன்னையும் முடிப்பேன். இஃதன்றி, உன்னைப் போரிட இங்கு விடுத்த அந்த முருகனையும் உலையச் செய்து என் பெரிய கோபத்தைத் தீர்த்துக் கொள்வேன். இவை மட்டுமன்றி அந்த இந்திரனையும் சிறைசெய்வேன் என்றான் பானுகோபன். 275

என்ற காலையில் வீரவா கியம்புவான் எவரேனுஞ்
சென்று போர்புரி வார்தமை வெல்வதே திறலாகும்
பின்று வார்தமை அடுவதே வசையலால் பிறிதுண்டோ
வென்றி எய்துவார் உரைப்பரோ போர்புரி விரைந்தென்றான்.

என்று பானுகோபன் கூறிமுடித்த காலையில் அதனைக் கேட்ட வீரவாகு தேவர் சொல்கின்றார். பானுகோபனே! கேள். என்னை வெல்வதும் வசையாகும் என்று நீ பேசினாய், நல்லது. ஆனால், எவராக இருந்தாலும் போரிட வேண்டி வந்தால் அவருடன் போரிட்டு வெல்வதே வீரமாகும், அதுவன்றிப்

பின்னிட்டுப் பயந்தோடுவாரைக் கொல்வதுதான் பழியாகும் வசை: இதுவே போர்வீரனின் உண்மையான நிலையல்லாமல் வேறும் உண்டோ! வெற்றியினைப் பெறப் பேகின்றவர் வீரமும் பேசுவாரோ? போரிட வந்த நீ விரைவாக உனது போரைச் செய்வாயாக என்றுர். 276

வேறு

என்னு மாத்திரத் திரவியம் பகைஞன்ஈ ரைந்து
பொன்னெ டுங்கணை எடுத்துவார் சிலையிடைப் பூட்டி
மின்னு வாமென விடுத்தலும் வீரனும் விரைவில்
அன்ன ஈரைந்து வாளிதொட் டவற்றினை அறுத்தான்.

என்று வீரவாகுதேவர் கூறிய மாத்திரத்தில் பானுகோபன் பத்துப் பொன்னின் ஒளிகொண்ட நீண்ட அம்புகளை எடுத்து வாருடைய வில்லில் பூட்டி மின்னல் சென்றிடுதல்போன்று விடுத்தலும், அதுவேளை வீரவாகுதேவரும் பத்து அம்புகளைத் தொடுத்து அவைகளை அறுத்தார். 277

ஆறு நாலுவெம் பகழியும் அறுத்தபின் அறிஞன்
நூறு வாளிகள் விடுத்தலும் வந்தது நோக்கி
வீறும் அத்தொகைச் சரங்கள்விட் டவையிடை வீட்டி
ஈறி லான்மகன் மீதிலா யிரங்கணை எய்தான்.

பத்து அம்புகளையும் வீரவாகுதேவர் அறுத்த பிற்பாடு பின்னர் நூறு அம்புகளை விடுத்தலும், பானுகோபனும் அதுகண்டு அதே தொகையாகும் நூறு அம்பினைத் தானும் விடுத்து, அந்த நூற்றினையும் இடையில் அறுத்துத்தள்ளி; பின்பு முடிவிலா முதலாகும் சிவபிரான் திருமகனர் வீரவாகுதேவரின் மீது ஆயிரம் அம்புகளை விடுத்தான்; 278

ஆயி ரங்கணை தூண்டிமற் றவற்றினை அறுத்துத்
தூய வன்பதி னுயிரஞ் சுடுசரந் தூரப்பத்
தீயன் அத்தொகை வாளியால் அங்கவை சிந்தி
ஏயெ னக்கொடும் பகழிநூ றுயிரம் எய்தான்.

வீரவாகுதேவர் அதுகண்டு ஆயிரம் அம்புகளைச் சொரிந்து அவற்றினை அறுத்துத் தள்ளிப் பின்னர் பதினுயிரம் நெருப்பின் வண்ணமாகும் அம்பினைச் செலுத்தத் தீயவனுகும் பானுகோபனும் அத்தொகையாகும் பதினுயிரம் அம்புகளால் வீரவாகுதேவரின் அம்புகளை அறுத்து 'ஏ' என்று கொடிய அம்புகள் ஓர் இலக்கத்தை எய்தார் 279

உய்த்த வாளிநூ றுயிரந் தன்னையும் உரவோன்
அத்தொ கைப்படு பல்லவந் தூண்டியே அறுத்துப்
பத்து நூற்றின்மேல் ஆயிரம் பெற்றிடும் பகழி
மெய்த்த ழற்கதிர் இரவியம் பகைஞன்மேல் விடுத்தான்.

பானுகோபன் செலுத்திய இலக்கம் அம்பினையும் வீரவாகுதேவர் அத்தொகைப்பட்ட அம்பினுல் அறுத்து, பத்து இலக்கம் தொகைபெற்ற அம்புகளை உண்மையாகும் வெப்பமுடைய கிரணங்களைக் கொண்ட சூரியபகவான் பகைவன் பானுகோபன் மீது விடுத்தார். 280

விடுத்த வாளியைப் பத்துநூ றுயிரம் விசிகந்
தொடுத்து மாற்றியே சூரபன் மாவருள் தோன்றல்
எடுத்து நூறுநூ றுயிரம் புங்கவம் ஏவ
நொடிப்பில் வீட்டினன் அனையன சிலீமுகம் நூக்கி.

வீரவாகுதேவர் விடுத்த அம்பினைப் பத்து இலக்கம் அம்பு விடுத்தறுத்து; சூரபன்மன் பெற்ற மைந்தரில் தலைமைப்பாட்டுடன் விளங்கிடும் அசுரகுமாரனை பானுகோபன் தன் கைவில்லில் எடுத்தெடுத்து நூறுநூறுயிரமாக அம்புகளை ஓய்வின்றிச் செலுத்திட வீரவாகுதேவர் அவன் விடும் அம்புகளை நொடிப்பொழுதிலே தாமும் அத்தனை அத்தனை அம்பு விடுத்து அறுத்துத் தள்ளினர். 281

வஞ்ச னேவினை மாற்றியே எம்பிரான் மதலை
செஞ்ச வாளிநூ றுயிர கோடிகள் செலுத்தக்
கஞ்ச மாமகள் உயிர்த்திடு திருமகன் கணிப்பில்
புஞ்ச வார்கணை இறுதிநாள் முகிலெனப் பொழிந்தான்.

வஞ்சகனை பானுகோபன் விடுத்த அம்பினை மாற்றியே எம்பெருமானுடைய திருக்குமாரனை வீரவாகுதேவர் செப்பமாகிய சிவந்த அம்புகள் நூறுயிர கோடிகளைச் செலுத்த; தாமரை மலர் மீதிருக்கும் பதுமகோமளை என்பவள் பெற்றெடுத்த பானுகோபனும் அதுவேளை அளவுகடந்த கூர்மையான அம்புகளை உலகம் முடிவுறும் நாளில் பெய்திடும் முகிலின் வேகம்போன்று சோனுவாரியாகச் செரிந்தான். 282

பார்ம றைந்தன திசையெலாம் மறைந்தன படர்முந்
நீர்ம றைந்தன குலகிரி மறைந்தன நிலவுங்
கார்ம றைந்தன ககனமும் மறைந்தன கதிரோன்
தேர்ம றைந்தன இருவர்தங் கணைமழை செறிய.

இவ்வணம் ஓயாது பானுகோபனும் வீரவாகுதேவரும் விடுத்திடும் அம்பின் மழைகள் செறிய; பூமி மறைந்தன; திக்குகள் எல்லாம் மறைந்தன; பெருகுகின்ற சமுத்திரம் யாவும் மறைந்தன; குலமலைகள் யாவும் மறைந்தன; வானில் நிலவிடும் மேகங்கள் மறைந்தன; வானமும் மறைந்தன; சூரியன் தேர் மறைந்தன. 283

பாரி வட்டமும் மாதிர வட்டமும் பரவை
வாரி வட்டமும் நேமியின் வட்டமும் மலிவான்
மூரி வட்டமும் அண்டத்தின் வட்டமும் முடுகிச்
சாரி வட்டமாய்த் திரிவன அனையவர் தடந்தேர்.

பூமியின் வட்டமும்; திக்குகளின் வட்டமும்; சமுத்திரங்களாகும் நீரின் வட்டமும்; மலைகளின் வட்டமும் விளங்கிடுகின்ற வானவெளியாய வட்டமும் அப்பாலுள்ள அண்டங்களின் வட்டமும் மிகவும் நெருங்கி இடம் வலம் என மாறி மாறி வட்டமாகித் திரிகின்ற இரண்டு பேர்களும் ஏறிக்கொண்ட பெரும் தேர்கள், 284

மாறில் வாளிகள் முறைமுறை சொரிதலான் மறைவர்
ஈறு செய்தவை அகற்றுழித் தோன்றுவர் இமைப்பில்
வேறு வேறதாய் இத்திறம் நிகழ்த்திடும் வீரர்
சூறை போலமர் ஆடினர் உலகெலாஞ் சுற்றி.

இவ்வாறு இருவரும் மாற்றிட முடியாத வலுக்கொண்ட அம்பினை மாறி மாறி முறைமுறை சொரிதலால் அந்த அம்புகளால் மறைவார்கள். முடிய அம்புகளை மறுபடி அறுத்துத் தள்ளியபோது தோன்றிடுவர். ஓர் இமைப் பொழுதினிலே இத்திறமாக வேறு தன்மையாக நிகழ்ந்திடும்படி வீரர்கள் இருவரும் சூறுவளிக் காற்றுச் சுழன்றடித்தல் போன்று உலகெங்கும் சுற்றிச் சுழன்று போராடினர். 285

இரவி வானவன் தனதுதிண் தேரினும் ஈர்க்கும்
புரவி மீதினும் உடுபதி மானத்தும் புறஞ்சூழ்
கரிகள் மீதினும் விண்ணுலா அமரர்தங் கண்ணும்
பொருவி லாளியர் விடுகணை சிதறியே போமால்.

நிகரற்ற வில்வீரராகும் இருவரும் விடுத்திடும் அம்புகள்; சூரியதேவனது திண்மையான தேர்மீதும்; தேரினை இழுத்திடும் குதிரைகள் மீதும்; சந்திர தேவனுடைய விமானத்தும்; உலகுகளின் புறத்துச் சூழ்ந்திருக்கும் திக்குயானைகள் மீதும்; வானில் சஞ்சரித்து உலவிடுகின்ற தேவர்கள் மீதும்; சிதறிப் பறந்து செல்வன. 286

செங்கண் வீரர்கள் இருவரும் பொருவதித் திசையென்
றங்கு நாடரி தவர்விடும் பகழிகள் அனந்தம்
மங்குல் வானெலாம் நிரந்தன மிசையினும் வருமால்
இங்கு நிற்கரி தெமக்கென ஓடினர் இமையோர்.

கோபத்தினால் சிவப்பேறிய கண்ணுடைய இரு வீரரும் இந்தத் திசையில் நின்றுதான் போரிடுகின்றனர் எனச் சொல்லி அவர்களை அங்கு அத்திசையில் நாடிப் பார்ப்பது அரிதாகும். அவர்கள் விடுத்திடும் அமபுகளோ அநந்தமாவன, ஆகையால், அந்த அம்புகள் மேகங்கள் நிரந்திருக்கும் வானெல்லாம் நிறைவன. இன்னும் மேற்கொண்டுமல்லவோ வருகின்றன. ஆகையால், இங்கு எமக்கு நிற்கவும் முடியாதெனக் கூறியவாறு தேவர்கள் அப்பாலும் ஓடினர்கள். 287

புடவி கீழ்வன அண்டங்கள் துளைப்பன புறத்திற்
கடலொ ரேழையும் பருகுவ புவனங்கள் கடப்ப
அடவின் மேதக்க யாவருந் தடுத்திடற் கரிய
வடவை நாவையுந் துணிப்பன அவர்விடும் வாளி.

இவர்கள் விடுகின்ற அம்புகள் பூமியைக் கிழிப்பன; அண்டங்களைத் துளைப்பன; உலகுகளின் புறத்தில் சூழ்ந்த எழு கடல்களையும் குடிப்பன; பல புவனங்களையும் தாண்டி அப்பாலும் செல்வன. கொலை புரிவதில் மிகவும் பெருமை பெற்றன. எவராலும் படை விடுத்துத் தடுத்திடற்கரியன. இதுமட்டன்றி அழிவிற்கெனப் பேர்கொண்ட வடவாமுகாக்கினியின் நாக்கையும் அறுப்பன. 289

இகல்க டந்திடு திண்டிறல் வாகுவும் இரவிப்
பகையும் ஆற்றிய பெருஞ்சமர் வலியையார் பகர்வார்
மிகுதி கொண்டபல் கணைமழை உலப்புரு விடுப்பத்
திகிரி யம்படை போன்றன அனையர்கைச் சிலைகள்.

பகையாவற்றையும் கடந்திட்ட திண்மையான திறலுடைய வீரவாகுதேவ
ரும்; சூரியனின் பகையாகும் பானுகோபனும்; செய்து கொண்ட பெரும் போரின்
ஆற்றலை ஆர்தான் எடுத்துச் சொல்லமுடியும். ஓயாது வந்துகொண்டிருக்கும்
மிகைக்பட்ட அம்புகளை அவர்கள் வில் உமிழ்ந்திடுதலால் அவர்கள் கையின் விற் 189
கள் சக்கரப்படைபோன்று காண்பன.

வெய்ய வன்றனைத் தளையிடும் வெய்யவன் விறலார்
துய்ய மொய்ம்பினன் விடுசர மாரியைத் தொலைத்துக்
கையி ருந்திடு கார்முகம் ஒன்றையுங் கடிதின்
ஐயி ரண்டுநூ றயிற்கணை யால்அறுத் தார்த்தான்.

இப்படிக் கொடுமையாகிய போரினைப் புரிந்து வருங்கால், வெப்பமுடைய
சூரியனைச் சிறையிட்ட கொடியனன பானுகோபன்; வலிமையுடன் சிறந்து விளங்
கும் வீரவாகுதேவர் விடுத்திட்ட அன்பின் மழையினை அறுத்து நீக்கி, அவர்
கையில் பிடித்த கரியதோர் வில்லினை பத்து அம்பு விடுத்து இரு துணியாக்கி 190
மகிழ்வால் ஆர்ப்பரித்தான்.

ஆர்த்த காலையில் வீரவா குப்பெயர் அறிஞன்
பேர்த்தும் ஓர்தனு வாங்கியே பெருஞ்சினம பிடித்துச்
சூர்த்த வெங்கணை ஆயிரம் விரைவினில் தூண்டி
மூர்த்த மொன்றினில் அவுணன்ஏந் தியசிலை முரித்தான்.

பானுகோபன் ஆர்ப்பரித்த காலத்திலே, அறிவில் மிக்க வீரவாகுதேவர்
மீண்டும் ஒரு வில்லை எடுத்து வளைத்து, பெரும் சினமடைந்து அச்சம் விளைக்கும்
கொடிய அம்புகள் ஆயிரத்தினைச் செலுத்தி ஒரு மூர்த்தத்திலே பானுகோபன் 191
பிடித்திருந்த வில்லை முரித்தெறிந்துவிட்டார்.

முரித்த காலையின் அவுணர்கோன் ஆற்றவும் முனிந்து
கரந்தின் மற்றெரு சிலைகுனித் தாயிரங் கணைகள்
உரத்தின் நம்பியும் அணங்குற விடுத்தலும் ஓரேழ்
சரத்தினலவன் தனிப்பெரு மவுலியைச் சாய்த்தான்.

வீரவாகுதேவர் பானுகோபனது வில்லை முறித்த காலையில் அசுரர் தலை
வன் மிகவும் முனிந்து தனது கையில் வேறெரு வில்லை எடுத்து வளைத்து ஆயி
ரம் அம்புகளைத் தொடுத்து வலியுடைய வீரவாகுதேவரும் வருத்தமுறும்படி
விடுத்தலும் அதனைக் கண்டு வீரவாகு தேவர் ஏழு அம்பினை விடுத்து பானு 192
கோபனின் தனிப்பெருமை வாய்ந்த கிரீடத்தை அறுத்துத் தள்ளினர்.

வாய்ந்த பன்மணி குயிற்றிய கனகமா மவுலி
சாய்த்த காலையின் வேறொரு கதிர்முடி தன்னை
ஏத்தல் சான்றிடு சூர்மகன் புனையுமா றெடுத்தான்
பூத்த செங்கதி ரவனைமுன் பிடித்தவா போல.

வாய்ப்புடைய பல இரத்தினங்கள் பதித்துள்ள பொன்முடியானது அறுந்து வீழ்ந்த காலையில் வெறொரு பிரகாசமுடைய பொன்முடியினை; பலராலும் போற்றப்படும் பாங்குடைய பானுகோபன் தலைமீது அணிந்து கொள்ளுமாறு கையில் எடுத்தான். அவ்வாறு ஒளியுடைய அந்த முடியினை பானுகோபன் கையிலே எடுத்தது; முன்னாளில் சூரியனைச் சிறை செய்வதற்கு கையில் பிடித்த வண்ணம் போன்றிருந்தது. 293

எடுத்த பொன்முடி சென்னியிற் கவித்தனன் இதன்முன்
வடித்த வெங்கணை ஆயிரந் தூண்டிமற் றவன்மேல்
அடுத்த சாலிகை சிந்தினன் சிந்திய அளவில்
நடித்து நல்லறம் பாடின பரிதியும் நகைத்தான்.

கையில் எடுத்த பொன்முடியினைத் தலையில் சூடினான். இந்தச் செயலுக்கு முன்னமே வீரவாகுதேவர் கூரிய அம்புகள் ஆயிரத்தைச் செலுத்தி பானுகோபனின் நெஞ்சில் அணிந்துள்ள கவசத்தை பொடியாக்கினார். முடி தலையில் சூடுமுன் கவசமே பொடியான தன்மை கண்டு தருமதேவதைகள் கூத்தாடினர்; சூரிய பகவானும் சிரித்தான். 294

நிருதர் போற்றிடு சூர்மகன் ஆயிர நெடுங்கோல
சுருதி நாயகன் இளவல்தன் நுதலிடைத் துரப்பக்
குருதிநீ ருண்டு குழுவொடுந் தோன்றுவ குணபால்
பரிதி வானவன் இளங்கதிர் விரிந்தெழும் பரிசின்.

அசுரர் போற்றிடுகின்ற சூரன் மைந்தனான பானுகோபன் அது காலை ஆயிரம் நீண்ட அம்புகளை வேதங்கட்கு எல்லாம் நாதனாகும் குமரமூர்த்தியின் இளையோரான வீரவாகுதேவரின் நெற்றியில் பட்டிட விடுத்தபோது அம்புகள் வந்து படுதலால் இரத்தம் கக்கிட நெற்றியில் ஆயிரம் அம்புகளும் தைத்தபடி தோன்றுதல்; மேற்குத் திசையில் அத்தமனமாகும் சூரிய தேவனின் இளங்கதிர் விரிந்தெழுதல் போன்றிருந்தது. 295

நெற்றி மீதுகோல் ஆயிரம் படுதலும் நிறையில்
சற்று நீங்கிலன் தன்வலி சுருங்கிலன் தக்கோன்
பற்றிஅங் கையால் பறித்தவை வீசினன் பகைஞன்
கொற்ற வெய்யகோல் விளிவின்றி நின்றிடுங் கொல்லோ.

நெற்றிமீது ஆயிரம் அம்புகள் தைத்தலும், அதனாலே வீரவாகுதேவர் தன்நிறைவில் கொஞ்சம் தவறுற்றிலர். தனது வலிகுன்றவில்லை. அவர் அத்தனை அம்பினையும் கையினால் பிடுங்கி எடுத்து வீசினார். அம்மவோ! அந்தக் கொடியோனுடைய அம்புகள் அழிந்திடாது நிற்க முடியுமோ? கொடியவனுடைய அம்புகள் தாம் அழிவதை அன்றி தருமத்தை நிலைநாட்ட வந்தவருடைய நிலையை குலையச் செய்திட வல்லதா? என்க. 296

சகத்தை நல்கிய அசமுகற் கிளவல்அத் தகுவன்
முகத்தின் ஆயிரம் அகலத்தின் ஆயிரம் மொய்ம்பின்
அகத்தின் ஆயிரங் கரங்களின் ஆயிர மாக
மிகைத்த வெங்கணை தெரிந்தொரு தொடையினில் விடுத்தான்.

உலகனைத்தையும் படைத்திட்ட ஆறுமுகமுடைய பெருமானுக்கு இளையோனாகிய வீரவாகு தேவர், அதுகாலை அந்த அசுரனுடைய முகத்தில் தைத்திட ஆயிரம் அம்பும்; நெஞ்சில் பட்டிட ஆயிரம் அம்பும்; அகன்ற தோளில் தைத்திட ஆயிரம் அம்பும்; அவனது கைகளில் பட்டிட ஆயிரமாகவும் மிகவும் கொடுமையான அம்புகளாய் தெரிந்தெடுத்து ஒரே வீச்சில் விடுத்தார்;

விட்ட வாளிகள் சூர்மகன் அவயவம் விரவிப்
பட்டு மூழ்கலும் அவசமாய்த் தளர்ந்தனன் பாணி
நெட்டி ருஞ்சிலை ஊற்றமாய் வறியனாய் நின்றான்
தொட்ட தெண்கயத் தூறிமேல் எழுந்தது சோரி.

வீரவாகு தேவர் விட்ட அம்புகள் சூரபன்மன் மகன் பானுகோபனின் செவ்விய அவயவங்களில் பட்டு ஊடுருவிப் போதலும்; பானுகோபன் மயங் கிச் சோர்வுற்றான். கையில் பிடித்த வில்லையும் பாவித்திட வலியின்றி வெறும னாக நின்றான்; அவன் மேனியில் நின்றும் தோண்டப்பெற்ற கிணற்றில் நீர் ஊறுவதுபோன்று இரத்தம் பிறிட்டு மேல் பெருகியது. 298

வந்து வந்தெழு குருதிநீர் முழுதுடன் மறைப்பப்
புந்தி தன்னிடைச் சீற்றமும் மூண்டெழப் பொலிவான்
செந்த ழற்பிழம் பாலுயர் குன்றெனத் திகழ்ந்தான்
அந்தி மேற்றிசை எழிலியின் வண்ணமு மானான்.

உடம்பினின்றும் வந்து வந்து எழுகின்ற இரத்தமெல்லாம் முழு உடலையும் மறைத்திட; மனத்தினில் மூண்டெழுகின்ற கொடிய சினமும் பெருகிடப் பொலி வுற்று நிற்கும் பானுகோபன் சிவந்த தழல் உடைய நெருப்பின் மலைபோன்று திகழ்வுற்றான். அதுவன்றி மாலையில் மேற்குத் திசையில் தோன்றிடும் சிவந்த தொரு மேகமும் போன்றான். 299

ஆன போழ்தினில் அவுணமாத் தலைவர்கள் யாரும்
பானு மாற்றலன் பொருவலி இன்மையைப் பாராச்
சேனை நாற்பெரும் பரவையி னோடுமுன் சென்று
மான வேற்படை வீரவா குவின்புடை வளைத்தார்.

இவ்வாறாகும் நேரத்தில் அசுரராகும் பெரும் தலைவர்கள் யாரும் தங்கள் பானுகோபன் போர் செய்திட வலியிலாது போனமையைப் பார்த்து பொங்கி எழுந்து தேர், யானை, குதிரை, காலாள் எனும் நான்கு வகையாயின படையா கும் வெள்ளத்துடன்; முன் சென்று மானமுற்ற வேற்படையைக் கையில் கொண்ட கடவுளாகும் வீரவாகுவினை வளைந்து சுற்றினார்கள். 300

இலைபி றங்கிய சூலம்விட் டேறுதண் டெழுவம்
உலைபி றங்கிய கணிச்சிநே மிப்படை ஓங்கும்
சிலைபி றங்கிய பகழிகள் வீரன்மேற் செலுத்தி
மலைபி றங்கிய இரவிசூழ் திமிரென மறைத்தார்.

இங்ஙனம் சூழ்ந்துள்ள அசுரர் யாரும் இலையொத்த நுனியுடைய சூலம், இடிபோல் வரும் தண்டு; எழுவாயுதம்; உலைக்களத்தில் செய்தபடி கூர்மையால் பிரகாசிக்கும் கணிச்சிகள்; சக்கரம்; பெரும் வில்லினின்றும் புறப்படும் அம்புகள் ஆதியான படைகளை வீரவாகு தேவர் மீது விடுத்து மலைமேல் விளங்கிடும் சூரியனை மறைத்திடும் இருள் போன்ற செயல் கொண்டு வீரவாகுவை மறைத்தார்.

வேறு

தொடைக்கலன் நிலவு மார்பில் தொல்அசு ரேசர் கொண்ட
படைக்கல மான வெல்லாம் விடுத்தலுந் தனது பாணி
இடைக்கலந் திருந்த வார்விற் குனித்தனன் இடுக்கட் பட்டோர்
அடைக்கலம் புகுதும் வெள்ளி அருவரை அளித்த அண்ணல்.

மாலைகளுடன் ஆபரண வகைகளும் விளங்கிடும் நெஞ்சினை உடைய முதுமையாகும் அந்த அசுரத் தலைவர்கள் தங்கள் கையில் கொண்ட பல்வேறு வகையாகும் படைக்கலங்கள் யாவற்றையும் விடுதலும் அதுகண்டு; இடுக்கட்பட்டோர்கள் யாரும் அடைக்கலமாகச் சென்று அடைகின்ற வெள்ளிமயமான அரிய திருக்கைலாயமலை தந்தருளிய தலைவராகும் வீரவாகு தேவர் தமது கையின் இடையாகப் பிடித்திருந்த வில்லை வளைத்தார். 302

ஆயிர கோடி கோடி அடுசரந் தொடையொன் றுக
மாயிரும் புயத்து வள்ளல் வல்லையின் வலிது தூண்டித்
தீயவர் உடன்று விட்ட படையெலாஞ் சிந்த லுற்றான்
பாயிருட் படலங் கீறுஞ் செங்கதிர்ப் பரிதி யேபோல்.

மிகப் பெரிய தோள்களை உடைய வீரவாகு தேவர் வளைத்த வில்லில் நின்றும் ஆயிரகோடி கோடி எனும் கணக்கில் கொலைபுரியும் அம்புகளை ஒவ்வோர் தொடுப்பிலும் விசையுடன் வலியால் செலுத்தி, தீய அசுரத்தலைவர்கள் விடுத்துள்ள கொடிய படைகள் யாவற்றையும் சிந்தி அழிக்கலுற்றார். எது போலும் எனில், கொடிய இருட்பிழம்பைக் கிழிக்கின்ற சிவந்த ஒளிக்கதிர்களை உடைய சூரிய பகவானைப் போன்று. 303

அவுணர்கள் யாருமுய்த்த அடுபடை மாரி சிந்திக்
குவவுறு விசயத் தோளான் கொடுஞ்சரம் அனந்த கோடி
தவறில வாக உய்த்துத் தகுவர்தந் தானை முற்றும்
உவரியுண் வடவை போல ஒல்லையின் முடிக்க லுற்றான்.

அசுரர்கள் யாரும் செலுத்திய கொடிய கொலைபுரியும் படைகள் பலவற்றையும் அழித்துவிட்டு அப்பாலும் வெற்றி விளைவுக்கென குலவி நின்ற தோள்களை உடைய வீரவாகு தேவர் கொடிய அம்புகள் அநந்த கோடிகளைத் தவறிடாத வகையால் செலுத்தி அசுரருடைய சேனைகள் முழுவதையும் கடலை உண்கின்ற வடவாமுகாக்கினி போன்று சீக்கிரத்தில் முடிவாக்கலுற்றார். 304

தோலினை அறுக்கும் வாளைத் துணித்திடுஞ் சோதி வில்லின்
காலினை அறுக்கும் வெய்ய கணிச்சியை அறுக்கும் வீசுங்
கோலினை அறுக்கும் நேமிக் கொடும்படை அறுக்குங் காமர்
வேலினை அறுக்கும் அம்மா விடலைதன் வீர வாளி.

வீரவாகு தேவர் இவ்வகையால் விடுத்திடும் வீரமுடைய அம்புகள், அசுரர்கள் கையிற் கட்டிய தோலினை அறுக்கும்; வாளைத் துணிக்கும்; பிரகாசமுடைய வில்லின் காலினை அறுக்கும்; கொடிய கண்டகோடரியை அறுக்கும்; அவர்கள் விடுத்த அம்பினை அறுக்கும்; சக்கரமாகிய கொடிய படையை அறுக்கும்; அழகிய வேலை அறுக்கும். அம்மவோ! அந்த அம்புகளின் செய்கையை என் சொல்வன. 305

வேறு

உரந்துணிக்குங் கவசமிடும் உரந்துணிக்கும் புயந்துணிக்கும் ஒன்ன லார்தங், கரந்துணிக்கும் அடல்புரிமோ கரந்துணிக்குங் கழல் துணிக்குங் கணிச்சி கைத்தோ, மரந்துணிக்குங் குனித்தகொடு மரந் துணிக்கும் வாய்துணிக்கும் மவுலி தாங்குஞ், சிரந்துணிக்கும் எறிந் திடும்வச் சிரந்துணிக்கும் உரவோன்றன் செங்கை வாளி.

அந்த வீரமுடைய வீரவாகுதேவரின் செங்கையால் விடுத்த அம்புகள்; அசுரர்களின் உக்கிரமாகும் வலியை அறுக்கும்; கவசமணிந்த நெஞ்சை அறுக்கும்; தோளை அறுக்கும்; பகைவரது கை துணிக்கும்; கொலை செய்வோம் என நினைந்த வேட்கை துணிக்கும்; காலினை வெட்டும்; வச்சிரப்படையுடன் கையில் பிடித்த தோமராயுதம் துணிக்கும்; வளைத்த வில்லினைத் துணிக்கும்; வாய்களை அறுக்கும்; கிரீடமணிந்த தலை துணிக்கும்; வீசிடவரும் கணிச்சியை அறுத்திடும். 306

கதமறுக்கும் வதமறுக்குந் தூங்குபுழைக் கையறுக்குங் கபோலத் தூறும், மதமறுக்கும் நுதலறுக்கும் வாயறுக்குஞ் செவியறுக்கும் வயிரக் கோட்டின், விதமறுக்கும் வாலறுக்கும் மெய்யறுக்குந் தலை யறுக்கும் வேழஞ் செல்லும், பதமறுக்கும் முரணறுக்கும் அரண் அறுக்கும் வீரன்விடு பகழி மாரி.

வீரராகும் வீரவாகுதேவரால் மழை சொரிவதுபோன்று விடப்படுகின்ற அம்புகள், யானைகள் கொள்ளும் கோபத்தினை அறுக்கும்; எதிரிகளை வதம்செய்யும் செயல் அறுக்கும்; தூங்குகின்ற துதிக்கையினை அறுக்கும்; கபோலத்தினின்றும் ஊறிடுகின்ற மதத்தை அறுக்கும்; நெற்றியினை அறுக்கும்; வாயினை அறுக்கும்; காதினை அறுக்கும்; வயிரமுடைய கொம்பின் விதத்தை அறுக்கும்; வாலினை அறுக்கும்; உடலை அறுக்கும்; தலையை அறுக்கும்; யானைகள் செல்கின்ற காலையறுக்கும்; வலியினை அறுக்கும்; யானைகள் நின்ற அணியை அறுக்கும். 307

ஆரறுக்குஞ் சகடறுக்கும் அச்சறுக்கும் நெடுந்துவசம் அறுக்குந் தேரின், பாரறுக்குங் கூம்பறுக்கும் பாகறுக்கும் அங்கணுறும் பதகர் ஆவி, வேரறுக்கும் அடியறுக்கும் விரிதருகொய் யுளையறுக்கும் விளங் குஞ் செம்பொன், தாரறுக்கும் புரவிகளின் தலையறுக்கும் நிலையறுக் குஞ் சரங்கள் மன்னோ.

வீரவாகுதேவர் விடுத்திடும் அம்புகள்; அசுரருடைய தேரின் பண்டி யகவாயினை அறுக்கும்; சகடங்களை அறுக்கும்; கூம்புகளையும் அறுக்கும்; சாரதி களை வதைத்திடும்; அங்கு நின்ற பாதகராகும் அசுரரின் உயிர்களை வேரோடு களைந்து கொல்லும்; குதிரைகளின் காலினை அறுக்கும்; விரிந்துள்ள பிடரிமயிரை அறுக்கும்; கழுத்தில் அணிந்த செம்பொன்னிலான மாலையை அறுக்கும்; குதிரை களின் தலைகளை அறுக்கும்; குதிரைகள் அணியாக நின்ற நிலையறுக்கும். 308

கானேடும் வரையோடுங் கரையோடுந் திரையோடுங் கழியி னேடும், மீனேடுங் கடலோடும் விசையோடுந் திசையோடும் மேக மோடும், வானேடும் நிலனேடும் இருகதிரின் மருங்கோடும் வாளத் தோடும், தேனேடும் பூந்தாரான் சிலையோடும் நெடும்பகழி சிந்துஞ் சென்னி.

தேன் ஒழுகும் பூமாலையணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவரின், வில்லி னின்றும் புறப்பட்டுச் செல்கின்ற நெடிய அம்புகள் அறுத்தெறிகின்ற தலைகள் காட்டினிடத்தோடும்; மலையிடத்தோடும்; கடலின் கரையில் ஓடும்; திரை மீது செல்லும்; கடற்கரையில் உள்ள சதுப்பு நிலத்தோடும்; மீன்கள் ஓடிடும் கடல் மீதிலும் விழும்; விசையோடு எழுந்து திக்குகளில் ஓடும்; மேகங்கள் ஓடிடும் வானில் ஓடிச் செல்லும்; நிலத்தில் செல்லும்; சூரிய சந்திரர் பக்கராக ஓடும்; சக்கரவாள மலைமீது செல்லும். 309

வேறு

பாயிரும் புனல்போல் ஓடிப் படியெனப் பரந்து நீடித்
தேயுவின் திறல்மேல் கொண்டு சேணென முடிவின் ருகி
வாயுவின் விரைந்து சென்று வள்ளல்கை வாளி ஒவ்வொன்
ருயிர கோடி சென்னி அறுக்கினும் வெறுக்கி லாவே.

எங்கள் அருள் வள்ளலான வீரவாகுதேவர் பெருமானின் கைகளால், தொடுத்து விடப்பெற்ற அம்புகள் ஒவ்வொன்றும்; பாய்ந்து வேகமுடன் செல் கின்ற பெரு நீர் போல் ஓடி; பூமிபோல் பரந்து நீண்டு; நெருப்பினைப் போன்று வலிமிகுந்து; வானம்போல் அளவின்றி எங்கும் நிறைந்து; காற்றினைப் போன்று விரைவுடன் ஏகி, ஆயிரம் கோடியாகும் தலைகளை அறுத்தெறிந்தாலும் வெறுப்படையாது, பின்னரும் ஓடி ஓடி அறுப்பன. 310

வரந்தனில் தலைமை சான்ற ஒருசில மான வீரர்
சிரந்தனைத் துணித்துக் கொண்டு சீர்கெழு சூரன் வைகும்
புரந்தனிற் கொடுபோய் அன்னுர் பொற்றெடி மடந்தை மார்தங்
கரந்தனின் உகுத்துச் செல்லுங் கந்தனுக் கிளவல் வாளி.

கந்தக் கடவுளுக்கு இளையவராகும் வீரவாகுதேவரின் அம்புகள் வரத்தால் தலைமை பெற்றுடைய ஒரு சிலமானமுடைய வீரரின் தலைகளை அறுத்தெடுத்து; சீர்கொண்ட சூரபன்மனுடைய வீரமகேந்திரபுரம் கொண்டுபோய் அந்த அந்த அசுரருடைய பொன்வளையல் அணிந்து கொண்ட காதலியின் கையிலே தலையினைக் கொடுத்து விட்டுச் செல்கின்றன. 311

புரண்டன வயவர் யாக்கை பொழிந்தன குருதித் தாரை
உருண்டன மான்தேர் ஆழி உலவின பலவுங் கூளி
திரண்டன குணங்கர் ஈட்டஞ் செறிந்தன சேனம் பிள்ளை
இருண்டன திசைகள் முற்றும் இரிந்தன ஒழிந்த தானை.

இவ்வாறு வீரவாகுதேவரின் அம்புகள் அசுரரை அறுத்தலால்; வீரருடைய உடலங்கள் வீழ்ந்து புரண்டன. இரத்தம் தாரைதாரையாகப் பொழிந்தது; பெரிய குதிரை பூட்டிய அசுரர் ஏறிவந்த தேர்கள் முறிந்து, சில்லுகள் உருண்டன; பூதங்கள் நிணம் தின்ன அங்கு உலாவின; பேய்களின் கூட்டங்கள் திரண்டு கொண்டன; காகமும் பருந்தும் போர்க்களம் எங்கும் செறிவுற்றன; திக்குகள் யாவும் இருண்டன; எஞ்சிய சேனைகள் முற்றும் பயத்தால் ஓடின. இப்படியே பானுகோபன் சேனை முழுவதும் ஒழிந்தது. 312

பட்டன புரவிப் பந்தி படிந்தன முடிந்த வேழங்
கெட்டனர் அவுணர் யாருங் கிடந்தன ஒடிந்த திண்டேர்
அட்டனன் ஒருவன் நின்றான் அகலிரு விசும்பை வல்லே
தொட்டன பிணத்தின் பொம்மல் சோரியா றெழுகிற் றன்றே.

குதிரைகள் அணி அணியாக அறுந்துபட்டன. யானைகள் இறந்து வீழ்ந்து கிடந்தன. அசுரர் யாரும் அழிந்து கெட்டனர். முறிந்த தேர்கள் கிடந்தன. அவ்விடத்து இவ்வளவு சேனைகளின் தொகையும், அழித்த ஒருவனாகும் வீரவாகு தேவரே நின்றார் அகன்ற பெரிய ஆகாயத்தை முட்டிச் சென்று இறந்த அசுரரின் பிணத்தின் குவியல் தொட்டது. இரத்தமாகிய ஆறு பெருகி ஓடியது; 313

பாய்ந்திடு குருதி நீத்தம் படர்ந்தது புகுந்து பௌவஞ்
சேர்ந்தது சுறவு மாந்திச் செருக்கிய திறலோன் அம்பால்
வீந்திடும் அவுணர் ஆவி விடுத்தனர் சென்று தந்தாள்
ஓய்ந்தனர் நடுவன் தூதர் ஒழிந்தன கழிந்த பூசல்.

பாய்ந்து செல்லும் பெருவெள்ளம் போன்று சென்றிடும் இரத்தமானது, அசுரர்களின் உடலையும் புரட்டிக் கொண்டு, சமுத்திரத்தில் சேர்ந்தது. சமுத்திரத்தில் வாழ்கின்ற சுறு மீன்கள் இரத்தமும் தசையும் உண்டு செருக்குற்றன. திறமைமிக்க வீரவாகுதேவரின் அம்பால் இறந்துபோன அசுரர் யாவரும் உயிர் விட்டார்கள்; அவர்கள் உயிரைப் பிடிப்பதற்கு அங்கும் இங்குமாக ஓடி ஓடி இயமனுடைய தூதுவர்கள், கால்கள் இனி ஓட முடியாது ஓய்ந்தனர், போர் முடிந்து சங்கடங்கள் கழிந்தது. 314

சிந்திய அவுணர் தானைச் செய்தியும் பரிதிக் கூற்றன்
நொந்தனன் தமியன் நின்ற தன்மையும் நோக்கி நோக்கி
நந்தம தண்ணல் தன்பால் நண்ணுதும் என்று மீண்டு
வந்தன முந்து சாய்ந்த வயப்பெரும் பூத வெள்ளம்.

அசுரராய சேனை வெள்ளங்கள் சிதறிப்போன தன்மையையும், பானு கோபன் அம்புகள் பட்டு நொந்து வருத்தமுற்றுச் சோர்வடைந்த நிலையையும் முன்னர் பயந்து சிதறி ஓடிய பூதங்களாய வெள்ளங்கள் பார்த்துப் பார்த்து, ஓகோ! இனிமேல் எங்கள் தலைவர் வீரவாகுதேவர்பால் நாம் சேர்வோம் என்று சொல்லிச் சொல்லி மீண்டு வருவாராயினர். 315

இரிந்திடு பூத வீர ரியாவரும் மீண்டார் நின்று
வருந்திய தலைவர் தொல்லை வன்மிடல் பெற்றார் அங்கண்
அருந்துயர் உழந்து வீழ்ந்தார் ஆவியோ டெழுந்தார் இன்னோர்
பொருந்தனி வீர வாகுப் புடையுற வளைந்து புக்கார்.

முன்னர் பயத்தால் ஓடிப்போயின பூதங்கள் யாவும் மீண்டார். பானு கோபனுடன் முன்பு புரிந்த போரில் வலி இழந்து வருத்தமுற்ற வீரர்கள் யாவரும் வழமைபோல் தைரியம் அடைந்து கொண்டனர், அவ்விடத்து முன்பு பானு கோபனின் படைகள் பட்டு, கொடிய துன்பமுற்று மயங்கி வீழ்ந்தார்களாகும் வீரர்கள் யாவரும் உயிருடன் எழுந்து கொண்டனர். இவ்வாறு யாவரும் கூடி பெருவலியுடன் தனி நின்ற வீரவாகுதேவர்பால் வந்து, பக்கராக வளைந்து கொண்டனர். 316

அங்கது போழ்து தன்னின் அயர்வுயிர்த் துணர்வு தோன்றச்
செங்கதி ரோனைச் சீறுஞ் சேவகன் சுற்று நோக்கிச்
சங்கையின் நிமிர்ந்த கொள்கைத் தன்பெருஞ் சேனை காணான்
கங்கமுங் கழுகும் ஆர்க்குங் களேபரச் சூழல் கண்டான்.

அவ்வாறாகிய நேரத்து, முன்பு மயக்கமடைந்த களை நீங்கி உணர்வுகள் முன் போல வந்து தெள்வுற; சூரிய தேவனைக் கோபித்து சிறைவைத்த பானுகோப னனவன் சுற்றுமுற்றும் பார்த்து, மிகு வீரத்துடன் விளங்கிப் பெருகிநின்ற தனது பெரும் சேனையில் ஒருவரையேனும் காணாது, அதன் பதிலாக பருந்தும் காகமும் கழுகும் இரைந்து சுத்திப் பூசலிடுகின்ற போர்க்களம் மட்டுமே கண்டான். 317

நேருறு தனிவில் லாளி நின்றது நோக்கி நம்பால்
சாருறும் அனிக மெல்லாந் தடிந்தனன் இவனென் றுன்னி
ஆரிடை யடங்கிற் றம்மா ஆண்மைக்கும் அவதி யுண்டோ
வீரன்மற் றிவனே அல்லால் வேறிலை போலு மென்றான்.

இதுவன்றி, தன்னுடன் நேரிட்டுப் போரிட வந்த வில்லாண்மையில் மிக்குள்ள வீரவாகுதேவர் மட்டும் முன்னின்றது நோக்கி, அம்மவோ! இந்த வீரன் என்பால் துணையாகிப் போரிட வந்த சேனை வெள்ளங்கள் முழுவதையும் கொன்றான் என எண்ணி, போர்க்களத்தில் வீரத்திற்கு நான் ஒருவனே வீரன் என எண்ணி நின்றேன் இப்போது பார்த்தபோது ஆரிடத்தில் அடங்கி நின்றது வீரம் என்பது தெரியாதது அன்றே. இன்னாரிடத்தில் தான் வீரம் என வீரத்திற்கும் எல்லை பேசலாமோ. உண்மையில் இவன் தான் வீரன், இவனே யல்லாமல் வேறில்லைப் போலும் இனியொருவர் என எண்ணினான். 318

இனையன வியந்து பின்னும் என்னெதிர் பொருத வீரர்
அனைவரும் விளிந்தோர் அன்றி அடல்வலி படைத்தோர் இல்லை
குனிசிலை ஒருவன் நின்றான் கொற்றமுற் றிடுவன் அம்மா
தினகரன் பகைஞன் ஆற்றல் சீரிது சீரி தென்றான்.

பானுகோபன் இப்படி வீரவாகுதேவரின் வீரச் செயலை வியந்து பின்னர் எண்ணுவான் ''என்றாலும் என் முன்பு இதுகாறும் எதிரிட்டு நின்று போரிட்ட வீரர் எல்லாரும் அழிந்தனரே அன்றி என்னை வெற்றி கொண்டு வலியுற்றோர் யாரும் இல்லை.'' வளைத்த வில்லுடைய இவ்வீரன் ஒருவன் மட்டுமே நின்றான்: சரி சரி இவனையும் நான் வெற்றி கொள்வேன். ஓகோ! பானுகோபனின் வலி யாயது நன்று நன்று என்றான். 319

கன்னலொன் றளவை தன்னில் கந்தவேள் ஒற்றன் யாக்கை
சின்னபின் னங்க ளாகச் செய்குவன் செய்தி டேனேல்
பின்னுயிர் வாழ்க்கை வேண்டேன் யான்பிறந் தேனுமல்லேன்
என்னொரு சிலையும் யானும் எரியிடைப் புகுவ னென்றான்.

ஒரு நாழிகைப் பொழுதிலே கந்தக் கடவுளின் தூதுவனின் உடலத்தைச் சின்னபின்னமாகச் சிதைப்பேன். அதனைச் செய்திடேனேல் பின்னால் எனது உயிர் வாழ்க்கை வேண்டேன். யானும் ஒருவனாக இப்பூமியில் பிறந்தேனும் அல்லன். அதுவன்றோ! தான் இவன் உடலை இன்று சிதைத்திடாது விட்டால் என்னுடைய இந்தவொரு வில்லும் யானும் நெருப்பிலே வீழ்வேன் எனச் சபதம் கூறினான் பானுகோபன். 320

வஞ்சினம் இனைய கூறி மாதிரக் கிழவன் மைந்தன்
நெஞ்சினில் வெகுளித் தீயும் மானமும் நீடி ஓங்க
எஞ்சலில் ஈசன் முன்னம் ஏகிய கொடுநஞ் சென்னச்
செஞ்சிலை வீரன் முன்னந் தேரொடுஞ் சென்று சேர்ந்தான்.

இவ்வாறு கொடிய சபதத்தைக் கூறி பல திக்கிற்கும் ஒரு தலைவனாகும் சூரபன்மனின் மகன் பானுகோபன் தனது நெஞ்சில் கோபமான நெருப்பும் மானமெனும் வெப்பும் நீண்டு பெருகிட; குறைவிலா நிறைவாகும் சிவபிரான் முன்னர் சென்றிட்ட கொடிய நஞ்சின் தன்மையினைப் போன்று; கொடியதோர் தன்மையுடன் செவ்விய வில்லைக் கையில் பிடித்து நிற்கும் வீரவாகுதேவர் முன்பு தேரோடும் சென்று போரிடும்படி சேர்ந்தான். 321

கைத்தலத் திருந்த தொல்லைக் கார்முகம் வளைய வாங்கி
முத்தலைப் பகழி அங்கோ ராயிரம் விடுப்ப மொய்ம்பன்
அத்திறத் தியன்ற வாளி ஆயிரஞ் சிலையிற் பூட்டி
உய்த்தனன் அறுத்துப் பின்னு மொராயிரஞ் சரங்கள் விட்டான்.

வீரவாகுதேவர் முன்பு சென்ற பானுகோபன் தனது கையில் பிடித்திருந்த கொடியதொரு மேகம் போன்ற வில்லை நன்றாக வளைத்து, அதில் மூன்று கூரிய தலைச் சுடருடைய அம்புகள் ஆயிரத்தைப் பூட்டி, வீரவாகுதேவர் மேல் விடுத்தலும்; வீரவாகுதேவர் அதுகண்டு பானுகோபன் விடுத்துள்ளதுபோன்று அத்தன்மையாகும் அம்புகள் ஆயிரத்தை விடுத்து அவன் விடுத்த அம்புகளை அறுத்துப் பின்னரும் ஓராயிரம் அம்புகளை எய்தார். 322

அற்றது தெரிந்து தீயோன் ஆயிரம் விசிகந் தூண்டி
மற்றவை விலக்கிப் பின்னும் வாளியோர் அயுதந் தொட்டுக்
கொற்றவன் தேரும் பாகுங் குரகதக் குழுவு மாயச்
செற்றனன் அதனை நோக்கிச் சேணுளார் அலக்கண் உற்றார்.

அத்தன்மையைத் தெரிந்த தீயவனான பானுகோபன் தானும் ஆயிரம் அம்பினைச் செலுத்தி வீரவாகுதேவர் விடுத்த ஆயிரம் அம்புகளையும் அறுத்து நீக்கி; பின்னரும் பதினாயிரம் அம்புகளைச் செலுத்தி வீரவாகுதேவரின் தேரும், குதிரைகளும், சாரதியும் மாய்ந்திட அழித்தான். அதனை வானிலே நின்று கண்டு கொண்ட தேவர்கள் யாவரும் கலக்கமடைந்தனர். 323

வில்லொடும் வீர வாகு வேறொரு தேர்மேற் பாய்ந்து
வல்லிதின் நூற்று நூறு வாளிகள் துரந்து வெய்யோன்
சில்லியந் தேரும் மாவும் வலவனுஞ் சிலையும் வீழப்
பல்லிருந் துண்டஞ் செய்தான் விண்ணவர் பண்ணை ஆர்ப்ப.

இதுவேளை கையிற் பிடித்த வில்லுடன் வீரவாகுதேவர் வேறொரு சேமத் தேரிடையாகப் பாய்ந்து மிகு வன்மையாக நூறு நூறான அம்புகளை விரைவுடன் செலுத்தி, கொடிய பானுகோபனின் பெருஞ் சில்லையுடைய தேரையும், குதிரையையும், சாரதியையும் வீழ்ந்துமடிந்திடப் பல்வேறு துண்டமாக்கினார். அந்தச் செயலைக் கண்டு வானில் நின்ற தேவர் கூட்டம் யாவும் கைதட்டி மகிழ்வார் ஆர்ப்பரித்திட்டனர்.

போர்க்களத்தில் போரிடச் செல்லுங்கால், தேர்மேல் போரிடச் செல்லும் வீரர்கள் தங்கள் தேருடன் துணைத்தேர்களாகப் பலவற்றைக் கொண்டு செல்வது வழக்கம். நின்று போரிட்ட தேர் அழிந்தால், அயலாக நிற்பதொரு துணைத் தேரிற் பாய்வது வழக்கம். இத்துணைத் தேர்களைச் சேமத்தேர் என்றும் சொல்லப்பெறும். 324

பூங்கழல் மிழற்ற வேறோர் பொன்னவாந் தேரின் மீப்போய்
ஆங்கொரு சாபம் பற்றி அவுணன்றன் செவியின் காறும்
வாங்கினன் ஏழு நூறு வச்சிரப் பகழி பூட்டி
ஓங்கலம் புயத்து வீரன் உரத்திடைப் புகவுய்த் தார்த்தான்.

தேரழிதலும் அப்போது பானுகோபன் தனது மலர் போன்ற மிருதுவாய காலில் பூட்டிய சிலம்புகள் அலம்பிட வேறொரு பொன்னாகும் துணைத்தேர் மேல் பாய்ந்தேறிப்போய் அங்கு ஒரு வில்லை எடுத்து அதனைத் தனது காதளவும் வந்து வளையும்படி அவ்வில்லை வன்மையாக வளைத்து அதில் எழுநூறு வச்சிரமாய அம்பினைப் பூட்டி மலைபோன்று பருத்த தோள்கொண்ட வீரவாகுதேவர் நெஞ்சில் சென்று பட்டுருவும்படி விடுத்தான். 325

ஆகத்திற் பகழி பாய அறுமுகன் தூதன் முன்னஞ்
சோகத்தை உணர்கி லாதோன் துயரத்தின் சுவையுங் கண்டு
மாகத்தில் இரவி தன்னை வன்சிறை பிணித்தோன் சென்னி
காகத்துக் கிடுவன் என்னா வெகுண்டனன் காலன் போல்வான்.

பானுகோபன் விடுத்த எழுநூறு அம்புகளும் நேராகச் சென்று வீரவாகு தேவரின் நெஞ்சில் பட்டு உருவிப்போதலும், அதுவேளை ஆறுமுகப்பெருமானின் தூதுவரரகும் வீரவாகுதேவர், முன்னர் ஒருகாலும் சோகம் என்பது எது என் பதை அறியாதவர் இப்பொழுது துயரம் என்பதன் சுவை எப்படி என்பதையும் அறிந்தவர் போலாய் அம்பு பட்டதால் துயரம் கொண்டு; சரிசரி வானில் உள்ள சூரியனைக் கொடிய சிறை செய்த பானுகோபனின் தலையை அறுத்துக் காகத் திற்கு இரையாக் கொடுப்பேன் என்று மிக்கதொரு வெகுட்சி எய்தினர் இயமனைப் போன்ற வலுவுடைய வீரவாகுதேவர்; 326

கறுத்திடு வீரன் ஈரேழ் கங்கபத் திரங்கள் ஏவி
அறுத்தனன் சிலையைப் பின்னும் ஆயிரம் பகழி தூண்டி
நொறிற்பரி இரதந் தன்னை நூறினன் நூறு கோலான்
மறுத்தெதிர் பொருத தீயோன் மருமத்தை வாயில் செய்தான்.

மனத்தினில் இவ்வணம் கறுவியமுற்ற வீரவாகுதேவர் பதினன்கு கூரிய அம்புகளைச் செலுத்தி பானுகோபன் பிடித்த வில்லை அறுத்தார். பின்னரும் ஆயிரம் அம்புகளைத் தூண்டி விடுத்து வேகமுடைய குதிரை பூட்டிய பானுகோ பனது தேரினை அழித்தார். தொடர்ந்தும் நூறு அம்பினை விடுத்துத் தன்னுடன் மாறுபட்டுப் போரிட்ட தீயவனுன பானுகோபனின் நெஞ்சம் முழுவதையும் துளைத்து உருவிடச் செய்தார்; 327

வருந்திலன் அதற்கு மைந்தன் வயினுறும் இரத மொன்றின்
விரைந்துடன் புகலும் வீரன் விசிகமா யிரத்தைத் தூண்டி
உரந்திறந் திட்ட வாற்ருல் ஓச்சியே புறத்தில் தூங்கும்
அரந்திகழ் பகழித் தூணி துணிபட அறுத்தான் அன்றே.

வீரவாகுதேவர் இப்படிச் செய்திடவும் கூட பானுகோபன் அதற்கு வருத்த மடையாதவனுய் அருகில் நின்ற இன்னுமொரு துணைத்தேரில் மிகு விசையோடும் சென்று ஏறிக்கொள்ளலும், அவ்வேளை வீரவாகு பின்னரும் ஆயிரம் அம்புகளை அவனது நெஞ்சினைத் துளைசெய்ய விடுத்த அதே அம்பின் தன்மை போன்று விடுத்து அவனது புறமுதுகில் தூங்கிடுகின்ற, அரத்தினல் இராவிக் கூர்மை படுத்திய அம்புகள் நிறைந்திருக்கும் அம்புக்கூட்டை அறுத்தார். 328

தூவுறு பகழித் தூர்க்குந் தூணியிற் றிடலும் நேமிக்
காவலன் தனயன் அம்மா கார்முகம் விஞ்சை தன்னுல்
மேவலன் வென்றி கோடல் அரிதெனு வினைய முன்னித்
தேவர்தே வுதவு மோகப் படையினைச் செங்கை கொண்டான்.

வில்லில் பூட்டி எய்கின்ற அம்புகள் நிறையப் பெற்ற அம்புக் கூடு அறுந் திடலும், உலகிற்கு அரசனுன சூரபன்மன் மகன் பானுகோபன் இது தெரிந்து எண்ணுவான், அம்மவோ! வில்லினுல் புரிந்திடும் போரால் எனது பகைவனை வெற்றி கொள்ளுதல் அரிதாகும். ஆகையால், வேறொரு கருமத்தை நினைந்து கொண்டு தேவாதி தேவன் சிவன் கொடுத்தளிய சிந்தைதனை மயக்கம் செய்தி டும் மோகனுஸ்த்திரத்தைத் தனது செங்கையில் எடுத்துக் கொண்டான். 329

சிந்தனை கவரும் மோகத் தீப்படை அவுணன் செங்கை
வந்திட அனைய போழ்தின் மனத்தினால் வழிபா டாற்றி
வெந்திறல் அனிகத் தோடு மேவலன் தன்னை எய்திப்
புந்தியை அழித்து வீட்டி வருகெனப் புகன்று விட்டான்.

சிந்தையினை மயக்கிடுகின்ற மோகனாஸ்திரமாகிய தீயதொரு படையினை பானுகோபன் செங்கையில் வந்துகொள்ள அதுபோதினில் அப்படைக்கு மனத்தினால் வழிபாடுசெய்து அப்படையை நோக்கி "கொடுமையாகும் திறமையுடைய பூதசேனையோடு என் பகைவன் வீரவாகுவை அடைந்து அவனுடைய புத்தியை மயக்கி அழித்து நீக்கிக் கொலைபுரிந்து வருவாயாக" எனக் கூறிவிடுத்தான். 330

விட்டிடு மோக மென்னும் வியன்படை வெகுளி வீங்கித்
தட்டுடை நெடுந்தேர் வெய்யோன் தன்பெருஞ் சுடர்கள் மாற்றி
நெட்டிருட் படலை வீசி நிரந்தபல் லுயிரும் அஞ்சி
உட்டெளி வகன்று மாழ்க ஒல்லெனப் பெயர்ந்த தன்றே.

பானுகோபன் விடுத்திட்ட மோகனாஸ்த்திரம் என்னும் பெருமையிற் சிறந்த படையானது கோபத்தினால் மிகுந்து புறப்பட்டு அந்நேரமே தட்டுகளை உடைய பெருந்தேர்மீது வந்திடும் சூரிய பகவானின் பெரு ஒளி எல்லாவற்றையும் மாற்றி எங்கும் பெருகுகின்ற இருட்பிழம்புகளை வீசிக்கொண்டு உலகில் வாழ்ந்திடும் பல உயிர்களும் பயந்து உள்ளத் தெளிவின்றி மயங்கிட விரைவுடன் புறப்பட்டு வந்தது. 331

பெயர்ந்திடு மோக நாமப் பெரும்படை ஊக்க நோக்கித்
துயர்ந்தனர் வெருவி ஆற்றத் துளங்கினர் துணுக்கென் றுள்ளம்
அயர்ந்தனர் பூதர் யாரும் மவ்வவர் தலைவ ரானோர்
சயந்தனை இழந்து நின்று சாம்பினர் தேம்பு கின்றார்.

இவ்வணம் பலரும் அஞ்சிட வேகமுடன் வந்திடும் மோகனாஸ்த்திரம் என்னும் பெரும் படையின் ஊக்கவலியினைப் பார்த்துத் துயரம் கொண்டு பயந்து மிகவும் நடுங்கி பூதங்கள் யாரும் உள்ளம் திடுக்கிட்டு அயர்ந்தனர். அந்த அந்தப் பூதங்களின் தலைவரானோர் யாவரும் வீரத்தை இழந்து நின்று சோர்ந்து என் செய்தும் எனக் கவலைகொண்டனர். 332

வேறு

மோகப் படைசே றலுமுந் தெதிர்மா
றேகப் படையொன் றையுமே வுகிலார்
சேகப் படைத் தொடைசிந் தினரால்
மாகப் படைமொய்ம் புடைவள் ளல்பினோர்.

இவ்வாறான நிலையில் மோகனாஸ்த்திரம் வருதலும் அதுகண்டும் அதன் முன்பு மாறாகச் சென்று அதன் வலியைக் கெடுக்கவல்ல வேறெப் படையும் விட்டிடாது வேறு வேறாகப் பல தெளிவுதரும் தேவர்களின் படைகளை எடுத்தெடுத்து வீசினார்கள் வீரவாகுதேவரின் தம்பிமாராயுள்ள மற்றைய இலக்கத்து எட்டுப் பேர்களும். 333

அந்தத் திறல்வெம் படையாற் றலுடன்
வந்துற் றுழிமே லவன்மற் றிதுதான்
எந்தப் படையால் அழிவெய் துமெனுச்
சிந்தித் தனன்வே றெருசெய் கையிலான்.

இவர்கள் விடுத்திட்ட தெளிவுதரும் தேவப் படைகள் யாவற்றையும் தன் வலியால் அடக்கியவாறு மோகஞஸ்த்திரம் மேற்கொண்டு ஆற்றலுடன் வருத லும், அதுகண்ட வீரவாகுதேவர் எந்தப் படையால் இதன் ஆற்றலை அடக்கலா மெனச் சிந்தை செய்திட்டார். அங்கு அதுவன்றி வேறெரு செயலும் செய்திட வன்மையிலாதவராயினர். 334

ஒன்ரு முதலோன் இவையுன் னுதலும்
அன்ரு லம்வருந் திறஞ மெனவே
சென்ருர் உணர்வுஞ் சிதைவித் ததுபோர்
வென்ருர் புகழ்மோ கவியன் படையே.

பூதசேனைகட்கு எல்லாம் தனியொரு தலைவனுகும் வீரவாகுதேவர் இந்த வகையால் எண்ணங்கொண்டு சிந்தித்து நிற்றலும் அதன் முன்பே கொடிய ஆல காலம் வந்திடும் தன்மைபோன்று மோகஞஸ்த்திரம் வந்து வீரவாகுதேவருடன் எல்லாரின் உணர்ச்சிகளையும் சிதைவு செய்தது. அப்படையானது போரில் வெற்றி கொள்வார் புகழ்கின்ற மிக மேலான மோகஞஸ்த்திரமாகும்.

போர் வென்ருர் புகழ்மோகவியன் படை என்றது, பகைவரை வெற்றி கொள்வார்கள் பகைவரின் புத்தியினை வஞ்சனையால் மயக்கித்தான் வெற்றி பெறுவர். இதற்கு உரிய படையாவதும் இதுவாதலின், வெற்றி பெற்ருர்கள் புகழ்வது தமது சூழ்ச்சியின் வஞ்சனையின் வலியையே எனப் பொருள் கொள் ளப்படுகின்றது. 335

இலக்கத் துடன்எண் மரும்ஏ னையரும்
அலக்கத் துடன்வீழ்ந் தனர்மாற் றலரூர்
கலக்குற் றிடுகா ளைகருத் தழியா
நிலைக்கட் படுகந் தெனநின் றனனுல்.

இதுவேளை இலக்கத்து எட்டு வீரரும்; ஏனைய பூதசேனதிபதிகளும் பூதங்க ளும் அலக்கட்பட்டு மயக்குற்று வீழ்ந்தனர். ஆனுல், பகையசுரர் ஊரினை அன்று கலக்கி அழிவுசெய்த வீரவாகுதேவர் நிலத்தினிலே நாட்டப்பெற்றதொரு தம் பம்போன்று அசைவற்றுச் செயலிழந்து நின்ருர். 336

நிற்கும் பொழுதத் தினின்நீ டகல்வா
னற்கும் பரிதிப் பகையங் கதுகண்
டெற்கின் றெதிரா யினர்யா வருளார்
நற்குன் னினன்என் றுநகைத் தனனே.

வீரவாகுதேவர் மயங்கி அசைவின்றி நிற்கும்பொழுது, நீண்டு அகன்ற வானிலே செல்லும் சூரியதேவனின் பகையான பானுகோபன் இதுகண்டு, "அச்சோ! எனக்கு நிகராயினர் இனி யாவருளர்? இப்பொழுது யான் சரியான முறையிலே நினைந்து கருமமாற்றினேன்" என மகிழ்வால் நகைத்தான். 337

புகழுற் றிடுமே லவர்புந் தியின்மா
றிகழுற் றிடுபெற் றிதெரிந் தவுணன்
மகிழுற் றுநகைத் துவயம் புனையா
நிகழுற் றிடுசீ ரொடுநின் றனனே.

தருமத்தை உலகினில் நிலைநாட்டலாலே புகழ்படைத்த மேலோராகும் வீரவாகுதேவரும், துணைவர்களும் மனதில் மயக்கம் பொருந்தி, செயலின்றி நின்ற தன்மையைப் பானுகோபன் தெரிந்து மகிழ்ந்து, சிரித்து, எல்லோரையும் தான் வென்றிட்டான்போன்று மிகுந்த பெருமையும் சீரும் சிறந்து நிகழ்ந்திட அங்கு நின்றனன். 338

மல்வன் மைகொள்மொய்ம் பனுமற் றவருந்
தொல்வன் மையிலா துடல்சோர்ந் தனரால்
வில்வன் மையினல் இவர்வீ டுறவே
கொல்வன் கடிதென் றுகுறித் தனனே.

மலைபோன்ற வலியுடைய தோள்கொண்ட வீரவாகுதேவரும், மற்றையோரும் தமது முன்னைய வலியாவும் குன்றி உடலமும் சோர்வுற்றனர். இனிமேல் இவரால் ஒன்றுமே செய்யமுடியாது. எனது வில் வலியால் கொடிய அம்புகள் பல வற்றை விடுத்து இவர்கள் யாவரையும் கொல்வேன் என்று மனதில் பானுகோபன் எண்ணினன். 339

வரிகின் றவில்வாங் கினன்வா லுணர்வு
திரிகின் றவன்மேற் சிலைவீ ரர்கள்மேல்
விரிகின் றகணப் படைமேல் விசிகஞ்
சொரிகின் றனன்யாக் கைதுளைத் தனனே.

எண்ணியபடியே பானுகோபன், வாரினல் வரிந்து இறுக்கிய வில்லை வளைத்தான். அதிலே அம்பினைப் பூட்டிப் பூட்டி, மேலாகும் உணர்வுகள் யாவும் கெட்டு மயங்கிய வீரவாகுதேவர் மேலும்; பரந்து பெருகி நின்றிட்ட பூதப்படைகள் மேலும்; மற்றைய வில் வீரர்கள் மேலும் சென்றுநவ விடுத்து விடுத்து அறிவு சோர்ந்திட்ட அவர்களின் உடலங்களைத் துளைத்திட்டான். 340

ஆங்கா கியவே லையில்ஆ றுமுகன்
பாங்காம் விறலோ னெடுபா ரிடர்கள்
நீங்கா மருள்மால் கொடுநே ரலனல்
தீங்கா யினதன் மைதெரிந் தனனே.

அவ்வாறான பலருக்கும் கவலை தரும் இச்செயலைப் பாவியாகும் பானுகோபன் செய்திடும் நேரத்தில், ஆறுமுகமுடைய பகவான் வலியால் மிகுந்த பாங்குடைய வீரவாகுதேவருடன் துணைவராகும் வீரர்கள் அனைவரும், பூதங்களும், பூதவேந்தரும் பானுகோபனல் விடப்பட்ட மோகப் படையால் நீங்க முடியாததொரு பெருமயக்கம் அடைந்த தன்மையைத் தெரிந்தருளினர். 341

தெரிந்தான் முகமா றொடுசேர்ந் துயிர்தோ
றிருந்தார் அருள்செய் திடுமெம் பெருமான்
விரைந்தாங் கொரமோ கவியன் படையைப்
புரிந்தான் அதனோ டுபுகன் றிடுவான்.

இதனைத் தெரிந்துகொண்டான் ஆறுமுகமுடன் பல உயிர்தோறும் இருந்து கொண்டு மேலாகும் இன்பமான அருளினைப் புரிந்தருளும் எம்பெருமான். உடனாக விரைவுடன் அங்கு மோகமெல்லாவற்றையும் நீக்கிடும் ஒரு ஞானப்படையைப் படைத்து அப்படைக்கு இதனைச் சொல்லியருள்கின்றார். 342

நன்றே தெளிவுற் றெமர்நண் ணும்வகை
நின்றே திலன்விட் டநெடும் படைபாற்
சென்றே அதன்வன் மைசிதைத் திவண்நீ
வென்றே வருகென் றுவிடுத் தனனே.

"ஞானப் படையே! நன்றாக எமது வீரர்கள் தெளிவு அடைந்து சிறந்து கொள்ளும் பொருட்டாக; இதுபோது அவர்களை மயக்கிடும்படி பகைவனான பானுகோபன் விடுத்திட்ட மோகப்படையாம் பெரிய படையிடத்து நீ சென்று அந்த மோகப்படையின் வலியைச் சிதைத்திட்ட பிற்பாடு இவ்விடத்து நீ வெற்றியுடன் வருவாயாக" என விளம்பி விடுத்திட்டார். 343

ஏண்கொண் டசிவன் மகனே வுபடை
சேண்கொண் டுபடர்ந் திருள்சிந் தையராய்த்
தூண்கொண் டிடுதோ ளவர்துன் னியதோர்
மாண்கொண் டசெருக் களம்வந் ததுவே.

அருளின் பெருமையாகும் சிவன் குமரனை மூர்த்தி விடுத்துள்ள ஞானப் படையானது புறப்பட்டு வானில் எழுந்து இருள்கொண்ட சிந்தையுடையராய் ஒன்றும் தெரியாது மயங்கியவாறு இருக்கின்ற தூண்போன்ற பெருவலியுடைய வீரர்கள் நின்றிட்டதொரு மாண்புடைய அப்போர்க்களத்து விரைவுடன் வந்தருளியது. 344

மிடல்கொண் டவமோ கவியன் படைசென்
றிடுகின் றுழிவெய் யவனே வுபடை
அடல்கொண் டிடும்வீ ராகத் தில்இருள்
உடையும் படிவல் லையினோ டியதால்.

வலியால் மிகுந்துள்ள ஞானப்படையானது போர்க்களத்து வந்திட்ட நேரத்து, கொடியோனான பானுகோபன் விடுத்திட்ட மோகப்படை அதுகண்டு அஞ்சி வலிகொண்டுள்ள வீரர்கள் உள்ளத்து, தான் உண்டாக்கி வைத்த மயக்கமாகும் இருள் சிதைந்திடும்படி அவ்விடம் விடுத்து விரைவாக ஓடியது. 345

அசைகொண் டவுடுத் திரளா னவெலாம்
மிசைகொண் டவினன் வரவே கியபோல்
திசைகொண் டிடுநம் மவர்சே னையொரீஇ
விசைகொண் டவுணன் படைமீண் டதுவே.

இரவிலே வானில் தோன்றிடும் நட்சத்திரங்கள் யாவும் காலையில் சூரிய தேவன் உதயமாகி மேல் தோன்றி வந்திடலால் ஒளிகெட்டு மறைந்து போதலை ஒத்து; திக்கெல்லாம் புகழப்படும் எமது வீரர்களின் சேனையை விடுத்துப் பானு கோபனின் மோகப்படை மிக்க விசைகொண்டு விலகி ஓடிப்போயது. 346

மோகத் தனிவெம் படைமொய்ம் பிலதாய்
ஏகத் திறல்வா குவும்ஏ னையரும்
ஆகத் தினின்மை யல்அகன் றமலன்
வாகைப் படைகண் டுமகிழ்ந் தனரே.

பானுகோபன் விடுத்த மோகப்படையானது வலிகெட்டு ஓடிப்போயிட, அந்நேரம் திறல்மிகுந்த வீரவாகுதேவரும் மற்றையோரும் அருளால் தங்கள் உடலில் உள்ள சோகமயக்கம் நீங்கி, நின்மலனாகும் முருகப்பிரானின் ஒளியுடைய ஞானப் படையினைக் கண்டு மகிழ்வாயினர். 347

அழலுற் றதுபோ லஅகல் மணியின்
நிழலுற் றிடுதேர் மிசைநின் றவனும்
எழலுற் றிடுவீ ரர்கள்யா வர்களுந்
தொழலுற் றனர்நின் றுதுதித் தனரே.

நெருப்பின் காட்சிபோன்று சிவந்து, முழுவதும் அழகிய இரத்தினத்தினாலாகிய ஒளி விளங்கிடும் தேர்மேல் நின்றிட்டபடியே மயக்கம் தெளிவுற்ற வீரவாகுதேவரும்; மயக்கம் நீங்கி எழுந்துகொண்ட வீரராயுள்ளோரும், பூதங்களும், யாவர்களும் எம்பிரானது அருளின் விளைவாகிய ஞானப்படையைக் கண்டு கைகூப்பித் தொழுதார்கள். நின்று துதித்தார்கள். 348

செயிர்கொண் டகருத் தொடுசெற் றலர்தம்
உயிர்கொண் டிடுவோன் படையூற் றமெலாம்
அயிர்கொண் டிடஅட் டதன்ஆற் றல்தெரீஇ
மயிர்கொண் டபொடிப் பொடுவாழ்த் தினரால்.

கோபங்கொண்ட கருத்தோடு பகைவருடைய உயிரை உண்கின்ற பானுகோபனது மோகப்படையின் வலியாவற்றையும் துகள்படும்படி அழித்துவிட்ட ஞானப்படையின் வலியைத் தெரிந்துகொண்டவராய் வீரவாகுதேவர் முதலாகச் சகலரும் உரோமங்கள் சிலிர்த்திட அந்தப் படையை வாழ்த்தெடுத்தார்கள்; 349

தீயோன் படைசெய் தசெயற் கையில்யாம்
மாயோ மருளென் கையகத் தடையா
வாயோ டுரைவீ ரமறுத் தனராய்
ஏயோ வெனவெள் கினர்யா வருமே.

இது மட்டன்றித் தீயோனாகும் பானுகோபன் மோகப்படை விடுத்திட அப்படையின் செய்கையால் யாம் எல்லாரும் அறிவுகெட்டு மயங்கினோமல்லவோ என உள்ளத்தெண்ணி; ஆகையால் எமக்கு இனி என்ன வீரப்பேச்சு, வீரச் செயல், எல்லாமே வேண்டாம் என்று ஏ! ஒ! எனக்கூறி யாரும் வெட்கம் அடைந்தார்கள். 350

அண்டா தவனுல் எம்மகத் திலிருள்
உண்டா கியதன் மையுணர்ந் தறிவன்
விண்டா னுறஇப் படைவிட் டனனென்
றெண்டா வுமுளத் திடையெண் ணினரால்.

பகைவனுன பானுகோபனுடைய மோகப்படையால் எம் உளத்தில் இருள் கொண்டு மயக்குற்ற தன்மையை அறிவுக்கறிவாகிய ஆறுமுகப்பிரான் உணர்ந்து, அந்த மோகனுஸ்திரம் கெடுமாறு இந்த ஞானப்படையை விடுத்தருளினுன் என, எண்ணம் பலவாக விளங்கிடும் தமது உளத்து எண்ணினுர்கள். 351

முந்நான் கெனுமொய்ம் புளமூர்த் திதனை
உன்னு அருள்நீர் மையுளத் தடையா
அன்னுர் தொழுதேத் தினர்அத் துணையின்
மின்னு மெனஅப் படைமீண் டதுவே.

பன்னிரு தோள்களுடன் விளங்கிடும் மூர்த்தியாய முருகனை நினைந்து அவனது அருள் நீர்மையினை உள்ளத்தில் இருத்தி மகிழ்ந்து அவர்கள் யாரும் கைகூப்பித் தொழுது எம்பிரானை அங்கு நின்று யாவரும் வணங்கினுர்கள்: அந்நேரத்தில் ஞானப்படையானது அனைவர்க்கும் நல்லருள் புரிந்து எம்பிரான்பால் மீண்டருளியது: 352

மீண்டுற் றவமோ கவியன் படைபோய்த்
தூண்டுற் றருகன் புடைதுன் னியதால்
ஆண்டுற் றிடும்வீ ரர்கள்அண் டலன்மேல்
மூண்டுற் றிடுபூ சல்முயன் றனரே.

மீண்டருளிப்போய ஞானப்படையானது சென்று தன்னைத் தூண்டியருளிய ஞானச் செல்வராகும் குமரமூர்த்தியின் பக்கராக அடைந்துகொண்டது: அவ்வேளை அங்கு போர்க்களம் நின்றிட்ட வீரவாகுதேவர் முதல் வீரர்கள் யாவரும் பகைவனுன பானுகோபன்மேல் மூண்டுகொண்ட போரினை மீண்டும் ஆரம்பித்தனர்; 353

ஆங்குற் றிடுகா லையடுந் திறலின்
பாங்குற் றிடுமொய்ம் புபடைத் துடையோன்
நீங்கற் கருமா னமும்நீள் சினமும்
ஓங்குற் றெழவின் னதையுன் னினனே.

அவ்வாருகிய காலையில் தீங்குகளை அழிக்கின்றமைக்கு ஏற்ற வலியுடைய தோள்கொண்ட வீரவாகுதேவர் மனதில் நீங்கிடற்கரிய மானமும் ஆருது நீண்டு பெருகுகின்ற கோபமும் மேலோங்கி எழுந்திட, இதனைத் தமது மனத்தில் எண்ணினுர். 354

அந்நே ரலன்ஊண் டொரடற் படையான்
முன்னே மயல்செய் தமுரண் தொலைய
இன்னே அடுவேன் எனஎண் ணமுருக்
கொன்னே அரன்மாப் படைகொண் டனனே.

அந்தப் பகைவனுகும் பானுகோபன் இவ்விடத்துக் கொடியதொரு மோகப் படையால் முன்னே எங்களை மயக்கிவிட்ட அவனது சாமர்த்தியம் தொலைந்திட இப்பொழுதே அவனைக் கொல்வேன் என எண்ணிக்கொண்டு உடனுகச் சிவபிரானது சிவப்படையைக் கையில் எடுத்துக்கொண்டார் வீரவாகுதேவர். 355

அங்கத் துணைகண் டனன்அவ் வசுரன்
எங்கட் கிறைவன் படைஏ கியதும்
வெங்கட் படுதன் படைமீண் டதுவுஞ்
செங்கட் டிறல்அண் ணல்செயற் கையுமே.

அத்தன்மையை அங்கு நின்ற அந்த அசுரன் பானுகோபன் கண்டான்; எங்கட்கு இறையான முருகப்பிரான் படையாகும் ஞானப்படை அங்கு வந்ததும் அதனைக் கண்டு மிகவும் கொடுமைகொண்ட தனது மோகப்படை மீண்டதும், அதன்பின்னுல் சிவப்பேறிய கண்களுடன் திறமை பூண்டு நின்ற வீரவாகு தேவர் சிவப்படையைத் தன்மேல் படும்படியாக எடுத்துக்கொண்டமையையும்;

வேறு

இம்மெனச் சூர்மகன் இவற்றை நோக்குரு
விம்மிதம் எய்தினன் வீர மொய்ம்புடைச்
செம்மலை எதிர்ந்திலன் செருக்கு நீத்தனன்
கைம்மிகு துயரினன் கருதல் மேயினுன்.

திடீரெனப் பானுகோபன் இவற்றைக் கண்டு ஆச்சரியம் கொண்டான்; வீரவாகு என்னும் எம் தலைவருடன் போரிட எதிர்ந்து போகவில்லை. மனதில் கொண்ட பெருமிதம் யாவும் நீங்கினுன்; கட்டுப்படுத்திட முடியாத துயரம் அடைந்தான்; இதனைச் சிந்தனை செய்திடுகின்றான்: 357

இவ்விடை ஒன்னலர் எண்ணம் யாவையும்
வவ்வினன் மாநில வரைப்பின் வீட்டினன்
உய்வகை பெற்றுடன் உணர்ந்து தோன்றினுர்
செய்வதென் ஐயகோ கடவுள் செய்கையே.

இவ்விடத்து எனது பகைவரது உணர்ச்சிகள் யாவற்றையும் மோகப்படையால் கவர்ந்து மயங்கவைத்தேன். இப்பூமியில் அவர்கள் யாரையும் வீழ்ந்திடச் செய்தேன். அப்படியாக என்னுல் செய்யப்பெற்று அழியும்படியான இவர்கள் யாரும் உய்யும் தன்மைபெற்று மீண்டும் எழுந்து தோன்றுகிறுர்கள். நான் என்ன தான் செய்வேன். ஐயய்யோ இதுவெலாம் கடவுளின் செயல்போலும்; 358

எடுத்தனன் மாற்றலன் இறைவன் மாப்படை
தொடுத்திடு வான்எனில் துன்னி என்னுயிர்
படுத்திடும் யானது பரித்து வந்திலன்
விடுத்துடன் அப்படை விலக்கும் வண்ணமே.

எனது பகைவன் வீரவாகுதேவன் சிவப் படைக்கலத்தைக் கையில் எடுத்திட்டான். அதனை விடுத்திடுவான் எனில், அது வந்து எனது உயிரைக் கொன்றிடும். யானும் எனது சிவப் படைக்கலத்தை கையில் எடுத்து வந்தேன் இல்லை. அவ்வாறு கொண்டு வந்திருந்தால் அப்படையை விடுத்து வீரவாகு விடுத்திடும் படையை விலக்கி மாற்றியிருக்க முடியும். 359

வென்றிடல் அரிதினி வீர வாகுவைச்
சென்றனன் முதுநகர்த் தெய்வ தப்படை
மன்றவுந் தந்திவன் வன்மை மாற்றுவன்
நின்றிடல் பழுதென நெஞ்சில் உன்னினுன்.

இங்கு நின்று இப்போது வீரவாகுவை வென்றிடல் அரிதாகும். ஆகையால் எனது நகரிடத்துத் திரும்பிச் சென்று அங்கு என்னிடத்துள்ள தெய்வப் படைகள் முழுவதையும் எடுத்துவந்து இந்த வீரவாகுவின் வலியை நீக்குவேன். இதுவன்றி இங்கு இனி நிற்கின் இது பழுதாகும் எனத் தன் நெஞ்சில் பானுகோபன் நினைத்தான். 360

அயன்மகன் மதலேசேய் அருவ மாகியே
வியன்மிகு தனதுதேர் விடுத்து விண்ணெழீஇப்
பயனறு முகிலெனப் படர்ந்து வல்லேயின்
நயனுறு கடிமதில் நகருட் போயினுன்.

இவ்வாறு எண்ணிய பிரமதேவரின் புத்திரனுகிய காசிப முனிவரின் மைந்தனுகும் சூரபன்மன் பிள்ளை பானுகோபன் உடனே அருவமாகி மாயையால் தன்னை மறைத்து மேலாக விளங்கிடும் தனது தேரை விடுத்து வானில் எழுந்து மழை பெய்திட வந்தும் பெய்திடாது காற்றுல் அடியுண்டு செல்லும் மேகம் போன்று வேகமாகச் சென்று நயம் விளங்கிய மதில் சூழ்ந்த தன் நகரினுட் போயினுன். 361

கொற்றவன் மறைந்தகல் கொள்கை காண்டலுஞ்
சுற்றுறு தானவர் தொலேந்து போயினுர்
அற்றது தெரிந்திடும் அமரர் யாவரும்
வெற்றிஇன் றெமதென விளம்பி ஆர்த்தனர்.

தங்கள் தலேவனுன பானுகோபன் மறைந்து ஓடிப்போய கொள்கை காண்டலும் அவனேச் சூழ்ந்து நின்ற அசுரர் யாவரும் தொலேந்து ஓடிப்போயினுர்கள்: அதனே யாவும் தெரிந்துகொண்ட தேவர்கள் யாவரும் இன்று எமக்கு வெற்றியாயது என்று மகிழ்வால் ஆரவாரித்தனர். 362

மாயையின் அருவமாய் வஞ்சன் மாநகர்
போயினன் காலையே புகுவன் போர்க்கினி
ஆயவன் தனைவிரைந் தடுதி என்றுபூத்
தூயினர் வீரன்மேற் சுரர்கள் யாவரும்.

மாயையின் வலியால்; வஞ்சனுகும் பானுகோபன் தனது உருவைப் பிறர் அறியாதவண்ணம் அருபியாகத் தலைநகரினுட் போன காலையில்; அது கண்டார்ப் பரித்த தேவரெல்லாம் இப்பானுகோபன் இனியும் போரிட வருவான், அவ்வணம் வருவானைத் தேவரீர் விரைவுடன் சங்கரிப்பீராக என்று வீரவாகுதேவர் மேல் பூச்சொரிந்து வாழ்த்தினுர்கள். 363

தினகரன் மாற்றலன் செம்பொற் றேரொரீஇ
இனைவுடன் அருவமாய் இரிந்து போதலை
வினையமொ டோர்வுரு வீரன் நின்றனன்
முனிவொடு பிழைபடு மூரி யானைபோல்.

சூரியன் பகைவனுன பானுகோபன் செம்பொன்னுற் செய்யப்பட்ட தேரை விடுத்து, வருத்தத்துடன் அருபியாகி மறைந்துபோதலை மிகும் ஏமாற்றத்துடன் கவனித்தவாறு கோபமுடன் நின்றனர் வீரவாகுதேவர். எப்படியெனில், ஒரு மதயானை தாக்கிடச் சென்ற பகைமிருகம் தவறிட, அதுவேளை கோபத்துடன் வெறிகொண்டு அது நிற்கும் தன்மை போன்று. 364

விண்டிடு சூர்மகன் வெருவி வெந்நிடல்
கண்டனர் துணைவருங் கணத்தின் வீரருந்
திண்டிறல் இழந்தனன் தீயன் பற்றிநாங்
கொண்டணை வாமெனக் கூறல் மேயினர்.

ஓடிப்போன சூரபன்மன் மகன் பயந்து புறமுதுகிட்டோடியதைக் கண்டனர் வீரவாகுதேவரின் தம்பிமாரும், பூதகணங்களின் வீரரும். அவர்கள் சொல்வார்கள் "ஓகோ! தீயவனுன பானுகோபன் திண்மையாகும் போர்த்திறமையை இழந்தான். பொல்லாங்கு நிறைந்த இவனைப் பிடித்து நாம் இங்கு கொண்டு வருவோம்." 365

என்பது விளம்பியே யாரும் ஆர்ப்பொடு
துன்புறும் அவுணனைத் தொடர்ந்து பற்றுவான்
முன்பொடு முயறலுந் தெரிந்த மொய்ம்பினன்
தன்புடை யோர்க்கிது சாற்றல் மேயினன்.

என்பதான இந்த வார்த்தையை யாவரும் கூறி ஆர்ப்பரித்துக்கொண்டு வருத்தமுடன் ஓடிப்போன பானுகோபனைத் தொடர்ந்து பிடிக்கும்படி முற்பட்டுப்போக முயற்சி செய்தலும், அதுகண்ட வீரவாகுதேவர் தமது பக்கராக நின்றிட்ட இவர்களுக்கு இதனைச் சொல்லியருள்கின்றார். 366

பேடியர் சிறுதொழில் பேணி உள்வெரீஇ
ஓடினன் போகிய ஒன்ன லான்றனை
நாடிநாம் அடுவது நலத்தின் பாலதோ
சாடுவன் இனிவரிற் சரதம் யானென்றான்.

போர்க்களத்துப் போரிட வந்த பானுகோபன் ஆண்மையில்லாத பேடித் தொழில் செய்வாரின் அற்பத் தொழிலைச் செய்துகொண்டு உள்ளம் பயந்து ஓடிப் போய்விட்டான். ஆகவே, பயந்தோடிப்போன பகைவனான பானுகோபனை நாடிச்சென்று கொல்வது நன்மையின் பாலானதோ? அன்று. ஆகவே, இனிமேலாக அவன் வரின் கொல்வேன் என்றார் வீரவாகுதேவர். 367

என்றிவை வள்ளலும் இயம்ப யாவரும்
நன்றென இசைத்தலும் அவற்றை நாடியே
குன்றுறழ் புயத்துணை கொட்டிக் குப்புறீஇ
வென்றிகொள் பாரிட வெள்ளம் ஆர்த்தவே.

என்று இவைகளை வள்ளலான வீரவாகுதேவர் இயம்புதலும், அதுகேட்ட அவர்கள் யாவரும் நன்று, அந்தவாறே செய்வோம் என்றிடலும், அவற்றையெல்லாம் அறிந்துகொண்ட பூதங்களாய வெள்ளம் யாவும் மலைபோன்ற தங்கள் தோள்களைத் தட்டி குட்டிக்கரணமடித்துக் கூத்தாடி வெற்றி கொண்டாடி மகிழ்ந்து ஆர்ப்பரித்தன. 368

முற்றிய தமர்இனி முயல்வ தில்லையால்
செற்றலன் ஓடினன் திரும்பும் வீரனும்
நிற்றிலன் இனியென நினைந்து நீங்குவான்
உற்றன னுமென இரவி யோடினன்.

இப்பால் மேற்குத் திசையை நோக்கிச் சென்ற சூரியதேவனும்; போர் முடிந்தது. இனிப் போர் முயற்சியை யாரும் செய்திடார். பகைவனான பானுகோபன் ஓடினான். வீரவாகுதேவரும் இனித் திரும்பிச்செல்வார். ஆகவே, நான் இங்கு இதனைப் பார்த்து நிற்கமாட்டேன் என நினைந்துகொண்டு தானும் நீங்கிக் கொண்டு போவதைப்போன்று மேற்றிசையில் சென்று அத்தமனமாயினான். 369

செந்திரு மதுமலர் செறியப் பூத்துழி
முந்துறு நித்திலம் முழுது மொய்த்தென
அந்தர முழுவதும் அடைந்த செக்கரில்
சுந்தர உடுநிரை பலவுந் தோன்றிய.

இலக்குமி தேவி வாழும் செந்தாமரைமலர் நிறைய எங்கும் செறிந்து ஒரு குளத்தில் பூத்திருக்கும் நேரத்தில், அக்குளத்தில் உள்ள முத்துக்கள் முழுவதும் நெருங்கிப் பூக்களுடன் மொய்த்திருப்பதுபோன்று; சூரியன் அத்தமனமானதால் வானமெல்லாம் நிறைந்து தோன்றிய செக்கரில் அழகுடைய வெள்ளிகள் பலவும் ஒளியுடன் தோன்றி நின்றன. 370

குண்டுநீர்க் கனலொடு குலாவி மாலுளத்
தெண்டகு தமியரை இகலி மாமதி
பண்டுள முனிவரா பரமன் மேல்விடு
வெண்டலை யாமென விண்ணில் தோன்றினான்.

நிறைந்த சமுத்திரத்தில் உள்ள வடவை என்னும் நெருப்பில் கலந்து உலாவி, அத்தகைய வெப்பைப் பெறுதலாலே செம்மை நிறங்கொண்டு காம மயக்கத்தால் தனித்திருப்பாரை வெறுப்படைய வைத்து; பெரிய சந்திரதேவனவன் முன்னுள்ள தாருகாவனத்து முனிவர்கள் சிவபிரான் மீது போரிட விடுத்துள்ள வெண்டலைபோன்று வானில் உதயமானன். 371

இத்துணை வேலையில் இலக்கத் தெண்மராம்
மெய்த்துணை யார்களும் வெய்ய பூதரும
அத்துணைப் படைகளும் அயலிற் சென்றிட
மொய்த்துணை விறலுடை மொய்ம்பன் மீண்டனன்.

இவ்வாருகிய நேரத்தில் இலக்கத்து எட்டுப்பேர் எனப்படும் உண்மை விசுவாசமுடைய தம்பிமாரும், கொடிய பூதங்களும் ஆகிய அந்தத் துணையான படைகள் தனது அயலாக வந்திட, தோளே தனது துணையாக வலிமை கொண்ட வீரவாகுதேவர் மீண்டருளினர். 372

அந்தமில் கயிலையை அருளிற் போற்றிடு
நந்திதன் கணத்தரின் நாத னுகியோன்
விந்தைகொள் செருநிலம் ஒருவி மீண்டுபோய்க்
கந்தவேள் பாசறைக் கண்ணுள் நண்ணினன்.

முடிவு என்பதில்லாத திருக்கைலாய மலையை அருளின் வண்ணம் காவல் கொண்டருளும் நந்தியெம்பெருமானின் கணங்கட்கு எல்லாம் நாதனுகிய வீரவாகுதேவர் விந்தைகள் பல நிகழ்ந்திட்ட போர்க்களத்தை விடுத்து நீங்கி, மீண்டு போய்க் கந்தக் கடவுள் வீற்றிருந்தருளுகின்ற பாசறைத் தலத்தைச் சேர்ந்தருளினர்: 373

நண்ணிய திறலினன் நான்மு கன்முதற்
புண்ணிய மேலவர் போற்ற ஆண்டுறு
கண்ணுதல் அருள்புரி கந்தன் முன்புபோய்த்
துண்ணென வணங்கினன் துணைவர் தம்மொடும்.

பாசறைத் தலத்தினிடை சேர்ந்துகொண்ட திறலுடைய வீரவாகுதேவர் நான்கு முகமுடைய பிரமதேவர் முதலாகப் புண்ணிய வினையில் மேம்பட்ட மேலாகிய கடவுளர் போற்றி வணங்கிட, அவ்விடத்து வீற்றிருந்தருளும் நெற்றிக்கண்ணுடைய சிவபிரான் தந்தருளிய முருகப்பிரான் முன்பாகச் சென்று விறுக்கென்று தனது தம்பிமாருடன் எம்பிரானை வணக்கஞ் செய்தார். 374

வணங்கினன் எழுந்துபின் வள்ளல் தேர்ந்திட
இணங்கலன் தன்மகன் எதிர்ந்து போர்செயா
அணங்குடன் இரிந்ததும் அனைத்துஞ் செப்பலுங்
கணங்களின் முதல்வன்மேற் கருணை ஆற்றினன்.

வீரவாகுதேவர் வணக்கஞ்செய்து எழுந்து பின்னர் எம் அருள்மூர்த்தியா யாகிய ஐயன் அறிந்துகொள்ளுமாறு; எம்பிரான் வார்த்தைகளுக்கு இணங்கிடாத பகைவனுகும் சூரபன்மன் மகன் பானுகோபன் தங்களுடன் எதிர்ந்து போரிட்டு பயந்து விலகியோடிப்போன வரலாறு அத்தனையும் செப்பலும், அதனைக் கேட் டருளிய எமது உயிர்க் கடவுளாகும பகவன் பூதகணங்கட்கெல்லாம் தலைவரா கும் வீரவாகுதேவர்மேற் கருணை புரிந்தார். 375

நல்லருள் புரிந்தபின் நம்பி இப்பகல்
தொல்லமர் உழத்தலில் துன்பங் கூர்ந்துளாய்
எல்லிது பொழுதுநின் இருக்கை தன்னிடைச்
செல்லுதி துணைவரோ டென்று செப்பினுன்.

பெறற்கரிய நல்ல அருளை வீரவாகுதேவர்க்கு எம்பிரான் கொடுத்தருளிய பிற்பாடு வீரவாகுதேவனை நோக்கி, "நம்பி இன்று பகற்பொழுதெலாம் மிகக் கொடிய போரினைப் புரிவதால் துன்பப்பட்டுளாய் போலும். இப்போதைய இரவினில் உனது இருக்கை தன்னிடத்து உன் துணைவருடன் செல்வாயாக" எனக் கூறியருளினுர். 376

செப்பலும் விடைகொடு செம்மல் பின்னவர்
மெய்ப்படு பாரிடம் விரவச் சென்றுராய்
ஒப்பருந் தனதுபேர் உறையுள் வைகினுன்
துப்புறு தானைகள் தொன்மை போலுற.

எமது பகவான் இவ்வாறு கூறியருளலும், இதுகேட்ட வீரவாகுதேவர் எம் பிரானிடம் விடை பெற்றுக்கொண்டு தனது தம்பியருடன் உண்மைநிலை தவறி டாத பூதகணங்கள் நெருங்கி வந்திடச் சென்றுபோய்த் தனது ஒப்பற்ற இருப் பிடத்துத் தங்கியருளினுர். பெருமையாற் சிறந்த பூதசேனைகளும் தத்தமது இருப்பிடங்களை அடைந்திருந்தன. 377

சேயவன் விடுத்திடு சேனை பாசறை
போயதும் இருந்ததும் புகலுற் ரும்இனி
மாயிரு வளங்கெழு மகேந்தி ரப்பதி
ஆயிடை நிகழ்ந்தவா றறியக் கூறுவாம்.

முனிவர்களே! உங்கட்குக் குழந்தை வடிவாகும் ஈசன் விடுத்திட்ட பூத சேனைகள் பாசறையில் போய் தங்கிய தன்மையையும், இருந்த வரலாற்றையும் எடுத்துக் கூறினேம். இனி, எவராலும் பெற்றிடற்கரிய பெருவளத்தினை உடைய வீரமகேந்திரபுரத்திலே அங்கு நடைபெற்ற வரலாறுகளைச் சொல்லப் போகின் ேரும் எனச் சூதமுனிவர் நைமிசாரணித்திலிருந்து எம்பிரான் சரித்திரத்தினை மிக்கக் காதலுடன் கேட்டிருக்கும் முனிவர்க்குச் சொல்லுகின்ருர். 378

ஆடுறு சமரிடை அழிந்து முன்னரே
ஓடிய அவுணர்கோன் உள்ளந் தன்னிடைப்
பாடுறு துயரமும் பழியும் மானமும்
நீடினன் பெருமித நிலைமை நீங்கினுன்.

மிக்க வேகத்துடன் நடைபெற்ற போரினிலே தோற்றுப் பயத்தால் ஓடிய அசுரர் தலைவனான பானுகோபன்; தனது உள்ளத்தில் நீக்கிட முடியாததொரு வருத்தமும், பழியும், மானமும் அடைந்து மனதிலே இவைகள் பெருகி நீண்டிட இதுகாறும் தான் பெற்றிருந்த இறுமாப்புகள் யாவும் நீங்கினான். 379

கோனுறு மந்திரங் குறுகல் செய்திலன்
தானுறு திருநகர் தன்னில் ஏகியே
ஊனம துடையர்போல் உயங்கி வைகினான்
பானுவின் பகைஞனென் றுரைக்கும் பண்பினான்.

சூரிய பகவானுக்குப் பகைவன் என்று உரைக்கப்படுகின்ற ஒரு வார்த்தையால் பானுகோபன் என்னும் பேர்கொண்ட இவன் ஓடிச்சென்று வழமைபோல் தான் செல்லும் தந்தையின் அரச சபைக்கு, தோல்வியால் வெட்கப்பட்டுப் போகாது, தான் இருக்கும் திருவுடைய நகரினிடை சென்று அங்கு ஊனப்பட்டு வெளியில் வர நாணுவார் போன்று வருத்தத்துடன் வீற்றிருந்தான். 380

மந்திரக் கிளையொடு மருவ வேண்டலன்
தந்திரத் தமரொடுஞ் சார்தல் வேண்டலன்
சிந்துரத் தொல்பகைச் சென்னி போற்றிய
இந்திரப் பெருந்தவி சிருக்கை வேண்டலன்.

பானுகோபன் தனது சுற்றம் எனக் கருதிய மந்திரிகள் கூட்டத்துடன் கலந்துரையாடலைக் கவலை மிகுதியால் விரும்பவில்லை; போர் புரிதற்கேற்ற உபாயங்களில் கைதேர்ந்த சேனாதிபதிகளுடனும் ஆலோசனை நடத்த விரும்பவில்லை. அன்றியும், யானையின்மீது முதிர்ந்த பகையுடய சிங்கங்களின் உச்சிமீது தாங்கப் படும் மிக்க பேரழகுடைய இரத்தினச் சிங்காசனத்து அமர்தலையும் விரும்ப வில்லை. 381

ஆடுறு மங்கையர் ஆடல் வெஃகலன்
பாடுறு மங்கையர் இசையில் பற்றலன்
கூடுறு மங்கையர் குழாமும் நோக்கலன்
ஊடுறு மங்கையர் புணர்ப்பும் உன்னலான்.

கவலையாகும் கையறவு பெருகுதலாலே வழமைபோல் தான் கண்டு மகிழ்கின்ற நடனப்பெண்களின் ஆடலை விரும்பவில்லை; அன்றியும் அவன் மிடற்றோசையில் வல்ல பாடல் புரியும் பெண்களின் பாடலை விரும்பவில்லை. அன்றியும், கையால் தழுவி அணைத்து முத்தமிட்டுக் கூடுகின்ற பேரழகுடைய பெண்களையும் திரும்பிப் பார்க்கவும் இல்லை. அல்லது தன்மீது முன்னர் வெறுப்புற்று ஊடிய பெண்களுடன் சமாதானமாக உறவு கொள்வதைக்கூட நினைக்கவில்லை; 382

நிசாவது சென்றபின் நெடுஞ்செவ் வேலுடை
விசாகனை அவன்படை வீரர் தங்களை
அசாவுறு செருவில்வென் றுடல் கொள்வதற்
குசாவினன் உளத்துடன் ஊக்கம் வேறிலான்.

அப்பானுகோபனது எண்ணமெல்லாம் அன்று இரவு கழிந்த பிற்பாடு நெடிய செவ்வேலைத் திருக்கரத்து ஏந்தியருளிய முருகப்பெருமானையும், அவருடைய படைவீரர் யாவரையும் அச்சம் விளைவிக்கின்ற போரிலே எல்லாரையும் வெற்றிகொள்வது எப்படி எனத் தனது உள்ளத்துடன் விசாரித்த வண்ணமாக இருந்ததே ஒழிய, வேருேர் எண்ணத்தையும் அவன் எண்ணினுனல்லன், 383

வேறு

ஆதவன் தன்பகை அவ்வழி அமர்தலும்
மேதகுந் தொல்சமர் விளைவெலாம் நோக்கியே
மூதகுந் திருநகர் முழுமணிக் கோயிலில்
தூதர்கை தொழுதுபோய்ச் சூரனுக் குரைசெய்வார்.

சூரியதேவனின் பகைவனுன பானுகோபன் அவ்வழியாகச் சிந்தனையுடனும், மன வெப்பத்துடனும் இருத்தலும் அந்நேரம் மேன்மையான முதிர்ந்த போரிடை நடந்த முடிவையெல்லாம் நன்கு உற்று அவதானித்த அசுரர் தூதுவர்கள் முதுமையான செல்வம் குன்றிடாத நகரத்திடத்து அங்கு முழுவதும் இரத்தினங்களால் அமைக்கப்பெற்ற அரண்மனைக்குக் கைதொழுதவாறு சென்று சூரபன்மனுக்கு இதனைச் செப்பிடுகின்ருர். 384

கேட்டியால் உன்மகன் கேடிலா வாகைசேர்
தோட்டுணை யாஞெடுந் தொல்சமர் ஆற்றியே
ஈட்டுபல் பூதரை ஈறுசெய் திவ்விடை
மீட்டும்வந் தெய்திஞன் விளையமுண் டாங்கொலோ.

அரசே! கேட்பீராக, உமது மகன் பானுகோபன் வெற்றி பொருந்திய தோள்களை உடைய வீரவாகு என்பானெடும் மிக முதிர்ந்த உக்கிரமாகும் சண்டையினைச் செய்து, அங்கு போரிட வந்த பூதங்கள் பலரை முடிவு செய்து இவ்விடத்து மீண்டும் வந்து சேர்ந்துள்ளான் அப்படி வருதற்கு ஏதேனும் காரணம் உண்டாகுமோ? என்ருர்கள் அத்தூதுவர். 385

அன்னபண் புணர்கிலேம் அதனைமேல் அறிதியான்
மின்னுதண் சுடருடை வேலவன் தூதனும்
பன்னரும் படையொடும் பாசறைக் கேகிஞன்
இன்னதால் விளைவெஞ இவையெலாம் பகர்தலும்.

அவ்வாறு பானுகோபன் போர்செய்து நின்ற நிலையில் திரும்பி வரவேண்டிய காரணம் யாதாயிருக்கும் என்ற பண்பினை அறியமாட்டோம். அதனை நீர் இனிமேலாக விசாரித்து அறிந்து கொள்ளும். ஆனுல், மின்னுகின்ற சுடருடைய வேல் ஏந்திய முருகனின் தூதுவனும், சொல்லற்கரிய அளவு கடந்த பூதப்படையோடும் மீண்டு பாசறைக்குப் போயினுன். இதுதான் இன்றைய போரின் விளைவாகும் என்று அத்தூதுவர் எடுத்து இவைகளைச் சொல்லுதலும். 386

மாற்றலார் தமையட வலியில ஞகியே
ஊற்றமா வைந்தன்வந் துற்றசொற் கேட்குமுன்
சீற்றமாய் எரிவிழி சிதறவே வெய்துயிர்த்
தாற்றவும் முறுவலித் தரசன்ஒன் றுரைசெய்வான்.

தூதுவர் கூறியபடி பகைவரை வென்றிட வலியிலாது தனது மகன் பானு கோபன் தோல்வியுடன்தான் வந்திட்டான் என்ற வார்த்தையைச் சூரபன்மன் கேட்பதற்கு முன்பாகவே உள்ளம் கோபமாகிக் கண்கள் எரிந்து நெருப்புப் பொறிகளைச் சிந்திடப் பெருமூச்சு விட்டு ஆற்றவும் அவனது மேனி குலுங்கிட கோபமான சிரிப்பைக் கொண்டு சூரபன்மன் ஈதொரு வார்த்தையைச் சொல்லு கின்றான். 387

மைந்தரும் துணைவரும் மருவுபல் சுற்றமும்
தந்திரத் தலைவருஞ் சமரினுக் கேகலர்
நந்தலில் படையொடு நாளைநான் சென்றுபின்
கந்தனைத் திறல்கொடே கடிதில்மீண் டிடுவனால்.

எனது பிள்ளைகளும், தம்பிமாரும், உடன் இருந்த பல மந்திரிகளும், சேனைத் தலைவரும் யாரெனினும் இனிமேல் ஒருவரும் போருக்குப் போகவேண் டாம். குறைவில்லாத பெரும் படையுடன் நாளை நான் போரிடச் சென்று கந்தனை வெற்றி கொண்டு விரைவுடன் மீண்டு வந்திடுவேன்.

பாலனோடு போருக்குப் போவது அவமானம் என எண்ணிய அவன் ஒரு வரும் இனிப் போகவேண்டாம். நானே போவேன் எனத் துணிந்தமை காண்க. 388

போதிர்இப் பொழுதெனப் புகறலும் பணிகுருத்
தூதுவர் போயினர் சூரனும் அவுணர்கோன்
ஏதிலார் தம்மைவென் றிசைபுனைந் திடுதல்மேற்
காதலாய் வைகினன் யாவதுங் கருதலான்.

நீங்கள் யாரும் இப்பொழுது போங்கள் எனச் சூரபன்மன் கூறலும், சூர பன்மனைப் பணிந்தெழுந்து அந்தத் தூதுவரும் போயினர். அதன்பின் அன்றிரவு முழுவதும் சூரபன்மனாகிய அசுராதிபன் பகைவர்கள் யாரையும் வென்று வெற்றி புரிதலே காதலாகி எண்ணியவாறு அரண்மனையில் இருந்தான்; வேறு எதை யேனும் அவன் கருதவும் இல்லை.

இதுகாறும் இரவில் பல போக இன்பங்களை அனுபவித்திருந்தான். ஆனால், இன்று தோல்வியால் அதனை நினைக்க முடியவில்லை. மானம்தான் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. ஆதலால், போரிடத்து வெற்றி ஈட்டுதல் காதலாகி இருந்தான். 389

அடுபெரும் போரினை ஆற்றியே ஆற்றலால்
முடிவிலா விறல்கொள முன்னுவீ ரர்க்கெலாம்
நெடியளாய்த் திறலிலா நெஞ்சின ருக்கெலாம்
கடியளாய் வைகினள் கங்குலாம் நங்கையே.

அன்றைய இரவுநிலை எப்படியாயிற்றென்றால் கொலை நிகழ்ந்திடும் பெரும் போரினைச் செய்து வலியினால் முடிவிலாத வெற்றியை அடைய விரும்பிய வீரர்க் கெல்லாம் எப்பொழுது விடியும் விடியும் என அவர்கள் நினைத்தலாலே, அந்த இரவு என்னும் பெண்ணானவள் நெடியவள்போன்று நீண்ட நேரமுடையாள்

போன்றும்; விடிந்தாற் போருண்டு என் செய்யலாம் என வலியிலாத நெஞ்சுடன் ஏங்கிடும் படைஞர்க்கெல்லாம் மிகவும் கொடியவள் போன்று சீக்கிரம் விடிபவளாயும் விளங்கினள்.

போரில் காதல்கொண்ட வீரனுக்கு இரவு நீண்டது போன்றும், அஞ்சுகின்ற வஞ்சகனுக்குக் குறுகியது போன்றும் தென்பட்டது. இரவின் நிலை ஒன்ருனுலும் உலகியல் அமைப்பிலும், எமது வாழ்க்கையின் சில காரியங்கள் நடைபெறும்போதுங்கூட இத்தன்மையாகிய இரவின் நீண்ட, குறுகிய நிலையைக் காணலாம். 390

பிரிகுவார் தங்களைப் பிரிகலா தேனையோர்
அருகுதான் நிற்கலா தச்சம்நாண் இன்றியே
விரகநோய் தெறுதலால் மிக்கதோர் தூர்த்தராய்
திரிகுவா ராமெனச் செல்லும்இவ் வெல்லியே.

உண்மையில் தான் சென்றணையக் கூடாத பிறன் மனைவியை இச்சித்துக் களவில் அவளிடம் சென்றும்; அன்றி, தான் சேர்ந்து உடலுறவு கொள்ளவேண்டிய தனது உரிமையான மனைவியை ஏமாற்றி வஞ்சித்துப் பிரிந்தும்; முன் செய்வதில் அச்சமும், பின் செய்வதில் நாணமும் இன்றியே காமநோய் வாட்டுதலாலே மிக்கதொரு கொடிய தூர்த்தன் கொண்ட அபசாரச் செயலுடைமை போன்று திரிவது இந்த இரவு என்பது.

காமநோய் உடையார் தனது உண்மை மனைவியை வெறுத்தும், பிறன் மனைவியைப் பெரிதும் விரும்பியும் சேர்வர். இது நோயின்கூறு. காம வெப்பமும், இருள்போன்று செய்வது ஏதென உணர வைக்காது. ஆதலின், இரவாகிய இருளும் இப்படிப் பயந்தார்க்கு சுருங்கக் காட்டியும், இரவு கழிய வேண்டுமென நினையும் வீரனுக்கு நெடுகியும் நிற்றலால் தூர்த்தனை ஒத்தது எனக் காம நோயின் தீங்கினை அருமைப்பட உவமித்தார். 391

பாடுசால் தென்றிசைப் பார்புரந் திடும்இரா
ஈடுசால் வெம்பகல் எல்லெடும் வருவது
நேடியே மதியெனும் நீள்குடை முன்செல
ஓடல்போற் போயதால் உடுவெனும் படையொடும்.

பெருமை பிறங்கிய தென் திசைக்கு உள்ள பூமியை ஆண்டு கொள்ளும் இந்த இரவானது, உவமையிற் சிறந்த வெப்பமுடைய சூரியதேவன் ஒளியுடன் வருகிருன் என்பதை அறிந்து, அதற்குமுன்பு இரவு தான் கொண்ட மதி என்னும் நீண்ட வெண் கொற்றக் குடை முன்னுகச் சென்றிடத் தனது படைகள் எனும் வெள்ளிகளுடன் பயந்தோடிப் போவதுபோன்று அன்று இரவு போய் நீங்கியது;

தென்திசையில் இப்போர் நிகழ்ந்ததாதலின், அதனை மேலான தென்திசை பார் புரந்திடும் இரா எனவும்; ஒளி வருவதைக் கண்டு இருள் மதியுடன் நீங்கியது உடு என்னும் படையுடன் நீங்கியது என்றும் சிறப்புறக் கூறினர்.

இருள் நீங்கியது இருளின் தன்மதியாயது எனப் பொருள் தோன்றவும் கூறினர். 392

மையிருட் கலையினை மகிழ்நனும் மதிநிலாக்
கையினால் நீக்கியே கலவிசெய் தகலுழி
வெய்யவன் வருமெனா வெள்கியத் துகிலுடீஇ
ஒய்யெனப் போயினான் கங்குலென் றுற்றுளாள்.

இரவு என்னும் பெண் உடுத்திருந்த மைபோன்று கருமையுடைய உடையை, அவளின் கணவனான சந்திரன் தனது நிலாக் கதிர் என்னும் கையினால் நீக்கி விட்டு அவளுடன் கலவி செய்து இன்புற்றிருந்தான். அப்படி உறவு கொண்டு சந்திரன் எழுந்து அகன்று போகும்போது ஐயய்யோ! சூரியன் வரப்போகின்றான் கண்டுகொள்வான் என்று வெட்கப் பட்டுச் சந்திரனால் குலைக்கப்பட்ட சீலையை யும் அவசரத்துடன் உடுத்திக்கொண்டு விரைவுடன் போயினாள் இரவு என்னும் அப்பெண்ணாயவள்.

காமமாகிய செயல் இழிந்தது: பெரியோர் காணில் இகழ்வார் என நாணி வெட்கி ஓடுவாள் போன்று இரவு நீங்கியது என; காமவிளைவின் அவல நிலையை எடுத்தோதினார்.

காமாதி குணங்கள் நீங்கினால் ஒழிய திருவருள் நிலை கைகூடாது. ஆத லால், முதனாட் போரின் இறுதியில் இரவின் நிலையை இத் தீமையின் செயலின் விளைவாக எடுத்துக் கூறுகிறார். 393

காமதி குணமெல்லாம் கட்டவிழு மாகில்
கருணையே வடிவான கடவுள் வருமாகில்
தாமாக எழுந்தருளும் தாணு வருமாகில்
சடுதியால் நல்வரவு சொல்லு சிறுபல்லி.

என்னும் நற்சிந்தனைப் பாடலாலும் அறிக.

முதனாட் பானுகோபன் யுத்தப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 456.

---

# 4. இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப் படலம்

கங்குல்போந் திடுதலுங் கணபணப் பன்னகம்
நுங்குரு தகலவே நோற்றுமால் ஏந்திடுஞ்
சங்கமாய் மதிசெலச் சக்கரப் படையெனத்
துங்கமோ டெழுதல்போல் தோன்றினன் பரிதியே.

இரவானது இவ்வணம் கழிந்து போதலும்; சூரியன் உதயமாகின்றான்; எதுபோலெனில், நாராயணக் கடவுள் கூட்டான ஆயிரம் தலையுடைய அனந்தன் என்னும் பாம்பு உண்டு விடாது அகன்றுபோம்படி தவஞ் செய்திருக்கின்றபோது அவரது ஒரு திருக்கரத்தில் ஏந்தி வைத்திருக்கும் சங்கு போன்று சந்திரன் ஒளி மழுங்கிச் செல்ல; அவரது மற்றைய கரத்தில் இருக்கும் சக்கரப்படை ஒளியுடன் விளங்கிடுதல் போன்று மேன்மையுடன் எழுகின்றான் போல சூரியபகவான் கிழக்குத்திசையில் தோன்றினான். 1

வேறு

இரவி செல்லுமுன் அவுணர்கோன் துயிலொரீஇ எழுந்து
மரபி னிற்புரி நாட்கடன் முடித்துமன் றெய்தித்
திரும ணிப்பெருந் தவிசிடை இருந்துதன் சிறுவன்
நெருநல் உற்றிடும் வசையினை உளத்திடை நினைந்தான்.

சூரியபகவான் உதயமாகி வருமுன் அசுரர் தலைவன் சூரபன்மன் நித்திரை விட்டு எழுந்து; முறைமையாக அன்று தான் செய்யவேண்டிய காலைக் கடனைச் செய்து முடித்து அரசசபையை அடைந்து; அங்கு சிறப்புகள் அனைத்தும் நிரம்பப் பெற்ற அலங்காரமுடைய இரத்தின சிம்மாசனத்து இருந்துகொண்டு; தன்னுடைய மகன் பானுகோபன் நேற்றையத் தினம் போரில் அடைந்த தோல்வியால் நேர்ந்துள்ள வசையை உள்ளத்திடை நினைந்தான். 2

நினைதல் உற்றுழி உளத்திடைப் பெருஞ்சினம் நீட
இனிய மர்த்தொழிற் கியாரையும் விடுக்கிலன் யானே
அனிக மோடுபோய் மாற்றலர் வன்மையை அழித்துப்
புனைவன் வாகையென் றுன்னினன் அழிவிலாப் புகழோன்.

இதனை நினைத்தபோது உள்ளத்திடை பெரும் கோபம் மூண்டிட்டவாறு நீடிப்ப; இனிமேல் போர் செய்யப்போவதற்காக யாரையும் நான் விடமாட்டேன். யான் ஒருவனே பெருஞ் சேனையோடு சென்று எனது பகைவரின் வலியை அடக்கி, அழித்து வெற்றி மாலை சூடுவேன் எனத் தன் உள்ளத்து எண்ணினன் அழிவிலாத பெரும்புகழுடைய சூரபன்மன். 3

செங்கண் வாளெயிற் றவுணன்இத் தன்மையைத் தேற்றி
வெங்கண் ஒற்றரில் அளப்பிலர் தங்களை விளியா
அங்கண் மாநிலம் முறைமுறை சூழ்தரும் அளக்கர்
எங்க ணுஞ்செறி தானையைத் தம்மின்கள் என்றான்.

சிவந்த கண்களும், வாள்போலும் நீண்டு வளைந்த கூரிய கடைவாய்ப் பற்களையும் உடைய சூரபன்மன் இவ்வகையாகச் சிந்தித்துத் தன் மனதைத் திடப்படுத்தி, அவன் முன்பு நின்ற கொடிய கண்ணுடைய தூதுவர்களில் அளவிறந்தோரை நோக்கி, நீங்கள் சென்று அங்கங்குள்ள உலகுகள், அவற்றை முறை முறை சூழ்ந்த கடல்கள்; இவை எங்கெங்கெல்லாம் இருக்கின்ற எமது பெருஞ் சேனையை இங்கு அழைத்து வந்து தாருங்கள் என்றான். 4

என்ற லுந்தொழு தாயிர கோடியோர் யாண்டுஞ்
சென்று சென்றுதம மன்னவன் பணிமுறை செப்பத்
துன்று தேர்கரி பரிமிசைப் படர்ந்தனர் தொன்னாள்
வென்றி கொண்டநூ றாயிர வெள்ளத்தின் மிக்கோர்.

என்று இந்த வகையாகச் சூரபன்மன் கூறுதலும்; அவ்வேளை அத்தூதுவர்கள் சூரபன்மனைத் தொழுதுகொண்டு ஆயிர கோடியானோர் அவன் பணியினைச் செய்வதற்கு உலகுகள் எங்கும் சென்று சென்று அங்குள்ள சேனைகளிடம் தங்கள் அரசன இட்ட கட்டளை முறைமையைக் கூறிட, அதுகேட்டு உடனே நெருங்கிய தேரில், யானையில், குதிரையில் ஏறி வீரமகேந்திரபுரத்தை அந்த அசுரச் சேனைகள் வந்த அடைந்தன. அவைகள் பல முன்னர் அண்டங்களையும் வெற்றி கொண்ட புகழுடைய நூறாயிர வெள்ளம் என்னும் தொகைப்பட்ட கணக்கிலும் மிக்கோர்கள். 5

வேறு

சூலமே கணிச்சி தண்டந் தோமரங் குலிசஞ் சாபங்
கோலவாள் பலகை வட்டங் குந்தம்வேல் நாஞ்சில் பிண்டி
பாலமே முசுண்டி சங்கம் பரிதியே எழுவே தட்டி
பீலிவல் முசல மாதி பெரும்படை கொண்டு சென்றார்.

இவ்வாறு புறப்பட்ட சேனைகள் சூலம், கணிச்சி, தண்டாயுதம், தோமரம், குலிசம், வில், அம்பு, வாள், பலகை வட்டம், குந்தம், வேல், நாஞ்சில், பிண்டி பாலம், முசுண்டி, சங்கு, சக்கரம், எழுப்படை, தட்டி, பீலி, வலியானமுசலம் ஆதியான பெரிய படைகளைக் கொண்டு சென்றார்கள் 6

எண்டகும் இனைய வாறால் இலக்கம்வெள் ளத்தி னோருந்
திண்டிறல் மகேந்தி ரப்போர்த் திருநகர் சுற்றி யார்ப்ப
விண்டொடு சிகரி யென்னும் மேருவின் உச்சி போகிக்
கண்டனன் அவுணர் மன்னன் கடற்பெருந் தானைச் சூழல்.

யாவராலும் வியந்து எண்ணப்படும் இந்நிலையால் இந்த இலக்கம் வெள்ளம் எனும் தொகைப்பட்ட அசுரர் யாவரும் திண்மை குன்றாத வலியுடைய வீரமகேந்திரபுரத்து சூரபன்மன் நகரை வளைந்து சுற்றி ஆர்ப்பரித்திட; அதுவேளை வானினைத் தொடும் உச்சியை உடைய மேருமலை போன்ற ஒரு கோபுரத்தின் உச்சியில் சூரபன்மன் ஏறிச்சென்று நின்று தனது நகரினை வளைந்து இரைந்திடும் பெரும் அசுரவெள்ளத்தின் சூழலை நோக்கிக் கண்டனன்; 7

தேக்கினன் கதிருஞ் செல்லாச் செல்லுறழ் தானை ஈட்டம்
நோக்கினன் சிந்தை கொண்ட நோனமைசார் துயரம் யாவும்
நீக்கினன் வன்மை பெற்றான் நேரலர்ப் பொருது வென்றி
ஆக்கினன் போல நின்றான் அறத்துடன் அருளைக் கொன்றான்.

ஒளியுடைய சூரியதேவனின் நெருங்கிய கதிர்கள்கூட உட்சென்றிடாத வகையால் நின்றிடும் இடிபோன்ற கொடிய அசுரச் சேனைகளின் கூட்டத்தைச் சூரபன்மன் கண்டான். உடனே இதுவரையும் தனது மனதில் கொண்ட வேதனை தரும் துன்பங்கள் யாவும் நீங்கினன். கவலையாலுள்ள தளர்ச்சி நீங்கி வலிபெற்ருன். தருமத்துடன் அருளையும் அழித்து நீக்கிய அந்தச் சூரபன்மன் தன் பகைவர் யாரையும் போரிட்டு இப்பொழுது வெற்றி கொண்டான் போன்று பெருமிதத்துடன் நின்ருன். 8

அழிந்திடு கின்ற காலத் தளக்கரின் ஆர்த்துச் சூழுங்
கழிந்திடு தானை கண்டோன் கடிதுபோர்க் கேக முன்னிச்
செழுங்கதிர் மதியம் ஆக்குந் திருமணிச் சிகரி நின்றும்
இழிந்தனன் தலைமை நீங்கி இழிதொழில் பயின்ற தீயோன்.

உலகம் அழிந்திடுகின்ற சலப்பிரளய காலத்து இரைந்து எழுகின்ற சமுத்திரம்போன்று, இரைந்த வண்ணம் சூழ்கின்ற மிகுதி கொண்ட சேனைகளைக் கண்டு, உற்சாகமடைந்த சூரபன்மன் விரைவுடன் போர்க்குச் சென்றிட நினைந்து; சூரியனுடைய ஒளியைச் சந்திரனுடைய ஒளிபோன்று மங்கும்படி செய்திட வல்ல அத்தகைய பிரகாசமுடைய இரத்தினங்கள் பதித்த கோபுரத்தினின்றும் இறங்கினுன். தன்னுடைய உயர்வான தலைமையை நீங்கி இழிந்த தொழிலைப் பயின்றுள்ள சூரபன்மன். 9

எடுத்தனன் சிலையும் ஏனைப் படைகளும் இமையோர் தொன்னுட்
கொடுத்திடு படைகள் யாவுங் கொண்டனன் கரத்திற் கோதை
தொடுத்தனன் வெரிநில் தூணி தூக்கினன் விரல்கள் தோறும்
அடுத்தபொற் புட்டில் சேர்த்தான் அண்டங்கள் அனைத்தும்
வென்ருன்.

அண்டங்கள் அனைத்தையும் வென்றிட்ட சூரபன்மன் கையில் வில்லை எடுத்தான்; மற்றைய படைகளையும் எடுத்தான். கடவுளர்கள் முன்னுளில் கொடுத்துள்ள படைகள் யாவற்றையும் எடுத்துக்கொண்டனன். தனது கையிலே அணியும் உறையைச் செருகினுன் முதுகில் அம்புக்கூட்டைத் தூக்கினுன். கைவிரல்களுக்கு அளவான உறைகளைச் சேர்த்தான். 10

குந்தளச் சுழியற் குஞ்சிக் கோலமா மௌலி தன்னில்
சுந்தரத் துணர்மென் தும்பை தொடுத்திடு பிணையல் சேர்த்தி
மந்தரப் பொருப்பு மேரு வரையிதென் றையஞ் செய்யும்
இந்திரப் பெருந்தேர் ஒன்றின் ஏறினன் இரவி யேபோல்.

கன்னத்திலும் பின்புறமாகவும் செறிந்த சுருண்ட தலைமயிரின்மீது கோலமுற அணியப்பெற்ற முடியில் சுந்தரம் மிக்க அழகிய இளம் துணருடைய மென்மையான தும்பை மலர் மாலையைச் சேர அணிந்துகொண்டு, எழுந்து சென்று மந்தர மலையோ மேரு மலையோ இதுவென்று கண்டார் சந்தேகமுறும்படியான வளங்கொண்ட பெருந்தேர் ஒன்றில் சூரியனைப் போன்று ஒளியுடையவனுகி வந்து ஏறினுன். 11

பண்ணுலாம் புரவிப் பந்தி பருமிதக் களிற்றின் ஈட்டம்
எண்ணிலாப் புரவி மான்தேர் ஏமமாய்ப் பின்னர் ஏக
அண்ணல்வாள் அவுண வீரர் அமைச்சர்கள் அயலிற் செல்ல
விண்ணுலாம் புரிசைக் கோயில் வீதிகள் கடந்து சென்றான்.

அலங்காரங்கள் கொண்ட குதிரைகளின் வரிசைகளும்; பெரிய மத யானைகளின் தொகுதிகளும்; எண்ணிக்கையில் அடங்கிடாத குதிரை பூட்டிய பெரும் தேர்களும் யாவும் துணையாகப் பின்பு சென்றிட; மேலாகும் வாட்படை ஏந்திய அசுர சேனாதிபதிகளும் மந்திரிகளும் அயலிற் சென்றிட வானினைத் தொடுவன போன்ற மதில் சூழ்ந்த அரண்மனை வீதிகள் பலவற்றைக் கடந்து போயினான் சூரபன்மன். 12

கோயிலின் எல்லை நீங்கிக் கோபுரங் கெழீஇய கொற்ற
வாயிலின மருங்கு செல்ல மன்னவன் வரவு நோக்கிக்
காய்கதிர்த் தபனற் கண்ட கலிவியன் உலக மென்ன
ஆயிர நூறு வெள்ளத் தவுணரும் புடைசூழ்ந் தார்த்தார்.

அரண்மனையின் எல்லையைச் சூரபன்மன் கடந்து சென்று கோபுரம் பொருந்திய தனது நகரின் கொற்றம் மிக்க வாயலின் பக்கராகச் சென்றிட; அதுவேளை தங்கள் அரசனின் வருகையைப் பார்த்து வெப்பந் தரும் கிரணமுடைய சூரிய பகவானைக் கண்டதனல் மகிழ்வு மிகுகின்ற மேலான உயிர்கள்போன்று கோபுரங்களின் புறத்துச் சூழ்ந்து நின்ற இலக்கம் வெள்ளமாகும் அசுரரும் சூரபன்மனைப் பக்கராகச் சூழ்ந்து ஆரவாரித்தார்கள். 13

வேறு

அன்ன காலையில் அரிமுகன் சேய்அதி சூரன்
துன்னு தாரகன் சுதன்அசு ரேந்திரத் தொல்லோன்
என்ன நின்றிடும் மைந்தர்கள் இருவரும் ஏகி
மன்னர் மன்னனை அடைதலும் இனையன வகுப்பான்.

அவ்வாறாகிய காலையில் சிங்கமுகாசூரனுடைய மகன் அதிசூரன் என்பவனும்; மேன்மையுடன் விளங்கிடும் தாரகாசூரனுடைய மகன் அசுரேந்திரன் என்னும் மிக முதிய வீரனும் என நின்ற மைந்தர்கள் இருவரும் போர் நிலையுடன் வந்து அரசர்க்கரசனான சூரனை அடைந்து கொள்ளலும் அவர்களைச் சூரன் நோக்கி இதனைச் செப்புகின்றான். 14

திரைகொள் வேலைபோல் நிறைதரு கோட்டகஞ் சிறிதோர்
கரையி லாவழி யுடைந்திடும் அன்னது கடுப்பப்
பொருதி றற்படை பலவுள என்னினும் போற்றும்
அரச ரில்வழி நின்றிடா தன்னவை அழியும்.

மைந்தர்களே! கேளுங்கள். திரையுடைய சமுத்திரம் போன்று நீர் நிறைந்த குளமானது சிறிதளவாக ஓர் அணைக்கட்டு இல்லாத வழி அக்குளம் உடைந்துபோம் அதனை ஒப்ப போர்புரிவதற்கான திறலுடைய படைகள் பல உண்டாயிருப்பினும் அப்படைகளை வழிநடத்திப் பாதுகாத்தற்குரிய சேனைவேந்தர் இல்லாதபோது அச்சேனைகள் நிலையாக உறுதியுடன் போர்புரிய நின்றிடாது கெட்டு அழிந்துபோம். 15

ஆத லால்இனி நீர்இரு வீர்களும் அமரின்
மேத கும்பெருஞ் சேனைக்கு முதல்வராய் மேவிப்
போதிர் முன்னுற என்றலும் நின்றிடு புதல்வர்
ஈது நன்றென வணங்கியே ஏகினர் இமைப்பில்.

ஆனதன்மையால் நீங்கள் இருவீரும் போரில் மிகுதிறமைசாலிகளாகும் எம் சேனைகட்கு தலைவராகிய பதவிகொண்டு சேனைகளின் முன்புறம் சென்று வழிநடத்திப் போவீராக என்று சூரபன்மன் கூறுதலும், அதுகேட்ட இருமைந்தர்களான அதிவீரனும் அசுரேந்திரனும் நன்று என்று கூறி பெரிய தந்தையை வணங்கி ஓர் இமைப்பொழுதில் அவ்வாறு சேனைகளின் தலைவராகி முன்சென்றனர். 16

தந்த மான்தடந் தேர்மிசை ஏறியே சமரில்
கொந்து லாமலர் வாகையை மிலைச்சிய குமரர்
வந்த நாற்பெரும் படையையும் அணிபெற வகுத்து
முந்து தானையந் தலைவராய் ஏகினர் முறையால்.

போர்கள் பலவற்றில் வெற்றிகொண்டு கொத்தாக மலர்ந்திடும் பூக்களாலாய மாலைகளைச் சூடிய அம்மைந்தர்கள் இருவரும் தங்கள் தங்களது குதிரைகள் பூட்டிய தேர்மேல் சென்று ஏறிக்கொண்டு; சூரபன்மனுடன் சூழவந்த நான்கு வகையான தேர், யானை, குதிரை, காலாள் என்னும் படைகளை அணியாக வகுத்து அப்படைகளின் முன்பு சேனைத்தலைவராகிச் செல்கின்றனர். 17

ஆகும் எல்லையில் அங்கது நோக்குறு அடுபோர்
வாகை கொண்டநூ றுயிர வெள்ளத்து மறவோர்
ஓகை எய்தியே அமர்புரி பறந்தலை உன்னி
ஏகல் மேயினர் பணிகளுஞ் சேடனும் இரங்க.

அவ்வாறாகிய நேரத்தில் அங்கு அதனை கண்டுகொண்டு கொலைபுரியும் போர் பலவற்றில் வெற்றிபெற்று புகழ்நாட்டிய இலக்கம் வெள்ளம் என்னும் தொகைப்பட்ட அசுரவீரரும் மகிழ்வுடன் போர் புரிந்திடும் இடத்தை நினைந்து போவாராயினர். அவ்வாறு இந்த அசுரப்படை செல்லும் வேகத்தினாலும் மிடுக்கினாலும் நிலை குலைந்து உலகினைத்தாங்கிடும் ஆதிசேடனும் ஏனைய பாம்புகளும் இரக்கப்பட்டனர். 18

வேறு

கடந்திகழ் கரிதேர் பாய்மாக் கலந்திடத் தானை வீரர்
படர்ந்திடு கின்ற காலைப் பருமணி வயிரத் தேர்மேல்
அடைந்திடும் அவுணர் மன்னர் அளக்கரில் வடவை சுற்ற
விடந்தனி நடந்த தென்ன விண்ணவர் மருளச் சென்றான்.

மதம் பொழியும் யானைப்படைகள், தேர்ப்படைகள், பாய்கின்ற குதிரைப்படைகள் எல்லாம் அணிஅணியாக கலந்துவர வீரர்கள் சென்றிடலும் அவர்கட்கு நடுவணுக அழகுடைய சிவந்த ஒளி கொண்ட இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற தேர்மேல் ஏறி அசுரர்க்கரசனான சூரபன்மன் செல்வது பெரும் சமுத்திரத்தின்நடுவே நெருப்பு சுற்றிச் சூழ்ந்திட ஆலகாலம் என்னும் நஞ்சு செல்வதுபோன்று சென்றிடுகின்றான். 19

தொண்டகந் துடியே பம்பை தூரியம் முருடு கோடு
திண்டிறற் படகம் மொந்தை திமிலையே தடாரி தக்கை
கண்டைஆ குளியே பீலி காகளம் உடுக்கை பேழ்வாய்
கொண்டதோர் பதலை சங்கம் குடமுழா இயம்பிற் றம்மா.

அப்போது தொண்டகங்கள், உடுக்குகள், பம்பைகள், முரசங்கள், முருடுகள், கொம்பு வாத்தியங்கள், மிகவும் கடின ஓசையுடைய பேரிகைகள், மொந்தைகள், தடாரிகள், தக்கைகள், கண்டைகள், சிறுகண் ஆகுளிப் பறைகள், பீலிகள், காகளங்கள், சிற்றுடுக்கைகள், அகன்ற பக்கவாய்கொண்ட பறைகள், சங்குகள், குடிமுழாக்கள் ஆகிய பலவாத்தியங்கள் முழக்கம் செய்தன. 20

தட்டுடை நெடுந்தேர் ஆர்ப்பும் தந்தியின் ஆர்ப்புஞ் சேண்போய்
முட்டுற கொடிகள் ஆர்ப்பும் முரட்பரி ஆர்ப்பும் வீரர்
கட்டுறு கழலின் ஆர்ப்பு ம்கணிப்பில்பல் லியத்தின் ஆர்ப்பும்
எட்டுள திசையும் எல்லா வுலகுமுண் டெழுந்த அன்றே.

பெரும் தட்டுடைய நெடிய தேர்களின் இரைச்சலும், யானைகளின் இரைச்சலும், வானில் சென்று முட்டுறுகின்ற கொடிகள் படபடத்தலால் எழும் ஓசையும் முரணுடைய குதிரைகளின் கனைப்போசையும், வீரர்கள் காலில் கட்டிய வீரகெண்டைகளின் சத்த ஓசையும் அளவுகடந்த பலவாத்தியங்களின் ஓசையும் எல்லாம் ஒன்ருய் எட்டுத்திக்கும் பரந்து எல்லா உலகங்களையும் இப்பேரோசையால் அடங்கச் செய்து மிகுந்து மேலும்சென்றது. 21

நீனிற முகில்போல் மேனி அவுணர்கள் நீத்தஞ் செல்லக்
கானிறை பூழி ஈட்டங் ககனமேற் செல்ல முன்னம்
தானுறு கின்ற காலைச் சசியெனத் தயங்கிப் பின்னர்
மீனெனக் கரந்தான் மேலாம் விரிகதிர் படைத்த வெய்யோன்.

நீலநிறமுடைய முகில்போன்ற மேனியுடைய அசுரரின் சேனை வெள்ளம் சென்றிட அவர்களது காலினின்றும் எழுந்த புழுதியின் பரப்பானது வானின் மீது எழுந்து செல்லுமுன்பு அப்புழுதியால், விரிந்த ஒளிக்கிரணங்களை உடைய சூரியபகவான் மெதுமெதுவாக சந்திரன்போன்று ஒளியிழந்து பின்னர் நட்சத்திரம்போலாகி முற்றிலுமே புழுதியால் மறைந்தான். 22

நேசமொ டென்பால் வைகும் நெறியினர் தமக்கு வீடும்
ஆசறு பதங்கள் யாவும் வைகலும் புரிவேன் என்னை
ஏசுவர் போலுங் கீழென் றிகல்புரிந் திடுவன் என்னுத்
தூசிபார் விடுத்த தேபோல் துறக்கமேற் சென்ற பூழி.

அன்பினுடன் என்பாலாக இருக்கின்ற நல்நெறியாகும் ஒழுக்கம் உடையோர்க்கு முத்தியினையும் குறைவற்ற மேலான பதங்கள் அவர்கள் விரும்புவதை எல்லாம் நான் நித்தலும் கொடுப்பேன். அப்படி இருப்பவும் என்னை வானில் மேலுள்ள உலகங்கள் கீழ்ப்பூமிதானே இது என்று இகழ்ந்திடுவர்போலும். அப்படி என்னை இகழ்ந்து எண்ணியமைக்காக நான் அந்த மேல் உலகினேடு போர்புரிவேன் என்று பூமிதனது புழுதியான தூசிப் படையை விடுத்ததுபோன்று அசுரர் செல்வதால் எழுந்த புழுதிகள் வானுலகம் எல்லாம் சென்று செறிந்தது. 23

கன்னிறை அழித்த மொய்ம்பிற் கார்கெழும் அவுண வெள்ளம்
துன்னுற நடப்பச் செல்லுந் தூளியின் படலைச் செய்கை
என்னென உரைப்பன் அம்மா இந்திர னென்போன் வைகும்
பொன்னுல கதனை வல்லே பூவுல காக்கிற் றன்றே.

கல்லின் கடினமாகும் திறைமையையும் தங்கள் தோளின் கடினவலியால் அழித்து நீக்கும் தோள்வலியுடைய கருமேகம்போன்ற அசுரராகும் வெள்ளங்கள் திடமுடன் நடந்திட அவர்கள் வேகத்தால் எழுந்து செல்கின்ற புழுதித் திரள்களின் செயல்களை நான் என்னவாறு எடுத்துச் சொல்வேன்; அம்மவோ! அந்த புழுதிசென்று பொன்னுன வானுலகில் பட்டு அந்த வான் உலகினை பூமிபோல ஆக்கி மூடி மறைத்திட்டதே! 24

கண்ணகல் தடந்தேர் மீதுங் காய்சினக் களிற்றின் மீதும்
நண்ணிய கொடிகள் வான்போய் நளிர்புனற் கங்கை நக்கி
மண்ணுறச் சிதறி ஆடி அலமரல் மகேந்தி ரத்தின்
அண்ணல்இன் றழிவன் என்றே அழுதிறம் போலும் மாதோ.

பருத்து அகன்ற தேர்மீதும்; கொலைசெய்யும் கோபமுடைய யானைமீதும்; நாட்டப்பெற்ற கொடிகள் வானில் சென்று அங்குள்ள குளிர்ந்த நீரையுடைய கங்கா நதியை தொட்டு நீரை உறிஞ்சி பூமியில் விழும்படி சிதறி படபடத்து ஆடிக்கொண்டு சுழலுதல் எதுபோலுமெனில் வீரமகேந்திரபுரத்து அண்ணலாகும் சூரபன்மன் இன்று தோல்வியுறுவான் என முன் கூட்டியதனை உணர்ந்து கண்ணீர்விட்டு அழுகின்ற தன்மைபோன்றது. 25

திங்கள்வெண் குடையும் நீலத் திருநிழற் கவிப்புஞ் செங்கேழ்ப்
பங்கய மலர்ந்த தன்ன பருமணிக் கவிகை முற்றுந்
தொங்கலின் தொகையும் வெய்யோன் தொல்கதிர் வரவு மாற்றி
எங்கணுஞ் செறிவுற் றூழி இருளினை விளக்கிற் றம்மா.

அசுரர்பிடிக்கும் சந்திரவட்டக் குடைகளும், நிலநிறமுடையதாய் நிழலைச் செய்கின்ற வேறு கவிப்புகளும், தாமரைமலர் மலர்ந்தது போன்று விளங்கிய பெருமணிகள் பதித்த முத்துக்குடைகள் முற்றும்; குடைபோன்ற தூக்கங்களை உடைய வேறு வகையாகும் நிழற்கருவிகளின் தொகையும் யாவும் சூரியதேவனின் முதிய ஒளிக்கதிர்களை மறைத்து எங்கும் இக்குடைகளே செறிந்து ஒளிதோன்றிவிடாதபடி செய்து இருளாக்கி; இந்த இருள்தான் ஊழிக் காலத்து இருள்போலும் என்பதை காட்டிநின்றது. 26

வேறு

ஆனவியல் பெய்தஅவு ணப்படைக ளோடும்
வானெறிகொ டேஅவுணன் வையமிசை செல்லத்
தானதுதெ ரிந்தமரர் தம்மிறைவன் ஓடிக்
கானமர்க டம்பன் அடி கைதொழுது சொல்வான்.

இவ்வாறான இயல்பினை உடைய அசுரப் படைகளோடும் வானமார்க்கமாக சூரபன்மன் தேர்மேலாகி போர்க்களம் நோக்கிச் சென்றிடலும் அதனைத் தெரிந்து கொண்டு தேவர்கட்கு அரசனான இந்திரன் ஓடிச்சென்று பாசறைத் தலத்தை அடைந்து அங்கு தேன் ஒழுகும் கடப்பமாலையை அணிந்தருளிய செல்வராகும் ஆறுமுகப் பெருமான் திருவடிகளை கைதொழுது இதனைச் சொல்கின்றான். 27

அன்றுபுரி வேள்வியிடை ஆதியருள் செய்த
துன்றுபடை ஈட்டமொடு சூரனெனும் வெய்யோன்
இன்றுபொரு வான்விரைவின் ஏகினன் எதிர்ந்தே
சென்றவனை வென்றெமது சீர் அருளு கென்றான்.

எம்பிரானே! அன்று ஆலவனத்தில் தான்செய்துகொண்ட யாகத்திலே சிவபிரான் கொடுத்தருளிய நெருங்கிய பரந்த இலக்கம் வெள்ளம் என்னும் தொகைப்பட்ட சேனைகளின் கூட்டமோடு சூரன் எனப்பேர்பெறும் கொடியவன் இன்று தேவரீருடன் போர்புரிந்திட விரைவுடன் வந்துள்ளான். அவனை எதிர்த்துச் சென்று வெற்றி பூண்டு எமது இழந்து போய சிறப்புக்களை மீண்டும் அருள்புரிவீராக என வேண்டினன் இந்திர தேவன். 28

ஆம்பரிசு கூறஅவ னுக்கருள் புரிந்தே
ஏம்பலுறு கேசரியின் ஏற்றணையின் நீங்கிப்
பாம்பின்வலி செற்றுலவு பாகுதனை நோக்கி
வாம்பரிகொள் நம்மிரதம் வல்லைதரு கென்றான்.

சூரபன்மன் போரிடவரும் தன்மையை இந்திரன் இத்தன்மையாக எடுத்துக் கூறிட அவனுக்கு அருள்புரிந்து ஆறுமுகப்பிரான் இன்பம் உற்று அமர்ந்தருளிய தலைமைப் பாடுடைய சிங்கவாசனத்தின்றும் நீங்கி எழுந்தருளி; ஆதிசேடனுடைய வலியைத் தொலைத்துவிட்டு உலவுகின்ற வலியுடைய சாரதியான வாயுபகவானை நோக்கி தாவிப்பாய்கின்ற குதிரைகள் பூட்டிய எமது தேரினை விரைவுடன் இங்கு கொணர்வாய் என்றார். 29

என்றிடலும் நன்றென எழுந்துலவை அண்ணல்
குன்றனைய தேரது கொணர்ந்துமுனம் உய்ப்ப
வென்றிஅயில் அண்ணல்அதன் மீமிசை புகுந்தான்
மன்றல்மலர் சிந்திஅயன் மாலொடு வழுத்த.

என்று ஆறுமுகப் பெருமான் கூறியருளலும் அதுகேட்ட வாயுபகவான் நன்று என்று எழுந்து மலைபோன்று விளங்கிடும் தேரைக் கொண்டுவந்து எம்பிரான் திருமுன்னர் நிறுத்திடுதலும்; வெற்றிதரும் விளைவுடைய வேல்படைக்கு நாயகராகும் ஆறுமுகன் அத்தேர்மீது ஏறியருளினர். அதுவேளை வாசனை நிறைந்த பூக்களைச் சொரிந்து பிரமன் திருமால் முதலிய கடவுளர் வணக்கம் செய்திட்டனர். 30

செழுந்தருண மேதகைய தேரின்மிசை வானோர்
தொழுந்தலைவ னாகியமர் தொல்முருகன் ஏறக்
கொழுந்தழல் முடித்தனைய குஞ்சிகெழு பூதர்
எழுந்தனர் தெழித்தனர் இருங்கடலும் அஞ்ச.

செம்மையாகிக் சிவந்த ஒளி கொண்டதேர் மீது; வானோர்கள் வணங்கித் தொழுகின்ற ஓர் தலைவனாகும் மூவாத ஆறுமுகப் பிரான் எழுந்தருள; நெருப்பின் சுடர்க்கொழுந்து போலும் முடித்தலையுடைய பூதங்கள் யாவும் எழுந்தார். ஆர்ப்பரித்து கர்ச்சித்தார்கள். பெருஞ் சமுத்திரங்களே இவர்கள் போட்ட சத்தத்தினைக் கேட்டு அஞ்சிடும்படியாக. 31

நாட்டமொரு மூன்றுடைய நாதனருள் மைந்தன்
வாட்டமறு வெவ்வவுணர் மன்னன்வலி தன்னை
வீட்டும்வகை சென்றிடுதல் விண்ணவர் உரைப்பக்
கேட்டனிக பூதர்கள் கிளர்ந்துபடர் கின்றார்.

மூன்று கண்ணுடைய சிவபிரான் தந்தருளிய அருள் நிறைவாகும் குமரன்: எக்காலமும் வாட்டம் இலாத கொடிய அசுரர் அரசனை சூரபன்மனின் வலியைத் தொலைக்கும்படி புறப்பட்டுச் சென்றிடும் தன்மையை தேவர்கள் எடுத்துக் கூறிட அதுகேட்டு வேறிடத்திருந்த பூத வீரர்கள் யாவும் உடன் எழுந்து திரண்டு செல் கின்றார்கள். 32

பாரிடர்க ளாய்அறுமு கற்பரவு கின்ற
பாரிடர்ந டப்பவெழு பூழிபடர்ந் தின்னோர்
பாரிடர்பு ரிந்தனர் பரிக்குமெனை யென்னாப்
பாரிடம்விண் ணேடுபகர் தற்கெழுதல் போலும்.

இப்பூமியின் இடத்து நின்று ஆறுமுகமுடைய பெருமானுக்கு தொண்டுகொண்டு வணங்கிடும் பூதங்கள் போர் நிலம்நோக்கி புறப்பட்டு நடத்தலும் அதுவேளை எழுந்திட்ட மண்புழுதியானது மேல் நோக்கிப் போதல்; இந்தப் பெரும் பூதங்கள் என்னை பெரிய இடர்படுத்துகிறார் நான் சகிக்கமாட்டேன் தவறிடுவேன் என்னை நீங்கள் தாங்கிக்கொள்ளுங்கள் என்று வான உலகங்களுக்கு தனது துயர்சொல்ல மண் எழுந்து செல்வது போன்றது. 33

தக்கையொ டுடுக்கைதுடி சல்லரி தடாரி
தொக்குடைய தண்ணுமை துவைப்பின்மிகு பேரி
மெய்க்குடமு ழாப்படகம் வீணைகுழல் ஆம்பல்
கொக்கரை இயம்பினர்கள் கோடிகண நாதர்.

தக்கை, உடுக்கை, சிற்றுடக்கை சல்லரி தடாரி தாளத்திற்கு அமையும் மத்தளம், அடிப்பதில் மிக்க பேரிகை, குடத்தின் உருவுடைய குடமுழா, படகம், வீணை, குழல், ஆம்பல், கொக்கரை முதலாய பல வாத்தியங்களை கோடிக்கணக்கான பூதநாயகர்கள் இசைத்தார்கள். 34

நாடுதவ நாரதனும் நல்லுவணர் தாமும்
கேடிலிசை வல்லதொரு கின்னரரு மாகிப்
பாடினர்கு மாரன் அடிபன்முறை பணிந்தே
ஆடினர்கள் விண்ணவரும் ஆசில்முனி வோரும்.

எல்லாவற்றையும் முன்கூட்டியே நாடியறியும் நாரத முனிவனும், நல்லுணர்வில் மேம்பட்ட கருடரும், கேடில்லாத இசையில் வல்லதொரு கின்னரர்களும் ஆகிய எல்லா இசையாளர்களுமாகக் கூடி பாடினார்கள். குமரப்பெருமானின் திருவடிகளைப் பல முறை பணிந்தே பலதேவர்களும் நன்நெறியுடைய முனிவோரும் ஆனந்தக் கூத்தாடினார்கள். 35

சண்முகன தேவல்கொடு தாவில்இளை யோனும்
எண்மரும்இ லக்கர்களும் ஈண்டிய கணத்தின்
வண்மைகெழு மன்னவரும் வையமிசை யாகித்
திண்மைபடை ஊக்கமொடு சேனையிடை சென்றார்.

சண்முகப் பெருமானின் ஏவலினைப் பெற்றுக்கொண்டு குறைவிலாத இளையவரா கும் வீரவாகுதேவரும்; அவரின்தம்பியரான எட்டுப்பேரும்; இலக்கம் எனும் தொகைப்பட்ட மற்றைய வில்வீரரும்; புறப்பட்டெழுந்துவரும் பூதகணத்தின் வன்மை கொண்ட சேனாதிபதிகளும்; தேர்மேலாகி எழுந்தருளிக் கொண்டு திண்மையான படைகளுடன் போர்செய்திடும் ஊக்கமொடு சேனையிடையாகச் சென்றனர். 36

மொய்ம்மலி படைத்தலைவர் முந்தியுறு தானை
இம்முறையி னுலொழுக ஈசனருள் மைந்தன்
செம்மணிவில் லீசியமர் தேரினிடை ஏகிப்
பொம்மலுறு தானவர்கள் போர்முனை அடைந்தான்.

வலிமை மிகுந்த பூதப்படைகளின் தலைவர்கள் சேனையின் முன்செல்ல; இம்முறை யால் ஒழுகி புறப்பட்டுவரும் பூதசேனையுடன் சிவபிரான் அருளிய மைந்தராகும் முருகப்பிரரன் சிவந்த இரத்தினங்கள் ஒளிவீசி விளங்கிடும் தேரினிடையாக எழுந்தருளிச் சென்று பொங்கி எழும் கோபவெறியுடன் நிற்கும் அசுரர்களின் போர் முனையை அடைந்தார். 37

அடைந்தபொழு திற்புவியும் அந்தரமு மாகி
மிடைந்துவரு சூரனிகம் வெய்தென வளைந்த
தொடர்ந்துநுகர் தீவலிதொ லைத்துமென முந்நீர்
படர்ந்துபுடை சுற்றியிடு பான்மையது போல.

அடைந்த நேரத்தில் இப்பூமியும் வான உலகுமாகி நெருங்கிவந்த சூரபன்மனின் அசுரர்படைகள் விரைவுடைனுக முருகப்பிரானின் பூதப் படையை வளைந்து கொண் டன. அவர்களின் இச்செய்கை எல்லாவற்றையும் தொலைத்து விடுவேன் என எண்ணி எழுகின்ற ஊழித்தீயை அணைத்து விடுவேன் என அத்தீயை சமுத்திரம் வளைந்து கொள்ளும் தன்மையை ஒத்தது. 38

### வேறு

வளைந்திடு காலையில் வயவெம் பூதர்கள்
கிளர்ந்தனர் தெழித்தனர் கெழுவு தானவர்
தளந்தனை அடர்த்தனர் அவருந் தாக்கினர்
விளைந்தது பெருஞ்சமர் விண்ட தண்டமே.

அசுரப்படைகள் வளைந்திட்டகாலையில் வெற்றியைநிலைநாட்டும் பூதர்கள் வேக முடன் எழுந்தார்கள். கறுமிச்சத்மிட்டனர்: தம்மைச்சூழ்ந்த அசுரர்களின் அணிகளை அடர்த்தார்கள். அந்த அசுரரும் விடாது பூதங்களைத்தாக்கினர்கள்: இவ்வாறுகப் பெரும்போர் விளைந்துகொண்டது. போரின் அதிர்ச்சியால் அண்டங்கள்யாவும் உடைந்தன. 39

மாச்சினை மரங்களும் வரையுந் தண்டமும்
தீச்சிகைக் கழுமுளும் திகிரி நேமியும்
மீச்செலுங் கவண்கலும் வேலும் நாஞ்சிலும்
ஒச்சினர் பூதர்கள் ஒன்ன லார்கள்மேல்.

பெரிய கொம்பரினை உடைய மரங்களும் மலைகளும் தண்டாயுதமும் நெருப்புச் சுடர்போன்று கூரியமுனையுடைய கழுமுட்படையும் சுழலும் சக்கரமும் மேற்செல்லும் கவணின்மாட்டி எறிகின்ற கல்லும் வேலும் நாஞ்சிலும் ஆகிய இப்படைகளை பூதங்கள் எடுத்தெடுத்துத் தமது பகைவர்மேல் விட்டெறிந்தன. 40

மெய்ப்படும் அவுணர்கள் வெகுண்டு வில்லுமிழ்
அப்பொடு கணிச்சிதண் டாழி நாஞ்சில்வேல்
முப்புகர் இலைப்படை முசலம் முற்கரம்
கப்பணஞ் சிதறினர் கணங்கள் தம்மிசை.

அதுகண்டு உண்மை வீரத்தில் குன்றாத அசுரர்கள் வெகுண்டு வில்லில் நின்றும் செலுத்திடும் அம்புகளுடன் கணிச்சிகள் தண்டாயுதங்கள் சக்கரங்கள் நாஞ்சில் வேல் முச்சுடருடைய இலைவடிவாகும் நுனியுடைய சூலப்படை முசலம் முற்கரம் கப்பணம் ஆதியான படைகளை பூதங்கள்மேலாக வீசினார்கள். 41

பற்றுவர் கரிகளைப் பரியி னங்களை
எற்றுவர் பார்தனில் எறிவர் மாதிரஞ்
சுற்றுவர் விண்ணிடைக் கிழிப்பர் துண்ணென
முற்றுடல் எருத்தினை முரித்துச் சிந்துவார்.

பூதங்களோ அஞ்சாது யானையைப் பிடிப்பார்கள். அவையால் குதிரைகளைமோதி அடிப்பார்கள். பூமியில் யானைகளை தூக்கி அடித்துக்கொல்லுவார்; திக்குகளில் சென்று வீழஅள்ளி வீசுவர். யானைகளைதூக்கி வானில்சுழற்றுவார்கள் விருக்கெனகிழிப்பார்கள்; அவைகளின் உடலினை கொம்பினை முறித்தெறிவார்கள். 42

இரதமொ ராயிரம் எடுத்துச் செங்கையில்
பொருகளி றுயிரம் புரள மோதுவர்
கரிகளொ ராயிரங் கரங்கொண் டெற்றியே
பரிபதி னுயிரம் பாரின் வீட்டுவார்.

பூதங்கள் சிவந்தகைகளில் ஆயிரம் தேர்களை எடுத்து அவைகளால் போரிட வந்த ஆயிரம் யானைகள் புரண்டு வீழ்ந்திட மோதுவார்கள். ஆயிரம் யானைகளை கையால் பிடித்து எடுத்து பதினுயிரம் குதிரைகள் நொருங்கிச் சாக மோதி அடித்து பூமியில் கிடத்துவார். 43

பாய்பரி யாயிரப் பத்துப் பாணிகொண்
டாயிர கோடியாம் அவுணர் தங்களைச்
சேயிரு நிலத்திடைச் சிதையச் சிந்துவார்
காய்கனல் சொரிதருஞ் கடுங்கட் பூதரே.

இன்னமும் பூதங்கள் பதிஞயிரம் குதிரைகளை கையில் எடுத்து அவற்ருல் ஆயிர கோடியாகும் அசுரரை மோதி அடித்து பரந்த பெரிய நிலத்திடை சிதைந்திடக் கொல்வார்கள். இப்படி யெல்லாம் காய்கின்ற கனல்போலும் சிவந்துள்ள கடுங் கண்ணுடைய பூதங்கள் செய்கின்ருர்கள். 44

குரங்குளைப் புரவியர் குஞ்ச ரத்தினர்
இரங்குறு தேரினர் நிலத்தின் ஏகினேர்
வரங்கெழும் அவுணர்கள் வளைந்து பூதரைச்
சரங்களில் பிறவினில் தடிதல் மேயினர்.

அப்போது பிடரிமயிருடைய குதிரை மீது ஏறிவந்தவனும் யானை மீது வருப வனும் இரைந்து வரும் தேர்மீது வருபவனும் நிலத்தில் நடந்து வருபவனுமாய் நால்வகைப்பட்ட வரத்தில் மேன்மையுடைய அசுரர்களும் விடாது; பூதங்களை அம்பி ணுலும் பிற ஆயுதங்களாலும் வீசி; பூதங்களைக் கொல்வார்கள். 45

மலைதனைச் சிந்துவர் மறங்கொள் பூதர்தாள்
நிலைதனைச் சிந்துவர் நெடுங்கை சிந்துவர்
கொலைதனைச் சிந்துவர் கொய்வர் மொய்ம்பினைத்
தலைதனைச் சிந்துவர் தறுகட் டானவர்,

கொடும் தன்மை நிறைந்த அசுரர்களோ இப்படைகளை விடுத்து பூதங்கள் எறிந்த மலைகளைச் சிந்துவார். மரங்களைச் சிந்துவார். நிற்கின்ற பூதங்களின் கால்களை அறுப்பார்கள். கொடிய கைகளைச் சிந்துவார்கள். பூதங்கள் செய்திடும் கொலைத் தொழிலை அழித்திடுவர். தோள்களை அம்பினுல் கொய்வர். தலைகளைச் சிந்திடுவார் கள். 46

இவ்வகை மாறுகொண் டிகல்செய் கின்றுழித்
தெவ்வடு பூதர்தஞ் சேனை மன்னர்கள்
அவ்விடை ஏன்றுநின் றமர்இ யற்றுழி
வெவ்வசு ரப்படை மிகவும் மாய்ந்ததே.

இவ்வகையாக அசுரரும் பூதரும் தம்மில் மாறுபட்டு போர் புரியுங்கால் பகமை யினை அழிக்கின்ற பூதங்களின் சேனைத்தலைவர்களும் அவ்விடத்து பூதருடன் கூடி நின்று போர் இயற்றியிடுதலும் அதுவேளை கொடிய அசுரப் படைகள் ஏராளமாக மாய்ந்து போயது. 47

பொன்றிகழ் படையொடு புவியும் வானுமாய்
நின்றிடும் அவுணர்கள் நீடு தொல்பிணக்
குன்றுரு வாகியே குருதி யாற்றிடைச்
சென்றனர் அளக்கரைத் திடர தாக்குவார்.

பொன்போல மிகு அருமையுடன் விளங்கிடும் படைகளுடன் பூமியும் வானமும் எங்குமாகிநின்ற அசுரர்கள் இறந்து போயிடுதலால் பெருகுகின்ற பிணக்குவியல்கள் மலைபோன்று பெரிதாக விளங்கி இரத்தமாசிய ஆற்றுடன் அள்ளுண்டு கடல்மீது ஓடிச் சென்று பிணக்குவியலால் கடலையே திடரதாக்குவன. 48

நீடிய வேற்படை நிமலன் காணுற
வீடினம் யாமினி வெய்ய தோற்றமேற்
கூடுவ திலையெனக் குனிக்கு மாறுபோல்
ஆடிய உடற்குறை அனந்த கோடியே.

இப்படி இறந்தழியும் படைகளில் தலைவெட்டுண்ட உடற்குறைகள் அனந்த கோடி ஆடிக்கொண்டிருப்பது எப்படி காட்சி தருவதென்றால், நீண்டவேற்படையை உடைய குமரப் பெருமான் காண்புறும் பொருட்டாக நாம் இறக்கின்றனம். ஆதலால் எமக்கு இனிப்பிறவி இல்லை என்று கூத்தாடுவது போன்றிருப்பது. 49

வேறு

மானப் படைசேர் அவுணப் படையும் வயமான் தேர்ப்படையும்
ஏனைப் படையும் முடிவுற் றிடவே இவ்வா றிகல்செய்யுங்
கூனற் சடிலப் பூதப் படையின் கொற்றந் தனைநோக்கித்
தானைத் தலைவன் அதிசூ ரனெனுந் தனயன் வெகுளுற்றான்.

வலியாய பல படைகள் சேர்ந்த அசுரப் படையும் வீரம் பொருந்திய குதிரை பூட்டிய தேர்ப்படையும் ஏனைய குதிரைப் படையும் யானைப்படையும் முடிவுற்றிட கொலைபுரியும் பூதங்களின் மேன்மையைக் கண்டு அசுரர்களின் சேனைத் தலைவனை; அதிசூரன் என்னும் சிங்கமுகாசூரன் புதல்வன் கோபமுற்றான். 50

தேரா யிரமங் கொருபாற் சேமத் தொடுசெல்லக்
காரா யிரமுற் றனதன் படிவங் கதிர்கால் இமைசார
ஈரா யிரமாம் இவுளித் தொகைபூண் டீர்க்குந் தேர்மீதே
ஓரா யிரமாங் கதிர்போல் அழலா உரனோ டுறுகின்றான்.

உடனாக அந்த அதிசூரன் தனது பக்கலிலே ஆயிரம் ஆயிரம் என்னும் கணக்கில் சேமத்தேர் சென்றிட; ஆயிரம் கருமுகில்கள் திரண்டுள்ளது போன்று தனது வடிவமானது கரிய ஒளிவீசிட; இரண்டாயிரம் குதிரைகள் பூட்டப்பட்டு இழுத்து வரப்படும் தேர் ஒன்றின் மீதிலே ஓர் ஆயிரம் சூரியர்கள் திரண்டது போன்ற கோப அழல் கொண்டு வலியோடும் வருகின்றான். 51

வார்வில் லதனை விரைவில் குனியா வடிவா ளிகள்போக்கிச்
சோர்வில் லவனும் எதிர்கின் றனரைத் துணிசெய் தனன்நிற்ப
ஓர்வில் லொருவன் தனியே இவண்வந் துறுபோர் புரிகின்றான்
போர்வில் லறிவன் இவனே எனவே புகல்கின் றனர்பூதர்

கொடுமையுடன் வந்து சேர்ந்து கொண்ட அதிசூரன் வார்கட்டிய தனது வில்லை விரைவாக வளைத்து வடிக்கணைகளைச் செலுத்தி சோர்வில்லாது தன்முன்பு எதிர்த்து வருவார்களைத் துணித்து வீழ்த்திக் கொன்றவாறு நிற்றலும், அதுகண்ட பூதர்யாவரும் வில்லுக்கு ஒருவீரனை இவன் தனியே வந்து இங்கு பெரியதொரு போரினைப் புரிகின்றான்; ஆதலால் வில்லினால் போரிடற்கு மிகு சாமர்த்தியசாலி இவ னொருவன் போலும், எனப் பேசிக்கொள்கின்றனர். 52

ஓதக் கடல்போல் அலமந் தலமந் துலையா இகல்செய்யும்
பூதர்க் கிறைஉக் கிரனென் ஞெருவன் புகைதீ யுமிழ்கண்ணன்
மேதக் கசலந் தரனுர் உடலம் வீழும் படிகீண்ட
சோதிக் கடவுட் படையுண் டுமிழுந் தொல்லோன் இகல்வல்லோன்.

திரைவீசி இரையும் கடல் கொந்தளித்தல் போன்று அழன்று உழன்று சலியாது போரிடும் பூதர்க்கு தலைவனை உக்கிரன் எனும் ஓர் வீரன் புகையுடன் நெருப்பும் சுக்குகின்ற கண்ணுடையன்; முன்னுளில் மேன்மையான சலந்தராசுரனுடைய உடல மானது பிளந்திடும்படி கிழித்த சோதிகொள் தெய்வப் படையான சக்கரத்தை உண்டு பின் உமிழ்கின்ற வன்மையால் முதிர்ந்தவன். போரில் மிக வல்லவன். 53

எண்டா னவருக் கிறைவன் குமரன் இகல்செய் திடுமாறு
கண்டான் முனியா விரைவில் படர்வான் காலன் திறல்கொள்ளும்
தண்டா னதுகொண் டவனேர் குறுகித் தடமார் பிடையோச்ச
விண்டான் இவனென் றவுணப் படைபோர் வெருவர் அலமந்தார்.

இவன், வஞ்சனை உடைய அசுரற்கு அரசனுன சிங்கமுகா சூரனின் மகன் அதி சூரன் கடும் போர்புரிதலைக் கண்டான். கோபமடைந்தான். விரைவில் புறப்பட்டு இயமனின் திறலினை உண்டிடும் வலிமிக்க தண்டினையும் கையில் ஏந்தி அதிசூரன் நேர்சென்று தண்டினைச் சுழற்றி அதிசூரன் நெஞ்சின் மேல் விசிச் செலுத்திட அதன் நிலையைக் கண்டு அதிசூரன் இதோ இறந்தான் என்று அசுரர் யாவரும் அஞ்சிக்கலங் கினர். 54

மாரு கியஉக் கிரன்ஏ வுதலும் வருதண் டவன்மார்பில்
கூரு கியசா லிகைசிந் திடவே கொதியா வருகின்ருன்
பாரு டுகளத் திடையீங் கிவனைப் பலியூட் டுவனென்னு
நூரு யிரம்ஆ சுகமோர் தொடையின் நொய்திற் செலவெய்தான்.

பகைமையால், உக்கிரன் செலுத்திடுதலும் வருகின்ற தண்டு அதிசூரன் நெஞ் சில் பட்டு அங்கு அணியப்பெற்ற கவசத்தினை பொடியாக்கலும், அதிசூரன் கொதிப் படைந்து இந்தப் பூதனை இப்பொழுதே பருந்துகள் வட்டமிடும் போர்க்களத்தில் பலியூட்டுவேன் என்று தனது வில்லில் நூருயிரம் அம்பினை ஓர் தொடுப்பிலேயே விரைவாகச் சென்றிட விடுத்தான். 55

வெய்தாம் அயில்வா ளிகள்உக் கிரன்மேல் விறல்சேர் அதிசூரன்
எய்தான் அதுமற் றவன்மேற் படவே எருவைப் பெருநீத்தம்
மெய்தான் முழுதும் பெருகுற் றிடலும் விழுமத் தொடுசெற்றஞ்
செய்தான் ஒருமால் வரைகொண் டவுணன் தேர்மேற்
செலவுய்த்தான்.

கொடியதான வலிமிகுந்த இந்த அம்புகளை உக்கிரன் மீது பட்டிட வலிகொண்ட அதி சூரன் எய்தான்; அந்த அம்புகள் உக்கிரன் மீது படலும் இரத்தமான வெள் ளம் மேனி எங்கும் பெருகிடலும் அதனல் துயரமும் அடங்காக் கோபமும் அடைந்து ஓர் பெரிய மலையை கைக்கொண்டு அதிசூரன் தேர்மீது பட்டிட எறிந்தான் உக் கிரன். 56

அதிர்பொற் கழலான் விடுதிண் கிரியால் அதிசூ ரன்மான்றேர்
பிதிர்பட் டிடலும் புவிமேற் படர்தல் பிழையா மெனவுன்னு
உதயக் கிரிபோற் கனகத் தியலும் ஒருதேர் மிசைநீலக்
கதிருற் றெனவே கடிதிற் பாய்ந்தான் காலன் மிடல்தீர்ப்பான்.

அதிரும் பொற்சிலம்பணிந்த உக்கிரன் வீசிய திண்மையான மலையால் அதிசூரனின் குதிரைபூட்டிய பெரும் இரதம் பிதிர்பட்டு நொருங்கிடலும் அதிசூரன் அவ்வேளை தேரினின்றும் பூமியில் பாய்ந்தால் பிழைவரும் என நினைந்து உடனுக உதய மலைபோன்று பொன்னினுற் செய்யப்பெற்ற ஓர் தேர்மீது நீலவண்ணமுடைய சூரியன் ஏறியதுபோன்று பாய்ந்தான். இந்த அதிசூரனே இயமனுடைய வலியையும் நீக்கிடுகின்றவன். 57

வேறு

பாயும் வேலைஅப் பல்மணித் தேரினை
ஏய ஆற்றல்கொண் டீர்த்திடும் வாசிகள்
மாயும் வண்ணம றம்புரி உக்கிரன்
சீய மாமெனச் சென்றுதைத் தானரோ.

வேறு தேர்மேல் அதிவீரன் பாய்ந்த நேரத்தில் அந்த பல இரத்தினம் செறிந்த தேரினையும் ஏற்புடையவலியால் இழுத்துச் சென்றிடும் குதிரைகளை மாய்த்திடும்படி கொடுமை புரியும் உக்கிரன் சிங்கம்போல ஓடிச்சென்று உதைத்தான். 58

உதைக்க வெய்யவன் ஒண்பரி பாரிடைப்
பதைத்து வீழ்தலும் பையுளின் மாழ்கியே
சிதைப்பன் இந்தச் சிறியனை என்றுமெய்
புதைப்ப நூறு பொருசரந் தூண்டினுன்.

உக்கிரன் உதைத்திட கொடிய அதிசூரனுடைய அழகிய தேர்க்குதிரைகள் யாவும் பூமியிடத்து பதைத்து வீழ்ந்திடலும், அது கண்டு அதிசூரன் கவலையால் மெலிந்து சரி இந்தச் சிறிய பூதனை கொல்வேன் இனி என்று உக்கிரன் மேனிமுழுதும் புதைபட்டு ஊடுருவ நூறு கொடிய போரம்புகளை விடுத்தான். 59

தூண்டு கின்ற சுடர்க்கணை யாவையும்
ஈண்டி யேதன் எதிருறும் பெற்றியைக்
காண்ட லுங்கதை கைக்கொடவ் வுக்கிரன்
மீண்டி டும்படி வீசிநின் ருர்க்கவே.

அதிசூரன் தூண்டிய சுடர்கொண்ட அம்புகள் யாவும் நெருங்கித் தனது எதிருற வருதலை உக்கிரன் காண்டலும் தனது கதாயுதத்தை எடுத்து கையில் பிடித்து அத்தனை அம்புகளையும் வந்த திசைக்கே மீண்டிடும்படி வீசி அடித்து நின்று ஆர்ப்பரித்தலும். 60

வேருேர் தேரிடை வெய்தென எய்தியே
ஊறு நீங்கிய உக்கிரற் கண்ணுறீஇ
மாறில் தெய்வத மாப்படை தொட்டுனை
ஈறு காண்பன் இறந்தனை நீயெனு.

அதிசூரன் வேறொரு தேர்மீது விரைவாகப் பாய்ந்தேறி தனது அம்புகளின் கெடுதிகளினின்றும் நீங்கிய உக்கிரனைக் கண்ணுற்று அடே உக்கிரனே! மாறுபாடிலாத தெய்வப் படைகளைவிடுத்து உன்னை முடிவுகாண்பன்; நீ இதோ இறந்தாய் என்றான். 61

முன்னு பூசை முதலிய யாவையும்
முன்னி யேநின் றொருங்குடன் செய்தபின்
வன்னி மாப்படை வாங்கி வணங்கியே
மின்னு தண்சுடர் மீக்கொள வீசினான்.

இவ்வண்ணம் கூறிய அதிசூரன் அக்கினியாய்ஸ்திரத்தைக் கையில் எடுத்து அதற்குரிய பூசைகள் யாவற்றையும் மனதினால் ஒருங்குடன் சிறப்பாகச் செய்தபிற்பாடு வணக்கம் புரிந்து அப்படையின் மின்னல்போன்ற ஒளியானது மேலெழுந்து வீசிட விடுத்தான். 62

ஆசை தோறும் அழல்சிந்த மாற்றலன்
வீசு வெம்படை வீரத்தை நோக்கியே
ஈசன் மைந்தன் இணைமலர்த் தாள்களை
நேச மோடு நினை ந்தனன் போற்றினான்.

பகைவனான அதிசூரன் விடுத்த கொடிய அக்கினியாஸ்திரம் திக்குகள் எல்லாம் நெருப்புச் சிதறிட வருகின்ற வீரத்தினை உக்கிரன் நோக்கி, ஈசன் மைந்தன் குமரப் பெருமானின் இணையாகும் திருவடி மலர்களை அன்பினால் நினைந்து போற்றுதல் புரிந்தான். 63

எவ்வெ வர்க்கும் இறையவ னாகியோன்
அவ்வ ழித்தன் அருள்செய உக்கிரன்
செவ்வி திற்செலுந் தீச்சரம் பற்றியே
கவ்வி நுங்கினன் கண்கனல் கான்றிட.

எல்லார்க்கும் இறைவனாகிய முருகக்கடவுள் அவ்வழியாகத் தனது அருளினை புரிதலும் அதுவேளை உக்கிரன் என்பான் செப்பமுடன் வருகின்ற அந்த அக்கினியாஸ்திரத்தைப் பிடித்து வாயினால் கவ்வி விழுங்கினான்; அவனது கண்கள் நெருப்புச் சிந்திடும்படியாக. 64

நுங்கு வான்றனை நோக்கி அரிமுகன்
துங்க மாமகன் தொல்புனல் மாப்படை
பொங்கு சண்டப் பொருபடை ஏவலும்
அங்க வற்றையும் பற்றி அருந்தினான்.

அக்கினியாஸ்திரத்தைப் பிடித்து விழுங்குகின்ற உக்கிரனைச் சிங்கமுகாசூரனின் மேன்மையான மைந்தன் அதிசூரன் பார்த்து அதன்மேல் முதுமையான வருணாஸ்திரத்தையும் கோபமுடைய இயமாஸ்திரத்தையும் இரண்டையும் ஒன்றாக செலுத்திடலும், அந்தப்படைகள் வேகமுடன்வர உக்கிரன் அவைகளையும் பிடித்து வாயால் கவ்வி விழுங்கினான்; 65

காற்றின் வெம்படை ஏவினன் கைதவன்
ஆற்றல் உக்கிரன் அன்னது நுங்கினுன்
தேற்று கின்றிழிச் செய்தவம் அன்றியே
ஏற்ற மான இரும்பொருள் யாவதோ.

அதன்பின்னுக அதிசூரன் காற்றின் கொடிய படையான வாயுவாஸ்திரத்தைச் செலுத்திஞன். அதனேயும் அருள் ஆற்றல் உடைய உக்கிரன் பற்றி விழுங்கிஞன். முனிவர்களே! இதனே யாம் சிந்தித்துத் தெளிகின்றபோது ஒருவர் செய்து கொள்ளும் தவம் அல்லாது உலகில் மேலான பெரிய பொருள் வேறு ஏதும் உண்டோ. 66

மற்றும் அவ்வதி சூரன் மலரயன்
ஒற்றை வெம்படை ஓச்சலும் உக்கிரன்
பற்றி நுங்கவப் பங்கயன் தாதைபால்
பெற்றி ருந்த பெரும்படை ஏவினுன்.

மற்றும் பின்னரும் அந்த அதிசூரன் தாமரைமலரில் இருந்திடும் பிரமதேவனின் தனியான கொடிய பிரமாஸ்த்திரத்தை செலுத்தலும் அதனேயும் உக்கிரன் பிடித்து விழுங்கிட அப்போது அதிசூரன் பிரமதேவன் தந்தை விஷ்ணுபால் பெற்றிருந்த பெரிய வலியான நாராயணுஸ்திரத்தை விடுத்தான். 67

ஒய்யெ னச்சென் றுருகெழு நாரணன்
பொய்யில் மாப்படை போந்திட ஆங்கதுங்
கையில் வாங்கிக் கதுமென வாய்க்கொளா
வெய்ய உக்கிரன் மேயினன் என்பவே.

அதிசூரன் விடுத்துள்ள உக்கிரங்கொண்ட பொய்யாத பெரிய நாராயணுஸ்திரம் விரைவாக வருதலும், அதனேயும் கொடிய உக்கிரன் கையினுல் பிடித்து விறுக்கென வாயில் போட்டுவிழுங்கிஞன் என அதனே அருளால் அறிந்தோர் சொல்வார்கள். 68

ஆன காலே அரிமுகன் காதலன்
யானி னிச்செய் இயற்கையென் னேயிவன்
தானவ் வீசன்கொல் கண்ணன்கொல் தாமரை
மேனி லாவிய வேதன்கொ லோவென்ருன்.

அவ்வாருகிய காலேயில் சிங்கமுகாசூரன் மைந்தன் அதிசூரன் இதனேப்பார்த்து இப்பூதன் இதைச் செய்தலால் யான் இனி செய்கின்ற செயல் வேறு ஏதாகும். இவன்தானே அந்த ஈசனுன சிவனே? அன்றி கண்ணனே? அல்லது தாமரை மலரில் இருந்திடும் பிரமனே? என்ருன். 69

மூவ ராகிய மூர்த்திகள் அல்லதை
ஏவ ரேமற் றிதுசெயும் பெற்றியார்
ஆவ னுவன் அவர்க்குள் இவனெனுத்
தேவர் மாற்றலன் பின்னருஞ் செப்பினுன்.

பிரம்மா விஷ்ணு உருத்திரன் எனப்படும் மூவருமாகிய மூர்த்திகளே இந்த உக்கிரன்? இவர்கள் அல்லாது வேறுயார் இந்தச் செயலைச் செய்திட வலிபெற்றுடையார்? இந்த உக்கிரனும் அவர்களுள் ஒருவனுவன் என்று இன்னவாறு தேவர்கள் பகைவனுன அதிசூரன் பின்னரும் இதனைச் சொல்லினுன். 70

சீற்றங் கொண்ட அவுணர் திரைக்கடல்
தோற்றங் கொண்டவர் சூர்கெழும் உக்கிரன்
ஏற்றங் கண்டுழி என்செய்தும் என்றனர்
கூற்றங் கொண்ட உயிரிற் குலைந்துளார்.

சீற்றங்கொண்டு உற்சாகத்துடன் நின்ற அசுரர்கள் கடல்போல் கரிய தோற்றம் கொண்ட அச்சம்தரும் உக்கிரனுடைய இந்த மேன்மையைக் கண்டமாத்திரத்திலே இந்த பூதன் நிலை இப்படியாயின் ஐயய்யோ நாம் இனி என்செய்வோம் என்றுர்கள்; அந்த அசுரச் சேனைகள்யாவும் இயமனுல் பிடிக்கப்பட்ட உயிர்போன்று சோர்ந்து பயத்தால் நிலைகுலைந்து நின்றுர்கள். 71

அண்ணல் வாசவ ஞதிய ராகிய
எண்ணில் வானவர் யாவரும் இச்செயல்
கண்ணு ருதிகல் கண்டருள் நான்முகப்
பண்ண வன்முன் பணிந்திது கூறுவார்.

அதுவேளை தேவர்க்கரசனுன இந்திரன் முதலாகிய எண்ணற்றதேவர் யாவரும் இந்த உக்கிரன் எல்லாப் படைகளையும் விழுங்கும் அற்புதச் செயலைக் கண்ணுற்று; போரினைத் தங்களுடன் நோக்கியருளியவாறு நின்ற நான்முகக் கடவுள்முன்சென்று வணங்கி இதனை அவருக்குக் கூறுவார். 72

எங்க ளால்வரும் எண்ணில் பெரும்படை
செங்க ணுன்படை தீயநின் மரப்படை
அங்கி யாவும் அணுகஇப் பூதர்கோன்
நுங்கு மாறென் நுவலுதி என்னவே.

ஐயா பிரமதேவரே! எங்கள் எங்களால் தோற்றுவிக்கப்படும் எண்ணற்ற கொடுமையான படைகள் எல்லாமும் அதுவன்றி செங்கண்ணுடைய நாராயணக் கடவுளின் கொடிய படையும் மிகவும் பொல்லாத உமது பெரியபடையும் அங்கு இந்த உக்கிரன் பால் சேருதலும் இந்த பூதத்தலைவன் அவைகளை இப்படி விழுங்குகின்ற தாற்பரியம் என்ன? இதனை எப்படிச் செய்கின்றுன். வேறு எவராலும் செய்யமுடியாததொரு செயலை இதன் செய்திடும் வித்தைக்கு ஏது காரணம். அதைநீர் சொல்லும் என்றலும். 73

இந்தி ராதியர் கேண்மின்கள் ஈங்கிவன்
அந்தி வான்சடை அண்ணல் வரத்தினன்
கந்தன் எந்தை கழலிணை போற்றியே
வந்து ளான்எவ் வலியையும் ஆற்றுவான்.

அதனைக்கேட்ட பிரமதேவர் சொல்வார் இந்திராதிபர்களே கேளுங்கள்! இந்த உக்கிரன் மாலைக்காலத்தின் செக்கர்போலும் சிவந்த சடையுடைய சிவபிரானது வரத்தினை உடையவன். எந்தை பெருமான் கந்தனின் திருவடி மலர்களைப் போற்றியே வந்திருக்கின்றான். ஆனமையால் எந்தவொரு வலியான செய்கையையும் சாதித்து முடிப்பான். 74

எம்மை யாளுடை ஈசன் அருள்பெறுஞ்
செம்மை யானவன் செம்பொற் சிலம்படி
மும்மை யுந்தொழு முத்திபெற் றான்இவன்
எம்மி னும்பெரி யான்என்றும் ஈறிலான்.

எம்மையாளுடைய சிவகுமாரனின் அருள்பெறுகின்ற செம்மையினைக் கொண்டவன். அவருடைய செம்பொன்னில் திகழ்கின்ற சிலம்பணிந்த பாதத்தை முப்போதும் இடைவிடாது தொழுதிருக்கும் பேறுபெற்றுக் கொண்டவன். எம்மிலும் பார்க்க இவன் பெரியவன், என்றும் முடிவு என்பதில்லாதவன். மும்மையும் - என்பதற்கு வரும் காலம், செல்காலம், நிகழ்காலம் என முக்காலமும் தொழுதிருக்கும் பேறுடையவன் என்னலுமாம். 75

மைக்க ருங்கடல் வண்ணன்முன் ஏவிய
சக்க ரம்நுக ருந்தவத் தோனினும்
மிக்க ஆற்றலன் வெற்றியின் மேலையான்
உக்கி ரன்னென் றுரைத்திடும் பேரினான்.

முன்னாளில் மைபோலும் கருமையுடைய மேனி உடையோரான விஷ்ணுமூர்த்தி போரிடும்கால் ததிசிமுனிவர்பால்விடுத்த சக்கரப்படையை அன்று உண்டு விழுங்கிய அம்முனிவரிலும் மிக்க வலிபடைத்தவன் இந்த உக்கிரன். வெற்றியின் மிகு மேல் நிலைகொண்டவன். அவனின் பெயரே உக்கிரன் என்று உரைக்கப்படுபவன். 76

பண்டு நாமருள் பல்படை யாவையும்
உண்ட தோவியப் பொல்லையில் எல்லையில்
அண்ட முஞ்சிதைத் தாக்குவன் ஈங்கிவன்
கொண்ட தொல்புகழ் கூறத் தொலையுமோ.

முன்னர் நாம் அதிசூரனுக்குக் கொடுத்த பலவான எம்படைக் கலங்களை இவன் உண்டதோ வியப்பொன்று சொன்னீர்கள்? இல்லை இல்லை மிகு சீக்கிரமாகவே எல்லையில்லாத அண்டங்களையெல்லாம் சிதைவாக்கிப் பின்னர் திரும்பவும் அவைகளை பழைமைபோல் உண்டாக்கவல்லவன் இந்த உக்கிரன். அவன் முருகப்பிரான் அருளால் முன்னர் பெற்றுக்கொண்ட புகழினைச் சொல்லினாலும் அது முடியுமோ? என்றார் பிரமதேவர். 77

என்ன நான்முகன் எண்ணி இயம்பலும்
அன்ன கேட்டலும் அண்டர்கள் யாவருந்
துன்னு சென்னி துளக்கிப் பெருந்திறல்
இன்னு மாக இவற்கென் றியம்பினார்.

என்று இவ்வாறு நான்கு முகமுடைய பிரமதேவர் யாவற்றையும் நினைந்து எடுத்துக் கூறிடலும் அவைகளைத் தேவர்கள் யாவரும் கேட்டலும் தங்கள் தலையை அப்படியோ என ஆட்டி, பின்னரும் இந்த பூதவீரனுக்கு இன்னமும் பெரும் திறல் ஆகட்டும் என வாழ்த்துச் சொன்னார்கள். 78

### வேறு

வான மேலிது நிகழ்ந்துழி மாறிலா அவுணர்
சேனை காவலன் பூதனை நோக்கிநிற் சிதைப்பல்
ஊன மாகிய படையென உன்னலை உமைபால்
ஞான நாயகன் படைதொடு வேனென நவின்றான்.

வானத்தின்மேல் இந்த நிகழ்ச்சிகள் நிகழ்ந்த நேரத்து; மாறுபாடில்லாத அசுரர் சேனைகளின் காவலன் அதிசூரன் உக்கிரனை நோக்கி இதோ உன்னை நான் இப் படையால் கொல்வேன். முன்னர் நான் விடுத்த ஊனம் பொருந்திய படைகள் என இதை நீ எண்ணாதே! உமையம்மை பாகரான ஞானச்செல்வர் சிவபிரானின் படை விடுப்பேன் எனக் கூறினான். 79

மந்தி ரந்தனிற் பூசனை முதலிய வகுத்துச்
சிந்தை மேலுறு வெகுளியோ டரன்படை செலுத்த
அந்த மில்லதோ ருலகெலாம் முறுவலால் அடர்க்கும்
எந்தை கொண்டதோ ருருவெனத் தோன்றிய திமைப்பில்.

என்று அதிசூரன் கூறி, சிவப்படைக்கலத்தை எடுத்து மந்திரத்தினால் பூசனை முதலியவற்றை வகுத்துச்செய்து மனதின் மேலுற்ற கோபத்துடன் சிவப்படைக் கலத்தை விடுப்ப; அப்படையானது புறப்பட்டு முடிவில்லாத உலகங்கள் யாவற்றையும் தன்புன்சிரிப்பால் எரித்தழிக்கும் எந்தைப் பெருமான் சிவன் கொண்டதொரு உருத்திரனின் வடிவம்போல் ஓர் இமைப்பொழுதில் தோன்றியது. 80

நஞ்சும் ஆரழல் நாகமும் நடுவன துருவும்
விஞ்சு பூதமுங் கணங்களும் வேறுபல் படையும்
எஞ்ச லில்லதோர் அங்கியும் போற்ற எவ்வுலகும்
அஞ்சி டும்படி நடந்ததால் அரன்படை யதுவே.

மேலும் அந்தச் சிவப்படையானது நஞ்சும் கொடிய நெருப்பைக்காலும் நாகங்களும் இயமனுடைய வடிவும் பெருத்த பூதங்களும், சிவகணங்களும், வேறுவகை யாவும் பல படைகளும் குறைவில்லாத தொரு நெருப்பும் துணையாக உடன் சூழ்ந்திட எவ்வுலகமும் அஞ்சிடும்படியாக வேகமுடன் உக்கிரன்மேல் வந்தது. 81

ஈசன் மாப்படை வருதலும் உக்கிரன் என்னும்
ஆசில் வீரன்றன் அங்கையிற் கதையினை அகற்றிப்
பாச நீக்குமஞ் செழுத்தினை விதிமுறை பன்னி
நேச மொடுகை தொழுதரன் பொன்னடி நினைந்தான்.

சிவபிரானின் பெரும்படை இவ்வாறு வருதலும் அதுவேளை உக்கிரன் எனப் பேர்கொண்ட ஆதியான பூதவீரன் தனது கையில் கொண்ட கதையினைக் கதுமென நீக்கிவிட்டு, பின்னர் பாசம் எவற்றையும் நீக்கிடும் ஐந்தெழுத்தையும் விதிமுறை உச்சரித்து அன்பால் கைகளைக் கூப்பித்தொழுது சிவபிரானின் பொன்னடிகளை நினைந்தான். 82

ஆண்டை உக்கிரன் நிற்றலும் அஞ்சலி புரிவான்
மாண்ட தொல்படை இல்லவன் துதிசெயும் வாயான்
ஈண்டி வன்றனை அடுகிலன் யானென எண்ணி
மீண்டு சென்றது சிவனருள் படைக்கலம் விரைவில்.

இவ்வாறு வணக்கமுறையால் உக்கிரன் நிற்றலும் அதுவேளை அவன்பால்வந்த சிவப் படையானது அவன் நிலைநோக்கி இவன் அஞ்சலிசெய்கின்றான். மாட்சிமை உடைய படைஏதும் இவனிடத்து இல்லை; துதிசெய்கின்ற வாயினை உடையவன்; ஆகையால் இவ்விடத்து இவன்தனைக் கொன்றிட மாட்டேன் என நினைந்து அவ்விடம்விட்டு மீண்டு சென்றது. 83

அண்ண லம்படை துறந்தவர் மேல்விடின் அவர்பால்
நண்ணு றாதுநம் பக்கல்வந் திடுமென நல்க
விண்ணு லாம்புகழ் அவுணர்கோன் பெறுதலின் விடையூர்
பண்ண வன்றனை அடைந்ததாங் கவனருள் படையே.

மேலான சிவப்படைக்கலத்தை படைகள் இல்லாத நிராயுதர் மேலாக விட்டால் அவர்கள்மேல் சென்றிடாது என்பாலாகத் திரும்பி வந்திடும் என்றே வானுலகம் எங்கும் புகழ்கொண்ட அதிசூரன் சிவபிரானிடம் அன்று பெற்றுக்கொண்டமையால் அப்படையும் அதனைக்கொடுத்தருளிய இடபமேற் செல்லும் கடவுளை சிவனைச் சென்று அடைந்துகொண்டது. 84

ஆன பெற்றிகண் டிங்கிவன் சிவன்கொலென் றயிர்த்துச்
சேனை காவலன் துளங்கினன் பூதர்கள் சிறந்தார்
வானு ளோர்மலர் மாரிகள் தூர்த்தனர் மாறும்
ஏனை வீரர்கள் விழிபொழி தாரைகான் றிரிந்தார்.

அவ்வாறாகும் நிலைகளை அதிசூரன் கண்டு இவன்தானோ சிவன் என்று அதிசயித்து அசுரர்களின் சேனைத்தலைவன் அதிசூரன் நடுங்கினான். பூதத்தலைவர்கள் மகிழ்வால் சிறந்தனர் தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். பூதருடன் மாறாகப் போரிட்ட ஏனைய அசுரவீரர்கள் கண்களினின்றும் தாரைதாரையாக கண்ணீர் பொழிந்திட கதறி ஓடினார்கள். 85

நீங்கு கின்றதோர் தானவர் குழுவினை நீவிர்
ஏங்கு கின்றதை விடுமின்கள் என்றுதேர் இழிந்து
பாங்கர் உற்றதோர் தண்டுகொண் டரிமுகன் பாலன்
வீங்கு தோளிடை எற்றினன் உக்கிரன் வெகுண்டான்.

பயத்தால் ஓடிப்போகின்ற அசுரகூட்டத்தினை அதிசூரன் நோக்கி நீங்கள் ஏங்கிப் பதைப்பதை விடுமின்கள் என்று தேரினின்றும் இறங்கி பக்கராகக் கிடந்ததொரு தண்டினை கையால்எடுத்துச் சென்று உக்கிரனுடைய பருத்ததோள்மேல் அடித்தான். உக்கிரன் அதுகண்டு கோபமடைந்தான். 86

எற்று தண்டினை அங்கையால் உக்கிரன் என்போன்
பற்றி வாங்கியே அவன்றன துரம்பதை பதைப்பத்
தெற்றெ னப்புடைத் திடுதலும் நிலனிடைச் சேர்ந்தான்
மற்ற வன்றன துயிர்கொடு போயினன் மறலி.

அதிசூரன் தன்மேல் அடித்த தண்டினை உக்கிரன் என்போன் அழகிய கையினால் பற்றிப் பறித்து வாங்கி அதனால் அதிசூரனுடைய நெஞ்சம் பதைத்திடும்படி விறுக்கென அடித்திடுதலும்; அந்த அடியுடன் அதிசூரன் நிலத்தின்மேல் சாய்ந்தான்; அதுவேளை இறந்திட்ட அதிசூரன் உயிரை இயமன் எடுத்துச் சென்றான். 87

துஞ்சி வீழ்அதி சூரனை நோக்கியே துகடீர்
மஞ்சு போலவே வரும்அசு ரேந்திரன் மனமும்
நஞ்சு மாமெனக் கொதித்தனன் அழலெழ நகையா
விஞ்சு பூதர்தங் குழுவின்மேற் சென்றனன் விரைவின்.

இறந்து வீழ்ந்த அதிசூரனைக்கண்டு; குற்றம் இல்லாத மேகம்போன்று கரு மேனியுடன் அவ்விடம் வருகின்றான் அசுரேந்திரன். அவன் மனம் நஞ்சுபோன்று கொதித்தான். நெருப்பெழச் சிரித்தான். மிஞ்சிய வலியுடைய பூத கூட்டங்கள் மேல் விரைவுடன் தாக்கிடும் படி சென்றனன். 88

கடிது சென்றசு ரேந்திரன் இந்திரன் கரத்தின்
நெடிய வில்லினும் ஆயிரத் திரட்டிமேல் நிமிர்ந்த
கொடிய வார்சிலை வாங்கியே குணத்தொலி கொளுவப்
படியும் வானமுங் குலைந்தன உயிரெலாம் பதைப்ப.

விரைவாகச் சென்ற அசுரேந்திரன்; இந்திரதேவனுடைய கையில்கொண்ட இந்திரதனுசு என்னும் நீண்ட வில்லினும் பார்க்க இரண்டாயிரம் மடங்குமேல் நீண்ட கொடியதாகும் வார்கட்டிய தனது வில்லைவளைத்து நாணோசை செய்திட அதுகால் பூமியும் வானுலகமும் நிலைகுலைந்தன. அங்குள்ள உயிரெலாம் பதைத்திட்டன. 89

பூதர் அங்கது நோக்கியே தண்டமும் பொருப்பும்
பாத வங்களுந் தாரகன் தந்திடு பதகன்
மீது சென்றிட விடுத்தலும் அனையன விலக்கிச்
சோதி வெங்கணை இறுதிநாள் முகிலெனச் சொரிந்தான்.

பூதர்கள் அங்கு அதனைப்பார்த்து உடனுகத் தங்கள் கைகளில் தண்டாயுதங்களையும், மலைகளையும், மரங்களையும் எடுத்துக்கொண்டு; தாரகாசூரன் பெற்ற பாதகனை அசுரேந்திரன் மீது சென்று பட்டிட விடுத்தலும் அசுரேந்திரன் அம்பினை விடுத்து அவைகளை அறுத்துத் தள்ளி அதன்பின்னும் ஒளியுடைய கொடிய அம்புகளை உலக முடிவுநாள் பெய்திடும் மழைபோலச் சொரிந்தான். 90

வடிகொள் வார்கணை விடுத்தலும் பூதர்கள் வலிதின்
விடுபி றங்கலே முதலிய இடையிடை வீட்டி
முடியுங் கைகளும் ஆகமும் முகத்தொடு மொய்ம்பும்
அடியுஞ் சோரிநீர் கான்றிட அழுந்திய அவர்பால்.

அரத்தினால் தீட்டி கூர்மையாக்கிய வடிக்கணைகளை அசுரேந்திரன் விடுத்தலும் அக்கணைகள் சென்று வலிதாகப் பூதங்கள் விடுத்த மலைகள் முதலிய யாவற்றையும் இடையிடையிலே அறுத்துத்தள்ளி பூதங்களின் தலைகளும், கைகளும், மேனியும், முகத்துடன் தோள்களும் கால்களும் இரத்த நீர் கக்கிட, அப்பூதர்பால் பட்டு உருவின. 91

மற்றும் வெங்கணை உலப்பில தூண்டலும் மண்மேல்
அற்ற கைகளுந் துணிந்திடு தோள்களும் அடியும்
இற்ற கண்டமு மாகிவெம் பூதர்கள் இறப்பக்
கொற்ற வீரரில் கனகன்என் பவன்எதிர் கொண்டான்.

மற்றைய கொடிய அம்புகள் அளவுகடந்தவற்றை பின்னரும் அசுரேந்திரன் செலுத்திடுதலும் அதுபோது அவைகள் பட்டு அறுபட்ட கைகளும் துணிந்த தோள்களும் காலும் அறுபட்ட தலையுமாக பூமிமேல் கிடந்திடும்படி பூதங்கள் இறந்திட அதனைக்கண்டு கொற்றம் மிக்க கனகன் என்னும் பூதத்தலைவன் என்பவன் அசுரேந்திரன் முன்னாகவந்து எதிரேற்றான்.

எதிர தாய்வரு கனகன்மேல் தாரகன் ஈந்த
அதிரும் வார்கழல் அண்ணலோர் வடிக்கணை அழுத்த
உதிர வாரியோ டன்னவன் தேர்மிசை உற்றான்
கதிரின் மேல்வரு செய்யகோ ளாமெனக் கடிதின்.

முன்பாக எதிரிட்டுவந்த கனகன் என்பவன்மேலாக; தாரகன் பெற்ற அதிர்கின்ற சிலம்பணிந்த அசுரேந்திரன் ஓர்வடிக்கணையை செலுத்திட அந்த அம்பு கனகன் நெஞ்சில்பட்டு ஊடுருவிப்போதலும் அதனால் பெருகிடும் இரத்தத்துடன் விரைவுடன் கனகன் பாய்ந்து அசுரேந்திரன் தேர்மீது ஏறினான். அது எதுபோலுமென்றால் சூரியன் மேலாகப் பாய்கின்ற செங்கிரணமுடைய கேதுவினைப்போன்று. 93

பாகன் தன்னுயிர் உலந்திட உதைத்துவெம் பனைக்கை
நாகந் தந்திடு மதலைதன் வரிசிலை நாணைக்
காகம் போலவெள் ளெயிற்றினுற் கீறிவெங் கறைசேர்
மேகந் தாரணி மிசை இழிந் தாலென மீண்டான்.

அசுரேந்திரன் தேர்மீது கனகன் பாய்ந்து தேர்ப்பாகன் உயிர் நீங்கிட காலால் உதைத்துக் கொடிய பனைபோன்ற துதிக்கையினையுடைய தாரகாசூரன் பெற்ற மைந்தன் அசுரேந்திரனது கையில் கொண்ட வரிகொண்ட வில்லின் நாணினை காகம் கொத்தி அறுப்பதுபோன்று வெள்ளைப் பற்களால் கௌவி அறுத்துவிட்டு கொடிய கரியதொரு மேகம் பூமியில் இறங்கினல்போன்று தேரினின்றும் கனகன் குதித்தான். 94

இழிந்து மால்வரை ஒன்றுகீண் டசுரரிந் திரனுங்
கழிந்த சீர்த்தியான் மீமிசை ஓச்சலுங் கரத்தின்
அழிந்த வில்லினை நீத்துவே றொருசிலை அதனைக்
குழிந்த கண்ணுடைப் பூதர்கள் வெருக்கொளக் குனித்தான்.

கீழே இறங்கி கனகன் பெரியதொரு மலையைப் பிடுங்கி அதனைச் சீர்கெட்ட அசுரேந்திரன் என்பவன் மீது வீசுதலும் அதுவேளை அசுரேந்திரன அழிந்துபோன தனது வில்லை வீசி எறிந்துவிட்டு; வேறொரு வில்லை குழிந்த கண்களுடைய பூதங்கள் கண்டு வெருக்கொண்டிட வளைத்துக்கொண்டான். 95

குனித்து நான்கிரு சுடுசரந் தொடுத்தறை கூவித்
தனித்து மேல்வருங் கனகன்ஏ வியகிரி சாய்த்துப்
புனிற்றி ளம்பிறை செக்கர்வான் நுழைந்தெனப் புயங்கள்
பனித்தி டும்படி அழுத்தினன் ஆயிரம் பகழி.

அசுரேந்திரன் வில்லினை வளைத்து எட்டு வெப்பமான அம்புகளைவிடுத்து போரிட அழைத்து தனித்து நேர்வந்திட்ட கனகன் ஏவிய மலையினைப் பொடியாக்கியபின்னர்; முதற்கலைகொண்ட இளம்பிறையானது செக்கர் வானிலேநுழைந்தது போன்று கனகன் தோள்கள் நடுங்கிடும்படி ஆயிரம் அம்புகளை அவன் தோள்மீது ஊடுருவிப் போம்படி விடுத்தான். 96

பகழி ஆயிரம் படுதலும் ஆடகன் பையுள்
நிகழ நிற்றலும் வேறொரு வலவனை நிறுவிப்
புகழில் தானவன் தேர்கொடு பூதர்மேற் போத
அகழு மால்வரை ஒன்றெறிந் துன்மத்தன் ஆர்த்தான்.

ஆயிரம் அம்புகளும் தோள்மீது படுதலும் கனகன் எனும் பூதத்தலைவன் சோர்வு நிகழ்வுற நிற்றலும் வேறொரு சாரதியினை நியமித்துக்கொண்டு புகழ் நீங்கிய அசுரேந்திரன் தேர்மேல்கொண்டு மீண்டும் பூதங்களைத் தாக்கிடப் போதலும் அது கண்டு அடுத்ததொரு பூதத்தலைவன் உன்மத்தன் அகழ்ந்து பிடுங்கி எடுத்திட்ட பெரியதொரு மலையினை எறிந்து ஆர்த்தனன். 97

அவன்எ றிந்திடும் பருப்பதம் விரைவில்வந் தடர்க்கக்
கவன வெம்பரி யாயின உலந்தன காணுப்
பவன வேகத்தின் வேறொரு தேர்மிசைப் பாய்ந்தான்
புவனம் உண்ணிய நின்றதோர் கடவுளே போல்வான்.

உன்மத்தன் எறிந்திடும் மலைவந்து விரைவாக வீழ்ந்திடுதலும் அம்மலைதாக்கி தேரின்மீது பூட்டிய கொடிய குதிரைகள் மாய்ந்திட்டதை அசுரேந்திரன் கண்டு காற்றுவேகத்துடன் வேறொரு தேர்மீதுபாய்ந்தான். அவன் பூமியை அழிக்கின்ற உருத்திர மூர்த்தியையே போன்றுநின்றுன்: 98

முந்து வெங்கணை உலப்பில தூண்டலும் முந்நீர்
செந்து கிர்க்கொடி போர்த்தெனக் குருதிநீர் செறிய
வந்த முற்றிலன் புவிமிசை இருந்தனன் ஆங்கே
மந்தன் என்பவன் தாரகன் புதல்வன்நேர் வந்தான்.

வேறொருதேர்மீது போன அசுரேந்திரன் முற்பட்டு வேகத்துடன் செல்கின்ற கொடிய அம்புகள் அளவுகடந்தனவற்றைச் செலுத்தலும் அவைகள்வந்து உன்மத் தன்மேல் படுதலும் கருங்கடலில் சிவந்த பவளக்கொடி படர்ந்திடுதல்போன்று இரத்தம் சொரிந்திட உன்மத்தன் இறவாது பூமியில் இருந்திட்டான். அதுகண்டு மந்தன் என்னும் பூதத்தலைவன் போரிட தாரகன் புதல்வன் அசுரேந்திரன் நேர் வந்தான். 99

வருத லோடும்ஆங் கவன்மிசை ஐயிரு வாளி
குருதி காலுற வழங்கலும் எரியெனக் கொதியாப்
பரிதி மேவரத் தகுவதோர் பருப்பதம் பறித்துக்
கருதி ஏவினன் அவுணர்கோன் அங்கது கண்டான்.

மந்தன் என்னும் பூதத்தலைவன் வருதலோடு அவன்மேல் அசுரேந்திரன் பத்து அம்புகளை இரத்தம்வடியுமாறு விடுதலும் அவைகள் படுதலால் மந்தன் நெருப் பினைப்போன்று கொதித்து சூரியன் மேவி வருவதற்கு நீண்டதொரு பெருமலையினைப் பறித்தெடுத்து குறிப்பாக அசுரேந்திரன்மீது படும்படி விடுத்தான். அசுரேந்திரனும் மலைவருவதைக் கண்டான். 100

சென்று மார்பெதிர் ஏற்றலும் வந்துழித் தெறித்துக்
குன்று மீண்டுமற் றவன்புடை போயது கொடியோன்
ஒன்று போலிய ஆயிரம் பகழிகள் உய்த்தான்
நின்று மந்தன் அங்கயர்ந்தனன் சிங்கனும் நேர்ந்தான்.

நேர்வரும் மலைமுன்சென்று அசுரேந்திரன் தனது நெஞ்சினைக்கொடுத்து ஏற்ற லும் அம்மலை மீண்டு அப்பூதன்பால்போயது. அதுவேளை அசுரேந்திரன் ஒன்றைப் போன்று எல்லாம் கூர்மையான அம்புகள் ஆயிரத்தை செலுத்த மந்தன் மேல் அவை பட்டிட அவனும் அங்கு அயர்ந்தான். அதுகண்டு அடுத்த பூதத்தலைவன் சிங்கன் எதிரிட்டு வந்தான். 101

எடுத்து மால்வரை ஒன்றவன் உரத்தின்நேர் எறியத்
தடுத்தொர் வாளியின் அகற்றினன் அமரிடைத் தரியார்
விடுத்த தோர்கதை எறிதலும் அவனது விலக்கித்
தொடுத்து நூறுகோல் அழுத்தினன் சிங்கனும் தொலைந்தான்.

சிங்கனும் பெரியதொரு மலையினை எடுத்து அசுரேந்திரன் நெஞ்சின் மீது நேராக எறிந்திடலும் அம்மலையை அசுரேந்திரன் ஓர் அம்புவிடுத்து அறுத்து அகற்றினன். பின்னர் சிங்கன் போர்களத்தில் பகைவர் கைவிட்டதொரு கதாயுதத்தை எடுத்து எறிதலும் அசுரேந்திரனும் அதனை அறுத்துவிலக்கி பின்னர் நூறு அம்பினை தொடுத்து சிங்கன மேல் ஊடுருவ விடுத்தலும் அவைபட்டுசிங்கனும் தொலைந்தான். 102

ஒழிந்த சாரதத் தலைவர்க ளியாவரும் உடன்றே
அழிந்து நின்றனர் தாரகன் குமரன்ஆ சுகங்கள்
பொழிந்து மற்றுள பூதரை முடித்திடும் போதில்
கழிந்த துன்பொடும் இலக்கரில் தண்டகன் கண்டான்.

இவர்கள் நீங்கிய பூதத்தலைவர்கள் யாரும் ஒருங்குதிரண்டு போரிட்டு அசுரேந் திரனுக்கு தோற்று நின்றார்கள். தாரகாசுரன் மகன் அசுரேந்திரன் மீண்டும் அம் பினைப் பொழிந்து மற்றுள்ள பூதங்களையும் முடிக்கின்ற வேளையிலே இவற்றையெல் லாம் மிக்க துன்பத்துடன் இலக்கம் வீரரில் ஒருவனாகிய தண்டகன் கண்டான். 103

தனது கார்முகம் வாங்கியே தண்டகப் பெயரோன்
முனையி ருங்கணை ஆயிரங் கொடியவன் முகத்தின்
நனிபு குந்திட விடுத்தலும் நடலையுற் றிரங்கி
மனம்வெ குண்டுபின் தன்பெருஞ் சிலையினை வளைத்தான்.

தனது வில்லினை தண்டகன் எடுத்து வளைத்து தண்டகன் என்னும் பெயருடைய தலைவன் கூரிய முனையுடைய கொடிய அம்புகள் ஆயிரம் கோடியினை அசுரேந்திரன் முகத்தில் நன்றுகத்தைத்திட விடுத்தலும் அவைபடுதலால் அசுரேந்திரன் வேதனை யுற்று இரங்கி மனம் கோபமடைந்து தனதுபெரிய வில்லை வளைத்தான். 104

வளைத்து நாலிரண் டம்பினைத் தண்டக மறவோன்
குளத்தின் மேற்பட விடுத்தலும் எழுந்தன குருதி
இளைத்து நின்றனன் தேர்மிசை அன்னவற் கிளையோன்
கிளத்து சோமுகன் தாரகன் மகன்எதிர் கிடைத்தான்.

அசுரேந்திரன் வில்லைவளைத்து எட்டு அம்புகளை தண்டகன் என்னும் வீரனின் நெற்றியின்மீது பட்டிட விடுத்தலும் அவைபட்டுஉருவ இரத்தம் பெருகியது. தண்டகனும் அதனால் இளைத்துப்போய் தேர்மீது நின்றான். அதுவேளை அவனுக்கு இளையவனான சோமுகன்; தாரகன் புதல்வன் அசுரேந்திரன் முன் வந்து எதிரிட்டான். 105

எதிர்பு குந்தவன் அகலமேல் ஐம்பதிற் றிரட்டி
கதிர்தெ றுங்கணை அவுணர்கோன் அழுத்தலுங் கவலா
அதிர்த ருந்தன தொண்சிலை வாங்கியா யிரமாம்
நுதிகொள் வெஞ்சரந் தூண்டினன் சோமுகன் நொடிப்பில்

எதிர்புகுந்துகொண்ட சோமுகனின் நெஞ்சின்மீது நூறு ஒளியுடைய கூர்மையான அம்புகளை அசுரேந்திரன் விடுத்தலும் அவைகள் படுதலால் சோமுகன் கவலைகொண்டு அதிர்ச்சிதரும் தனது வலியவில்லை வளைத்து ஆயிரம் என்னும் கூரிய நுனிகளை உடைய அம்புகளை ஒரு நொடிப்பொழுதிலே செலுத்தினான். 106

பல்ல வங்களா யிரமும்அத் தாரகன் பாலன்
சில்லி யந்தனித் தேரினை வலவனைச் சிதைப்ப
மெல்ல வேறொரு தேர்மிசைப் பாய்ந்துவேல் ஒன்றை
ஒல்லை இங்கிவன் உயிரினை உண்கென உய்த்தான்.

அம்புகள் ஆயிரமும் சென்று அத்தாரகனுடைய பாலன் அசுரேந்திரனுடைய பெரும் சில்லினை உடைய தேரின் சாரதியை சிதைவாக்கி அழித்திட! அதுபோது அசுரேந்திரன் மெல்லவே வேறொரு தேர்மீது பாய்ந்து வேலொன்றினை எடுத்து வேலே நீ சென்று விரைவாக இந்த சோமுகன் உயிரினை உண்டிடுவாய் என விடுத்தான். 107

உய்த்த வேல்அவன் அகலமேற் படுதலும் முயங்கி
எய்த்து மற்றவன் தேர்மிசை மயங்கினன் இருப்ப
நித்தன் வேர்வுறு சோமுகற் கிளையவன் நெடுமால்
ஒத்த வன்மையன் விசயன்என் பவன்கடி துற்றான்.

அசுரேந்திரன் செலுத்தியவேல் சோமுகன் நெஞ்சில் மேல்படுதலும் பதைபதைத்து களைத்து அவன் தனது தேர்மீது இருந்துவிடலும் நித்தியனாகும் சிவபிரான் அருளால் விளைந்த வேர்வையிற் தோன்றிய சோமுகனுக்கு இளையவனாயோன்; நெடிய திருமாலை ஒத்தவன்மை உடையவன்; விசயன் என்னும் பெயருடையோன் விரைவாக அசுரேந்திரனை வந்து எதிர்த்தான். 108

விசயன் ஆங்கொரு கொடுமரம் வாங்கியே வெகுண்டு
நிசித வெங்கணை ஆயிரம் உய்த்துநே ரில்லா
அசுரர் இந்திரன் வலவனைத் தடிந்துமற் றவன்கை
இசையும் வில்லொடு நாரியைத் துணிபட இறுத்தான்.

விசயன் அங்கு ஒரு வில்லை எடுத்து வளைத்து கோபமுற்று கூரிய கொடுங்கணைகள் ஆயிரத்தை விடுத்து நேர்பிறர் இல்லாத அசுரேந்திரனின் தேர்ச்சாரதியினைக் கொன்று அப்பால் அசுரேந்திரனின் கையினில் உள்ள வில்லுடன் நாணினை துணியாகிப் போயிட அறுத்தான். 109

முற்று நூலுணர் பாகுயிர் உலத்தலும் முனியா
இற்ற நாணொடு வார்சிலைத் துணியினை ஏந்திக்
கொற்ற மார்அசு ரேந்திரன் மத்திகை கொண்டு
பொற்றை அன்னதன் தேர்விடு வலவனிற் பொலிந்தான்.

தேரினைச் செலுத்திடும் நுட்பங்களைப் புகல்கின்ற நூல்முழுவதும் தெரிந்த சாரதி மாண்டிட அதுகண்டு கோபமுற்று அறுந்த நாணினோடு முறிந்த பாதிவில்லையும் கையில் ஏந்தி நிற்கும் கொற்றம் மிகுந்த அசுரேந்திரன்; சவுக்கினை கையில்பிடித் துக்கொண்டு மலையொத்த தனது தேரைச் செலுத்தியிடும் சாரதியைப் போன்று விளங்கிட நின்றான். 110

தகுவர் கோன்ஒரு வலவனை நிறுவியோர் தண்டம்
இகலும் வன்மையால் எடுத்தனன் அவன்மிசை எறியப்
புகுது மெல்லையில் கண்டெதிர் விசயனும் புகழோன்
மிகவும் எல்லையில் சரங்களைத் தூண்டினன் விடுத்தான்.

அப்பால் அசுரேந்திரன் வேறொரு தேர்ச்சாரதியினை அத்தொழிலில் நிறுத்தி ஓர்தண்டாயுதத்தினை கோபத்துடனாய வலிமையால் கையில் எடுத்துக்கொண்டு அந்த விசயன்மேல் எறிய அவ்வேளையில் விசயன் என்னும் புகழுடைய வீரன் அதுகண்டு மிகவும் கணக்கற்ற அம்புகளை அத்தண்டாயுதற்கு மாறாகச் செலுத்தி விடுத்தான். 111

தொட்ட தொட்டன கணையெலாந் துகள்படத் தொலைத்து
மட்டு லாந்தொடை விசயன்மார் பகத்திடை வந்து
பட்ட காலையில் அவன்றன திரதமேற் பதைத்து
விட்ட வில்லொடு குருதியுந் தானுமாய் வீழ்ந்தான்.

விசயன் பின்னரும் விட்டவிட்ட அம்புகளை எல்லாம் அத்தண்டு துகளாகிப் போயிடத் தொலைத்து நீக்கி வேகமாய் வந்து தேன்துளிக்கும் பூமாலையணிந்த விச யனின் நெஞ்சில்பட்ட காலையில் விசயன் தனது தேர்மேல் பதைபதைத்து கைசோர விட்ட வில்லுடன் இரத்தமும் பெருகிட வீழ்ந்தான். 112

விழுந்த காலையில் இலக்கரில் ஏனையோர் வெகுண்டு
பொழிந்த வாளியால் தாரகன் மகனொடு பொருதே
அழிந்தி யாவரும் இரிந்தனர் போதலும் அதுகண்
டுழந்த துன்பொடு வீரமொய்ம் பினன்விரைந் துற்றான்.

விசயன் விழுந்த நேரத்தில் இலக்கம் வீரரில் மிச்சமாக நின்ற ஏனையோர் இது கண்டு வெகுண்டு தமது தேரைச்செலுத்தி வருங்காலை பொழிகின்ற அம்பினால் தார காசூரன் மகன் அசுரேந்திரனோடு போரிட்டு; அப்போரில் யாவரும் அவனுக்கு தோல்வியுற்று நிலையழிந்து ஓடிப்போனார்கள். அதுகண்டு வேதனையுறும் துன்பத் துடன் வீரவாகுதேவர் விரைவுடன் வந்து சேர்ந்தார். 113

வீர வாகுவேள் இணையடி போற்றியே வெகுண்டோர்
கோர வெஞ்சிலை வாங்கினன் நாணொலி கொளுவி
யாரும் வானவர் வியப்புற அவுணர்கள் அயரத்
தார காசுரன் மதலையை மறைத்தனன் சரத்தால்.

அசுரேந்திரன் முன்போரிட வந்துற்ற வீரவாகுதேவர் முருகப் பெருமான் திரு வடி மலர்களைப் போற்றிசெய்து கோபமுற்று ஓர் கொடிய வில்லினை எடுத்து வளைத்து நாணோசைகொண்டு எல்லாத் தேவரும் பார்த்து ஆச்சரியமுறவும் அசுரர் கள் கண்டு துக்கமிகுதியால் அயர்ச்சி கொள்ளவும்; தாரகாசூரன் மகன் அசுரேந் திரனை முற்றிலும் அம்பினால் மறைத்தார். 114

மறைப்ப மெய்யெலாங் குருதிகொண் டிடலும்வல் லவுணன்
விறற்க டுஞ்சிலை ஒன்றினை வளைத்தவன் மிசையே
பிறைத்த லைக்கணை ஆயிரம் அழுத்தினன் பெரிதும்
உறைத்த செம்புனல் இருவரும் இளங்கதிர் ஒத்தார்.

வீரவாகுதேவர் விடுத்த அம்பினால் தாரகாசூரன் மைந்தன் அசுரேந்திரன் மேனி தைப்புண்டு மேனியெல்லாம் இரத்தம் பெருகிக் கொண்டிடலும் அதுவேளை அசை விலாத வலியுடைய அந்த அசுரன் வலிமைமிகுந்த கொடிய வில் ஒன்றினைத் தானும் வளைத்து; வீரவாகுதேவர்மீது பிறைத் தலையுடைய அம்புகள் ஆயிரத்தை அழுத்தி உருவச் செய்திடலும்; அதுவேளை இரத்தம் வீரவாகுதேவர் மேனியிலும் பெருகியது. இப்பொது இருவர்மேனியிலும் இரத்தம் சீறிப் பாய்தலால் இருவரும் சிவந்த கிரண மூடைய இளஞ்சூரியர் போன்றனர். 115

தார கத்திற லான்மகன் தூண்டியேழ் சரத்தால்
சூரர் இத்திறல் அண்ணல்கைச் சிலைதனைத் துணிப்ப
வீரன் மற்றொரு கார்முகம் வாங்கியே விடங்கால்
கூர யிற்கணை ஆயிரம் விடுத்தனன் குறியால்.

திறனுடைய தாரகாசூரன்மகன் அசுரேந்திரன் அதுவேளை ஏழு அம்புகளைச் செலுத்தி அச்சம்தரும் சிங்கேற்றின் வலியுடைய வீரவாகுதேவர் கைக்கொண்ட வில்லை முறித்திட; வீரவாகுதேவர் வேறொருவில்லை உடன் எடுத்து வளைத்து நஞ்சினைக் கக்குகின்ற கூரிய அம்புகள் ஆயிரத்தை குறிப்பாக அசுரேந்திரன்பால் சென்று தைத்திட விடுத்தார். 116

ஏகும் வார்கணை தாரகன் மகன்சிலை இறுத்துப்
பாகன் ஆவியுண் டிரதமோ டயங்களைப் படுப்ப
வாகை இன்றியே வேறொரு தேர்மிசை வறியன்
போக லோடுமற் றன்னது கண்டனர் புலவோர்.

வீரவாகுதேவர் விடுதலும் சென்றிட்ட கூரிய அம்புகள் தாரகாசூரன் மகன் அசுரேந்திரன் வில்லினை முறித்து; சாரதியின் உயிரை உண்டு கொன்று; தேரோடு குதிரைகளையும் அழித்திட; வெற்றியை இழந்து அசுரேந்திரன் வேறொரு தேர்மேலாக படையில்லாத வறியோனாக சோர்வுடன் போதலும் அதனைத்தேவர்கள்கண்டனர். 117

வெருவ ரப்பொருந் தாரகன் மதலையை வீரன்
பொருது வெற்றிகொள் வான்கொலாம் இனியெனப் புகழ்ந்தார்
அரிய அற்புத மோவவன் வென்றிடல் அவுணன்
கரித ருஞ்சுதன் சிம்புளின் சுதனிவன் கழறின்.

கண்ட அவர்கள் ஓகோ! இவ்வளவு நேரமும் ஆரும் கண்டு அச்சுறும்படி கொடும் போர் செய்ய தாரகன் மைந்தன் அசுரேந்திரனை இனி போரிட்டு வெற்றிகொள்வார்போலும் எங்கள் வீரவாகுதேவர் எனப் புகழ்ந்தார்கள். இச் செயல் அரிய அற்புதமோ இல்லை இது இயல்புதான்; எப்படி எனில் யானைமுகமுடைய தாரகனின் புதல்வன் அசுரேந்திரன் சரசப்பட்சி வடிவுகொண்ட உருத்திர மூர்த்தியின் மகன் வீரவாகு. 118

மாறொர் தேரிடைப் பாய்ந்தவன் ஒருதனு வளைத்து
நூறு கோல்விடுத் தவன்இர தத்தினை நூறச்
சீறி வானெழீஇ வீரவா குப்பெயர்த் திறலோன்
ஆறு மாமுக முதல்வனைப் பரவிநின் றார்த்தான்.

அசுரேந்திரன் வேறொரு தேர்மீது பாய்ந்து ஓர் வில்லை எடுத்து வளைத்து நூறு அம்பினை விடுத்து வீரவாகுதேவரின் தேரினைப் பொடிபடச் செய்திட திறனுடைய வீரவாகுதேவர் அப்படியோ! எனச் சீறி வானில் எழுந்து ஆறுமுகப்பெருமானை பரவி நின்று ஆர்ப்பரித்தார். 119

உறைக ழித்துவாள் உருவியே உம்பரிற் படர்ந்து
சிறைக ழித்திடும் வரைபுரை அவுணர்கோன் தேர்மேல்
குறைக ழித்திடும் பணிகவர் மதியெனக் குப்புற்
றிறைக ழிக்குமுன் அவன்றனைக் கையிலொன் றெறிந்தான்.

தனது திருவரையில் உள்ள உறையை நீக்கி வாளினை வீரவாகுதேவர் உருவி எடுத்து வானமார்க்கமாகச்சென்று; சிறகுகள் வெட்டப்பட்ட மலைபோன்று நின்றிடும் மலையை ஒத்த அசுரேந்திரன் தேர்மீது நஞ்சினைக்கக்கிடும் பாம்பினைக் கவர்ந்து கொள்ளும் சந்திரனைப் போன்று குப்புறப் பாய்ந்து; ஓர் இறைப்பொழுது நீங்குமுன் அசுரேந்திரன் கை ஒன்றினை வாளால் வெட்டினார். 120

எறிந்த காலையில் இற்றதோர் கைத்தலம் இறலுங்
குறைந்த கையிடைச் சலசல இழிவன குருதி
செறிந்த நீலவொண் கிரிதனக் கொருபுடை சென்றே
உறைந்த தோர்கரும் பணியழல் மணியுமிழ்ந் தொப்ப.

வீரவாகுதேவர் அசுரேந்திரன் கையில் ஒன்றினைவாளால் வெட்டியகாலையில் ஒரு கைஅறுந்து வீழ்ந்திட்டது; வெட்டிய கையிடத்தாக சலசல என்று இரத்தம் சீறிப்பாய்வது; நீலநிறமாகச் செறிந்துள்ள ஓர் மலைதனக்கு ஓர் பக்கராகச் சென்று இருக்கின்ற ஓர் கறுத்தப் பாம்பு நெருப்பைப் போலும் சிவந்த இரத்தினங்களை கக்கியது போல் ஒத்திருப்பது. 121

கைய றுத்தலுந் தாரகன் தன்சுதன் கனன்று
மொய்யு டைக்கதை ஒன்றெடுத் தவன்மிசை மோத
ஒய்யெனத் திறல் மொய்ம்பினன் வானெழுந் தொருதன்
செய்ய பொற்பதத் துதைத்தனன் அங்கவன் சிரத்தில்.

கையறுத்தலும் தாரகாசூரனுடைய மகன் அசுரேந்திரன் கோபமடைந்து வலிமைமிக்க ஓர் கதாயுதத்தை மறுகையால் எடுத்து வீரவாகுதேவர் மேல்மோதிட அதுவேளை துரிதமுடன் வலியுடைய தோள்கொண்ட வீரவாகு தேவர் வானில் எழுந்து தன்னுடைய செம்மையாகும் பொற்பாதத்திருல் அசுரேந்திரன் தலையில் உதைத்தார். 122

காமர் தாளினுல் உதைத்துவிண் படர்தலுங் கண்டு
தூம மார்விழி யான்அசு ரேந்திரன் தொடர்ந்தோர்
சேம வாள்கொடு வானெழ மேலையோன் சீறி
ஏம நாந்தகத் தால்அவன் தலையற எறிந்தான்.

அழகிய திருப்பாதத்தால் உதைத்துவிட்டு வீரவாகுதேவர் வானில் எழுந்து செல்லலும் அதனைக் கண்டு கோபமிகுதியால் புகை எளங்கும் கண்ணுடைய அசுரேந்திரன் வீரவாகுதேவரைத் தொடர்ந்து தனது துணையாயிருந்த வாளினை எடுத்து வானில் எழுதலும்; வீரவாகுதேவர் அது கண்டு ஆமோ எனச் சீறி தமது மேன்மையானவாளினுல் அசுரேந்திரன் தலை அற்றிட வெட்டினுர் 123

எறிந்த சென்னியு மியாக்கையும் இம்பரின் வீழ்ந்து
மறிந்து மற்றவன் மன்னுயிர் போயது வான்மேற்
செறிந்த விண்ணவர் ஆர்த்தனர் இன்னதோர் செய்கை
அறிந்த தானவக் கடலெலாம் ஓடின அன்றே.

அது வேளை வெட்டுண்ட தலையும் உடலும் இரண்டுமாக இந்தப்பூமியில் வீழ்ந்து இறந்து அசுரேந்திரனுடைய மேலான உயிர் போயது. இது கண்டு வான பெங்கும் செறிந்து நின்ற தேவர்கள் மகிழ்வால் ஆர்ப்பரித்தனர் இந்த செயலை அறிந்த அசுரராகும் வெள்ளம் எல்லாம் கலங்கி ஓடின. அசுரர்கள் பின்னரும் நிற்பாரா? 124

மக்க ளாயினர் இருவரும் மலைந்து
பக்க மேயின தானைகள் இரிந்ததும் பாராத்
தொக்க பேரழல் உலகட எழுந்ததோற் றம்போல்
மிக்க சீற்றமேற் கொண்டனன் அண்டங்கள் வென்ருன்.

தனது தம்பிமாரின் மக்களாயின இருவரும் இறந்துபோனதும்; போரிடும் படி தன்பாலாக வந்த சேனைகள் பயத்தால் ஓடியதும் பார்த்து; திரண்டு எழுந்த ஊழித் தீ என்னும் நெருப்பு உலகை அழிக்க எடுத்த தோற்றம் போல் மிகு கோபத்தினை மேற்கொண்டான் அண்டங்கள் எல்லாவற்றையும் வெற்றி கொண்ட சூரபன்மன். 125

சீற்ற மேதகு காசிபன் மதலைபோர் செய்யும்
ஆற்ற லார்தமை அடுவனல் விரைந்தென மதித்துக்
காற்றின் முந்துசெல் தேரிடைக் கடிதுவந் தெய்திக்
கூற்றின் வெம்பசி தணிப்பதோர் சிலையினைக் குனித்தான்.

கோபத்தினுல் மிகுந்திட்ட காசிபமுனிவரின் புத்திரனுகிய சூரபன்மன்; போர் செய்திட்டு நிற்கும் என் பகைவர் யாரையும் விரைவுடன் இனி கொல்வேன் என மதித்து; வேகத்திலே காற்றினையும் முந்திடும்படி செல்கின்ற தேர்மேலாகி அதனைச் செலுத்தி விரைவுடன் வந்து முன் அணியினைச் சேர்ந்து அங்கு பூதங்கள் முன்பு நின்று உயிர்கொலை செய்தல் என்னும் இயமனுடைய கொடிய பசியை தணித்திடு தற்கேற்ற தொரு வில்லினை வளைத்தான்.

வாணி போற்றிடு சயமகள் வீரமா மடந்தை
நீணி லைப்பட வேறுசோ பானத்தின் நெறிபோல்
பூண ளாவிய பொன்னவாஞ் சிலைதனிற் புணர்ந்த
நாணின் ஓதையைக் காட்டினன் அணிவிரல் நகத்தால்.

சரஸ்வதிதேவியும் துதித்திடும் வீர இலக்குமி, வீரப்பெண்ணாகும் துர்க்காதேவி ஆகியோர் நீண்ட நிலைப்பட்ட நெறியால் ஏறிச் சென்றிடும் படிகள்கொண்ட சோபானம் போன்று பூண்ககள் அமைந்து நின்ற பொன்னான தனது வில்லில் பூட்டிய நாணின் ஓசையைத் தனது அணிவிரல் நகத்தால் சுண்டிக் காண்பித்தான். 127

கரங்கொள் வில்லொலி கேட்டலும் பாரிடைக் கணங்கள்
மரங்கள் சிந்தினர் சிகரிகள் சிந்தினர் மலையும்
உரங்கள் சிந்தினர் வீரமுஞ் சிந்தினர் உடலுஞ்
சிரங்க ளானவும் பனிந்திட ஓடினர் சிதறி.

அப்பாடா! இந்தச் சூரனுடைய வில்லோசைக் கேட்டலும், பூதங்கள் திடுக்கிட்டுக் கையில் வைத்திருந்த மரங்களைக் கீழே போட்டார்கள்; மலைகளைக் கைவிட்டார்கள், போர்செய்வோம் என்ற துணிவினைக் கைவிட்டார்கள்; வீரத்தைக் கைவிட்டார்கள். உடலும், தலையும் பயத்தால் படபடத்து நடுங்கிட எல்லாப் படையையுமே எறிந்துவிட்டு எப்பக்கமும் சிதறி ஓட்டம் எடுத்தனர்.

யாண்டு மாகியே இரிந்தனர் அல்லதிந் நிலத்தில்
வீண்டு ளார்சிலர் பதைத்துநின் றூர்சிலர் வீழ்ந்து
மாண்டு ளார்சிலர் மயக்கமுற் றூர்சிலர் மற்றும்
ஆண்டு பன்னிரண் டொழிந்தில தவுணன்வில் அரவம்.

பூதங்கள் பயத்தல் எல்லாத்திக்கிலுமாக ஓடிப்போனதேயல்லாமல் இந்த நிலத்தில் விழுந்துள்ளார் சிலர், பதைத்து நடுக்கங் கொண்டு நின்றூர் சிலர், கீழே விழுந்து இறந்துபோயினூர் சிலர், மயக்கமுற்றூர் சிலர், இப்படியாகப் பலரையும் துயருற வைத்த அந்த வில்லோசையும் பன்னிரண்டு வருடம் வரையும் ஒழிந்திலது. அந்த ஓசை அவ்வளவு காலமும் பிரதிபலித்தபடியே நின்றது. 129

வேதன் அஞ்சினன் மால்முடி துளக்கினன் விண்ணோர்
நாதன் அஞ்சினன் மறலியும் அஞ்சினன் நடுங்கிக்
கோதில் நல்லறம் அஞ்சின ஐவகை கொண்ட
பூதம் அஞ்சின உயிர்த்தொகை அஞ்சின பொருமி.

இந்த வில்லோசையைக் கேட்டுப் பிரமதேவன் அஞ்சினன், நாராயணக் கடவுள் ஓகோ நல்லது என்று தனது அழகிய முடியை அசைத்தார். தேவர்கட்கு நாதனான இந்திரன் அஞ்சினன், இயமனுமே அஞ்சினன். குறைவு ஏதும் இல்லாத நன்மையுடைய தருமங்கள் அஞ்சின. மண், நீர், நெருப்பு, காற்று, வானம் என்னும் ஐந்து பூதமும் அஞ்சின. உயிர்த்தொகைகள் எல்லாம் பொருமலுற்று நடுங்கி அஞ்சின. 130

வஞ்சன் வார்சிலை நாணொலி கேட்டலும் மறத்தால்
விஞ்சு பூதமீ ராயிர வெள்ளமும் வெருவி
எஞ்சி யேயவண் நின்றிடா திரிந்துள வென்றால்
அஞ்சு பூதங்கள் அஞ்சுவ தற்புதத் தனவோ.

வஞ்சகம் நிறைந்த சூரபன்மனுடைய நாணோசையைக் கேட்ட மாத்திரத்தே; மறக்கொடுந் தொழிலால் மிகவும் மிஞ்சி நின்றிட்ட இரண்டாயிரம் வெள்ளமும் பயந்து, அங்கு நின்றிடாது ஓடிப்போயின எல்லா இடங்களும் என்றால், தீமை இல்லாத மற்றைய மண் முதலிய ஐந்து பூதங்களும் அஞ்சுவது அற்புதமானதோ? இல்லையே!

மறத்தால் அஞ்சாமையுடைய அந்தப் பூதங்கள் ஓடின. அதைவிட அப்பாவியான இந்த மண் முதலிய ஐந்து பூதமும் அஞ்சின என்பது அற்புதமல்ல. முன்னையதுதான் வியப்பு. 131

சூரன் விற்பெரு முழக்கினைக் கேட்டலுந் துளங்கிப்
பாரி டத்தொகை அழிதர அன்னது பார்த்துப்
போரி யற்படைத் தலைவர் நூற் றெண்மரும் புகுந்து
மாரி யிற்பொழிந் திட்டனர் வரைகளும் மரமும்.

சூரபன்மனுடைய கைவில்லில் நின்றும் புறப்பட்ட நாணோசையைக் கேட்டு இரண்டாயிரம் வெள்ளம் என்னும் கணக்குடைய பூதங்கள் நடுங்கிப் போரிட முடியாது பயந்து அங்கு நில்லாது அப்பால் ஓடிட, அதனைப் பார்த்துப் போர் செய்யும் இயல்பின் வீரமாகும் பூத சேனாபதிகள் நூற்றெட்டுப் பேரும் எழுந்து சூரன்முன் சென்று மழை சொரிவது போன்று மலைகளையும் மரங்களையும் சூரன் மேல் வீசினார்கள். 132

அன்ன வேலையிற் பத்துநூ றுயிர கோடி
பொன்னின் வெங்கணை அவுணர்கோன் முறைமுறை போக்கித்
தன்னு ழைப்புகும் வரையொடு தருக்களைத் தடிந்து
துன்னு பாரிடத் தலைவர்தம் யாக்கையைத் துளைத்தான்.

அவ்வாறாகிய நேரத்தில் சூரபன்மன் பத்து நூறுயிரகோடி என்னும் கணக்கில் பொன்னின் ஒளியுடைய கூர்மையான அம்புகளை முறைமுறையாகச் செலுத்தித் தன்னிடத்து வீசப்பட்டு வரும் மரங்களை, மலைகளை அறுத்து முன்பாக நெருங்கி நின்று போரிட்ட பூதகணத் தலைவர் உடலங்களை அம்பினால் துளைத்தான். 133

முடிது ளைத்தனன் முகத்தினைத் துளைத்தனன் மொய்ம்பைத்
தொடயல் மார்பினைத் துளைத்தனன் பாணியைத் துளைத்தான்
கடிது ளைத்தனன் குறங்கினைத் துளைத்தனன் கழல்சேர்
அடிது ளைத்தனன் பாரிடத் தலைவரும் அயர்ந்தார்.

சில பூத சேனாதிபதியின் முடியைத் துளைத்தான். முகத்தினைத் துளைத்தனன், கையினைத் துளைத்தான், அரையைத் துளைத்தான், தொடையைத் துளைத்தான், வீரக்கழல் அணிந்த காலைத் துளைத்தான். இப்படியாகப் பூதங்கள் உடலை அம்புகள் விடுத்துத் துளைத்துவிட, அங்குள்ள அத்தனை பூத சேனாதிபதிகளும் சோர்வுற்று அயர்ந்தார். 134

துளைத்து மெய்யினை வெஞ்சரம் போதலுந் துயர்கொண்
டிளைத்து நின்றனன் அதிபலன் வக்கிரன் என்போன்
களைத்து வீழ்ந்தனன் வச்சிரன் இரங்கினன் கபாலி
உளத்தின் வன்மைய தழிந்தனன் உன்மத்தன் உலைந்தான்.

சூரபன்மன் விடுக்கும் கோடிக் கணக்கான அம்புகள் வந்து பூத சேனாதி பதிகள்மேற் பட்டுதுத்ளைத்து உருவிப் போதலும், அதனால் வேதனையுற்று இளைத்து நின்றான் அதிபலன் என்னும் பூதத்தலைவன் மற்றைய வக்கிரன் என்பவன் களைத்து வீழ்ந்தான், வச்சிரன் ஐயகோ! என அழுதான், கபாலி உள்ளத்திற் கொண்ட திடவலிமை கெட்டு நின்றனன். உன்மத்தன் வேதனையால் ஓடிஓடி உலைந்தான். 135

நீடு குன்றினை யேந்தியே அச்சுதன் நின்றான்
ஓடு கின்றிலன் எதிர்ந்திலன் மாபலன் உளைந்தான்
வாடு கின்றனன் மதிசயன் மோகனும் மருண்டான்
ஆடு றுந்துயர் அறிந்தனன் அண்டவா பரணன்.

அச்சுதன் என்னும் பூதத்தலைவன் பெரியதொரு மலையை ஏந்தியபடி ஓட முடியாது, எதிர்க்க முடியாது அசந்து நின்றான். மாபலன், ஐயோ என உடலை வளைத்து நெளிந்து வேதனைப் பட்டான். மதிசயன் வாடிக்கொண்டு சாய்கிறான், மோகனும் மயங்கினான். அண்டவாபரணன் என்பானுக்கு இன்றுதான் போர் செய்வதிலே துன்பம் எப்படி இருக்கும் என அறிந்தான். 136

மோக மாலிஉள் நடுங்கினன் சுப்பிரன் மெலிந்தான்
காக பாதன்மெய் பதைத்தனன் உதவகன் கவன்றான்
ஆகம் வீழ்ந்திடு குருதியுள் அழுந்தினன் அசலன்
மாக வந்தன்நொந் திரங்கினன் அத்திரி மறிந்தான்.

மேகமாலி எனும் பூதத்தலைவன் உள்ளம் நடுங்கினான். சுப்பிரன் கைகால் அசைய முடியாது மெலிவுற்றான். காகபாதன் உடலம் பதைபதைத்தான், உதவகன் என்செய்வேன் எனக் கவலை கொண்டான். அசலன் என்பவன் உடலிற் பெருகிடும் இரத்த வெள்ளத்தில் அழுந்திக் கிடந்தான். மாகவந்தனன் நொந்து அழுதான். அத்திரி மயங்கி வீழ்ந்தான். 137

பத்தி ரன்சிறி திடைந்தனன் உடைந்தனன் பதுமன்
எய்த்த சைந்தனன் வியாக்கிரன் தனஞ்சயன் இரிந்தான்
மத்தன் வைதுவெய் துயிர்த்தனன் பிஙகிமெய் மறந்தான்
சித்தி ராங்கனுங் கனகனுந் துயர்க்கடல் திளைத்தார்.

பத்திரன் என்னும் பூதத்தலைவன் சிறிது தளர்ச்சி கொண்டான். நில்லாமல் பின்னிட்டோடினான் பதுமன் என்பவன். களைத்துச் சோர்ந்து கிடந்தான் வியாக்கிரன் என்னும் பூதத்தலைவன்; தனஞ்சயன் என்பவன் நில்லாது ஓடினான்; மத்தன் கோபமுடன் ஏசி, ஐயோ அட பாவி சூரனே! இப்படியுமா செய்தாய் எனப் பெருமூச்சுடன் நின்றான். பிஙகி எனும் பூதத் தலைவன் உடலம் மயங்கித் தன்னையே மறந்தான். சித்திராங்கன், கனகன் என்னும் பூதத்தலைவர்கள் கொடுந்துயரமாகும் கடலில் மூழ்கினராகி வருந்தினர். 138

நெஞ்ச ழிந்தனர் மாலியும் நீலனும் நெடுங்கண்
பஞ்ச டைந்தனர் கும்பனும் நிகும்பனும் பதைப்புற்
றஞ்சி ஏங்கினர் சண்டியுந் தண்டியும் ஆவி
துஞ்சல் கூடினர் வாமனுஞ் சோமன்என் பவனும்.

மாலி, நீலன் என்னும் பூதத்தலைவர்கள் தங்களது உள்ளம் நினைப்பொழிந்து நின்றனர். கும்பன், நிகும்பன் என்னும் பூதத் தலைவர்கள் களையினுல் நெடிய கண்கள் பஞ்சடைந்தனர். சண்டியும் தண்டியும் பதைபதைத்துப் பயந்து ஏங்கினர்: வாமன், சோமன் என்னும் பூதத்தலைவர்கள் தங்களது உயிர்கள் இறக்கும் தறுவாயை அடைந்தனர். 139

வெங்கண் உக்கிரன் எழுவதற் குரனிலன் வெகுண்டான்
சிங்கன் ஓய்ந்தனன் சுவேதசீ ரிடன்மறந் தீர்ந்தான்
சங்க பாலன்வீழ்ந் துருண்டனன் நந்தியுஞ் சலித்தான்
பிங்க லன்உயிர்க் கின்றிலன் உரோமசன் பெயர்ந்தான்.

கொடிய கண்ணுடைய உக்கிரனே அம்பு தைத்து சோர்ந்து எழுந்து கொள்வதற்கு வலியிலாது கோபமுற்ருன். சிங்கன் களைத்து ஓய்ந்தனன். சுவேத சீரிடன் என்பவன் இனிமேல் கொலை செய்யும் கொடுமையைக் கைவிட்டான். சங்கபாலன் என்பவன் வீழ்ந்துருண்டான்: நந்தியும் சலிப்புற்ருன், பிங்கலன் பாடு மூச்சில்லை. உரோமசன் என்பவன் அவ்விடம் விட்டோடினுன். 140

இனைய தன்மையால் இவர்முத லானநூற் றெண்மர்
அனிக வேந்தர்கள் போர்வலி இன்றியே அழியத்
துனைய மற்றது கண்டுநூ றுயிரத் தொகையோர்
கனையும் வார்சிலை வாங்கியே தூர்த்தனர் கணைகள்.

இவ்வாருன தன்மையால் இந்தப் பூதத்தலைவர் முதலாக நூற்றெட்டுப் பூதசேனுதிபதிகளும் அம்புபூட்டு போர் செய்திடும் வலிகெட்டு, இனிப் போரிட்டு அழியாது அயர்வுற்றிட, அதனைக் கண்டு கொண்ட இலக்கம் என்னும் தொகைப் பட்ட வீரர்கள் ஒலிக்கின்ற வார்கட்டிய விற்களை வளைத்து ஓயாது சூரன்மேல் அம்புகளைச் சொரிந்தனர். 141

தூர்த்து மற்றவர் மாறுகொண் டிடுவுழிச் சூரன்
வேர்த்து வெங்கணை மாரிதூய் அனையன விலக்கி
ஆர்த்து வெஞ்சரம் ஆயிர கோடிதொட் டங்கண்
மூர்த்தம் ஒன்றினில் அனையவர் சிலைகளை முரித்தான்.

இலக்கம் வீரர்களும் அம்புகளைச் சொரிந்து சூரபன்மனுடன் மாறுபட்டுப் போரிட்ட வேளை, சூரனைக்கண்டு கோபத்தால் உடலம் வேர்த்துக் கொடிய அம்புகளைச் சொரிந்து, இலக்கர் விட்ட அம்பினை அறுத்து நீக்கி உரக்கச் சத்தமிட்டு பின்னரும் அவன் ஆயிரகோடி அம்புகளைச் செலுத்தி, அங்கு ஒரு மூர்த்த நேரத்தில் அவர்கள் அனைவரும் கொண்ட வில்லினை அறுத்தான். 142

முரித்து மற்றவர் வார்சிலே யெடுப்பதன் முன்னம்
திரித்தும் ஆயிர கோடிவெங் கணையினைச் செலுத்திப்
பரித்தி றம்பல பூண்டிடுந் தேர்களைப் படுத்தி
உரத்தில் அன்னவர்க் கிலக்கமா யிரங்கணை உய்த்தான்.

இலக்கம் வீரரின் வில்லினை முரித்து மறுபடி அவர்கள் வேறு வில் எடுப்பதன் முன், மீண்டும் அவன் ஆயிரகோடி அம்புகளைச் செலுத்தி வண்ணமுடைய திறமையான குதிரைகள் பூட்டிய அவர்களின் அத்தனை தேர்களையும் அழித்து அவர்கள் நெஞ்சிற் பட்டு உருவிவிட இலக்கம் ஆயிரம் அம்பினை விடுத்தான். 143

உய்த்த வாளிகள் நெஞ்சுபோழ்ந் திடுதலும் உளைந்தே
எய்த்து வீழ்ந்தனர் இலக்கரும் அனையகண் டிரங்கி
வித்த கங்கெழு வீரமார்த் தாண்டனும் விடலை
கைத்த லங்கெழு சிலையொடு நேர்ந்தனன் கடிதின்.

சூரபன்மன் செலுத்திய இலக்கம் ஆயிரம் அம்புகளும் வந்து இலக்கம் வீரரின் நெஞ்சில் பட்டு உருவிப் போதலும், அதுவேளை அவர்கள் வேதனைப் பட்டு எல்லாரும் களைத்து வீழ்ந்தார்கள். இலக்கரும் வீழ்ந்த தன்மையை வித்தகமுடைய வீரமார்த்தாண்டன் என்னும் வீரர் கண்டு கவலையுற்றிரங்கிக் கையிற் பிடித்த வில்லோடு சூரபன்மன் முன்பு போரிட வந்தார். 144

வாங்கு வில்லினன் எறிந்தநாண் ஒலியன்வார் கடல்கள்
ஏங்கும் ஆர்ப்பினன் அவுணன்மேற் கணையெனும் எழிலி
தூங்கு வித்தலுஞ் சரங்கள்தூய் அன்னவை தொலைத்துத்
தீங்க டுங்கணை ஆயிரம் நுதலிடைச் செறித்தான்.

வீரமார்த்தாண்டன் சூரனுடன் போரிட வரும்போதே வளைத்த வில்லை உடையவன் நாணினைச் சுண்டி ஓசைகொண்ட ஒலியுடன் பெரும் சமுத்திரங்களும் ஏங்கிடுகின்ற ஆரவாரிப்புடன் வந்து முன்னின்று, சூரபன்மன்மேல் அம்பு எனும் மழையைச் சொரிந்திடலும், அதுவேளை சூரபன்மன் தானும் அம்புகளைச் சொரிந்து அந்த அம்பினையெல்லாம் விலக்கித் தீயதான ஆயிரம் அம்புகளை வீரமார்த்தாண்டர் நெற்றியில் தைத்திட விடுத்தான். 145

செறித்த காலையில் வீரருள் வெய்யவன் செயிர்த்து
மறித்தும் வெஞ்சரந் தூண்டவே ஆயிரம் வாளி
குறித்து வீசியே அவன்விடு கணையொடுங் குனிவில்
அறுத்து ரம்பிளந் தம்புபெய் தூணியும் அட்டான்.

சூரபன்மன் விடுத்த அம்புகள் நெற்றியில் பட்டமாத்திரத்தில் வீரமார்த்தாண்டர் கோபமுற்று, மீண்டும் கொடிய அம்பினைச் சூரபன்மன்மேல் செலுத்திட, சூரபன்மன் குறிப்பாக ஆயிரம் அம்புகளைச் செலுத்தி வீரமார்த்தாண்டர் விட்ட அம்புகளை அறுத்து அவர் பிடித்த வில்லையும் முறித்தெறிந்து நெஞ்சையும் பிளந்து அம்புக்கூட்டையும் அறுத்தெறிந்தான். 146

அட்ட காலையில் வீரமார்த் தாண்டன்உள் ளழுங்கிப்
பட்டு ளானென வீழ்ந்தனன பரிசது நோக்கி
ஒட்ட லான்வலி அடக்குவன் யானென உருத்து
விட்ட தேரொடும் வந்தனன் அரக்கனும் விறலோன்.

இவ்வளவையும் சூரன் அழித்த நேரத்தில் வீரமார்த்தாண்டர் உள்ளம் வேதனை கொண்டு இறந்தார்போன்று சோர்ந்து வீழ்ந்தார். இத்தன்மையைக் கண்டு வீரராக்கதன் என்னும் மற்றுமொரு வீரன், சரி இந்தச் சூரனின் வலியை நான் அடக்குவேன் எனக் கோபத்துடன் ஆவேசங்கொண்டு செலுத்திய தேரோடும் சூரபன்மன் முன்பு வந்தான். 147

வந்த வீரராக் கதனெனும் நாமத்து வலியோன்
கொந்து லாந்தொடை தூங்குதன் கொடுமரங் குனியா
ஐந்து நூற்றிரண் டடுசரந் துரந்திட அதுகால்
உந்தி ஆர்த்தனன் அவுணர்கோன் ஓராயிரங் கணைகள்.

சூரபன்மன் முன்பாக வீரராக்கதன் என்னும் பெயருடைய வலிகொண்ட வீரன் வந்து; கொத்தாகிய பூமாலை தூங்கிடும் தனது வில்லை வளைத்து ஆயிரம் அம்புகளைச் சூரன்பாற் செலுத்தியிட, சூரபன்மனும் விடாது ஆயிரம் அம்புகளைத் தானும் செலுத்தி ஆர்ப்பரித்தான். 148

முட்டு வெங்கணை வீரராக் கதனெனும் மொய்ம்பன்
தொட்ட வாளியை விலக்கிஅங் கவன்சிலை துணிக்க
நெட்டி ருஞ்சுடர் வாளமொன் றேந்திநீள் விசும்பில்
எட்டு மாதிரக் கரிகளும் வெருவஆர்த் தெழுந்தான்.

சூரபன்மன் விடுத்த மூட்டுடைய கொடிய அம்புகள் வீரராக்கதன் விடுத்த அம்பினை அறுத்து; அங்கு வீரராக்கதர் பிடித்த வில்லையும் முரித்திட அதுவேளை வீரராக்கதன் நீண்ட பிரகாசமுடைய வாள் ஒன்றினை எடுத்துப் பிடித்து, வானிலே எட்டுத் திக்குயானைகளும் அஞ்சிட ஆர்ப்பரித்தெழுந்தார் 149

விண்ணெ ழுந்தவன் அவுணர்கோன் நின்றிடும் வியன்தேர்க்
கண்ணில் வாவியே ஆங்கவன் கொண்டகார் முகத்தைத்
துண்ணெ னச்சுடர் நாந்தகத் தெறிதலுஞ் சூரன்
வண்ண வார்சிலை முடிந்தில தொடிந்தது மணிவாள்.

வானில் எழுந்த வீரமார்த்தாண்டன், சூரபன்மன் நின்றிடும் பெருமை விளங்கிய தேரின்கண் குதித்து அங்கு சூரபன்மன் கையிற் பிடித்த வில்லைச் சடாரெனக் கூர்மையான ஒளிகொண்ட வாளினல் வெட்டுதலும், அப்போது அந்தச் சூரபன்மனுடைய வில் முறியவில்லை அதற்குப் பதிலாக வீரராக்கதனுடைய வாளே ஒடிந்துபோயது. 150

நெடிய வாட்படை இற்றிட விறலுடை நிருதன்
தொடையல் மார்பகத் தெற்றுவான் முயறலுஞ் சூரன்
படையி ழந்திடும் வலியிலற் கொல்வது பழியென்
றடியின் மேற்படுத் தெறிந்தனன் அண்டமேற் செல்ல.

நெடிய வாட்படை முரிந்திடுதலும் வலிமை உடைய வீராாக்கதன் சூரபன் மனின் மாலையணிந்த நெஞ்சின்மீது அடித்திட எத்தனித்தலும் அதுகண்ட சூர பன்மன் படை இழந்து வெட்காளத்துடன் நிற்கும் இவனைக் கொன்றால் பழியா கும் என நினைந்து தனது காலால் வீரராக்கதனைத் தூக்கி எற்றிவிட்டான் அப்பாலுள்ள அண்டங்கள் மேல் சென்றிடும் படியாக. 151

அரக்கர் வீரனை அவுணர்கோன் எறிந்திட அலமந்
திரக்கம் எய்தியே வீழ்ந்தனன் புவிமிசை இதுகண்
டுரக்க டுங்கணை மாரிகள் ஒன்னலன் தேரும்
கரக்க வீசிவந் தேற்றனன் மகேந்திரன் கடியோன்.

வீரராக்கதனை இவ்வணம் சூரபன்மன் காலால் தூக்கி எறிந்திட, மேற் போய வீரராக்கதன் அலமந்து ஏங்கித் துயரமடைந்து இப்பூமி மீது வந்து வீழ்ந்தான். இதனைக்கண்டு வீரமகேந்திரன் என்னும் கொடிய வீரர் தனது வில்லை வளைத்துக் கூரிய அம்புகளை மழைபோன்று சொரிந்து, சூரபன்மனுடைய தேரை அம்பால் மூடி மறைத்தவண்ணம் சூரபன்மன் முன்பு போரிட வந்து எதிர்ந்தான். 152

சூரன் அங்கது விலக்கியே கணைமழை தூரப்ப
வீரன் மற்றது சிந்தினன் பகழிகள் வீசிச்
சாரி வட்டம தாய்வர அவுணனுந் தக்கோன்
தேரை வட்டணை வந்தனன் சிலீமுகஞ் சிதறி.

சூரபன்மன், வீரமகேந்திரன் விடுத்த அம்புகளை விலக்கி; மீண்டும் மழை போன்று அம்பினைச் செலுத்த வீரமகேந்திரர் அவற்றை அம்புவிடுத்து அறுத்து பின்னரும் அம்பினைச் சொரிந்தவாறு மாறிமாறி வட்டமாய் வந்திட, சூரபன் மனும் வீரமகேந்திரருடைய தேரைத் தானும் வட்டணையாக அம்பு சொரிந்து வந்தான். 153

திரியும் வட்டணை முறையினுற் சரமழை சிதறி
வருதி றத்தினுல் ஐயம தாவவர் வடிவை
ஒருதி றத்தருந் தெளிகிலர் உணர்ந்திட அற்றே
இருதி றத்தரும் வீரமா மகேந்திரர் என்றுல்.

சூரபன்மனும் வீரமகேந்திரரும் ஒருவர் தேரை ஒருவர் வட்டமாக வந்து திரியும் முறையால் அம்புகளைச் சொரிந்து வரும் திறத்தினுல் ஒருவரை ஒருவர் இவர் சூரபன்மனே வீரமகேந்திரரோ என்று நிச்சயிக்க முடியாதபடி சந்தேகத் திற்கு இடமாவர்; இவருடைய வடிவை எத்தன்மையான தெளிவுடையாரா லும் தெரியமுடியாது போய் விடுகின்றனர் அதை அப்படி இலேசாக எவரும் அறிந்துகொள்ள முடியாது. ஏனெனில், சூரனும் வீரமகேந்திரபுரத்திற்கு அரச னுதலின், அவனும் வீரமகேந்திரன். இருவரும் வீரமகேந்திரர் தானே! 154

ஆள ரிக்குடன் வந்தவன் அத்துணை அழன்று
கோள ரிக்குடன் வந்தவன் விடுசரங் குறைத்துத்
தாளின் முப்பது மருமமீ திருபது தடமபொற்
றேனின் முப்பது கணைவிடுத் தவன்வலி தொலைத்தான்.

சிங்கமுகாசூரனுக்கு உடன் பிறந்தவனாகும் சூரபன்மன் அந்நேரம் பெருங் கோபமடைந்து, வீரகேசரிக்கு உடன்பிறந்த வீரமகேந்திரர் விடுகின்ற அம்பெல்லாம் அறுத்து அவருடைய காலில் முப்பது அம்பும், உடலில் இருபதும், தோளிலே முப்பது அம்புகளுமாக விடுத்துத் தைத்திடச் செய்து வீரமகேந்திரருடைய வலியினைத் தொலைத்தான். 155

வலிதொ லைந்தவன் வீழ்தலும் மாக்களின் தொகைமேல்
புலிய டைந்தென அவுணர்கோன் உரப்பினன் புகலும்
மெலிவில் ஆற்றலன் வீரதீ ரன்னெனும் வெய்யோன்
சிலைகு னிந்திடப் பகழிவான் நிமிர்ந்திடச் சென்றான்.

வீரமகேந்திரர் வலிதொலைந்து வீழ்ந்திடலும், அதுவேளை சூரபன்மன் மிருகங்கள் கூட்டத்திலே புலி சென்று கொல்லுதல் போலாறு மிகும் கர்ச்சனையுடன் உரப்பிப் பூதசேனையுட் புகுதலும், அதுகண்டு மெலிவில்லாத வலியுடைய வீரதீரன் என்னும் கொடியவன் வில் வளைந்திட, அம்புகள் வானில் சென்றிட வேகமுடன் சூரன்முன் சென்றான். 156

சென்ற வீரதீ ரன்விடு கணையொடு சிலையை
ஒன்றொ ராயிரம் வாளியால் வீட்டியே உயர்ந்த
குன்ற மன்னதோர் தேரையேழ் கணையினால் குறைப்ப
நன்று நன்றெனாத் தண்டமொன் றெடுத்துமேல் நடந்தான்.

இவ்வாறு சென்ற வீரதீரன் விடும் அம்பொடு அவன் வில்லையும் ஒரே முறையில் ஆயிரம் அம்புகளைச் சூரபன்மன் விடுத்து அழித்து வீரதீரருடைய உயர்ந்த மலைபோன்ற தேரை ஏழு அம்புகள் விடுத்து அழித்திட, அது கண்டு வீரதீரர் நல்லது நல்லது எனக் கூறி ஒரு தண்டாயுதத்தையும் கையில் எடுத்தவாறு சூரபன்மன் முன் சென்றான். 157

நடத்த லாகிய எல்லையில் பகழியோர் நான்கு
தொடுத்து மற்றவன் ஏந்திய தண்டினைத் துணித்துத்
தடத்த மார்பினும் மொய்ம்பினும் ஏழிரு சரங்கள்
விடுத்து மண்மிசை வீட்டினன் யாரையும் வென்றான்.

வீரதீரர் தண்டினை எடுத்து முன்னாக வருதலைக் கண்ணுற்ற எல்லையில் சூரன் நான்கு அம்புகளை விடுத்து அவர் கையில் பிடித்த தண்டினை நொருக்கி; வீரதீரருடைய விசாலித்த நெஞ்சிலும் தோளிலும் பட்டுருவுமாறு பதினான்கு அம்பினை விடுத்து வீரதீரரைப் பூமியில் வீழ்த்தினான் எல்லாரையும் வென்ற சூரபன்மன். 158

ஆன காலையில் வீரமா மகேசனும் அடலோன்
கூனல் வில்லினால் அரிதிவன் தன்வலி கோடல்
மான மார்திறல் மொய்ம்பற்கும் என்மனம் வலியா
ஊனும் ஆவியும் கவர்வதோர் தெய்வவேல் உய்த்தான்.

அவ்வாறாகிய காலையில் வீரமாமகேசன் என்னும் வீரர் இதனைக் கண்டு இந்தச் சூரபன்மனை; வில்லை வளைத்துப் போர் செய்தலால் வென்றிடும் திறமை மானம் உடைய பெருவலிகொண்ட வீரவாகுதேவர்க்கும் அரிதான காரியம் என மனதில் எண்ணி, எவருடைய ஊனையும் உயிரையும் நீக்கிடுகின்ற தெய்வ வேல் ஒன்றைச் சூரன்மேல் செலுத்தினான். 159

வேல்வி டுத்துழிக் கண்டவன் வெஞ்சிலைக் குனித்துக்
கோல்வி டுத்தலும் ஆயிரம் அன்னவை குறைத்துச்
சூல்வி டுத்திடும் எழிலிபால் மின்வரும் தொடர்பின்
மால்வி டுத்திடா அவுணன்மார் புற்றதவ் வைவேல்.

வீரமாமகேசன் வேலினை விடுத்தபோது சூரபன்மன் அதனைக் கண்டவுடன் தனது வில்லை வளைத்து ஆயிரம் அம்பினை விடுத்தலும், அவ்வேல் அந்த அம்புகளை நாசஞ் செய்து சென்று கருக்கொண்ட மேகத்தின்பால் மின்னல் தோன்றி மின்னுவதுபோன்று மயக்கத்தை விடுத்திடாத சூரபன்மன் நெஞ்சினிற் பட்டது. 160

உற்ற தோரெஃகம் நுண்டுக ளாகிவிண் ணுலவிச்
சுற்று மாதிரஞ் சென்றது சூரன்மேல் வீரன்
மற்றோர் தண்டினை விடுத்திட எடுக்குமுன் வல்லோர்
சொற்ற சாபத்தின் முந்தும்ஏழ் கணையினைத் தொடுத்தான்.

சூரனுடைய நெஞ்சில் பட்ட தெய்வ வேல் நுண்ணிய துகளாகி வானில் பொடியாக எழுந்து உலாவி, திக்குகளில் சுழன்று அப்புழுதி போயது. இது கண்டு வீரமாமகேசன் சூரன்மேல் ஒரு தண்டாயுதத்தை விடுப்பதற்கு எடுக்கு முன்பாக அவன் தவ வலியுடைய முனிவர்கள் சொல்லுகின்ற சாப வார்த்தை, ஒருவரைச் சென்றடைவதிலும் முந்திக்கொள்ளும் வேகமுடைய கொடிய ஏழு அம்பினைச் செலுத்தினான். 161

ஏழெ னப்படு பகழியும் மகேசனும் ஏந்தல்
பாழி மொய்ம்பினைப் பாழிய தாகவே படுத்த
வீழல் உற்றதங் கவன்உடல் உணர்ச்சிகள் வீந்த
சூழு கின்றதோர் மன்னுயிர் அடைந்தது துரியம்.

ஏழு அம்புகளும் சென்று வீரமாமகேசன் என்னும் தலைவனின் பருத்துச் சிறந்த தோள்களைப பாழியாகத் துளைத்து ஊடுருவிச் சென்றிட, அதுவேளை அவ்விடத்து வீரமாமகேசருடைய உடல் கீழே வீழ்ந்தது. உணர்வுகள் மறைந்தன; அவன் உடலில் உள்ள மேலான உயிர் மயங்கித் துரியநிலையை யடைந்துகொண்டது. 162

மகேசன் என்பவன் மயங்கலும் மற்றது நோக்கிக்
ககேசன் மேல்வரும் இராகுவின் அவுணனைக் கனன்று
நகேசன் மங்கையோ டிகலிவேங் கடகிரி நண்ணுங்
குகேசன் ஏவல்செய் வீரகே சரியெதிர் கொண்டான்.

வீரமாமகேசன் என்பவன் மயங்கிப் போதலும், அதனைக் கண்டு சூரியன் மேல் கோபமுடன் செல்லும் இராகுவினைப் போன்று; சூரபன்மனை மிகவும் கோபித்துப் போரிடப் புறப்பட்டுச் சிவபிரான் பாகத்தமர்ந்த உமையம்மையாருடன் அன்றொருநாள் விளையாட்டாகப் பகை பூண்டு திருவேங்கடகிரியிடத்தாக வந்து அமர்ந்தருளிய உள்ளொளியாகும் ஈசன் முருகன் ஏவல் புரிந்திடும் வீர சிங்கர் சூரன் முன்பு எதிரிட்டு வந்தார். 163

எதிர்பு குந்தவன் வணக்கியே நாணொலி யெறிந்த
துதிகொள் வார்சிலை தன்னையேழ் கணையினால் துணியா
அதிகு ரல்மணித் தேரைநூ றம்பினால் அறுத்து
நுதிநெ டுங்கணை அழுத்தினன் ஆயிர நுதலின்.

தனக்கு முன்னால் வந்த வீரசிங்கன் வளைத்து நாணோசை செய்த; பலரும் புகழ்ந்திடும் வார்பூட்டிய வில்லை ஏழு அம்பினால் சூரபன்மன் முரித்து, அதிரும் பேரோசையுடைய மணிகள் கட்டிய தேரை நூறு அம்பு விடுத்து அறுத்து முறித்தெறிந்து வீரசிங்கனின் நெற்றியில் பட்டுருவ ஆயிரம் அம்பினை விடுத்தான் சூரபன்மன். 164

ஆயி ரங்கணை நுதலிடை அழுத்தஅம் புவியில்
பாய்த ருங்குரு திப்பெரு நதியொடு பாய்ந்து
சேயி ருங்குவ டொன்றினைச் செங்கையால் பறித்து
மாயை தந்திடு மதலைமேல் விடுத்தனன் மன்னோ.

ஆயிரம் அம்புகளும் வீரசிங்கனுடைய நெற்றியில் பட்டு உருவிப்போதலும், ஆறுபோன்று பூமியில் பெருகிப் பாயும் இரத்தத்துடன் கீழே குதித்து, மிக உயர்ந்து பருத்த மலை ஒன்றினைத் தனது சிவந்த கையால் பிடுங்கி எடுத்து மாயவள் பெற்ற மைந்தனான சூரன் மேல் எறிந்தான். 165

எறித்த ருஞ்சுடர்த் தபனனுஞ் சேடனும் இரங்கப்
பறித்தெ டுத்துமேல் வீசிய பராரையங் குன்றம்
வெறித்த ருந்தொடை அவுணர்கோன் விசிகமொன் றதனால்
அறுத்து மார்பினூ றயிற்கணை அழுத்தினன் அம்மா.

பிரகாசமுடன் விளங்கிடும் ஒளியுடைய சூரியனும், ஆதிசேடனும் அஞ்சித் துயர்கொண்டிட வலியினால் பிடுங்கி எடுத்த இப்பெரிய மலையை வெறிக்கும் தேன் துளிக்கின்ற பூமாலையணிந்த சூரபன்மன் ஓர் அம்பால் அறுத்து வீரமாமகேசனுடைய நெஞ்சில் பின்னரும் நூறு வேல்போலும் அம்பினைப் பட்டுருவ விட்டான். 166

கரம்பு குந்திடுங் குனிசிலை உமிழ்ந்திடுங் கணைகள்
உரம்பு குந்திட வீரகே சரிமனம் உளைந்து
பரம்பு குந்திடும் அவுணர்கோன் தேர்மிசைப் பாயா
வரம்பு குந்தகுன் றன்னமார் பத்திடை அடித்தான்.

சூரபன்மன் கையில் பிடித்த வளைந்த வில் விடுத்திட்ட நூறு அம்புகளும் வீரசிங்கனின் நெஞ்சில் பட்டு உருவுதலும், அவன் மனம் வெம்பி வானில் எழுந்து சென்றிடும் சூரபன்மன் தேர்மீது பாய்ந்தேறி வரங்கள் பல குடிகொண்ட சூரபன்மனின் மலைபோன்ற நெஞ்சில் ஓங்கி அடித்தான். 167

வடித்த விற்படை அவுணர்கோன் மருமத்நின் வலிதாய்
அடித்த காலேயில் வீரகே சரிதன தங்கை
வெடித்த தாமெனக் கீண்டது விண்டது சோரி
துடித்து யிர்ப்பொடு தேரிடை மறிந்தனன் துயரால்.

நன்றுடன் வடித்தெடுத்த விற்படையைக் கையில் பிடித்த சூரபன்மனின் நெஞ்சில் வீரசிங்கன் வலியால் அடித்தகாலேயில், வீரசிங்கனின் அழகிய கை வெடித்தது எனும்படி கிழிந்தது; இரத்தம் பெருகியது. அந்நேரத்து வீரசிங்கன் முன்னுள்ள காயங்களுடன் துடிதுடித்துக் கொண்டு பெருமூச்செறிந்து சூரபன்மனின் தேரிடத்திலே பெருந் துயரோடும் வீழ்ந்தான். 168

வீர கோளரி பதைத்துமான் தேரிடை வீழச்
சூரன் மற்றிவற் கொல்வது பழியெனச் சூழா
ஓர்கை யால்அவன் தனையெடுத் தச்சுதன் உறங்கும்
வாரி திக்கிடை எறிந்தனன் விண்ணவர் மருள.

வீரசிங்கர் பதைத்துப் பெரிய தேரிடத்து வீழ்தலும், சூரபன்மன் இவனைக் கொல்வது பழியாகும் என எண்ணித் தனதொரு கையால் வீரசிங்கனை எடுத்து விஷ்ணுமூர்த்தி யோக நித்திரை கொள்ளும் பாற்கடலின் இடை சென்று வீழும் படி எறிந்தான். இச் செயலைக் கண்டு தேவர்கள் யாவரும் துயரினல் மயக்கம் அடைந்திடும்படியாக. 169

பரந்த பாற்கடல் எறிதலும் வீழ்ந்தவன் பதைப்புற்
றரந்தை எய்தியே எழுந்துவிண் ணெறியின்மீண் டணுகி
முரிந்த தம்மினங் கூடினன் அங்கதன் முன்னம்
புரந்த ரப்பெயர் வாகையான் ஏற்றெதிர் புகுந்தான்.

பரந்த பாற்கடலில் எறிதலும், அங்குபோய் வீழ்ந்த வீரசிங்கர் பதைப்புற்றுத் துயரம் அடைந்து எழுந்து வானமார்க்கமாக மீண்டு வந்து முன் தோல்வியுற்ற தனது இனத்தவருடன் கூடினன். அதற்கு முன்பு வீரபுரந்தரன் என்னும் வெற்றியுடைய வீரன் சூரபன்மன் முன்பு போர் புரிந்திட எதிரே வந்தனன். 170

ஏற்றெ திர்ந்திடு வீரமா புரந்தரன் என்பான்
ஆற்றல் வெங்கணை சொரிந்துபோர் செய்வனேல் அவற்றை
மாற்றி வென்றிடும் என்னையும் இவனென மதித்துக்
கூற்று வன்படை தொட்டனன் அவுணனைக் குறுக.

சூரபன்மன் முன் நேரிட்டு எதிர்ந்த வீரபுரந்தரன் என்பவன், நினைக்கின்றான்; ஆற்றலுடைய கொடிய அம்புகளை இச்சூரன் மேல் சொரிந்து போரிடுவனேல் இவன் அவற்றை மாற்றி என்னையும் கொன்றிடுவன் என மனதில் சிந்தித்துக் கொண்டு சூரபன்மன் மேல் சென்று படுமாறு இயமனுடைய படையை விடுத்தான். 171

குறுகும் அப்படை வரத்தினை நோக்கியே கொடியோன்
முறுவல் செய்தனன் ஆங்கதற் கெதிருற முரணால்
உறுவ தோர்படை தொட்டிலன் இகழ்ந்திட உவன்மேல்
மறலி தன்படை பட்டுமாய்ந் திட்டது வரத்தால்.

இயமனுடைய கொடிய படையானது புறப்பட்டு வருதலும் அதன் வரவினைக் கொடிய சூரபன்மன் பார்த்து, ஒரு புன்சிரிப்புக் கொண்டான். அப்படைக்கு எதிராக வலியதான யாதொரு படையையேனும் விட நினையவில்லை; பதிலுக்கு அந்தப் படையைநோக்கி, ஓ நீயோ! என்று இகழ்ந்திட; அப்போது அச்சூரன் மேல் இயமனுடைய படை சென்றுபட்டு அப்படை தானே மாய்ந்து போயது. 172

தண்ட கன்படை மாய்தலுஞ் சயங்கெழு மகவான்
முண்ட கன்படை எடுத்தனன் தொடுப்பதன் முன்னம்
கண்ட கன்சிலை வாங்கிநூ றுயிரங் கணையை
விண்ட கன்பெரு மார்பகந் திறந்திட விடுத்தான்.

இயமனுடைய படையானது மாய்ந்திடலும், அதுவேளை வெற்றி விளங்கும் வீரபுரந்தரன் தாமரை மலர் மீதிருக்கின்ற பிரமதேவரின் படையை விடும்படி எடுத்து அதைத் தொடுப்பதன் முன்னம் இதனைக் கண்ட சூரபன்மன் உடனேகத் தனது வில்லை வளைத்து அதில் ஆயிரம் அம்பினைத் தொடுத்து வீரபுரந்தரனுடைய அகன்ற பெரிய நெஞ்சம் திறக்கும்படி விடுத்தான். 173

நிறந்த ருஞ்சுடர்க் கணைபுகுந் துரத்தினை நெறியாத்
திறந்து போயின வீரமா புரந்தரன் செங்கை
உறைந்த நான்முகப் படையொடுஞ் சோரிநீர் உமிழ்ந்து
மறிந்து மாய்ந்தனன் வந்தனன் வீரர்தம் மறலி.

செவ்வொளி பரந்திடும் கூரிய அம்புகள் சென்று வீரபுரந்தரனுடைய நெஞ்சினைப் பிளந்து அதன் ஊடாக அப்பால் போயின. வீரமாபுரந்தரர் சிவந்த கையில் இருக்கின்ற பிரமாஸ்திரத்தோடும் இரத்த நீர் கக்கிடும்படியாகச் சரிந்து மயங்கி வீழ்ந்தார். இதுகண்டு வீரராக்கதன் என்னும் மற்றைய வீரர் சூரன்முன்பு போரிட வந்தார். 174

தீர ராந்திறல் அவுணர்கள் பூதராஞ் சிதைவார்
சூர ராஞ்சிலை வல்லவர் நமரெலாந் தொலையும்
நீர ராஞ்செருச் செயலிது நன்றென நிகழ்த்தி
வீர ராந்தகன் வந்தனன் அந்தகன் வெருவ.

வீரராக்கதர் வருகின்ற பொழுதிலேயே, தீரர் என்பது உலகில் அசுரர் தானோ? பூதங்களோ அழிந்து போவார்கள். சூரன் தானோ வில்லில் வீரனாயவன்? எமது மக்கள் எல்லாம் தோல்வியுற்றுத் தொலைந்துபோய்விடும் நீர்மையுடையவராயினரோ? இது நல்லாயிருக்கின்றது எனப் பேசியவாறு வீரராக்கதன் என்பான் சூரன்முன் போரிடும்படி வந்தார். இவர் வீரவாகுதேவரின் தம்பியர் எட்டுப்பேரில் கடைசியாக வந்தவராவர். இவர் வருகை கண்டு இயமனே அஞ்சினன். 175

சார்ங்கம் அன்னதோர் வலியதாய் மாமதன் தனுவாம்
ஈர்ங்க ரும்பென அரிபடு சிலைகுனித் தேற்றுக்
கார்ங்க ரும்புய லாமென நாணொலி காட்டிக்
கூர்ங்கொ டுங்கணை சிதறிநின் றார்ப்பிசை கொண்டான்.

விஷ்ணுமூர்த்தியினுடைய சார்ங்கம் என்னும் வில்லைப்போன்று வலியாகி, பெரிய மன்மதனின் வில்லாக விளங்கிடும் காமகாண்டம் எனும் கருப்புவில் எனும்படி வடித்தெடுத்த வில்லை, வீரராந்தகன் வளைத்து நாணினைப் பூட்டி, கார் காலத்துக் கருமேகம் முழங்கிடுவது போன்று நாணின் ஓசையைக் காண்பித்து, கூரிய கொடிய அம்புகளைச் சூரன்மேற் சொரிந்து நின்று ஆரவாரித்தார். 176

ஆர்ப்பெ டுத்தலும் அஞ்சினன் கதிரவன் அங்கம்
வேர்ப்பெ டுத்தனர் அமரர்கள் விஞ்சையர் விண்டார்
சீர்ப்பெ டைக்குலம் அலமரக் கின்னரஞ் சிந்திப்
பார்ப்பெ டுத்திரி கின்றன கேசரப் பறவை.

வீரராந்தகன் ஆரவாரிப்பு எடுத்துச் சத்தமிடலும்; சூரியன் அஞ்சினான். தேவர்கள் யாரும் பயத்தால் மேனி வேர்வை கொண்டனர். விஞ்சையர்கள் நடுங்கி நின்ற இடம் விட்டோடினார்கள். பறவை வடிவுகொண்ட கந்தருவர் யாவரும் தங்களுடைய சீருடைய பெணகள் கூட்டம் அஞ்சிக் கலங்கிட, கையில் பிடித்த வீணைகளையும் எறிந்துவிட்டுத் தங்கள் இளைய பாலர்களை எடுத்துக் கொண்டு பயந்தோடுகின்றனர். 177

ஆன காலையில் வீரரந் தகன்விடும் அம்பின்
சோனை மாரியைக் கணைகளால் விலக்கியே சூரன்
ஊனும் ஆவியுங் கவருமா யிரங்கணை உய்ப்பத்
தானும் ஆயிரம் பகழிதொட் டன்னதைத் தடுத்தான்.

இவ்வாறு பலரும் வீரராந்தகர் காட்டிய நாண் ஓசையாலும், ஆர்ப்பரித்திட்ட ஓசையாலும்அஞ்சிட; சூரபன்மன் வீரராந்தகர் விடுத்த அம்பின் மழையைத் தான் விடுத்த அம்பால் அறுத்துப் பின்னர் வீரராந்தகரின் ஊனையும், உயிரையும் நீக்கிடவல்ல ஆயிரம் அம்பினைச் செலுத்த; வீரராந்தகர் சூரன் நிலைகண்டு தானும் ஆயிரம் அம்பினை விடுத்துச் சூரபன்மன் விடுத்த அம்பினை அறுத்தார். 178

தடுத்த காலையில் அவுணர்கோன் சினவிமுத் தலைசேர்
வடித்த வச்சிரச் சிலீமுகம் ஆயிரம் வல்லே
எடுத்து விட்டிட வீரரந் தகன்றனக் கெதிரா
விடுத்த பல்லவம் யாவையுஞ் சிந்தியே விரைந்த.

வீரராந்தகர் சூரபன்மன் விடுத்த அம்பினைத் தடுத்த நேரத்தில் சூரபன்மனும் பெருங்கோபமடைந்து, மூன்று கூர்மையான தலையுடைய வடித்தெடுத்த வச்சிர அம்புகள் ஆயிரத்தை விரைவுடன் எடுத்து விட்டிட, அந்த வச்சிரக் கணைகள் சென்று வீரராந்தகன் சூரனுக்கெதிராக விடுத்த அம்புகள் அனைத்தையும் அறுத்து மீண்டும் விரைவாக மேலும் ஓடின. 179

விரைந்து போய்விறல் அந்தகன் தேரினை வீட்டிக்
கரந்த னிற்சிலை ஒடித்துவீ ரத்தினைக் கலக்கி
உரந்த னிற்புகுந் துணர்வுண்டு சோரிநீர் உகுத்துப்
புரந்த ரற்குளந் துணுக்குறப் போயது புறத்தில்.

விரைவாக மேலும் சென்ற வச்சிரக் கணைகள் வீரராந்தகனுடைய தேரை அழித்து, கையில் பிடித்த வில்லையும் முரித்து, வீரத்தையும் கெடுத்துக் கலங்க வைத்துத் துண்ணென நெஞ்சில் உருவிச் சென்று உணர்வை அழித்து, இரத்தம் பெருகிட வைத்து, இவை யாவற்றையும் கண்டு நிற்கும் இந்திரக் கடவுளும் இந்த அம்புகள் இப்படியும் செய்ததே! எனத் திடுக்கிடும்படி வீரராந்தகர் முதுகின் புறத்தால் போயின. 180

விறல்ப டைத்திடும் அந்தகன் கணைபட வீழ்ந்து
மறல்ப டைத்திட ஆங்கது நோக்கியே மனத்தின்
உறல்ப டைத்திடு செற்றமும் மானமும் உகைப்பத்
திறல்ப டைத்திடு மொய்ம்பினன் அவுணன்மேற் சென்றான்.

விறல்பெற்ற வீரராந்தகன் நெஞ்சில் வச்சிரக் கணைகள் பட்டு உருவிப் போயிட, சோர்ந்து வீழ்ந்து மயக்கம் கொண்டிட, அதனை எல்லாம் பார்த்து மனதில் பெருக்கம் கொண்ட கோபமும் மானமும் தூண்டிட, திறல் கொண்ட தோளினை உடையவரான வீரவாகுதேவர் சூரபன்மனுடன் போரிட நேரிட்டு வந்தார். 181

அரிகள் அச்சுறும் வீரவா குப்பெயர் அறிஞன்
இரதம் ஊர்ந்துவந் தேற்றலும் ஆங்கவன் எழில்சேர்
உருவ நோக்குறு ஒற்றனும் இவனென உன்னிப்
பெரிது வெஞ்சினம் எய்தியே அவுணர்கோன் பேசும்.

எண்ணற்ற விஷ்ணுமூர்த்திகளும் அஞ்சிடும்படியான வீரவாகு எனும் அறிஞன் தேர்மேலாக எழுந்து வந்து சூரனோடு போரிட ஏற்படலும்; அவ்வேளை வீரவாகு தேவருடைய எழில் மிகுந்த தோற்றத்தைச் சூரபன்மன் பார்த்து; ஓகோ! இவன்தான் முன் என்னிடம் வந்த தூதுவன் என நினைந்து பெரிதான கொடும் சினம் அடைந்து, சூரபன்மன் வீரவாகு தேவரை நோக்கி; இவைகளைப் பேசுவான். 182

எமது வீரமா மகேந்திரஞ் சாடிஎண் ணில்லாத்
தமரை அட்டனை தானைகள் அளப்பில தடிந்தாய்
குமரர் தங்களைக் கொன்றனை நின்னுயிர் கொண்டே
அமரின் ஆற்றலை இன்றுடே முடிக்குவன் அம்மா.

வீரவாகு தேவனே! நீ அன்று வந்து எமது வீரமா மகேந்திர நகரை அழித்து, எண்ணில்லாத எனது இனத்தவராகும் அசுரரைக் கொன்றாய். சேனைகள் அளவிறந்தனவற்றைக் கொன்றாய் எனது பிள்ளைகளையும் கொன்றாய். இவ்வளவும் செய்த உனது உயிரை இப்பொழுதே கொன்று இப்போரின் வலியை இன்றோடு முடிப்பேன் என்றான். 183

பற்று பட்டிமை பயிற்றியே அமைச்சரிற் பன்னி
ஒற்ற ளுகியே இன்னும்வந் தாயெனின் உய்தி
மற்ற தேகடன் வார்சிலே பிடித்தனே மாண்டாய்
இற்றை வைகலோ நின்னுயிர்க் கிழைத்தநாள் என்ருன்.

உனக்கு வாலாயமான களவினைப் பயின்று, மந்திரிகள்போல் யுத்தி கூறித் தூதுவளுக இன்னமும் வந்திருந்தாய் என்ருல் ஒருகால் உய்ந்திருப்பாய். உனக்குச் செய்யக்கூடிய கடமையும் அதுவாம். ஆனல், நீ வில் பிடித்துப் போரிட வந்தமையால் இனி இறந்தாய். இன்ருெரு நாள்தான் போலும் உனது உயிர் முடிவுக்கு நியமித்த நாள் என்ருன் சூரபன்மன். 184

தூதும் ஆகுவன் அமைச்சனும் ஆகுவன் துன்ளுர்
மீது வெஞ்சமர் ஆற்றுவன் இன்னமும் வேலோன்
ஓதி டும்பணி யாவையுஞ் செய்குவன் உலகில்
ஏதும் வல்லன்யான் வேண்டுபோர் புரிதியால் என்ருன்.

இவைகளைக் கேட்ட வீரவாகுதேவர் சூரனை நோக்கி: நான் தூதனும் ஆகுவன். மந்திரியும் ஆகுவன். பகைவருடன் கொடும் போரையும் செய்திடு. வேன். இன்னமும் வேற்படையுடைய கடவுள் எமக்குச் சொல்லிடுகின்ற பணிகள் எல்லாவற்றையும் செய்வேன். உலகில் எதற்கும் வல்லமையுடையேன் யான்; நீ வேண்டிய சாமர்த்தியமான போரை இப்பொழுது புரிவாய் என்ருர். 185

என்று வீரனே திடுதலும் எரிந்தன நயனம்
தின்ற வாளெயி றிதழினை உரோமங்கள் சிலிர்த்த
துன்று சீற்றமுள் ளெழுந்தது சூரனும் அவுணன்
குன்ற மன்னவிற் குனித்தனன் நாணெலி கொண்டான்.

என்று வீரவாகுதேவர் கூறியிடுதலும், அதுகேட்ட சூரபன்மனது கண்கள் கோபத்தால் எரிந்தன; கூரிய பற்கள் சொண்டினைக் கடித்துத் தின்றன; உரோமங்கள் சுறுக்கெனச் சிலிர்த்தன; இவ்வகையாகப் பொங்கிடும் கோபம் சூரனுள் எழுந்தது. சூரனென்கின்ற அசுரன் அத்துடன் மலையை ஒத்த தனதொரு பெருவில்லை வளைத்தான். நாணினைச் சுண்டி ஓசைப்படுத்திஞன். 186

சிலேப னித்திடக் குனித்திடு காலேயிற் செம்பொன்
மலேப னித்தன பாரகம் பனித்தன வான்தோய்
அலேப னித்தன அண்டமும் பனித்தன அங்கண்
தலேப னித்தனன் அரவினுக் கிறையவன் தானும்.

வில்லும் நடுங்கிட நாணேசை கொண்ட காலேயில் செம்பொன்னன இமய மலே நடுங்கியது; பாரித்த பூமி நடுங்கியது; வானில் தோய்ந்திட எழும் அலேயுடைய கடல் நடுங்கியது; அண்டங்களும் நடுங்கியது; எல்லாவற்றையும் தாங்கிடும் பாம்புகட்கரசளுன ஆதிசேடனும் தலேநடுங்கினன். 187

வேறு

அம்முறை வேலையில் ஆடல்கொள் மொய்ம்பின்
செம்மல்த ணுது செழுங்கர முற்ற
மைம்மலி வார்சிலை வன்மையின் வாங்கிக்
கொமமென நாணொலி கொண்டனன் ஆர்த்தான்.

அம்முறையாக அனைத்தும் நடுக்குற்றவேளையில், போராடல் மிக்குள்ள தோள்கொண்ட வீரவாகுதேவரும் தன் செழுமை வாய்ந்த கையில் உற்ற கருமை மிகுந்த வார்பூட்டிய வில்லை வலியால் வளைத்து. விறுக்கென நாணோசை கொண்டவராய் ஆரவாரங்கொண்டார். 188

ஆர்த்திடு பேரொலி ஆங்கவன் வாங்குஞ்
சீர்த்தனு ஆர்ப்பொடு சென்றிடு காலை
மூர்த்தம தொன்றினின் முச்சக வைப்பும்
பேர்த்தென வேபெயர் குற்றன அன்றே.

வீரவாருதேவர் நாணோசையுடன் ஆரவாரித்திட்ட ஓசை. முன்னர் சூரபன்மன் அங்கு வளைத்திட்ட வில்லோசையுடன் இணைந்து சென்றிட்ட வேளையாகும் அந்த நேரம் ஒன்றிலே சொர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்று உலகங்களின் வைப்பும் பேர்ந்தன போன்று நிலைதலறிக் குலுங்கியது. 189

அங்கது காலையில் ஆயிர கோடி
துங்கநெ டுங்கணை தூர்த்தனன ஆர்ப்பப்
புங்கவ னுக்கிளை யான்புய லென்ன
வெங்கணை வீசி விலக்கினன் நின்றுன்.

அவ்வாருகிய வேளையில் சூரபன்மன் ஆயிரம் கோடியாகும் மேன்மையுடைய நீண்ட அம்பினைச் சொரிந்து ஆரவாரித்திடுதலும் எங்கள் கடவுள் சிவகுமரனுக்கு இளையவரான வீரவாகுதேவர் தாமும் மேகங்கள் மழையினைச் சொரிவது போன்று கொடிய அம்பினைச் செலுத்திச் சூரபன்மன் விடுத்த அம்பினை விலக்கியபடி நின்றுர். 190

விலக்கிய காலை வெகுண்டிவன் ஆவி
கலக்குவன் என்று கடுஞ்சரம் வெய்யோன்
இலக்கம் விடுத்திட ஏந்தல் தடுத்தான்
கொலைக்கணை ஆயிர கோடி தொடுத்தே.

சூரபன்மனது அம்பினை முழுதும் வீரவாகுதேவர் விலக்கிய காலையில் அவன் வெகுண்டு, இந்த வீரவாகுவின் உயிரைக் கலக்குவேன் என்று அந்தக் கொடிய சூரபன்மன் பின்னரும் இலக்கம் அம்பினை விடுத்திட, எமது தலைவராகும் வீரவாகுதேவர் கொலைபுரியும் ஆயிரகோடி அம்பினைத் தொடுத்து விடுத்து அவன் விடுத்த அம்பினை அறுத்தார். 191

வெற்றிகொள் வான்பினும் வெங்கணை கோடி
செற்றமொ டேசெறி வித்திடு காலை
மற்றவை சிந்தினன் வாளிகள் நூறு
நெற்றியில் விட்டனன் நீள்புய வீரன்.

அறுத்தலும், வெற்றிகொள்பவனாகி நின்ற சூரபன்மன் பின்னரும் கொடிய அம்புகள் கோடியை மிகு கோபாவேகத்துடன் செலுத்தியிட்ட, காலையில் அத்தனை அம்புகளையும் வீரவாகுதேவர் அம்புவிடுத்து அறுத்தார்; அதுவன்றிச் சூரனுடைய நெற்றியில் நேரே சென்று தைத்திட, நூறு அம்பினை விடுத்தார் நீண்ட வீரத்தோளுடைய வீரவாகுதேவர். 192

அச்சுத னும்அவு ணன்குளம் எய்தி
மெய்ச்சரம் நூறும் விளிந்துபின் விண்ட
வச்சிர மாகிய மால்வரை ஒன்றின்
உச்சியின் உற்றபொன் ஊசிகள் என்ன.

அந்த உண்மையான வலியுடைய நூறு அம்புகளும் சென்று, அழிவில்லாத சூரபன்மனது நெற்றியில் பட்டு அம்புகளே நொருங்கிப் பின்னால் வீழ்ந்தன. எப்படி எனில், முழுதும் வச்சிரமாகிய ஒரு பெரிய மலைமீதின் உச்சியிலே பொத்திடும்படி சென்ற பொன்ஊசிகள் முரிவது போன்று அம்புகளும் முரிந்தன. 193

நூறயில் வாளி நுதற்கிடை சென்று
மூறில னாகி உறுந்திறல் நோக்கி
ஆறுமு கேசன் அயிற்படை அல்லால்
ஈறுசெ யாதிவன் யாக்கையை என்றான்.

நூறு வேல் போன்ற கூர்மையுடைய அம்புகளும் சூரபன்மன் நெற்றியில் சென்று பட்டிடவும், ஓர் ஊறுஞ காயமேனும் இலனாகிச் சூரபன்மன் நின்ற நிலை கண்டு, ஓகோ! ஆறுமுகமுடைய ஈசனின் வேற்படை, ஒன்றேயல்லாது வேறு எப்படையும் இவன் உடலை முடிவு செய்யாது என்றார் வீரவாகுதேவர்.

என்றிடும் வீரன் இதற்பினும் வாளி
துன்றுபல் கோடி சொரிந்திட வெய்யோன்
வன்றிறல் வெங்கணை யாலவை மாற்றி
ஒன்றுடன் ஏழ்கணை ஒண்புயம் உய்த்தான்.

என்று கூறியருளிய வீரவாகுதேவர், இதன் பின்னும் அம்புகள் நெருக்கமான பல கோடிகளை விடுத்தலும், கொடியவனான சூரபன்மன் மிக்க வலியுடைய கொடிய அம்பினால் அவைகளை அழித்து வீரவாகுதேவர் தோள்களுக்கு இலக்கா எட்டு அம்பினைச் செலுத்தினான். 195

அம்பிரு நான்கும் அணைந்துடன் ஆடல்
மொய்ம்பினன் மொய்ம்புற மூழ்கியுள் ளூற்ற
செம்புனல் உண்டு செழும்பிடர் போழ்ந்தே
உம்பர் வெருக்கொள ஓடிய மாதோ.

எட்டு அம்புகளும் உடன் வந்து, போராடல் வலிமை மிகுந்த வீரவாகு தேவரின் தோளில் பட்டு உருவிப்போய் இரத்தத்தை உண்டு செழுமையான பிடரியினைப் பிளந்து, தேவர் கண்டு அஞ்சிடும்படி அப்பால் போயது. 196

ஓடிய வேலை யுளைந்திடு நெஞ்சன்
ஆடல்கொள் மொய்ம்பினன் அவ்வசு ரேசன்
பாடுறு தேர்விடு பாகர்தம் மெய்யில்
கோடிபல் கோடி கொடுங்கணை விட்டான்.

அம்புகள் தோளில் பட்டு உருவிப்போய காலை, வீரவாகுதேவர் வருத்த முற்று வேதனையுறும் நெஞ்சுடன் விடாது போரிடுபவராய் அந்த அசுராதிபனு கும் சூரபன்மனின் பெருமையுற்ற தேரினைச் செலுத்தும் சாரதிகள்மேல் கோடி பல கோடியாகும் கொடிய அம்புகளைச் செலுத்தினர். 197

அலகில் நெடுங்கணை ஆகம் அழுந்த
வலவர்கள் ஆற்ற வருந்தின ராகிப்
புலவொடு சோரி புறத்தில் விளங்க
இலவம லர்ந்தென யாரும் இருந்தார்.

ஓயாது அளவின்றி வந்திடும் நீண்ட அம்புகள் சாரதிகளின் உடலிற் பட்டு அழுந்திட, சாரதிகள் அனைவரும் ஆற்றவும் வருத்தமுற்றவராய், தசையும் இரத் தமும் வெளிப்புறமாகத் தோன்றிட இலவமரம் பூத்து மலர்ந்ததுபோன்று யாவ ரும் செயலற்று இருந்தார்கள். 198

அங்கது நோக்கி அழன்றசு ரேசன்
செங்கணை ஐம்பது தீயென ஓச்சி
வெங்கண் விறற்புயன் மேதகு தேரைப்
பொங்குளை மாவொடு பொள்ளென அட்டான்.

அத்தன்மையை அங்கு சூரபன்மன் நோக்கி, மனம் அழன்று நெருப்பினைப் போல் சிவந்த ஐம்பது அம்பினைச் செலுத்திக் கோபத்தினுல் கொடுங்கண்ணு டன் தோன்றும் வீரத்தோளுடைய வீரவாகுதேவரின் மேன்மை கொண்ட தேரை, அதிற் பூட்டிய அழகிய பொங்கும் பிடரிமயிருடைய குதிரைகளுடன் திடீரென அழித்தான். 199

அட்டிடு காலை அடற்புயன் ஆங்கோர்
வட்டணை யாழிகொள் வையம தேறி
நெட்டழல் வாயு நெடும்படை தன்னைத்
தொட்டனன் ஆங்கது சூரன் அறிந்தான்.

தேரினை அழித்தபோது போர்வலி மிகுந்த தோளுடைய வீரவாகுதேவர் அவ்விடத்து ஒரு வட்டவடிவமான பெரும் சில்லுடைய வேறு தேர் ஒன்றில் ஏறி, அதில் நின்று நீண்ட சுடருடைய அக்கினியாஸ்த்திரத்தையும், வாயுவாஸ்த் திரத்தையும் இரண்டினையும் ஒன்றுகூட்டிச் சூரபன்மன்மேல் விடுப்ப, சூரன் அதனை அழித்தான். 200

வேறு

வீறுகிய அசுரர்க்கிறை மிகமூரல் படைத்து
மாறுகவொர் படைதொட்டிலன் வரிவில்லொடு நிற்பச்
சூறுவளி அழல்மாப்படை சூரன்மிசை தாக்கி
ஊறுயின நூறுயிரம் உதிராயின பிதிராய்.

வீறுகொண்ட அசுரர்களுக்கெல்லாம் இறையோனுன சூரபன்மன் அப்படை களின் வருகை கண்டு மிகுந்த இகழ்வான சிரிப்பினைக் கொண்டு, அப்படைகட்கு மாறுகத் தான் ஒரு படை தொட்டிடாது கையில் பிடித்த வில்லோடும் நின்றி டலும், அதுவேளை சூறுவளிக் காற்றும் நெருப்புமான அப்படை இரண்டும் சூர பன்மன்மேல் பட்டுப் படைகள் முரிந்து பொடிந்து நூறுயிரம் துகள்களாயின,

காற்றின்படை கனலின்படை கண்டம்பல வாகக்
கூற்றின்படை கதிரின்படை கூடத்தொடுத் திடலுஞ்
சீற்றங்கெழு சூரன்மிசை சென்றேயவை தாமும்
ஏற்றந்தனை இழந்தேகடி திறந்திட்டன அன்றே.

காற்றின் படையும், நெருப்பின் படையும் இணைந்த இப்படை பல துண்டாக முரிந்து சிதறிட, அதுகண்ட வீரவாகுதேவர் இயமாஸ்த்திரம், சூரயாஸ்த்திரம் இரண்டினையும் இணைத்து ஒன்றாக்கித் தொடுத்திடலும், அப்படைகள் மிகு கோபங்கொண்ட சூரன்மீது சென்று பட்டு, அப்படைகள் தாமும் தமது மேலான வலியை நீங்கி மிகு விரைவாக அழிந்தொழிந்து போயின. 202

அருணன்படை மறலிப்படை அழிவெய்தலும் அம்மை
சரணந்தனில் வருசத்திகள் தருமைந்தரில் தலைவன்
வருணன்படை நிருதிப்படை மகவான்படை மூன்றும்
முரணங்கொடு கொடியோன்உர மொய்ம்பிற்புக விடுத்தான்.

சூரியனின் படையும் இயமனின் படையும் அழிவாதலும், அதுவேளை பார்வதி அம்மையாரின் திருப்பாதச்சிலம்புகள் தந்த சத்திகள் பெற்ற மைந்தரில் தலைமையான வீரவாகுதேவர் உடனுக வருணாஸ்த்திரம், நிருதியாஸ்திரம், இந்திராஸ்திரம் ஆகிய மூன்றினையும் இணைத்து, மிக்க வலியுடன் கொடிய சூரபன்மனின் உரமான நெஞ்சில் சென்று புகும்படி விடுத்தார், 203

ஏயுற்றவை அவுணர்க்கிறை இருதோளுரம் எய்தி
வீயுற்றன அதுகாலையில் வீரங்கெழு மொய்ம்பன்
மாயப்படை அவுணப்படை வல்லேசெல விடுப்பப்
போயப்படை யவன்மெய்யிடை புகுந்தேபொடி யான.

ஏவப்பட்ட இந்தப் படைகள் சூரபன்மனது உரங்கொண்ட இரு தோளையும் அடைந்து பட்டவுடன், அப்படைகளே மழுங்கி மாய்ந்து போயின. அதுகாலையில் வீரம்மிக்குள்ள தோளுடைய வீரவாகுதேவர் மீண்டும் மாயப்படையையும், அசுரப் படையையும் விரைந்து இணைத்துச் சூரன்மேல் விடுதலும்; அப்படைகளும போய் சூரனுடைய மேனியில் பட்டவுடன் பொடியாகி அழிந்து போயின. 204

விண்ணோர்படை இவையாவையும் விளிவாதலும் வீரன்
நண்ணானபெரு விறல்கண்டனன் நனிவிம்மித னாகி
மண்ணோடுயிர்த் தொகையாவையும் வகுத்தோன்படை நளினக்
கண்ணோன்படை யொடுகூட்டுபு கடிதிற்செல விடுத்தான்.

தேவர்களின் படைகளாகும் மிக வலி படைத்தவை யாவும் இவ்வண்ணம் அழிந்து போதலும், வீரவாகுதேவர் பகைவனாகும் சூரபன்மனுடைய பெருவலியைக் கண்டார். மிகவும் அற்புதமடைந்தவராகி அப்பால் பின்னரும் மண்ணோடு கூடிய பூமியையும், அதில் வாழும் உயிர்களையும் படைப்போனாகிய பிரமதேவனின் படையான பிரமாஸ்த்திரத்தை; தாமரைக் கண்ணன் எனப்படும் விஷ்ணுமூர்த்தியின் படையாகும் நாராயணாஸ்த்திரத்துடன் கூட்டி இணையாக விரைவிற் செலவிடுத்தார். 205

விடுக்குற்றிடும் அயன்மால்படை விரைந்தேசினம் வீங்கி
அடுக்குற்றிடும் உருமுப்புகை அழல்கால்பல படைகள்
மடுக்குற்றிடு புணரித்தொகை வகுத்தெவ்வகை யுலகு
நடுக்குற்றிட அவுணற்கெதிர் நடந்திட்டன மாதோ.

இவ்வாறு விடப்பெற்ற பிரமன், திருமால் ஆனவரின் இருபடையும் விரைவுடன் புறப்பட்டுக் கோபம் பொங்கி அடுக்கடுக்காக இடிகளையும், புகையையும், நெருப்பைக் கக்குகின்ற வேறு படைகளையும் யாவற்றையும் உண்டிடும் சக்தி வாய்ந்த கடல்களையும் வகுத்து உண்டாக்கி எவ்வகையான எந்த உலகுகளும் நடுக்கம் கொள்ளச் சூரபன்மனுக்கு எதிராக நேரிட்டுப் போயின. 206

ஆண்டேவரும் அயன்மால்படை அவுணன்தட மார்பங்
கீண்டேகுதும் என்றேஅவன் கிளர்தார்அக லத்தின்
மூண்டேசின மொடுதாக்கிய முழுமாமணி வயிரச்
சேண்டோய்கிரி துளைப்பான்முயல் சிறைவண்டின மெனவே.

அவ்விடம் சூரன்பால் போன அப்படைகள் அவனுடைய விசாலித்த நெஞ்சினைக் கிழித்துவிட்டு வருவோம் என எண்ணி, அவனுடைய மாலைகள் விளங்கிடும் நெஞ்சினிடை மூண்டுள்ள கோபத்துடன் தாக்கின; எப்படி எனில், முழுவதும் வயிரமாகும் பெரு இரத்தின மலை ஒன்றைத் துளைப்பேன் என முயல்கின்ற ஒரு சிறை வண்டைப் போன்று. 207

மாயோன்படை உலகந்தரு மறையோன்படை அவுணத்
தீயோனுரந் தனிற்பாய்ந்து திருத்தொல்வலி சிந்தி
மீயோங்கிய அசுரேசரும் விண்ணோர்களும் நோக்கி
ஏயோவென வசையெய்தி இரிந்திட்டன அன்றே.

நாராயணக் கடவுளின் படையும், உலகினைத் தந்திட்ட மிக முற்பட்டவரான பிரமதேவரின் படையும் அசுரனாகிய இத்தீயவனுடைய நெஞ்சினிற் பாய்ந்து தாக்கித் தங்களது முன்னைய வலி எலாம் சிந்தி, மிகவோங்கிய நிலையுடைய அசுரத் தலைவரும் தேவர்களும் பார்த்து, "ஏ" "ஓ" என்று இகழ்ந்து கூக்குரலிடும்படி வசையடைந்து, அவ்விடம் தாங்கள் கொண்ட முயற்சி பலிக்காது திரும்பி ஓடின. 208

மீளுற்றவை இரியுஞ்செயல் விழிதீயுற நோக்கி
நீளுற்றிடு திறல்மொய்ம்பினன் நிமலன்வர முன்னிக்
கோளுற்றிடு பெருவிம்மிதங் கொண்டுற்றிட அண்டம்
ஆளுற்றிடும் அவுணர்க்கிறை நகைசெய்திவை அறைவான்.

தனது படைகள் சூரன்பால் சென்று தாக்கி வலியிழந்து மீண்டுகொண்ட செயலினை, பெருகுற்றிடும் திறலுடைய வீரவாகுதேவர் கண்கள் தீப்பொறி சிந்திட நோக்கி, சூரனுக்கு நின்மலனாகிய ஞானமூர்த்தி சிவபிரான் கொடுத்தருளிய முன்னைய வரத்தின் திறம்பாட்டை நினைந்து; மனதில் வெட்காளம் கொண்ட பெரும் ஆச்சரியமுற்றிடுதலும்; அதுபோது அண்டமெலாம் ஆளுகின்ற இறையோனான சூரபன்மன் வீரவாகுதேவரை நோக்கி ஈதொரு வார்த்தையைப் பேசிடுகின்றான். 209

முத்தேவரின் முதலாகிய மூவாமுதல் வரத்தால்
எத்தேவர்கள் படையுய்க்கினும் எனைவெல்கில எந்தப்
புத்தேள்படை விடினும்மெதிர் பொரவேஒரு படையும்
உய்த்தேதடை வினைசெய்கிலன் அவற்றின்வலி உணர்வேன்.

பிரமா, விட்டுணு, உருத்திரனாகிய மூன்று கடவுளர்க்கும் முதல்வராகிய என்றும் மூவாது விளங்கிடும் சிவமூர்த்தியின் வரத்தால் நீ எத்தேவருடைய படையை என்மீது விடுப்பினும் அப்படைகள் என்னை வென்றிட முடியாது. எந்தக் கடவுளருடைய படையை விடுத்தாலும், அப்படைக்கு எதிராகப் போரிடுவதற்கு ஒரு படையையும் செலுத்தித் தடைசெய்யும் செயல் புரிந்திட்டேன். அப்படைகளின் வலியை யான் உணர்வேன். 210

ஊனீத்திடு தவவிண்ணவர் உலகம்புகழ் அயன்மால்
தானீத்துள படையென்னிடை சார்கின்றதொர் தன்மை
மாநீத்தமெ லாமுண்டிடு வடவைத்தழல் அதனைத்
தேனீத்தொகை தசையீதெனச் சேருந்திறன் அன்றே.

தவத்தினால் உடலின் ஊனினை நீக்கிடும் தேவர்களும் உலகத்தவர் புகழ்ந்து வணங்கிடும் பிரமன் திருமாலாகியோர் கொடுத்திடுகின்ற படைகள் என்னைச் சேர்கின்ற தன்மை எதுபோலிருக்குமென்றால், இப் பெரிய சமுத்திரங்களை எல்லாம் உண்கின்ற வடவாமுகாக்கினி எனும் நெருப்பைக் கண்ணுற்றபோது தேனீக்கள் இது ஒரு தசை என எண்ணி அந்த நெருப்பின் மேல் மொய்த்திடும் திறம் போன்றது. 211

தெரிந்திட்டனை நீயோச்சிய திறல்வெம்படை என்பால்
புரிந்திட்டதொர் வயமொன்றிலை பொள்ளென் றுரம்மேவி
முரிந்திட்டன மறிந்திட்டன முடிந்திட்டன பொடிந்தே
எரிந்திட்டன கரிந்திட்டன இடைந்திட்டன அல்லால்.

இத்தன்மைகளை நீயே நேரில் தெரிந்து கொண்டாய்; நீ செலுத்திய வலிமை மிகுந்த கொடிய படைகள் என்பால் செய்திட்டதொரு வெற்றிகள் ஏதும் இல்லையே. அவைகளை நீ செலுத்திட விரைவுடன் வந்து என் நெஞ்சில் பட்டு முரிந்து போயின, அழிந்து போயின, எரிந்து பொடிந்து போயின, கரியாகிப் போயின. அன்றியும் வலியிழந்து இடைந்து போயின. 212

வில்வன்மைகொள் சரவன்மையும் விண்ணோர்படைக் கலத்தின்
பல்வன்மையும் பிறவாகிய படைவன்மையும இயல்பாம்
தொல்வன்மையுங் கண்டேயுனைத் தொலைவில்படை ஒன்றால்
கொல்வன்எனக் காலந்தெரி கூற்றுமென நின்றேன்.

உனது வில்லின் வலிமையையும், அம்பின் வலிமையையும், தேவர்களுடைய படைக்கலங்களின் பல வலியையும் பிறவாகிய படைகளின் வலிகளையும் இன்னும் இயல்பாக உனக்குள்ள முதிய வலியினையும் கண்டுகொண்ட பிற்பாடு உன்னைத் தொலைவில்லாத ஒரு படை ஒன்றினால் கொல்வேன் என்று ஓர் உயிரைக் கொன்றிடக் காலம் பார்க்கும் இயமன் போன்று இங்கு நிற்கின்றேன். 213

என்னுவசு ரன்செப்பலும் இளையோன்இனி ஒன்றால்
ஒன்னார்களின் தலைவன்வலி உணர்வேனென உன்னுத்
தொன்னாள்எயில் மூன்றட்டருள் தூயோன்படைக் கலத்தை
மன்னாரருள் புரிசிந்தனை வழிபாட்டொடு விடுத்தான்.

என்று அசுரனன சூரபன்மன் கூறுதலும், அதுகேட்ட வீரவாகு சரி இனி ஒரு படையால் எங்கள் பகைவர்களின் தலைவன் சூரனின் வலியை நான் உணர்ந்திடுவேன் என எண்ணி முன்னாளில் இரும்பு, பொன், வெள்ளியாலான மதில் மூன்றுடைய முப்புரங்களையும் எரிசெய்த தூயவராகும் சிவபிரான் படையினை மேலோங்கிய அருளுடைய மனதினால் வழிபாடு புரிந்து அந்தச் சிவப் படைக் கலத்தைச் சூரன்மேல் விடுத்தார். 214

விடுங்காலையின் இறைவன்படை விடம்வெங்கனல் அசனி
கொடுங்காலிருள் கதிர்வெய்யவன் கூற்றம்பல கூளி
தொடுங்கார்முகச் சரமாரிகள் சூலம்புடை சுற்ற
அடுங்காலமி தெனவேநெடி தார்த்துற்றதை யன்றே.

வீரவாகுதேவர் விடுகின்ற காலையில் எம்பிரான் சிவப் படைக்கலமானது நஞ்சு, கொடிய நெருப்பு, இடிகள், காற்று, இருள், வெப்ப ஒளியுடைய சூரியன், இயமன், பல பூதங்கள் வில்லினின்றும் வருகின்ற கொடும் கூருடைய மழை போலும் அப்புகள், சூலங்கள் யாவும் பக்கரில் சூழந்து வந்திட எல்லா உலகையும் அழிக்கின்ற காலம் இதுதான் என்றிட மிகு நெடிய ஆரவாரிப்புடன் வந்துகொண்டது. 215

உறுகின்றதொர் படைநோக்கினன் உரமுற்றெனக் குடைந்தே
இறுகின்றதொர் படைமற்றல ஈசன்படை ஈதால்
பெறுகின்ற அப்படையாலிது பிழைசெய்குவல் என்னாச்
செறுகின்றதொ ரவுணர்க்கிறை சிவன்றெல்படை எடுத்தான்.

தனதுபால் வருகின்ற சிவப் படையை சூரபன்மன் கண்டான். பார்த்தலும் அதோ! இது வலிகொண்டு என்பால் வந்துபட்டு உடைந்தோடிப்போன முன்னுள்ள படைகள் அல்ல. இது ஈசன் சிவனது படையாகும். ஆதலால் நானும் எம்பெருமான் சிவன்பால் பெற்றுக்கொண்ட எனது சிவப்படையால் இப்படையை தடுத்து நீக்குவேன் என எண்ணி போரிடுகின்ற அசுரர்களின் தலைவன் சூரபன்மன் சிவபிரானுடைய முதிய படையைத் தானும் கையில் கொண்டான்: 216

ஊறேற்றிடு தன்சிந்தையின் உறுபூசனை நிரப்பி
ஆறேற்றிடு சடிலத்தவன் அடலமாப்படை தொடுப்ப
நீறேற்றிடு மொய்ம்பன்விடு நிமலப்படை எதிர்போய்
மாறேற்றமர் புரிந்திட்டது வையத்தவர் வெருவ.

தீங்குகளே நிரம்பிய தனது சிந்தையிலே செய்யவேண்டிய பூசனைகளை நிரம்பிடச் செய்து கங்கையைச் சடைமீதணிந்த கடவுளின் கொடிய சிவப் படையை விடுத்தலும், நீறணிந்த கோலமுடன் நின்றிடும் வீரவாகுதேவர் விடுத்துள்ள சிவப் படைக்கு எதிராக இப்படை சென்று தம்முள் மாறுகி ஒன்றுடன் ஒன்று பெரும்போர் புரிந்திட்டது இவ்வுலகத்தவர் யாரும் பயந்து நடுங்கிடும் படியாக. 217

வேறு

காண்டகு நுதல்விழிக் கடவுள் மாப்படை
ஆண்டவை இரண்டும்நின் றுடல் ஆற்றியே
மாண்டிடும் உலகென வானம் போற்றிட
மீண்டன ஒல்லையில் விட்டு ளோர்கள்பால்.

காண்டற்கு இனியதான நெற்றிக் கண்கொண்ட கடவுள் சிவபெருமான் பெரும் படையாய இரண்டும் அங்கு நின்று பெரும்போரினைப் புரிந்து பின்னர் தாம் தொடர்ந்தும் போரிட்டால் உலகம் இறந்திடும் என எண்ணி வானில் உள்ளோர் வணங்கிப் போற்றிடத் தம்மை விடுத்துள்ள இருவர்பாலும் விரைவுடன் மீண்டுகொண்டன. 218

அன்னது நோக்கியே அசுரர் மேலையோன்
இன்னவை கொல்லுனக் கியன்ற வன்மைகள்
உன்னுயிர் இன்னினி ஒழிப்பன் காண்கெனத்
தன்னெடுஞ் சிலைவலைஇச் சரங்கள் சிந்தினன்.

அதனைப் பார்த்து அசுரர்க்கெல்லாம் மிக மேம்பட்டவனான சூரபன்மன் வீரவாகுதேவரை நோக்கி, இவ்வளவுதான் உன்னால் செய்துகொள்ளக் கூடிய போர்வன்மைகள். இனி உனது உயிரை நான் நீக்குவேன் அதை நீ காண்பாய் என்று தனது நெடுத்த வில்லை வளைத்துக் கொடிய அம்புகளைச் சிந்தினன். 219

துன்புறு வடிக்கணை சூரன் சிந்தலும்
தன்பெருஞ் சிலையினைத் தானும் வாங்கியே
முன்புற நெடுஞ்சரம் முகிலின் தூவினன்
பொன்புனை அலங்கலம் புயத்து வள்ளலே.

துன்புறுத்தும்படியான கொடிய வடித்த அம்புகளைச் சூரபன்மன் விடுத்தலும் வீரவாகுதேவர் தனது பெருவில்லினைத் தானும் வளைத்து அவனது அம்புகட்கு முன்பாக முகில்கள் மழை பெய்வது போன்று அம்பினைப் பொழிந்தார் பொன்னால் இழைத்த மாலைகள் நிரம்ப தோள்மீது விளங்கிட அணிந்துகொண்ட அருள் வள்ளலான வீரவாகுதேவர். 220

அத்தகும் எல்லையில் அவுணர் மன்னவன்
முத்தலை நெடுங்கணை மூவைந் தேவியே
வித்தக மொய்ம்புடைவீர வாகுவின்
கைத்தல வில்லினைக் கண்ட மாக்கினன்.

அவ்வாறாகிய நேரத்தில் அசுரர்களின் அரசனான சூரபன்மன் மூன்று தலைகளை உடைய நீண்ட அம்புகள் பதினைந்தை விடுத்து வித்தகம் பொருந்திய தோளுடைய வீரவாகுதேவரின் கைத்தலத்திருந்த வில்லினைக் கண்ட துண்டமாக முரித்தெறிந்தான். 221

சிலையது துணிதலுஞ் சீறி வீரனோர்
இலையுடை வேலினை யெடுத்து வீசலுந்
தொலைவறு வரம்பெறு சூரன் மார்பெனும்
மலையிடைக் குறுகியே மற்ற திற்றதே.

தனது வில் முரிந்துபோதலும் வீரவாகுதேவர் சீறி எழுந்து, இலைவடிவான ஒரு வேலினை எடுத்து வீசுதலும், அந்த வேலானது சென்று அழிவுறாத வாழ்வு பெற்ற சூரபன்மனுடைய நெஞ்சு என்னும் மலைமீது சென்றுபட்டு அவ்வேல் முரிந்து போயது. 222

இற்றுழி அவுணர்கள் இறைவன் மாலயன்
மற்றுள கடவுளர் வலியுங் கொள்வதோர்
கற்றையங் கதிர்மணிக் கதையொன் றேச்சினுன்
வெற்றிகொண் டுலவிய வீர வாகுமேல்.

வேல் முரிந்துபோய காலையில் அசுரர் தலைவனை சூரபன்மன், திருமால் பிரமன் இன்னும் மற்றும் உள்ள கடவுளர்களின் வலியையும் நீக்க வல்லதொரு கற்றை கற்றையான கதிர் ஒளிகளைக்கொண்ட இரத்தினத் தண்டு ஒன்றை எடுத்து வீரவாகுதேவர்மேல் செலுத்தினுன்; 223

திண்மைகொள் பஃறலைச் சேடன் பாங்குளார்
எண்மரொ டொன்றியோர் இயற்கைத் தாகியே
உண்மலி யார்ப்புடன் ஒழுகிச் சென்றென
வண்மணி கறங்கிட மணித்தண் டுற்றதே.

இந்தத் தண்டானது எப்படிச் சென்றது என்றால், திண்மை கொண்ட பல தலைகளை உடைய ஆதிசேடன் என்னும் பாம்பும், அதன் பக்கரில் உள்ள ஏனைய எட்டுப் பாம்புகளும் எல்லாம் ஒன்ருய்த் திரண்டு தலைகளை நீட்டி; உள்ளத்து இயல்பாகச் சீறுகின்ற ஆர்ப்புடன் செல்வதை ஒத்து, தண்டில் பூட்டிய பல மணி கள் கணீரெனச் சத்தமிட்டவாறு அந்த இரத்தினத் தண்டு சென்றது; 224

வெங்கதை வருதலும் வீர வாகுவோர்
செங்கதை எதிருறச் செலுத்தி நிற்றலும்
அங்கதை நீறுசெய் தவன்றன் மார்பிடைத்
துங்கதை தன்னெடு துண்ணென் றெய்திற்றே.

கொடிய தண்டாயும் வருதலும், வீரவாகுதேவரும் அதற்குப் பதிலாகத் தானுமொரு சிவந்த தண்டாயுதத்தை மாருகச் செலுத்தி அங்கு நிற்றலும், அந்தத் தண்டாயுதம் வந்து வீரவாகுதேவரின் தண்டினை அடித்து நொருக்கிச் சாம்பராக்கி வேகமுடன் வந்து வீரவாகுதேவரின் நெஞ்சில் மிக உரமோடு திடீ ரெனப் பட்டது; 225

மேக்குயர் பெருஞ்சின வீர வாகுவின்
மாக்கிளர் அகலமேல் வயிர மாக்கதை
தாக்கலும் விண்டது தாரைச் செம்புனீர்
தேக்கிய நதிகளில் திரைத்துச் சென்றதே.

மிகவும் உச்சமான கோபவேகத்துடன் நின்றிட்ட வீரவாகுதேவரின் உர மான நெஞ்சின்மீது வைரம் கொண்ட பெரிய தண்டானது வந்து தாக்குதலும், நெஞ்சு பிளந்து வெடித்து அதில் நின்றும் தாரை தாரையாக இரத்தம் பெருகி நீர்தேக்கிய ஆறுபோலும் திரையுடன் சென்றது. 226

ஆழ்ந்திடு சோரியன் அவுணன் தண்டினால்
போழ்ந்திடு மார்பினன் புகையும் நெஞ்சினன்
தாழ்ந்திடும் விறலினன் தளரும் யாக்கையன்
வீழ்ந்தனன் அமரர்கள் வெருவி யோடவே.

அதுவேளை வீரவாகுதேவர் பெருகி வடிகின்ற இரத்த வெள்ளத்தில் அமிழ்ந்திய வராய்; தண்டாயுதத்தால் பிளவுபட்ட நெஞ்சினை உடையவராய்; என்செய்வது இப்படியாயிற்றே என வேறொன்றும் செய்யமுடியாத நிலையில் கோபமுடன் வருந்தும் உள்ளம் உடையவராய்; வலிமையாவும் தாழ்வுற்றவராய்; உடல் சோர்ந்து தளர்பவ ராய் அவ்விடத்து வீழ்ந்தார். அவரின் வீழ்ச்சியைக்கண்டு தேவர்கள் எல்லாம் ஐயோ! எனப் பயம்கொண்டு கலங்கி நின்ற இடம்விட்டு ஓடினார்கள். 227

ஆற்றலின் றாகியே அண்ணல் வீழ்தலும்
மேற்றிகழ் வலவனும் விசாலி என்பவன்
தேற்றுறு பான்மையைச் சிந்தித் தோர்புடை
காற்றெனத் தேர்கொடு கடிது போயினான்.

தனது ஆற்றல் நீங்கி வலிமை கெட்டு வீழ்ந்த வீரவாகுதேவரின் நிலையை கவனித்த அவரின் தேரினைச் செலுத்தியிடுகின்ற சாரதித் தொழிலில் மிக்க நுண் ணுணர்வுடைய திறமைசாலியாகும் விசாலி என்னும் பெயருடையவன்; அதுவேளை சோர்ந்து வீழ்ந்த வீரவாகு தேவரை எங்காலும் ஓர் இடத்திற்கு கொண்டு சென்று தேறித் தெளியவைக்கவேண்டும் என நினைந்து; ஒரு புறமாக காற்றுப்போல் வேக முடன் தேரை விறுக்கெனக் கொண்டு போயினான். 128

போந்திடு காலையில் புலம்பி வீழ்ந்துளான்
மாய்ந்திடுஞ் சரதமாம் என்று மாறிலான்
ஆய்ந்தனன் சிலைகுனித் தப்பு மாரிதூய்க்
காய்ந்தனன் சென்றனன் கணத்தின் தானைமேல்.

அவ்வாறு வீரவாகுதேவரை தேருடன் சாரதி கொண்டுபோன பிற்பாடு இவைநோக்கிய சூரபன்மன் எனது தண்டுசென்று குற்றிட கதறிக் கொண்டு வீரவாகு வீழ்ந்தனன். இவன் இனி இறப்பான். இது மெய்மையாகும் என நினைந்து பின்னரும் மாறிலாது இதைச் செய்வன்என ஆராய்வுடன் வில்லைவளைத்து அம்பு களை மழைபோலச் சொரிந்து அங்கு மிச்சமாக நின்ற பூதங்களுடன் போரிடும்படி சென்றனன். 229

பொன்றிடா வரத்தினான் பூத சேனைமேற்
சென்றனன் கணைமழை சிதறிக் கோறலும்
நின்றவை இரிந்தன நெடிய தீங்கதிர்
என்றினை அடைந்திடு பனியின் ஈட்டம்போல்.

எக்காலமும் அழிவிலாத வரத்தினையுடைய சூரபன்மன் அங்குநின்ற பூதங்களா கும் எம்பிரான் சேனைமீது அம்புகளை மழைபோலச் சிந்திச் சொரிந்து பூதங்களைக் கொன்றிடுதலும் அங்கு நின்ற பூதங்கள் பயத்தால் அவ்விடம் விடுத்து ஓடிப் போயின. எப்படிஎனில் சூரியதேவனின் வெப்பமான வெயில் கிரணங்களை அடைந்து கொண்ட பனிப்படலம் போன்று போனதிசைதெரியாது பூதங்கள் யாவும் ஓடின. 230

தாக்கிகல் வீரருஞ் சயங்கொள் மொய்ம்பனும்
நீக்கமில் இராயிர நீத்தத் தானையும்
ஊக்கிய வலியழிந் துடைந்த தன்மையை
நோக்கினன் பன்னிரு நோக்கங் கொண்டுளான்.

இவ்வாறு போரினில் எவரையேனும் தாக்கி வெற்றி கொள்ளுங் வலியுடைய இலக்கத்து எட்டு வீரரும்; பூதசேனாதிபதிகள் நூற்றெட்டுப்பேரும் அவர்கட்கெல்லாம் தலைமையான வெற்றிதரும் விளைவுடைய வீரவாகுதேவரும்; நீக்கமில்லாது எங்கும் நெருங்கிச் செறிந்துவந்த இரண்டாயிரம் வெள்ளம் என்னும் தொகைப்பட்ட தனது பூதப்படைகளும்; எல்லாம் சூரபன்மனுடன் போரிட்டு வலியிழந்து மயங்கியும் வாடியும் தொலைந்து அவன்முன் நிற்கமுடியாது பின்னிட்டோடிய தன்மைஎல்லாம் பார்த்தருளினர் பன்னிரண்டு கண்களுடன் எல்லார்க்கும் பகவானாய் நின்றருளிய எங்கள் ஆறுமுகப்பெருமான். 231

ஆண்டது வேலையில் ஆறு மாமுகன்
பாண்டிலந் தேர்மிசைப் பாகை நோக்குறா
ஏண்டகு சூரன்மேல் இரதம் ஒய்யெனத்
தூண்டுதி என்றனன் சுரர்கள் போற்றவே.

அவ்வாறாகிய நேரத்து ஆறு பேரருள் நிறைந்த முகமுடைய எங்கள் பெருமான் பெரும் சில்லுகளுடன் பொருந்திய மனோவேகம் எனும் தமது தேர்மீது சாரதியாகி அமர்ந்த வாயுதேவனை நோக்கியருளி வாயுவே! இறுமாப்புடன் அங்கு நிற்கின்ற சூரபன்மன் முன்பாக எமது தேரை செலுத்திடுவாயாக எனக் கூறியருளினர்; இதனைக் கேட்டுநின்ற தேவர்கள் எல்லாம் அரகரா சண்முகவா சரணம் குருவே சரணம் என போற்றுதல் புரிந்து வணக்கம் செய்தனர். 232

வேறு

இணைஅறு முருகன் இவ்வா றிசைத்தலும் இனைய தோரா
உணர்வுறு பவனன் என்னும் ஒருதனிப் பாகன் நாகர்
கணமணி செறிந்த பொற்பிற் காமரு கடவுட் டேரைத்
துணையறு சூரன் முன்னர்த் துண்ணெனத் தூண்டி உய்த்தான்.

தனக்கு இணையிலாத பேரொளிப் பிழம்பாய் அமர்ந்தருளிய முருகப்பெருமான் இவ்வாறு உரைத்தருளுதலும்; இவற்றையெல்லாம் தெரிந்து உணர்ந்துகொண்ட வாயுதேவன் என்னும் தன்னந் தனியானவிறல் உடையசாரதியானவன் நாகங்களின் ஒளியுடைய இரத்தினங்கள் கூட்டாக செறிந்திருக்கும் பேரழகு நிறைந்துள்ள தெய்வத்தேரினை; ஒப்பு வேறுஇலாதிருக்கின்ற சூரபன்மன் முன்பு விரைவாகச் சென்றிடுதற்கு குதிரைகளைத் தூண்டி தேரினைச் செலுத்திச் சென்று சூரபன்மன் முன்பாகச் சேர்த்தான். 233

ஆயது காலை தன்னில் அவுணர்கோன் அநந்த கோடி
ஞாயிறு திரண்டொன் றாகி ஞாலமேல் இருளை ஓட்டிச்
சேயுயர் விசும்பை நீங்கிச் செருநிலத் துற்ற தென்னத்
தூயதோர் குமரன் போரில் தோன்றிய தோற்றங் கண்டான்.

அவ்வாறாக எம்பிரானது தேரானது சூரபன்மன் முன்போந்த காலையில்; அந்த அசுரர் அரசனான சூரபன்மன் தனது முன்பாக வந்துள்ள தெய்வத்தேர்மீது; அனந்த கோடி சூரியர்கள் திரண்டு ஒருவடிவமாகி இப்பூமியில் உள்ள எந்த இருளையும் நீக்கி மிக எட்டொணாது உயர்ந்த வானத்தில் இருப்பதை விடுத்து நீங்கி இப்பூமியில் தனது முன்பு போர் நிலத்து வந்துள்ளது எனும்படியாக மிகத்தூய்மையான சோதிப் பிழம்பாகும் முருகப்பிரான் போர் புரிந்திடும் படியாகத் தோன்றிய அத்தோற்றத்தை கண்டான். 234

**முண்டக மலர்ந்த தன்ன மூவிரு முகமுங் கண்ணுங்**
**குண்டல நிரையுஞ் செம்பொன் மவுலியுங் கோல மார்பும்**
**எண்டரு கரமீ ராறும் இலங்கெழிற் படைகள் யாவுந்**
**தண்டையுஞ் சிலம்பும் ஆர்க்குஞ் சரணமுந் தெரியக் கண்டான்.**

சூரபன்மன் அங்கு அழகு மிகுந்த அத்தேர்மீதிலே தாமரைபூ மலர்ந்ததை ஒத்த செவ்விய ஆறுதிருமுகமும் அருள் நிறைந்த பன்னிரண்டு கண்ணும் திருக்காதிலே அணியப்பெற்ற குண்டலங்களின் நிரையின் சிறப்பும் செழுமை வாய்ந்த செம்பொன்னினுற் செய்த திருமுடியும் அழகாய திருக்கோலத்துடன் விளங்கிடும் மார்பும் மாட்சிமை நிறைந்த பன்னிரண்டு திருக்கரங்களும் அவைமீது எழிலுடன் இலங்கிடுகின்ற படைகள் எல்லாமும் தண்டையும் சிலம்பும் ஒலித்திடும் அழகுமிகுந்த திருவடியும் தனது கண்ணுல் தெரியும்படி கண்டான்.

எல்லார்க்கும் பேருய் நிற்கும் ஒன்றே தான் ஆருகவிளங்கியது ஆனமையின் முகங்கள் என பன்மையின்றி முகம் என ஒருமையாகவும்; பன்னிரண்டு கண்களால் எல்லாவற்றையும் எங்கும் நிறைந்து நின்று ஒன்றுதான் பார்ப்பதும் அறிவதுமாக நிற்றலால் கண்கள் எனது கண் எனவும் கூறியருளினர். 235

**சூரெனும் அவுணர் கோமான் தொல்லைநாள் நோற்ற வாறும்**
**பாரிடை முடிவின் ருகிப் பல்லுகம் இருந்த வாறும்**
**ஆரணம் அறிதல் தேற்ரு ஆறுமா முகத்தெம் மையன்**
**பேரெழில் உருவம் நோக்கிப் பெரும்பயன் கோடற் கேயோ.**

எவர்க்கும் காணுத சோதி மயமான இத்திருவருவை தனது கண்ணுலே கண்டான் சூரபன்மன். ஆதலால் எல்லா அசுரர்க்கும் தலைவனும் பெருஞ்செல்வந்தனை சூரபன்மன் இவ்வாறு முன்பொருகாலத்து தனது உடலையே யாக அக்கினியில் அர்ப்பணித்து தவம் செய்திருந்த தன்மையும்; அத்துடன் இப்பூமியிடத்து நூற்றெட்டு யுககாலம்வரையும் முடிவிலாது சிறப்புடன் வாழ்ந்திருந்த தன்மையும்; எல்லாம் இன்று வேதங்களும் ஐயா என ஆழ்ந்து அகன்று தேடியும் தெளிந்து காண்கிலாத ஆறுமுகத்து எமது ஐயர் பெருமானின் பேரெழில் நிறைந்த இத்திருவடிவை நோக்கி பிறவியின் பெரும்பயனை அடைவதற்காமோ!

அவனது தவமும் இவ்வளவு நாளின் வாழ்வும் இன்றைய தரிசனத்தால் பேறுற்றது. அல்லாதிருந்தால் இவ்வளவு காலமாகிய நூற்றெட்டு யுகமும் பெரும் போக போக்கியத்துடன் வாழ்ந்தது வீண்தானே ஆகியிருக்கும்? 236

**எஞ்சலில் அவுணர் செம்மல் இங்ஙனம் அமர தாற்றித்**
**துஞ்சிலென் தொலைவுற் ருலென் தூயவா லறிவின் மிக்கோர்**
**நெஞ்சினும் அளத்தற் கொண்ணு நிருமலக் குமர மூர்த்தி**
**செஞ்சுடர் வடிவங் கண்டு தீவினை நீங்கி உய்ந்தான்.**

முடிவு என்பது எக்காலமும் இல்லாத அசுரர்களின் தலையாய சூரபன்மன் இங்ஙனம் போர்புரிந்து இனி இறந்தாலென்ன; அல்லது தொலைந்து போனுல் என்ன; தூயவாழ்வுடன் மேலான அறிவினில் மேம்பட்ட பெரியோர்களது மனதாலும் அன்றி உணர்வாலும் அளக்கமுடியாது நின்றருளுகின்ற நின்மல சொருபராகிய குமரமூர்த்தியின் செவ்வொளி பரந்த இத்திருவுருவத்தை கண்ணுல் கண்டு தான் செய்த தீவினைகள் எல்லாம் நீங்கி உய்ந்தான். 237

பூவுல கண்ட மெல்லாம் புரந்திடுஞ் சூரன் தன்னைத்
தீவினை யாளன் என்றே செப்புவர் சிறப்பின் மிக்க
மூவிரு முகத்து வள்ளல் முன்னர்வந் தெய்தப் பெற்றான்
ஆவிவன் தவத்திற் கன்றி அறத்திற்கும் முதல்வன் அன்றே.

இப்பூவுலகங்கள் அண்டங்கள் ஆயிரத்து எட்டினையும் ஒருகுடைக்கீழிருந்து அரசாண்டிருக்கும் இந்தச் சூரபன்மனை இவன் தேவர்களை சிறைவைத்தான் மது உண்டான் மாமிசம் உண்டான் செய்யாத தீவினைகள் பல செய்தான் என்று பலர் சொல்வார்கள். ஆனால் எல்லாச் சிறப்புகளிலும் அழியாச் சிறப்பாகிய ஆறுமுகமுடைய எம் அருள் வள்ளல் தாமாகவே இவன்முன்னராக வந்து தோன்றியருளப்பெற்றானே! ஐயய்யோ ஆதலால் இவன் இப்பேறொன்றினால் தவத்திற்கு முதல்வன் மட்டுமல்ல இவன் செய்துள்ள தீமை என்பவையாவும் நன்மையாகவே சிறந்து அதனால் இவன் தருமத்திற்கும் முதல்வனெனத்தான் இருக்கின்றான் அல்லவோ?

உற்றதோர் தன்மை நாடி உன்னை நீ பிரமம் என்று தெளிந்து உன்செயலை பற்றின்றி வருவதை வந்தவாறு செய்வாயாக என சுக்கிரபகவான் முன்னர் இவனிடம் கூறிய உப தேசப்படி (அசுரகாண்டம் சுக்கிரன் உபதேசப் படலம்) இவன் செய்த அதர்மமான செயலும் தருமமாயது போலும். அல்லாமலும் எம்பிரான் காட்சியால் சிறுமையும் பெருமையானது. குருவாக்கின்படி ஒழுகுதல் மேலான தருமமாம்.

இக்கருத்தை மாணிக்கவாசகரும் சித்தம் சிவமாகிச் செய்வதெல்லாம் தவமாக்கும் அத்தன் கருணைஎன திருத்தேணோக்கத்தில் கூறுகிறார். ஆகவே இத்தன்மைகளால் போலும் இங்கு இவனை அறத்திற்கு முதல்வன் அன்றோ? என அவன் பேற்றை அற்புதநிலையால் கூறியருளினார் ஆசிரியர் கச்சியப்பர். 238

இன்னமும் முனிவர் தேவர் யாவரும் இனையன் என்றே
உன்னருந் தலைமைத் தாகும் ஒருதனிக் குமரன் தன்னைத்
தன்னிரு விழியாற் கண்டான் தானவர்க் கிறைவன் என்றால்
அன்னவன் தவத்தின் பேற்றை ஆரறிந் துரைக்கற் பாலரர்.

இன்னமுமே முனிவர்களும் தேவர்களும் ஏனையோரும் இன்ன தன்மையன் எமது கடவுள் ஆறுமுகப்பெருமான் என; உணர்வால் உணரவல்லவர்களே; நினைப்பாலும் நினைக்கமுடியாதிருக்கின்ற தலைமைப்பாடுடைய குமரமூர்த்தியை தனது இரண்டு கண்ணாலும் கண்டான் அசுரர்க்கு எல்லாம் அரசனான சூரபன்மன் என்றால்; அந்த சூரபன்மன் செய்து கொண்டதவத்தின் பேற்றை அல்லது நிலையை யார் அறிந்து இங்கு எடுத்துக் கூறிட முடியும்? அதுமுடியாததொன்றே. 239

பொருசமர் விளைப்பான் போலப் பொருக்கெனப் போந்து சூரன்
இருவிழி தன்னிற் காண்பான் எளிதுதன் வடிவங் காட்டி
அருளது புரிந்தான் என்னின் ஆதியங் குமரன் மாயத்
திருவிளை யாடல் யார்க்குந் தெரிகில போலு மன்றே.

பெரும் போரினை தான் புரிந்திடுவார் போன்று பூதப்படை கொண்டு விரைவாக சூரன்முன் வந்து அற்புதமாய் அழகியதாய் ஆனந்தமாய் அருள்விளைவாய் பார்க்க பார்க்க தெவிட்டாத வடிவத்தை; சூரபன்மன் தனது இருவிழியாலும் காணும்படி மிகுஇலேசாக காட்டி போர்மூலம் சூரனை ஆட்கொண்டிடும் அருளையே புரிந்தான் என்றால ஆதியான குமரமூர்த்தியின் மாயமான திருவிளையாடலை யார்க்குமே தெரியாது போலும்.

எம்பிரான் சூரன்முன் போர்புரிவார் போன்று வந்ததின் விளைவாக காட்டியது கண் நிறையும் தமது திருஉருவையே. போர் புரிதல் தானும் சூரனைக் கொல்ல வல்ல அருள்புரிந்து ஆட்கொள்ள. ஆகவே இதன் தன்மையான எம்பிரானது திருவிளையாடல் எப்படி நடக்குமென யார்க்குமே தெரியாது. 240

**சிந்தையால் அறிதற் கொண்ணுத் திருவுரு விழியாற் கண்டு**
**முந்துதான் நின்ற சூரன் முழுதுல கடுவான் நின்றேன்**
**மைந்தனும் இவனென் றுன்னி மனத்தினில் வெகுளி தூண்டக்**
**கந்தவேள் தன்னை நோக்கி இனையன கழறல் உற்ருன்.**

சிந்தையால் நினைத்துநாடி அறிதற்கு முடியாத எம்பிரானுடைய இந்த திரு உருவத்தை சூரபன்மன் பேறுடைய தனது கண்ணுல் கண்டவாறே முன்னுக நின்ற வன் ஓகோ! இவர்தான் முழு உலகங்களையும் சங்கரித்து அழிக்கும் படியாக நின் றருள்கின்ற உருத்திர மூர்த்தியின் திருக்குமாரனுகும் என எண்ணி; உடனே மனதில் அடங்கிட முடியாத கோபம் தூண்டி நிற்ப அதனுல் வந்தவர் ஆட்கொள்ளும் வள்ளல் என தெளிந்திடமுடியாது பகைவன் என நினைத்து கந்தக் கடவுளை நோக்கி இனையவார்த்தையைக் கூறுகின்ருன்.

இத்தகைய காணமுடியாத கடவுளை நேரில் கண்டும் மானத்தால் எழுந்திடும் கோபம் தூண்டுதலால் இதனைச் சொல்கின்ருன். 241

வேறு

**சேனை யாய்நினைச் சூழ்ந்தவர் செருவலி அழிந்து**
**போன போனதோர் மாதிறந் தெரிந்தில பூத**
**மான வீரரும் அழிந்தனர் சிலைத்தொழில் வல்ல**
**ஏனை யோர்களும் என்னெடு பொருதனர் இறந்தார்.**

மைந்தனே கேள்! சேனைகளாகி உன்னைச் சூழ்ந்து வந்துள்ள பூதங்கள் என்னு டன் போரிட்டு வலி இழந்து தோற்ருேடிய திக்கு எது என்பது எனக்கு இன்னமுமே தெரியவில்லை. மானத்துடன் போரிட்ட பூதசேனுதிபதிகளும் தோற்று அழிந்தார் கள். வில்வாண்மையில் மிக்க போர்புரியவல்ல எல்லாருமே என்னேடு போரிட்டு இறந்து போனுர்கள். 242

**இற்ற நின்பெரும் படைக்கெலாந் தலைவனுய் என்பால்**
**ஒற்று வந்துள வீரனும் பொருதுயிர் ஒழிந்தான்**
**மற்று நீயொரு பாலனே என்னெடு மலைந்து**
**கொற்றம் எய்துதி நன்றுநன் றுன்னுளக் குறிப்பு.**

இதுவன்றி அழிந்துபோன நினது பெரும் படைகட்கெல்லாம் தலைவனுய் என் னிடத்து முன்னர் தூதுவனுக வந்துள்ள அந்த வீரனுமே என்னுடன் இப்பொழுது போரிட்டு இறந்து போனுன். அப்படி நிலமை இருப்ப இப்பொழுது நீ ஒரு பால கனே என்னேடு பெரிய போரினைப் புரிந்து வெற்றி அடையப் போகின்ருய்! மிக வும் நல்லது உனது உள்ளத்துக் கொண்ட எண்ணம். 243

**மேல தாகிய நின்னுடைத் தாதையும் விண்ணும்**
**ஞால மும்புரிந் துதவிய நான்முகத் திறையும்**
**மாலும் வெஞ்சமர் புரிதிறங் கருதிலர் மற்ருேர்**
**பாலன் வல்லைகொல் என்னெடு போர்த்தொழில் பயில.**

எவர்க்கும் மேலவரான உனது தந்தை சிவபிரானும் காத்தற் கடவுளாகும் நாராயணரும் வான உலகும் பூமியும் அண்டமும் படைத்து உதவிவைத்த அந்த நான்கு முகமுடைய பிரமனுன கடவுளும் கொடிய போரை என்னுடன் புரிவதற்கு கருத மாட்டார்கள். ஏனனில் அப்படி என்னுடன் போர் செய்தால் வரும் விளைவு அவர்க்கு நன்ருக தெரியும். அப்படியிருப்ப நீ ஒரு பாலனு என்னேடு போர் தொழில் செய்து பார்ப்பதற்கு வல்லமையுடையவன். எல்லாமே தானுகி நின்ருலும் மணம் கமழ் தெய்வத்து இளநலமுடைய குழந்தைவடிவாகி அவன்முன் தோன்றியபடியால் பாலன் என்று; அவர் நிலையை உணரும் அறிவுகூடமையால் மொழிகின்ருன் சூரன். 244

முந்தை நாள்வலி இல்லதோர் அடுக்கலும் முன்யான்
தந்த செல்வத்தின் மயங்கிய தாரகா சுரனும்
புந்தி நீங்கிய அவன் படைத் தலைவரும் போல
மைந்த என்னையும் நினைந்தனை போலுநின் மனத்தில்.

மிகவும் முன்னாளிலிருந்தே வலியிலாது யோன கிரவுஞ்ச மலையும்; முன்னர்யான் கொடுத்த செல்வத்தினால் உண்டு உறங்கி தன்நிலை யறியாது மயங்கிய தாரகாசூரனும்; செப்பமான நல்லயுத்தி இல்லாது முரட்டுத்தனமாகப் போரிட்டு இறந்து போன தாரகாசூரனது சேனாதிபதிகளும் போல; நானும் மயங்கி மதிகெட்டு வலியழிந்து நிற்பேன் என சிவகுமாரனே நீ உன் மனதிலே நினைந்தாய் போலும் என்றான் சூரபன்மன். 245

தேக்கு சீரினேன் வரத்தியல் உன்னலை சிலைதயா
ஆக்கம் உன்னலை பெருமிடல் உன்னலை அடலின்
வீக்கம் உன்னலை படைத்திறம் உன்னலை வெம்போர்
ஊக்கம் உன்னலை சிறுவநீ பெருஞ்சமர்க் குற்றாய்.

சீர் நிரம்பிய என்னுடைய அழியாவரத்தின் இயல்பை எண்ணினாயில்லை; அழிவிலா எனது செல்வத்தை நினைக்கவில்லை போர்புரிவதில் நான் கொண்ட பெருமைப் பாடுகளையும் திறமையையும் நீ எண்ணவில்லை; எனனிடத்துள்ள படைகளின் இரகசிய சிறப்புகளை நினைந்தாயல்லை; கொடிய போர்புரிவதில் எனக்கிருக்கும் ஊக்கமும் நீ எண்ணினாயல்லை இவையான எவது சீரும் வரமும் வளமும் பெருமையும் திறலும் படையும் ஊக்கமும் எலலாம் நீ குழைந்தையான படியால் நினையாது வந்து விட்டாய்போலும் என்றான். 246

கமல மேலுறை பகவனும் மாயனுங் ககனத்
தமரர் செம்மலும் மாதிரக் கிழவரும் அழுங்கச்
சிமைய மங்கையும் இரங்குற என்னொரு சிலையால்
இமையொ டுங்குமுன் நினவலி அழிக்குவன் என்றான்.

ஆதலின் அந்த தாமரை யலர்மேல் இருக்கின்ற பிரமதேவரும் நாராயனக் கடவுளும் வான உலகில் உள்ள தேவர்கட்கு அரசன் இந்திரனும் ஏனைய அக்கினி இயமன் முதலிய திக்குப் பாலகர்களும் பார்த்து பெருமூச்சுடன் கவலைகொள்ள; தாயாகிய இமயமலையில் தோன்றிய பார்வதி தேவியும் என்னுடன் போரிட்டு நீ அடைகின்ற நிலையைக் கண்டு எனது மைந்தனுக்கும் இப்படிக் கதியாமோ என இரக்கப் பட இதோ எனது ஒருவில்லால் ஓர் இமைப்போது ஒடுங்குமுன் உன்னை வெல்வேன் 247

வேறு

சூரனென் றுரைபெற் றுள்ள தொல்லையோன் இனைய தன்மை
வீரமுந் திறலுஞ் சீரும் வெகுளியுங் கொண்டு செப்ப
ஆரருள் உருவாய் நின்ற ஆதியங் குமரன் கேளா
மூரலுஞ் சிறிது தோன்ற இத்திறம் மொழிய லுற்றான்.

சூரன் என்று பலரும் புகழ்ந்திடும் பெயர் பெற்றுள்ள மிகத் தொன்மையானவன் இத்தகைய வார்த்தைகளை தனது கண் முன்தோன்றிநின்ற குழந்தை வடிவாகும் ஈசனுக்கு; வீரமும் திறமையும் கோபமும்கொண்டு எடுத்து கூறிட அதுவேளை முற்றிலும் அருள் மயமாகவே செறிந்து விளங்கிடும் திருமேனியுடைய எப்பொருட்கும் ஆதியாகும் குமரப்பெருமான் கேட்டருளி புன்னகையும் சிறிதே திருவாயில் பூத்தலர இந்த வார்த்தைகளை எடுத்து தாமும் கூறியருள்கின்றார். 248

**வெற்றியும் உடையம் ஆற்றல் மிகுதியும் உடையம் மேன்மை**
**பற்றியும் உடையம் எண்ணில் படைகளும் உடையம் வீயாப்**
**பெற்றியும் உடையம் தானைப் பெருங்கடல் உடையம் என்று**
**மற்றினி அகந்தை கொள்ளேல் மாற்றுதும் வல்லே மன்னே.**

சூரபன்மனே நீ வெற்றி உடையேன் மேன்மைகள் பல பெற்று விளங்கிடுகின்றேன்; எண்ணற்ற பெரும் படைக்கலங்களும் உடையவன்; இறவாத தன்மையும் உடையவன்; சேனையாகும் பெரிய கடலும் உடையவன் என்று உனது சீர்சிறப்புக்களை எல்லாம் நினைந்து இனிமேல் இறுமார்ப்புக் கொள்ளாதே. அவற்றை எல்லாம் நாம் விரைவில் மாற்றப் போகின்றோம். எம்பிரான் அவன் முன்தோன்றி கூறிய இதுவும் அவனை ஆட்கொள்ளும் திறம்போலும் ஏனெனில் உலகில் பலவேறு தலைமைப் பாடுகள் மேன்மைகள் புகழ்கள் யாவும் அருள் ஒளியை நாடவிடாது தடுப்பன என்பது இப்பாடலால் தெளிவாகிறது. 249

**வரமிகு சிறப்பின் ஊனமை மழவிளங் குமரன் கொல்லோ**
**பொருதுவென் றிடுவான் வல்லன் என்றுநின் புந்தி கொண்டாய்**
**பெரிதுநீ மடவை மாதோ பிரான்தனி நெற்றி நாட்டத்**
**தொருசிறு பொறியே அன்றே உலகெலாம் அடுவ தம்மா.**

சூரபன்மனே! நீ; வரத்தினால் மிக்க சிறப்புடைய அழிவிலாத பெரிய என்னை மழலைச்சொல் இன்னமும் மாறிடாத இளம் குமரன் வெல்வான் அதுமுடியாது என எண்ணிக்கொண்டாய். உனது அந்த எண்ணத்தால் புத்தியிலாத மடையன் ஆகி விட்டாய். எமபெருமானுடைய தன்னந்தனியான நெற்றிக் கண்ணினின்றும் தோற்றிடும் ஓர் சிறிய பொறிதான் இவ்வுலகம் எல்லாவற்றையும் அழிப்பது என்பதை உணராது இருக்கின்றாய். தோற்றத்தை மதித்தலையை அன்றி உண்மையை கண்டு மதிக்கும் ஆற்றல் இலாமையின் நீ மடையன். 250

**அறிவுடை முதியர் என்றும் ஆண்டிளை யோர்கள் என்றுஞ்**
**சிறியவர் பெரியர் என்றும் திருத்தகு வளத்தர் என்றும்**
**வறியவர் என்றும் வீரர் மதிக்கிலர் யாவ ரேனும்**
**விறல்வலி படைத்து நேரின் வெஞ்சமர் விளைப்பர் அன்றே.**

யாரேனும் ஒருவர் போரிடவந்தால் அவ்வாறு வருவாரை அறிவிலே முதிர்ந்த பெரியவர் இவர் என்றும் அல்லது வயசினால் மிக இளையர் இவர் என்றும் அல்லது இவர் சிறியர் என்றும் இவர் பெரியர் என்றும் திருத்தமாக உள்ள செல்வம் உடையவர் இவர் என்றும் அல்லது வறியவர் என்றும் உண்மையான வீரர்கள் எதிரியை இப்படி எண்ணி போரிடமாட்டார்கள். யார் என்றாலும் மிக்க விறலும் வலிமையுடனும் நேர்ந்தால் கொடிய போரை அவருடன் புரிவார்கள் அல்லவோ. 251

**நூற்றுடன் எட்ட தென்ன நுவலுறும் உகத்தின் காறும்**
**பேற்றுடன் இனிது வைகும் பெரியநின் வலியை இன்னே**
**தேற்றம் துறுத கொள்கைச் சிறியநம் வன்மை தன்னால்**
**ஊற்றுடைப் பாலிற் புக்க உறையென அடுதும் என்றான்.**

ஆதலின் சூரபன்மனே நூற்றெட்டு என்னும் யுககாலம் வரையும் இனிய பேற்றுடன் இருக்கின்ற மிகப்பெரியவனான உனது வலியை; இப்பொழுதே உன்னால் மதிக்கப் பெறாது இன்னமும் செம்பமான தெளிவை அடையாத கொள்கை உடையேனான சிறியோம் நமது வலியால் பாலில் புகுந்த சிறுதுள்ளி தயிர் உறையானது பெருமளவு பாலையும் தனது தயிர் மயமாக்குவது போன்று பெரிய உன்னையும் அடக்கி இங்கு எனது கீழ்வைப்பேன் என்றார் ஆதியாய் அறிதற்கரிய குருபரனான குமரமூர்த்தி. 252

## வேறு

என்னு முன்வெகுண் டவுணர்கோன் இருநிலத் தன்னை
முன்ன னளந்தவன் போல்அண்ட முகடுதோய் வுற்ற
கொன்னெ டுஞ்சிலை ஒன்றினைக் கரத்தொடு குனிப்ப
அன்ன பான்மையைக் கண்டனன் ஆதியங் குமரன்.

என்று எமது பெருமான் கூறிமுடிப்பதன் முன்னரே சூரபன்மன் இது கேட்ட வுடன் வெகுண்டு இப்பூமியை முன்னர் அளந்த நாராயணக்கடவுள் நீண்டது போன்று அண்டங்களின் முகட்டினை சென்று முட்டி நிற்கின்ற மிக உயர்வான நெடிய வில்லை எடுத்து கையுடனாக வளைத்திடுதலும் அத்தன்மையைக் கண்டனன் ஆதியான குமரக் கடவுள். 253

மால யன்சுரர் பல்லியம் இயம்பிவாழ்த் தெடுப்ப
ஆல மார்வனத் தெம்பிரான் ஆடிய அந்நாள்
மேலை மூதண்ட முகடுற எடுத்ததோர் வியன்தாட்
கோலம் என்னஓர் நெடுஞ்சிலை யெடுத்தனன் குமரன்.

திருமால் பிரமன் தேவர்களாயோர் பலவாத்தியங்களை முழக்கி வாழ்த்தெடுத் திட திருவாலங்காட்டில் எம்பெருமான் நடனமாடிய அந்நாளில்; காளிதேவியின் வெகுட்சியை அடக்கிடவேண்டி மேலாய எந்நிலைக்கும் மேலாய முதியதாகும் அண் டங்களின் முகட்டில் பொருந்துற நீட்டியதோர் அற்புதமுடைய திருப்பாதத்தின் நீட்சியின் கோலம் போன்று நெடியதோர் வில்லை குமரமூர்த்தி எடுத்திட்டார். 254

அடற்பெ ருந்திறல் சண்டிதன் பெருமிதம் அடக்கிப்
படித்த லந்தனை அருளுவான் ஆடல்செய் பரமன்
எடுத்த சேவடி பகிரண்டம் அட்டிடா இயல்பால்
தடுத்த செங்கைபோல் குனித்தனன் அறுமுகன் தனுவை.

திருவாலங்காட்டில் அன்று அழிப்பேன் உலகினை என வெறிகொண்டு நின்ற காளியின் உக்கிரத்தினை அடக்கி இப்பூமியைக் காத்தருளும்படி நடனமாடிய சிவ பிரான் எடுத்து வானில் உயர நீட்டிய திருப்பாதம் வான்மீதுபோய் அங்குள்ள அண்டங்களை அழித்திடாதபடி தடுத்துநீட்டிய தமது அழகிய சிவந்த திருக்கரம் போன்று வடிவம் அமையுமாறு எமது ஆறுமுகப்பிரான் தமது வில்லை வளைத்தார். எமது ஆறுமுகப்பிரான் வில் வளைத்தமை தந்தையாகிய சிவபிரான் திருவாலங் காட்டில் மேல்தூக்கிய திருப்பாதத்தை தடுத்தொருகையால் பற்றிநின்று உலகினைத் காத்தருள ஆடிய ஊர்த்துவ நடனம்போன்றது. 255

குனித்த வில்லிடைக் குமரவேள் நாணொலி கொண்டான்
அனைத்தும் அண்டங்கள் உடைந்தபேர் ஓதைபோல் அவுணன்
சினத்து மாறுதன் குணத்திசை எடுத்தனன் செகத்தில்
பனித்த டங்கடல் யாவுமார்த் துடைத்திடும் பரிசின்.

வளைத்த வில்லினிடத்தாக குமரப்பெருமான் அனைத்துள்ள அண்டங்களும் உடைந்த பேரோசைபோன்று நாணின் ஓசையைக் காட்டினார். அந்த நாணோ சையைக் கேட்ட மாத்திரத்து சூரபன்மன் சினம்கொண்டு அந்தஓசைக்கு மாறாக தனது வில்லினின்றும் நாணோசை எடுத்தான். அது எதுபோன்ற தென்றால் இவ் வுலகில் குளிர்மைவாய்ந்த விசாலித்தகடல் யாவும் பேர் இரைச்சலுடன் உடைந்து போம் ஓசையின் தன்மைபோன்று. 256

அள்ளி லைப்படை அவுணர்கோன் அடுசர மழைதூய்
வள்ளல் தன்னையுந் தேரையும் உலகையும் மறைப்பத்
தெள்ளி திங்கிவன் விஞ்சையென் றெந்தைசிந் தித்துக்
கொள்ளை வெங்கணை துரந்தவை யாவையுங் குறைத்தான்.

அதன்பால் சூரபன்மன் கூரிய இலைபோலும் வடிவுடைய கொலைபுரியும் அம்பினை மழைபோலச் சொரிந்து அருள்வள்ளலாகும் முருகப்பிரானையும் தேரையும் இவ்வுலகையும் அம்பினால் மறைத்திடுதலும் அதுவேளை எமது முருகப்பிரான் அதனை நோக்கியருளி நன்றாக இருக்கின்றது இவனது வில்வன்மையின் வித்தை எனச் சிந்தித்து கொடிய அம்புகளை பெருமளவு தாமும் விடுத்து அவனது அம்புகள் யாவையும் அறுத்துக் குறைத்தார். 257

குறைத்த காலையில் சினவியே பின்னருங் கொடுநஞ்
சுறைத்த பொற்கணை பலதொட வாளிகள் ஓச்சி
அறுத்து மற்றவை குமரவேள் அவுணர்கோன் தன்னை
மறைத்து விண்ணெறி மாற்றினன் பகழிமா மழையால்.

அவனது அம்புகளைக் குறைத்து நீக்கிய நேரத்தில் சூரபன்மன் மிகுகோபமடைந்து பின்னரும் கொடிய நஞ்சுகள் பூசிய பொன் ஒளிகொண்ட அம்பினை விடுத்திட; குமரப்பெருமான் அதுவேளை அம்புகள் பலவற்றைச் செலுத்தி சூரபன்மன் விடுத்த அம்புகளை அறுத்து பின்னரும் தொடர்ந்து அம்புகளை மழைபோன்று சொரிந்து அசுரர்தலைவனாகும் சூரனை மறைத்து வானமார்க்கங்களையும் மாற்றி எவரும் சென்றுவிடாதபடி அம்புகளாலே எங்கும் மறைத்தார். 258

ஆன பான்மையசேர் பகழியின் படலிகை அவுணன்
சோனை வாளியால் துணித்திடை வீட்டியே சுரர்தஞ்
சேனை காவலற் கண்டனன் வினைத்தளை சிந்தி
ஞான நாயகத் தாணுவைக் காணுதற் றவர்போல்.

இவ்வாறாக நிலையுடையமையால் எங்கும் செறிந்து மறைத்த அம்புக் கூட்டினை சூரபன்மன் சோனை மழைபோன்று அம்புசொரிந்து அறுத்து வெளியாக்கி தேவர்களுடைய சேனைகட்கு காவலனாகிய முருகப் பெருமானை காணப்பெற்றான். எதுபோலுமெனில் கொடிய வினைகளின் கட்டினை நீக்கி ஞானநாயகமான சிவபரஞ் சுடர் உயிர்குயிராக இருப்பதை காண்குறும் நல்ல தபோதனர்கள் போல; அவன் எங்கும் மறைத்த அம்புக் கூட்டை அறுத்து சோதியாகும் சிவகுமரனைக் காண்பது ஒத்திருந்தது. 259

கண்டு தீயவன் பத்துநா றாயிரங் கணைகள்
அண்ட நாயகன் குமரன்மேல் விடுத்தலும் அவற்றை
எண்ட ருஞ்சர மாரியால் விலக்கியீ ரேழு
புண்ட ருங்கணை உய்த்தனன் ஆங்கவன் புயமேல்.

இவ்வாறு எம்பிரானை தீயவனான சூரபன்மன் கண்டு பத்து இலக்கம் அம்புகளை மீண்டும் தேவாதிதேவன் குமரப்பெருமான்மேல் விடுத்தலும்; அதனையெலாம் எம்பிரான் அத்தொகைப்பட்ட அம்பினால் அறுத்து நீக்கி பின்னர் சூரபன்மனின் தோளுக்கு நேராகச்சென்றிட மிகுவேதனைதரும் கூர்மையான பதினான்கு அம்புகளைச் செலுத்தினார். 260

கயப்பொ ருப்பினை உரித்தமால் வரைதரு காளை
வயப்பொ ருப்பினை அடுகணை சூரனும் வலியோன்
புயப்பொ ருப்பினை எய்தியே துளைத்தில புரைதீர்
அயப்பொ ருப்பையுற் றடல்பெறு அழலவன் கதிர்போல்.

கயாசூரன் என்னும் மலைபோன்ற கொடியயானையை உரித்த கைலைமலை நாயகரான சிவபிரான் தந்தருளிய முருகக் கடவுள் விடுத்த எந்தவொரு இரும்புமலையையும் பொடியாக்கவல்ல அந்த பதினான்கு அம்புகளும் வலியோனான சூரபன்மனின் மலைபோன்ற தோளை அடைந்து துளைக்க முடியாது போய்விட்டது. எது போலெனில் இரும்புமலையை அடைந்து ஊடுருவிச் செல்லமுடியாத சூரிய தேவனின் கதிர்கள்போன்று நின்றன. 261

மாயை தன்மகன் வச்சிர யாக்கையின் வலியை
நாய கன்திரு மதலைகண் டழலெழ நகைத்துத்
தீய வன்பினும் விடுவதோர் சரமெலாஞ் சிந்தி
ஆயி ரங்கணை யால்அவன் சிலையினை அறுத்தான்.

மாயவளின் புத்திரனான சூரபன்மனின் வச்சிர உடம்பின் வலியை சிவபிரானின் திருக்குமாரர் கண்டு நெருப்பெழச் சிரித்து தீயவனான அவ்வசுரன் விடும் அம்பை யெல்லாம் அழித்து நீக்கி பின்னர் ஆயிரம் அம்பினை விடுத்து சூரபன்மன் கையில் பிடித்த வில்லினை அறுத்தெறிந்தார். 262

சிலையி னைத்துணித் திடுதலும் அவுணர்கோன் செயிர்த்து
மலையி னைத்தடிந் தவன்மிசை மலரயன் தந்த
இலைய யிற்படை ஒன்றினை எறிதலும் ஈரேழ்
கொலையு டைக்கணை தூண்டியே அன்னதைக் குறைத்தான்.

சூரமன்மனது வில்லினை துணித்து விடுதலும் அதுகண்டு அசுராதிபதியான சூரபன்மன் கோபித்து கிரவுஞ்சம் என்னும் மலையை அழித்தருளிய குமரப்பெரு மான்மீது முன்னாளில் பிரமதேவர் தனக்குக் கொடுத்த கூரியவேல் ஒன்றினை எடுத்து எறிதலும் அதுவேளை அதுகண்ட முருகப்பெருமான் பதினான்கெனும் கொலைபுரிய வல்ல அம்புகளைச் செலுத்தி அந்த வேற்படையை அழித்துவிட்டார். 263

ஏறு சேவகத் தவுணர்கோன் அயிற்படை இறலும்
வேறோர் கார்முகம் வாங்கினன் சரமழை வீசி
மாறு மாறவன் தொடுந்தொடுங் கணையெலாம் மாற்றி
ஆறு மாமுகன் புயத்திலேழ் வாளிதொட் டார்த்தான்.

உலகம் அச்சத்துடன் பணிபுரிந்து பாராட்டி வாழ்த்தெடுக்கும் சூரபன்மன் தனது வேல் படையாயது அழிவுறக்கண்டு முன்னர் முறிந்தவில்லை நீக்கி வேறொரு வில்லை எடுத்து வளைத்து அம்புகளை மழைபோலச் சொரிந்து ஆறுமுகப்பெருமான் தன்மீது மாறிமாறி விடுகின்ற அம்பினை எல்லாம் அறுத்து அவர் திருத்தோளில் இலக்காக சென்று பட்டிட ஏழு அம்புகளைச் செலுத்தி சாமர்த்தியத்துடன் ஆரவா ரித்தான். 264

செங்க திர்ப்பகை தன்னைமுன் உதவினன் செலுத்தும்
வெங்க ணைத்தொகை பரஞ்சுடர் உருவமாம் விமலன்
துங்க மிக்கதோள் புக்குநுண் தூளிய தாகிப்
பொங்க னற்றிரள் பட்டதோர் பூளைபோன் றனவால்.

சிவந்த கதிரையுடைய சூரியன் பகைவனான பானுகோபன் என்னும் மைந்தனை முன்னர் பெற்றெடுத்த தந்தையான சூரபன்மன் செலுத்திய கொடிய அம்புகளெல் லாம் வந்து பரஞ்சுடருருவாய் நின்ற பகவன் முருகனது மேன்மைமிகுந்த தோள்கள் மேல்பட்டு புழுதிகளாகி பொடிந்துபோயின. எவ்வாறெனில் பொங்கிடும் பெரும் சுவாலையுடைய நெருப்பின்மீது சென்றுபட்ட பூளை ப்பாசுங்கிப் பொடிந்து போயிடும் தன்மையாயிற்று. 266

மொய்யி ருங்கணை பட்டுநீ றுதலும் முருகன்
வெய்ய சூர்வலி நன்றுநன் றுலென வெகுளா
ஐயி ரண்டுவான் பகழியால் அவன்சிலை அறுத்துச்
செய்ய தேரையும் ஆயிரங் கணையினால் சிதைத்தான்.

வலிமைமிக்க பெரிய அம்புகள் எமது பெருமான் தோள்மீது பட்டு பொடியாதலும் அது கண்டருளிய முருகப்பெருமான் கொடிய இச் சூரபன்மன் வலிமை நல்லாயிருக்கின்றது என்று வெகுண்டு வலியால் மிகஉயர்வுகொண்ட பத்து அம்புகளை விடுத்து சூரனுடைய வில்லை அறுத்தெறிந்து ஆயிரம் அம்பினைப் பின்னர் தொடுத்து விடுத்து சூரபன்மனது தேரையும் அழித்தார். 226

ஆழி பூண்டிடும் இரதமும் அங்கையிற் சிலையும்
பூழி ஆதலும் அரசனுக் கேமமாய்ப் போந்த
ஏழி ரண்டுநூ றுயிரந் தேரையும் இமைப்பின்
ஊழி நாயகன் தன்சர மழையினால் ஒழித்தான்.

சக்கரவடிவான பெரிய சில்லுகள் பூண்டதேரும் சூரபன்மனது அழகிய கையிற் கொண்ட வில்லும் எம்பிரானுடைய அம்பினால் பொடியாகிப் போதலும் பின்னரும் தொடர்ந்து எம்பிரான் மழைபோன்று அம்பினைச் செலுத்தி அரசனான சூரபன்மனுக்கு போரில் துணைத்தேர் எனும்படி அமைந்து வந்த பதினான்கு இலக்கம் தொகையுடைய தேரையும் அழித்து ஒழித்தார். 267

சேம மாகியே நின்றிடு தேரெலாஞ் செவ்வேள்
காமர் வாளியால் சிதைத்தலும் அன்னது கண்டான்
தூம வெங்கனல் தூண்டிய விழியுடைச் சூரன்
ஏம மாகியே கொண்டிடு சூலமொன் றெறிந்தான்.

தனது துணையாக வந்த பதினான்கு இலக்கம் தேரையும் முருகப் பெருமான் அழகிய அம்பினால் சிதைவுபடுத்துதலும் அச்செயலைக்கண்டு கோபமிகுதியால் புகையும் நெருப்பும் சொரியும் கண்ணுடைய சூரன், தனக்கு வாலயமானதொரு பெரிய சூலப்படையை எடுத்து எம்பிரான்மேல் எறிந்தான். 268

நண்ண லன்விடு முத்தலைப் படையைநாற் கணையால்
பண்ண வன்திரு மாமகன் இருதுணி படுத்துத்
துண்ணெ னக்கணை ஏழினால் அவன்குடை துணியா
அண்ண லஞ்சுடர் முடியையோர் கணையினால் அறுத்தான்.

பகைவனான சூரபன்மன் விடுத்த முச்சுடருடைய சூலப்படைவருதலும் அதனை சிவபிரான் திருக்குமாரன் நான்கு அம்புகளை விடுத்து அச்சூலத்தை இருதுணியாக்கி உடன் சடுதியாக ஏழு அம்பினைவிடுத்து சூரபன்மன் குடையைத் துணித்து ஒரு அம்பினைச் செலுத்தி சூரபன்மனது மேலான ஒளிவீசிடும் சுடர் முடியினை அந்த அம்பினால் அறுத்தார். 269

மணிப டுத்திய மவுலியை அறுத்தபின் வலியோன்
பணிப டுத்தமெய் எங்கணும் பகழிகள் போக்கி
அணிப டுத்தியே புனைதரு மதாணிகள் அனைத்தும்
துணிப டுத்தனன் மறைகளுந் துணிந்திடற் கரியோன்.

முற்றிலுமே நவ இரத்தினங்களால் செய்யப்பட்ட முடியை அறுத்தபின் வலியுடைய சூரபன்மன் நிறைவாக நகைகள் அணிந்திட்ட மேனிமுழுவதும் அம்புகளைச் செலுத்தி வரிசை வரிசையாக அணிந்திருக்கின்ற அவனது மேனியிலுள்ள மதாணிகள் ஆபரணங்கள் அனைத்தும் துணியாக்கி அறுத்தெறிந்தார். யாரெனில் வேதங்களும் இன்னதன்மையன்தான் எனத் துணிந்தறிந்திடுதற்கு அரியதாய கடவுள் முருகன். 270

ஆன காலையில் சூரபன் மாவெனும் அரசன்
மான வன்மையில் குறைந்தது நோக்கிமா டுள்ள
சேனை காவலர் நாற்படை தன்னொடுஞ் சேர்ந்து
சோனை யாப்படை வழங்கியே குமரனைச் சூழ்ந்தார்.

அவ்வாருக சூரபன்மன் என்னும் அசுரன் தேர்கள் அழிந்து, வில்முறிந்து, இரத்தினமுடி அழிந்து உடம்பில் அணிந்த வைர இரத்தின ஆபரணங்கள் ஒன்றும் இன்றி அழிந்து போதலால் மானம்கொண்டு வீரமுடன் போரிட முனையும் வலியும் அழிந்து குறைந்ததை அவனைச் சூழ்கின்ற அசுரசேனைத் தலைவர்கள் நோக்கி உடனுக நால் வகைப்பட்ட சேனைகளுடனும் திரண்டு சோனுவாரியாக படைகளை வீசி ஆதியான எமது குமரப் பெருமானைச் சூழ்ந்துகொண்டார். 271

ஏழு நேமியும் எறிந்துமே ருவைவளைந் தென்னக்
கேழில் பல்படை வீசியே ஆர்த்துடன் கிளர்ந்து
சூழும் வெய்யவர் தானையை கண்டனன் தொன்னுள்
பூழி யாகவே அவுணரூர் அட்டவன் புதல்வன்.

பாற்கடல் முதலாக உள்ள ஏழு சமுத்திரங்களும் திரைமோதி பெருகிவந்து மேருமலையைச் சூழ்ந்தது என்னும்படி ஒப்பிலாத பலபடைகளை வீசி ஆர்த்துடன் எழுந்து வந்து தன்னை வளைத்து சூழ்கின்ற கொடிய அசுரர்சேனையைக்கண்டு கொண்டார் யாரெனில் முன்னுளில் முப்புரத்து அசுரர் ஊர் அனைத்தும் சாம்பராகவே அழித்தொழித்த சிவபிரான் திருக்குமாரன். 272

குருதி வேற்படை கொண்டவன் தன்புடைக் குழுமிப்
பொருதி றற்பெருந் தானையைப் பொள்ளென அடுவான்
கருதி யாங்கொரு கரத்தினில் இருந்திடு கடவுட்
பரிதி யம்படை தொட்டனன் இரவியிற் படர.

இரத்தம் தோய்ந்த வேற்படையை திருக்கரத்தில் கொண்டருளிய முருகப்பெருமான் தனது பக்கராகக் குழுமிநின்று போர்புரியும் வலிகொண்ட சேனையை உடனுகவே கொன்றுமுடிக்க திருவுளம்கொண்டு அங்கு தமது ஒரு கரத்தினில் இருந்திடும் தெய்வீகமான சக்கரப்படையை அசுரச்சேனைமீது சென்றிடும்படியாக ஒளிமிகுந்த சூரியன்போல் பிரகாசமுடன் செல்லுமாறு விடுத்தார். 273

இலகும் வெய்யவன் நடுவுநாள் யாமத்தின் ஏகி
அலகில் பேரிருள் அட்டென ஆழிபோய் அவுணர்
தலையும் ஆகமுங் கைகளும் அடிகளுந் தடந்தோள்
மலையும் வீசிய படைகளுந் துணித்தது மன்னே.

அந்த சக்கரப்படை புறப்பட்டு; இலங்கிடும் ஒளியுடைய சூரிய பகவான் நாளின் நடு இராத்திரியில் தோன்றி அளவு காண்பரிய பேர்இருள் முழுவதையும் அழித்து நீக்கிடும் இயல்புபோல் சென்று; அசுரனுடைய தலையும் உடலும் கைகளும் கால்களும் விசாலமுடைய மலைபோன்ற தோளும் வீசிஎறிந்திட்ட படையும் எல்லாவற்றையும் துணித்து வீழ்த்தியது. 274

மேனி லாவிய தேர்களைத் துணித்திடும் வெங்கண்
மான யானைக ளியாவையும் துணித்திடும் வயமாத்
தானை யாவையும் துணித்திடுஞ் சமரினைத் தாங்குஞ்
சேனை காவலர் யாரையும் துணித்திடுந் திகிரி.

எம்பிரானுடைய சக்கரப்படை; மேலோங்கி ஓடி நிற்கும் தேர்களை துணித்திடும்; கொடிய மதயானைகள் யாவற்றையும் துணிக்கும்; வீரமுடைய பெரும் குதிரைப்படை யாவயையும வெட்டும்; போரினை புரிந்திட சேனையை வழிநடத்தி வந்துள்ள அசுர சேனுதிபதிகள் யாவரையும் வெட்டி வீழ்த்திடும். 275

அரந்து ணித்தவாள் அவுணர்கள் அடுசமர் உன்னின்
உரந்து ணித்திடும் இகழின்நாத் துணித்திடும் உரப்பில்
சிரந்து ணித்திடும் படைதொடு முயற்சிகள் செய்யிற்
கரந்து ணித்திடும் எதிர்ந்திடில் துணித்திடுங் கழல்கள்.

அரத்தினால் இராவிக் கூர்மைபடுத்திய வாள் ஏந்திய அசுரர் கொலைபுரியும் போரினை நினைந்தால் நினைந்த அவர்நெஞ்சை அறுக்கும்; எம்பிரானை இகழ்ந்தால் இகழ்ந்த அசுரரின் நாக்கை அறுக்கும்; உரக்கக்கத்தினால் கத்திய நாவுடைய தலையை வெட்டும்; படைதொட்டு வீசிடும் முயற்சிகளைச் செய்தால் அந்த அசுரனுடைய கைகளை வெட்டும்; எதிர்ந்தோடி வந்தால் காலினைவெட்டும். 276

குடைது ணித்திடும் கவரிகள் துணித்திடும் கொடியின்
தொடைது ணித்திடும் தேர்நிரை பூண்டமான் தொகையின்
இடைது ணித்திடும் அவுணர்தங் கரங்களின் இருந்த
படைது ணித்திடும் துணித்திடும் பல்லியத் தொகையும்.

குடைகளைத் துணித்து வீழ்த்தும்; வெண்சாமரைகளை அறுத்தெறியும்; வரிசையான கொடிகளை அறுத்தெறியும்; தேர்களில் நிரையாகப் பூட்டிய குதிரைகளின் உடம்பை நடுவில் நறுக்கி வீழ்த்தும்; அசுரர்கைகளில் இருந்தபடையைத் துணித்திடும்; போரில் பாவித்த வாத்தியங்களின் தொகை முழுவதையும் அறுத்தெறியும். 277

கொற்ற மிக்கதோர் கோல்கொடு வலியுடைக் குலாலன்
சுற்றி விட்டிடு திகிரியின் விரைவொடு சுழன்று
பற்ற லார்பெருந் தானையைப் பலறுணி படுத்தி
ஒற்றை நேமியம் பெரும்படை திரிந்ததால் உலவி.

மேன்மை மிகுந்துள்ளதொரு கோலினைக் கைக்கொண்டு வலியுடைய குயவன் சுழற்சி விடுகின்ற மண் பாத்திரம் வளைந்திடுதற்குதவிடும் சக்கரம் போலுற விசை கொண்டு எம்பிரானது சக்கரம் சுழன்றுசென்று பகை அசுரனின் பெரிய சேனைமுழுவதையும் பல்வேறு துண்டங்களாக வெட்டி எறிந்து தன்னந்தனியான அழகிய பெரும் சக்கரப்படை சுழன்று உலாவித்திரிந்தது. 278

போர ழிந்திடும் அவுணர்தம் உடற்குறை புகையா
சோரி வன்னியா அதனிடைத் துணிந்துவீழ் பரியும்
தேரும் யானையும் அவிகளா எம்பிரான் திகிரி
வீர மாமகம் ஒன்றியற் றுவதென விளங்கும்.

போரிடவந்த அசுரரைத் துணித்தெறிந்த உடற்குறைகள் கருமையாக விளங்கலால் அது புகைபோலாகவும்; வெட்டுண்ட உடல்களினின்றும் பெருகிடும் இரத்தம் சிவந்து விளங்களால் அது நெருப்பாகவும்; அந்த இரத்த வெள்ளத்தில் துணிபட்டுப் பட்டு வீழ்கின்ற யானை, குதிரையும், தேரும் யாக நெருப்பில் சொரியும் அவிகளாகவும் அமையும் காட்சிபெற நிலவலால் எம்பிரானுடைய சக்கரப்படை அவ்விடத்து பெரியதோர் வீரயாகம் இயற்றிடுதல் போன்று அதன் செயல் விளங்கிடுகின்றது. 279

வெஞ்ச மர்த்தொழில் புரிதரும் அவுணரை வீட்டி
வஞ்ச கத்தொடு மாயமாம் பேரிருண் மாற்றி
எஞ்ச லூற்றிடுங் குருதியம் பெருநிறம் எய்திச்
செஞ்சு டர்க்கதி ராயதால் அறுமுகன் திகிரி.

கொடிய போர்த்தொழிலைப் புரிந்திடும் அசுரரைத் துணித்து; அவருடன் கூடிய வஞ்சனைகளுடன் மாயமாகும் பெரிய இருளையும் ஒழித்து மாறச்செய்து பின்னர் பெருகியோடுகின்ற இரத்தத்தில் தோய்ந்து இரத்தவடிவாகும் சிவந்த திருவுருவுடையதாய் எம்பிரானுடைய சக்கரப்படை விளங்கி நிற்றலால் அப்போர்க்களத்து ஓர் சிவந்த சுடரொளியுடைய சூரியன் போன்று விளங்கி நின்றது ஆறுமுகப்பிரான் செலுத்திவிட்ட இந்த சக்கரப்படை. 280

நச்சு தன்னிடத் தமலையை இருத்திய நம்பன்
இச்சு தன்தனி ஆழிசென் றுடுறும் இயல்பை
அச்சு தன்கரத் தேந்திய நேமிகண் டதனை
மெச்சு தன்மையிற் புகழ்ந்தது விம்மித மேவி.

தன்னையே விரும்புகின்ற அருளின் முதல்வியான உமையம்மையாரை தமது இடப் பாகத்திருத்திய சிவபிரான் தந்தருளிய இந்த சிவகுமாரனின் தனியான சக்கரப்படைசென்று அசுரரை அறுத்தெறிந்து ஆடுகின்ற வீர இயல்பை நாராயணக் கடவுள் கையில் ஏந்திய சக்கரப்படை கண்டு மெச்சிடும் தன்மையால் புகழ்ந்து விம் மிதப்பட்டு நின்றது. 281

தீர்த்தன் உய்த்திடு நேமியம் பெரும்படை செருவில்
ஆர்த்த தானைநூ றுயிர வெள்ளமு மடைய
மூர்த்தம் ஒன்றினில் துணித்தது மூவிரு முகத்தோன்
வார்த்தை யால்அவை முழுவது மாற்றிய வாபோல்.

அருள் நோக்கால் தீர்த்தநீர் ஆட்டுகின்ற ஆறுமுகப்பிரான் செலுத்தியிடும் சக்கரமாகிய பெரும்படையானது போர்க்கென ஆர்ப்பரித்து எழுந்து எம்பிரானைச் சூழ்ந்த நூறுயிர வெள்ளம் அசுரச்சேனை முழுவதையும் ஒன்றும் தப்பவிடாது ஒரு மூர்த்த காலத்தில் துணித்தெறிந்தது. எதுபோலும் இது இருந்ததெனில் ஆறுமுக முடைய பகவானின் வார்த்தை ஒன்றால் அச்சேனை முழுவதும் அழித்திட்டவாறு போன்று. 282

ஆடல் உற்றவேற் பண்ணவன் அலர்கதிர்ப் பரிதி
பாடு சுற்றிய அவுணர்கோன் தானையைப் படுத்து
மோடு பெற்றதொல் புகழொடு மீண்டது முளிபுற்
காடு முற்றவுந் தனிபடர்ந் துண்டதோர் கனல்போல்.

அதர்மத்தை அறுத்து அருளை விளக்கும்படி ஆடல் உற்றவேற்படையை உடைய கடவுள் செலுத்திய ஒளி வீசும் கிரணங்கள்கொண்ட சக்கரப்படை; எம்பிரானை பக்கராகச் சுற்றிய சூரபன்மனது இலக்கம் வெள்ளம் சேனையையும் அறுத்து; நிணம் உண்ணும் பேய்களும் காளிகளும் சக்கரப்படையை புகழ்ந்திடும் மிக்க உயர் வாகும்புகழுடன் எம்பிரான்பால் மீண்டுகொண்டது. எதுபோல் எனில் வற்றலாய் போன முள்ளுக் காடுமுழுவதையும் தனியாக நெருப்புச் சென்று பற்றி எரித்து உண்டுவரும் தன்மையை ஒத்து; சக்கரப்படை விளங்கியது. 284

கைம்ம லிந்திடு குடைபல காம்பிடை துணிந்து
மெய்ம்ம லிந்திடு விழுநிணச் சேற்றிடை வீழ்ந்து
பொம்மல் கொண்டுநிற் புறுவன பூவலர் தடத்திற்
செம்மல் கொண்டமர் தாமரைக் காடுபோல் திகழும்.

அசுரரது கைகளில் சிறந்து விளங்கிய பல குடைகள் பிடி அறுந்து; உடல் வெட்டுண்ட அசுரரின் நிணச்சேற்றினிடத்தாக விழுந்து தலைகீழாக கவிழ்ந்து கிடப் பன; பூக்கள் மலர்ந்திட்ட ஓர் குளத்தில் செந்தாமரைப்பூக்கள் செப்பமுடன் நெருங்கி மலர்ந்திருப்பனபோன்று அக்குடைகள் திகழ்கின்றன. 284

அழுங்கல் கொண்டதோர் கரிபரி அவுணர்பேர் அனிகம்
வழங்கல் இன்றிவீழ்ந் தவிந்திடு களேவரம் மலிதல்
தழங்கு தெண்டிரை உலகுள சயிலங்கள் அனைத்தும்
ஒழுங்க தாகிவந்த தாயிடைத் தொக்கவா றொப்ப.

இரைச்சல்கொண்டு செல்லும் தேர்கள் யானைகள் குதிரைகள் அசுரராகும் சேனை கள் யாவும் நிலைபெறாதுவெட்டுண்டு கீழ்வீழ்ந்து குவியல் குவியலாகக் கிடப்ப இப் போர்க்களம் காட்சிபெறல்; விளங்கிடும் தெள்ளிய திரைக்கடல் சூழ்ந்த உலகெங்கு முள்ள மலைகள் அவ்விடத்து ஒழுங்குடன் கூட்டாக வந்து நிலைபெற்றதைப்போன்று ஒத்திருந்தது. 285

அகல்வி சும்புகா றேங்கிய களேவரம் அதன்பால்
ஞெகிழி கொண்டவாய்ப் பேயின நிணனுண்டு சிரித்து
மிகவும் ஆர்ப்பெடுத் தீண்டுவ மின்னியே இடித்து
முகிலி ருங்கணம் முதுவரைச் சாரல்மொய்த் ததுபோல்.

பிணக்குவியலால் அகன்ற ஆகாயம் வரையும் வளர்த்தோங்கிய போர்க்கள மதனிடத்து நெருப்புக்கொண்ட வாயினை உடைய பேய்கள் பிணங்களின் நிணத்தைத் தின்று மகிழ்வால் சிரித்து மிகவும் ஆர்ப்பெடுத்துக்கொண்டு நெருங்கி வளைந்து பிணக் குவியல்மேல் சூழ்ந்து தங்கியிருப்பது; கரிய முகில் கூட்டங்கள் மின்னி இடித்துக் கொண்டு முதிய மலைச்சாரல்களை மொய்த்தது போன்றிருந்தது. 286

மையல் யானையும் அவுணர்த மியாக்கையும் மற்றும்
ஒய்யெ னக்கொடு குருதியம் பேரியா றெழுகல்
செய்ய தோர்பணி கருங்கடல் மறைத்தல்சிந் தித்து
வெய்ய நஞ்சுமிழ்ந் திருநிலம் படர்தல்போல் விளங்கும்.

மதவெறிபிடித்த யானையையும் அசுரருடைய அறுபட்ட உடலையும் அங்குள்ள குதிரை முரிந்த தேர் இவற்றையும் சேரவாரிக்கொண்டு இரத்தமாகும் பெரிய ஆறு ஓடுதல், சிவந்ததொரு பெரிய பாம்பு கருநிறங்கொண்ட கடலை மறைப்பதை நினைந்து கொடிய கறுத்த நஞ்சையும் கக்கிக் கொண்டு இப்பூமியில் வளைந்தோடுவது போன்று விளங்கியது. 287

மாணி லைப்படு பேய்சில களேவர வரைபோய்ச்
சோணி தப்புனல் ஆறுபாய்ந் திடஅதன் துவலை
சேணி லத்துளார் அரிவையர் புனைகலை தெறிப்ப
நாணல் உற்றனர் பூப்பென நகைப்பரென் றுன்னி.

நிணனுண்டு மாண்படைந்த சில பேய்கள் மலைபோன்றுயர்ந்த பிணக்குவியலின் உச்சியின் மீது ஏறிப்போய் அங்கு நின்றும் இரத்தாற்றில் பாய்ந்து குதித்திடுதலும் இரத்த நீர்த்துளிகள் தெறித்துச் சிதறுண்டு எழுந்து வான உலகில் வாழும் பெண்கள் உடுத்திய சேலைகளில் பட்டிட அப்பெண்கள் அது கண்டு வெட்கப்பட்டார்கள். ஏனெனில் ஐயோ எங்களைக் கண்பார்கள் யாரும் வீட்டுக்குவிலக்காகிய நிலை கொண்டாரோ இந்த தேவப் பெண்களும் என எண்ணிச் சிரிக்கப்போகின்றுரே என நினைந்தபடியால் தேவப்பெண்கள் பூப்படைவதில்லைப் போலும். 288

சொல்ல ருந்திறல் அவுணரில் சிலர்தலை துணிந்து
வல்லை யிற்கிளர்ந் தார்த்தலும் வலியினுல் தம்மை
அல்லல் செய்திடு கோளிரண் டல்லதை அவைபோல்
எல்லை யில்லவை வந்தஎன் றிரியுமால் இரவி.

சொல்லமுடியாத திறமைசாலிமளாகும் அசுரரில் சிலர்தலை வெட்டுண்டவுடன் தலையும் உடலும் வேறுக எழுந்து ஆர்த்துக் கத்தலும் சூரியன் அது கண்டு ஓகோ வலியால் எம்மை முன்கூடி அல்லற் படுத்தின இராகு கேது என இரண்டும்தான் என்றிருந்தோம். ஆனுல் இங்கு அந்த இராகுகேது போல் கணக்கற்றன வந்தனவே என பயத்தால் ஓட்டமெடுத்தான். 289

நீடி விண்படர் கொடிசில நிமிர்கவந் தத்தின்
காடு தன்னிடைப் புகுந்துதந் தலைமிசைக் காட்டி
ஆடல் யானையின் களேவரங் குத்துவ அடுபோ
ரூடு காக்கையின் முகரும்வந் தார்கொலென் றுரைப்ப.

நீண்ட வானத்தில் பறந்திடும் காகங்கள் சில தலைவெட்டுண்டாலும் நிமிர்ந்து நிற்கும் கணக்கற்ற அசுரது உடலின் கழுத்தில் வந்திருந்து; காகங்கள் தங்கள் தலையை மேலே காட்டி பக்கராக வீழ்ந்து கிடந்த போர்யானையின் மீது கொத்துதல் எப்படி இருப்பதென்றால் கொலைநிரம்பிய போரிடத்து காக்கை முகமுடையாரும் (காக்கை மூகரும்) வந்தாரோ எனச் சொல்லும்படி இருந்தது. 290

நீட லுற்றசீர் அவுணர்கோன் ஆணையால் நிலமேல்
வீட லுற்றிடு வயவர்க்குத் தம்முயிர் மீட்டுங்
கூட லுற்றிடு திறனெனக் கூளிகை கொட்ட
ஆட லுற்றிடும் உடற்குறை அநந்தகோ டியவால்.

சீர் நிரம்பி பெருகிடுகின்ற சூரபன்மனது ஆணையால் இந்த நிலமேல் வீழ்ந்திறந்த வீர அசுரர்க்கு இறந்த உயிர் வந்துமீண்டும் கூடிக்கொண்டது எனச்சொல்லும்படி பேய்கள் கைத்தாளம்போட அதற்கு இசைவாக ஆடிநின்ற உடற்குறைகளோ அநந்தகோடியாகும். 292

இனைய வெல்லையில் எம்பிரான் எரிகதிர்ப் பரிதி
முனையில் வந்தடல் செய்ததை உணர்ந்திலன் முன்சூழ்
கனையி ருங்கடற் படையெலாம் பட்டவா கண்டு
மனம ருண்டொரு தமியனாய் நின்றனன் வலியோன்.

இவ்வாறுகிய நேரத்தில் எம்பிரானுடை பிரகாசிக்கின்ற கதிர்களுடைய சக்கரம் போர்முனையில் சூழ்ந்துநின்ற இலக்கம் வெள்ளம் அசுரரையும் வந்து அழிவுசெய்ததை உணர்ந்திலாதவனாய்; தன் முன்னாக நின்ற அசுரர் எல்லாம் இறந்தமைகண்டு மனம்மயங்கி இது எப்படி நடந்ததுஎன தன்னந்தனியாய் ஆச்சரியமுடன் நின்றான் சூரபன்மன். 292

நீண்ட தன்னொரு வேற்படை உய்த்துநீக் கினனோ
பாண்ட ரங்கம தியற்றுவான் படையின்வீட் டினனோ
மாண்டு போகவென் றொருமொழி தன்னின்மாற் றினனோ
ஈண்டு தானைய முடித்ததெவ் வாறிவ னென்றான்.

இவ்வாறாக எமது சேனையாவும் உடன் அழிந்து போய்விடுமாறு நீண்ட தனதொரு வேற்படையை முருகக்கடவுள் செலுத்தி நீக்கினனோ அல்லது பாண்டரங்கம் என்னும் கூத்தினை இயற்றிடும் சிவபிரானது சிவப்படைக் கலத்தை விடுத்து அழித்து மாற்றினனோ; அல்லது முருகன் எமது சேனையாவும் மாண்டு போகட்டும் என்றொருவார்த்தையசுல் மாற்றினனோ? இங்குள்ள பெருக்கமுடன் நிலைபெற்றிருந்த சேனை பின் எவ்வாறு அழிந்திருக்கமுடியும் எனக் கூறினன் சூரபன்மன். 293

தேரி ழந்தனன் சிலையதும் இழந்தனன் திறல்சேர்
பேரி ழந்தனன் தானைகள் இழந்தனன் பெரும்பூண்
ஏரி ழந்தனன் மவுலியுங் கவிகையும் இழந்தான்
பாரி ழந்திடு மன்னர்போல் நின்றனன் படிமேல்.

சூரபன்மன் தேரினை இழந்தான்; வில்லும் முறிந்துபோதலால் இழந்தான்; எல்லா அண்டங்களையும் வெற்றியுற்று நின்ற சூராதிசூரன் எனும் பெயரும் இழந்தான். சேனைகள் முழுவதையும் இழந்தான்; மேனிநிறைய அணிந்திருந்த ஆபரணங்களின் சீரை அழகை இழந்தான்; முடியும் இழந்தான; குடையும் இழந்தான். இவையாவும் இழந்ததினால் தான் அரசாண்ட பூமியை இன்னொருவனிடம் பறிகொடுத்ததோர் வறிய அரசன்போன்று திருவின்றி நின்றான் பூமிமீது. 294

நின்றி டுந்திறல் அவுணர்கோன் நெடுஞ்சினம் நெஞ்சில்
துன்ற மார்பகம் வியர்த்திட முடித்தலை துளக்கி
நன்று நன்றொரு பாலகன் வலியென நகையா
வென்றி நான்முகன் படைக்கலம் எடுத்துமேல் விடுத்தான்.

நின்றிடுகின்ற மிக்கதிறல் உடைய சூரபன்மன் நெஞ்சிலே பெருத்தகோபம் பெருகிநிறைய மானத்தால் மார்பும் உடலும் வெயர்வைகொள்ள; அப்படியாய் விட்டதா என்று முடியில்லாத வெறும்தலையை ஆட்டி நன்று நன்று ஒரு குழந்தையின் வலியென்று சிரித்து; சரிபோகட்டும் என்று வெற்றியுடன் சிறப்பளித்திடும் பிரமாஸ்திரத்தை எடுத்து முருகப் பிரான்மேல் விடுத்தான். 295

### வேறு

சூர்ப்புயல் அன்னதோர் சூரன் விடுக்கும்
மாற்படு போதன் வயப்படை சென்று
பாற்படு மெல்லை பரஞ்சுடர் செங்கை
வேற்படை சென்று விழுங்கிய தன்றே.

கருமையாய் அச்சம்தரும் பெருமேகம் ஒத்த சூரபன்மன்விட்ட; மயக்கநிலை கொண்டுழலுகின்ற தாமரைக் கடவுளின் பிரமாஸ்திரமானது சென்று முருகப்பிரான் பால் கிட்டிடுமெல்லையில் பரஞ்சுடருருவாய் நின்ற ஆறுமுகப் பெருமானது சிவந்த திருக்கரத்திருந்த வேற்படை விறுக்கெனச் சென்று பிரமாஸ்த்திரத்தைக் கவ்வி விழுங்கியது. 296

விழுங்குதல் கண்டனன் வெய்யவன் நெஞ்சம்
அழுங்குதல் செய்தனன் அச்சுத மூர்த்தி
வழங்கிய தொல்லை வயப்படை ஏந்தி
முழங்கழல் என்ன முனிந்துடன் விட்டான்.

வேற்படை விழுங்கியதைக் கொடிய சூரபன்மன் கண்டான். நெஞ்சம் துயர் கொண்டு வருந்தினான். பின்னர் முன்னாள் தனக்கு நாராயணக் கடவுள் கொடுத்திடப் பெற்ற வெற்றி பொருந்திய நாராயணாஸ்த்திரத்தைக் கையில் எடுத்தான். முழங்கி மூண்டு எரிகின்ற நெருப்பினைப் போன்ற கோபத்துடன் அப்படையையும் எம்பிரான் மீது விட்டான். 297

விட்டிடு மாயவன் வெம்படை ஏகி
மட்டறு கண்ணர்தம் மாலுரு ஈன்று
கிட்டிய காலை கிளர்ந்திடும் ஒள்வேல்
அட்டது தன்னையும் ஆர்ந்தது மன்னோ.

சூரபன்மனால் விடப்பெற்ற நாராயணக் கடவுளின் பெரும்படை சென்று கொள்ளும்போதே கணக்கற்ற நாராயணர்களின் உருவினை உண்டாக்கி பெருக்கியவாறு முருகப்பிரானைச் சென்று அணுகுதலும் அதுகண்டு உடன் எழுந்த ஒளியுடைய வேல் அதன்மீது பாய்ந்து அப்படையை நறுக்கி தானே பின்னர் அப்படையை விழுங்கியது. :98

சயம்புவை செம்மல் தனுதருள் நீரால்
அயன்படை தன்னுடன் அம்புவி கேள்வன்
வியன்படை தன்னையும் வேற்படை உண்ணக்
கயம்படு சூரது கண்டுவிம் முற்றான்.

வெற்றியினை பெற்றுள்ள முதல்வராகும் முருகப்பெருமான் திருவருளின் நீர்மையால் பிரமதேவரின் பிரமாஸ்த்திரத்துடன் பூமிதேவியின் நாயகரான நாராயணக் கடவுளின் நாராயணாஸ்த்திரம் எனும் உக்கிரமான படையையும் வேற்படை உண்டிடுதலும்; வஞ்சனையால் நிரம்பிய சூரபன்மன் அதனைக்கண்டு இப்படியோ என விம்மி அழுதிட்டான். 299

கறுத்திடு கின்றதொர் கந்தர வள்ளல்
விறற்படை தன்னை விடுத்திடின் யாரே
மறுத்திடு வாரஃ தென்று மனத்திற்
குறித்தனன் மாயை கொடுத்தருள் கோமான்.

மாயவள் பெற்றெடுத்த வனுகிய சூரபன்மன் தனது மனதிலே; கருமையுற்றதாய் விளங்கிடும் திருக்கழுத்தினை உடைய சிவபெருமானது சிவப்படையாகும் மிகவும் மேலான வலிமையுடைய படையை விடுத்தால் யார்தான் அதைத் தடுத்திடமுடியும் என எண்ணினன். உலகில் மாயைதான் தீங்கு யாவற்றிற்கும் காலாவதாகையால் மாயை கொடுத்தருளிய சூரன் எனக் கூறினர். 300

முப்புரம் நீறெழ மூரல் விளைத்தோன்
மெய்ப்படை தன்னை விடுப்பது தேற்றி
அப்படை ஏந்தி அருச்சனை நீரால்
ஒப்பறு சீர்த்தியன் ஒய்யென உய்த்தான்.

முப்புரங்கள் நீருகும்படி புன்சிரிப்புக் கொண்டருளியவராகும் சிவபிரானது அழிவிலாத சிவப்படைக் கலத்தை விடுவதே மிகவும் உசிதமாகும் எனச் சிந்தையில் தெளிந்து அந்தப்படையையே கையில் எடுத்து அருச்சனை முதலியவற்றை மனதால் புரிந்து ஒப்பற்ற புகழுடைய சூரபன்பன் அப்படையை தாழ்வின்றி விடுத்தான். 301

அத்தகு வெம்படை ஆடல் இயற்றும்
முத்தலை வேற்படை மூர்த்திகள் கோலம்
எத்திசை தன்னிலும் ஈண்டுற ஆர்த்து
மெய்த்தழல் வீசி விரைந்தது மாதோ.

அவ்வாறு விடப்பட்ட கொடிய சிவப்படைக் கலம் புறப்பட்டு போர்புரிந்திடும் முச்சுடருடைய சூலப்படைகள் உடைய உருத்திரமூர்த்திகளின் கோலம் எத்திக்கிலும் பெருகி நெருங்கிட வடிவெடுத்துக்கொண்டு ஆர்ப்பரித்து பேரோசை கொண்டு அழிந்திடாத கொடிய நெருப்புச் சுவாலைகளை வீசி வேகமுடன் வந்தது. 302

ஆடியல் யானைக ளாயின எட்டும்
வீடிய வேயென வீழ்ந்தயர் வுற்ற
நீடிய நேமியின் நின்றிடு செந்தீ
ஓடிய சேடனும் உட்கி உலைந்தான்.

அதன் வரவின் உக்கிரமானவேகத்தால் திக்கிலே இருந்திடும் எட்டு யானைகளெல்லாம் தாங்கள் இறந்தோம் வாழமாட்டோம் எனவே வீழ்ந்து அயர்ந்தன. உலகை அழித்திடும்படி கடல் நீரில் கலந்திருந்த வடவை எனும் கொடிய நெருப்பும் அகன்றோடியது. உலகினைத் தாங்கிடும் ஆதிசேடனும் உட்கி உலைந்தான். 803

படித்தலம் நெக்கது பல்வகை மேகம்
இடித்தொகை சிந்தி இரிந்தன பானுத்
துடித்தது திங்கள் சுழன்றது மேரு
வெடித்த திடந்தொறும் விண்டதிவ் வண்டம்.

மேலும் அப்படைவரவால் இப்பூமியில் உள்ள வாழ்க்கைக்கு உகந்த நிலைகெட்டு உக்கியது; பலவகைப்பட்ட மேகங்களும் இடியேற்றுக்களை சிந்திவிட்டு குலைந்து ஓடின. சூரியதேவன் அச்சத்தால் துடித்தான். சந்திரன் சுழன்றது. மகாமேருமலை வெடித்தது. பல இடந்தோறும் உள்ள அண்டங்கள் உடைந்தன. 304

இலக்கர் நடுங்கினர் ஏனைய வீரர்
கலக்க மடைந்தனர் காண்டகு பூதர்
மலக்கம தெய்தினர் மற்றிது தன்னை
விலக்கரி தாலென ஓடினர் விண்ணோர்.

இலட்சம் வீரராய வீரவாகுதேவரின் தம்பியர் நடுங்கினார்கள். அவரின் மற்ற தனிவீரராகும் தம்பியர் எட்டுப் பேரும் கலக்க மடைந்தனர். இதனைக் கண்ட பூதங்கள் மனம் மயங்கினர். இப்படையை இனியாராலும் விலக்கமுடியாதே! என தேவர்கள் பயத்தால் திக்குகளில் ஓடினார்கள் 305

புடவி முதற்புவ னங்கள் அனைத்தும்
நொடிவரை செல்லுமுன் நொய்தென மாய
முடிவ தியற்றிடு மூர்த்திதன் நாமப்
படைவர அன்னது பார்த்தனன் வள்ளல்.

இப்பூமி முதல் பல புவனங்களனைத்தும் ஓர் நொடிப் பொழுது செல்லுமுன்பு பொடியாக்கிடுகின்ற சங்காரமூர்த்தியாகும் சிவபிரான் படை இவ்வணம் அனைத்தையும் மாய்ப்பேன் எனும் கோலத்துடன் வருதலும் அதனை அருள் வள்ளலாகும் முருகப்பெருமான் பார்த்தருளினார். 306

எந்தைதன் மாப்படை ஈதென ஐயன்
சிந்தை புரிந்தொரு செங்கையை நீட்டி
வந்திடும் அப்படை பற்றினன் மாதோ
தந்தவன் வாங்கிய தன்மைய தென்ன.

வருவது எமது தந்தையின் பெரும்படையாகும் என எண்ணியவராய் தமது அழகிய செங்கையை எமது ஐயன் நீட்டி முன்னாக வந்திட்ட அப்படையை பிடித்துக் கொண்டார். அம்மவோ கொடுத்த சிவமூர்த்தியே அதனை திரும்பவும் சூரனிடமிருந்து வாங்கிய தன்மை போன்று. 307

பெற்ற முயர்த்த பெருந்தகை நாமக்
கொற்ற நெடும்படை யைக்கும ரேசன்
பற்றியொர் பாணி பரித்தனன் நின்றான்
மற்றது கண்டனன் மாயவன் மைந்தன்.

இடபக் கொடியை உயர்த்திய மகாதேவராகும் சிவபெருமானின் நாமமுடைய மாட்சிமைமிகுந்த கொடிய பெரும் படையை குமாரதெய்வம் தமது கையினால் பிடித்து தமது பாங்கராகச் சேர்த்துக் கொண்டார். மற்று இந்த வரலாற்றை எலாம் சூரபன்மன் கண்டான்.

அநாதியாகும் மாயையே சங்கடங்கள் அனைத்திற்கும் காரணமாக அம்மாயையின் மிக்க வலியுடைய புத்திரனால் செலுத்திடக்கூடிய உக்கிரமான சிவப்படையும் பற்றிக் கொள்ளப்பட்டது. 308

**வேறு**

விட்ட விட்டதோர் படைக்கெலாம் வேறுவே றென்று
தொட்டி லான்அத னலது மாற்றுதல் துணியான்
கிட்டும் எல்லையில் அவையெலாங் கவர்ந்தனன் கேடில்
அட்ட மூர்த்திசேய் என்பது காட்டினன் அம்மா.

யான் விட்ட விட்ட ஒவ்வொரு படைகட்கு மாருக வேருெருபடையை இப் பாலன் விடவில்லேயே; அவ்வாறு விடுத்து எனது படைகளை அழித்திடவும் விரும்ப வில்லை. எனது படைகள் அவன்பால் சென்று சேர்கின்ற நேரத்தில் அப்படைகள் யாவையும் தன்னிடத்தே அடக்கிக்கொண்டான். இப்படி செய்தலால் தான் கேடில் லாத அட்டமூர்த்தியாகி; மண்ணுகி விண்ணுகி நீராகி நெருப்பாகி காற்ருகி சந்தி ரனுகி சூரியனுகி ஆண் பெண் அலி என்னும் ஆன்மாக்களாகிய சிவபரஞ்சுடரின் குழந்தை என்பதை எனக்குக் காட்டினுன். 309

என்னெ டேபொரற் கிவனலால் வேறிலே இனேயோன்
தன்னெ டேபொரற் கியானலா திலேயிது சரதம்
அன்ன பான்மையின் எனக்குநே ராம்இவன் அலது
பின்னே யாருளர் தமியனுக் குவமையாய்ப் பேச.

இவன் குழந்தைப்பாலன் என்று எண்ணமுடியாததோர் வீரன். ஆதலால் என்னேடு போரிட இவனல்லாது வேருெருவர் இவ்வுலகில் இணையாவர் இல்லை; இது உண்மை. அப்படியான பான்மையால் அழியா வரம்பெற்ற என்னுடன் நின்று போரிடுதற்கு நேரான வீரமுடையார் இந்த முருகன் ஒருவனே யன்றி வேறுயார் உளர் என்னுடன் ஒப்பாக முன்னின்று போரிடுதற்கு ஏற்ற வலியுடையார் என்று யான் சொல்லு தற்கு? வேருெருவர் இல்லை. 310

மான வேற்படை வன்மையும் விற்ருெழில் வலியும்
ஏனே யாயுள வன்மையுங் கண்டனன் இனிமேல்
பானல் வாய்மைந்தன் செய்வது பார்ப்பனென் றுன்னி
மோன மாகியே நின்றனன் அவுணர்கள் முதல்வன்.

இப்பாலனுடைய திருக்கரத்து மிளிர்ந்தவாறு இருக்கின்ற வேற்படையின் வலிமையையும் இவனுடைய வில் பிடித்து போரிடும் வலியானமையும் மற் றுள்ள அற்புதமான செயல்யாவும் கண்டேன். சரிநான் ஆயுதமில்லாது கெட்டு நின்றேன் என்ருலும் இந்த பால் மணம் மாருத குழந்தை வடிவாகும் இவன் இனி என்ன செய்யப் போகின்ருன் என்பதையும் பார்ப்பேன் என நினேந்து மௌனியா கியே பேச்சற்று செயலற்று நின்ருன் அசுரர்கட்கெல்லாம் தலைவன் சூரன்.

அவன்பால் ஈசன் கொண்ட அருளுடைமையைத் தான் என்னென்று நிகழ்த்துவது. பாலனேடேயோ போர் செய்வேன் வீராதி வீரனுன யான் என அகந்தையுற்றிருந்த அவனே; இல்லை இவன் பாலன் அல்ல எனக்கு உவமையான வீரன் என பேசவைத் தது மன்றி பின்னர் அவனேச் செயலற வைத்த திருவருளின் சூழ்ச்சியை யாது என யார் எவ்வணம் சொல்லலாம் அது முடியாததொன்றே. 311

பொருளின் நீர்மையால் புனேகலன் மாற்றலிற் புவிமேல்
இருளின் நீர்மையாய்த் தோன்றினேன் அற்புத மெய்தி
மருளின் நீர்மையால் நின்றது நோக்கியே வள்ளல்
அருளின் நீர்மையால் இனேயன மாற்றங்கள் அறைவான்.

பொருளின் இயல்பால் உலகத்தவர் கணித்து மதிக்கும்படி யாக அணியப் பெற்ற ஒளி கொண்ட இரத்தின ஆபரணங்கள் அறுந்து மாற்றப் பெற்றமையால் இப்பூமிமீது இருள்வடிவாய்த் தோன்றி நிற்கும் சூரபன்மன் முருகப்பிரானது போர்ச் செயலே நினேந்து அற்புத மெய்தி மயங்கிடும் நிலேயாக நின்ற தன்மையினே எம்பி ரான் பார்த்தருளி திருவருளின் திறத்தால் சூரபன்மனே நோக்கி இந்த இந்த வார்த்தைகளேப் பேசிடுகின்ருர். 312

இந்தி ரன்தனி மதலேயை இமையவர் தம்மை
அந்த மில்பகல் சிறையிடைப் படுத்தனே அதற்கா
முந்தொ ரொற்றனே விடுத்தனம் ஆங்கவன் மொழியுஞ்
சிந்தை கொண்டிலே விடுத்திலே அமரர்தஞ் சிறையும்.

இந்திரனுடைய தனி மைந்தன் சயந்தனை தேவர்கள் தங்களை எல்லையற்ற நாட்களாக சூரனே! நீ சிறைப்படுத்தி வைத்திருந்தாய். அதற்காக முன்பு நாம் ஒரு தூதுவனை உன்பால் விடுத்து சிறையை நீக்கும்படி சொன்னோம். அந்தத்தூதுவனின் வார்த்தையை நீ மனதில் உன்னிக் கொண்டாயல்ல அல்லது தேவர் சிறையை இவ் வளவு காலமாகியும் நீக்கினையல்ல. 313

அன்ன தன்மையால் ஈண்டியாம் வந்தனம் அமரில்
துன்னை நேரிலா திருந்திடு தாரகன் தன்னை
முன்னம் அட்டிடு முறையென நின்னையும் முனிவால்
இன்ன வைகலே அடுதுமென் றேகினம் மீண்டும்.

அவ்வாறான தன்மையால் இவ்விடத்து நாம் வந்தோம், போரில் தனக்கு நிகரிலாது இருந்திடுகின்ற தாரகாசூரனை முன்னர் கொன்றிட்ட முறைபோல உன்னையும் கோபத்தினால் இன்று பொழுதே அழித்திடுவேன் என் எண்ணி இவ் விடத்து வந்தேன், 314

ஈண்டு நின்புடை ஈண்டிய இலக்கம்வெள் ளத்து
நீண்ட தானையும் நின்சிலை வன்மையும் நின்னால்
தூண்டல் உற்றிடு தெய்வதப் படைகளுந் தொலைந்து
மாண்டு போயது கண்டனை வறியனாய் நின்றாய்.

இவ்விடத்து நின்பால் சூழ்ந்து நின்ற இலக்கமாகும் வெள்ளம் என்னும் எண்ணிக்கை உடைய பெரும் சேனையும் உனது வில் வன்மையும் உன்னால் செலுத்தப் பட்டுள்ள தெய்வப் படைகளும் தொலைவாகி இப்போதே அழிந்துபோயின. அதை நீ கண்டும் யாதொன்றும் செய்யமுடியாத நிலையில் வறியோனாக நின்றாய். 315

நெடிய தாரகற் செற்றவேல் இருந்தது நின்னை
அடுதல் இங்கொரு பொருளுமன் றரிதுமற் றன்றால்
படையி ழந்திடு நின்னுயிர் உண்டிடில் பழியாய்
முடியு மென்றுதாழ்க் கின்றனம் தருமத்தின் முறையால்.

நெடிய வடிவுடைய தாரகா சூரனைக் கொன்றிட்ட வேல் என்னிடம் இருந்தது. உன்னை இங்கு கொல்லுதல் எனக்கு ஒரு பொருளுமன்று. அல்லது ஓர் அரியதொரு காரியமு மன்று. ஆனால் படைகள் யாவும் இழந்திருக்கின்ற உன்னுடைய உயிரை உண்ணல் பழியாய் முடிந்திடும் என அதனைச் செய்யாது பொறுத்திருக்கின்றோம் தருமத்தின் பொருட்டாக என எண்ணுவாய். 316

பன்னு கின்றதென் பற்பல விண்ணுளோர் பலரும்
துன்னு தொல்சிறை விடுத்தியேல் உன்னுயிர் தொலையேம்
அன்ன தன்மையை மறுத்திடின் ஒல்லைநாம் அடுதும்
என்னை கொல்லுன தெண்ணங்கள் உரைத்தியால் என்றான்.

சூரனே பலவார்த்தைகளை உளக்கெடுத்துப் போதிப்பதில் ஆவது என்ன. தேவ உலகில் உள்ளோர் பலரும் அடைபட்டிருக்கும் மிக முந்தியசிறையை விடுத்தால் உனது உயிரைத் தொலைத்திட மாட்டோம். அந்த தன்மைசெய்யாது நீ மறுத்திட்டால் இப்பொழுதே உன்னைக் கொன்றிடுவேன். உன்னுடைய எண்ணங்கள் யாது. அதைச் சொல்லிடுவாயாக என்றார் குமரப் பெருமான். 317

வேறு வேறுநின் றுலகெலாம் அளிப்பது வெஃகி
ஆறு மாமுகம் பன்னிரு செங்கைகொண் டருள்வோன்
ஊறு சேர்அவு ணன்றனக் கினையன உரைப்ப
மாறொர் வாசகஞ் சொற்றிலன் உளத்திவை மதிப்பான்.

வேறு வேருகிய வேடமாகி எங்கும் தாமாகி நிறைந்து நின்று உலகுகள் அனைத்தையும் காத்தருளும் கருணையாம் விருப்பத்தின் விளைவாக ஆறுமுகமும் பன்னிரண்டு சிவந்த கைகளும் கொண்டருளி எல்லார்க்கும் தமது அருளினைக் கொடுத்தருளும் எங்கடவுள் குற்றமே பெரிதுடைய சூரபன்மனுக்கு இவைகளை எடுத்து ஓதிடுதலும் அதற்கு மாருக ஒரு வாசகமேனும் சூரபன்மன் சொல்லிடாதவனுய் தனது உள்ளத்து இவற்றை எண்ணுகின்ருன். 318

படையி ழந்தனன் இவனென உன்னியே பாலன்
இடைதெ ரிந்தனன் போலவே இமையவர் யாப்பை
விடுதி என்னவும் வல்லனு யினன்விளி வில்லேன்
அடலும் ஆற்றலுந் தெரிந்திலன் பிள்ளைமை யதனுல்.

படை ஒன்றும் இலாது இழந்து நிற்கின்ருன் சூரன்; ஆகவே இவனேடு எதையும் பேசலாம் என்று நினைத்து கொண்டே இந்தப் பாலன் இந்த ஒரு சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திப் போலும் என்னிடம் தேவர் சிறையை விடு என்று சொல்லவும் வலிமை உடையனுயின். இது இவனது குழந்தைப் புத்தியினுல் அழிவில்லாத எனதுபோர் ஊக்கமும் வலிமையும் தெரிந்திடவில்லை. 819

மன்ற லந்தொடை அறுமுகன் வரம்பிலா வைகல்
நின்று பேரமர் புரியநான் வறிதுநின் றிடினுங்
கொன்றி டுந்தொழில் வல்லனே தந்தைமுன் கொடுக்க
என்றும் மாய்ந்திடா ஒருவரம் பெற்றிடும் என்னை.

வாசம் கமழும் மலர் மாலை அணிந்த ஆறுமுகமுடைய முருகன் எல்லையிலாத நாட்கள் வரையும் நின்று பெரிய போரினைச் செய்திட யான் இங்கு படையாவும் இழந்து ஓர் வறியோன் போன்று நின்றிட்டாலும் இந்த ஆறுமுகன் என்னைக் கொன்றிடும் செயல் புரியவல்லனே? முடியாது இவரது தந்தையான சிவபிரான் கொடுத்தனுல் என்றும் மாய்ந்திடாத பெரியதோர் வரம் பெற்றுக்கொண்ட என்னை. 320

தொழுத குந்திரு மவுலியுங் கவிகையுந் துணிய
இழிவ தாகியே தமியன்நின் றமரியற் றிடினும்
அழிவ தில்லையால் ஆவது மிலைபுகழ் அதனுல்
பழிய தொன்றுறும் அங்கது பாதுகாத் திடுவேன்.

எல்லாரும தலைசாய்த்து வணங்கிடும் எனது முடியும் குடையும் துணிந்து போய் இழிந்த நிலையால் நான் இங்கு நின்று போர் இயற்றிலும் நான் அழிவதுமில்லை அல்லது எனக்கு ஏதேனும் புகழ் வருவதுமில்லை. அதனுல் இவன் படையாவும் இழந்து தோற்ருன் என்ற பழி வரும். அதை நான் பாதுகாக்க வேண்டும். 321

வேற்று நீர்த்தடங் கொள்வதை அன்றிவெள் ளங்கள்
ஊற்று நீர்ப்பெரும் புணரியைக் கொள்வதற் குறுமோ
ஏற்ற தானையைப் படைகளைத் தொலைப்பதே அன்றி
மாற்று மோவென தழிவுரு வரத்தையும் மைந்தன்.

மழை பெய்தலால் வரும் வெள்ளங்கள் பெரும் நீர்க்குளங்களை நிறைத்து மூடி தோன்றிடாவகை செய்யலாமே யன்றி நீர் ஊற்றுடைய பெரிய சமுத்திரத்தை நிரப்பி மூடி அழித்திட முடியுமோ? ஆகாது. அதேபோல எனக்கு ஏற்றதாய் வருகின்ற என்படைகளைச் சிவகுமாரன் அழிப்பதேயன்றி அழிவுருத எனது வரத்தை இவர் மாற்றி என்னையும் கொன்றிடமுடியுமோ? 322

என்னை அங்கவன் முடித்திடல் அரியதா லியானும்
அன்ன வன்றனை இத்துணை வெல்வதும் அனைத்தே
தொன்ன கர்ப்பெரு வளத்தொடும் படையொடுந் துன்னிப்
பின்னர் வந்தமர் இயற்றியே பெருந்திறல் பெறுவேனே.

இத் தகைமையால் என்னை இந்த பாலகன் கொன்றிட முடியாது இதுபோல் யானும் அத்தப் பாலனை இத்துணையான நிலையில் வென்றிடல் அரியதாகும். ஆதலால் யான் திரும்பிச்சென்று எனது தொன்மையான நகரில் உள்ள பெருவளங்களுடனும் படைகளுடனும் சேர்ந்து பின்னராக வந்து போரிட்டு இந்த முருகனை பெரு வெற்றி கொள்வேன். 323

வசைய தன்றிது செருச்செய்வோர் பற்பகல் மலைந்து
விசையம் எய்தினும் மேன்மையாம் வியப்புமாம்
திசைவி ளங்குறு புகழுமாம் யானுமிச் செய்கை
இசைவ தேகடன் அறிஞர்தஞ் சூழ்ச்சியும் இஃதே.

இது வசையுமல்ல. போர்செய்வோர் பற்பல நாளாகப் போரிட்டு வெற்றியடையினும் அதுமேன்மையான வியத்தற்குரிய செய்கையாகும். மேலும் எந் நிலையிலாகுதல் வெற்றிகிடைத்து விட்டால் அது திசை எங்கும் விளங்குகின்ற புகழுமாம். ஆகவே திரும்பி ஓடுதல் வசை என எண்ணுது; திரும்பிப்போய் வந்து போரிடுவதற்கு எனது மனதில் இசைவு கொள்வதே எனது கடமை. அஃது ஓர் அறிவாளியின் சூழ்ச்சியுமாகும். 324

என்று பற்பல சூழ்ச்சிகள் மனத்திடை எண்ணி
ஒன்றுேர் மாயையின் மந்திரந் தன்னையுள் ளுறுத்தி
நின்ற மன்னவன் ஒல்லையின் மறைந்தவண் நீங்கிப்
பொன்றி கழ்ந்திடும் மகேந்திரக் கோயிலுட் போனுன்.

என்று இன்னவாறு பற்பலவாகிய சூழ்ச்சிகளை மனதில் சூரபன்மன் எண்ணி ஒரு தனிப்பட்டதந்திர நெறிதரும் மாயமந்திரத்தை மனதினில் தியானித்து அங்கு நின்று மறைந்து விரைவாக அவ்விடம் நீங்கி பொன்னுகத்திகழ்ந்திடுகின்ற தனது வீரகேந்திர அரண்மனையில் போயினுன் 325

மறைந்து போயசூர் முயற்சியை மன்னுயிர் தோறும்
உறைந்த நாயகன் கண்டனன் ஒருதனிச் செவ்வேல்
எறிந்து மற்றவன் உயிர்கொள நினைந்திலன் இன்னும்
மறிந்து தீயவன் உய்யுமோ வெனுந்திரு வருளால்.

மறைந்துபோன சூரபன்மனுடைய சூழ்ச்சியை மேலான உயிர்கள் தோறும் உறைந்தருளும் தனிக்கடவுளான முருகக் கடவுள் கண்டு கொண்டார்; எனினும் தன்னந் தனியான தனதொரு செம்மையான வேலை எறிந்து சூரனின் உயிரைக் கொன்றிட நினைந்தாரில்லை. ஏனெனில் மறைந்து போகிய சூரபன்மன் இன்னமும் மனம் மாறி உய்ந்திடுவானே என்னும் கருத்தால் கொண்ட திருவருளின் செய்கை போலும். அனைத்துயிரும் உய்வதுமே ஈசனுடை திருவுள்ளமாகும் என சாஸ்திரங்கள் எடுத்தோதிடும். 328

**வேறு**

ஆய வேலைதனில் ஆறுமு கன்பால்
மாயனும் மயனும் வானவர் கோவும்
ஏய தேவர்களும் யாவரும் எய்தித்
தூய வந்தனை யுடன்சொல லுற்றூர்.

அவ்வாறு சூரன் மறைந்தோடிய காலையில் ஆறுமுகப் பெருமான்பாலாக நாராயணக் கடவுளும் பிரமதேவனும் தேவர்க்கரசனான இந்திரனும் ஏனைய தேவர்களும் யாரும் வந்து தூயதான வணக்கத்துடன் எம்பிரானை நோக்கி இதனைச் சொல்லலுற்றார்கள், 327

என்று காசிபன் இடந்தனில் வந்தான்
அன்று தான்முத லாவசு ரேசன்
வென்றி யேகொடு வியப்பொ டிருந்தான்
உன்ற னோடுபொரு தோடினன் இன்றே.

பெருமானே! என்று இந்த சூரபன்மன் காசிப முனிவரிடத்து வந்தானோ அன்று நாள் முதலாக எல்லாப்போரிலும் வெற்றியடைந்து அதனால் பெரும் வியப்புடன் தன்னையே மதித்திருந்தான். இன்று தான் தேவரீரோடு போரிட்டு தோற்றோடிப் போயினான், 328

நீடு சூரனுடன் நீஅமர் செய்தல்
ஆடலே அலதை ஆங்கவன் ஆவி
கோடல் சிந்தையிடை கொண்டனை என்னின்
ஓடுமோ பொருதும் உய்திறம் உண்டோ.

பெருமானே பெருவடிவுடைய சூரனுடன் தேவரீர் போரிடுவது உமக்கு ஓர் திருவிளையாட்டேயாகும். அல்லாதிருந்தால் அங்கு அந்த சூரனுடைய உயிரைக் கொல்ல வேண்டுமென நீர் நினைந்து கொண்டால் அவன் ஓடுவானா? அல்லது அவன் போர் செய்து உய்யும் மார்க்கம் ஏதேனும் உண்டோ, 329

துங்க முற்றுடைய சூர்தனை வேலான்
மங்கு வித்திடுதி மற்றதன் முன்னம்
அங்க வற்கெதிர் அருஞ்சமர் ஆற்றல்
எங்கண் வைத்துடைய இன்னருள் அன்றோ.

மேன்மை பெற்றுடைய சூரபன்மனைத் தேவரீர் வேலினால் கொன்றிடுவீர் அங்கிருந்தவாறே. ஆனால் அதன் முன்னம் இங்கு இச் சூரனுக்கு முன்பாக வந்து கொடிய போரினைப் புரிதல் எங்கள் மீது வைத்துள்ள இனிதான அருள் அல்லவோ? யாமும் காணொணாத உமது ஆடலை கண்ணால் தரிசித்து உய்யு மாறல்லவோ. 330

என்றி யம்புதலும் எந்தை வினவி
நன்று நன்றென நகைத்தினி நம்முன்
சென்று நின்றுசமர் செய்திடின் வல்லே
வென்று சூர்முதலை வீட்டுது மென்றான்.

என்று தேவர்கள் கைகூப்பித் தொழுதவாறு இவற்றைச் சொல்லுதலும் எம்பிரான் கேட்டருளி நல்லது நல்லது எனச் சிரித்தருளி இனிமேலாக நம் முன்பு சூரன் வந்து நின்று போர்செய்திடின் உடனாகவே அவனை வெற்றி கொண்டு அழித்திடுவோம் என்றார். 331

ஆடல் சேரும்அவு ணன்சமர் ஆற்றா
தோடி னாரும்உறு கண்ணுள ராகி
வீடி னார்களென வீழ்ந்தயர் வாரும்
கூடி னார்குமர வேள்புடை வந்தார்.

இவ்வேளை மிக்க போர் வலியுடைய சூரபன்மனுடன் செய்த போரில் போர்புரிந்திட ஆற்றாது வலியிழந்து முன்னர் தோற்றோடிப் போயினார்களும் அவனது படைக்கலங்களால் ஊறுபட்டு இறந்தார் என மயங்கி வீழ்ந்தாருமாகிய யாவரும் தத்தமது துயரநிலை நிங்கித் தெளிவுற்று எழுந்து குமரப் பெருமான் பக்கராக வந்து கூடினார்கள். 332

சங்க மாகியுறு சாரதர் ஆனோர்
எங்கள் நாயகனை எய்தி இதற்சூர்
மங்குல் வானிடை மறைந்தது தேரா
அங்கண் ஞாலமலை வுற்றிட ஆர்த்தார்.

கூட்டமாகி வந்துறை பூதங்கள் எல்லாம் எங்கள் நாயகனை அடைந்து வலியுடைய சூரபன்மன் மேகங்கள் சஞ்சரித்திடும் வானில் மறைந்துபோன தன்மையை அறிந்தவுடன் அவ்விடத்து இப்பூமியே நடுங்கும்படியாக ஆர்ப்பரித்திட்டனர். 333

திகழ்ந்த பூதர்கள் செருத்தனில் எம்மை
இகழ்ந்த சூர்நகரின் இம்மதில் வீட்டி
அகழ்ந்து கோபுரம் அகன்கட லிட்டு
மகிழ்ந்து மீண்டிடுதும் வம்மின மென்றார்.

சூரபன்மன் தோற்றோடியதை இட்டு மகிழ்வால் பெருமித முற்று விளங்கிடும் பூதங்கள் யாவும் இப் போரிலே எம்மை இகழ்ந்து அம்பினால் வாட்டித் துன்புற வைத்த சூரபன்மனது நகரத்துள்ள இந்த மதிலை அழித்து அதில் உள்ள கோபுரத்தைப் பிடுங்கி அகன்ற கடலில் போட்டு மகிழ்ச்சியுடன் மீண்டு வருவோம் எல்லீரும் வாருங்கள் என்றார்கள். 334

வம்மின் வம்மினென வல்லைவி ளித்துத்
தம்மி னங்களொடு சாரதர் மேலோர்
அம்ம கேந்திரம் அழுங்குற ஆர்த்திட்
டிம்மெ னக்கடி தெயிற்புறம் உற்றார்.

வாருங்கள் வாருங்கள் என பூதவீரர்கள் மற்றைய பூதங்களையும் வல்லையாகக் கூப்பிட்டழைத்துத் தமது இனங்களுடன் பூதங்களும் பூதத்தலைவர்களும் புறப்பட்டு அந்த வீரமகேந்திரபுரமே ஏங்கித் துயருறும்படியாக ஆரவாரித்திட்டு விறுக்கென விரைவுடன் மதிலின் புறத்தாக அப்பூதங்கள் தலைவருடன் சென்றார்கள். 335

உற்ற காலைதனில் ஒண்மதில் காக்குங்
கொற்ற வீரன்அதி கோரன் மருங்கிற்
சுற்று தானையொடு சோர்விலன் நின்றான்
செற்று பூதர்படை சென்றன கண்டான்.

பூதங்கள் மதிற்புறத்து வந்துற்ற காலையில் அழகிய அம்மதிலைக் காக்கின்ற கொற்றம் மிகுந்ததோர் அசுரவீரன் அதிகோரன் என்பான் தனது பக்கமாகச் சுற்றுகின்ற பெருஞ் சேனையுடன் சோர்விலாது காத்துநின்றவன் அதுவேளை கோபம் மிகுந்த வேகத்துடன் அங்குவந்த பூதப்படையை அதிகோரன் கண்டான். 336

கண்டு வான்நனி கனன்றிதழ் கவ்வித்
திண்டி பேரிதி மிலைப்பறை ஆர்ப்பத்
தண்ட லின்றிஅமர் தானைக ளோடு
மண்டு போர்புரிய வந்தெதிர் புக்கான்.

அதிகோரன் கண்டவுடன் மிகுகோபமடைந்து தனது சொண்டினைக் கடித்து கவ்வியவாறு உடனெழுந்து திண்டி பேரிகை திமிலை முதலிய வாத்தியங்கள் முழுங்கிட நீக்கமில்லாது உடனிருந்த தனது பெருஞ்சேனையுடன் பூதங்களுடன் நெருங்கிப் போர்புரிந்திடும்படியாக வந்து எதிருற்றான். 237

எதிர்பு குந்திடலும் ஏற்றெதிர் சென்றார்
அதிர்பு குங்கழலின் ஆடுறு பூதர்
பொதிர்பு குந்தவிருள் போந்துழி எண்ணில்
கதிர்பு குந்தனைய காட்சி படைத்தார்.

எதிராக அதிகோரன் என்னும் அசுரன் வந்திடலும் அதுகண்ட பூதங்களும் அவனை போரிட ஏற்றுதாமும் அதிர்கின்ற சிலம்பணிந்த கால்களுடன் போர்ஆடல் கொண்டு சென்றமை எவற்றையும் மறைத்திட்டு நடுங்கிடவைக்கும் இருள்வந்த நேரத்து அதன்முன்பு போகின்ற எண்ணற்ற சூரியர்போன்று விளங்கிடும் காட்சி போன்றது. 338

தோம ரம்பரசு சூலமொ டெஃகம்
ஏம ருங்கதைகள் ஏவினர் கோரன்
மாம ருங்கவுணர் மற்றிவர் குன்றங்
காம ரம்படைக லந்து விடுத்தார்.

இவ்வாறு எதிர்ந்துவந்திட்ட பூதங்கள்மீது தோமரம் மழு சூலம் வேல் பருத்த கதாயுதம் ஆகியவற்றை அதிகோரனும் அசுரனுடைய பாங்கராகவந்த அசுரச் சேனைகள்யாவும் எறிந்தன. பூதங்களோ அந்த அசுரர்மீது மலைகளையும் சோலை மரங்களையும் பிடுங்கி மாறிமாறி படைகளுடன் கலந்து வீசினர்கள். 339

எடுத்து வேழநிரை எற்றினர் தேரை
ஒடித்தெ றிந்தனர் உகண்டுகள் பாய்மாப்
பிடித்தொர் கைகொடு பிசைந்தனர் வீரர்
துடித்தி டும்படி துகைத்தனர் பூதர்.

இதுமட்டன்றி பூதங்கள் வரிசையாய் வந்தயானைகளைத்தூக்கி அடித்தார்கள். தேர் களை முறித்தெறிந்தார்கள். தேரைஇழுத்துவரும் குதிரைகளையும், பாய்ந்துவந்த போர்க்குதிரைகளையும் கையினால் பிசைந்தெறிந்தார்கள். அசுரவீரர்கள் துடித்திடும் படி காலின்கீழ் போட்டு மிதித்தார்கள். 340

எறிவர் பல்படையும் எய்குவர் வெங்கோல்
குறிய ஈட்டிகொடு குத்துவர் வாளால்
செறுநர் தங்களுடல் சிந்துவர் இவ்வா
றறியும் வெஞ்சமரை ஆற்றினர் தீயோர்.

தீயரான அசுரர்களோ பலபடைகளையும் எடுத்து எறிவார்கள். கொடிய அம்பு களை பூதங்கள்மீது எய்வார்கள். ஈட்டியால் குற்றுவார்கள். வாளால் பூதங்களுடைய உடலை வெட்டிச் சிந்துவர். இவ்வாறு தாங்கள் கற்றபோரைச் செய்தனர் அசு ரர்கள். 341

சோரி பொங்கின சொரிந்தன மூளை
சாரு றுங்குடர் சரிந்தன சேனங்
காரி பம்பின கணங்களும் ஏனை
வீர ராம்அவுண ரும்பலர் வீந்தார்.

இவ்வாறு போரிட இரத்தம் பொங்கியது மூளைகள் சொரிந்தன. குடல்களே சரிந்தன. இந்த இறந்த உடல்களைத்தின்றிட பருந்தும் காகமும் கழுகும் சூழ்ந் தன. இப்படியாக பூதங்கள் சிலவும் ஏராளமான அசுரரும் இறந்தொழிந்தார் கள். 342

ஈடு றுஞ்சமர் இழைத்துழி இவ்வா
றுடல் வெங்கணவர் ஆற்ற முனிந்தே
சாடி வன்மையொடு தாக்கலும் நில்லா
தோடி னர்அவுண ராயுளர் முற்றும்.

இவ்வாறு பெருமை உற்று போரினைச் செய்திட்டநேரத்தில் போரில் மிகுதுரி தம்கொண்ட பூதங்கள்யாவும் மிகவும் கோபமுற்றுத் தங்களது முழுவன்மையுடன் அசுரரை அழிவுறும்படி தாக்கிடுதலும் அதனாலே அசுரர் யாவரும் பூதர்முன் நிற்க முடியாதபடி ஓட்டமெடுத்தனர். 343

கோர மிக்கஅதி கோர னெனும்பேர்
வீரன் மற்றதனை நோக்கி வெகுண்டே
ஓரெ ழுத்தனை உரத்தொடு பற்றிச்
சார தப்படைஞர் தம்மொடு நேர்ந்தான்.

கொடுமை மிகுந்துள்ள அதிகோரன் எனும்பேருடைய அசுரவீரன் அசுரச்சேனை ஓடியதைக்கண்டு வெகுண்டு ஓர் எழுவாயுதத்தை வலியால் கையில் எடுத்துக்கொண்டு அங்குள்ள பூதப்படைகள் தம்முடன் போரிடும்படியாக வந்தான். 344

தலைத னிற்கரத லத்தினின் மொய்ம்பின்
மலையி னிற்பெரிய மார்பின் முகத்தின்
ஒலிக ழற்கணம் உலைந்திட மோதிக்
கொலைவி ளைத்தொருவ னேகுல வுற்றான்.

எழுவாயுதத்தைக் கையில் பிடித்த அதிகோரன் அதனை ஓங்கி; ஒலித்திடும் சிலம் பணிந்த பூதங்களுடைய கையில் தோளில் மலையிலும் பெரிய நெஞ்சில் முகத்தில் பூதங்கள் அந்தரப்பட்டு உலைந்திடும்படி அடித்துமோதி பூதங்களைக் கொன்று ஒரு வனாகவே இப்படி தனித்து போரிட்டுலாவினன். 345

ஈடி லாததொ ரெழுப்படை பற்றி
ஓடி யோடிஉரு முற்றென மோதி
வீடு றுதமர் விளைத்திடு பூதர்
கோடி கோடியொ ரிமைப்பிடை கொன்றான்.

இணையிலாததோர் எழுவாயுதத்தை அதிகோரன் கையில்பிடித்து ஓடி ஓடி பூதங்கள்மேல் இடிவிழுந்ததுபோன்று மோதி முடிவிலாததொரு போரினைப் புரிந்து ஓர் இமைப்பொழுதிலே கோடிகோடி பூதங்களைக் கொன்றான். 346

இந்த வாறவன் எழுக்கொடு தாக்க
முந்து தூசிமுரி வுற்றது கண்டான்
கந்தன் ஏவல்செய் கணப்படை மன்னன்
சிந்து மேகன்முனி வோடெதிர் சென்றான்.

இந்தவாறு அதிகோரன் எழுவாயுதத்தால் தாக்கிட முன்னின்ற பூதப்படை அணிசிந்தி பின்னிட்டதை அங்கு கண்டான் கந்தக் கடவுளின் ஏவல் செய்கின்ற தோர் பூதப்படைத்தலைவன் சிந்துமேகன் என்னும் பெயருடையவன். சிந்துமேகன் பெரும் சீற்றத்துடன் அதிகோரன் முன்பு போரிடச் சென்றான். 347

சென்ற பூதரிறை செங்கையில் வைகுங்
குன்றம் ஒன்றைஅதி கோர னெனும்பேர்
வென்றி யான்மிசை விடுத்தலும் நோக்கித்
தன்த டக்கையெழு வால்தகர் வித்தான்.

அதிகோரன் முன்புசென்ற பூதத்தலைவன் சிந்துமேகன் தனதுகையில் ஏந்திய தோர்மலையை அதிகோரன் என்னும் பேருடைய வெற்றியுற்ற அசுரன்மீது வீசிடு தலும் அதுகண்டு அதிகோரன் தனது செங்கையில் உள்ள எழுவாயுதத்தால் அம் மலையைத் தகர்த்தெறிந்தான். 848

தகரும் எல்லைதரி யார்கடல் வற்ற
முகிலின் உண்டிடு முரட்பெயர் அண்ணல்
வெகுளி யோடவுணர் வேந்தனை எய்தி
அகல மீதினில் அடித்தனன் மாதோ.

மலேதகர்ந்த நேரத்து பகையசுரராகும் கடல்வற்றி அழிந்திட முகில்போல் உறிஞ்சி அழித்திடும் வலியுடைய சிந்துமேகன் என்னும் பூதத்தலேவன் மிகுகோபத்துடன் அதிகோரனே அடைந்து அவனது நெஞ்சில் ஓங்கி அடித்தான். 349

அடித்த லோடும்அவு ணர்க்கிறை யானேன்
இடுக்கண் எய்திஇவன் ஆவியை இன்னே
முடிப்பன் என்றுமுச லங்கொடு மொய்ம்பில்
புடைத்த னன்உருமு வீழ்வது போல.

அடித்தலோடும் அசுரத்தலேவனுன அதிகோரன் இடுக்கண் அடைந்து இந்த சிந்துமேகனது உயிரை இப்போதே முடிப்பன் என்று முசலாயுதம் ஒன்றினுல் சிந்து மேகனுடைய தோளிலே இடிவீழ்வது போன்று அடித்தான். 350

பூதன் மொய்ம்பிடை புடைத்த எழுத்தான்
ஏதமா முரிய ஏற்றெதிர் தெவ்வைக்
காது கைகொடு கபோலம் அதன்கண்
மோத வேயவுணன் ஆவி முடிந்தான்.

சிந்துமேகன் என்னும் பூதத்தலேவனது தோளில் அதிகோரன் அடித்த எழுவாயுதமே கெட்டுமுரிந்து போதலும் அதுவேளே பூதத்தலேவன் பகைவனேக் கொன்றிடும் கைகொண்டு அதிகோரனுடைய கபாலத்தில் அடித்திட அசுரன் உயிர்நீங்கி முடிந்தான். 351

வாய்தல் போற்றிய வயப்படை வீரன்
சாத லுற்றுழி தலேத்தலே ஆர்த்துப்
பூத சேனேயர்கள் பொம்மென ஏகி
மூதெ யிற்றலே முதற்கடை சென்ருர்.

வாயிலில் காவலாக இருந்த வீரனுன சேனேத்தலேவன் அதிகோரன் இறந்து வீழ்ந்திடுதலும் அதுகண்டு தலேத்தலே இடைந்து ஆர்த்துக்கொண்டு பூதச்சேனேகள் யாவும் விறுக்கென ஓடி மிகு முதியதாகும் வீரமகேந்திரபுரத்து மதிலின் முதற் கடைவாயிலினிடை சென்ருர். 352

ஆண்டி யோசனே ஓராயிரம் வான்போய்
ஈண்டு செம்மணிக ளால்இய லுற்ற
மாண்ட தீயவட வாமுக மேபோல்
நீண்ட தோர்சிகரி நின்றது கண்டார்.

அவ்விடத்து ஆயிரம் யோசனே தூரமளவு வானில்மேல்போய்; சிவந்த இரத்தினங்களால் செய்யப்பட்டு; தீமையுடையதாகும் மாண்புடைய சுவாலேயுடன் நீண்டெரியும் வடவாமுகாக்கினி போன்று நீண்டதொரு கோபுரம் நின்றது. அதனே அப்பூதங்கள் கண்டனர். 353

கண்ட தோர்சிகரி கைகொடு தொட்டுத்
தெண்டி ரைக்கடலின் மேற்செல விட்டார்
மண்டு மேருவரை யின்குவ டேந்திச்
சண்ட வாயுவிடு தன்மைய தென்ன.

பூதங்கள் கண்டுகொண்ட அந்தக் கோபுரத்தை தமது கைகளால் தூக்கிபிரட்டி எடுத்து தெள்ளிய நீருடையதாய் புறத்தேநின்ற திரைக்கடல்மீது எறிந்தார்கள். எதுபோல் என்ருல் மிகவும் பெரிதான மகாமேருமலேயின்முடி ஒன்றினே சூருவளிக் காற்ருனது தூக்கி எடுத்தேந்திக் கடலில் வீசிடும்தன்மை என்னும் படியாக. 354

அன்ன வேலையில் அலைந்தது ஞாலம்
பன்ன கேசனும் மிகப்பட ருற்றான்
மன்னு சூருறை மகேந்திர மூதூர்
துன்னு தானவர் துளங்கி அயர்ந்தார்.

அவ்வாறு சமுத்திரமீது பூதங்கள் கோபுரத்தை எறிந்தநேரத்து இப்பூமி அலைந்தது. பூமியைத்தாங்கிடும் ஆதிசேடனும் மிகத்துன்பப்பட்டான். இதுவன்றி மேலோங்கி விளங்கிடும் சூரனுடைய நகரில் உள்ள அசுரர் யாவும் உள்ளம் நடுங்கி அயர்ந்தார்கள். 355

ஈண்டு பூதரெறி யுஞ்சிக ரந்தான்
ஆண்டவ் வேலையிடை ஆழ்ந்தது தொன்னாள்
நீண்ட மேனிஇறை நின்றளி யாமுன்
மாண்டு சாய்ந்துவிழு மந்தர மென்ன.

இவ்விடத்துப் பூதங்கள் தூக்கிஎறிந்த கோபுரந்தான் அங்கு கடலிற்போய் விழுந்து ஆழ்ந்துபோயது. எதுபோல் என்றால் நீண்டமேனியுடைய கடவுளாகும் விஷ்ணு மூர்த்தி பாற்கடலினை தேவர் அசுரர் கடைவதற்கு வசதியாகத் தமது கையால் தாங்கிநின்ற மத்தாகும் மந்தரமலையை தாங்கிப் பிடியாது விட்டபோது அம்மலை கடலில் சாய்ந்து வீழ்ந்து ஆழ்ந்தது போன்றிருந்தது. 356

வேறு

பொலங்கெழு சிகரிஅப் புணரி சேர்தலின்
கலங்கின விரிதிரைக் கைம்ம றித்ததால்
மலங்கின மொடுசுறா அருந்தி மிங்கில
கிலங்களும் இரிந்ததங் கிளைக ளோடுமே.

முழுவதும் இரத்தினங்கள் செறிவுற்ற அழகிய அந்தக் கோபுரம் கடல்மீது போய்விழுந்த நேரத்து கடல்கலங்கி விரிந்த திரைகள் மோதிடுதலால் அக்கடலிடத்தே வாழ்ந்திருந்த மீன்இனங்களுடன் சுறா திமிங்கிலம் என்னும் பெருமீன்களும் பயத்தால் ஓடின. 357

மாதலம் புகுந்திடுஞ் சிகரி வாரியுட்
பூதரங் குய்த்திட விரைவிற் போவது
வேதமுன் கொணர்தரு மீனம் வேலையில்
பாதலம் புகுந்திடு பான்மை போலுமே.

பெரிய இப்பூமியிடத்து ஊடுருவி நின்றதுபோன்ற கோபுரத்தை பூதங்கள் தூக்கி வீசிட அது கடல்மீது வீழ்ந்து விரைவாய்ப்போவது வேதத்தை முன்னர் களவெடுத்து கடல்மீது ஒளித்த அசுரனைத்தேடி விஷ்ணுமூர்த்தி கடல்மீது பாய்ந்து கீளே உள்ள பாதாளம் புகுந்திடும் தன்மைபோன்றது. 358

கழற்கறங் கியதெனுங் கண்ணர் உந்திய
அழற்கொழுந் தாகிய சிகரத் தாய்மணி
நிழற்பொலிந் திடுவன நீல வேலையில்
தழற்பரந் தெழுவதோர் தன்மை போலுமே.

வீரக்கழல் சுழல்கின்றது என்னும் தன்மைபோன்ற கண்ணுடைய பூதங்கள் செலுத்திய நெருப்புச்சுடர்க் கொழுந்துபோலும் சிவந்த கோபுரத்துள்ள செம்மணிகளின் நிழல் கடலினுட்பரப்பில் பொலிந்திடும்தன்மையானது நீலநிறமுடைய சமுத்திரத்தில் நெருப்பு உள்ளே பற்றிப் பரந்தெழுவதுபோன்ற தன்மையை ஒத்தது போலும். 359

நாகர மணிவெயில் நணுகும் வேலையில்
சீகரம் உம்பர்போய்த் தெறித்து மீள்வது
சாகரம் உற்றது தழலென் றுன்னியே
மாகர வாரிநீர் வழங்கல் போலுமால்.

நாக இரத்தினங்களின் ஒளியுடைய கோபுரம் கடல்மீது விழுந்தநேரத்து; கடல் நீர் தெறித்து வானத்தில் சிந்தி வீழ்வது எதுபோன்றிருப்பதென்றால் கடலிலே நெருப்புப் பற்றிக்கொண்டது என்று வானத்தில் உள்ள மேகங்கள் நீர்த்துளிகளை கடல்மேல் சொரிதல்போன்றது. 360

காமரு சிகரியில் கவைஇய மாமணி
ஏமுற நிழற்றிய எழிலை நோக்கியே
பூமது நுகர்தரு பொறிவண் டானவை
தாமரை வனமென அயிர்த்துச் சாருமால்.

அழகுடைய கோபுரத்தில் பதித்துள்ள இரத்தினங்கள் அழகுற கடல்மீது சிவப் பொளியால் நிழல்படுத்திட அக்கடலின் அழகை நோக்கியே பூவில் உள்ள தேனை உண்ணும் பொறிகள் உடைய வண்டுகள்தாம் இந்த செவ்வொளிகொண்ட கடலை யும் செந்தாமரைக் காடோ என எண்ணி சந்தேகத்துடன் அங்குசேர்வன. 161

பங்கய மணிநிழற் பரப்பை நோக்கியே
இங்கிவை தசையென எண்ணிப் புட்குலம்
நுங்கிய செல்வன நொய்தின் எய்தியே
அங்கிகொ லெனச்சில அகன்று போயின.

சிவந்த பதுமராக இரத்தினங்களின் நிழற்பரப்பை இந்தக்கடல்மீது தோன்றக் கண்ட பறவைக் கூட்டம்யாவும் இங்கு இவைகள் மிருகங்களின் தசையாமோ என எண்ணி அவற்றை விழுங்கும் பொருட்டு அங்குவந்து விரைவாகச் சேர்ந்தும்; அப் பறவைகள் இவைகள் தசையிலாது நெருப்பாயிருக்குமோ என சந்தேகித்துத் திரும்பிச் சில சென்றிடுவன. 362

தெழித்திடும் வேலையிற் செய்ய சோதியால்
தழற்பொலி கோபுரந் தரிப்பின் றேகலால்
கிழித்தன பணிபதி கிளர்ந்து மற்றவர்
விழித்தனர் உருமென வெருவி ஓடினர்.

இரைகின்ற பெருங்கடல்மீதே முற்றிலும் சிவந்த ஒளியால் நெருப்புப் பொதிந் ததுபோன்ற இரத்தின கோபுரம் தங்கு தடையின்றிக் கடலூடு ஆழ்ந்து பாதளம் போதலால் அங்கு பாதாளத்துள்ள நாகர் உலகம் கிழிந்தது. அதுமட்டன்றி அங் குள்ள நாகங்கள் சோம்பல் நித்திரை நீங்கித் திடுக்கிட்டெழுந்து இது என்ன இடி விழுந்ததா என அச்சம் கொண்டு ஓடினர்கள். 363

பூதர்கள் யாம்விடு பொலங்கொள் கோபுரம்
ஓதநெஞ் சடைதலும் உதிரங் கான்றதால்
சேதன மோவிது செப்பும் என்றனர்
மீதுறு கதிர்மணி வெயிலென் றுன்னலார்.

செவ்வொளியுடைய இரத்தின கோபுரத்தை பிடுங்கி வீசிய அப்பூதங்கள் தாங் கள் வீசிய அழகுநிறைந்த அக்கோபுரம் கடல் நடுவேபோய் வீழ்தலும் அங்கு காண் குற்ற செந்நிறத்தால் இஃதென்ன இந்தக் கடலும் கோபுரம்பட இரத்தம் காட் டுதே! ஆதலின் இந்தக் கடலுக்கும் உயிர் இருக்கோ ஒருகால் கூறும் என ஒன்றை ஒன்று கேட்டனர். ஆனால் அந்த செந்நிறம்; கோபுரத்தின் சிவந்த இரத்தின ஒளி தான் கடலில் தெரிந்தது என பூதங்கள் நினையாது போயினர்கள். 364

பொற்பகல் சிகரியுட் பொருந்தி ஆழ்பவர்
அற்பகல் நுகருமீன் அவரை நுங்குமால்
முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது
பிற்பகல் தமக்குறும் பெற்றி என்னவே.

பொற்புடன் அகன்று பருத்த கோபுரத்தோடு ஆழ்ந்துபோகின்ற அதிலிருந்த அசுரர்கள் முன்னர் நாளில் பிடித்து உண்டு மகிழ்ந்த மீன் இனம் இப்போது அவர்கள் கோபுரத்துடன் ஆழும்போது அவர்களைப் பிடித்து உண்கின்றன. எதுபோல் எனில் முற்பகலில் அல்லது ஓர் பிறவியில் பழியான ஓர் செயலைச் செய்தால் பின் நாளில் அல்லது இன்னோர் பிறவியில் அவரை அறியாது செய்தவரை அப்பழிவந் தடைவது போன்று இருப்பது. 365

ஆனதோர் கோபுரம் அளப்பி லாதமர்
தானவர் கிளையொடும் வீழ்ந்த தன்மையால்
மீனுறு திரைக்கடல் வெள்ள மேற்செலா
மாநகர் எயில்தனை வளைந்து புக்கதே.

அவ்வாறாகிய கோபுரம் அதனிடத்திருந்த அளவுகடந்த அசுரருடனும் அவர் கிளையுடனும் வீழ்ந்ததன்மையால மீன்கள்வாழும் கடலானது பொங்கி அதன்வெள்ளம் மேல்சென்று பெரிய வீரமகேந்திரபுரத்தின் மதிலைவளைந்து நகரின் உள்ளேயும் புகுந்தது கடல்வெள்ளம், 366

காதிடும் இயற்கையில் கால்கொண் டேகலிற்
பூதலம் வெருக்கொளப் பொங்கும் ஆர்ப்பினின்
மீதமர் காரினில் விமலன் விட்டிடும்
பூதரை நிகர்த்ததப் புரிசை சூழ்புனல்.

எல்லாவற்றையும் அழித்திடுவேன் என்னும் இயல்பினதாய் இவ்வெள்ளங்கள் பல கால்களாக பிரிந்தோடுதலில்; பூமியும் அஞ்சும்படியாகப் பொங்கி இரைகின்ற ஓசையால்; மேல்மேகங்கள் வந்து படிதலாலே கருமையாகும் இத்தகைய நிலையால் மதிலைவளைந்து உட்புகுந்த வெள்ளங்கள் நின்மலசோதியான முருகப்பிரான் போரிட விடுத்த பூதங்களை ஒத்திருந்தது. 367

மைக்கடல் புவியினும் மகேந்தி ரப்புரம்
மிக்கது போலுமென் றைய மேற்கொளா
இக்கணம் நாடுதும் என்று சென்றபோல்
புக்கது நகரிடைப் புணரி நீத்தமே.

இந்தக் கரியநிறமுடைய கடல் எழுந்து வீரமகேந்திரபுரம் ஒருகால் இந்தப் பூமியிலும் பார்க்க உயர்ந்துவிட்டதோ என ஐயங்கொண்டு அதை நான் சென்று இந்நேரம் பார்த்திடுவேன் எனப்புறப்பட்டு அங்கு வீரமகேந்திரபுரத்து அவசரமாகச் சென்றிடுதல் போன்று நகரிடத்து சமுத்திர வெள்ளம்சென்றது. 368

மீனெனும் மைந்தரை மிசைந்த தானவர்க்
கானதொ ரிறுவரை அணுகிற் றிவ்விடை
யானவர்ப் பொருவனென றெண்ணிச் சேறல்போல்
போனதப் பதியினுட் புணரி நீத்தமே.

எனது பிள்ளைகளாகும் மீன்களை இந்த நகரிடத்து உள்ள அசுரர் பிடித்துத்தின்றவர்கள்; அந்த அசுரர்க்கு இப்பொழுது ஏற்றதொரு முடிவுகாலம் வந்துள்ளது. இந்நேரத்தில் நானும் அவர்களை விடாது போரிடுவேன் என எண்ணி சமுத்திரம் சேர்வதுபோன்று வீரமகேந்திரபுரத்து கடல்நீர் பிரவேசித்தது.

நீண்டகாலம் பகைவரான ஒருவரை வென்றிடுதற்கு காலம்பார்த்துச் சென்றிடுவார் போன்று நீர் நகருட்புகுந்தது. 369

இவ்வகை நிகழ்ந்திட எறிந்த கோபுரம்
பௌவமுற் றிடுதலும் பைம்பொன் மாமதில்
வெவ்வலி அரசர்கள் விளிய ஈறிலாக்
கௌவைகொள் திருநகர்க் காட்சித் தாயதே.

இவ்வகையாக எறிந்திட்ட கோபுரம் கடலுள்பட்டு ஆழ்ந்திடுதலும் அதுவேளை பசிய பொன்னிலாய மதில்; கொடிய வலியுடைய அரசர் இறந்திடுதலாலே அது வேளை அவராண்ட நகரமானது முடிவிலாத கலக்கம்தரும் ஆரவாரக் காட்சிபோல் காணப்பட்டது. 370

எல்லைமற் றணையதில் ஈண்டு சாரதர்
மல்லலம் புரிசையின் வடாது பாங்கரை
ஒல்லையில் தம்பதத் துதைப்பச் சாய்ந்தது
செல்லுற வீழ்ந்திடு சிகர மேயென.

அவ்வாறான நேரத்தில் அங்குபோன பூதங்கள் மிகஉயர்ந்திட்ட மதிலின் வடக்குப் பக்கத்தில் சடுதியாய்த் தமதுபாதத்தால் உதைத்தலும் அம்மதிலானது மிகப்பெரிய ஓசையுடன் சாய்ந்து வீழ்ந்தது. எதுபோலுமெனில் இடிவிழும் நேரத்துத் தவறிவீழ்ந் திடுகின்ற மலைபோன்றது. 372

மாமதில் சாய்தலும் வலிய பூதர்கள்
காமரு நகரினுட் கலந்து நண்ணினர்
ஏமரு கடங்கலுழ் இபங்கள் ஈண்டியோர்
தாமரை மலர்த்தடந் தன்னிற் புக்கபோல்.

பெரியமதில் சாய்ந்து வீழ்தலும் அப்பாதைவழியாக வலிமிக்க பூதங்கள் அழகுடைய அந்த நகரத்துக் கூட்டம் கூட்டமாகக் கலந்துட்பிரவேசித்தனர். எப்படியெனில் மகிழ்வுடனாக மதம்சொரியும் பெருயானைகள் கூட்டமாகத் திரண்டு ஓர் தாமரைப்பூ மலர்ந்திடுகின்ற குளத்தூடு புகுந்தது போன்றது. 372

கானுறு பங்கயக் கடவுட் கிப்பகல்
போனதோர் காலையிற் புணரி யாவையும்
மாநிலங் கொள்வது மானப் பூதவெஞ்
சேனைகள் மகேந்திர புரத்திற் சென்றவே.

இதுவுமன்றி வாசனைகொண்ட நல்ல வனப்புடைய தாமரைமலரில் இருந்திடும் பிரமதேவருக்கு ஒரு பகற்பொழுதாகிய காலம் முடிவுறுதலும் அதுவேளை தோன்றுகின்ற பிரளயகாலத்தில் சமுத்திரங்கள் யாவும் திரண்டெழுந்து பூமியை மூடிக் கொள்வதுபோன்று சூரபன்மனது வீரமகேந்திரபுர நகரினுள் பூதப்படைகள் பிரவேசித்தன. 373

புக்கனர் வீரர்கள் புயலின் மேனியுஞ்
செக்கரங் குஞ்சியாந் தீயுங் கைகளாய்
மிக்கெழு புணரியும் வேறு வேறுரு
மைக்கடல் உலப்பில வருவ போலவே.

பூதவீரர்கள் உட்புகுந்துள்ளபோது மேகம்போன்ற கருமை நிறமுள்ள மேனியும் சிவந்த நெருப்பினைப்போன்ற சடையும் கடலின்திரைபோன்ற கைகளுமுடையவையாய் வேறுவேறு கூட்டமாகவருதலும் அவர்களின் வருகை வேறு வேறாகி இருண்டகடல்கள் ஓய்வின்றி வந்திடுகின்றதன்மைபோன்று விளங்கியது. 374

துதித்திட அரியவன் நகரில் துண்ணென
எதிர்த்திடு தானவர் இனத்தை ஒல்லையில்
சிதைத்தனர் மாளிகை சிகரம் யாவையும்
உதைத்தனர் வீட்டினர் உயர்ந்த பூதரே.

முன்சென்றுகண்டு தேவர்களும் வணங்கிடமுடியாத அத்துணைக்கட்டுப்பாட்டுடன் அரசுசெலுத்திடும் சூரபன்மனுடைய நகரில் பூதங்கள் பிரவேசித்தலும் அவைகளை திடீரெனவந்து எதிர்த்திட்ட அசுரர்களின் படைகளை உடனுகை பூதங்கள் கொன்றூர்கள். நகரில் உள்ள மாளிகைகள் கோபுரங்கள் யாவையையும் காலால் உதைத்து வீழ்த்தினுர்கள் வலிமையால் உயர்ந்த பூதங்கள். 375

மதரொடு குறுகும்அவ் வயவெம் பூதர்கள்
அதிர்கழல் அடிகளால் அளப்பில் மாளிகை
பிதிர்பட உந்தலும் பிறங்கு பூழிகள்
கதிருறு கதியினுங் கடந்து போனவே.

மிகு மதார்ப்புடன் அங்கு சேர்ந்த வெற்றியுடைய பூதங்கள் சிலம்புகள் அதிர்கின்ற தமது பாதகங்களால் அளவற்ற மாளிகைகள் பிதிர்ந்து உடைந்திட உதைத்தலும் அதுவேளை இடிபடுகின்ற மாளிகைகளினின்றும் எழுகின்ற புழுதிகள் சூரிய மண்டலத்தையும் கடந்து அப்பாலும் போகின்றன. 376

அங்கவ் வெல்லையிற் சாரத வேந்தர்கள் அயில்வேற்
புங்க வன்தனை நீங்கியாம் அவுணர்கோன் புரத்துள்
இங்கி னிப்படர் கின்றது தக்கதன் றென்னுச்
செங்க ளந்தனின் மீண்டனர் சேனையுந் தாமும்.

அவ்வாருகிய காலையில் பூதசேனைகளின் தலைவர்கள்யாரும் அங்குள்ள பூதங்களை நோக்கி நாங்கள் கூரிய வேலேந்திய கடவுளை நீங்கி இங்குநாம் மேலும் நகரினுள் செல்கின்றது தக்கதொரு கருமம் அன்று எனக்கூறி யாவரும் மீண்டு செந்நிறமாகக் காட்சிதரும் போர்க்களத்து பூதசேனைகளும் தாமுமாகப் போயினுர்கள். 377

ஆன காலையிற் பூதர்தஞ் செய்கைகள் அனைத்தும்
ஞான நாயகன் காண்குறூ நல்லருள் புரிந்து
மான வேற்படை வீரரும் அமரரும் வழுத்தச்
சேனை யாவையுங் கொண்டுதன் பாசறை சேர்ந்தான்.

அவ்வாருகிய காலையில் பூதசேனையின் செய்கைகள் அனைத்தினையும் ஞான நாயகரான முருகப்பிரான் கண்ணுற்று தன் பூதங்கள்மீது நல்லருள் புரிந்து அழகுடன் பொலிந்திடும் கூரிய வேற்படை ஏந்திய வீரர்களும் தேவர்களும் வணங்கி வாழ்த்திட சேனையாவையும் திரட்டிக்கொண்டு பாசறை போய்ச்சேர்ந்தருளினுர். 378

பாச றைப்புகு குமரவேள் பாரிடப் பகுதி
ஆச றப்புனை ஆவணச் சூழல்போய் அமர
வாச வத்தனிக் கடவுளா தியர்புடை வழுத்த
ஈச னிற்சிறந் தரியணை தன்னில்வீற் றிருந்தான்.

பாசறையின் சென்றருளிய குமரப் பெருமான் தன்னுடன் சூழ்ந்துவந்த; பூதங்கள் குற்றம்யாவும் நீங்கிடும்படி அழகுற அமைத்த ஏமகூடத்தின் வீதிகளில் சென்று தங்கியிருப்ப; அப்பால் இந்திரன், திருமால், பிரமன் ஆதியான கடவுளர்கள் பக்கராக சூழ்ந்து வழுத்திடச் சென்றருளி பாசறைத் தலத்து விளங்கிடும் சிம்மாசனமீது சிவபிரானிற் சிறந்து அருளுடன் வீற்றிருந்தார்.

அடியார்க்கு அருளும் தகவிலே ஆறுமுகத்து ஐயனைப்போல் ஆருமில்லை. இக் கருத்தை அருணகிரியாரும் பொங்காரவேலையில் வேலைவிட்டோன் அருள் போல் உதவ எங்காயினுமுண்டோ; என்பதனை இங்கு நினைவுகொள்க. 379

ஈண்டு தானவர் இலக்கம்வெள் ளத்தரும் இன்னே
மாண்டு போயினர் அனையரை மலிகதிர்க் கரத்தால்
தீண்டி வன்மையிற் குறைந்தனன் என்றுசெஞ் சுடரோன்
ஆண்டு மூழ்குவான் புக்கென அளக்கரை அடைந்தான்.

அவ்வாருகிய நேரத்து இங்கு நெருங்கிவந்த அசுரர்கள் இலக்கம் வெள்ளம் என்னும் தொகைப்பட்டோர் யாரும் இறந்து போயினுர்கள். இறந்தாருடைய உடலை எங்கும் செறியும் எனது கதிர்களாகும் கைகளால் தீண்டிவிட்டேன். அதனுல் யானும் தீட்டு உடையவனுனேன். பாதகரைத் தீண்டியபடியால் எனது வலியும் குறைந்தது. இத்தோஷங்கள் நீங்கிட நீராடவேண்டும் எனச் சென்று

அவ்விடத்து மூழ்குவான் போயது போன்று சூரியதேவன் மேற்குத்திக்கின் கடலில் சென்று அடைந்தான். 380

புரந்தர னாதியர் புன்மை நீக்கியே
பெருந்திரு வுதவுவான் பிரான்தன் காதலன்
இருந்தனன் பாசறை ஈது நின்றிடத்
திருந்தலர் மாட்டுறுஞ் செய்கை செப்புவாம்.

இந்திரன் ஆதியாகச் சொல்லப்பெறும் கடவுளர்கள் தாங்கள் அடைந்திட்ட துயரமாகும் சிறுமைகளை நீக்கி அடைதற்கரிய பெருஞ் செல்வத்தை உதவுமாறு சிவபிரான் மகிழ்ந்தருளும் காதல் குமரன் பாசறைத் தலத்து இருந்தருளினர். இது இப்படி இருப்ப திருந்தாத செயல்களுடைய பகை அசுரர் பக்கராக உற்ற செய்கைகளை இனி எடுத்துச் சொல்வாம். 381

ஒருவரும் உளத்தினும் உணர்வு றுவகை
அருவம தாகியே அகன்று சூர்முதல்
பொருவரு மகேந்திர புரத்துக் கோயிலுள்
திருமகள் மணமனைச் சேறல் மேயினன்.

ஒருவரேனும் தமது உள்ளத்திடையாக உணர்ந்துகொள்ள முடியாதபடி நுட்பமான மாயத்தன்மையால் அருபியாக அகன்றுபோய் சூரபன்மன் நிகரற்று விளங்கிடும் வீரமகேந்திரபுரத்து உள்ள அரண்மனையில் மகாலட்சுமி பிரிவிலாது உறைந்திருக்கின்ற தனது இருப்பிடமாளிகையை அடைந்துகொண்டான். 382

பஞ்சடி நூபுரப் பதுமை கோயில்போய்
அஞ்சியல் அடுத்தமெல் லமளி மேலுறுத்
துஞ்சலன் யாரொடுஞ் சொல்லும் ஆடலன்
வெஞ்சமர் வினையமே உன்னி மேவினன்.

செம்பஞ்சின் குழம்பு தீட்டிய பாதங்களுடைய பதுமகோமளையின் அரண்மனையில் சென்று அங்கு ஐந்து வகை சிறந்த இயல்புடையதாக அமைக்கப்பெற்ற பூம்பஞ்சணையான படுக்கைமீது அமர்ந்துகொண்டும் உறங்காதவராய் அன்றியும் யாருடனுகுதல் பேச்சும் இலாதவனாய் கொடிய போரினைப் புரிந்திடும் கருமமே எண்ணியவாறு இருந்தான் சூரபன்மன். 383

ஆனதொ ரெல்லையில் அரசன் போர்செயப்
போனதும் பொருததும் புறந்தந் தோமென
மாநகர் அதனிடை வறியன் வந்ததும்
பானுவின் பகைஞனுக் கொற்றர் பன்னினர்.

அவ்வாறாகிய எல்லையிலே சூரபன்மன் இரண்டாம் நாள் போர் செய்யப்போன தன்மையும் போரிட்டதும் அங்கு அப்போரில் தோற்று புறமுதுகிட்டோடுவார் போன்று பெருநகரிடத்தாக எல்லாப் படைகளும் சேனைகளுமிழந்து வெறுவிலியாக வந்த வரலாற்றையும் கண்டு கொண்ட தூதுவர் சென்று சூரியனின் பகைவனை பானு கோபனிடம் எடுத்துக் கூறினர். 384

சொன்னடை மந்திரத் தொடர்பும் மாயமும்
தன்னுறு படைகளும் சாதனஞ் செய்வோன்
அன்னது கேட்டலும் அலக்கண் எய்தியே
மன்னுறு கடிநகர் வல்லை ஏகினன்.

இவ்வாறு தூதுவர் சென்று இந்தச் செய்தியைக் கூறுகின்ற நேரம் பானுகோபன் சொல்லின் நடையாகும் மந்திரங்களின் தொடர்பும் மாயங்களும்; அம் மந்திரத் தொடர்புடைய படைகளையும் சாதகம் செய்து கொண்டு இருந்தவன் அந்த செய்தியைக் கேட்ட மாத்திரத்தே கலக்கம்கொண்டு மிக உயர் வாகும் தனது காவல் உற்ற நகரை விட்டு விரைவாக நீங்கினன். 385

மணிநிரை இகலியே மாறு வில்லுமிழ்
இணையறு சினகரம் எய்திச் சேக்கைமேல்
தணிவறு சூழ்ச்சியோ டமர்ந்த தாதைதன்
துணையடி வணங்கியே தொழுது கூறுவான்.

நிரை நிரையாகப் பதிக்கப்பட்ட இரத்தினங்கள் ஒன்றுடன் ஒன்று ஒளி காண்றிடுவதில் தீவிரமுடையன போன்று விளங்கிடும் இணையற்ற சூரபன்மனின் அரண்மனையை அடைந்து. அங்கு மலர் சயனத்தின் மீது ஓய்வின்றி போர்புரிவதற்குரிய சூழ்ச்சி வழிகளைச் சிந்தித்தவாறு இருக்கின்ற தந்தையின் பாதத்தில் வணங்கி எழுந்து தொழுது நின்று இதனைச் சொல்வான். 886

மாற்றலர் யாவரும் மறிய வல்லைபோர்
ஆற்றுதி யாலென ஐய முற்பகல்
சாற்றினை விடுத்தனை தமியன் ஏகியே
ஏற்றவர் தம்முடன் இகல்செய் தேனரோ.

எனது ஐயனே! என்னிடம் பகைவர் யாரும் இறந்து போகும்படி விரைவாகச் சென்று போர்புரிவாயாக என நேற்று முன் பகல் பொழுது கூறி விடுதீர் அதன் பிரகாரம் தமியேன் சென்று எம்பகைவருடன் ஏற்று போர்புரிந்தேன். 387

உற்றிலன் அறுமுகன் ஒழிந்த வீரர்கள்
சுற்றிய படையொடு துவன்றிப் போர்செய்தார்
பற்றிய மோகமாப் படையைத் தூண்டியான்
மற்றவர் உணர்ச்சியும் வலியும் மாற்றினேன்.

ஆனால் என்னுடன் போரிட ஆறுமுகன் வரவில்லை. அவன் நீங்கிய மற்றைய வீரர்யாரும் வந்து நெருங்கி நின்று போரிட்டார். அவ்வாறாக போரிட்ட அவர் மீது நான் கைக்கொண்ட மோகனாஸ்த்திரத்தை விடுத்து அவர்களது உணர்ச்சியினையும் வலியையும் மாற்றினேன். 388

சென்றமர் இயற்றிய செறுநகர் யாரையும்
வென்றனன் அத்துணை விமலன் மாமகன்
ஒன்றொரு மாப்படை உய்ப்ப என்படை
வன்றிறல் நீங்கியே வருந்தி மீண்டதே.

என்னுடன் வந்து போரிட்ட எனது பகைவர் யாரையும் அத்துணையில் வெற்கொண்டேன். ஆனால் என்ன ஆச்சரியம் இதை அறிந்த நின்மலப் பொருளாகும் சிவனின் திருக்குமரன் ஒரே ஒரு பெரும் படையைச் செலுத்திட எனது மோகனாஸ்த்திரமாகிய பெரும் படை வலிகெட்டு வருத்தமடைந்து மீண்டு கொண்டது. 389

அன்னதோர் பான்மையால் அனையர் யாவரும்
பின்னுணர் வெய்தியே பெயர்ந்து போயினர்
என்னிது வெற்றியென் றியானும் மீண்டனன்
உன்னொடும் உரைத்திலன் உள்ளம் வெள்கினேன்.

அவ்வாறாகிய நிலையால் அவர்கள் யாவரும் பின்னர் உணர்ச்சி கூடிட தெளிந்து அவ்விடம் விட்டுப் போயினார்கள். அவர்கள் போனதும்; இதென்ன ஒரு வெற்றி மயங்கிட தெளிந்து போதல் பெருமையோ என எண்ணி யானும் திரும்பி வந்தேன். ஆனால் இதைப்பற்றி உம்மோடு வந்து பேசுதற்கு நெஞ்சில் வெட்கப்பட்டேன். 890

நெற்றியங் கண்ணுடை நிமலன் ஏனையோர்
முற்றரு படைகளால் முடிவின் மாயையால்
பற்றலர் யாரையும் படுத்து நாளையே
வெற்றிகொள் குவனென நென்னல் மீண்டனன்.

வருகின்றயான் நெற்றிக் கண்ணுடைய சிவபிரான் மற்றைய கடவுளர் முன்னர் தந்துள்ள படைகளால் அல்லது முடிவற்ற எமது மாயையால் நாளைக்கு எங்களது பகைவர் யாரையும் வெற்றி கொள்வேன் என எண்ணிநேற்று மீண்டேன். 891

ஞாயிறு வந்தபின் நண்ண லார்மிசைப்
போயமர் இயற்றிடப் புறத்திற் சென்றனன்
ஆயதன் முன்னரே அனிகந் தன்னுடன்
ஏயென ஏகினை எந்தை நீயென்றார்.

ஆனால் சூரியன் உதையமாகி வந்தபிற்பாடு இன்று எம்பகைவர் மீது போர் இயற்றிட வெளியே வந்தேன். அதற்கு முன்பே ஏயென்று கூறிமுடிப்பதற்குள் சேனை தன்னோடும் நீ போரிடச் சென்றுள்ளாய் என்று தூதுவர் சொல்லினர். 392

வரந்தனில் அழிவுறு வள்ளல் ஈண்டுறு
திருந்தல ருடன்அமர் செய்தற் காகவோர்
அருந்துணை வேண்டலை அதனை உன்னிமீண்
டிருந்தனன் இப்பகல் ஈதென் செய்கையே.

வரத்தால் அழிவுறுத நிலைமையுடைய பெருவள்ளலாகும் நீ பகைவருடன் போர் செய்வதற்காக வோர்துணையை விரும்பமாட்டாய் என்பதை நான் தெரிந்து கொண்டு போரிட வெளிவந்தயான் திரும்பிச் சென்று என் அரண் மனையை அடைந்து இருந்தேன். இதுவே தான் எனது செய்கையாகும். 393

ஓர்ந்திலை இத்திறம் உணர்வு ளாரொடுந்
தேர்ந்திலை என்னையும் விளித்துச் செப்பிலை
சார்ந்திடு நாற்பெருந் தானை தன்னொடும்
பேர்ந்தனை அமர்க்கிது பெருமைப் பாலதோ.

எந்தந்தையே இதனைநீர் அறியவில்லை. அல்லது எனது திரும்பிவருகையை நன்ருய் அறிந்தவருடனுதல் நீ கேட்டுணரவில்லை. அல்லது என்னையும் அழைத்து சொல்லவில்லை. உம்முடன் நான்கு வகையாகும் பெரும்படையுடன் போர்க்கு போயினுய். இப்படியான அசுரர்க்கரசனுன நீ குழந்தையுடன் போரிடச் செல்லுதல் ஓர் பெருமையான காரியமோ? 394

அமரருக் காக்கமும் அவுணர்க் கேக்கவும்
இமையவர் முதல்வனுக் கின்பும் நல்கினை
குமரனைக் கணங்களைக் குறித்து மன்னநீ
சமரினுக் கேகதல் தலைமை யாகுமோ.

சூரன் தோற்றுத்தான் ஓடினுன்போலும் என்கையால் தேவர்களுக்கு பெரும் சிறப்பான மகிழ்வையும் எமது குலத்தவரான அசுரர்க்கு ஏன் இப்படி என ஏக்கமும்; இதுவன்றி தேவர்தலைவனுன இந்திரனுக்கு வெற்றி எமக்குத்தான் என இன்பமும் உமது செயலாலே ஆக்கிக்கொடுத்தீர் ஓர் பாலனை பூதங்களை ஒரு பொருளாக எண்ணி போரிட செல்லல் உமது தலைமைப்பாட்டுக்கு பொருந்துமோ. 953

திகழ்ச்சிகொள் மேலவர் சிறியர் தம்மொடு
நிகழ்ச்சிகொள் போரிடை நேர்வே ரேயெனில்
புகழ்ச்சிய தில்லையால் பொருது வெல்லினும்
இகழ்ச்சியின் பாலதாம் எவரெ வர்க்குமே.

யாவர்கும் மேலாகத் திகழ்ந்திருக்கின்ற பெரியவர் சிறியர்களோடும் செய்ய வேண்டி வரப்பெற்ற போரில் போரிடச் செல்வரேயெனில் அது புகழ்ச்சியில்லை. அப்படி போரிட்டு வென்ருலும் அது இகழ்ச்சியின் பாற்பட்டது. எவரெவராயிருப்பார்க்கும் இது உண்மையான நிலையாகும் என்ருன் பானுகோபன். 396

சென்றது கிடந்திடச் சிறியன் என்னினும்
ஒன்றிவண் மொழிகுவன் உள்ளங் கோடியால்
இன்றிர வகன்றபின் ஏகி யாரையும்
வென்றிகொண் டேகுவன் விடுத்தி யாலெனை.

தந்தையே நடந்துபோனது கிடந்திட நான் அறிவிற் சிறியன் என்ருலும் ஒரு வார்த்தை இங்கு உமக்குமொழிவேன். அதை உமது உள்ளத்தில் நன்கு ஏற்றுக் கொள்ளும். அதாவது இன்று இரவு அகன்றபின் காலையில் யான் சென்று யாரையும் வெற்றி கொண்டுவருவேன். போரிட என்னை விடுப்பாயாக. 398

கொற்றவை சிறுவனைக் கொற்றங் கொள்வதும்
சுற்றுறு படையையான் தொலைக்குந் தன்மையும்
ஒற்றுவர் கண்டுமுன் உரைக்க எந்தைநீ
தெற்றென மகிழ்ச்சியிற் சிறந்து வைகுதி.

மகா சத்தியாகும் உமையின் சிறுகுழந்தையை வெற்றிகொள்வதும் அவனைச் சூழவரும் படையையான் தொலைக்கப்போகின்ற வீரச் செயலையும் தூதுவர்கண்டு இங்குவந்து சொல்ல நீ அற்புதமுடன்கேட்டு மகிழ்ச்சியிற் சிறந்திருப்பாயாக. 398

சூரிய வேற்படை கொண்டுடை யோனை
வீரர்கள் தம்மொடு வெற்றிகொ ளேனேல்
வாரலன் ஈண்டு மகிழ்ந்திறை நல்கும்
பேரா சாட்சி பிடிக்கிலன் என்றான்.

நீண்ட வேற்படையை உடைய குமரனை வீராதிவீரர்கள் யாரையும் வெற்றி கொள்ளாதிருந்தால் தந்தையே! நான் இங்குதிரும்பி வரமாட்டேன். இதுவன்றி தேவரீர் மகிழ்வுடன் எனக்கு தந்திடும் பெரிய அரசபதவியை நான்பற்றிக்கொள்ள மாட்டேன் என்றான் பானுகோபன். 399

என்பது கேட்டலும் எவ்வுல கிற்குந்
துன்பு புரிந்திடு சூரபன் மாவாம்
முன்பன் மகிழ்ந்து முகத்தெதிர் நிற்குந்
தன்முதல் வற்கிது சாற்றுதல் உற்றான்.

என்று இன்னவாறுதான் இரண்டாம்நாள் போரிட செல்லமுடியாது போன மையை பாசாங்கான வார்த்தையால் மருட்டி முன்னின்று நெஞ்சில் உரமிலாத வஞ்சனையால் வீரன்போன்று பானுகோபன் பேசியதைக் கேட்டலும் எவ்வுலகையும் ஆண்டு துன்பமே புரிகின்ற சூரபன்மன் மிகுந்த மகிழ்ச்சிகொண்டு தனது முகத்து எதிரில் நிற்கும் தனது புதல்வனுக்கு இது சொல்லுகின்றான். 400

மூவர்கள் தாங்களும் முச்சக முள்ள
தேவரும் ஐயிரு திக்குடை யோரும்
ஏவரும் ஏற்கினும் எம்பியை அட்ட
மேவலன் ஆற்றலை வெல்லரி தம்மா.

எனதுமகனே! இதனைக்கேள் பிரம்மாவிஷ்ணு உருத்திரன் என்னும் மூவர்களும் அல்லது சுவர்க்கம் மத்தியம் பாதளம் என்னும மூன்று உலகில் உள்ள எவரும்; எட்டுத்திக்குடன் மேலும் கீழுமாக எண்ணிக்கொண்ட பத்துத்திக்கில் உள்ள எவ ரும் எல்லாருமாககூடி திரண்டுவந்து போரிட ஏற்றாலும் எனது தம்பி தாரகனைக் கொன்ற எங்களது பகைவன் முருகக்கடவுளின் வலிமையை அடக்கிட முடியாது. 401

பன்னிரு செங்கை படைத்துள சேயோன்
தன்னொ டெதிர்ந்து சமர்த்தொழில் செய்வார்
என்னல தில்லை இவன்சிறி யோனென்
றுன்னலை வன்மையின் ஒப்பில னேகாண்.

பன்னிரண்டு அழகுடன் சிவந்த கைகளுடைய அப்பாலனுடன் எதிர்த்து போரிடு தற்கு வல்லமை உடையார் அல்லது போரிடுதற்குரிய பேறுடையார் நான் அல் லாது வேறுயாரும் இங்குஇல்லை மகனே! இவன் சிறியவன் என நீ நினையாதே வலிமையால் தனக்கு வேறொருவர் ஒப்பிலாதவன். 402

குன்றம் எறிந்திடு சூரிய வேற்கை
வன்றிற லாளனை வன்மையில் யானே
வென்றிடு கின்றனன் மேலது நிற்க
ஒன்றுள தைய உரைப்பது கேண்மோ.

ஆதலின் மகனே! கிரவுஞ்ச மலையை பிளவுசெய்து கொன்றிட்ட சூரிய வேற் படையைக் கைக்கொண்டருளும் மிகுவலிமையுடைய வீரன் குமரனை எனது வன்மை யால் யான் வென்றிடுகின்றேன் பின்னால் அதுநிற்ப; இப்போது என ஐயனே உனக்கு கூறுகின்றது ஒன்று உண்டு அதனை நான் சொல்லப் போகின்றேன் கேட்டுக் கொள். 403

ஒற்றென வந்துநம் மூர்அலை வித்துப்
பற்றலர் நீடு படைக்கிறை யாகுங்
கொற்ற வனைத்தனி கூவி மலைந்து
செற்றனை ஏகுதி சேனையொ டென்றான்.

தூதுவன் எனும்படி நமது ஊரில்வந்து எமது ஊரை அலேயவைத்து துன்புறுத்தியவனும்; பகைவராகும் அவர்களின் பெரும் படைகக்கெல்லாம் மேலாம் தலேவனுகும் தனி வீரன் வீரவாகு என்பானே; நீ தனியே உன்னுடன் போரிடும்படி அழைத்து அவனுடன் போரிட பெருஞ்சேனேயுடன் சென்று; போரிட்டு அவனேக் கொன்று வருவாயாக என்றான் சூரபன்மன். 404

தந்தை புகன்றிடு தன்மையை ஓரா
எந்தை பிராற்குளம் இத்திற மாமேல்
முந்திறை தன்னின் முடிப்பனி தென்ன
மைந்தனே நோக்கி மகிழ்ந்தனன் மன்னன்.

தந்தை புகன்ற வார்த்தைகளே பானுகோபன் கேட்டுணர்ந்து சொல்வான் எந்தைபெருமானே! உமது உள்ளம் இப்படியான முறையாயின் இறைப்பொழுது முன்பாக யான் இதனே முடித்துத்தருவேன் எனக் கூறிட அப்போது சூரபன்மன் தனது மகனேநோக்கி மகிழ்வுற்றான். 405

அடுசமர் செய்வகை ஆங்கவன் ஏக
விடையது நல்கி வியத்தகு மன்னன்
இடையுறு சூழ்ச்சிக ளியாவும் இகந்து
மிடைதரு தொல்வள மேவி இருந்தான்,

இவ்வாறு கூறிய பானுகோபன் தந்தையின் ஏவல்படி கொலேநிகழும் போர் புரிந்திட அங்கு போயிட; அவனுக்கு விடைகொடுத்தபின் பலராலும் வியப்புறும் மேன்மைகள் கொண்ட சூரபன்மன் தனது மனத்திடத்து கொண்ட கவலேமிகுதியால் எப்படி வெற்றிகொள்வது எனும் சூழ்ச்சிகளே விடுத்து தன்னிடத்து உள்ள செல்வ வளங்களே அனுபவித்திருந்தான். 407

தாதைதன் ஏவல்த லேக்கொடு சென்றே
ஆதவன் மாற்றல ஞகிய மைந்தன்
ஏதமில் தன்குலம் ஏகலும் அங்கண்
தூதுவர் பற்பலர் துண்ணென வந்தார்.

தந்தையின் ஏவலினே பானுகோபன் தலேமேல் ஏற்றுக்கொண்டு குறைவிலாத தனது அரண்மனேக்கு போதலும் அவ்வழியாக தூதுவர் பலர் பலர் வேகமுடன் ஓடோடி வந்தார்கள். 407

துங்கம துற்றுள சூர்தரு மைந்தன்
செங்கம லம்புரை சீறடி தன்னேத்
தங்கண் முடிக்கொடு தாழ்ந்தனர் நின்றே
இங்கிவை கேட்க எனமொழி குற்ருர்.

மேன்மை பெற்றுள்ள சூரபன்மன் பெற்ற புதல்வனது செந்தாமரையை ஒத்த செவ்வியுடைய பாதங்களே தூதுவர்கள் தலேயால் வணங்கி எழுந்து முன்நின்று கொண்டு அரசகுமாரனே! இங்கு இவற்றைக் கேட்க என மொழிகின்ருர். 408

மன்னவன் இன்றுபோய் மலேந்து மீண்டபின்
ஒன்னலன் மாட்டுறும் உலப்பில் பூதர்கள்
இந்நகர் வடாதுசார் எய்திக் காவலோன்
தன்னுயிர் கொண்டனர் தானே சிந்தினர்.

எங்கள் அரசன் இன்றுபோய் போரிட்டு மீண்டபிற்பாடு பகைவர்பக்கராக உள்ள அளவுகடந்த அழிவிலாப் பூதங்கள் இந்நகரின் வடபுறத்து வந்தடைந்து அங்கு காவல் கொண்டிருந்த காவற்தலேவன் அதிகோரனின் உயிரைக் கொன்று அங்குள்ள எமது சேனேயை அழித்தார்கள். 409

தகுவர்தம் மாப்படை தலையழிந்தபின்
அகலிரு விசும்பளந் தாண்டு நின்றிடு
சிகரியைக் கீண்டுதஞ் செங்கை யாலெடா
வெகுளியொ டளக்கரின் மீது வீசினர்.

பகைவருடைய பெரும் படையானது எமது காவல்தலைவனைக் கொன்ற பிற்பாடு அகன்ற வானத்தை அளப்பது போன்று நின்றதெரு பெரிய கோபுரத்தை தமது சிவந்த கைகளால் எடுத்து மிகுகோபத்துடன் சமுத்திரத்தின் மேல் வீசினர்கள். 410

நீடிய சிகரிபோய் நேமி புக்கபின்
மாடுறு வடபுல மதிலை முற்றவுஞ்
சாடினர் மீண்டனர் தலைவ இந்நகர்
கோடில தாங்கடற் குட்டம் போன்றதே.

நீண்டகோபுரம்போய் கடலில் வீழ்ந்த பின்பு அதன்பக்கராக நிலவிநின்ற வடபுறத்து நெடியமதிலை முற்றவும் உடைத்து வீழ்த்தி அழித்து விட்டுச் சென்றனர். இதனால் எம்தலைவா! இந்த நகரம் கரையில்லாது உடைந்துள்ள கடல் போன்றது. 411

என்றலும் வினவியே ஏந்தல் தன்புடை
சென்றிடும் வயவரிற் சிலரை நோக்கியே
வன்றிற லுடையநம் மரபில் தச்சனை
ஒன்றொரு கணத்தின்முன் உய்த்திர் என்னவே.

என்று தூதுவர் கூறியவற்றை தலைவனான பானுகோபன் கேட்டு தனது பாங்கராக வந்திடும் வீரரிற் சிலரை நோக்கி நீங்கள் உடன் சென்று மிக்கவலியுடன் கூடிய எமது தச்சனை ஒருகணத்தின்முன் கொண்டுவருவீராக எனக் கூறிடுதலும், 412

ஆயவர் விரைந்துபோய் அவுணத் தச்சனை
மேயினர் இறைமகன் விளித்து ளானெனக்
கூயினர் வருகெனக் கொடுவந் துய்த்தனர்
மாயிருங் கதிரைமுன் வெகுண்ட மைந்தன்முன்.

அந்த வீரர் உடன் விரைவாகச் சென்று அசுரதச்சனை அடைந்து அவனை நோக்கி உன்னை எங்களது அரசன் புதல்வன் அழைத்துள்ளான் என்று அவனை கூவி வரவழைத்துக்கொண்டு முன்பு பெரும் சூரியனைவெகுண்ட பானுகோபன் முன்னர் விடுத்திட்டனர். 413

தன்னடி வணங்கியே தச்சன் நிற்றலும்
மன்னவர் மன்னவன் மதலை வல்லைநீ
இந்நகர் வடமதில் சிகிரி ஏனவும்
தொன்னெறி அமைக்கெனச் சொற்றுத் தூண்டினான்.

அசுரதச்சன் அதுகால் பானுகோபனது பாதங்களை வணங்கி முன்னிற்றலும்; அரசர்க்கரசனான சூரபன்மன் மகன் அவனைநோக்கி அசுரதச்சனே உடனாகவே நீ சென்று அழிவுறற எமது வடபுறத்து மதிலையும் ஏனையவற்றையும் பழமைபோல் அமைத்திடுவாய் என சொல்லி அவனைச் செல்லவிடுத்தான். 414

எல்லைமற் றன்னதின் எல்லை தன்பகை
கல்லுயர் மொய்ம்பன்மா காயன் என்பதோர்
வல்லவு ணன்தனை வருதி என்றுகூய்
ஒல்லையின் இனையதொன் றுரைத்தல் மேயினான்.

இந்த நிகழ்ச்சியின் பிற்பாடு சூரியன்பகைவனுன பானுகோபன் மலைபோன்று பருத்த தோளுடைய மாகாயன் என்னும் பேருடைய வன்மை பூண்ட அசுரன் ஒருவனை இங்குவாவென அழைத்து உடனுக அவனிடம் இதொருவார்த்தையை சொல்லலுற்றுன்.
415

சேயுயர் வடமதிற் சிகரி தன்னிடைப்
போயினை அந்நெறி புரத்தி யால்எனு
ஆயிரப் பத்தெனும் அனிக வெள்ளமோ
டேயினன் தானுறும் இருக்கை எய்திஞன்.

மிக உயர்ந்த எமது வடபுறத்து மதிலில் உள்ள கோபுரம் அதனிடை நீ சென்று அத்திசையை காவல் கொள்வாய். உனக்கு துணையாக பதிஞயிரம் வெள்ளம் அசுரரை சேனையாக வைத்திருப்பாயாக என்று அவனை அந்த தொகையுடைய சேனையுடன் விடுத்தபின்பு பானுகோபன் தனது இருப்பிடம் சென்றுன். 416

அத்துணை ஏகியே அவுணர் கம்மியன்
உத்தர நெடுமதில் ஓங்கு கோபுரஞ்
சித்திர வுறுப்பொடு சித்தத் துன்னியே
வித்தக வன்மையால் விதித்துப் போகவே.

பானுகோபன் விடுத்த மாத்திரத்து முன்சென்ற அசுரதச்சன் அங்கு வடபுறத்து அழிவுற்ற பெருமதிலை ஓங்கிய கோபுரத்தை தனது மனதால் நினைந்து மிகு வித்தகவன்மையால் சித்திரப்பாட்டுடன் கூடிய தொன்றுக விளங்கிட செய்து வைத்து போயினன்.
417

அடுகரி புரிவிதேர் அவுணர் தானையாங்
கடலுடன் சென்றுமா காயன் என்பவன்
வடமதிற் சிகரியின் வாய்தல் போற்றியே
சுடர்கெழு தீபிகை சுற்ற வைகிஞன்.

கொலைசெயும் யானை குதிரை தேர் காலாளாகும் அசுரவீரர் எனும் சேனையாகும் கடலுடன்சென்று மாகாயன் என்பவன் வடதிசை மதிலில்உள்ள கோபுர வாய்தனில் காவல்கொண்டு அவ்விரா முழுவதும் சுடர்கொண்ட தீவர்த்திகளுடன் அசுரவீரர் சூழ்ந்திருப்ப வைகிஞன்.
418

ஆயது நிகழ்வுழி ஆழி வெற்பின்வாய்
ஞாயிறு நணுகநள் ளிருளின் யாமினி
போயது மெய்ப்புலன் புந்தி சேர்வுழி
மாயைய தகன்றிடும் வண்ணம் என்னவே.

அவ்வாருகிய கருமங்கள் நிகழ்ந்திட கிழக்கு சமுத்திரத்திற்கப்பாலுள்ள உதய மலையிடத்தாக சூரியபகவான் வந்துசேர்ந்திட அதுவேளை கொடிய இருளின் படலமானது நீங்கிப் போயது. உண்மை அறிவு ஒருவன்பால் கூடும் நேரத்து மனதில் இருக்கும் மாயபந்தங்கள் அகன்றுபோகும் வண்ணம் இப்படித்தான் எனக் காட்டல் போல்.
419

கங்குலென் றுரைபெறு கடவுட் கற்புடை
நங்கையை மேவுவான் நயப்பு மேற்கொளா
அங்கவ ளைத்தொடர்ந் தணுகு வானெனச்
செங்கதிர் அண்ணல்கீழ்த் திசையில் எய்திஞன்.

இரவு என்று சொல்லப் பெறுகின்ற கடவுள் தன்மை பொருந்திய கற்புடைய பெண்ணை கூடும்படி நயம்கொண்டு அங்கு அவளைத் தொடர்ந்து அணுகுவான் என்ன சிவந்த கிரணமுடைய சூரியதேவன் கிழக்குத் திக்கில் வந்துசேர்ந்தான். கற்புடையமகளிரை விரும்பினுலும் எய்தலாகாது என்பதை இரவு நீங்கலும் சூரியதேவன் வருகையும் காட்டி நின்றது.
420

இரண்டாம்நாட் சூரபன்மன் யுத்தப்படலம் முற்றிற்று.

# 5. மூன்றாநாட் பானுகோபன் யுத்தப் படலம்

இரவிவந் துற்றுழி எழுந்து சூர்மகன்
மரபுளி நாட்கடன் வழாமல் ஆற்றியே
செருவினில் உடைந்திடு சிறுமை சிந்தியாப்
பொருவரு மாயையைப் போற்றல் மேயினான்.

சூரியதேவன் உதயமாகி வந்துசேர்ந்த நேரத்து சூரபன்மன் மகன் பானு கோபன் அன்று தான் முறைப்படி செய்யவேண்டிய நாட்கடன்களைத் தவறிலாது செய்து கொண்டு, முந்தியநாட் போரினில் தாங்கள் தோற்று நின்ற சிறுமைகளை நினைந்து அதற்காக நிவர்த்தி வேண்டி நிகரற்ற மாயவளைப் போற்றுதல் புரிந் தான். 1

போற்றினன் முன்னுறு பொழுதின் மாயவள்
கோற்றொழில் கன்றிய குமரன் முன்னரே
தோற்றினள் நிற்றலுந் தொழுத கையினன்
பேற்றினை முன்னியே இனைய பேசுவான்.

மாயவளைப் போற்றித் தியானம் செய்தபொழுதில்; மாயவளானவள் மேலான செங்கோலின் நீதித் தொழிலைப் புறக்கணித்துள்ள பேரனாகும் பானு கோபன் முன்பாகத் தோன்றி நிற்றலும், அப்போது அவளைத் தொழுத கையுடன் ஒரு பேற்றினை நினைந்துகொண்டு இவற்றைப் பேசுவான். 2

தாதைதன் அவ்வைகேள் சண்மு கத்தவன்
தூதுவ னோடுபோர்த் தொழிலை ஆற்றினேன்
ஏதமில் மானமும் இழந்து சாலவும்
நோதக உழந்தனன் நோன்மை நீங்கினேன்.

எனது தந்தையின் தாயே கேள்! நான் சண்முகப்பெருமானின் தூதுவ னோடு போரிட்டேன். அக்கால், எக்காலம் கெட்டிடாத எனது மானமும் இழந்து மிகவும் நொந்து வேதனைப்பட்டுக் கொண்டு எனது மேம்பாடுகள் அனைத் தும் நீங்கிக் கொண்டேன். 3

துன்னல ரோடுபோர் தொடங்கி ஈற்றினில்
பின்னிடு வார்பெறும் பிழையும் பெற்றனன்
என்னினி வரும்பழி இதற்கு மேலென்றான்
அன்னது மாயைகேட் டறைதல் மேயினாள்.

பகைவரோடு போர்தொடங்கி, முடிவிலே போரிட முடியாது தோற்றோடு வார் அடைகின்ற பெரும் பிழையையும் நான் அடைந்துகொண்டேன். இதற்கு மேலாக எமக்கு இனி என்ன பழி வருமோ அறியேன் என்றான் பானுகோபன். அந்த வார்த்தைகளை மாயவள் கேட்டு, சொல்லத் தொடங்குவாள். 4

மறைநெறி விலக்கினை வானு ளோர்தமைச்
சிறையிடை வைத்தனை தேவர் கோமகன்
முறையினை அழித்தனை முனிவர் செய்தவங்
குறையுறு வித்தனை கொடுமை பேணினாய்.

மைந்தனே! நீயோ வேத நெறிகளை விலக்கினாய். தேவர்கள் யாரையும் சிறையிடத்து வைத்தாய். முனிவர்கள் செய்கின்ற தவத்தைக் குறைவுடைதாகச் செய்தாய். கொடுமையையே நீ பேணிக் கொண்டு நின்றாய், 5

ஓவருந் தன்மையால் உயிர்கள் போற்றிடும்
மூவரும் பகையெனின் முனிவர் தம்மொடு
தேவரும் பகையெனின் சேணில் உற்றுளோர்
ஏவரும் பகையெனின் எங்ஙன் வாழ்தியால்.

இவைகளால்; ஓயாது தன்மையால் எல்லா உயிர்களையும் படைத்துக் காத்து அழிக்கின்ற பிரம்மா, விஷ்ணு, உருத்திரனென மூவரும் உங்கட்குப் பகை என்றால்; முனிவர்களுடன் தேவர்களும் உங்கட்குப் பகை என்றால்; இதுவன்றி உயர் வான வான உலகில் வாழ்ந்திடும் எல்லாரும் உங்கட்குப் பகை என்றால், எங்கு எப்படி நீங்கள் சிறந்து வாழப் போகிறீர்கள்?
6

பிழைத்திடு கொடுநெறி பெரிதுஞ் செய்தலாற்
பழித்திறம் பூண்டனை பகைவர் இந்நகர்
அழித்தமர் இயற்றிட அவர்க்குத் தோற்றனை
இழைத்திடும் விதியினை யாவர் நீங்கினார்.

மகனே! இவ்வாறான நிலை உனக்கு ஏற்படுவதற்கு ஆகவேண்டிய காரணம் உலகில் பிழையான நெறிகொண்டு பிறர் துயருறும் படியான செயல் பலவற்றை நீ செய்தலால் பெரும் பழியினைச் சுமந்து கொண்டாய். அப்பழியால் பகைவர் இந்நகரை அழித்துப் போர்புரிந்திட, நீ அவர்க்குத் தோற்றனை. இதுவெல்லாம் இப்படி நடைபெறட்டும் எனத் தலையினில் எழுதப்பெற்ற விதியினை யார் நீங்கினார்கள்?
7

தூற்றிவண் பற்பல நுவலின் ஆவதென்
மாற்றருந் திறலுடை மன்னன் மைந்தநீ
சாற்றுதி வேண்டுவ தருவன் என்றலும்
ஆற்றவும் மகிழ்சிறந் தனையன் கூறுவான்.

உனக்கு முன்பாக நின்று நுட்பமாக நான் இவற்றை எல்லாம் எடுத்து ஓதினாலும் அதனால் ஆகப்போவது ஒன்றுமில்லை; எவராலும் மாற்றிட முடியாத திறமை உடைய அரசனாகும் சூரபன்மன் புதல்வா! நீ இப்போது வேண்டியதைக் கேள் தருகிறேன் என மாயவள் கூறி நிற்றலும், அதுகேட்ட பானுகோபன் மிகவும் மகிழ்ச்சி அடைந்து உள்ளம் சிறந்து இதனைச் சொல்வான்; 8

நின்றமர் இயற்றியே நென்னல் என்றனை
வென்றனன் ஏகிய வீர வாகுவை
இன்றனி கத்தொடும் ஈறு செய்திட
ஒன்றொரு படையினை உதவு வாயென்றான்.

முன்னாள் என்னுடன் நின்று போரிட்டு என்னை வென்றுபோன அந்த வீர வாகுவை, இன்று அவனுடைய பெரும்படையோடும் நான் முடிவு செய்திட வல்ல தன்னந்தனியான வலிகொண்ட ஒரு படைக்கலத்தை, எனக்கு உதவிடுவாயாக என்றான்.
9

அடல்வலி பிழைத்திடும் அவுணன் சொற்றன
கெடலரும் மாயவள் கேட்டுத் தன்னொரு
படையினை விதித்தவன் பாணி நல்கியே
கடிதினில் ஒருமொழி கழறல் மேயினாள்.

தனது போர் வலி யாவும் தப்பி நின்று, பானுகோபன் சொன்ன இந்த வார்த்தையை எக்காலமும் கெடாத மாயவள் கேட்டு, உடனாகத் தனது ஒரு மிகு வலியுடைய மாயப்படையைப் படைத்து; அதனைப் பானுகோபனின் கையில் கொடுத்து, உடன் இந்த வார்த்தைகளையும் சொல்கின்றாள் மாயவள். 10

மற்றிது விடுத்தியால் மறையில் கந்தவேள்
ஒற்றனைப் பிறர்தமை உணர்வை வீட்டியே
சுற்றிடும் வாயுவின் தொழிலுஞ் செய்யுமால்
இற்றையிற் சயமுன தேகு வாயென்றாள்.

இந்தப் படையை மறைவாக நின்று நீ விடுப்பாயாகில், அப்படை முருகப் பெருமானுடைய தூதுவனை, பிறர்தம்மை அவர்கள் கொண்ட உணர்ச்சியை அழித்து; காற்றைப் போன்று மேலே தூக்கிச் செல்கின்ற செயல்களையும் செய்யும். இதன்றி வெற்றியும் இன்று உனக்காகும். நீ போரிடச் செல்வாயாக என மாயவள் கூறினாள். 11

உரைத்திவை மாயவள் உம்பர் போந்துழி
வரத்தினிற் கொண்டிடு மாய மாப்படை
பரித்ததன் நெருநலிற் பழியை நீங்கியே
பெருத்திடும் பெருமிதப் பெற்றி கூடினான்.

இந்த வார்த்தைகளை மாயவள் உரைத்து, வானில் மறைந்துபோன நேரத்து, மாயவளின் வரத்தினால் பெற்ற மாயப் படையைக் கைக்கொண்ட பானுகோபன், நேற்று போரினில் தான் அடைந்துகொண்ட பழியினை நீங்கியவனாய் சந்தோஷ மிகுதியால் பெருத்திடுகின்ற பெருமிதத்தையுடைய ஒரு நிலையை அடைந்துகொண்டான். 12

கூர்ப்புறு பல்லவங் கொண்ட தூணியைச்
சீர்ப்புறத் திறுக்கிமெய் செறித்துச் சாலிகை
கார்ப்பெருங் கொடுமரம் கரங்கொண் டின்னதோர்
போர்ப்பெருங் கருவிகள் புனைந்து தோன்றினான்.

உடனாகக் கூர்கொண்ட அம்புகள் செறித்து வைத்த அம்புக்கூட்டை எடுத்து சீருடைய பின்முதுகில் கட்டி இறுக்கி, மேனியில் கவசத்தைக் கட்டி இறுக்கி; மேகம்போன்ற வில்லைக் கையில் எடுத்து இவை போன்ற பல போர்க் கருவிகளையும் அணிந்து கொண்டு தோன்றினான் பானுகோபன். 13

காற்படை அழற்படை காலன் தொல்படை
பாற்படு மதிப்படை பரிதி யோன்படை
மாற்படை அரன்படை மலர யன்படை
மேற்படு சூர்மகன் எடுத்தல் மேயினான்.

அவைகளுடன் வாயுவாஸ்த்திரம்; அக்கினியாஸ்த்திரம் முதிய இயமாஸ்த்திரம்; பெருமையுடைய சந்திராஸ்த்திரம்; சூரியாஸ்த்திரம்; நாராயணாஸ்திரம்; சிவப்படைக்கலம்; தாமரைமலர் ஆசனமுடைய பிரமதேவரின் பிரமாஸ்த்திரம் ஆகிய இப்படைகளையும் யாவர்க்கும் மேம்பட்ட சூரபன்மன் மகன் பானுகோபன் எடுத்துக்கொண்டான். 14

மேனவப் படைமதில் விரவு சாலையுள்
வானவப் படைகொடு வாய்தல் போந்தனன்
ஆனவப் படைதரும் ஆடல் வில்லினன்
தானவப் படைஞர்கள் தொழுது தாழ்ந்திட.

மேலே சிறந்த ஆயுதங்களாலே அமைக்கப்பெற்ற மதில் சூழ்ந்த ஆயுத சாலைக்குள்ளிருந்த தேவர்களது படைகளை எடுத்துக்கொண்டு, பானுகோபன் தனது அரண்மனை வாயில் இடமாக வந்தான். அவ்வாறாக அப்படைகள் தரும் பல வெற்றிகளுடன் கையில் பிடித்த வில்லுடன் பானுகோபன் வருகை கண்டு அசுரப் படைவீரர்கள் அவனை தொழுது தாழ்ந்திடும்படியாக. 15

சயந்தனைப் பொருதிடுந் தார்பெய் தோளினன்
சயந்தனைப் பொருதநாட் சமரிற் கொண்டதோர்
சயந்தனத் தேறினன் தகுவர் யாவருஞ்
சயந்தனைப் பெறுகென ஆசி சாற்றவே.

வலியால் மலையை ஒத்திடும் மாலைகள் நிரம்பிய தோள் உடைய பானுகோபன், முன்னர் சயந்தனுடன் போரிட்ட நாள் அப்போரிற்குச் சென்று கொண்ட ஓர் அழகிய தேரில் ஏறிக்கொண்டான். அதுகண்ட அசுரர் யாவரும் அரசே! இன்று நீ வெற்றியினைப் பெறுவாயாக என ஆசிகள் பல சொன்னார்கள்;

ஒப்பறு செறுநர்மேல் உருத்துப் போர்செயத்
துப்புறு சூர்மகன் தொடர்கின் றானெனச்
செப்புறும் ஒற்றர்கள் தெரிந்து போமென
எப்புறத் தானையும் எழுந்து போந்தவே.

ஒப்பு அற்ற பகைவர் மேலாகக் கோபமுடன் போரிட, வலிமை மிகுந்த சூரபன்மன் மகன் செல்கின்றான் என்று; செய்திகளை ஓடி ஓடி உரைத்திடும் தூதுவர்கள் அறிந்துசென்று, ஆங்காங்கு இருந்திடும் அசுரர்களிடம் சென்று நீங்கள் போரிடுதற்குச் செல்லுங்கள் எனக் கூறுதலும், அதுவேளை எப்புறத்தில் இருந்த சேனைகளும் எழுந்துபோயின. 17

பரிபதி னாயிர வெள்ளம் பாய்மத
கரிபதி னாயிர வெள்ளங் காமர்தேர்
ஒருபதி னாயிர வெள்ளம் ஒப்பிலா
இருபதி னாயிர வெள்ளம் ஏனையோர்.

குதிரைகள் பதினாயிர வெள்ளம் என்னும் தொகையும்; மதநீர் பாயும் யானைகள் பதினாயிர வெள்ளமும்; அழகிய தேர்ப்படைகளும் ஒரு பதினாயிர வெள்ளம் என்னும் தொகையும்; காலாட் படை வீரராய மற்றையோர் இரு பதினாயிரம் வெள்ளம் என்னும் தொகையுடையோராக நால்வகைச் சேனையும் தொகை கொண்டது. 18

நாற்படை இவ்வகை நடந்து கோமகன்
பாற்பட விரவின பரவு பூழிகள்
மாற்படு புணரிநீர் வறப்பச் சூழ்ந்ததால்
மேற்படு முகிலினம் மிசைய வந்தென.

இவ்வாறு கணக்குடைய நான்கு வித படைகளும் சென்று அசுரகுமாரன் பாங்கராக நிரந்திட போர்க்களம் நோக்கிச் சென்றிடலால், எழுந்து பரவிடும் புழுதி சென்று கடலின் நீரும் வற்றிடுமாறு எங்கும் வளைந்துகொண்டது; எது போலுமெனில், கடல்மீது அமர்ந்து முகில் கூட்டங்கள் நீர் உண்டு போதற்குப் படிந்துள்ள தன்மை போன்று 19

திண்டிறல் அனிகமீச் சென்ற பூழிகள்
மண்டல முழுவதும் வரைகள் யாவையும்
அண்டமும் விழுங்கியே அவைகள் அற்றிட
உண்டலின் அடைத்தன உவரி முற்றுமே.

மிக்க வலிமையுடைய சேனைகள் மீதாக எழுந்த புழுதி இப்பூமி மண்டலம் முழுவதும் மலைகள் யாவையும், அண்டங்கள் அனைத்தையும் மூடி மறைத்து அவைகள் தோற்றம் இல்லாது போகும்படி உண்டதனல் அங்குள்ள கடல்கள் தெரிந்திடாதபடி அடைத்துக்கொண்டன. 20

முரசொடு துடிகுட முழவஞ் சல்லரி
கரடிகை தண்ணுமை உடுக்கை காகளம்
இரலைக ளாதியாம் இயங்கள் ஆர்த்தன
திருநகர் அழியுமென் றரற்றுஞ் செய்கைபோல்.

முரசப் பறையுடன் துடி, குடமுழா, சல்லரி, கரடிகை, மத்தளம், உடுக்கை, காகளம், கொம்புவாத்தியம் ஆதியான வாத்தியங்கள் முழக்கஞ் செய்தன; அந்த ஓசையானது இந்தத் திருவுடைய பெருநகரம் வீரமகேந்திரபுரம் இன்று அழியப்போகின்றது எனக் கவலை மிகுதியால் அழுகின்ற ஓசை போன்று இருந்தது. 21

உழையுடைக் கற்பினர் உரையிற் சென்றிடா
தழையுடைப் பிடிக்குநீர் தணிக்கும் வேட்கையால்
புழையுடைத் தனிக்கரம் போக்கிப் பொங்குசூல்
மழையுடைத் திடுவன மதங்கொள் யானையே.

மதயானைகள் யாவும் தம்மீதிருந்து செலத்துகின்ற அசுரப் படைவீரர், இப்படிச் செல் என இடும் கட்டளைகளின்படி சென்றிடாது தங்களது பெண்யானைகள் நீர்வேட்கை கொண்டதை உணர்ந்து, அதைத் தணித்திடும் விருப்பத்தால் துவாரமுடைய தமது துதிக்கைகளை நீட்டிக் கருப்பொங்கி நிற்கின்ற மழைமேகங்களை உடைத்தெறிந்து கொள்கின்றன. 22

கார்மிசைப் பாய்வன கதிர வன்தனித்
தேர்மிசைப் பாய்வன சிலையிற் பாய்வன
பார்மிசைப் பாய்வன பாரி டத்தவர்
போர்மிசைப் பாய்வன புரவி வெள்ளமே.

இப்பால் படையாகச் சென்றிடும் குதிரை வெள்ளங்கள் வேகமிகுதியால் மேகத்திடத்துப் பாய்வன; சூரியனுடைய தனியான தேர்மீது பாய்வன; மலையிற் பாய்வன; பூமியிற் பாய்வன; வெற்றியுடன் போரிடும் பூதங்கள் மேலும் பாய்வன. 23

அருளில ராகிய அவுணர் மாண்டுழித்
தெருளுறும் அவ்வவர் தெரிவை மாதர்கள்
மருளொடு துன்புறும் வண்ணங் காட்டல்போல்
உருளுவ இரங்குவ உலப்பில் தேர்களே.

தேர்கள் வேகமுடன் சென்றிடும்போது அதன் சில்லுகள் உருண்டு கீச்சிடுகின்ற ஒலியும் இயல்பும் எப்படி எனில், அருள் இல்லாத; இரக்கம் இல்லாத அசுரர்கள் போர்க்களத்து மாண்டநேரத்து, அதனைத் தெரிந்துகொண்ட அவர்களது மனைவியர்கள் ஐயோ! என அலறி அடித்து விழுந்து உருண்டு அழுகின்ற தன்மை போன்று தேரின் சில்லுகளும் உருண்டு இரங்கித் துயருறுவன. 24

கரிந்திடு மேனியுங் கணிப்பில் தானவர்
தெரிந்திடு மாலைசூழ் செய்ய பங்கியும்
விரிந்திடு நஞ்சுபல் லுருவ மேவுறீஇ
எரிந்திடும் அங்கிகான் றென்னத் தோன்றுமே.

கறுத்த மேனியுடன் விளங்கிடும் கணக்கற்ற அசுரர்கள் யாவரும்; பலரும் பார்த்தறியும்படியாக அணிந்துள்ள பூமாலை சூடிய சிவந்த சடையும், நாகத்தின் பல்போன்று கடைவாயில் விரிந்திடும் நச்சுப் பல்லும் உடையராய் சென்றிடுதல் இந்நகரினை எரித்திடும் நெருப்பு சுடர் விட்டுச் செல்வது போன்று தோன்றும். 25

வேறு

பொங்கு வெங்கதிர் போன்றொளிர் பூணினர்
திங்கள் வாளெயிற் றூர்முடி செய்யவர்
துங்க அற்புதர் பொன்புகர் தூங்குவேல்
அங்கை யாளர் அசனியின் ஆர்த்துளார்.

பொங்கிடும் வெப்பக் கதிருடைய சூரியன்போன்று ஒளிர்கின்ற ஆபரணமுடையராய்; இளம்பிறை போலும் வளைந்த கூரிய பற்கள் உடையவராய்; சிவந்த சடையுடையவராய்; மிகவும் அற்புதமான வலியுடையவராய் பொன் மாலை தூங்கிடும் வேலினைக் கைக்கொண்டாராய்; இடிபோன்று சத்தமிட்டவாறு இந்த அசுரர் செல்கின்றனர். 26

நீள மாக்கு நெருநலில் போந்துபின்
மீளு தற்குடைந் தார்தமை வீட்டுதும்
வாளி னுக்கிரை யாவென்று வாய்மையால்
சூளி சைத்துத் தொடர்ந்தனர் வீரரே.

நெடியதான இப்போருக்கு நேற்று வந்து, பின்னர் இன்று திரும்ப வருவதற்கு அஞ்சி யாரேனும் இங்கு இருந்தால் அவரையெல்லாம் எமது வாளுக்கு இரையாக வெட்டி வீசிடுவோம் என்று உண்மையாகும் சபத வார்த்தைகள் பேசிக்கொண்டு கூடிச்சென்றார்கள் அசுர வீரர்கள்; வீரத்தின் சிறப்பு சொல்லப்பட்டது. 27

ஓடு தேரின்உ வாக்களின் மானவர்
நீடு கையின்நி வந்துறு கேதனம்
ஆடி விண்ணை அளாவுவ தாருவைக்
கூட வேகொல் கொடியெனுந் தன்மையால்.

ஓடுகின்ற தேர் மீதிலும், யானை மீதிலும், வீரர்களது நீண்ட கைகளிலும் நிலவிக் கொண்ட கொடிகளானவை ஆடி ஆடி வானில் அளாவுவன; வான உலகில் உள்ள தேவ விருட்சங்களைக் கொடிகள் என்னும் இயல்பால் அணைத்திடுவதற்காமோ எனும்படி தோன்றுவன. 28

கோலின் ஓங்கு கொடியுங் கவிகையுந்
தோலும் ஈண்டலிற் சூழிரு ளாயின
மாலை சூழ்குஞ்சி மானவர் வன்கையில்
வேலும் வாளும் பிறவும்வில் வீசுமே.

கோலாகும் பிடிகளில் நீண்ட கொடியும், குடையும், தோலும் ஆகிய இவைகள் எங்கும் நெருங்கி வருவதால் எங்கும் இருளாக மூடிட அவைகளூடு மாலை சூழ்ந்த சடையுடைய வீரர்கள் கையிற் பிடித்த வேலும் வாளும் பிற படையும் ஒளிவீசி அந்த இருளில் தோன்றுவன. 29

இன்ன தன்மை இயன்றிடத் தானைகள்
துன்னு பாங்கரிற் சூழ்ந்து படர்ந்திட
மன்னன் மாமகன் மாநகர் நீங்கியே
பொனன வாம்புரி சைப்புறம் போயினன்.

இன்ன தன்மைகள் பொருந்தி நிகழ்ந்திட சேனைகள் நெருங்கிடும் பான்மையில் பக்கம் சூழ்ந்து சென்றிட, அரசனாகும் சூரபன்மனின் மிகு வீரனான பானுகோபன் தனது பெருநகரம் நீங்கியே பொன்னாகி விளங்கிடும் தனது மதிற்புறம் போயினன். 30

போய காலைப் புறந்தனில் வந்திடும்
வேயி னோர்களின் வெம்பரி மாமுகம்
ஆயி ரங்கொள் அவுணனை நோக்கியே
தீய சூர்மகன் இன்னன செப்புவான்.

அவ்வாறு பானுகோபன் போயிட்ட நேரத்தில் தனது புறமாக வந்திடுகின்ற தூதுவர்களில் கொடுமை மிகுந்த ஆயிரம் குதிரை முகமுடைய அசுரனைப் பார்த்து, தீயவனான சூரபன்மன் மகன் பானுகோபன் இதனைச் செப்பிடுகின்றான்;

ஈசன் விட்ட குமரன் இருந்திடும்
பாச றைக்களந் தன்னிற் படர்ந்துநீ
மாசி லாவிறல் வாகுவைக் கண்ணுறீஇப்
பேச லாற்றுதி இன்னன பெற்றியே.

சிவபிரான் எம்மீது போரிட விடுத்துள்ள குமரக் கடவுள் இருந்திடுகின்ற அந்தப் பாசறைத் தலத்திடத்தாக நீ சென்று அங்கு நீ மாசில்லாத வீரவாகு தேவனைக் கண்ணுற்று, அவனிடத்து நான் சொல்லிடும் இத்தன்மைகளாகப் பேசிடுவாயாக. 32

மன்னன் ஆணையின் மண்டமர் ஆற்றியே
தன்னை இன்று தடிந்திசை பெற்றிட
உன்னி வந்தனன் ஒல்லையின் ஏகுதி
முன்னை வைகலிற் போரென்றும் உன்னலாய்.

சூரபன்மனது ஆணைப்படி இன்று யான் மிகக் கொடியதான போரினைப் புரிந்து வீரவாகுவான உன்னைத் தனித்து வெற்றிகொண்டு கொலைபுரிய நினைந்து வந்து இருக்கின்றேன். நீ வீரனாக இருந்தால் உடன் புறப்பட்டு வருவாயாக, நேற்று நடந்துள்ள போர் போன்று இன்று நடந்திடும் என நீ நினைக்க வேண்டாம். 33

என்ற மாற்றம் எனதுரை யாகவே
வென்றி யோடு புகன்றனை மீள்கென
நின்ற தூதனை நீசன் விடுத்தலும்
நன்றி தென்று நடந்துமுன் போயினன்.

என்று இந்த வார்த்தைகளை எனது வாக்காக நீ சென்று அந்த வீரவாகுவிடம் வெற்றித் தகமையுடன் சொல்லிவிட்டு மீண்டும் இங்கு வருவாயாக என்று அங்கு நின்ற ஆயிரம் குதிரை முகமுடைய அத்தூதுவனை நீசனான பானுகோபன் விடுத்தலும், அத்தூதுவனும் நல்லது என்று கூறி நடந்து முன்னேக்கிப் போயினன். 34

ஏம கூடமெனப் பெய ராகிய
காமர் பாசறைக் கண்ணகல் வைப்புறீஇ
நாம வேற்படை நம்பிக் கிளவலாம்
தாம மார்பனைக் கண்டிவை சாற்றுவான்.

ஏமகூடம் எனப் பெயர் விளங்கி நிற்கின்ற அழகிய பாசறையிடத்து விளங்கிடும் அகன்ற இருப்பிடத்துச் சென்று, அங்கு நல்நாமமாய் கருத்தில் ஊன்றி நினைவார்க்குக் கலங்கிடாத அருள் செய்யும் வேலேந்திய ஆறுமுகமுடைய எம்பிராற்கு இளையோனாகும் மாலையணிந்த மார்புடைய வீரவாகுதேவரை அந்த அசுர தூதுவன் கண்டு இதனைச் சொல்வான். 35

எல்லை தன்னை இருஞ்சிறை வீட்டிய
மல்லல் அங்கழல் மன்னவன் மாமகன்
ஒல்லை இப்பகல் உன்னுயிர் மாற்றுவான்
செல்லு கின்றனன் செப்பிய சூளினன்.

சூரிய தேவனைக் கொடிய சிறையில் வைத்த வலிமை மிகுந்த வீரக் கழல்களை அணிந்துள்ள சூரபன்மன் மகன் பானுகோபன் உடனடியாக இன்று பகற்பொழுதில் உனது உயிரை நீக்கும்படி வந்துகொண்டிருக்கிறான். வரும்பொழுதே உன்னை வெல்லாமல் திரும்பேன் எனச் சபதம் பேசி வருகின்றான். 36

ஏவி னான்எனை இத்திறங் கூறியே
கூவி நின்னைக் கொடுவரு வாயென
மேவ லாள விரைந்தமர்க் கேகுதி
நாவ லோயென வேநவின் றனரோ.

ஆதலின், தூதுவனை என்னை நோக்கி, தான் வரும் இந்த நிலையை உடன் சென்று உன்னிடம் சொல்லி உன்னை அழைத்து வருவாயாக என எங்கள் அரச குமாரன் பானுகோபன் விடுத்துள்ளான். எங்களது பகைவனே! விரைவாக நீயும் போரிடச் செல்வாயாக; நாவன்மையுடன் அன்று வந்து பேசிய வீரவாகு தேவனே! என, பரிமுகாசுரனை தூதுவன் சொன்னான். 37

தூதன் இவ்வகை சொற்றெதிர் நிற்றலும்
மூத சூந்திறல் மொய்ம்பன் நகைத்தியான்
ஆத வன்பகை ஆருயிர் உண்டிடப்
போது கின்றனன் போய்ப்புகல் வாயென்றான்.

தூதுவனை பரிமுகன் இத்திறம் கூறி முன்னிற்றலும், மிகு முதுமையான வலியுடன் கூடிய வீரவாகுதேவர் அது கேட்டுச் சிரித்து, அப்படியோ! சரி; நான் சூரிய பகவானுடைய பகைவனுடைய உயிரை உண்ண வந்துகொள்வேன் எனப் பானுகோபனிடம் நீ போய்ச் சொல் எனக் கூறினர். 38

ஒற்றன் இத்திறம் ஓர்ந்துடன் மீடலுஞ்
செற்ற மிக்க திறல்கெழு மொய்ம்பினன்
சுற்ற மோடு தலைவர்கள் சூழ்ந்திடக்
கொற்ற வேற்கைக் குமரன்முன் நண்ணினன்.

தூதுவன் இத்திறத்தை உணர்ந்து உடன் மீண்டுபோதலும், அவன் வார்த்தையால் கோபம் மிகுந்துள்ள வீரவாகுதேவர் தனது இலக்கத்து எட்டுத் தம்பிமாரும் உடன் சூழ்ந்து வந்திட, கொற்றம் மிகுந்த வேலினைக் கையில் ஏந்திய குமாரக் கடவுள் திருமுன்பு சென்று சேர்ந்தருளினர். 39

எங்கு மாகி இருந்திடு நாயகன்
பங்க யப்பொற் பதத்தினைத் தாழ்ந்தெழீஇச்
செங்கை கூப்பிமுன் நிற்றலுஞ் செவ்வியோன்
அங்க ணுற்ற தறிந்திவை கூறுவான்.

எங்குமாகிக் குறைவிலா நிறைவாய் நிறைந்திருக்கின்ற குமர மூர்த்தியின் தாமரை போன்ற மிருதுவான மலர்ப்பாதங்களில் தாழ்ந்து வணங்கி, எழுந்து முன்நின்று, சிவந்த கைகளை வீரவாகுதேவர் கூப்பித்தொழுதவாறு முன்நிற்றலும், செம்மை வாய்ந்த திருக்கோலமுடைய குமரப்பெருமான் அவ்விடத்து நிகழ்ந்தமை யாவையும் அறிந்து இதனைச் சொல்வார். எங்குமாகி இருப்பவர்க்குத் தெரியாதது யாதொன்றுமில்லை. 40

நென்னல் ஓடும் நிருதன் தனிமகன்
உன்னை முன்னி உரனொடு போந்துளான்
துன்னு தானைத் துணைவர்கள் தம்மொடு
முன்னை வைகலின் ஏகுதி மொய்ம்பினோய்.

நேற்று உன்னுடன் போரிட்டு ஆற்றாது ஓடிய சூரபன்மனின் தனி வீரனாகும் மகன் பானுகோபன் உன்னுடன் போரிட நினைந்து, மிக்க உரனோடும் வந்துள்ளான்: ஆதலின், வலிமை மிக்க தோளுடைய வீரவாகுதேவனே! நீ நேற்றைய நாட்போல் இன்றும் போரிடுதற்கு உன் பெரும் படையுடனும், சேனாதிபதிகளாகும் உன் தம்பிமாருடனும் செல்வாயாக. 41

போயெ திர்ந்து பொருதி படைகளாய்
ஏய வற்றிற் கெதிரெதிர் தூண்டுதி
மாயை வஞ்சன் புரிந்திடின் வந்துநந்
தூய வேற்படை துண்ணென நீக்குமால்.

நீ சென்று பானுகோபனை எதிர்த்துப் போரிடுவாய். பானுகோபன் விடுக்கும் படைகட்கு எதிரெதிராய படைகளை நீயும் செலுத்திடுவாய். ஆனால், மயங்க வைக்கும் மாயைகளை அந்த வஞ்சகன் செய்திடின், அந்நேரம் எமது தூயவேற்படை வந்து சீக்கிரம் அந்த மாயையை நீக்கிடும். 42

போதி என்று புகன்றிட அப்பணி
மீது கொண்டு விடைகொண்டு புங்கவன்
பாதம் வந்தனை செய்து படர்ந்தனன்
தூது போய்அமர் ஆற்றிய தொன்மையோன்.

நீ போவாயாக என்று எமது பகவான் புகன்றிட, அந்தப் பணியினை வீரவாகுதேவர் தலைமேற் கொண்டு எம்பிரானிடம் விடைபெற்றுக்கொண்டு. அவரின் பாத பங்கயங்களைப் பணிந்துகொண்டு புறப்பட்டுச் சென்றருளுகின்றார், முன்னர் வீரமகேந்திரபுரத்துத் தூதுவனாகச் சென்று பெரும்போர் ஆற்றிய வீரவாகுதேவர். 43

துணையு ளார்களுஞ் சுற்றமுள் ளார்களுங்
கணவர் தங்களிற் காவலர் யாவரும்
அணிகொள் தேர்புக ஆடலந் தோளினன்
இணையி லாத்தன் இரதத்தி லேறினன்.

தனக்குத் துணையாக உள்ள எட்டுத் தம்பிமாரும், சுற்றத்தவர்களாகும் இலக்கம் வீரரும், பூத சேனாதிபதிகளும் எல்லாரும் அலங்காரம் கொண்ட தேர் மீது எழுந்துகொள்ள, போர்வலி மிகுந்துள்ள தோளுடைய வீரவாகுதேவர் இணை பிறிதிலாதிருக்கும் தனது தேர்மேல் ஏறினர். 44

ஏறும் எல்லையில் இச்செயல் நோக்கியே
ஊறில் பூதரொ ராயிர வெள்ளமும்
மாறி லாதவ ரையும் மரங்களும்
பாறு லாவு படையுங்கொண் டெய்தினர்.

வீரவாகுதேவர் தேர்மேல் ஏறுகின்ற எல்லையில் இச்செயலைக் கண்டு கொண்ட ஊறில்லாத படைகளாகும் ஆயிரம் பூதவெள்ளமும் எழுந்து தங்கள் கைகளில் மாறில்லாத பெரிய மலைகளையும், மரங்களையும், பருந்து வட்டமிடும் கூரிய படைகளையும் எடுத்துக்கொண்டு வீரவாகுதேவரை அடைந்து கொண்டனர். 45

சார தங்கெழு தானைகள் ஈண்டியே
காரி னங்களிற் கல்லென ஆர்ப்புற
வீர மொய்ம்பின் விடலையைச் சூழ்ந்தனர்
ஆரும் விண்ணவர் ஆசி புகன்றிட.

பூதங்களாக எழுந்த சேனைகள் நெருங்கியே மேகக்கூட்டங்கள் போன்று கனிரென முழங்கி ஆர்ப்பரித்து, வீரவாகுதேவராகும் வீரனைச் சூழ்ந்தார்கள். இவர்களின் படை எழுச்சியின் நிலையினைக் கண்டுகொண்ட தேவர்கள் யாரும் இன்று வெற்றி உங்கட்கு ஆகிட என்று பல ஆசி மொழிகளை வழங்கினார்கள்;

மேன காலை விசயங்கொள் மொய்ம்பினன்
தானை யானவுந் தம்பியர் யாவரும்
ஏனை யோர்களும் ஈண்டச்சென் றெய்தினன்
பானு கோபன் படரும் பறந்தலை.

இவ்வாறான ஓலக்கமுடன் வெற்றிபெறும் தோளினை உடைய வீரவாகு தேவர் பூதசேனைகள் யாவும், தம்பிமார் இலக்கத்து எட்டுப்பேர்கள் யாவரும், மற்றைய பூத சேனாதிபதிகளும் நெருங்கிச் சூழ்ந்திட வந்து, பானுகோபன் வந்து கொண்ட போர்க்களத்தைச் சேர்ந்தார். 47

வேறு

தேர்த்திடும் பாரிடஞ் செறியும் வெள்ளமும்
கார்த்திடு தானவக் கடலும் நேர்புறீஇ
ஆர்த்தனர் இகலினர் ஆற்றல் கூறியே
போர்த்தொழில் முறையினைப் புரிதல் மேயினர்.

போருக்கேற்ற தேர்ச்சிகொண்ட பூதங்கள் நிறைந்துள்ள ஆயிரம் வெள்ளமும், கருமையாகும் அசுரர் என்ற கடலும் நேரிட்டுப் போரிடச் சேர்ந்துள்ள போது இருபகுதியாரும் உரக்க ஆரவாரித்தார்கள் வீரம் பேசிடுவாராய் பகைகொண்டு போர்த்தொழில் முறைகளைச் செப்பமுடன் செய்வாராயினர்; 48

கோடுகள் முழங்கின குறுங்கண் ஆகுளி
பீடுற இரட்டின பேரி ஆர்த்தன
மூடின வலகைகள் மொய்த்த புள்ளினம்
ஆடினன் நடுவனும் அமரர் நோக்கவே.

போர் தொடங்கலும் கொம்பு வாத்தியங்கள் முழக்கஞ் செய்தன; குறுகிய பக்கக் கண்ணுடைய பறைகள் பெருமையுடன் அடித்தன. பேரிகைகள் ஆரவாரித்தன. பேய்கள் வந்து களத்தில் மூடிக்கொண்டன. இயமனும் இங்குமங்கும் ஓடி ஓடி எங்கு உடல் விழுகிறது என ஆடினன். தேவர்கள் யாவரும் அக்கறையுடன் இப்போரை நோக்கி நின்றனர். 49

இலையயில் தோமரம் எழுத்தண் டொண்மழு
வலமொடு வச்சிரம் ஆழி மாப்படை
தொலைவறு முத்தலைச் சூல மாதிய
சிலைபொதி கணையுடன் அவுணர் சிந்தினர்.

அதுவேளை அசுரராயோர் இலைபோலும் வடிவுடைய வேல், தோமரம், எழுவாயுதம், தண்டு, கூரிய மழுவாயுதம், வலிமைகொண்ட வச்சிரம், சக்கரமாகும் பெரும்படை, தொலைந்துபோயிடாத வலுக்கொண்ட முத்தலையுடைய சூலப்படை ஆதியான இப்படைகளுடன் வில்லினின்றும் விடுத்திடும் கணைகள் யாவற்றையும் அசுரர் செலுத்தினார்கள். 50

முத்தலைக் கழுவொடு முசலம் வெங்கதை
கைத்தலத் திருந்திடு கணிச்சி நேமிகள்
மைத்தலைப் பருப்பதம் மரங்க ளாதிய
அத்தலைப் பூதரும் ஆர்த்து வீசினர்.

இப்படைகட்கு மாறாகப் பூதங்களும் அசுரர்மீது; மூன்று சுடர்கொண்ட தலையுடைய கழுமுள் படையோடு முசலம், கொடிய கதாயுதம், கையினிடத்தாக இருந்திடுகின்ற கணிச்சி, சக்கரப் படைகள், கடுமையான முடியுடைய மலைகள், மரங்கள் ஆதியான படைகளைப் பெரும் ஆரவாரத்துடன் வீசினர்கள்.

பணிச்சுடர் வாளினால் பாணி சென்னிதோள்
துணித்தனர் குற்றினர் சுரிகை ஆதியால்
குணிப்பறும் எழுக்கதை கொண்டு தாக்கினர்
கணப்படை யொடுபொரும் அவுணர் காளையர்.

அசுர வீரர்கள் பூதப்படையுட் புகுந்து பளிச்சிடும் ஒளியுடைய வாளினாலே அப்பூதங்களது கைகள் தோள்கள் தலைகள் ஆகிய உறுப்புக்களைத் துணித்தெறிந்தார்கள். சுழல்கின்ற சிறுவாள்களினால் குற்றினார்கள். நினைக்க முடியாத பயங்கர ஆயுதமாகும் எழு. கதை முதலியன கொண்டு தாக்கினார்கள். இவ்வகையாகும் செயல்களைப் பூதங்களோடு போரிட்டு நிற்கும் அசுர வீரர்கள் செய்தனர். 52

பிடித்தனர் அவுணரைப் பிறங்கு கைகளால்
அடித்தனர் கிழித்தனர் அணிய கந்தரம்
ஒடித்தனர் மிதித்தனர் உருட்டு கின்றனர்
புடைத்தனர் எழுக்களால் பூத வீரரே.

மறுபாட்டில் பூதங்கள் அசுரரைப் பெரிய தமது கைகளால் எட்டிப் பிடித்தார்கள். பிடித்துப் பிடித்து வயிரமாய் விளங்கிடும் கைகளால் அடித்தார்கள். அசுரரைத் தூக்கிக் கிழித்தனர். சில அசுரரின் அழகிய கைகளை ஒடித்தார்கள். காலின்கீழ் போட்டு மிதித்தார்கள். காலால் உதைத்து வீழ்த்தி உருட்டுவார்கள். எழுவாயுதங்களால் அசுரரை மோதி அடிப்பார்கள். 53

வாசியும் வயவரும் மாயச் சாரதர்
ஆசறு கரங்களால் அள்ளி அள்ளியே
காய்சின இபங்களில் கணிப்பில் தேர்களில்
வீசிநின் றெற்றினர் அவையும் வீழவே.

குதிரையும் வீரரும் மாய்ந்திடும்படி அவைகளைப் பூதங்கள் குற்றமற்ற கையால் அள்ளி அள்ளி கொடும் கோபமுடைய யானைகள் மேலும், கணக்கற்ற தேர்கள் மேலும் மோதிட வீசுவார்கள். அதனாலே அவையால் யானையும் தேரும் எறிபட்டு வீழ்ந்திடும்படியாக. 54

ஓதவெங் கடல்களும் ஊழி வன்னியும்
மேதகு வலிகொடு வெகுளி வீங்கியே
ஆதியின் மாறுகொண் டமர்செய் தாலெனப்
பூதரும் அவுணரும் பொருதிட் டாரரோ.

சமுத்திரங்களாகிப் பெருகிடும் பலவகைக் கடல்களும் அவற்றுள் ஒடுங்கிய ஊழித்தீயும், மேன்மையாகும் தத்தமது உரமான வலிகொண்டு, ஒன்றையொன்று போரிட்டு நிற்பதுபோன்று பூதங்களும் அசுரரும் மாறுபட்டுப் போர்புரிந்திட்டார்கள். 55

குழகியல் அவுணரும் கொடிய பூதரும்
கழகெனும் உரைபெறு களத்தில் போர்செய
ஒழுகிய சோரியா றூனை வேட்டுலாய்
முழுகிய கரண்டம்விண் மொய்த்த புள்ளெலாம்.

குண்டலம் அணிந்த காதுடைய அசுரரும், கொடிய பூதரும் போர்க்கேற்ற பலி இடும் இடம் எனச் சிறந்து கூறிடப்படும் களத்தினிடையாகப் போர்செய்திட, அதுவேளை இறந்து போவாருடைய உடலினின்றும் பெருகிடும் இரத்தம் ஆறுகிப்பெருகி ஓடியது. அதுவன்றி, இறந்தாருடைய ஊனினை விருப்புடன் உண்ண இரத்தாற்றில் நாரைகள் தோய்வன. ஏனைய பருந்து, கழுகு, காகம் யாவுமே வந்து ஊன் உண்ணும் பொருட்டாக மொய்த்துக் கொண்டன. 56

துணிந்தன கைத்தலம் துணிந்த தோட்டுணை
துணிந்தன சென்னிகள் துணிந்த வாலுரம்
துணிந்தன கழலடி துணிந்த மெய்யெலாம்
துணிந்தன வலிசில பூதர் துஞ்சினர்.

இப்படிப் போரிடுங்கால் கைத்தலங்கள் துணிவன, துணையாகும் தோள்கள் துணிவன, தலைகள் துணிவன, நெஞ்சுகள் துணிவன, சில கால்கள் துணிவன, உடலம் எல்லாம் வெட்டுண்டு துணிவன. இவ்வகையாகப் பூதங்கள் தங்கள் வலிகள் கெட்டு இறந்துபோயின. 57

முடித்தொகை அற்றனர் மொய்ம்பும் அற்றனர்
அடித்துணை அற்றனர் அங்கை அற்றனர்
வடித்திடு கற்பொடு வலியும் அற்றனர்
துடித்தனர் அவுணரும் அநேகர் துஞ்சினர்.

அசுரர்கள் முடித்தொகை அறுக்கப்பெற்றனர்; தோள்கள் அறுபட்டனர், துணையான கால்கள் அறுபட்டனர், அழகிய கைகள் அறுபட்டனர், போர் செய்வதற்குரிய சூழ்ச்சிகளுடன் வலியும் கெட்டழிந்தனர். இவ்வாறு அறுபட்டுக் கிடந்து துடித்து அநேக அசுரர் இறந்தார்கள். 58

வசையுறும் அவுணரின் மன்னர் யாவரும்
இசைபெறு பூதரின் இறைவ ருங்கெழீஇத்
திசையொடு திசையெதிர் செய்கை போலவே
அசைவில ராகிநின் றமர தாற்றினர்.

வசைகொண்ட அசுரரின் சேனாதிபதிகள் யாவரும், புகழில் சிறந்த பூதங்களின் சேனாதிபதிகள் யாவரும் எல்லாரும் கூடி, திசையுடன் திசைகள் மாறுபட்டுப் போரிடுவதுபோன்று பரந்து நின்று அசைவிலாது போரிட்டனர். 59

மால்கிளர் தீயவர் மலைகொள் சென்னியைக்
கால்கொடு தள்ளினர் களேவ ரந்தனைப்
பால்கிளர் பிலத்தினுட் படுத்துச் சென்றனர்
தோல்களை உரித்தனர் சூல பாணிபோல்.

மாயங்கொண்ட தீயவரான அசுரர்களின் மலைபோன்று பருத்த தலைகளை காலாலே எற்றி உதைத்துத்தள்ளினார்கள் பூதசேனாதிபதிகள். இறந்த அசுரரின் உடலை உழக்கிப் பாதாள உலகின்பால் போகுமாறு புதைத்துச் செல்வார்கள்; சூலப்படையுடைய சிவமூர்த்தி யானைத்தோல் உரித்தது போன்று, உழக்கிய அசுரரின் தோலைச் சில பூதசேனாதிபதிகள் உரிப்பார்கள். 60

அரித்திறல் அடக்கினர் அவுண வீரர்தம்
வரத்தினை ஒழித்தனர் மாய நூறியே
புரத்தினை அழித்தனர் போரின மாதொடு
நிருத்தம தியற்றினர் நிமலன் போலவே.

சில பூதசேனாதிபதிகள் பகையசுரர்களின் சிங்கம் போன்ற வலியை அடக்கினார்கள். அசுர வீரர்கள் பெற்றிருந்த திறமையான வரங்களை அழித்தார்கள். மாயங்கள் செய்கின்ற அந்த அசுரரின் மார்புடன் அவர்களது மாயங்களையும் ஒழித்தார்கள்; இவ்வாறான நிலையால், போர்மாதாவான துர்க்காதேவியுடன் கூத்தாடி நின்றார்கள். காளியுடன் அன்றாடிய கடவுள் உருத்திர மூர்த்தியைப் போன்று. 61

கங்குலின் மேனியர் ஆழிக் கையினர்
துங்கமொ டவுணரைத் தொலைத்துத் துண்ணெனச்
சங்கம திசைத்தனர் தண்டந் தாங்குவார்
செங்கண்மால் பொருவினர் சிலவெம் பூதரே.

சில கொடிய பூதத் தலைவர்கள் அசுரர் பலரை மேன்மையுடன் கொன்று குவித்து நிற்பவர்கள்; இருள் போன்ற மேனியும், சக்கரம் கொண்ட கையும், அசுரரைக் கொன்று குவித்தமையால் எழுந்த வெற்றி மதர்ப்பால், சங்கை ஊதிய வராய்த் தண்டையும் ஏந்திநிற்பது, செங்கண்ணராகும் நாராயணக் கடவுள் போன்று காட்சி கொண்டனர். 62

அயர்ப்புறு மால்கரி அரற்ற வேசுலாய்க்
குயிற்றிய மணிநெடுங் கோடு வாங்குவார்
உயற்படு கற்பம்அங் கொன்றில் ஏனத்தின்
எயிற்றினைப் பறித்திடுங் குமரன் என்னவே.

அயர்ச்சியுடன் கூடிய அத்துணை வேகமான மதமயக்கத்தை உடைய சில யானைகளை, கையால் அவை கதறிடும்படி பிடித்துத் தூக்கிச் சுழற்றிடும் பூதத் தலைவர்கள், அந்த யானைகளின் முத்துடைய நீண்ட கொம்பினைப் பிய்த்தெடுப்பது, ஒரு கற்ப காலத்தில் ஏற்படும் பிரளய வெள்ளத்து ஆழ்ந்திடுகின்ற இப்பூமியை, பாதாளத்து நின்றும் தூக்கி மேல் வைப்பதற்கு விஷ்ணுமூர்த்தி கொண்டிடும் பன்றி வடிவத்தின் கொம்பினைப் பறித்திடும் குமரக்கடவுள் போன்று காட்சி கொண்டனர். 63

கொலைபயில் கரிமுகங் கொண்டு பூதர்தம்
மலையிடை மறைந்தனர் மறித்துந் தோன்றியே
அலமரு சமர்புரிந் தவுண வீரரில்
சிலர்சிலர் தாரகன் செயற்கை மேயினர்.

சில அசுரர்கள் கொலை செய்திடும் யானை முகங்களைக் கொண்டோர்; பூதத்தலைவரின் ஆக்கிரமிப்பிற்கு அஞ்சி, அவர்கள் கையில்கொண்ட மலைகளூடாக மறைந்து நின்று அப்பாலும் வெளிக்கொள்வதும், ஒளித்தொளித்து வந்து மயங்கிடுமாறு போர்புரிதலால், அவர்கள் யாரும் தாரகாசூரன் கிரவுஞ்ச மலையில் ஒளித்துநின்று பின்னர் போரிட்ட செய்கையைப் போன்று நின்றனர். 64

மாலொடு பொருதனர் மலர யன்றனைச்
சாலவும் வருத்தினர் சலதி வேலையின்
பாலர்கள் அவுணரிற் பலர்ச லந்தரன்
போலுடல் கிழிந்தனர் பூதர் நேமியால்.

நாராயணக் கடவுளுடன் போரிட்டாரும்; பிரமதேவனை சாலவும் வருத்தினவருமாகிய எத்தனையோ அசுரவீரர்கள், சமுத்திரத்தின்பாலாக நின்று தோன்றிப் போரிடுவார்களுமாகிய திறத்தால், முன்னர் கடல் மீதாக வந்துநின்ற சலந்தராசூரனைப் போன்றவர்; பூதங்கள் கையால் வீசிய சக்கரப்படை தலைமேல் வீழ்ந்திட அதனால் பட்டு இறந்தார்கள். 65

போன்றவர் பிறரிலாப் பூத நாயகர்
மூன்றிலைப் படைகளின் மூழ்கித் தீமைபோய்
வான்றிகழ் கதியும்வா லுணர்வும் எய்தியே
தோன்றினர் அந்தகா சுரனைப் போற்சிலர்.

தம்மைப்போன்றவர் பிறர் இல்லாத அருள் உடைமையாற் சிறந்துள்ள பூதத்தலைவர், செலுத்திய மூன்று இலைபோலும் கூரிய முனைகளை உடைய சூலப் படையால் குற்றப்பட்டுத் தங்களது தீமையெல்லாம் கெட்டு, மேலான நற்கதியும் அடையப்பெற்று நல்லுணர்வும் கொண்டு சில அசுரவீரர்கள் தோன்றினார்கள்; அத்தன்மையால் முன்னர் உலகிற்குக் கொடுமை செய்த அந்தகாசுரனைச் சிவபிரான் சூலப்படையால் குற்றி ஈடேற வைத்த தன்மையைப் போன்று காணப்பட்டார்கள். 66

வேறு

இலக்க வீரரும் எண்மரும் அத்துணை
விலக்கில் வில்லுமிழ் வெங்கணை மாரிதூய்
ஒலிக்கொள் சூறையின் ஒல்லையிற் சுற்றியே
கலக்கி னார்கள் அவுணக் கடலினை.

பூதங்கள் பானுகோபனுடைய சேனையை இவ்வாறு கலக்கிக் கொன்றிட; இலக்கம் வீரரும், மற்றும் வீரவாகுதேவரின் எட்டுத் தம்பிமாரும் அவ்வேளை தத்தமது வில்லை வளைத்து எவராலும் விலக்கிட முடியாத அம்பினைச் சொரிந்து, இரைந்தோடி வீசிடும் சூறாவளிபோல் விரைவுடன் சுற்றிவந்து கடல்போல் பெருகிநின்ற அசுரர்களைக் கொன்று கலக்கினார்கள். 67

வேறு

மிடைந்தகண வீரர்களும் மேலவரு மாக
அடைந்தமர் இயற்றிஅவு ணப்படைகள் மாயத்
தடிந்தனர் ஒழிந்தன தடம்புனல் குடங்கர்
உடைந்தவழி சிந்தியென ஓடியன அன்றே.

நெருங்கிவந்த பூதகணத் தலைவர்களும் அவர்கட்கு நாயகரான இலக்கத்தெட்டு வீரரும் ஒருங்கு கூடிப் போர் இயற்றி, அசுரருடைய சேனைகள் மாய்ந்து போம்படி கொன்றார்கள். கொலையுண்ணாது தப்பி நின்ற அசுரர் பயத்தால் அங்கு நிற்கமுடியாதபடி ஓடிப்போனயிர். எப்படியெனில், ஒரு பெரும் குளத்தின் கட்டு உடைந்தால் நீர் பெருகி ஓடுவதுபோன்று பறந்தார்கள். 68

ஓடியது கண்டனன் உயிர்த்துநகை செய்தான்
காடுகிளர் வன்னியென வேகனலு கின்றான்
ஆடல்செய முன்னியொ ரடற்சிலை எடுத்தான்
தோடுசெறி வாகைபுனை சூரனருள் மைந்தன்.

அசுரச் சேனைகள் ஓடியதைப் பானுகோபன் கண்டு, அப்படியோ எனப் பெருமூச்செறிந்து சிரித்தான். காட்டில் தீப்பற்றி எரிவதுபோன்று கோபமடைந்து கொள்கின்றான். போர்புரிதற்கு நினைந்து மிக்க வலியினை உடைய கொடிய வில்லை எடுத்தான். இதழ்கொண்ட மலரால் தொடுத்த வெற்றிமாலை புனைந்த சூரபன்மன் பெற்ற குமாரன் பானுகோபன். 69

வாகுபெறு தேர்வலவ னைக்கடிது நோக்கி
ஏகவிடு கென்றிரவி தன்பகை இயம்பப்
பாகனினி தென்றுபரி பூண்டஇர தத்தை
வேகமொடு பூதர்படை மீதுசெல விட்டான்.

வெற்றிபெறும் சித்தி பல உடைய தனது தேர்ச்சாரதியினை விரைவுடன் பார்த்து; என் தேரைச் செல்லவிடு என்று சூரியனின் தொல் பகைவன் உரைப்ப; தேர்ச்சாரதியும் இனிதென்று குதிரைகள் பூண்ட பெரிய தேரினை மிக்க வேகமுடன் பூதப்படைகள் மீது சென்றிட விடுத்தான். 70

பாரிடர்கள் சேனையிடை பானுவைமு னிந்தோன்
சேருதலும் ஆங்கது தெரிந்துதிறல் வாகு
சாருறு பெருந்துணைவர் தம்மொடு விரைந்தே
நேரெதிர் புகுந்தொரு நெடுஞ்சிலை எடுத்தான்.

பூதப்படைகள் நெருங்கிய களம் மீது சூரியபகவானை முன்னர் கோபித்துச் சிறைசெய்த பானுகோபன் வந்துசேருதலும், அவ்வேளை அதனைத் தெரிந்து கொண்ட வலிமையால் சிறந்த வீரவாகுதேவரும் விறுக்கென்று புறப்பட்டு தன்னைச் சேர்ந்த பெரும் துணையாகும் இலக்கத்தெட்டு வீரருடன் விரைவுடன் போய் பானுகோபன் முன்பாக நேரிட்டுச் சென்று முன்னின்று ஒரு வில்லை எடுத்தார். இது சபதம் கூறி அழைத்தமைக்காக அப்படி அவன் வருகை கண்டதும் நேரிட்டு வந்தார் வீரவாகுதேவர். 71

எடுத்திடும்வில் வீரனை எதிர்ந்தவுணன் மைந்தன்
வடித்திடு தடக்கைதனில் வார்சிலை வளைத்துத்
தடித்தன குணத்தொலி தனைப்புரிய அண்டம்
வெடித்தன முடித்தலை துளக்கினர்கள் விண்ணோர்.

வில் எடுத்திட்ட வீரராகும் வீரவாகுதேவரை, சூரன்மைந்தன் பானுகோபன் எதிர்ந்து கையிற்கொண்ட வடித்தெடுத்த வில்லை வளைத்து மிக்க தடிப்பான கணீரென்ற வில்லோசையை எடுத்திட, அதனால் அண்டங்கள் வெடித்தன; தேவர்களும் ஆகா! என்று தமது முடியணிந்த தலைகளை அசைத்தார்கள். 72

எண்ணில்பல கோடிஉரும் ஏறுருவம் ஒன்றாய்
வண்ணமிகு மின்னிடை மறைந்தொலிசெய் தென்ன
விண்ணுற நிவந்தவியன் மொய்ம்புடைய வீரன்
நண்ணலர் துணுக்கமுற நாணிசை எடுத்தான்.

எண்ணமுடியாத பல கோடியாக உற்ற இடியேறுகள் எல்லாம் ஒன்றாகித் திரண்டு வண்ணமாக மின்னி உடன் மறைந்து இடித்ததுபோன்று; வானுற நிமிர்ந்த மேலான தோளுடைய வீரவாகுதேவர் தாமும் தமது கையில் கொண்ட வில்லை வளைத்துப் பகைவர் பலரும் நடுங்கிட நாணோசை செய்தார். பானுகோபனின் வில்லோசைக்குப் பதிலோசை செய்தார். 73

நாணொலி செவித்துணையின் நஞ்சமென எய்தத்
தூணிகலும் வாகுடைய சூர்மதலை சீறி
வாணிலவு கான்றபிறை வாளியுல வாமற்
சேணுநில னுந்திசைக ளுஞ்செறிய விட்டான்.

வீரவாகுதேவர் எடுத்திட்ட வில்நாணின் ஓசையானது பானுகோபனின் காதூடு நஞ்சுபோல் சென்று அடைதலும்; தூண்போன்ற தோளுடைய சூரபன்மன் மகன் சீறி, தனது வளைத்த வில்லில் நின்றும் ஒளியுடைய நிலவு காலும் பிறைபோலும் முகங்கொண்ட அம்புகளை ஓய்வின்றி வானிலும் திசை எட்டிலும் பூமியிலும் சென்று செறிய விட்டான். 74

மாமுருக வேள்இளவல் மற்றது தெரிந்தே
காமர்பிறை போன்றுகதி ரென்னவெயில் கான்று
தீமுகம தாம் அளவில் செய்யசர மாரி
தூமுகிலும் நாணமுற வேநெடிது தூர்த்தான்.

எல்லார்க்கும் பெரும் கடவுளாகும் முருகப்பிரானுக்கு இளையோரான வீரவாகுதேவர், பானுகோபனின் இந்தச் செயலைத் தெரிந்துகொண்டு அழகிய பிறைபோன்ற வடிவுடையதாய் சூரியன்போன்று வெயில் வீசிடும் நெருப்புச் சுடரின் முகங்களை உடைய கொடிய அம்புகளைத் தூயதான முகிலும் பார்த்து வெட்கிடும்படி சோனாவாரியாக விடுத்தார்; 75

ஐயன்விடு வெஞ்சரமும் ஆதவனும் அஞ்சும்
வெய்யன்விடு வெஞ்சரமும் மேவியெதிர் கவ்வி
மொய்யுடைஅ ராவினமு னிந்திகலி வெம்போர்
செய்வதென மாறுகொடு சிந்துவன தம்மில்.

எமது ஐயன் வீரவாகுதேவர் விட்டிடும் கொடிய அம்புகளும்; சூரியதேவனும் கண்டு அஞ்சுகின்ற பானுகோபன் விடுத்த கொடிய அம்பும் ஒன்றுடன் ஒன்றினைச் சென்று கவ்வி; கொடிய வலியுடைய பாம்புகள் ஒன்றுடன் ஒன்று கோபத்தால் வந்து பகைகொண்டு போரிடுவதுபோன்று; தம்மில் ஒன்றை ஒன்று மாறுகொண்டு முரித்தெறிவன. 76

வேறு

கரிந்திடு மாமுகில் கடந்தன வானவர்
புரிந்திடு சேண்நெறி புகுந்தன மாலயன்
இருந்திடும் ஊரையும் இகந்தன போயின
திரிந்தன சாரிகை சிறந்தவர் தேர்களே.

இவ்வாறு போரிடுகின்ற சிறந்த வீரர்களாகும் இவர்களது தேர்கள் கருமை நிறங்கொண்ட முகில் மீது கடந்துபோவன; தேவர்கள் சஞ்சரித்திடும் வான உலகம் புகுந்தன; பிரம்மா விஷ்ணுக்கள் இருந்திடுகின்ற உலகினையும் கடந்து அப்பாலும் செல்கின்றன. இடதுசாரி வலதுசாரியாக மாறி மாறிச் சுழன்று அத்தேர்கள் போரிட்டுத் திரிவன. 77

தெண்டிரை நேமிகள் சென்றன சூழ்வன
எண்டிசை மாநகர் எங்கணும் ஏகுவ
மண்டல மால்வரை மண்டியு லாவுவ
அண்டமு லாவுவ அங்கவர் தேர்களே.

அங்கு அவர்களது தேர்கள் தெள்ளிய திரையுடைய கடல்கள்மேல் சென்றன, அவற்றைச் சூழ்ந்து வருவன; எட்டுத் திக்குகளில் உள்ள பெருநகரமெல்லாம் செல்வன. உலகுகளில் உள்ள மேலான மலைகள் யாவும் சென்று உலாவுவன. அன்றியும், அண்டங்கள் அனைத்தையும் கடந்தும் சென்றிடுவன அவர்களது தேர்கள். 78

மங்குலின் மேலதோ மண்டல மார்வதோ
செங்கணன் ஊரதோ தெண்டிரை சேர்வதோ
இங்குளர் ஏறுதேர் எங்குள வோவெனச்
சங்கையின் நாடினர் தங்களில் வானுளோர்.

இங்கு இவர்கள் ஏறிய தேர்கள் மேகங்ளின் மேலதோ, அதன் மீதுள்ள மண்டலங்களின் மீதும் சென்றனவோ? அன்றி நாராயணப்பெருமானது வைகுந்தத்திற் சென்றதோ? அல்லது தெள்ளிய திரையுடைய கடல் மீதோ? எங்குதானே சென்றிடுகின்றன என்று சந்தேகமுடன் நாடிப்பார்ப்பார்கள் இப்போரினை அவதானித்த தேவர்கள். 79

மன்னிய மாமுகில் வண்ணம தாயினர்
அன்னதொல் வீரர்கள் அண்மிய தேரவை
மின்னுவின் மேவுவ வெம்மையில் வீசிய
துன்னிய வாளிகள் தொன்மழை போல்வவே.

சிறப்புடன் கருமை நிறமுடைய மேனி பொருந்திக் கொள்வதால் வீரவாகுதேவரும் பானுகோபனும் முகிலின் வண்ணம்போலாயினர். அவ்வாறான முதிய வீரர் இருவரும் ஏறிய தேர்கள் செல்லும் வேகத்தால் மின்னலைப்போன்று பளிச்சிடுகின்றது. இதேவேளை அவர்கள் கோபமுடன் செலுத்திடும் அம்புகள் மழை போன்று சொரிவன. 80

ஆங்கவர் தேர்களில் ஆண்டுறு பாகர்கள்
தூங்கலில் வாசிகள் தூண்டிய மேலவர்
தீங்கதிர் வாளிகள் சேண்புடை சூழ்வுற
ஏங்கினர் ஓடினர் ஈண்டிய வானுளோர்.

அங்கு அவர்களது தேர்களில் இருக்கின்ற சாரதிகள் சோர்விலாது குதிரைகளைச் செலுத்திடுகின்றமையால் அவர்கள் ஒருவர் மீது ஒருவர் விடுகின்ற கொடிய ஒளியுடைய அம்புகள், தேர் விசையால் மேல் எழுந்து சென்று வானில் எங்கும் சூழ்ந்திடுதலால், அதுகண்டு அங்கு வானில் நின்ற தேவர்கள் ஏங்கினர்கள். உடன் அவ்விடம் விட்டு ஓடினர்கள். 81

வேறு

பூசல் இவ்வகை புரிந்திடு கின்றுழிப் புரைதீர்
வாச வன்மகன் தனைச்சிறை செய்திடும் வலியோன்
ஆசு கங்களில் ஆசுக மாயிரந் தூண்டி
ஈசன் மாமகன் சேனைநா யகன்நிறத் தெய்தான்.

இவ்வாறு போர் புரிந்திடுகின்ற நேரத்து குறையற்ற இந்திரன் மைந்தனை சயந்தனைச் சிறை செய்திட்ட பானுகோபன், அம்புகளில் சிறந்துள்ள ஆயிரம் அம்புகளைச் செலுத்திச் சிவபெருமானது பெரும் திருக்குமாரனுடைய சேனைத் தலைவராகும் வீரவாகுதேவரின் நெஞ்சில் பட்டிடுமாறு எய்தான். 82

ஆக மீதிலோ ராயிரம் பகழிபுக் கழுந்த
ஏக வீரனும் இளவலும் முனிவுகொண் டேவி
வாகை வெங்கணை பத்துநூ றவுணர்கோன் மதலை
பாகு மாக்களும் இரதமும் ஒருங்குறப் படுத்தான்.

வீரவாகுதேவரின் நெஞ்சின்மீது இந்த ஓர் ஆயிரம் அம்புகள்பட்டு அழுந்திடலும், தனி வீரனை வீரவாகுதேவரும் மனதில் கோபமுற்று ஆயிரம் வெற்றி நிலையான அம்புகளைச் செலுத்திச் சூரபன்மனின் மகன் பானுகோபன் ஏறிய தேரையும், சாரதியையும், குதிரைகளையும் ஒருங்கே அழித்தார். 83

படுக்க வெய்யவன் வேறுரு வையமேற் பாய்ந்து
தடக்கை வில்லினை வளைக்குமுன் ஆயிரஞ் சரத்தைத்
தொடுக்க மற்றவன் உரந்தனைப் போழ்தலுந் துளங்கி
இடுக்கண் எய்தினன் ஆர்த்தனர் பூதர்கள் எவரும்.

தேரை அழித்திட, கொடிய பானுகோபன் வேறொரு தேர்மீது பாய்ந்து தனது கையில் கொண்ட வில்லை வளைக்குமுன்பே வீரவாகுதேவர் தொடர்ந்தும் ஆயிரம் அம்பினை விடுத்தலும், அவை வந்து பானுகோபனது நெஞ்சினை உருவிப் போயிட, அதனால் நடுக்கம் கொண்டு துயரம் அடைந்தனன. அதுகண்டு பூதர்கள் யாவரும் ஆரவாரித்தனர். 84

பூத ரார்த்திடு துழனியைக் கேட்டலும் பொருமிக்
காதில் வெவ்விடம் உய்த்திடு திறனெனக் கனன்றே
ஏத மில்லதோர் பண்ணவப் படைகளால் இமைப்பில்
தூதன் ஆற்றலைத் தொலைக்குவன் யானெனத் துணிந்தான்.

பூதங்கள் ஆராவாரித்திட்ட பேரோசையைப் பானுகோபன் கேட்டலும், மனம்வெம்பி தனது காதிலே கொடிய நஞ்சினைச் செலுத்தினாற் போன்று கோபமடைந்து, சரி இதோ ஏதும் ஒரு குறைவிலாத தேவப்படைகளால் ஒரு நொடிப் பொழுதில் இந்தத் தூதுவனுடைய ஆற்றலைத் தொலைப்பேன் யான் என்று துணிவு கொண்டான். 85

இணையில் சூர்மகன் வாருணப் படைக்கலம் எடுத்துப்
பணிவு கொண்டகார் முகந்தனில் பூட்டிநீ படர்ந்து
கணிதம் இல்லதோர் நீத்தமாய்ச் சாரதர் கணத்தைத்
துணைவர் தங்களைத் தூதனை முடிக்கெனத் தொடுத்தான்.

இவ்வணம் நினைந்திட்ட இணையில்லாத சூரபன்மன் மகன் பானுகோபன் வருணாஸ்த்திரத்தைக் கையில் எடுத்து, வளைத்த தனது வில்லினில் பூட்டி வருணப் படையே! நீ சென்று அளவு இல்லாததொரு கடல்போன்று வடிவங் கொண்டு அளவிறந்த பூதங்களை, இலக்கத்தெட்டு வீரரை, வீரவாகுதேவனை எல்லாரையும் முடிப்பாயாக என்று கூறி விடுத்தான். 86

தொடைப்பெ ரும்படை கடைமுறை உலகெலாந் தொலைக்கும்
அடற்பெ ருங்கடல் ஏழினும் பரந்துபோய் ஆன்று
தடப்பெ ருமபுனல் நீத்தமாய் விசும்பினைத் தடவி
இடிப்பெ ருங்குரல் காட்டியே ஏகிய திமைப்பில்.

பானுகோபன் விடுத்த பெரும் படையானது, புறப்பட்டு உலகம் எல்லாவற்றையும் அழிவாகும் கடைநாளில் தொலைத்திட எழுகின்ற பெரும் சமுத்திரம் ஏழினையும் போன்று பரந்துபோய் பெருகி விசாலித்த நீராய கடலாய் வானினை முட்டி இடியேறுபோலும் குரலினைக் காண்பித்து இரைந்துகொண்டு இமைப்பொழுதில் வந்தது. 87

கண்ட வானவர் துளங்கினர் பூதருங் கலக்கங்
கொண்டு நின்றனர் உணாந்திலர் துணைவருங் குலைந்தார்
அண்டர் நாயகற் கிளையவன் நோக்கியே அகிலம்
உண்டு லாவரும் அங்கிமாப் பெரும்படை உய்த்தான்.

வருணப் படையின் கொடுநிலையைக் கண்ட தேவர்கள் நடுங்கினார்கள்; பூதங்கள் கலக்கம் கொண்டு நின்றனர். வீரவாகுதேவரின் தம்பிமார் இலக்கத்தெட்டுப் பேரும் இது எப்படையென உணரமுடியாது உள்ளம் குலைந்தார்கள்; அதுவேளை தேவர்கட்கு எல்லாம் நாயகரான முருகப்பிரானுக்கு இளையவரான வீரவாகுதேவர் இதனைப்பார்த்து உலகம் யாவையும் உண்டு உலவி வருகின்ற பெரும்படையான ஊழித்தீப்படையினை பானுகோன் படைகட்கு மாறுக விடுத்தார். 88

புகையெ ழுந்தன வெம்மையும் எழுந்தன புலிங்கத்
தொகையெ ழுந்தன ஞெகிழிகள் எழுந்தன சுடரின்
வகையெ ழுந்தன பேரொலி எழுந்தன வன்னிச்
சிகையெ ழுந்தன செறிந்தன வானமுந் திசையும்.

அப்படை புறப்படுதலும் புகை எழுந்தது; வெப்பமும் எழுந்தது; நெருப்புப் பொறிகளும் எழுந்தன; சுவாலைகள் எழுந்தனன; விதம்விதமான சுடர்கள் எழுந்தன; பேரோசை எழுந்தது; நெருப்பின் கொழுந்துகள் எழுந்தன; இவைகள் வானமுந் திசையும் எங்கும் செறிந்தன. 89

முடிக்க லுற்றதீப் பெரும்படை செறியமூ தண்டம்
வெடிக்க லுற்றன வற்றின கங்கைமீன் தொகுதி
துடிக்க லுற்றன சுருங்கின அளக்கர்தொல் கிரிகள்
பொடிக் லுற்றன தளர்ந்துமெய் பிளந்தனள் புவியும்.

எல்லாவற்றையும் முடிக்லுற்ற பெரிய ஊழித்தீப்படையானது, புறப்பட்டு எங்கும் பரத்தலும் பெரிய முதிய அண்டங்கள் வெடிக்கலுற்றன; கங்கையாறு வற்றியது; மீன் தொகுதி துடிக்கலுற்றன. சமுத்திரங்கள் வற்றின. மலைகள் யாவும் பொடியாய்ப் போகலுற்றன. பூமியும் நிலைதளர்ந்து மேனி வெடித்தனள்;

தீர்த்தன் ஏவலோன் விடுபடை இன்னணஞ் சென்று
மூர்த்த மொன்றினில் வாருணப் படையினை முருக்கி
நீர்த்தி ரைப்பெரு நீத்தமும் உண்டுமேல் நிமிர்ந்து
போர்த்த தாமெனச் சுற்றிய தவுணர்கோன் புறத்தில்.

கருணைக் கடலாகும் முருகப்பிரான் ஏவல் புரியும் பாச்கியசாலியான வீரவாகுதேவர் விடுத்த படையானது இவ்வகைச் சென்று, ஒரு மூர்த்த காலத்தில் வருணாஸ்த்திரத்தைச் சுருங்கிட வைத்து, அதனால் தோன்றிய நீரான திரைகளை உடைய சமுத்திரத்தையும் உண்டு மேலாக நிமிர்ந்து அசுரத் தலைவனை அழித்திடுவேன் எனப் புறத்தே சூழ்ந்துகொண்டது. 91

சுற்று கின்றஅப் படையினைக் கண்டுசூர் புதல்வன்
செறற மேற்கொண்டு மாருதப் பெரும்படை செலுத்த
மற்ற தூழிவெங் காலுருக் கொண்டுமன் னுயிர்கள்
முற்றும் அண்டமுந் துளங்குறச் சென்றது முழங்கி.

தன்னைச் சுற்றுகின்ற அப்படையினைக் கண்டு சூரபன்மன் புதல்வனான பானுகோபன் கோபமடைந்து, அப்படைக்கு மாறாக வாயுபகவானின் படையினை எடுத்து விடுதலும், அந்த வாயுப்படையானது ஊழிக்காலத்துக் காற்றின் வடிவை எடுத்துக்கொண்டு மேலான உயிர்களும், அணடங்களும் நடுங்கும்படியாகப் பெரும் முழக்கத்துடன் சென்றது. 92

மாரு தப்படை சென்றுதீப் படையினை மாற்றிச்
சார தப்படை மேலட வருதலுந் தடந்தோள்
வீரன் மற்றது கண்டுவெம் பணிப்படை விடுத்தான்
சூரி யத்தனிக் கடவுளுந் தன்னுளந் துளங்க.

வாயுவின் படை சென்று ஊழித்தீயின் படையினை அழித்து, அங்கு நின்றிடுகின்ற பூதப் படைகள்மேல் உக்கிரமுடன் தாக்க வருதலும், அதனைப் பருத்த தோள்களை உடைய வீரவாகுதேவர் கண்டு, அதற்கு மாறாகக் கொடிய பாம்பின் படையை எடுத்து விடுத்தார். அவ்வாறு விடப்பெற்ற நாகத்தின் படையின் உக்கிரத்தினைக் கண்டு சூரியபகவானான தனிக் கடவுளும் அஞ்சி நடுங்கிடும்படியாக. 93

ஆயி ரம்பதி னாயிரம் இலக்கமோ டநந்தந்
தீய பஃறலைப் பன்னகத் தொகுதியாய்ச் செறிந்து
காயம் எங்கணும் நிமிர்ந்துசெந் தீவிடங் கான்று
பாயி ருஞ்சுடர்க் கதிரையும் மறைத்தது படத்தால்.

அவ்வாறு புறப்பட்ட பாம்பின் படையாயது ஆயிரம், பதினாயிரம், இலக்கம், அனந்தம் என்னும் தொகையுடைய பல தலை கொண்ட பாம்பின் தொகுதியாகப் பரந்து செறிந்து, வானம் எல்லாம் பாம்புகளாகவே நிமிர்ந்தெழுந்து கொடிய சிவந்த நெருப்பாகிய நஞ்சினைக் கக்கி, பெரிய ஒளியுடைய சூரிய பகவானின் கதிர் ஒளியினையும் தனது படத்தால் மறைத்தது. 94

வெங்கண் நாகங்கள் உமிழ்கின்ற அங்கியும் விடமும்
மங்குல் வானமுந் திசைகளும் மாநில வரைப்பும்
எங்கும் ஈண்டிய இரவினிற் புவியுளோர் யாண்டும்
பொங்கு தீச்சுடர் அளப்பில மாட்டுதல் போல.

கொடுமையாகும்படி தோன்றிய நாகங்கள் உமிழ்ந்து விடுகின்ற நெருப்பும், நஞ்சும் மேகங்கள் செறிகின்ற வானமும் திசையும் இப்பூமி எல்லை அடங்கவும் எங்குமாகிப் பரந்துகொண்டிருப்பது எப்படியெனில், இராக்காலத்தில் இப்பூமியில் உள்ளோர் யாவரும் பொங்கிடும் சுடருடைய அளவற்ற விளக்குகளை மாட்டி வைத்திருப்பது போன்று விளங்கியது. 95

உலவை மாப்படை உண்டிடும் அங்கியை ஒருங்கே
வலவை நீர்மையால் தம்முழை வரும்படி வாங்கி
அலகில் வெம்பணி விடுத்தென அன்னவை உமிழ்தீக்
குலவு கின்றன புகையெனக் கொடுவிடங் குழும.

வாயுவின் படை முன்னர் உண்டுகொண்ட ஊழித் தீயினை, இந்தப் பாம்பின் படையானது காற்றினை தாம் உண்கின்ற இயல்புபோலத் தம்மிடத்து வரும்படி அந்த நெருப்பையும் வாங்கி உண்டு, முடிவிலாத கொடிய பாம்புகள் விடுத்துளது எனும்படியாக ஆங்காங்கு அப்பாம்புகள் உமிழ்கின்ற நெருப்புகள் குலவி நிற்கின்றன. அத்துடன் அந்த நெருப்புடன் கூடிய புகை எனும்படி பாம்புகள் உமிழும் கொடிய நஞ்சும் அந்த நெருப்புச் சுடருடன் கூடிக் காணப்பெறுகின்றது.
96

இனைய கொள்கையாற் பன்னகப் பெரும்படை ஏகி
முனமெ திர்ந்திடு மாருதப் படையினை முனிந்து
துனைய வுண்டுதன் மீமிசைச் சேறலுந் தொனனாட்
கனலி யைத்தளை பூட்டிய கண்டகன் கண்டான்.

இவ்வாறான செய்கைகளுடன் நாகத்தின் பெரிய படை சென்று முன்னர் எதிர்ந்து வரும் வாயுப்படையினை முனிந்து உண்டழித்து, அதிவிரைவுடன் தன் மீதாக வருவதை முன்னாளில் சூரியனைச் சிறைவைத்த பாதகனான பானுகோபன் கண்டான்.
97

இன்ன தேயிதற் கெதிரென அவுணர்கோன் எண்ணிப்
பொன்னி ருஞ்சிறைக் கலுழன்மாப் படையினைப் போக்க
அன்ன தேகலும் வெருவியே ஆற்றலின் றாகிப்
பன்ன கப்படை இரிந்தது கதிர்கண்ட பனிபோல்.

இந்தப் படைக்கு மாறாக யான் செலுத்திடுதற்கு இதுதான் சரியான படை எனப் பானுகோபன் நினைந்து, பொன்போன்ற அழகிய சிறகுகளையுடைய கருட பகவானின் பெரும்படை செலுத்த. அநதக் கருடாஸ்த்திரத்தின் வலியினைக் கண்டபோது முன வந்த நாகப்படையானது அஞ்சி வலிகெட்டு அவ்விடத்தை விடுத்துச் சூரியனைக் கண்ட பனிபோல் ஓடியது. 89

ஆல வெம்பணிப் படைமுரிந் திடுதலும் ஆர்த்துக்
கால வேகத்தின் உவணமாப் பெரும்படை கலுழன்
கோலம் எண்ணில புரிந்துநேர் வந்திடக் குரிசில்
மேலை நந்தியந் தேவன்மாப் படையினை விடுத்தான்.

முன்னாக விடுத்த கொடிய நாகப்படை முரிந்தோடுதலும், கருடப்படை இரைந்து ஆர்த்துக் கொண்டு ஊழிக்கால வேகத்தில் கருடனின் கோலம் எண்ணில எடுத்துக்கொண்டு நேராக வந்திட அதுகண்டு வீரவாகுதேவர் மேலான நந்தியங் கடவுளின் பெரும்படையினைக் கையில் எடுத்தார். 99

சீற்ற மாய்அண்ணல் நந்திதன் பெரும்படை செலுத்த
நூற்று நூறுநூ றாயிர கோடிநோன் கழற்கால்
ஏற்றின் மேனிகொண் டுலகெலாம் ஒருங்குற ஈண்டி
ஆற்ற வெய்துயிர்த் தார்த்தது மூதண்டம் அதிர.

கோபத்தோடு வீரவாகுதேவர் நந்தியம் பெரும்படையினைச் செலுத்திட, அந்நேரம் அப்படை புறப்பட்டுப் பதினாயிரம், இலக்கம், கோடி எனும் கணக்கின் வலிமைகொண்ட சிலம்பொலிக்கும் காலினை உடைய இடபத்தின் வடிவினைக் கொண்டு, உலகமெல்லாம் ஒருங்கே பலவாகப் பெருகி, மிகவும் கொடிதாக மூசி எல்லா அண்டங்களும் அதிரும்படி கர்ச்சனையுடன் தனுவிட்டது.

கனனெ னப்படு நூபுரங் கழலிடை கலிப்ப
அளவில் கிங்கிணித் தாமங்கள் கந்தரத் தார்ப்ப
ஒளிறு பேரிமில் அண்டகோ ளகையினை உரிஞ்ச
வளரு நீண்மருப் புலகெலாம் அலைப்பவந் ததுவே.

வீரகெண்டை எனப்படும் சிலம்புகள் காலிடத்து ஒலித்திட, அளவிறந்த கிண்கிணி மாலைகள் கழுத்தில் ஓசை செலுத்திட, பிரகாசமுடைய பெரிய ஏரி அண்டகோளகையை உராய்ஞ்ச; வளர்கின்ற அதன் கொம்பெல்லாம் உலகை அலைவு செய்திட வந்தது. 101

திரையெ றிந்திடும் அளக்கர்உண் டுலவுசேண் முகிலின்
நிரையெ றிந்தது பரிதிதேர் எறிந்தது நெடிதாந்
தரையெ றிந்தது திசைக்கரி எறிந்தது தடம்பொன்
வரையெ றிந்தது குலகிரி எறிந்தது மருப்பால்.

அப்படையானது, திரைவீசுகின்ற சமுத்திரத்தை உண்டு உலவுகின்ற வான முகில்களின் நிரையினைக் கொம்பால் குத்தி உடைத்தெறிந்தது; நெடிதான இப்பூமியைக் கிளறி எறிந்தது. திக்கு யானைகளை இடித்து வீழ்த்தியது. சூரியனின் தேரை முட்டி உடைத்தது. விசாலித்த பொன்மயமான இமயமலையினை இடித்தது. திக்கு மலைகளையும் கொம்பால் இடித்தெறிந்தது. 102

நந்தி மாப்படை இன்னணம் ஏகியே நணுகி
வந்த காருடப் படையினை விழுங்கிமாற் றலனைச்
சிந்து கின்றனன் என்றுசென் றிடுதலுந் தெரியா
அந்த கன்படை தொடுத்தனன் அவுணர்கட் கரசன்.

நந்தியெம்பெருமானுடைய பெரும்படை இவ்வண்ணம் சென்று முன்வந்த கருடப்படையினை அணுகி அதனை உண்டு விழுங்கிப் பகைவனுன பானுகோபனைச் சிந்துகின்றேன் எனச் சென்றிடுதலும், அதற்கு மாருக இயமாஸ்த்திரத்தை எடுத்து விடுத்தான் அசுரர்க்கு அரசனுன பானுகோபன். 103

தொடுத்த அந்தகப் படையையும் விடைப்படை துரந்து
படுத்து வீட்டிய தன்னதன் மிடலினைப் பாராக்
கடித்து மெல்லிதழ் அதுக்கியே அயன்படைக் கலத்தை
எடுத்து வீசினன் இந்திரன் பதிகனற் கீந்தோன்.

தான் விடுத்த இயமாஸ்த்திரத்தையும் நந்தியம்படை ஓட ஓட விட்டுக் கலைத்து அழித்துவிட்டு நிற்கும் அதன் வலியைப் பானுகோபன் பார்த்து தனது சொண்டைக் கடித்து இதழை அதுக்கி, பிரமாஸ்த்திரத்தை எடுத்து வீசினுன் இந்திரன் பதியான தேவ உலகை நெருப்பில் இடச்செய்த அந்தப் பானுகோபன்.

வீசுநான்முகப் படைக்கலம் வெகுண்டுவிண் ணெறிபோய்
ஈசன் ஊர்திதன் படையினைக் காண்டலும் இடைந்து
நீசன் ஏவலின் வந்தனன் நின்வர வுணரேன்
காய்சி னங்கொளேல் எனத்தொழு துடைந்தது கடிதின்.

பானுகோபன் வீசிய நான்முகமுடைய பிரமதேவரின் படையானது வெகுட்சி கொண்டு வான நெறி எழுந்துசென்று அங்கு முன்வருகின்ற சிவபிரானின் வாகனமாகிய நந்தியம் பெரும்படையைக் காண்டலும், வலிகேட்டு அஞ்சி நந்தியம்படையினைப் பார்த்து ஐயனே நான் நீசனுன பானுகோபனது ஏவல்படி வந்தேன், தேவரீரது வரவினை உணரமாட்டேன். என்னைக் கொன்றிடும்படி கோபங்கொள்ள வேண்டாம் எனத் தொழுதுவிட்டு அவ்விடம் விட்டோடியது ஓர் இமைப்பொழுதில். 105

நான்மு கத்தினில் விதித்திடு நூற்றிதழ் இருக்கை
நான்மு கப்படை பழுதுபட் டோடலும் நகைத்து
வான்மு கத்தவர் ஆர்த்தனர் அதுகண்டு மைந்தன்
சூன்மு கக்கொண்டல் மேனியன் பெரும்படை தொடுத்தான்.

நூல்களின் இடத்து இப்படித்தான் இது என விதிக்கப்பெற்ற நூற்றெட்டு இதழ்களை உடைய தாமரைப் பூவினில் இருந்திடும் நான்கு முகமுடைய பிரமதேவரின் படை இவ்வாறு பழுதடைந்து பயந்தோடிய நிலையைக் காண்டலும், அது கண்ட தேவரெல்லாம் சிரித்து இகழ்ந்து ஆர்த்திட அதுகண்டு பானுகோபன் கருமேகத்தின் நிறமுடைய நாராயணக் கடவுளின் பெரும்படையை எடுத்தான். 106

ஊழி நாளினும் முடிகிலா தவன்மகன் உந்தும்
ஆழி யான்படை ஆண்டுமால் உருவமாய் அமைந்து
கேழில் ஐம்படை தாங்கிமா யத்தொடுங் கெழுமி
வாழி நந்திதன் படையெதிர் மலைந்தது மன்னே.

ஊழிக் காலத்தின் முடிவிலும் முடிவுருத சூரபன்மன் மகன் செலுத்திடும் சக்கரமேந்திய கடவுள் நாராயணமூர்த்தியின் படை, அவ்விடத்து நாராயணரின் வடிவம் பல கொண்டு குறைவிலாத ஐம்படைகள் தாங்கி மாயத்துடன் கூடி வாழ்வு தரும் நந்தியம்பெருமானுடைய படையுடன் போரிட்டது. 107

நார ணன்படை நந்திதன் படைக்கெதிர் நணுகிப்
போரி யற்றியே நிற்புழி அதுகண்டு புனிதன
சூர ரித்திறல் சிந்திடச் சிம்புளாய்த் தோன்றும்
வீர பத்திர படையினைத் தொழுதனன் விடுத்தான்.

நாராயணரின் படை நந்தியம்பெருமான் படைக்கு எதிராகப் போய்ப் போர்செய்து நிற்கின்றவேளை, அதுகண்ட வீரவாகுதேவர் அச்சம் தரும் நரசிங்கத்தின் வலியினைச் சிந்திட, முன்னர் சரபப் பட்சி வடிவங்கொண்ட வீரபத்திரக் கடவுளின் பெரிய படையைக் கையில் எடுத்துத் தொழுது அதனைச் செலுத்தினர்.

ஏய தாகிய வீரபத் திரப்படை எழுந்து
போய காலையின் நந்திதன் படையெதிர் பொருத
மாய வன்படை தொலைந்தது மதியொடு திகழ்மீன்
ஆயி ரங்கதி ரோன்வரக் கரந்தவா றதுபோல்.

செலுத்திடப்பட்ட வீரபத்திரப் பெரும்படை எழுந்து போன நேரத்து, நந்தியெம்பெருமானுடைய படையுடன் எதிர்ந்து போரிட்ட நாராயணக் கடவுளின் பெரிய படை தொலைந்துபோனது. அது சந்திரனுடன் கூடி விளங்கிடும் வெள்ளிகள் யாவும் ஆயிரம் கிரணமுடைய சூரியன் வர மறைந்தவாறதனைப் போன்றிருந்தது. 109

செங்கண் நாயகன் படைதொலைந் திடுதலுந் தெரிவான்
அங்கண் ஆய்வுரு இமைப்பினில் அகிலமும் அழிக்கும்
எங்கள் நாயகன் படையினைத் தூண்டுதற் கெடுத்தான்
வெங்கண் ஆயிரங் கதிரினைச் செயிர்த்திடும் வெய்யோன்.

நாராயணக் கடவுளின் படை தொலைந்து போனதை அங்கு பானுகோபன் பார்த்து, கொஞ்சம் சிந்தனை செய்து மேல் இதைச் செய்வேன் எனத் தெளிந்து, ஓர் இமைப்பொழுதினில் உலகம் யாவற்றையும் அழித்திடும் சிவபிரானது படைக்கலத்தைச் செலுத்திடுதற்குக் கையில் எடுத்துக்கொண்டான், கொடுமையான வெப்பமுடைய ஆயிரம் கிரணங்களைக் கொண்ட சூரியதேவனைச் சிறை வைத்த பானுகோபன். 110

எஞ்சல் இல்லதோர் எம்பிரான் தொல்படை எடுத்து
மஞ்ச னங்கந்தந் தூபிகை மணிவிளக் கமுதம்
நெஞ்சி னிற்கடி துய்த்தனன் பூசனை நிரப்பி
விஞ்சும் அன்பினல் வழுத்தியே தொழுதனன் விடுத்தான்.

முடிவு என்பதில்லாத எம்பிரானது முதிய சிவப் படைக்கலத்தைப் பானுகோபன் எடுத்து, அப்படையை வணங்கிடுதற்கு உரிய திருமஞ்சன நீர், வாசனைத் திரவியம், தூபம், ஒளியுடைய தீபம், அமுது ஆகிய இப்பூசை முறையைத் தன் நெஞ்சால் விரைவுடன் செய்து, பெருகிடும் அன்பினல் துதித்து, அப்படையைப் பானுகோபன் விட்டான். 111

தாதை யாயவன் படைக்கலம் விடுத்திடுந் தன்மை
காதன் மாமகன் கண்டனன் தானுமக் கணத்தில்
ஆதி நாயகன் படைதனை எடுத்தனன் அளியால்
போத நீடுதன் புந்தியால் அருச்சனை புரிந்தான்.

தந்தையாகிய சிவபிரானின் படையினைப் பானுகோபன் விடுத்திடும் தன்மையினைக் காதல் மைந்தரான வீரவாகுதேவர் கண்ணுற்று உடன் அக்கணத்திலே தானும், ஆதியான சிவபிரானின் படையினை எடுத்து, அதற்கு அன்பினுலும், ஞான உணர்வு மிகுந்த புத்தியாலும் அருச்சனை செய்தார். 112

வழிப டுந்தொழில் முற்றிய பின்னுற மதலை
அழித கன்மகன் விடுத்திடு படைக்குமா றுகி
விழுமி தாயிவண் மீளுதி யாலென வேண்டித்
தொழுதி யாவர்க்கும் மேலவன் படையினைத் தொடுத்தான்.

வழிபாடு செய்திடும் தொழில் முடிந்த பிற்பாடு மைந்தரான வீரவாகு தேவர் பாதகனுன சூரபன்மன் மகன் விடுத்திட்ட சிவப்படைக்கு மாருக, 'எனது சிவப்படையே! நீ சென்று போரிட்டு வெற்றியுடன் மீண்டிடுவாய்' என்று தொழுது வேண்டுதல் புரிந்து யாவர்க்கும் மேலவரான சிவப் படைக்கலத்தை விடுத்தார். 113

தூயன் விட்டிடு சிவன்படை எழுதலுந் தொல்லைத்
தீயன் விட்டிடு பரன்படை யெதிர்ந்துநேர் சென்ற
தாய அப்படை இரண்டுமா றுகிய வழிக்கு
நாய கத்தனி உருத்திர வடிவமாய் நண்ணி.

தூயவரான வீரவாகு தேவர் விட்ட சிவப் படைக்கலம் எழுதலும் மிக முதியவனுன தீயவன் பானுகோபன் விடுத்த சிவப்படையும் எதிர்ந்து, இப் படைக்கு நேராக வந்து இரண்டு படையும் ஒன்றினிற்கொன்று மாறுய வழிக்கு மேலான நாயகரான உருத்திரமூர்த்தியின் வடிவமாகச் சேர்ந்துகொண்டன. 114

ஊழிக் காலினை ஒருபுடை உமிழ்ந்தன உலவாச்
சூழிப் பாய்புகை ஒருபுடை உமிழ்ந்தன தொலைக்கும்
பாழிப் பேரழல் ஒருபுடை உமிழ்ந்தன பலவாம்
ஆழித் தீவிடம் ஒருபுடை உமிழ்ந்தன அவையே.

இப்படைகள் இரண்டும் போரிடுங்கால் ஊழியில் உலகை அழித்திடும் காற்றினை ஒருபுறம் உண்டுபண்ணின; ஓய்விலாதபடி சுழன்று பெருகும் புகையினை ஒரு புடை வருவித்தன; எவற்றையும் தொலைக்கும் பாழான நெருப்பை ஒரு புடை தோற்றுவிததன; பலவாகும் சமுத்திரங்களிலுள்ள நஞ்சை ஒரு புடை தோற்றுவித்தன 115

கூளி மேலவர் தொகையினை அளித்தன கொடிதாங்
காளி மேலவர் தொகையினை அளித்தன கடுங்கண்
ஞாளி மேலவர் தொகையினை அளித்தன நவைதீர்
ஆளி மேலவர் தொகையினை அளித்தன அயலில்.

இப்படைகள் இரண்டும் தமது அயலாக பூதங்களின் கணங்களை ஒரு புடை தோற்றுவித்தன; கொடிதாய காளிகளின் மேலான வலிமையுடைய கூட்டத்தினை ஒருபுறம் தோற்றுவித்தன; கொடுங் கண்ணுடைய வைரவமூர்த்திகளை ஒரு புறம் வருவித்தன; குறை தீர்ந்த சிங்கவாகனமுடைய துர்க்காதேவிகளின் கூட்டத்தை ஒருபுறம் தருவித்தன. 116

பேயி னங்களை ஒருபுடை உமிழ்ந்தன பிறங்கு
மூய தொல்லிருள் ஒருபுடை உமிழ்ந்தன முழங்கு
மாயை தன்கணம் ஒருபுடை உமிழ்ந்தன மறலித
தீயர் தங்குழு ஒருபுடை உமிழ்ந்தன செறிய.

பேயினங்களை ஒருபுறம் தோன்றச் செய்தன; நெருங்கிச் செறிந்து மூடும் கொடிய இருளை ஒருபுறம் தருவித்தன; முழங்குகின்ற மாயையின் கணங்களை ஒரு புடையாக வருவித்தன; கொடிய தீமை செயும் இயமர்களது கூட்டத்தினை ஒரு புடையாகத் தோன்றச் செய்தன. 117

எண்ட ருங்கடல் அளப்பில கான்றன எரிகால்
கொண்ட லின்தொகை அளப்பில கான்றன கொலைசெய்
சண்ட வெம்பணி அளப்பில கான்றன தபன
மண்ட லங்களோர் அளப்பில கான்றன மருங்கில்.

எண்ணற்ற கடல்கள் அளவற்றனவற்றை உண்டுபண்ணின; நெருப்பு மழை பொழியும் முகில்கள் அளவற்றதை ஒரு புடை உண்டுபண்ணின; கொலை செய்திடும் நஞ்சுடைய பாம்பினங்கள் அளவற்றனவற்றை ஒரு புடை உண்டுபண்ணின; கொடிய சூரிய மண்டலங்கள் அளவற்றதை உண்டுபண்ணின. 118

அனந்த கோடியர் புட்கலை இறைவரை அளித்த
அனந்த கோடியர் கரிமுகத் தவர்தமை அளித்த
அனந்த கோடியர் அரிமுகத் தவர்தமை அளித்த
அனந்த கோடியர் சிம்புள்மே னியர்தமை அளித்த.

அநந்தகோடி ஐயனார் மூர்த்திகளைத் தோற்றுவித்தன; அநந்தகோடி விநாயகமூர்த்திகளைப் படைத்தன; அநந்தகோடி நரசிங்கமூர்த்திகளைத் தோற்றுவித்தன; அநந்தகோடி வீரபத்திரர்களைப் படைத்தன இரண்டு சிவப்படைகளும்.

ஏறு வெம்பரி வயப்புலி வல்லியம் யாளி
சீறு மால்கரி தேரொடு மானமேற் சேர்ந்து
மாறில் பல்படை சிந்தியே முனிந்துமேல் வருவான்
வேறு வேறெங்கும் உருத்திர கணங்களை விதித்த.

இடபம், கொடிய குதிரை, வீரப் புலி, சிங்கம், யாளி, சீறுகின்ற மதயானை, தேர் ஆகிய வாகனங்கள் மேல் எழுந்து, மாறில்லாத கொடிய படைகளையும் வீசி, கோபத்துடன் மேற்கொண்டு வருகின்ற உருத்திரமூர்த்திகளை வேறுவேறாக எப்பக்கமும் இப்படைகள் உண்டாக்கின. 120

ஆர ணன்படை அளப்பில தந்தன ஐவர்
சார ணன்படை அளப்பில தந்தன தந்த
வார ணன்படை அளப்பில தந்தன வளத்தின்
கார ணன்படை அளப்பில தந்தன கடிதின்.

பிரமதேவரின் படைகள் அளவிறந்தனவற்றை உண்டாக்கின; நாராயணக் கடவுளின் படைகள் அளவிறந்தனவற்றை உண்டாக்கின. ஐராவத யானைக்கு நாயகனான இந்திரனின் படைகள் அளவிறந்தவற்றை உண்டுபண்ணின குபேரனுடைய படைகள் அளவற்றனவற்றை உண்டுபண்ணின. 121

வாயு வின்படை எண்ணில புரிந்தன மறலி
ஆய வன்படை எண்ணில புரிந்தன அளக்கர்
நாய கன்படை எண்ணில புரிந்தன நகைசேர்
தீய வன்படை எண்ணில புரிந்தன செறிய.

வாயுதேவனின் படைகள் எண்ணிலாதவற்றை உண்டுபண்ணின. இயமனவனின் படைகள் எண்ணிலாதவற்றை உண்டுபண்ணின. சமுத்திரங்கட்கு நாயகனுன வருணனின் படைகள் எண்ணிலாதவற்றை உண்டுபண்ணின. ஒளி கொண்ட அக்கினிதேவனின் படைகள் எண்ணிலாதவற்றை உண்டுபண்ணின எல்லா இடமும் செறிந்திட. 122

கற்பொ ழிந்தன ஞெகிழிகள் பொழிந்தன கணக்கில்
செற்பொ ழிந்தன கணிச்சிகள் பொழிந்தன திகரி
எற்பொ ழிந்தன சூலம்வேல் பொழிந்தன ஈண்டும்
விற்பொ ழிந்தன சரமழை பொழிந்தன விரைவில்.

இரு சிவப்படைகளும் கல்லைப் பொழிந்தன; நெருப்புச் சுடர் பொழிந்தன; கணக்கற்ற இடியேற்றுக்களைப் பொழிந்தன; வச்சிராயுதங்களைப் பொழிந்தன; சக்கரங்களைப் பொழிந்தன; சூலம், வேல் இவைகளைப் பொழிந்தன எங்கெங்கும் விற்களை உண்டாக்கின. அதன் மூலம் அம்புகளையும் மழை போன்று சொரிந்தன. 123

வேறு

இம்முறை உருவ நல்கி எம்பிரான் படையி ரண்டும்
மைம்மலி கடலும் வானும் மாதிர வரைப்பும் பாரும்
கொம்மென விழுங்கி அண்ட கோளகை பிளந்து மேல்போய்த்
தம்மின்மா றுகி நின்று சமர்த்தொழில் புரிந்த அன்றே.

இம்முறையாகப் பல உருவங்களையும் உண்டாக்கி, எம்பிரானுடைய சிவப் படைக்கலம் இரண்டும்; கருமை கொண்ட கடலும் வானமும் திக்கின் எல்லை எங்கும் இப்பூமியும் விரைவுடன் இப்படைகளால் நிரப்பி மூடி, அவற்றைத் தமது எல்லைக்குள்ளாக்கி அண்டகோளகையையும் பிளந்து, இன்னமும் மேலாகப்போய் தம்மினில் மாறுபட்டு நின்று போர்த்தொழிலைப் புரிந்தன. 124

வற்றிய அளக்கர் ஏழும் வறந்தன வான்றேய் கங்கை
முற்றிய புறத்தில் ஆழி முடிந்ததவ் வண்டத் தப்பால்
சுற்றிய பெருநீர் நீத்தம் தொலைந்தன ஆண்டை வைப்பில்
பற்றிய உயிர்கள் யாவும் பதைபதைத் திறந்த அம்மா.

இப்படிப் போரிடும் செய்கையால் சமுத்திரங்கள் ஏழும் வற்றியது. வானில் நிரந்திருக்கும் கங்கை வற்றியது புறவாழிச் சமுத்திரம் முடிந்தது. அதற்கப்பாலுள்ள அந்த அண்டங்களில் சூழ்ந்துள்ள பெருங்கடலும் அழிந்தன; அந்த இடங்களில் பற்றி வாழ்கின்ற உயிர்களும் பதைபதைத்து இறந்தன. 125

எரிந்தன நிலனும் வானும் இடிந்தன முடிந்து மேருப்
பொரிந்தன அடுவின் சூழல் பொடிந்தன இரவி தேர்கள்
நெரிந்தன அண்டம் யாவும் நிமிர்ந்தன புகையின் ஈட்டம்
கரிந்தன கிரிகள் ஏழும் கவிழ்ந்தன திசையில் யானை.

பூமியும் வான உலகும் நெருப்பு மூண்டு எரிந்தது. மேருமலை இடிந்து முடிந்தது; அண்டங்களின் சூழல்கள் பொடிந்தன; சூரியனின் தேர்கள் பொடியாயின, அண்டங்கள் யாவும் நெரிபட்டன, புகைப்படலம் எங்குமெங்கும் நிமிர்ந்தெழுந்தன. ஏழுமலைகளும் கரிந்துபோயின. திக்கு யானைகள் கவிழ்ந்து வீழ்ந்தன.

அலைந்தன சூறை வெங்கால் அவிந்தன வடவைச் செந்திக்
குலைந்தன பிலங்கள் ஏழும் குலுங்கின அண்டப் பித்தி
உலைந்தன உயிர்கள் யாவும் உடைந்தனர் தெரிந்த வானோர்
தொலைந்தன கமட நாகம் சுருண்டன புரண்ட மேகம்.

கொடிய சூறாவளிக்காற்று அலைந்தது; வடவாமுகாக்கினி அவிந்தது; பிலங்கள் ஏழும் நிலைகுலைந்தன. அண்டங்களின் பித்திகைகள் குலுங்கின, உயிர் எல்லாம் உலைந்தன இதை முன்னமே அறிந்த தேவர் நில்லாது சிதறி ஓடினர். ஆதியான ஆமையும், ஆதிசேடனுடன் கூடிய நாகங்களும் தொலைந்தன. மேகங்கள் புரண்டு சுருண்டன. 127

பூமகள் புவியின் மங்கை பொருமியே துளங்கி ஏங்கித்
தாமரைக் கண்ணன் தன்னைத் தழுவினர் இருவ ரோடு
நாமகள் வெருவி யோடி நான்முகற் புல்லிக் கொண்டாள்
காமனை இறுகப் புல்லி இரதியும் கலக்கமுற்றாள்.

பூமேல் வாழும் இலக்குமிதேவியும் பூமிதேவியும் நடுங்கி ஏங்கி, குளறியவாறு நாராயணப் பெருமானைத் தழுவிக்கொண்டார்கள். காயத்திரி சாவித்திரியுடன், சரஸ்வதிதேவி ஓடிச்சென்று, அச்சத்தால் பிரமதேவனைத் தழுவிக்கொண்டாள். மன்மதனை இறுகக் கட்டித் தழுவிக்கொண்டு, பயத்தால் இரதியும் கலக்கமுற்றாள்;

மற்றுள முனிவர் தேவர் மடந்தையர் தம்மைப் புல்லி
நிற்றலும் ஆற்றார் உய்யும் நெறியுமொன் றில்லா ராயும்
உற்றிடும் அச்சந் தன்னால் ஓடினர் வனத்தீச் சூழப்
பெற்றிடும் பறழ்வாய் கவ்விப் பெயர்ந்திடும் பிணைக்க ளேபோல்.

மற்றுள்ள முனிவர், தேவர்கள் யாவரும் தத்தமது பெண்களைத் தழுவி அச்சத்தால் நின்றாலும், இந்தக் கொடுமை சகிக்காது, உய்கின்ற நெறியினை அறியாராகி, தமக்குற்ற நடுக்கத்துடன் எல்லாரும் தமது மனைவியரையும் தூக்கிக்கொண்டு ஓடினார்கள். எப்படியெனில், காட்டில் நெருப்பு மூண்டு சூழ்ந்திடுதலும், அங்கு வாழும் பெண்மிருகங்கள் தங்கள் பெற்ற குட்டிகளைத் தூக்கிக் கொண்டு ஓடுவன போன்றிருந்தார்கள்; 129

திரண்டிடு பூத வீரர் தியங்கினர் இலக்க ரானோர்
மருண்டனர் துணைவர் தாமும் மயங்கினர் விரற் சூழ்ந்தார்
புரண்டனர் அவுணர் யாரும் பொடிந்தன படர்ந்த தேர்கள்
உருண்டன களிறு மாவும் ஒருவனே அவுணன் நின்றான்.

திரண்டு நிற்கும் பூத வீரர் தியங்கினார்கள். இலக்கம் வீரர்கள் மனம் மருண்டார்கள். மற்றைய தம்பியர் எட்டுப்பேரும் மயங்கி, அதனால் வீரவாகு தேவரை வந்து சூழ்ந்து நின்றார். அசுரர் யாவரும் புரண்டு வீழ்ந்தார்கள். அவர்கள் ஏறிவந்த தேர்கள் பொடிந்தன. குதிரையும் யானையும் வீழ்ந்து உருண்டன. பானுகோபன் ஒருவன் தான் தனித்து நிற்க; அவன் பாலாக வந்த அனைத்து அசுரச் சேனையும் அழிவுற்றது 130

ஆழிசூழ் மகேந்தி ரத்தில் அமர்தரும் அவுணர் முற்றுஞ்
சூழுமித் தீமை நோக்கித் துண்ணென வெருவி மாழ்கி
ஏழிரு திறத்த வான உலகங்க ளியாவும் மாயும்
ஊழிநாள் இதுகொ லோவென் றுலேந்தனர் குலேந்த மெய்யார்.

சமுத்திரம் சூழ்ந்த மகேந்திரபுரத்தில் வாழ்கின்ற அசுரர் யாரும் இங்கு சூழ்ந்துள்ள இத்தீமையின் விளைவை நோக்கிய மாத்திரமே, அளப்பரிய பயத்தால் மாழ்கி, அம்மவோ பதினன்கு திறத்தவான உலகங்கள் எல்லாம் இன்று அழியும். ஊழி முடிபான நாள் இன்று தானே என நடுங்கி குலேகின்ற மேனி உடையராய் ஓடி அலேந்தார்கள். 131

பேரொலி பிறந்த தண்டம் பிளந்தன வளைந்த சூறை
ஆரழல் பரவிற் றம்மா ஆதவன் விளிந்தான் நந்தம்
ஊருறை சனங்கள் யாவும உலேந்தன புகுந்த தென்னே
தேருதிர் என்று சூரன் ஒற்றரைத் தெரிய விட்டான்.

இதைக் கண்ட சூரபன்மனும்; பேரோசை பிறக்கின்றது, அண்டங்கள் பிளக்கின்றன, சூருவழிக்காற்று சூழ்கின்றது, அம்மாடி நெருப்பு எங்கும் பரவிக் கொண்டது சூரியனும் ஒளிகெட்டு மங்கினன். நம்முடைய ஊரில் இருக்கும் சனங்கள் யாவும் உலேந்தன. என்னே! இப்படி நிகழ வந்து சேர்ந்த காரியம்; நீங்கள் போய் பார்த்து வாருங்கள் எனத் தூதுவரைச் சூரபன்மன் அறியும்படி விட்டான். 132

விட்டிடு கின்ற ஒற்றர் செல்லுமுன் விரைந்து போரில்
பட்டது தெரிந்து தூதர் ஒருசிலர் பனிக்கு நெஞ்சர்
நெட்டிரு விசும்பின் நீந்து நெறியினர் இறைவன் தன்னைக்
கிட்டினர் வணங்கி நின்ருங் கினையன கிளத்த லுற்ருர்.

சூரபன்மனல் விடப்பட்ட தூதுவர் செல்வதன் முன்பே, போர்க்களத்து நிகழ்ந்த இதனைத் தெரிந்துகொண்டு, ஒரு சில தூதுவர்கள் நடுக்கம் உடைய நெஞ்சுடன் அகன்ற ஆகாயத்தால் வழிக்கொண்டு வருபவராய் வந்து, சூரபன்மனை அடைந்து வணங்கி, முன்நின்று இதனை எடுத்து அங்கு சூரபன்மனுக்குச் சொல்லலுற்ருர். 133

ஐயகேள் உனது மைந்தன் அலரிதன் பகைஞன் நென்னல்
எய்திய தூத ஞேடும் இருஞ்சமர் விளைத்துப் பின்னர்த்
தெய்வதப் படைகள் உய்த்துச் செகமெலாம் அழிக்கு மேலோன்
வெய்யதோர் படையைத் தூண்ட அவனுமப் படையை விட்டான்.

ஐயனே கேளும், உனது மைந்தன் சூரியனின் பகைவன். முன்னுள் இங்கு வந்த தூதனேடும் பெரிய போரினைப் புரிந்து, அதன் பின்னல் தேவப் படைகளையும் செலுத்திக், கடைசியாக இப்பூமி முதல் யாவற்றையும் அழிக்கின்ற உருத்திரமூர்த்தியின் சிவப்படைக்கலத்தை விடுதலும், அந்தத தூதுவன் தானும் அப்படையை விடுத்தான். 134

அப்படை இரண்டு மாகி அகிலமும் ஒருங்கே உண்ணும்
ஒப்பில்பல் லுருவம் எய்தி உருகெழு செலவிற் ருகித்
துப்புடன் அண்ட முற்றும் தொலேத்தமர் புரிந்த மாதோ
இப்பரி சுணர்ந்த தென்ருர் இறையவன் வினவிச் சொல்வான்.

அந்தப் படைகள் இரண்டுமாக வந்து, அகில உலகமும் ஒருங்காக உண்ணு கின்ற ஒப்பற்ற பல உருவங்களைக் கொண்டு, இடியேறு போன்ற வேகமுடன் செல்வதாகி, மிக்க வீரத்துடன் அண்டங்கள் முழுவதையும் தொலைவு செய்து போர்புரிந்து நின்கின்றன. இதனால்தான் இங்கெல்லாம் ஓர் அவலமான நிலை ஏற்பட்டது என்றார்கள் அத்தூதுவர். அதனைச் சூரபன்மன் கேட்டுச் சொல்வான்:

இரவியை முனிந்தோன் முக்கண் இறையவன் படையை யாரும்
வெருவர விடுத்து மின்னும் வென்றிலன் ஒற்றன் தன்னை
நெருநலில் சிறிய னாக நினைந்தனம் அவனை அந்தோ
உருவுகண் டெள்ளா தாற்றல் உணர்வதே யுணர்ச்சி என்றான்.

சூரியனை முனிந்து சிறைவைத்த பானுகோபன், மூன்று கண்களுடைய எங் கடவுளது படையை யாரும் அஞ்சிட விடுத்தும், இன்னும் அந்தத் தூதுவனை வென்றிலன். நேற்று முன்னாள் அத்தூதுவனை நான் ஒரு சிறியவனாக நினைத் தேன். அந்தோ! இப்போது ஒருவனுடைய உருவத்தைக் கண்டு அவனை இக ழாது, அவனுடைய ஆற்றல் கண்டு உணர்வதுதான் உணர்ச்சியின் பயன் ஆவது என்றான் சூரபன்மன். 136

வெருவரும் இனைய பான்மை விளைந்திட எம்பி ரான்தன்
பொருவரும் படைகள் தம்மிற் பொருதன ஆடல் உன்னி
ஒருவரும் நிகர்கா ணாத ஊழியின் முதல்வன் தானே
இருபெரு வடிவ மாகி இருஞ்சமர் புரிந்த தேபோல்.

யாவரும் வெருக்கொள்ளும்படியாக இத்தன்மைகள் நிகழ்ந்திட, எம்பெரு மானுடைய நிகரிலாத சிவப்படைகள் இரண்டும் தம்மில் போரிட்டன. எது போலெனில், ஒருவரும் நிகர் காண முடியாத ஊழியின் முதல்வனான சிவபிரானே தான் இரண்டு பெருவடிவமாகி பெரும்போர் புரிந்துள்ளவாறு போன்று, 137

இவ்வகை சிறிது வேலை எந்தைதன் படைக்க லங்கள்
அவ்விரு வோருங் காண ஆடலால் அமர தாற்றி
வெவ்வுரு வாகத் தம்பால் மேவர விதித்த எல்லாஞ்
செவ்விதின் மீட்டும் வல்லே திரும்பிய திறலோர் தம்பால்.

இவ்வகையாக சிறிதுநேரம் எந்தைபெருமானது சிவப்படைக்கலங்கள், தம்மை விடுத்த பானுகோபனும் வீரவாகுதேவரும் காண, உக்கிரமான ஆடலால் போர் இயற்றி, கொடிய உருவங்களாகத் தம்பால் தோற்றுவித்த வடிவங்கள் யாவையும் செம்மையாகத் தம்பால் ஒடுக்கி மீட்டுக்கொண்டு, விரைவுடன் விடுத் துள்ள வீரர்பால் திரும்பிக்கொண்டன. 138

திரும்பிய படைகள் தங்கள் செய்கையால் திரிந்த அண்டம்
பெரும்புவி அகல்வான் நேமி பிலம்வரை பிறவுந் தொல்லை
வரம்புறு மாறு நல்கி மாற்றலர் பக்கம் அல்லா
அரும்பெறல் உயிர்கள் முற்றும் அருள்செய்து போன அன்றே.

இருவர்பாலும் திரும்பிக்கொண்ட படைகள், தங்கள் செய்கைகளினால் மாறுபட்ட அண்டங்கள்; பெரிய பூமி; அகன்ற வான உலகுகள்; கடல்கள்; பாதாள உலகங்கள்; மலைகள் இன்னும் பிறபொருள்களையும், முன்னை இருந்த அந்நிலையாக மீளவும் வைத்து அசுரர் பக்கம் நீங்க, மற்ற எல்லா இடத்திலு முள்ள அருமையாகப் பிறவிபெற்ற உயிர்கள் முழுதையும், அவர்கள் துன்புறாத படி அருள்செய்து போயின. 139

திண்டிறல் மொய்ம்பன் விட்ட சிவன்படை மீட லோடும்
அண்டலன் விடுத்த தொல்லைப் படையுமாங் கவனை நண்ணக்
கண்டனர் அமரர் ஆர்த்தார் கைதவன் இதினும் வெற்றி
கொண்டிலன் முடிவன் இன்னே குறைந்ததெம் மிடரும் என்றார்.

திண்மையான தோளுடைய வீரவாகுதேவர் விட்ட சிவப்படைக்கலம் மீண்டு வருதலோடும், பகைவன் பானுகோபன் விடுத்த முதிய சிவப்படைக்கலமும் அவனைச்சென்று அடைய; இதனைக் கண்டுகொண்ட தேவர்கள் யாரும் ஓகோ! வஞ்சகனை பானுகோபன் இதிலும் வெற்றி கொண்டிலன் என ஆர்ப்பரித்து, இனிப் பானுகோபன் முடிவான், எமது இடர்களும் குறைந்துபோம் என்றார்கள்.

பாங்கரின் இபங்கள் காணான் பாய்பரித் தொகுதி காணான்
தாங்கெழில் தேர்கள் காணான் தானவப் படையுங் காணான்
ஆங்கவை முடியத் தானே ஆயின தன்மை கண்டான்
ஏங்கினன் அவுணன் மைந்தன் இரங்கிமற் றினைய சொல்வான்.

இந்நிலையில் சூரபன்மன் மகன் பானுகோபன், பக்கராக நின்ற யானைகளைக் காணமாட்டான். பாய்கின்ற குதிரைக் கூட்டத்தையும் காணான்; அழகிய எழிலுடைய தேர்களையும் காணுதவனாய்; அசுரர்படைகளையும் காணுதவனாய்; எல்லாம் முடிந்து இறந்துபோக, தான் ஒருவனே தப்பி நின்றமையைக் கண்டான். என் செய்வேன் என ஏங்கினன்; மிகவும் துயரால் இரக்கப்படுகின்றவனாய் இத்தகைய வார்த்தைகளைச் சொல்கின்றான். 141

மூண்டொரு கணத்தின் எல்லாம் முடிப்பவன் படையும் நேர்போய்
மீண்டுள தென்னின் அம்மா விடுத்திட மேலொன் றுண்டோ
மாண்டன அனிக முற்றும் வறியனாய்த் தமியன் நின்றேன்
ஈண்டினிச் செய்வ தென்னென் றெண்ணியோர் சூழ்ச்சி
கொண்டான்.

ஒரு கணப் பொழுதிலே புறப்பட்டுச் சென்று எல்லாவற்றையும் முடிவு செய்கின்ற சிவபிரானுடைய படையும் நேராகச் சென்று மீண்டது என்றால்; அம்மவோ! இனி யான் விடுத்திடுதற்கு இதற்குமேல் ஒரு படையும் உளதோ? என் சேனை முழுதும் மாண்டன, நானும் எல்லாம் இழந்து வறியனாய் நின்றேன் இவ்விடம் இனி யான் செய்வது என்ன? எண்ணிப் பின்னர் மனதில் ஒரு சூழ்ச்சியினைக் கொண்டான். 142

மாயத்தான் எய்தும் நிற்கின் மலைவதுஞ் செயலன் றென்னா
மாயத்தான் அருவங் கொண்டு வல்விரைந் தெழுந்து சென்று
காயத்தான் ஆகி நிற்பக் கைதவன் வெருவித் தோன்றாக்
காயத்தான் உடைந்தான் என்றே ஆர்த்தன கணங்க ளெல்லாம்.

நான் இவ்விடம் இனி நிற்கின் மாயவேண்டித்தான் வரும். போர் புரிவதும் செய்யக்கூடிய காரியம் அல்ல; என எண்ணி, உடன் மாயத்தால் அருவியாகித் தன்னை மறைத்து மிகு விரைவாக எழுந்து சென்று வானத்தில் ஓடி மறைந்துநிற்ப அதுகண்ட பூதகணங்கள் யாவும், பானுகோபன் பயத்தால் தனது உருவம் தெரியாதபடி தோற்றோடி வானில் மறைந்தான் என்று ஆர்ப்பரித்திட்டன. 143

விடலைவிண் ணெழுந்த காலை மேவலர் தொகையை எல்லாம்
முடிவுசெய் கென்று வஞ்ச முரட்படை அவுணன் தூண்டின்
அடுமது நமையும் என்னு அதற்குமுன் அளக்கர் ஆற்றைக்
கடிதினிற் கடந்தான் போலக் கதிரவன் கரந்து போனான்.

பானுகோபன் மறைந்து விண்ணில் எழுந்தகாலையில், அவனது பகைவரா கும் பூதங்களையும், வீரவாகுதேவர் முதல் யாரையும் முடிவுசெய் என்று வஞ்சனை யுடைய மாயப்படையை அவன் செலுத்தினால், அந்தப்படை வந்தால் என்னையும் கொன்றிடும். அப்பாடா! அதற்கு முன்பாகத் தனது மார்க்கமான மேற்புற சமுத்திரத்தை விரைவுடன் தாண்டிச் செல்வேன் என்பான்போல சூரியதேவனும் மறைந்து போயினான். 144

மைப்புயல் மேனித் தீயோன் மறைந்தது வள்ளல் காணு
இப்பகல் தானுங் கள்வன் இறந்திலன் இரிந்து வல்லே
தப்பினன் இனியான் செய்யத் தகுவதென் னுரைத்தி ரென்ன
ஒப்பருந் துணைவர் கேளா ஒருங்குடன் தொழுது சொல்வார்.

இருண்ட மேகம் போலும் கரிய மேனியுடைய தீயவனான பானுகோபன் மறைந்ததை, அருட்செல்வராகும் வீரவாகுதேவர் கண்டு ஓகோ! இன்று பகலும் அந்தக் கள்வன் இறவாதபடி விரைவாக ஓடித்தப்பினான். நான் இனிச் செய் யத்தகுவது என்ன? நீங்களே சொல்லுங்கள் எனத் தனது துணைவரை நோக்கி கேட்டலும், ஒப்பற்ற அத்துணைவர்கள் யாரும் கேட்டு, ஒருங்காக யாவரும் வீர வாகுதேவரைத் தொழுது சொல்வார். 145

வந்தெதிர் அவுணர் தானை மாண்டன தமியன் நின்றான்
சிந்தினன் கரந்து போனான் இனிவருந் திறலோர் இல்லை
அந்தியும் அணுகிற் றம்மா அனிகமு மியாமும் மீண்டு
கந்தனை இறைஞ்சிக் காலை வருவதே கடமைத் தென்றார்.

வலிமை கொண்ட அந்தப் பானுகோபனது சேனைகள் மாண்டுபோயின. தனியனான பானுகோபன் பயத்தால் இவ்விடம்விட்டு நீங்கி, ஒளித்து ஓடினான். இனி எம்முடன் போரிட வரும் வீரர் யாருமில்லை. மாலைக்காலமும் வந்து சேர்ந்து கொண்டது. ஆதலின், சேனையும் யாமுமாகத் திரும்பிச் சென்று முரு கப்பெருமானின் பாதக்கமலங்களை வணங்கி, காலையில் மீண்டும் போர்க்களம் வருதல்தான் எமது கடமையாகும் என்றார்கள். 146

வேறு

இனிய தன்றுணைவர் இன்னன கூற
வினவி னேன்முருக வேள்அடி காணும்
நினைவு கொண்டிடலும் விண ணிடை நின்ற
தினகரன் பகைஞன் இன்ன தெரிந்தான்.

இனிய பண்புடைய தனது துணைவர்கள் இந்த வார்த்தைகளை எடுத்துத் தொழுது கூறிட; அதுகேட்ட வீரவாகுதேவர் முருகப்பெருமான் பாதங்களைக் கண்டு தரிசிக்கும் நினைவைத் தாமும் கொண்டு மீள்வதற்குச் சித்தமாதலும், அதனை வானில் மறைந்து நின்ற சூரியன் பகைவனான பானுகோபன் தெரிந்து கொண்டான். 147

முன்னை வைகலின் முரிந்தனன் என்றே
பன்னு மோர்வசை பரந்ததும் அன்றிப்
பின்னும் இப்பகல் பிழைத்தனன் என்றால்
என்னை யாவர்களும் எள்ளுவர் மாதோ.

பானுகோபன் நினைக்கின்றான்; நேற்றைக்கு முந்திய நாளில் தோற்றோடினேன் என்று சொல்லப்பெறும் ஒரு வசையும் எங்கும் பரந்து கொண்டது. அதுவல்லாமல், பின்னரும் இப்பகல் யான் பிழைபட்டு தோற்றோடினேன் என்றால், என்னை யாவர்களும் இகழ்ந்து சிரிப்பார்கள். 148

தொக்க போரில்வெரு வித்தொலை வோரை
தக்கதோர் துணைவர் தந்தையர் தாயர்
மக்கள் பெண்டிரும் மறப்பர்கள் என்னின்
மிக்குளார் இகழ்தல் வேண்டுவ தன்றே.

மிகு திறம்பட நேர்ந்துள்ள போரில், பயந்து ஓடுவோரை அவரது தகுதி வாய்ந்த சகோதரரும், தந்தையும், தாயும், மக்களும், மனைவியும் எல்லாரும் பற்றுவிட்டு மறந்திடுவார்கள் என்றால், மற்றைய ஏனையர் இகழ்தல் அதனையும் சொல்லவேண்டுமோ? 149

இன்று நென்னலின் இரிந்துளன் என்றால்
வென்றி மன்னனை வெகுண்டு துறக்குந்
துன்று பல்கதி ரினைச்சுளி தொல்சீர்
பொன்றும் எந்தைபுக ழுந்தொலை வாமால்.

இன்றும் முந்தியநாள்போல் பயந்தோடி அரண்மனை சேர்வேனென்றால்; வெற்றியுடைய அரசன் என்னைக் கோபித்து, தன்முன் போகாதபடி துரத்தி நீக்கிடுவான். மேலான சூரியனை முன்னர் யான் கோபித்த எனது சீர் பொன்றும். இதுவன்றி, நான் இன்று ஓடினால் எனது தந்தையின் புகழும் தொலைந்து போயிடும். 150

யாதொர் துன்னலர் எதிர்ந்திடி னின்று
காதலே வலிக டந்திடு சூழ்ச்சி
நீதி அன்றதுவும் நேர்ந்தில தென்னில்
சாதலே தகுதி சாய்ந்திடல் நன்றோ.

எந்த ஒரு பகைவரும் நமக்கு முன் போரிட நேர்ந்து வந்தால், அவர்மேல் வீரமுடன் சென்று போரிட்டு, முன்னின்று அவர்களது வலியை நீக்கி சூழ்ச்சியினாலேனும் வெற்றிகொள்ளலே நீதி. அது கை கூடிடாதென்றால், சாதல்தான் தகுதியாகும். அதுவன்று பின்னிட்டோடுதல் நன்றோ? 151

வருந்தி நின்றெதிர் மலைந்தனன் இன்றும்
இரிந்து ளான்இவன் எனும்பழி கோடல்
பொருந்தல் அன்றுபுணர் வென்னினும் ஆற்றி
விரைந்து மாற்றலரை வென்றிடல் வேண்டும்.

இன்றும் நான் பெரும் வருத்தத்துடன் நின்று போரிட்டவன். அப்படிச் செய்தவன் இன்றும் பயந்தோடினான் என்னும் வசை பெற்றுக்கொண்டால், அது எனக்குப் பொருந்தாதது ஒன்று. ஏதொரு சூழ்ச்சியாதல் புரிந்து விரைவாக எனது பகைவரை வென்றிடுதல் வேண்டும். 152

முன்னம் நின்றொரு முரட்படை தன்னை
இன்னல் எய்தும்வகை ஏவுதும் என்னின்
அன்ன தற்கெதிர் அடும்படை தூண்டிச்
சின்ன மாகவது சிந்துவன் வீரன்.

வீரவாகுதேவனின் முன்பாக யான்போய் நின்று, அங்கு ஒரு வலியான பெரும்படையை அவன் துன்புறுமாறு விடுவோமென்றால், யான் விடும் அப் படைக்கு எதிராக, அப்படையை அழித்திடும் படை ஒன்றை வீரவாகுதேவன் தூண்டி, என் படையைச் சின்னபின்னமாக்கி அழிப்பான். 153

இறந்த னன்பொரு திரிந்தன னென்னப்
பறந்த லைச்செறுநர் பன்னுற இன்னே
மறைந்து நின்றொரு வயப்படை தூண்டிச்
சிறந்த வென்றிகொடு சென்றிடல் வேண்டும்.

ஆதலால், பானுகோபன் போரிட்டுக் களைத்து ஒளித்தோடினான் என்று போர்க்களத்து நின்ற எனது பகைவர் சொல்லி நிற்ப, இந்த நேரத்தில் நான் இங்கு மறைந்து நின்று, ஒரு வெற்றி தரும் படையை அவர்களுக்குத் தெரியாது விடுத்து, அவரைக் கொன்று சிறந்த வெற்றிகொண்டு சென்றிடல் வேண்டும்.

தெய்வ தப்படை செலுத்துவன் என்னின்
அவ்வ னைத்தும்அம ராற்றலர் தம்பாற்
செவ்வி துற்றுயிர் செகுத்திட லின்றே
வெவ்வு ருக்கள்கொடு மீளுவ தல்லால்.

தெய்வப்படைகளை யான் செலுத்திடுவேன் என்றால், அந்தப் படைகள் அனைத்தும் என் பகைவர்பால் சென்று, செப்பமாகிய அவரது உயிரை நீக்க மாட்டாது. அப்படைகள் அச்சந்தரும் கொடிய உருவத்தைக் கொண்டு சென்று மீண்டு வருவனவேயன்றி, வேறொன்றும் செய்யாயின. 155

பண்ண வப்படை படைத்திடு கோலம்
எண்ண லன்தெரியின் ஏற்றன தூண்டித்
துண்ணென னத்தொலைவு சூழ்ந்திடும் யானும்
விண்ண கத்துறல் வெளிப்படு மாதோ.

அன்றியும், தெய்வப் படைகள் எடுத்திடும் கோலத்தை என் பகைவன் வீரவாகு காண்பானேயெனின், அதற்கு ஏற்ற படையைத் தூண்டி திடீரென என்படைகளைத் தொலைவு செய்திட எண்ணிடுவான். அப்படியாயின், யானும் வானில் மறைந்து நிற்பது வெளிப்படுமல்லவோ? 156

வெளிப்படிற் செறுநர் விண்ணினும் வந்தே
வளைத்திகற் புரிவர் மாறமர் செய்தே
இளைத்தனன் பொரவும் இன்னினி ஒல்லா
தொளித்து முற்பகலின் ஓடரி தாமால்.

நான் வானில் நிற்பது வெளிப்பட்டால், பகைவர்கள் வானிலும் வந்து என்னை வளைத்து பகையான போரினைப் புரிவர். அவருடன் மாறுபட்டு யான் போர்செய்து களைத்துவிட்டேன்; இனிப் போரிடவும் என்னால் முடியாது. அது வன்றி, நேற்று முன்பகல் போல ஒளித்து ஓடவும் அரிதாகும். 157

ஏயெனச் செறுநர் ஈண்டுழி நண்ணி
ஆய தொல்லுணர் வனைத்தையும் வீட்டி
வீயும் ஈற்றினை விளைத்திடு கின்ற
மாய மாப்படை விடுத்திடல் மாட்சி.

என் பகைவர் இங்கு இருக்கும் வேளையிலே, ஏயெனும் முன்னம் அவர் பால் சேர்ந்து, அவர்களுடைய முன்னைய உணர்வுகள் யாவற்றையும் நீக்கி அழித்து, அவர்கள் இறந்திடும்படி முடிவான செயலை விளைவிக்கவல்ல மாயை தந்த பெரும் படையை விடுவிப்பதுதான் இப்போ மாட்சிமையுடையதும் ஏற்ற தொரு கருமமுமாகும்; 158

என்று சிந்தைதனில் இன்னன உன்னி
அன்று மாயவள் அளித்திடு கின்ற
வன்றிறற் படையை வல்லை எடுத்தே
புன்றொழிற் குரிசில் பூசனை செய்தான்.

என்று இப்படியான எண்ணத்தைக் கீழ்மையான வஞ்சகச் செயல்களுக் கெல்லாம் பேர்போன வீரன் பானுகோபன் மனதில் எண்ணி, அன்று காலை மாயவள் தனக்குக் கொடுத்திட்ட மிகு வலியுள்ள மாயப் படையைக் கையில் விரைவுடன் எடுத்து அதற்குப் பூசனை புரிந்தான். 159

நெறிகொள் முப்புலனில் நெஞ்சினில் யாரும்
அறிவரும் பரிசின் அண்டலர் தம்பாற்
குறுகிமெய் யுணர்வு கொண்டுயிர் மாற்றி
எறிபுனற் கடலுள் என்று விடுத்தான.

பூசனை புரிந்த பின்னர் அப்படையினை பானுகோபன் பார்த்து, முறையாகக் கொண்டிடும் மனம், வாக்கு, காயம் என்னும் மூவகை உணர்வுகளில் யார் என்றாலும் அறியமுடியாத பரிசாக எமது பகைவர்பால் நீ சென்று, அவர்களது உடலின் உணர்வுகளை மங்கச் செய்து உயிரை நீக்கி, அவர்களது உடலங்களை எடுத்துச் சென்று சுத்த நீர்க்கடலுள் எறிந்திடுவாயாக எனக் கற்பித்து விடுத்தான். 160

விடுதலுங் கொடிய வெம்படை தான்வந்
தடையும் வண்ணமறி தற்கரி தாகிக்
கடிது பாரிடை கலந்து கணத்தின்
படையை எய்தியது பாவம தென்ன.

பானுகோபன் விடுதலும், கொடிய மாயப்படையானது புறப்பட்டு, தான் வந்து சேர்கின்ற வண்ணத்தினை யான் எனினும் அறிதற்கரிதாகி, விரைவாகப் பூமியுடன் கலந்து, தேவகணங்களின் படையை வந்து அடைந்தது. ஒருவர் செய்த பாவம் அவரைச் சென்றடைதல் போன்று. 161

இருங்க ணத்தரை யிலக்கரை ஒள்வாள்
மருங்கு சேர்த்திய வயத்துணை வோரை
நெருங்கு தார்ப்புய நெடுந்திற லோனை
ஒருங்கு சூழ்ந்துணர் வொழித்தது மன்றே.

பெரிய வடிவுடைய பூதங்களை, இலக்கம் வீரரை, கூரிய வாளை அரையில் செருகி இருக்கின்ற வீரத் தலைவராகும் எண்மரை, நெருங்கிநெகின்ற மாலைகள் நிறைந்த தோளுடைய வீரவாகுதேவரை ஒருங்கே எல்லாரையும் சுற்றிப் பற்றி அவரின் உணர்வை ஒழித்தது அந்த மாயப்படை. 162

ஆன்ற பொன்நகரில் அண்டர்கள் அஞ்ச
ஊன்றும் வில்லிடை உறங்கிய மால்போல்
தோன்று மாயைபடை தொல்லறி வுண்ண
மான்றி யாவரும் மறிந்து கிடந்தார்.

அருமையான வான உலகில் வாழும் தேவர்கள் கண்டு அச்சமுற, அன்று நிகழ்ந்த போரினில் நாராயணக் கடவுள் கைக்கொண்டு ஊன்றிய வில் மீதிலே போரில் ஏற்பட்ட மயக்கத்தால் நித்திரை செய்ததுபோன்று அங்கு வந்த மாயப் படை, அங்குள்ளவர்களின் முதிய அறிவை உண்டிட, எல்லாரும் மயங்கி வீழ்ந்து கிடந்தனர். 163

மறிந்து ளார்தமது மன்னுயிர் வவ்விச்
சிறந்த தன்வலி செயற்கரி தாக
அறிந்து மாயைபடை ஆகுல மூழ்கி
எறிந்து நேமியிட எண்ணிய தன்றே.

வீழ்ந்தாருடைய மேலான உயிரை மாயப்படை நீக்கி, சிறப்புடைய தனது வலியை செய்திட முடியாமல் போயிடுதலும், அதனை உணர்ந்த மாயப்படை கவலையால் மூழ்குண்டு அவர்களைத் தூக்கிக்கொண்டு சென்று சமுத்திரத்திலே போட எண்ணிக்கொண்டது. 164

ஓல மிட்டுலக முட்கிட ஊழிக்
காலின் வெவ்வுருவு கைக்கொடு மாயக்
கோல வெம்படை கொடுந்தொழில் கொண்ட
ஆல காலமென ஆன்றுள தன்றே.

ஓலமிட்டு உலகங்கள் உட்கி வருந்திட ஊழிக்காலத்து உலகை அழித்திட வரும் காற்றின் கொடிய உருவினை எடுத்துக்கொண்டு, மாயம் எனும் கோலத்தினை உடைய அந்தக் கொடிய படை, கொடிய தொழிலினைக் கொண்ட ஆல காலம் என்னும் நஞ்சுபோல் பெருகிக் கொண்டது. 165

வேறு

வெள்ளமா யிரம தென்னும் வியனுரை படைத்த பூத
மள்ளரைத் தலைவர் தம்மை வயங்கெழு துணையி னோரை
நள்ளலர்க் கடந்த துப்பின் நம்பியை உம்பர் ஆற்றால்
பொள்ளென எடுத்து மாயப் படைக்கலம் போயிற் றம்மா.

உடனுக அம்மாயப்படை ஆயிரம் வெள்ளம் என்னும் கணக்குடைய பூதங்களாய வீரரை, பூதத் தலைவர்களை, இலக்கத்து எட்டு வீரராகும் தம்பிமாரை, பகைவர் யாரையும் வெற்றிகொண்ட மேன்மை உடையராகும் வீரவாகுதேவரை வான நெறியால் விரைவுடன் தூக்கிக்கொண்டு மாயப் படைக்கலமானது போயது. 166

போயது சூரன் மைந்தன் புந்தியிற் கதிமேற் கொண்டு
மாயிரு நேமி ஆறும் வல்லையில் தப்பி அப்பால்
தூயதெண் புனலாய் ஆன்ற தொல்கடல் அழுவம் நண்ணி
ஆயவர் தொகையை இட்டே அகன்றிடா தோம்பிற் றன்றே.

இவ்வாறு போன மாயப்படையானது, சூரன் மைந்தன் பானுகோபனுடைய மனதின் வேகத்தைப் போன்று பெரிய கடலாகும் உப்பு, பால், தயிர், நெய், தேன், கருப்பஞ்சாறு என்னும் ஆறையும் கடந்து, தூயதெள்ளிய கடலாய் நிற்கின்ற பழமையான சுத்த நீர்க் கடலை அடைந்து, இவர்களுடைய தொகையைப் போட்டே அங்கு விட்டு அகலாது அவர்களை வைத்திருந்தது. 167

நின்றிடு சூரன் மைந்தன் நிலைமைமற் றிதனை நோக்கிப்
பொன்றினன் வீரவாகு பூதரும் பிறரும் வீழ்ந்தார்
குன்றம தன்றால் மீளக் குரைபுனல் வேலை ஆழ்ந்தார்
நன்றுநஞ் சூழ்ச்சி என்னு நகைஎயி றிலங்க நக்கான்.

அங்கு நின்ற சூரபன்மன் மகன் இந்நிலையினை நோக்கி வீரவாகு இறந்தான் பூதங்களும் மற்றும் வீரர்களும் இறந்தார்கள். இவர்கள் மீண்டெழுவதற்கு சுத்தோதகக் கடல் கிரவுஞ்ச மலைபோன்றதல்ல. ஆகையால், இரைகின்ற பெருநீருடைய கடலின்கண் யாவரும் ஆழ்ந்துள்ளார்கள். நல்லது நல்லது எனது சூழ்ச்சி என்று தனது பற்கள் வெளியே தோன்றிடச் சிரித்தான். 168

அண்டருங் களிப்பின் மேலோன் அவ்விடை அகன்று வல்லே
விண்டொடர் நெறியிற் சென்று வியன்மகேந் திரத்தின் எய்தி
எண்டிசை உலகம் போற்ற இறைபுரி தாதை தன்னைக்
கண்டனன் இறைஞ்சி நின்றுங் கினையன கழற லுற்றான்.

அவனும் தாங்கிடற்கரிய மகிழ்வால் மேம்பட்டு நின்றோனை பானுகோபன்; அவ்விடத்தை விடுத்து விரைவாக அகன்று, வானின் தொடர்பாகிய வழியாற் சென்று, மேலான சிறப்புடைய வீரமகேந்திரபுரத்தில் போய்; எட்டுத் திக்கில் உள்ள உலகம் அனைத்தும் போற்றிட அரசு செய்கின்ற தந்தையான சூரனைக் கண்ணுற்று வணங்கி முன்னின்று இந்த வார்த்தைகப் பானுகோபன் சொல்கின்றான். 169

இன்றியான் சென்று பல்வே றிருஞ்சமர் இயற்றிப் பின்னர்
வன்றொழில் புரிந்தவீர வாகுவை அவன்பாலோரை
அன்றியும் பூத வெள்ள மாயிரந் தன்னை யெல்லாம்
வென்றுயிர் குடித்தி யாக்கை வியன்புனற் கடலுள் உய்த்தேன்.

தந்தையே! கேள், இன்று யான் சென்று பல வகையாகும் பெரிய போரினைப் புரிந்து, பின்னர் வலிய தொழில் செய்வதில் வீரனை வீரவாகுவை, அவன் பக்கராஜேரை அன்றியும் ஆயிரம் வெள்ளம் தொகையாகும் பூதங்களை எல்லாம் வென்று, அவர்களது உயிரினைக் கொன்று அவர்களின் சடலங்களை மேலான சுத்தோதகக் கடலினுள் போட்டேன். 170

சிறிதுநீ கவலை கொள்ளேல் சேனையும் யானும் ஏகி
மறிகட லெறியுங் கால்போல் வளைந்துபா சறையைச் சிந்தி
அறுமுகன் தனையும் வென்றே அரியய னோடும் விண்ணோர்
இறைவனைப் பற்றி நாளை ஈண்டுதந் திடுவன் என்றான்.

சிறிதேனும் இனி நீர் கவலை கொள்ள வேண்டாம். சேனையும் யானும் சென்று திரையுடைய கடலை அள்ளி எறியும் காற்றினைப்போல் கந்தன் இருக்கும் பாசறையைச் சுற்றி வளைத்து, பாசறையைச் சிதைத்து, ஆறுமுகமுடையவனையும் வென்று, பிற்பாடு திருமால், பிரமன், தேவர் தலைவனான இந்திரன் இவர்களைப் பற்றி நாளைக்கே இவ்விடம் கொண்டுவந்து தருவேன் என்றான் பானுகோபன். 171

என்னும் வேலையில் எழுந்தன உவகையாப் புடைய
பொன்னின் அங்கத மூட்டற நிமிர்ந்தன புயங்கள்
மின்னு மாமணிக் கடகங்கள் நெரிந்து வீழ்கின்ற
துன்னு மாமயிர் பொடித்தன முறுவல் தோன்றியதே.

என்கின்ற நேரத்தில் சூரபன்மன்பால் மகிழ்ச்சி எழுந்தது. அந்தப் பூரிப்பால் இறுகப் பூட்டிய பொன்னினாலாய அங்கதமெனும் நகைபூட்டிய அவனது தோள்கள் நிமிர்ந்தன மின்னல் கொண்ட முத்தும், வைரமும் இழைத்த காப்புகள் நெரிந்து முரிந்தே வீழ்கின்றன. சிறந்த பெரிய உரோமங்கள் பொடித்தன; சிரிப்பும் தோன்றியது 172

எழுந்து நின்றிடும் இரவிதன் பகைஞனை இமைப்பில்
அழுந்த மார்புறத் தழீஇக்கொடு மடங்லே றாற்றுஞ்
செழுந்த னிப்பெருந் தவிசிடை ஏற்றி அச்சேயைக்
குழந்தை நாளெனத் தன்னயல் இருத்தினன் கொண்டான்.

எழுந்தான். முன்நின்ற சூரியன் பகைவனை பானுகோபனை இமைப்பொழுதில் தனது நெஞ்சுடன் இறுகத் தழுவிக்கொண்டு, ஆண் சிங்கங்கள் சுமந்திடும் செம்மையாக விளங்கிடும் தனியான பெரும் சிம்மாசனத்து தூக்கி ஏற்றி, தனது மகனை அவன் குழந்தை நாளில் தனது அயலாக வைத்திருக்கின்ற அதே தன்மைபோல, பெரியவனாய் இருக்கும் அவனை அளவுகடந்த மகிழ்வாலும், அவன் வெற்றி பெற்றானே என்னும் நேசமிகுதியினாலும் தனது பக்கராக இருத்தினான். அவனை இன்று அப்படி வைத்துக்கொண்டான். இதுகாலும் செய்யாததை மகிழ்ச்சியால் செய்தான் என்க. 173

தந்தை யாயினோர் இனிதுவீற் றிருப்பதும் தமது
மைந்தர் தங்குடி பரித்தபின் அன்றிமற் றுண்டோ
எந்தை வந்துநந் தொன்முறை போற்றலால் யானுஞ்
சிந்தை தன்னிலோர் எண்ணமும் இன்றியே சிறந்தேன்.

மகனே! கேள், தந்தையானோர் சஞ்சலமின்றி இனிது மகிழ்வுடன் வீற்றிருப்பதும், தமது மைந்தர் வீரனாக விளங்கி வந்து தனதுகுடியைத் தாங்கக்கூடிய நிலைபெற்ற அன்று அன்றி, வேறு எந்த நாளில் தந்தைக்கு மகிழ்வு? ஆதலின் எனது ஐயனே, நீ எனக்கு வாய்த்ததொரு வீரனாக வந்து எமது முதன்மையான சந்ததி தளர்ந்திடாது இன்று பேணிக்கொண்டமையால், யானும் எனது சிந்தைதனில் இனி எக்காலமும் எமது சிறப்பைப்பற்றிய ஏதொரு வியாகூலமான எண்ணமுமின்றிச் சிறந்திருக்கின்றேன். 174

அன்று நோற்றதும் பற்பகல் உண்டரோ அதற்காக்
கொன்றை வேணியன் கொடுத்தனன் என்பது கொள்ளாச்
சென்ற வார்த்தைகள் நிற்கஇவ் வரசும்இத் திருவும்
இன்று நீதரப் பெற்றனன் ஐயயான் என்ருன்.

என் ஐயனே! அன்று ஆலவனத்தில் நான் தவம் செய்து பற்பகல் வருந்தி இருந்ததும் உண்டடா; அதற்காகக் கொன்றை மலரைச் சடை மீதணிந்த கடவுள் வந்து எனக்கு வரங்கொடுத்து, இத்தகைய பேற்றைப் பெற்றேன் என்பது இப்போது என்ஞல் ஏற்றுக்கொள்ள முடியாத கழிந்துபோன வார்த்தைகள். ஏன் என்ருல், வரத்திஞல் பெற்றது தவறும்போல் இருந்தது. அது நிற்க, இந்த அரசாட்சியையும், எனது திருவையும், சீரையும் இன்று நீ தரப் பெற்றேன் என்ருன் சூரபன்மன். 175

என்று பற்பல நயமொழி கூறிமுன் னிட்ட
வெனறிசேர் அணி மாற்றியே புதுவதா விளித்துத்
துன்று பொன்முடி ஆதியா வார்கழற் றுணையும்
நன்று தார்புனைந் தொருமொழி பின்னரும் நவில்வான்.

என்று பற்பல நயமான வார்த்தைகளை அருகிருந்த பானுகோபனுக்குக் கூறி, பானுகோபன் தன் மேனி மீது முன்னிட்டிருந்த பிரகாசமுடைய அணிகலன்களைத் தனது கையால் கழற்றி நீக்கி, புதியதான ஆபரணங்களை வரவழைத்து மகனுக்கு விளங்கிடும் பொன்முடி தொடக்கம் அவன் பாதத்தணியும் வீரக்கழல் வரையும் தானே அவன் மேனியில் நன்று விளங்கிட அணிந்து ஒரு வார்த்தை பின்னரும் சொல்வான். 176

முன்னம் நீசொற்ற தன்மையே மூவிரு முகத்தோன்
தன்னை வென்றுவெஞ் சாரதப் படையினைத் தடிந்து
பின்னர் நின்றிடும் அமரரைச் சிறையிடைப் பிணித்தே
என்னு டைப்பகை முடிக்குதி காலையே என்ருன்.

மகனே! முன்னம் நீ சொன்ன அத்தன்மையே ஆறுமுகமுடைய கடவுளையும் வெற்றிகொண்டு கொடிய பூதப்படையை முடிவு செய்தழித்து, பின்னர் அங்கு தப்பி நிற்கும் தேவரைச் சிறையாகக் கட்டிக்கொண்டு வந்து, என்னுடைய பகையினை நாளைக் காலையே முடிக்குதி என்ருன் சூரபன்மன். 177

என்ன அன்னது செய்குவன் அத்தஎன் றிசைப்ப
மன்னர் மன்னவன் சமரிடை நொந்தனை மைந்த
பொன்னு லாயநின் திருமனைக் கேகெனப் புகலப்
பன்னெ டுங்கதிர் மாற்றலன் விடைகொண்டு படர்ந்தான்.

என்று சூரபன்மன் கூற, ஐயா! அதனை நான் செய்வேன் எனப் பானுகோபன் கூறிடுதலும், மகனை நோக்கி அரசர்க்கரசஞன சூரபன்மன், ஐயனே நீ நன்று போரில் நோவுற்றிருப்பாய்; ஆதலின் நினது இலக்குமி உலாவி விளங்கிடும் பொன்ஞன திருமனைக்கு ஏகிடுவாய் எனக் கூறிடுதலும் அதுகேட்டு பல நீண்ட கதிர்களை உடைய சூரியன் பகைவஞன பானுகோபன் நன்றென்று விடை கொண்டு போயினன். 178

சூழி யானைதேர் வருபரி அவுணர்கள் சுற்ற
நாழி யொன்றின்முன் சென்றுதன் கோநகர் நண்ணி
வாழ்வின் வைகினன் இதுநிற்க வன்புனற் கடலுள்
ஆழும் வீரர்கள் தேறியே எழுந்தவா றறைவாம்.

மதம்பொழியும் யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படைகளுடன் அசுரர்கள் புடைசூழ்ந்துவர, ஒரு நாழிகைப்பொழுதின் முன்னமே போய், தனது அரண்மனை நகரை பானுகோபன் அடைந்து, வஞ்சனையான செயலால் வெற்றி யுற்றேன் என்ற மகிழ்வால், அடையக்கூடிய போகசுகங்கள் அனைத்தையும் அனுபவித்திருந்தான். முனிவர்களே! இதுநிற்ப வலிமை கொண்ட தூயநீர்க்கடலுள் மயக்கத்துடன் மாயப்படையாற் போடபபட்டு ஆழ்ந்த வீரவாகுதேவர் முதலிய வீரர்கள் எழுந்தவாறினைச் சொல்வோம். 179

வடபெ ருங்கிரி சூழ்பவன் தொல்பகை மாயப்
படைவி டுத்ததும் பூதரும் துணைவர்கள் பலரும்
தொடையல் வாகுடை வீரனும் மயக்குறத் தூநீர்க்
கடலுள் இட்டதும் ஆங்ஙனஞ் சுரரெலாம் கண்டார்.

வடக்கிலுள்ள பெரிய மேருமலையை வலம்வரும் சூரியபகவானுடன், பழமையான பகைகொண்ட பானுகோபன் மாயப்படை விடுத்ததும்; பூதரும், இலக்கத்தெட்டுத் தம்பிமாரும்; மாலையணிந்த தோளுடைய வீரவாகுதேவரும், மாயப்படையால் மயக்கப்பட்டு, தூய நீர்க்கடலுள் போடப்பட்டதும் யாவற்றையும் அங்கு போரினை நோக்கி நின்ற தேவர்கள் எல்லாம் கணடார்கள். 180

அண்டர் அங்கது நோக்கியே வெய்துயிர்த் தரந்தை
கொண்டு எம்பதைத் தாவலித் தரற்றிமெய் குலைந்து
கண்டு ளித்திடக் கலுழ்ந்துநா வுலர்ந்துகைம் மறித்து
விண்டி டும்படி முகம்புடைத் தலமந்து வியர்த்தார்.

தேவர்கள் யாவரும் அச்செயலை நோக்கியே பெருமூச்செறிந்து, கவலை கொண்டு, உள்ளம் பதைபதைத்து, ஐயோ! ஆ! ஆ! எனக் குழறி, மெய் நடுங்கிக் குலைந்திட, கண்ணீர் துளித்திட, அழுது நாவுலர்ந்து, கைகளை உதறி, தமது முகம உடையும்படி கையால் முகததில் மோதி அடித்து அலமந்து வேர்த்தார்கள். 181

இன்னல் இத்திற மாகியே அமரர்கள் இரிந்து
சென்னி யாறுடைப் பண்ணவற் குரைத்திடச் சென்றார்
அன்ன தாகிய பரிசெலாம் நாடியே அவர்க்கு
முன்னம் ஓடினன் முறைதெரி நாரத முனிவன்.

இத்தகைய இன்னல் கொண்ட தேவர் யாவரும் பறந்தோடி, ஆறுமுக முடைய கடவுளிடத்து முறையிடுமாறு போயினார்கள். ஆனால், அவருக்கு முந்தி இத்தன்மைகள் யாவற்றையும் கண்டு, செய்யும்முறை தெரிந்த நாரத முனிவன் விரைவாக ஓடினான். 182

அம்பெ னும்படி கால்விசை கொண்டுபோய் அறிவன்
இம்ப ராகிய பாசறைக் கண்ணுறும் எந்தை
செம்ப தங்களை வணங்கிநின் றஞ்சலி செய்தே
உம்பர் கோமகன் தன்மனம் துளங்குற உரைப்பான்.

அம்பின் வேகம் போல் தனது கால்கள் விசைகொண்டிட நாரதமுனிவன் ஓடிச் சென்று, கண் குளிரக் காணும்படியாக இப்பூவுலகில் பாசறையில் வீற்றிருந்தருளும் எந்தை பெருமானின் செம்மையான பாதங்களை வணங்கி நின்று, அஞ்சலிசெய்து, அங்கு எம்பிரான்பால் இருந்த தேவர்க்கு அரசனான இந்திரனது உள்ளமும் நடுங்குமாறு இவைகளை நாரதமுனிவன் கூறுவான்.

சூரன் மாமகன் கரந்துமா யப்படை துரந்து
வீர வாகுவும் துணைவரும் வெங்கணத் தவரும்
ஆரும் மால்கொள வீட்டியே அன்னதால் அவரை
வாரி நீர்க்கடல் உய்த்தனன் சூழ்ச்சியின் வலியால்.

எம்பிரானே! சூரபன்மனுடைய பெருமகன் ஒளித்து நின்று மாயப்படையைச் செலுத்தி, வீரவாகுவும் தம்பியரும், கொடிய பூதத் தலைவரும், எல்லாரும் மயக்கமடையச்செய்து வீழ்த்தியபின், அவர்கள் யாவரையும் அந்நிலையாகவே தூய நீர்க்கடலுள் சேர்த்தினன், தனது சூழ்ச்சியின் வலியால். 184

என்று நாரத முனிவரன் புகறலும் இமையோர்
சென்று சென்றுவேள் பதங்களை இறைஞ்சியே திருமுன்
நின்று வீரர்கள் அழிந்திடு செயல்முறை நிகழ்த்த
வென்றி வேலினை நோக்கியே எம்பிரான் விளம்பும்.

என்று நாரத முனிவன் எடுத்துக் கூறிடுதலும், தேவர்களும் ஓடிச்சென்று ஆறுமுகத்து ஐயனுடைய திவ்விய பாதங்களைத் தொழுது, எம்பிரான் திருமுன்பு நின்று, வீரர்கள் யாரும் மயங்கி அழிவுற்ற செயல் முறைகளை எடுத்துக் கூறிட, அவ்வேலை எம்பிரான் தமது திருக்கரத்து அமர்ந்தருளிய வெற்றிவேலினை நோக்கியருளி இத்திறம் கூறியருளினர். 185

கங்கை அன்னதோர் வாலிதா கியபுனற் கடற்போய்
அங்கண் வைகிய மாயமாப் படையினை அழித்து
வெங்கண் வீரர்மால் அகற்றியே அனையவர் விரைவில்
இங்கு வந்திடத் தந்துநீ செல்கென இசைத்தான்.

வேலே! கங்கை நதியை ஒத்த தூய்மை வாய்ந்த நீருடைய சுத்த நீர்க்கடலிடத்து நீ சென்று, அங்கு தங்கி இருக்கும் மாயம் நிறைந்த பெரும் படையினை அழித்து, வீரம் நிறைந்த வீரவாகுதேவர் முதல் அனைத்து வீரரின் மயக்கத்தை நீக்கி, அவர்கள் யாவரும் இங்கு விரைவில் வந்து சேரும்படி தந்து நிற்பதற்கு நீ செல்வாயாக என மொழிந்தருளினர். 186

செய்ய வேலினுக் கின்னதோர் பரிசினைச் செப்பி
ஐயன் அவ்விடை விடுத்தலும் நன்றென அகன்று
வெய்ய தீங்கதிர் ஆயிர கோடியின் விரிந்து
வைய மேலிருள் முழுதுண்டு வல்விரைந் தததுவே.

செம்மையாகிய வேலினுக்கு எம்பிரான் இன்னதான வார்த்தையைச் சொல்லியருளி, எமது ஐயன் வேலை அவ்விடத்துச் செல்லுமாறு விடுத்தலும், எம்பிரான் வேலும் நன்று என்று இசைந்து எம்பிரானை நீங்கி புறப்படுங்கால், கொடிய கிரணங்களை உடைய சூரியர்கள் ஆயிரகோடி திரண்டுள்ளமை போன்று திக்கெல்லாம் ஒளிவீசி, விரிந்து செய்ய சோதியாகி வையகத்து உள்ள அனைத்து இருளினையும் உண்டு மிகு விரைவாகப் போயருளியது. 187

அரவு மிழ்ந்தது கொடுவிடம் உமிழ்ந்ததால் அடுகூற்
றுருவு மிழ்ந்தது செல்லினம் உமிழ்ந்ததெவ் வுலகும்
வெருவு பல்படைக் கலங்களும் உமிழ்ந்தது மிகவும்
கருநெ டும்புகை உமிழ்ந்ததங் குமிழ்ந்தது கனலே.

எம்பிரானது வேல் செல்லுங்கால் பாம்புகளை உமிழ்ந்தது; கொடிய நஞ்சினை உமிழ்ந்தது; கொலைபுரியும் இயமனின் உருவங்களை உமிழ்ந்தது; இடிகளைக் கக்கியது; எல்லா உலகங்களும் அஞ்சிடும் கொடிய படைக்கலங்களும் உமிழ்ந்தது; மிகவும் கருமையான பெரும் புகைப்படலங்களைக் கக்கியது; அத்துடன் நெருப்பினையும் உமிழ்ந்தது. 188

மின்னல் பட்டன முகிலிருள் பட்டன விசும்பில்
துன்னல் பட்டன காரிருள் பட்டன துன்னார்
இன்னல் பட்டிடு மெய்யிருள் பட்டன வெரிமுன்
பன்னல் பட்டன நேமிசூழ் தனியிருட் படலம்.

வேற்படையின் சோதியால் மின்னல் ஒளி குன்றி அழிந்தது; முகிலின் இருள் அழிந்தது; வானில் சிறு நீர்த்துளிகளாகி நிறைந்திடும் மழை மேகங்கள் அழிந்தன; பகையரசருடைய இன்னல் தரும் மேனியில் உள்ள இருள் அழிந்தது. நெருப்பின் முன் அழியும் இருள் போன்று, சக்கரவாள மலையைச் சூழ்ந்த பேரிருட் படலமும் அழிந்தது. 189

எரிந டுங்கிய தனிலமும் நடுங்கிய தெண்பாற்
கரிந டுங்கிய அளக்கரு நடுங்கிய கனக
கிரிந டுங்கிய தரவினம் நடுங்கிய கிளர்தேர்
அரிந டுங்கிய திந்துவும் நடுங்கிய தம்மா.

எம்பிரான் வேல் சென்றிட அக்கினி நடுங்கியது; காற்று நடுங்கியது; எட்டுத் திக்கில் நின்ற யானைகள் நடுங்கின; பொன்மயமான மேருமலை நடுங்கியது; ஆதிசேடன் முதல் அனைத்தும் பாம்புகள் நடுங்கின; மேலோங்கிய தேர் மீது சென்றிடும் சூரியன் நடுங்கினான்; சந்திரனும் நடுக்கமுற்றான்; பஞ்சபூதம் முதல் யாவும் நடுங்கின. 190

அங்கி தன்படை கூற்றுவன் தன்படை அனிலன்
துங்க வெம்படை அளக்கர்கோன் தன்படை சோமன்
செங்கை வெம்படை மகபதி பெரும்படை திருமால்
பங்க யன்படை யாவையும் தொழுதுடன் படர.

எம்பிரானது வேற்படை செல்லுங்கால், அவரின் துணையாக அக்கினி தேவன் படை; இயமதேவன் படை; வாயுதேவனின் மேன்மையான கொடிய படை; அளகாபுரிக்கு நாதனான குபேரனின் பெரும்படை; சந்திரதேவனது சீரிய கையிற் கொண்ட சந்திரப்படை; இந்திரனுடைய பெரும்படை; நாராயணக் கடவுளின் படை; பிரமதேவரின் படை ஆகியன எம்பிரானின் சோதி வடிவாய வேலினைத் தொழுதவாறு உடன் சென்றன. 191

அடிகள் விட்டிடும் வேற்படை எனப்படும் அலரி
கடிது சேறலும் வானவர் வதனமாங் கமலம்
நெடிது மாமகிழ் வெய்தியே மலர்ந்தன நெறிதீர்
கொடிய தானவர் முகமெனுங் கருவிளங் குவிய.

எம் குருமூர்த்தியான பெருமான் குமரன், விட்டிடும் வேற்படை எனப்படும் சூரியன் விரைவாக எழுந்து வரலும், அவரைக் காண்நுறும் தேவர்களின் முகமான தாமரைகள் நெடிது பெருமகிழ்வெய்தி மலர்ந்தன; நெறிகளைக் கைவிட்டு, தீமை புரியும் அசுரரின் முகங்களான கருங்குவளைமலர்கள் கூம்பின. வேல் பெருமான் வருகை கண்டு தேவர்கள் மகிழ்ந்தனர்; அசுரர்கள் வாடினர்.

இரிந்த தானவர் நாளையாம் இறந்துமென் றிருக்கை
பொருந்தி மாதரை முயங்கினர் கங்குலும் புலர
விரைந்து ஞாயிறு வந்ததென் றேங்கமின் னுரைப்
பிரிந்த வானவர் யாவருஞ் சிறந்தனர் பெரிதும்.

போர்க்களத்தில் நின்றும் அஞ்சி ஓடிய அசுரர், தங்கள் இல்லங்களிற் போய் நாளைய போரில் நாம் இறப்பது நிச்சயம். அதன்முன் இன்று எமது மனைவியரைக் கூடி இன்புறுவோம் என எண்ணி, அவருடன் உறவு கொண்டிருக்கும் நேரத்தில்; வேல் பெருமான் ஒளியால் இரவின் இருள் நீங்கிட; இதேது விரைவாகச் சூரியன் வந்ததென ஏங்கிடவும்; பலகாலமாகத் தமது மனைவியரைப் பிரிந்திருந்த தேவர்கள் யாவரும், இனி நாம் அவருடன் கூடிவாழும் காலமும் அணைந்துள என மகிழ்ந்திடவும் எம்பிரான் வேல் சென்றது. 193

இத்தி றத்தினல் அயிற்படை முப்புரத் திறைவன்
உய்த்த தீநகை போலவே வல்விரைந் தோடி
முத்தி றத்திரு நேமியும் பிற்பட முந்திச்
சுத்த நீர்க்கடல் புகுந்தது விண்ணுளோர் துதிப்ப.

இத்தன்மையாகும் திறத்தினல் வேற்படையானது, முப்புரத்து சிவபிரான் செலுத்திய புன்சிரிப்பாகும் நெருப்பினைப் போன்று மிகுவிரைவாக ஓடி, உவர்க் கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல் ஆகிய ஆறு கடல்களையும் தாண்டி, முன்னுகப் போய் தூயதான சமுத்திரத்தை அடைந்துகொண்டது தேவர்கள் கைகூப்பித் தொழுதிட. 194

செய்ய வேற்படை ஆயிடை புகுதலும் தெரிந்து
வெய்ய மாயவள் படைக்கலம் ஆற்றவும் வெருவி
மையல் வீரரை நீங்கியே தொலைந்துபோய் மறிந்து
மொய்யி ழந்தது தன்செயல் இழந்தது முடிந்தே.

செம்மையான வேற்படை அவ்விடம் சேர்தலும், அதனைத் தெரிந்து கொண்ட கொடிய மாயவளின் படைக்கலமானது, ஆற்றவும் அச்சம் கொண்டு மயக்கமடைந்து கிடந்த வீரரை விட்டு நீங்கியே தொலைந்துபோய் வலி இழந்தது. தனது செயல் யாவும் கெட்டு, அழிந்தது. 195

ஆய காலையில் எந்தைதன் படைக்கெதிர் அடைந்து
தூய தெண்கடல் இறையவன் வெருவியே தொழுது
நேய நீர்மையான் மும்முறை வணங்கிமுன் நிறு
காய முற்றவும் வியர்ப்பெழ ஒருமொழி கழறும்.

அவ்வாருகிய காலையில் எந்தை பெருமானின் படையான வேல்பெருமான் முன்னர் அடைந்து, தூய நீர்க்கடலுக்கு அரசன் மிகவும் அச்சத்துடன் தொழுது அன்பின் நீர்மையால் மும்முறையாக வணங்கி, முன்னின்று மேனி முழுவதும் பயத்தால் வேர்வை கொள்ள ஒரு வார்த்தை கூறியருள்கின்றுன். 196

அந்த மில்வரம் அடைந்திடு சூரன்
மைந்தன் மாயவள் வயப்படை தூண்டி
நந்தம் வீரகண நாதரை யெல்லாம்
புந்தி மேன்மயல் புணர்த்தினன் அம்மா.

எல்லையில்லாத வரப்பேற்றினை அடைந்திட்ட சூரபன்மன் மகன் பானு கோபன் மாயவளின் பெரும் வயமுடைய படையினைச் செலுத்தி, நம்முடைய வீரர்களை, கணநாதர்களை எல்லாம் மனதின்மேல் மயக்கம் செய்தான். 197

முன்னு ணர்ச்சிமுடி வோர்தமை மற்றென்
றன்னி டத்திலிடு தன்மை புரிந்தான்
அன்ன தத்துணையில் அப்பணி ஆற்றி
என்னி டத்தினில் இருந்துள தன்றே.

அவன் மயக்க, மயங்கித் தமது முந்திய உணர்ச்சிகளை முடிந்துளோர் எல்லாரையும் கொணர்வித்து என்னிடத்து இடுவிக்கின்ற தன்மையை அம் மாயப் படைக்குக் கற்பித்தான். ஆனதினுல், அந்த மாயப்படை அத்துணையில் அப் பணியைச் செய்து என்னிடத்தில் வந்து இருந்துளது. 198

இருந்த மாயைபடை எம்பெரு மான்நீ
மருந்து போல்இவண் வழிப்படல் காணுஉ
அரந்தை எய்திஅடல் வீரரை நீங்கி
முரிந்து வீழ்ந்திவண் முடிந்தது மன்னே.

இருந்த மாயையின் படை, எம்பெருமானே! நீர் மருந்தாகும் அமிர்தம் போன்று வழிப்பட்டு வருதலைக் கண்ணுற்று அவலமடைந்து, துயர் சூர்ந்து வலிமையுடைய வீரரை விடுத்து நீங்கி, முரிந்து வீழ்ந்து இவ்விடமே இறந்து போயது;

தொடையல் வாகைபுனை சூரருள் மைந்தன்
விடவ ரும்படையின் வெவ்வலி சிந்தி
அடவும் வன்மையில னங்கவ ராலே
இடர்ப டுஞ்சிறியன் என்செய்வன் அம்மா.

மிகு மலர் மாலைகளை அணிந்திட்ட சூரபன்மன் மகன் பானுகோபனை விட, இங்கு வரும் படையின் கொடிய வலியினைச் சிந்தி, அதனை அழித்திட வலியிலாது அவராலே மிகவும் இடர்ப்பட்ட சிறியேன் நான் என்ன செய்வேன். 200

வெந்தி றற்பகைஞர் மேல்அமர் செய்ய
வந்த வீரரும் மறிந்துணர் வற்றார்
எந்த வேலையெழு வார்இவர் என்றே
புந்தி நோய்கெடு புலம்பினன் யானும்.

மிகு கொடுமையுடைய அசுரவீரர்மேல் போரிட வந்த வீரர்கள் யாவரும் மயங்கி உணர்வழிந்தாரே. எக்காலம் இவர்கள் மயக்கம் தெளிந்து எழுவார்கள் என்றே மனதில் பெரும் வேதனையான நோய்கொண்டு புலம்பினேன்யான்.

முறுவ லாற்புரம் முடித்தவன் நல்கும்
அறுமு கேசன்அசு ரத்தொகை யெல்லாம்
இறையின் மாற்றுமமர் எண்ணிய தாடல்
திறம தென்றுநனி சிந்தனை செய்தேன்.

புன்முறுவலாலே முப்புரங்களையும் பொடியாக்கும் பரமன் தந்த ஆறுமுகமுடைய ஈசன் அசுரத்தொகை எல்லாவற்றையும் ஓர் இறைப் பொழுதில் அழித்து மாற்றுவார். அவ்வாறிருந்தும், போர் புரிதற்குத் திருவுள்ளமாகி இங்கு வந்தது அவரின் திருவிளையாடல் என மனதில் மிகவும் எண்ணி இருந்தேன்.

வள்ள லாயிடை வதிந்து கணத்தின்
வெள்ள மோடுவிடு வீரர்கள் தம்மை
நள்ள லான்மகன் நலிந்திடல் அன்னாற்
குள்ள மாங்கொலென உன்னி அயர்ந்தேன்.

வள்ளலாகிய ஆறுமுகன் அவ்விடத்து இருந்து கொண்டு ஆயிரம் வெள்ளம் பூத சேனையோடும் விடுத்திடும் வீரரை எல்லாம் பகைவனான சூரபன்மன் மகன் துயர் புரிதல் அப்பனுக்கு திருவுள்ளமாமோ என எண்ணிக் கவலையுற்றேன்.

ஆதி மைந்தன் அசு ரத்தொகை தன்னைக்
காதின் உய்குவ னெனக்கரு துற்ற
பேதை யேன்புரி பிழைப்பிவண் உண்டோ
ஏதும் இல்லைமுனி யேல்எனை யென்ருன்.

எப்பொருட்கும் ஆதியான சிவபிரான் திருக்குமரன் அசுரத்தொகை யாவையும் கொன்ருலே நான் உய்வேன். அன்றி வழியில்லை என எண்ணிய பேதையேன் புரிகின்ற பிழை யாதேனும் உண்டோ? இல்லையே வேல் அரசே! ஆதலின் என்னையும் முனியேல் என வணங்கினுன் கடல் அரசன். 204

வாழு நேமியிறை மற்றிது கூறித்
தாழும் எல்லைதள ரேல் இனி யென்று
ஊழி யின்முதல்வன் உய்த்திடும் ஒள்வேல்
ஆழு நீரரை அடைந்தது நண்ணி.

வேல் பெருமான் தரிசனத்தால் வாழ்வு பெறும் சமுத்திர அரசன் மற்று இந்த வார்த்தைகளைக் கூறி. தாழ்ந்து நின்ற நேரத்து தளராதே இனி நீ என்று அருள் புரித்து ஊழியெல்லாவற்றிற்கும் ஒருவனை ஆறுமுக ஈசன் விடுத்திடும் சோதியாகும் வேல், கடலில் ஆழ்ந்திருந்த வீரரைச் சென்று அடைந்தது. 205

அடைதரு கின்ற முன்னர் அவருணர் வுண்ட மாயப்
படையது நீங்கிற் ருகப் பதைபதைத் துயிர்த்து மெல்ல
மடிதுயில் அகன்று தொல்லை வாலறி வொருங்கு கூடக்
கடிதினில் எழுந்தார் அங்கண் உதித்திடு கதிர்க ளென்ன.

அவ்வாறு எம்பிரானது வேல் அங்கு சேர்கின்றதற்கு முன்பாக வீரவாகு தேவர் முதலியோரின் உணர்ச்சிகளை உண்ட மாயப்படையானது நீங்கிடுதலும்; யாவரும் பதைபதைத்து உணர்ந்து மெதுவாக மயக்கமான நித்திரையை நீங்கி, முன்னைய மேலான ஞான அறிவு ஒருங்காகக் கூடிடுதலும் விரைவுடன் அந்தத் தூயகடலினின்றும் உதித்து எழுகின்ற சூரியர்களைப் போன்று எழுந்தார்கள். 206

புழையுறும் எயிற்றுப் பாந்தள் பொள்ளெனச் செயிர்த்துக் கான்ற
அழல்படு விடமீச் செல்ல அலமந்து வியர்த்து மாழ்கிக்
கழிதுயி லடைந்தோர் வல்லோன் காட்சியால் அதுமீண் டேக
எழுவது போல அன்னோர் யாவரும் எழுத லுற்ருர்.

சிறு துவாரமுடைய நச்சுப் பற்களுடன் கூடிய பாம்பு விறுக்கென்று கோபத்தால் கடித்திட, அதுவேளை நெருப்பின் தன்மையுடைய நஞ்சு உடலில் செறிய, பதைத்து வேர்த்து மயங்கி நீக்கமுடியாத மரண சோகத்தை அடைந் தோர்கள் விடம் நீக்கவல்லோனின் பார்வையால் அந்த நஞ்சு நீங்கிப் போயிட மயக்கம் நீங்கி எழுதல்போன்று அங்குள்ள வீரர்கள் யாரும் எழுந்தார்கள்;

சாரதக் கணத்து ளோருந் தலைவரும் இலக்கத் தோரும்
யாரினும் வலிய ரான எண்மரும் எவர்க்கும் மேலாம்
வீரனும் எழுந்து வேலை மீமிசைப் பெயர்ந்து செவ்வேள்
சீரடி மனங்கொண் டேத்தித் தொழுதனர் சிறந்த அன்பால்.

பூதகணத்துளோரும், தலைவர்களும், இலக்கம் வீரரும் யாரினும் வலிய ரான எட்டுப்பேரும், எவர்க்கும் மேலானவீரவாகுதேவரும் எழுந்து சமுத்திரத் தின் மேல்வந்து ஆறுமுகப்பெருமான் திவ்விய கமலபாதத்தை மனதில் தியா னித்து வணங்கி சிறந்த அன்பால் தொழுதனர். 208

வீடின அவுணன் மாயை விளிந்தன பவத்தின் ஈட்டம்
பாடின சுருதி முற்றும் படிமகள் உவகை பூத்தாள்
ஆடிய தறத்தின் தெய்வம் ஆர்த்தன புவனம் யாவும்
நாடிய முனிவர் தேவர் நறைமலர் மாரி தூர்த்தார்.

அசுரனுடைய மாயைகள் அழிந்தன; பாவங்களின் தொகுதிகள் நீங்கின; வேதங்கள் முழுவதும் பாடின; பூமிதேவியும் உவகையால் மலர்ந்தாள்; தரும தேவதை கூத்தாடியது; இப்புவனம்யாவும் மகிழ்வால் ஆர்த்தது; இந்த அற்புத எழுச்சியைக் கண்ணுற்ற முனிவரும், தேவரும் வாசம் நிறைந்த மலர்களைச் சொரிந்து வாழ்த்தினர்கள். 209

அன்னதோர் அமைதி தன்னில் ஆறுமா முகத்து வள்ளல்
மின்னிவர் குடுமிச் செவ்வேல் விண்ணிடை வருதல் காணாஉப்
பன்னரும் உவகை பொங்கப் பன்முறை பணிந்து போற்றிச்
சென்னியில் தொழுத கையார் எதிர்கொடு சென்று சூழ்ந்தார்.

அவ்வாறான சாந்தநிலையில் ஆறுமுகமுடைய வள்ளலாகும் பெருமானின் மின்னல் கால்கின்ற கூரிய முடியுடைய செய்ய வேல்பெருமான் வானில் வருதலைக் கண்ணுற்று வீரவாகுதேவர் முதல் யாவரும் சொல்லற்கரிய மகிழ்ச்சி பொங்க, பன்முறையாகப் பணிந்து போற்றி சென்னியில் கூப்பித் தொழுத கையராகி எதிர்கொண்டு சென்று யாவரும் சூழ்ந்துகொண்டார்கள். 210

சூழ்ந்திடு கின்ற காலைச் சூர்மகன் மாயை தன்னால்
தாழ்ந்துணர் வழிந்த வாறும் தடம்புனற் புணரி உய்ப்ப
வீழ்ந்ததும் ஐயன் வேலால் மீண்டதும் பிறவு மெல்லாம்
ஆழ்ந்ததொல் லறிவால் தேறி அறிஞர்க்கும் அறிஞன் சொல்வான்.

வேல் பெருமானைச் சூழ்ந்திடுகின்ற காலையில், சூரபன்மன் மகன் விடுத்த மாயைப்படையால் எல்லாரும் தாழ்வான நிலையடைந்து உணர்வழிந்தவாறும் அப்படை அவர்களைத் தூய நீர்க் கடலில் கொண்டு சென்று போட, வீழ்ந்ததும் எமது ஐயனின் வேலால் ஆழ்ந்துபோன தாம் எல்லாரும் மீண்டதும், பிறவானவற்றை; எல்லாம் உணரவல்ல ஆழமான முதிய அறிவால் வீரவாகுதேவர் அறிந்து தேறி; அறிஞராகும் பெரியோர்க்கும் பேரறிவாளனான வீரவாகுதேவர் எம்பிரான் வேலை நோக்கிச் சொல்கின்றார். 211

அந்தமில் ஒளியின் சீரால் ஆறுமுகம் படைத்த பண்பால்
எந்தைகண் நின்றும் வந்த இயற்கையாற் சத்தி யாம்பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையால் தனிவேற் பெம்மான்
கந்தனே என்ன நின்னைக் கண்டுளக் கவலை நீத்தேம்.

அந்தமென்பதில்லாத சோதியின் சீரால்; முன் மூன்று சுடரும், பின் மூன்று சுடருமான ஆறுமுகம் கொண்ட பண்பால்; எந்தை பெருமான் சிவன் கண்ணினின்றே தேவரீரும் தோற்றியமையால்; சத்தி என்னும் பேரால் வேதங்கள் உம்மைப் போற்றிடும் சிறப்பால்; தன்னந்தனியான வேற்கடவுளே! கந்தனே நீர் எனும்படி உம்மைக் கண்டு களிகூர்ந்து உள்ளக் கவலை யாவும் தீர்ந்தோம்.

நண்ணலன் பிணித்த மாயம் நலிந்திட யாங்கள் எல்லாம்
துண்ணென அறிவின் றாகித் தொல்புனற் கடலுட் பட்டேம்
எண்ணரும் படைகட் கெல்லாம் இறைவநீ போந்த வாற்றால்
உண்ணிகழ் உணர்ச்சி தோன்ற உய்ந்தனம் உயிரும் பெற்றேம்.

பவைவஞன பானுகோபன் மாயைப் படையால் எம்மைப் பிணித்த மயக்கம் வருத்திட, நாங்கள் எல்லாம் திடீரென அறிவு கெட்டு மிகு பழமையான தூய நீர்க்கடலுள் வீழ்ந்தோம் எண்ணமுடியாத படைகட்கு எல்லாம் இறைவா நீர் இங்கு வருதலால் உள்ளே நிகழ்கின்ற நல்லுணர்வுகள் மீண்டும் தோன்ற யாம் உய்ந்தனம். மயக்கத்தால் இறக்கின்ற நிலே நீங்கி இறவாமை அடைதலால் உயிரும் பெற்ருேம்‡ 213

குன்றிடை எம்மை வீட்டிக் கொடியவன் புணர்ப்புச் செய்த
அன்றும்வந் துணர்வு நல்கி அளித்தனை அதுவும் அல்லால்
இன்றும்வந் தெம்மை ஆண்டாய் ஆதலின் யாங்கள் உய்ந்தேம்
உன்றனக் குதவுங் கைம்மாறு உண்டுகொல் உலகத் தென்ருன்.

கிரவுஞ்ச மலேயிடத்து எம்மை வீழ்த்திக் கொடிய தாரகாசூரன் மயங்க வைத்த அன்றும் வந்து எமக்கு உணர்வைக் கொடுத்து அருள்புரிந்து காத்தருளினீர். அதுவுமல்லாது, இன்றும் வந்து நாம் ஆழ்ந்துபோதலே நீக்கி ஆண்டருளிஞய். இந்த நிலேகளால் யாம் இனி உய்ந்தோம். அவ்வாருக எம்மைக் காத்தருளிய உமக்கு யாமும் உதவுகின்ற கைம்மாறு உலகத்து யாதேனும் உண்டோ? பெருமானே யாம் இந்த அருளுடைமைக்கு யாதொரு கைம்மாறு மிலேம். 214

தூயவன் இனைய மாற்றஞ் சொற்றலும் அயில்வேல் கேளா
நீயிர்கள் விளிந்த தன்மை நேடியே நிமலன் என்னை
ஏயினன் அதனல் வந்தேன் யான்வருந் தன்மை நாடி
மாயம திறந்த தங்கண் வருதிரென் றுரைத்த தன்றே.

தூயவரான வீரவாகுதேவர் இந்த வார்த்தைகளேச் சொல்லி வணங்கி நிற்றலும், சோதியாகும் வேல் பெருமான் கேட்டருளி நீயிர்கள் தூயநீர்க்கடலுள் ஆழ்ந்து அழிவுற்ற தன்மையை நின்மலஞய எந்தை பெருமான் உணர்ந்து என்னை உம்மிடம் செலுத்திஞர் அதனல், வந்தேன். யான் வருகின்ற தன்மையை நாடி மாயப்படை இறந்தது. இனி நீவிர் யாரும் வாருங்கள் எனக் கூறியருளியது. 215

நன்றெனத் தொழுது வீரன் நகையொளி முகத்த ஞகிப்
பின்ருெடர் துணையி னேரும் பெருங்கணத் தவருஞ் சூழச்
சென்றனன் அனைய காலேச் சிறந்தவேற் படைமுன் னேகி
வென்றிகொள் குமரன் செங்கை மீமிசை அமர்ந்த தன்றே.

அதுகேட்ட வீரவாகுதேவர் நன்று என்று தொழுது நகையுடைய முகத்தஞகி, தமது பின்னல் தொடர்கின்ற தம்பிமாரும், பெரும் படைகளாகும் பூதங்களும் சூழ்ந்திடச் சென்றருளிஞர். அவ்வாருகிய நேரத்துச் சிறப்புடைய வேற்படை முன்ஞகச் சென்று வெற்றியினைக் கொண்டருளும் குமரப்பெருமானின் செங்கையின் மேல் திகழ்வுற மீண்டும் அமர்ந்தருளியது; 216

மூன்ரும்நாட் பானுகோபன் யுத்தப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1092

---

# நகர்புகு படலம்

முன்னுறச் செவ்வேல் ஏக மூவிரு முகத்து வள்ளல்
தன்னடிக் கமல முன்னித் தரங்கநீர் உவரி வைப்பின்
மின்னெனக் கடிது போந்து விறன்மிகு தடந்தோள் அண்ணல்
தொன்னிலேத் திருவின் மேவுஞ் சூரன்மூ தூரைக் கண்டான்.

எல்லாரையும் மீட்டபின் முன்பாக எம்பிரானுடைய செவ்வேல் சென்றிட வலிமையுற்ற தோளுடைய வீரவாகுதேவர் ஆறுமுகப் பெருமான் திருவடி மலர்களைத் தியானித்து புறவாழிச் சமுத்திரத்தின் மேல் நின்று எழுந்து மின்னல் போன்று விரைவுடன் சென்று பாசறைநோக்கி வருங்கால் கவலைகள் ஒழிந்து மகிழ்வாய் முன்னைய திருவுடன் சிறந்திருந்த சூரனது ஊர் வீரமகேந்திரபுரத்தைக் கண்டார். 1

கண்டலும் எயிற்றின் மாலே கல்லெனக் கலிப்பக் கண்கள்
மண்டுதீப் பொறிகள் கால வாய்ப்புகை உமிழ நாசித்
துண்டம துயிர்ப்ப மார்பந் துண்ணென வியர்ப்புத் தோன்றத்
திண்டிறல் மொய்ம்பின் மேலோன் செயிர்த்திவை புகல லுற்ருன்.

கண்டதும் தமது பல்வரிசைகள் கறகறவென்று கலீரென ஓசைபட; கண்கள் மண்டி எரியும் நெருப்புப் பொறிகளைக்கக்கிட; வாய்புகையை உமிழ; மூக்குடனின்று பெருமூச்சுவர; நெஞ்சம்படபடப்ப; வேர்வை தோன்றும்படி மிகுதிண்மையான வலியுடைய மேலோரான வீரவாகுதேவர் கோபமடைந்து இதனைச் சொல்கின்ருர். 2

வெஞ்சமர்க் காற்றல் இன்றி வெருவிப்போய் விண்ணின் நின்று
வஞ்சனை புரிந்து நம்மை மாயத்தால் வென்று மீண்டும்
உஞ்சனன் இருந்த கள்வன் உயிர்குடித் தன்றி ஐயன்
செஞ்சரண் அதனைக் காணச் செல்லுவ தில்லை யானே.

கொடியபோர்புரிந்திட வலிமையின்றிப் பயந்து ஒளித்து வானில் நின்று வஞ்சனை செய்து நம்மை எல்லாம் மாயத்தால் வென்றுபோய் தப்பிக்கொண்டு இங்கு இருந்த கள்வன் பானுகோபனின் உயிரை உண்டு கொலைபுரிந்தால் அன்றி நான் எனது ஆறுமுக ஐயனுடைய செம்மையான திருவடிகளைத் தரிசிக்கச்செல்லுவதில்லை என்ருர். 3

நன்னகர் அழிப்பன் இன்று நண்ணலன் மதலை நேரின்
அன்னவன் தனையும் யானே அடுவனல் அடுகி லேனேற்
பின்னுயிர் வாழ்க்கை வேண்டேன் யான்பிறந் தேனும் அல்லேன்
என்னொரு சிலையும் யானும் எரியிடைப் புகுவ னென்ருன்.

இந்த நல்ல நகரை இன்று நான் அழிப்பேன். சூரபன்மன்மகன் வந்து நேரிட்டால் அவன்தன்னையும் யானே கொல்வேன். அப்படி பானுகோபனைக் கொல்லாதிருந்தால் பின்னால் இந்த உயிர்வாழ்க்கையை நான் விரும்பேன்; யான் பிறந்துள்ளவனாகவும் எண்ணமாட்டேன். என்னுடைய இந்த ஒரு வில்லுடன் யான் பெருநெருப்பை உண்டுபண்ணி அதில்வீழ்வேன் என்ருர் வீரவாகுதேவர். 4

சூளிது முதல்வன் கூறத் துணைவரும் பிறருங் கேளா
வாளரி யனைய வீர அடையலர்க் கழிந்தேம் வாளா
மீளுதல் பழிய தாகும் வென்றிகொண் டல்லால் எந்தை
தாளிணை காண்ப துண்டோ சரதமே இதுமற் றென்ருர்.

இந்தச் சபதத்தை முதல்வரான வீரவாகுதேவர் கூறிட அதனை தம்பியர் இலக்கத்து எண்மரும் பிறரும்கேட்டு; கொடிய சிங்கத்தை ஒத்த வீரனே! நாங்கள் பகைவரின் வஞ்சனையால் இன்று தோல்வியுற்ருேம். வெறுமனே மீண்டு செல்லல் பழியதாகும். நாமும் வெற்றிகொண்டல்லாமல் எந்தைபெருமான் திருவடி காண்பதுண்டோ? இது உண்மையாகும் எனக் கூறினர்கள். 5

நும்மனத் துணிவு நன்றால் நொறில்படைக் கணத்தோடேகி
இம்மெனச் செறுநர் மூதூர் எரியினுக் குதவி நேர்ந்தார்
தம்மையட் டவுணன் மைந்தன் தன்னையுந் தடிதும் யாரும்
வம்மெனப் புகன்றான் என்ப வாகையம் புயத்து வள்ளல்.

அதனைக்கேட்ட வெற்றிமாலைசூடிய தோள்களையுடைய வீரவாகுதேவர் அவர்களை நோக்கி உமது மனத்துணிவு நன்றாயிருக்கின்றது. வீரமுடைய பூதப்படையுடன் நாம்சென்று இப்போதே பகைவனுடைய முதிய ஊரை நெருப்பிற்கு உதவி எரித்து வருவார்களைக் கொலைபுரிந்து பானுகோபனையும் கொலைபுரிதும் எல்லீரும் வாருங்கள் எனக் கூறியருளினார். 6

ஆரியன் தனது மாற்றம் அனைவரும் வியந்து செல்ல
ஓரிமை யொடுங்கும் முன்னம் உவரியின் நடுவணான
வீரமா மகேந்தி ரத்தின் மேற்றிசை வாயில் போந்தான்
பாரிடக் கணங்கள் ஆர்த்த பரவைகள் அழிந்த தேபோல்.

வீரவாகு தேவரின் இந்தவார்த்தையை அனைவரும் கேட்டு வியந்து பாராட்டுடன் உடன் புறப்பட்டுச் செல்ல ஓர் இமைப்பொழுது ஒடுங்குமுன்பே சமுத்திரத்தின் நடுவணாக இருக்கும் வீரமாமகேந்திரபுரத்தின் மேற்குப்புறத்தின் வாயிலினைச் சென்று சேர்வுற்றார் வீரவாகுதேவர். அங்கு சென்றவுடன் அங்குள்ள பூதப்படைகள் ஆரவாரம் செய்திட்டன. 7

ஆர்த்தன அவுணர் கேளா அற்புதம் நிகழ வான்போய்ப்
பார்த்தனர் சிலவர் உள்ளம் பதைத்தனர் சிலவர் யாக்கை
வேர்த்தனர் சிலவர் ஈது மேவலர் துழனி என்னாச்
சீர்த்தனர் சிலவர் அம்மா செருவெனக் கிளருந் தோளார்.

பூதங்களின் ஆரவாரிப்பினை சில அசுரர்கள் கேட்டு அற்புதம்கொண்டு ஈதென்ன எமது பகைவர் யாரும் மாண்டார் எனக் கருதிடவும் மீண்டும் வந்து கொண்டனரோ நடுராத்திரியில் என வானின் மேல்போய்ப் பார்த்தனர். சில அசுரர் உள்ளம் பதைத்தனர். சிலர் உடல் வேர்த்தனர். சில அசுரர் இது எமதுபகைவரின் கர்ச்சனை என்று கோபித்தனர். சிலருக்கு போர் என்றவுடன் பெருக்கின்றதோள் உடையராயினர். 8

### வேறு

வேழத் தின்தொகை வெம்பரி வெய்யோர்
ஆழித் தேர்கள் அளக்கரின் ஈண்ட
ஊழித் தீச்செறி உற்றன வேபோற்
பாழித் தீபிகை பற்பல மல்க.

ஈட்டமாக அசுரர்கள்; யானையின் தொகையுடனும்; கொடிய குதிரைகள்; பொல்லாத காலாள்வீரர்; பெரும் சில்லுடையதேர்கள் சமுத்திரம்போல் பெருகிவர அதனிடத்து ஊழித்தீ செறிந்துவரும் தன்மைபோன்று பருத்த நெருப்புச் சுடருடைய தீவர்த்திகள் பலபல விளங்கிட. 9

வானா ருங்குட வாய்தலின் வைகி
யானா தென்றும் அழித்திடு கின்றோன்
மேனாள் மாயை விதித்திடு மைந்தன்
ஊனார் செம்புனல் உண்டுமிழ் வேலோன்.

வானினை விழுங்கிடும் தன்மைபோன்ற மேற்குக் கோபுரவாய்தலில் இருந்து ஓய்வின்றி காவல்கொள்பவன்; முன்னாள்மாயவள் பெற்ற மைந்தனானவன். அவனே எவருடைய ஊனுடன் உதிரத்தையும் உண்டு உமிழவல்ல வேலினைக் கைக்கொண்டவன். 10

அரணங் கொண்டதன் ஞணை கடந்த
முரணுங் கூற்றுவன் முத்தலை வேலும்
வருணன் பாசமும் வன்மையின் வாங்கி
விரணங் கொண்டு வியன்சிறை செய்தோன்.

காவல்கொண்ட தனது ஆணையைக் கடந்து செல்லமுற்பட்ட இயமனின் வலியையும் இயமன் பிடித்த முச்சுடருடைய சூலத்தையும், வருணனுடைய பாசத்தையும் வலியால் பிடுங்கி பறித்தெடுத்ததுடன் மிக்கவீரம்கொண்டு அவர்களைச் சிறையில் வைத்தவன். 11

விண்ணில் தீச்சுடர் போன்மிளிர் மெய்யான்
வண்ணப் பல்பொறி மாமுகம் உள்ளான்
அண்ணல் சீயவ ரித்தவி சின்கண்
நண்ணுற் ருன் அடல் நஞ்சினும் வெய்யோன்.

வானில் நெருப்புச்சுடர் இருப்பதுபோன்று மின்னுகின்ற நீல மேனியுடையவன்; வண்ணமான பல பொறிகள் உடைய முகமுடையவன். அவன் மேலான சிங்கங்கள் சுமந்திடும் சிம்மாசனத்தின் பொருந்தி இருப்பவன், கொடிய நஞ்சினும் பார்க்கக் கொடியவன். புலிமுகன் எனப் பெயருடையவன். 12

சேணுர் மாமுகில் செல்லொடு சிந்த
மாணுர் பூத வயப்படை யார்த்தே
ஏணுர் வீரரொ டெய்திய தன்மை
காணு நின்று கனன்றெழ லுற்ருன்.

வானில் முழங்கிடும் முகில்கள் இடிகளைச் சிந்திவிட்டு அஞ்சிப் பறந்தோடிட மாண்புடன் கர்ச்சித்த பூதங்கள் பகைவருடன் அங்கு மேற்கு வாய்தனில் சேர்ந்த தன்மையைக் கண்டு நின்று; பூதங்கள்மேல் மிகுகோபமுடன் எழுந்து கொண்டான். 13

தன்கண் நின்றிடு தானைக ளெல்லாம்
முன்கண் சென்றிட மொய்ம்புடன் ஏகிப்
புன்கட் டீயவன் ஏற்றெதிர் புக்கான்
வன்கட் பூதர்கள் வந்து மலைந்தார்.

தன்னிடத்தாக நின்றுகொண்ட கொடிய சேனைகள்யாவும் முன்னுகச்சென்றிட வலியுடன் சென்று கீழ்மையான அற்பச்செயல்களில் மிகுந்துள்ள தீயவனுன புலிமுகாசூரன் பகைவரை எதிர்த்து முன்புகுந்தான். கொடும்தன்மையுடைய பூதர்கள் வந்து அவனுடன் போரிட்டார்கள். 14

வில்லுண் வாளிகள் வேல்மழு நேமி
அல்லுண் மெய்யவு ணப்படை தூர்த்த
கல்லும் மாமர முங்கதை யாவுஞ்
செல்லென் றுய்த்தனர் சீர்கெழு பூதர்.

வில்லினின்றும் விடுத்திடும்அம்புகள் வேல்கள் எழுக்கள் மழுக்கள் ஆனவற்றை இருள்போன்ற மேனியுடைய அசுரர் பூதங்கள்மீது செலுத்தினுர்கள். ஆனுல் சீர்கொண்ட பூதங்களோ அசுரர் மேலாக மலையும் மரமும் கதாயுதம் பலவும் இடிபோல் வேகமுடன் செல்லுமாறு விட்டெறிந்தனர். 15

முட்டா வெஞ்சினம் மூண்டிட இன்னோர்
கிட்டா நின்று கிளர்ந்தமர் ஆற்றப்
பட்டார் தானவர் பாரிடர் பல்லோர்
நெட்டா றுத்து நிமிர்ந்தது சோரி.

மனதில் பெருகிடும் கோபம் மூண்டிட இவர்கள் ஒருவரை ஒருவர் கிட்டிநின்று போரிட அசுரர்கள் இறந்தொழிந்தார்கள். பூதங்களும் பல இறந்தன; அதனால் நெடிய ஆறுபோல இரத்தம் பெருகி ஓடியது. 16

கண்டார் அன்னது காவலர் சீற்றம்
கொண்டார் தாமெதிர் கொண்டமர் செய்ய
அண்டார் நின்றிலர் ஆவியு லந்தே
விண்டார் ஓர்சிலர் மீண்டுதொ லைந்தார்.

இதனை பூதசேனைத் தலைவர்கள் கண்டார்கள். கோபம்கொண்டார்கள்; தாங்கள் சென்று உடன்போரிட பகைவர்கள் முன்னின்றிலர்; தமது உயிர் உலர்ந்து வாடி இறந்தார் சில அசுரர்: சிலர் முன்நிற்க முடியாது ஓடிப்போயினர்கள். 17

இடித்தார் தேரினை ஏற்றினர் மாவை
அடித்தார் தந்திக ளானவை சிந்த
முடித்தார் ஒன்னலர் மூளையின் நின்றே
நடித்தார் பூதர்கள் நாரதர் பாட.

பூத சேனபதிகள் அசுரரின் தேரினை இடித்தார்கள்; குதிரைகளைத் தூக்கி யானைகளை அடித்துக் கொன்றார்கள். இறந்த பகைவர்கள் தலைமேல் நின்று பூதத்தலைவர் நடித்தார்கள்; நாரதர்கள் நாட்டியத்திற்கேற்ற பாடலினை இசைத்திட. 18

முன்சூழ் தானை முடிந்தது கண்டான்
மன்சூழ் வெம்புலி மாமுக வீரன்
என்சூழ் விங்கினி யென்று நினைந்தோர்
கொன்சூ லப்படை கொண்டு நடந்தான்.

தன் முன்பாகச் சூழ்ந்து நின்ற சேனை முடிவுற்றதைக் கண்டான் தலைமைப் பதவியுடன் நின்ற கொடிய புலிமுகாசூரன். இனி என்ன இதைப்பற்றி எண்ணுவது என நினைந்து கொண்டு ஓர் மேலான சூலப்படையையும் பிடித்துக்கொண்டு முன்னே நடந்தான். 19

நடக்கின் றானை நலிந்து கணத்தில்
அடக்கின் றுமென ஆர்த்தெதிர் நண்ணிக்
கடக்குன் றங்கள் கணிப்பில் வைகும்
தடக்குன் றம்பல சாரதர் உய்த்தார்.

போர் மேல் வருகின்ற புலிமுகாசூரனை ஒரு கணத்தில் அடக்குகின்றோம் பாருங்கள் என ஆர்த்துக்கொண்டு முன்போய்; மதம் பொழியும் யானைகள் அளவில்லன சஞ்சரிக்கும் பெரிய மலைகளை வாரி வாரிப் பூதங்கள் புலிமுகாசூரன்மேல் எறிந்தார்கள். 20

சாலம் கொண்டிடு சாரதர் உய்த்த
நீலம் கொண்ட நெடுங்கிரி யாவும்
சூலம் கொண்டுபஃ றுண்டம தாக்கி
ஆலம் கொண்ட அளக்கரின் ஆர்த்தான்.

வீரம்கொண்ட பூதங்கள் செலுத்திய நீல நிறங்கொண்ட பெருமலைகள்யாவும் வரவர அதனை புலிமுகாசூரன் தனது சூலப்படைகொண்டு பலதுண்டங்களாக நொறுக்கி எறிந்து; நஞ்சுகொண்ட சமுத்திரம்போல் பொங்கிக் கோபத்தால் ஆர்ப்பரித்தான்; 21

அந்நேர் கொண்டவன் ஆற்றலை நோக்கி
என்னே நிற்பதி யாமிவண் என்னு
முன்னே நின்ற முரண்கெழு சிங்கன்
மின்னே யென்ன விரைந்தெதிர் சென்ருன்.

அவ்வாருக நேரிட்டுவரும் புலிமுகாசூரனின் ஆற்றலைக்கண்டு என்ன நாம் இங்கு சும்மா நிற்பது என்று படைகட்கு முன்னுக நின்ற வலிமைகொண்ட சிங்கன் என்னும் பூதத்தலைவன் மின்னல்போன்று விரைவுடன் புலிமுகாசூரன் எதிர்சென்ருன். 22

வயமிகு பூதரின் மடங்கற் பேரினேன்
வெயிலுமிழ் முத்தலை வேலொன் றேந்தியே
குயவரி முகமுடைக் கொடியன் முன்புபோய்ப்
புயலினம் இரிந்திடத் தெழித்துப் பொங்கினன்.

வீரம் மிகுந்த பூதங்களில் சிங்கன் என்னும் பேருடைய தலைவன் ஒளிகால்கின்ற முச்சுடருடைய சூலப்படையை கையில் ஏந்தி புலிமுகம் உடைய கொடிய அசுரன் முன்பு சென்று மேகங்களும் அஞ்சி அகன்ருேடிட ஆர்த்து கர்ச்சனை செய்தான், 23

அத்துணை வேலையில் அவுணர் காவலன்
முத்தலை வேலினன் முந்துசிங் கன்மேற்
குத்தினன் அனையனும் கொடியன் மார்பிடைக்
கைத்தலம் இருந்ததன் கழுமுள் ஒச்சினன்.

அவ்வாருகிய நேரத்தில் அசுர காவலனுகிய புலிமுகாசூரன் முத்தலைச் சூலம் வைத்திருந்தவன் அதனல் முன்வந்த சிங்கன்மேல் குத்தினன். அதுவேளை சிங்கனும் தனது கைத்தலத்திருந்த முச்சுடருடைய வேலை கொடியவனுன புலிமுகாசூரனுடைய நெஞ்சில் குற்றினன். 24

செறித்திடு சூலவேல் செருவின் மேலவர்
புறத்தினில் போயின பொழிந்த செம்புனல்
நெறித்தரு பகலவன் நின்ற குன்றினும்
எறித்தரும் இளங்கதிர் என்னச் சென்றதே.

இருவரும் ஒருவரை ஒருவர் குற்றலால் அவர் மேனியில் செறிகின்ற சூலப்படை போரிட்ட இருவரது புறமுதுகால் புறத்துச் சென்றது. அதுகால் இரத்தம் பொழிந்தது. எவ்வாறெனின் நெறியாக வருகின்ற சூரியபகவான் உதயமாகும் மலையின் புறத்தே விரிந்து தோன்றும் சிவந்த கிரணங்களைப் போன்று. 25

ஆங்கவர் முறைமுறை அயில்கொள் சூலவேல்
வாங்கினர் இடந்தொறும் மற்றும் ஒச்சுவர்
ஈங்கிது போலநின் றிகலிப் போர்செய்தார்
நீங்கருந் தளைபடு நெறியர் என்னவே.

அங்கு இவ்வாருக இருவரும் முறையாக வேல்போன்ற சூலப்படையை வாங்கி வாங்கி அவர்களின் மேனிக்கு இலக்காக குற்றுவர். இங்கு இதுபோன்று புலிமுகாசூரனும் சிங்கனும் நின்று மாறுபட்ட பகையோடு போர் செய்திட்டார். அது எதுபோலெனில் நீக்கிடமுடியாத பந்தங்களில் பட்டுழல்கின்ருேர் மாறிமாறி அவதியுறல் போன்று. 26

அற்றது காலையில் அனையர் கைத்தலம்
பற்றிய முத்தலைப் படைக ளானவை
இற்றன ஒருதலை இரண்டும் வீழ்தலும்
மற்றெழில் புரிந்தனர் நிகரில் வன்மையார்.

அவ்வாறான காலையில் அவர்களது கையினிடத்தாகப் பிடித்த முத்தலையுடைய சூலப்படைகள் முறிந்து போயினவாய் ஒரேகாலத்தில் இரண்டு சூலமும் வீழ்தலும்; பின்னர் இருவரும் மல்யுத்தம் புரிவாராயினர். 27

புலிமுகன் அவ்வழிப் புரிந்து மற்றெழில்
வலியினை இழந்தனன் மையல் எய்தினான்
தலமிசை வீழ்தலும் தனது தாள்கொடே
உலமுறழ் தோளினன் உதைத்து ருட்டினான்.

புலிமுகாசூரன் அவ்வழியாக சிங்கனுடன் மற்போர் புரிந்து தனது வலியிழந்து போயினான். களைத்து மயங்கினான். பூமியின் மீது வீழ்தலும்; அதுவேளை மலை போன்ற தோளுடைய சிங்கன்தனது காலால் புலிமுகனை உதைத்து உருட்டினான். 28

ஒலிகழல் மேலவன் உதைத்த வன்மையால்
அலமரு தீயவன் ஆவி நீங்கினான்
மலர்மழை தூவினர் வானு ளோர்அரி
புலிதனை வெல்வது புதுமைப் பாலதோ.

வீரக்கழல் ஒலித்திடும் சிங்கன் உதைத்த வலியினால் அலமந்து துயருற்ற புலி முகன் தனது உயிர் நீங்கப்பெற்றான். இது கண்டு தேவர்கள் பூவான மழையினைப் பொழிந்தனர். புலியினை சிங்கம் வெல்வது புகழவேண்டியதா? இல்லை அது இயல்பு தானே. 29

சூர்கொளும் முத்தலைச் சூல வேல்கொடு
நேர்கொளும் புலிமுகன் இறந்த நீர்மைகண்
டார்கலி யாமெனப் பூதர் ஆர்த்தனர்
வார்கழல் வீரனும் மகிழ்ந்து நோக்கினான்.

ஆரும் பார்த்து அஞ்சிடும்படியான சூலவேலினைக் கைக்கொண்டு நேரிட்டுவந்த புலிமுகன் இறந்த தன்மையினைக் கண்டு இரைகின்ற கடல்போன்று பூதங்கள் கூச்சலிட்டு ஆரவாரம் கொண்டனர். அதனை வீரக்கழல் அணிந்த வீரவாகுதேவரும் மகிழ்ந்துநோக்கினார். 30

கழிந்தன தானைகள் காவல் வீரனும்
அழிந்தனன் மேற்றிசை அரணம் வீட்டியே
செழுந்திரு நகரிடைச் சேறும் யாமென
மொழிந்தனர் பூதர்கள் முரணின் முந்தினார்.

அசுரர் சேனைகள்யாவும் அழிந்துபோயின. காவல்கொண்ட தலைவனான வீரனும் இறந்துபோயினான். ஆதலின் மேற்குத்திசையின் மதிலை உடைத்தெறிந்து நாம் எல்லாம் செழிப்புடைய திருநகரிடத்துச் செல்வோம் என்று பூதங்கள் மொழிந்து மதிலை இடிப்பதற்கு முரணுடன் முந்திச் சென்றனர். 31

முந்திய பூதர்கள் முனிந்து மேற்றிசை
உந்திய புரிசையை ஒல்லை சேர்வுறாத்
தந்தம தடிகளால் தள்ளிப் பொள்ளெனச்
சிந்தினர் பறித்தனர் சிகரி தன்னையும்.

முந்திச்சென்ற பூதங்கள் முனிவுடன் மேற்குத்திக்கில் இருந்த மதிலை மிகுவிரைவுடனுக அடைந்து தத்தமது பாதங்களால் உதைத்துத்தள்ளி சடாரென உடைத்து வீழ்த்தி அதிலிருந்த கோபுரத்தையும் பிடிங்கினுர்கள். 32

பொலம்படு சிகரியைப் பறித்துப் பூதர்கள்
நலம்படு மகேந்திர நகருள் வீசியே
உலம்பினர் அவுணர்கள் உலைந்து சிந்திஞர்
கலம்பகிர் வுற்றிடக் கடலுற் ருர்கள்போல்.

அழகுடைய இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற கோபுரத்தைப் பிடுங்கிய பூதங்கள் அதனை நலமுடன் இருக்கின்ற வீரமகேந்திர நகருள் வீசியே ஆர்த்தார்கள். அக்கோபுரம் வீழ்தலால் அதிலிருந்த அசுரர்யாவும் உலைந்து சிந்தப்பட்டார்கள். கப்பல் கடலில் ஆழ்ந்திடக் கப்பலிலிருந்தார் கடலில் வீழ்வார் போன்று. 33

முகுந்தனை வென்றிடு முரண்கொள் பூதர்கள்
புகுந்தனர் மகேந்திர புரத்து ளுள்ளலில்
தொகுந்தொகும் அவுணரைத் தொலைத்துச் சென்றனர்
தகுந்தகும் இவர்க்கென அமரர் சாற்றவே.

விஷ்ணுமூர்த்தியினையும் வென்றிடுகின்ற வலிமிக்க பூதங்கள் இவ்வகையால் வீரமகேந்திரபுர நகருட் புகுந்தனர். உட்சென்றபோது நகர்புறத்து வீதியில் காண்கின்ற அசுரரை அடித்துக்கொன்று சென்றனர். இதைக்காண்கின்ற தேவர் எல்லாம் உவர்க்கு உது தகும் தகும் என பேசியவாறு நின்றிட. 34

நீக்கமில் மாளிகை நிரைகள் யாவையும்
மேக்குயர் பூதர்கள் விரைந்து தம்பதத்
தாக்கினில் அழித்தனர் தவத்தின் மேலவர்
வாக்கினில் அகற்றிய வண்ண மேயென.

நீக்கமின்றி நிரைநிரையாக நின்ற மாளிகைகள் யாவற்றையும் மிக உயர்ந்த பூதங்கள் தங்களது பாதங்களால் உதைத்து அழித்தார்கள். மிக மேலான முனிவர்களது வாக்கினுல் அவைகள் அழிந்து போதலைப்போன்று விளங்கிட. 35

ஆர்த்திடு கரிபரி அவுண ராயினேர்
தேர்த்தொகை மாளிகை சிகரம் மாய்ந்திடக்
கூர்த்திடு நெடுங்கணை கோடி கோடிகள்
தூர்த்தனர் சென்றனர் துணைவ ராயினேர்.

இப்பூதங்கள் முன்அழித்துச் சென்றிட இவர்கள் பின்னுக; ஆரவாரிக்கும் யானை குதிரை அசுரராய வீரராஞேர்கள் தேர்த்தொகைகள் யாவற்றையும் மாய்ந்திடும்படி கூரிய கொடிய அம்புகள் கோடி கோடியை சொரிந்துகொண்டு வீரவாகுதேவரின் தம்பியர் சென்ருர்கள். 36

அன்னதோர் அமைதியின் ஆடல் மொய்ம்பினுன்
வன்னியின் படையொடு மருத்தின் மாப்படை
பொன்னெடுஞ் சிலைதனில் பூட்டி நீவிர்போய்
இந்நகர் அழித்திரென் றிமைப்பில் ஏவினுன்.

அவ்வாருன நிலையில் போர்வலிமிகுந்த தோளினை உடைய வீரவாகுதேவர் அக்கினிப்படையுடன் வாயுப்படை இரண்டினையும் பொன்னுகி விளங்கிடும் தனது கைவில்லில் பூட்டி நீங்கள்போய் நெருப்புடன் காற்றுகி இந்தநகரை அழிப்பீராக என்று இமைப்பொழுதில் அவற்றைச் செலுத்தினுர். 37

ஏவிய அப்படை இரண்டும் ஒன்றியே
மூவுல கிறுதியின் முடிக்கும் தம்முரு
மேவின நகரெலாம் விரவிச் சூழ்ந்தன
தீவிழி அவுணரும் இரிந்து சிந்தவே.

வீரவாகுதேவர் செலுத்திய அப்படைகள் இரண்டும் காற்றாகவும் நெருப்பாக வும் ஒன்றிக் கூடி, மூவுலகங்களையும், இறுதியான காலத்தில் முடிக்கின்ற தமது உருவினைக்கொண்டு நகர் எங்கும் அடையச் செறிந்தன. இதுகண்டு பயத்தால் நெருப்பாகும் கொடிய கண்ணுடைய அசுரரும் அகன்றோடிடும்படியாக. 38

ஒட்டலர் நமையினி உருத்துச் செய்வதென்
விட்டனன் இங்குளன் வெருவ லேமெனு
நெட்டழல் கொளுவியே நிலவி மாநகர்
சுட்டன உடுநிரை பொரியில் துள்ளவே.

அப்படைகள் இரண்டும் எங்களுக்கு பகைவரான அசுரர் இனிமேல் எம்மீது கோபித்துச் செய்வதென்ன? எம்மைவிட்ட வீரவாகுதேவர் இங்கிருக்கின்றார். ஆதலின் நாம் பயப்படோம் என்று நீண்ட பெரும் தழல்சுடரைக் கொளுத்தி நிலவி நின்று பெரும்நகரை சுட்டெரித்தன, வானில் உள்ள வெள்ளிகளும் பொரியாய் பறந்திட; 39

எரிந்தன சில்லிடை இறந்து பூழியாய்
விரிந்தன சில்லிடை வெடித்த சில்லிடை
கரிந்தன சில்லிடை கனலி சூழ்தலால்
பொரிந்தன சில்லிடை புகைந்த சில்லிடை.

இப்படி எரிக்குங்கால் சில இடங்கள் எரிந்தன; சில இடங்கள் புழுதியாய் அழிந்து கிடப்பன சில இடங்கள் வெடித்தன. சிலஇடங்கள் கரியாகிக் கிடப்பன; நெருப்பு சூழ்தலால் வெப்பத்தால் பொரிந்தன சில இடங்கள். சிலஇடங்கள் புகைந்து கொள்கின்றன; 40

எப்புவ னங்களும் இறைஞ்சு சூர்நகர்
வெப்புறு கனல்கொள விளிந்து போயதால்
அப்புறழ் செஞ்சடை அமலன் மூரலால்
முப்புர மானவை முடிந்ததேயென.

எல்லாப்புவனங்களும் வந்து வணங்கிடும் சூரனின்நகரம் வெப்பமுடைய நெருப்பு பற்றி எரிப்ப எரிந்துபோயது எப்படியெனில் கங்கைவிளங்கிடும் சடையுடைய நின்மலனை சிவபெருமானின் புன்முறுவலால் முப்புரங்களும் முடிந்துபோன அதேவாறு போன்று. 41

இன்னணம் இந்நகர் எரிமி சைந்துழி
அன்னவை ஒற்றர்கள் அறிந்து வல்லைபோய்ப்
பொன்னிவர் கடிநகர் புகுந்து வாய்வெரீஇ
மன்னவர் மன்னனை வணங்கிக் கூறுவார்.

இவ்வகையால் இந்த வீரமகேந்திரநகரை நெருப்பு உண்கின்ற நேரத்தில் அதனையெல்லாம் தூதர்கள் அறிந்து விரைவுடன் ஓடிச்சென்று பொன்னிலான காவலுடைய அரண்மனை நகருட் புகுந்து வாய்குழறி அரசர்க் கரசனுன சூரபன்மனை வணங்கிக் கூறுகின்றார்கள். 42

காய்கதிர் அண்ணலைக் கனன்ற நின்மகன்
மாயவெம் படையினல் மலைந்து ளார்தமைத்
தூயதொர் புனற்கடல் துன்ன உய்த்தனன்
நீயது தெரிந்தனை நிகழ்ந்த கேட்டிமேல்.

அரசே எமது காய்கின்ற கிரணமுடைய சூரியனைக் கோபித்த உமதுமகன் பானுகோபன் மாயமானகொடிய படையொன்றினல் தன்னுடன் போரிட்ட அவர் களை தூயதான நீருடைய சுத்தோதக சமுத்திரத்திடத்து சேரவைத்தானல்லவோ! அதனை எல்லாம் நீர் தெரிந்துகொண்டீர் பின்னல் நிகழ்ந்ததைக் கேளும் 43

அங்கிவை நாரதன் அறையக் கந்தவேள்
செங்கையில் வேற்படை செலுத்த அன்னது
பொங்குறு தெண்புனற் புணரி சேறலும்
மங்கிய தோடிய மாயை தன்படை.

அங்கு அச்செய்திகள் யாவற்றையும் கண்ணுற்ற நாரதமுனிவன் சென்று முருகப் பெருமானிடம் எடுத்துக் கூறிட அதனைக் கேட்டருளிய முருகக் கடவுள் தமது செங்கையில் கொண்ட வேற்படையைச் செலுத்தியிட அவ் வேற்படையானது புறப் பட்டுபொங்கிடும் தெள்ளிய நீரையுடைய தூய நீர்ச் சமுத்திரத்தில் சேர்தலும்; உனது மகன்விடுத்த மாயப்படை மங்கி வலிகெட்டோடியது. 44

வஞ்சனி தன்படை மாண்டு போந்துழித்
துஞ்சுதல் ஒழிந்தனர் தொன்மை போலவே
நெஞ்சினில் உணர்வெலாம் நிகழ யாவரும்
உஞ்சனர் எழுந்தனர் உம்பர் ஆர்த்திட.

மாயவளின் படை மாண்டு போதலும் பகைவர்யாரும் இறத்தலாகிய மயக்கம் ஒழிந்தனர்; பழைமை போலவே நெஞ்சிடத்தாக உணர்ச்சிகள் யாவும் வந்து கூடிட எல்லாரும் உய்ந்து எழுந்தார்கள்; இந்த எழுச்சிகண்டு தேவர்கள்யாவரும் மகிழ்வால் ஆர்ப்பரித்திடும்படியாக. 45

மாற்படு புந்திதீர் மறவர் தாமுறு
பாற்பட வருவது பார்த்துக் கைதொழு
தேற்பொடு பணிதலும் யாரும் வம்மென
வேற்படை முன்னுற விரைந்து மீண்டதே.

மயக்கமான புலன்களின் நிலை தெளிவாகிய வீரர்யாவரும் தம்பால் வேற்படை அருளுடன் வருவதைப்பார்த்து கைதொழுது ஏற்புடன் பணிதலும் அதுவேளை வேற்படை அவரைநோக்கி நீங்கள் எல்லீரும் வாருங்கள் எனக் கூறியருளி முன்னாக எழுந்து முருகக் கடவுள்பால் போயது. 46

மேனிகழ் நெறிகொடு மீண்ட செய்யவே
லானது குமரவேள் அங்கை போந்ததால்
ஊனமில் மாற்றலர் ஒல்லை வந்துநம்
மாநகர் மேற்றிசை லாயில் நண்ணினர்.

வான மேலாகக் கொண்ட மார்க்கமாக மீண்டருளிய செம்மையான வேற்படை யானது குமரப்பெருமானின் அழகிய திருக்கரத்தில் சென்று அமர்ந்தருளியது; இப்போது தங்கள்பால் ஊனம் யாவும் நீங்கிய பகைவர்யாரும் விரைவுடன் புறப் பட்டு மறுபடியும் வந்து நமது பெருநகரத்தின் மேற்குப் புறத்து வாயிலிற் சேர்ந்து கொண்டனர்; 47

மேற்றிசை வாய்தலில் வீரர் சேறலும்
ஏற்றனன் தானையோ டிருந்த காவலன்
ஆற்றினன் சிறிதமர் அவன தாவியை
மாற்றினர் அனிகமும் மாண்டு போயதே.

மேற்குப் புறத்து வாய்தலில் வீரர்கள் சேர்ந்திடுதலும் அவர்களுடன் அங்கு சேனையோடு காவல்கொண்டிருந்த சேனாதிபதி புலிமுகாசூரன் போரிட எதிர்த்து சிறு வேளைமட்டுமே போரிட்டான். அவர்கள் அவனைக் கொன்றனர். அங்கு அவனுடன் போரிடப்போய எமது சேனையாவும் மாண்டு போயது. 48

குடதிசை எயிலினைக் கொடிய பூதர்கள்
அடிகொடு தள்ளினர் ஆண்டு நின்றிடு
படியறு சிகரியைப் பறித்து மாநகர்
நடுவுற வீசினர் நமர்கள் மாயவே.

மேற்குப்புறத்து மதிலினைக் கொடிய பூதங்கள் தமது காலினால் உதைத்துத் தள்ளி உடைத்தெறிந்து; அங்குநின்றிட்ட நிகரற்ற கோபுரம் ஒன்றினைப் பறித்து எடுத்து பெருநகரின் நடுவில்போய் வீழும்படி வீசினார்கள். எமது மக்கள் யாரும் மாண்டு போயிடும்படியாக. 49

சோர்வறு பூதருந் துணைவ ராகிய
வீரருந் தலைவனும் வீர வாகுவும்
சீரிய நகரிடைச் சென்று மேற்றிசை
ஆரழல் கொளுவிநின் றழித்தல் மேயினார்.

சோம்பல் என்பதில்லாத பூதங்களும், துணைவர்களாகிய இலக்கத்தெட்டு வீரரும் தலைவனாகிய வீரவாகுதேவரும் சீருடைய எமது நகரினுள் புகுந்து மேற்குப் புறத்து எமது நகர எல்லைமுழுவதையும் பெருநெருப்புக் கொளுத்தி நின்று எரித்து அழிப்பாராயினர். 50

அண்டலர் வன்மையால் அயுத யோசனை
உண்டது கொழுங்கனல் உண்ட எல்லையும்
கண்டனம் இதனைநீ கருத்தில் ஐயமாக்
கொண்டிடல் மன்னவென் றொற்றர் கூறினார்.

பகைவரது நெருப்பூட்டும் வலிய செயல்களால் எமது நகரமானது இந்நேரம் பதினாயிரம் யோசனை எல்லைப்பரப்பு வரையிலும் எரிந்து சாம்பிராகிவிட்டது. நெருப்பெரிந்த எல்லையையும் நாம்பார்த்தோம். எமது இந்த வரலாறுகளை இப்படியும் நடக்கலாமோ என சந்தேகமாகக் கொள்ளாதீர் எமது அரசே என்று தூதுவர் கூறினார்கள். 51

வேறு

ஒற்றர் இவ்வகை உரைத்தலும் அவுணர்கோன் உளத்தில்
செற்றம் மிக்கன நெறித்தன உரோமங்கள் சிலிர்த்த
நெற்றி சென்றன புருவங்கள் மணிமுடி நிமிர்ந்த
கற்றை வெங்கனல் கான்றன சுழன்றன கண்கள்.

தூதுவர் இந்த வகையாகச் சொல்லலும் சூரபன்மனுடைய உள்ளத்தில் கோபம் மிகுந்தது. உரோமங்கள் சிலிர்த்தன. புருவங்கள் நெற்றிமேல் சென்றன. இரத்தினமுடி நிமிர்ந்தது. கொடிய கற்றை கற்றையான நெருப்பினைக் கண்கள் கான்று கக்கிப் புரண்டு சுழன்றன. 52

கறங்கு சிந்தனைச் சூரன்இத் தன்மையில் கனன்று
மறங்கொள் சாரணர் தங்களை நோக்கிநீர் வான்போய்ப்
பிறங்கும் ஊழியில் உலகெலாம் அழித்திடப் பெயர்வான்
உறங்கு மாமுகில் யாவையும் தருதிரென் றுரைத்தான்.

சுழல்கின்ற சிந்தனையுடைய சூரபன்மன் இத்தன்மையாகக் கோபம்கொண்டு முன்னின்ற மறங்கொண்ட தூதுவர் தங்களை நோக்கி நீவிர் உடன் வானில் சென்று வரப்போகும் ஊழிக்காலமுடிவில் உலகம் எல்லாவற்றையும் பெருமழைபொழிந்து அழித்திடவேண்டி வானில் உறங்கியவாறு இருக்கின்ற பெருமுகில் யாவற்றையும் என்முன் கொண்டு வருவீராக என்றான். 53

அயலின் நிற்புறு தூதுவர் வினவியே ஐய
இயலும் இப்பணி யெனத்தொழு தும்பரின் ஏகிப்
புயலி னத்தினைக் கண்டுதம் பாணியால் புடைத்துத்
துயிலெ ழுப்பியே விளித்தனன் இறையெனச் சொற்றார்.

அயலாக நிற்கின்ற தூதுவர் இதனைக்கேட்டு ஐயனே எங்களால் செய்யக்கூடியது இப்பணிவிடை என்று தொழுது; உடன் வானில் எழுந்துபோய் சூரன் சொல்லிய முகில்களைக் கண்டு தமது கையால் அம்முகில்களை அடித்துத் துயில் எழுப்பி; முகில்களே! உங்களை சூரபன்மன் அழைத்தான் எனச் சொன்னார்கள். 55

எழுவ கைப்படு முகில்களும் வினவியே ஏகி
விழுமி தாகிய மகேந்திரத் திறைவன்முன் மேவித்
தொழுது நிற்றலும் இத்திரு நகரினைத் தொலைக்கும்
அழலி னைத்தணி வித்திடு வீரென அறைந்தான்.

ஏழு வகைப்பட்ட முகில்களும் அவைகேட்டு எழுந்துசென்று மிகச்சிறந்த அழகுடைய வீரமகேந்திரபுரத்தை அடைந்து சூரபன்மன் முன்பு போய் தொழுது நிற்றலும் அவைகளை நோக்கி நீங்கள் இந்தத் திருவுடைய நகரத்தைத் தொலைக்கின்ற நெருப்பைத் தணிவித்திடுவீரெனக் கூறினான். 55

அறையும் எல்லையில் நன்றென எழிலிகள் அகன்று
செறித ரும்புகை உருக்கொடு விண்மிசைச் சென்றோர்
இறையில் எங்கணும் பரந்தன மாவலி யிடைபோய்க்
குறிய மாயவன் நெடியபே ருருவுகொண் டதுபோல்.

சூரபன்மன் கூறிடும் மாத்திரத்து நன்று என்று அம்முகில்கள் அவ்விடம் நீங்கிச் சென்று பரக்கின்ற புகையின் உருவை எடுத்துக்கொண்டு வானமிசைச் சென்று ஓர் இறைப்பொழுதினில் எங்குமாகப் பரந்து கொண்டன. எதுபோலும் எனில் மாவலி என்னும் அசுரன்பால் சென்ற குறியவடிவுடைய நாராயணக் கடவுள் நெடியதோர் பெரிய வடிவங்கொண்டு நீண்டதுபோல். 56

கருமு கிற்கணம் முறைமுறை மின்னின ககனத்
துருமி டிக்குலம் ஓராயிர கோடியை உகுத்த
பருமு டிக்குல கிரியொடு மேருவும் பகிர்ந்த
திருமு டித்தலை துளக்கியே வெருவினன் சேடன்.

கரிய உருவுகொண்ட அம்முகிற் கூட்டம் முறைமுறை மின்னின. வானில் இடியேற்றுகளை திரள்திரளாக ஓராயிரகோடியைச் சொரிந்தன. இதனால் பருத்த பல முடிகளை உடைய குல மலைகளுடன் மேருமலையும் பகிர்ந்தது. ஆதிசேடனும் தனது அழகிய ஆயிரம் தலைகளையும் அசைத்து நடுங்கி அச்சம் கொண்டான். 57

விண்டு லாமதிற் கடிநகர் தன்னைவெங் கனலி
உண்டு லாவுறு தன்மையும் அவுணர்தம் முலேவும்
கண்டி யாமிது தொலேந்திடின் ஈண்டொரு கணத்தில்
அண்டர் நாயகன் தானேமன் னவன்எமை அடுமால்.

வானில் உயர ஓங்கிய காவல்உடைய பெருமதில் சூழ்ந்த நகரிடத்து கொடிய நெருப்புமூண்டு எரித்து உலாவி நிற்கும் தன்மையையும்; அங்குள்ள அசுரர்படும் அவதிகளேயும் உலேச்சலேயும் அம்முகில்கள் கண்டு; எண்ணுகின்றன; நாங்கள் ஒருகால் இந்த நெருப்பை தணித்தால் இவ்விடத்து ஒரு கணப்பொழுதிலே தேவர்கட்கெல்லாம் மகா தேவனுன ஆறுமுகப்பிரான் சேனேகட்கு தலேவன் வீரவாகுதேவர் எமைத் தொலேப்பார். 58

நீட்ட மிக்கஇத் திருநகர் புகுந்துநீ ருக்கி
வாட்டும் வெந்திறல் எரியினே அகற்றிலம் வறிது
மீட்டும் ஏகுதும் என்றிடின் அவுணர்கோன் வெகுண்டு
பூட்டும் வன்றளே செய்வதென் என்றன புயல்கள்.

அன்றியும் நீண்டு பரந்த இந்தச் செல்வ நகரத்தில் புகுந்து நீருக்கி எரிக்கின்ற கொடிய இந் நெருப்பை நீக்கிடாது நாம் வீணே திரும்பிப்போவோமென்ருல் சூரபன்மன் மிகுகோபமடைந்து எம்மையெல்லாம் கொடிய விலங்கைப்பூட்டி சிறை செய்வான். ஆதலால் நாம் இவ்வேளே செய்வதுயாது என்றன அம்முகில்கள்; 59

தொல்லே மாமுகில் இவ்வகை உன்னியே சூரன்
எல்லே யில்பகல் இட்டிடும் உவளகத் தெய்தி
அல்லல் உற்றிடு கின்றதின் ஆடலம் புயத்தோன்
கொல்ல நம்முயிர் வீடினும் இனிதெனக் குறித்த.

மிகு பழைமையான அம்முகில்கள் யாவும் இவ்வகை நினேந்து நெருப்பைத்தணியாது விட்டால் எம்மை சூரபன்மன் எல்லேயில்லாத நாட்கள் சிறையிட்டுவைக்க; அச்சிறையிலே கிடந்து அல்லல் அடைந்திடுதலினும்; போர்வல்லபம் மிகுந்த தோளினே உடைய வீரவாகு தேவர் எம்மைக் கொல்ல நாம் உயிர் அழியினும் நன்று என எண்ணின. 60

புந்திமேல் இவை துணிபென நாடியே புயல்கள்
சிந்து துள்ளியொன் றிபத்துணே அளவையிற் செறிய
முந்தி யோரிறை பொழிந்தன பொழிதலும் முடிந்த
அந்த மாநகர் மேற்றிசை பொடித்திடும் அழலே.

சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம். சங்காரித்தம்; துரோணம், காளமுகி, நீலவருணம் என்னும் ஏழுமேகமும் தமது மனதில் இவ்வண்ணம் நெருப்பை தணித்திடும் முயற்சி மேற்கொள்வதுதான் துணிபாகும் என உணர்ந்து: மழை பெய்தலேத் தொடங்கி; தாம் சிந்துகின்ற துளி ஒன்று ஓர் யானேயின் அளவு பருமனுகி விளங்கி எங்கும் செறிய, முன்னுக ஓர் இறைப்பொழுது மழை பொழிந்தன. அவ்வாறு முகில்கள் மழை பொழித்லும் அங்குள்ள பெருநகரின் மேற்குப் புறத்தை பொடியாக்கும் நெருப்பு அவிந்து போயது. 61

ஆய தன்மையை நோக்கினன் ஆறிரு தடந்தோள்
நாய கன்படைக் கிறையவன் அழலெழ நகைத்து
தீயின் ஆற்றலே அழித்தன மேகமோ செறுநர்
மாய மேகொலோ என்றுதேர் வுற்றனன் மனத்தில்.

அவ்வாருகிய தன்மையை நோக்கினன். பன்னிரண்டு தடந்தோளினே உடைய குமரப்பெருமானது சேனேக்கு நாயகரான வீரவாகுதேவர். நெருப்பு எழுந்திட சிரித்தார். அவர்தனது மனத்தில் அங்கு எரிந்த நெருப்பின் ஆற்றலே அடக்கியது ஒருகால் மேகமாகுமோ; அன்றி அசுரர்களது மாயமாக இருக்குமோ என சந்தேகமுற்ருர். 62

தேரு கின்றுழி நாரதன் விண்ணிடைச் சென்று
வீரகேள்இவை ஊழிநாள் முகிலினம் வெய்ய
சூரன் ஆணையால் வந்தன வடவையம் தொல்லோன்
மூரி வெம்படை தொடுத்தியால் விரைந்தென மொழிந்தான்.

வீரவாகுதேவர் தமது மனதில் சிந்திக்கும் நேரத்தில் நாரதமுனிவன் வான் வழியாக அவர்முன்பு தோன்றி வீரவாகுதேவனே கேட்பாயாக; இங்கு நெருப்பை தணிக்க மழைபொழிந்தவை ஊழிக்காலத்து முகிலாகும்; இவைகள் கொடிய சூர பன்மனது ஆணையால் இங்கு வந்தன; இவைகளை நீக்கிடுதற்கு முதியவனாகும் வடவை என்னும் அக்கினி தேவனுடைய வலிமைமிகுந்த படையினை விரைவாகச் செலுத்திடு வாய் எனக் கூறினன். 63

விண்ணில் வந்திவை நாரதன் உரைத்தனன் மீட்டும்
துண்ணெ னச்செல வினவியே வாகையம் துணைத்தோள்
அண்ணல் ஊழிநாள் அனற்படை தூண்டினன் அதுபோய்க்
கண்ண கன்முகில் இனத்தினைச் சூழ்ந்தது கணத்தில்.

வானில் வந்த நாரதமுனிவன் இவற்றைக் கூறி மீண்டும் திடீரென மறைந்திடு தலும் அதனைகேட்டுநின்ற வெற்றிதரும் தோளுடைய வீரவாகுதேவர் மேலாக விளங்கிடும் ஊழிக் காலத்து அக்கினிப்படையைச் செலுத்தினர். அப்படையானது போய் அகன்று விளங்கிடுகின்ற முகிலினங்களை ஒரு இமைப்பொழுதில் வளைத்துக் கொண்டது. 64

சூழல் போகிய எழிலிகள் யாவையும் சுற்றி
ஊழி மாப்படை அவற்றிடைப் புனலெலாம் உண்டு
வாழி மொய்ம்பனை அடைந்தது மற்றது காலை
ஆழி மால்கடல் தொகையென வீழ்ந்தன அவையே.

எங்குமாகிப் பரந்த மேகங்கள் யாவையும் சுற்றிவளைத்து ஊழித்தீயின் பெரும் படையானது அம்முகில்கள் இடத்து உள்ள நீர் யாவற்றையும் உண்டபின்னராக வாழ்வுதரும் வீரம் நிறைந்த தோளுடைய வீரவாகு தேவரை வந்து அடைந்து கொண்டது. அதுகால் அம்மேகங்கள் ஆழ்வுடைய பெரும் சமுத்திரங்கள் தொகை போன்று பூமியில் வீழ்ந்தன. 65

மறிந்த எல்லையில் ஆறுமா முகமுடை வள்ளல்
சிறந்த ஆறெழுத் துண்மையை விதிமுறை செப்ப
இறந்த தொல்மிடல் வருதலும் உய்ந்துடன் எழுந்து
புறந்த ருங்கடல் அதனிடை ஓடின புயல்கள்.

கீழே அம்முகில்கள் வீழ்ந்தநேரத்து ஆறுமுகமுடைய அருள்வள்ளலாகும் முரு கப்பெருமானது நாமமாய் சிறந்து நிற்கும் என்றும் அழிவிலாத உண்மைப்பொரு ளாய ஆறு எழுத்துக்களையும் விதிமுறை செபித்திட முன்னர் ஊழித்தீப்படை உண்டமையால் இழந்துபோன முன்னைய வலிமைகள் யாவும் வந்திடலும், ஐயரது அருளால் உய்ந்து உடன் எழுந்து புறத்தே விளங்கிடுகின்ற சமுத்திரத்திடை அம் முகில்கள் ஓடிப்போயின. 66

விழுந்து கொண்டல்கள் இரிதலும் பாரிட வெள்ளம்
எழுந்து துள்ளியே ஆர்த்தன மலர்மழை இமையோர்
பொழிந்து வானிடை ஆடினர் இவைகண்டு பொருமல்
உழுந்து கண்ணடி செல்லுமுன் போயினர் ஒற்றர்.

முகில்கள் விழுந்து நகரின் புறமாகவுள்ள சமுத்திரத்து ஓடலும், பூத வெள்ளங் கள் யாவும் எழுந்து துள்ளியே கூச்சலிட்டு மகிழ்ந்து ஆரவாரித்தன. தேவர்கள் யாவரும் பூமழை பொழிந்து வானில் நின்று ஆனந்தக் கூத்தாடினர்கள். இதைக் கண்டுநின்ற அசுர தூதுவர்கள் யாவரும் உழுந்து உருண்டு அதன் கண்ணடிப்பக்கம் புரள்வதன் முன்னமான நேரத்தில் வேகமாக சூரபன்மன்பால் ஓடிப்போயி னர்கள். 67

## வேறு

கொற்றவை ஆடுறு கோநகர் நண்ணி
அற்றமில் மன்னன் அடித்துணை மீது
தற்றுறு பூமுடி தாழ இறைஞ்சி
மற்றிது கேண்மிய என்று வகுப்பார்.

துர்க்காதேவியின் நடனம் மிகுந்த காவலுடைய அரண்மனை நகரை தூதுவர் அடைந்து குற்றமில்லாத வாழ்வுடைய சூரபன்மனது பாதங்களில் தமது பூமாலை யணிந்த முடிகள் தாழ்வுற வணங்கி அரசே! இந்த வார்த்தைகளைக் கேட்பீராக என மொழிகின்றார். 63 68

ஊழி புகுந்துழி உற்றிடு கொண்மூ
ஏழும் விரைந்துநின் ஏவலின் விண்போய்
வீழ்புனல் சிந்துபு மேற்றிசை தன்னில்
சூழுறும் அங்கி யினைத்தொலை வித்த.

ஊழியான முடிவில் தோன்றிடும் ஏழுவகையான முகில்களும் உமது ஏவலின்படி விரைவாக வானில் பறந்துபோய் தம்மிடத்துநின்றும் வீழ்கின்ற பெருமழைத்துளி களைச் சொரிந்து மேற்குப்புறத்தினில் சூழ்ந்து எரிந்த நெருப்பினைத் தணித்தன. 69

மாற்றலர் தூதுவன் மற்றது காணூஉ
வீற்றுறு தீப்படை ஏழ்முகில் மீது
மாற்றலின் விட்டிட அன்னவை வீழ்ந்து
மேற்றிசை வாய்தலில் வேலை புகுந்த.

எமது பகைவரின் தூதுவனான வீரவாகுதேவர் அம்முகில்களின் செயலைக்கண் ணுற்று எல்லாவற்றையும் நீறு புரிந்திடும் ஊழித் தீப்படையை ஏழுமுகில்கள்மேல் மாற்றாக விடுத்திட அப்படையானது வந்து முகில்களை அடுதலும், அம்முகில் வீழ்ந்து மேற்குத்திசை வாய்தலாக உள்ள கடலிடத்து ஓடின. 70

வன்னி செறிந்தன மாய்ந்தன என்றே
உன்னலை பூதர் ஒழிந்திடும் வீரர்
அன்னதன் எண்மையின் ஆடுறு கின்றார்
இந்நகர் என்றலும் ஏந்தல் முனிந்தான்.

நகரின் மேற்குப் புறத்தில் பற்றி எரிந்த நெருப்பு மாய்ந்திட்டது என நீ நினையாதே அரசே! அங்குள்ள பூதங்களும் வீரர்களும் அந்த நெருப்பின் கொடுமை யிலும் எண்மடங்காக போர்புரிகின்றார் என்று தூதுவர் கூறுதலும் அதுகேட்ட சூர பன்மன் மிகவும் கோபமுற்றான். 71

மயிர்ப்புறம் பொடித்திட வரைகொள் மார்பகம்
வியர்ப்புற எரிதழல் விழிகள் சிந்திட
உயிர்ப்பிடை புகைவர உருமுக் கான்றெனச்
செயிர்த்திடு மன்னவன் இதனைச் செப்பினான்.

கோபமிகுதியால் சூரபன்மனது மயிர்கள் புறமேனியில் சிலித்திட; மலைபோன்ற நெஞ்சு வியர்வைகொள்ள கண்களினின்றும் நெருப்புத்தழல் சிந்திட; மூச்சிலேபுகை வர; இடிவீழ்ந்ததெனும்படி கோபமுற்ற சூரபன்மன் இதைச் சொல்கின்றான். 72

போரினை இழைத்துவெம் பூதர் தங்களை
வீரர்கள் தொகையினை வீட்டிப் பின்னுறச்
சாருறு சிவன்மகன் தன்னை வென்றிவட்
சேருதுங் கொணர் திர்நந் தேரை என்றனன்.

எம்முடன் போரினை இழைத்திட்ட கொடிய பூதங்கள், வீரர்களாய தொகைகள் எல்லாரையும் கொன்றுவீழ்த்தியபின்பாக என்னுடன் போரிட வருகின்ற சிவன் மகன் ஆறுமுகனையும் வெற்றிகொண்டு இங்குவருவேன் கொண்டுவாருங்கள் எனது தேரை என தூதுவரை நோக்கிக் கூறினான் சூரபன்மன். 73

நகர்புகு படலம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம்: 1,166

## இரணியன் யுத்தப் படலம்

ஒற்றரை நோக்கியே உணர்வின் மன்னவன்
சொற்றது கேட்டலும் துளங்கி ஏங்கினான்
மற்றவன் அளித்திடு மதலை மாரிநாட்
புற்றுறை அரவெனப் புழுங்கு நெஞ்சினான்.

தூதுவரைநோக்கி, நல்லுணர்விலாத சூரபன்மன் சொல்லிய இந்தவார்த்தைகளைக் கேட்டலும் நடுங்கி ஏங்கினான் அவன்பெற்ற மைந்தன் ஒருவன். அவனது இயல்பு எவ்வாறாயிற்றென்றால் மாரிக்காலத்து புற்றினுள் இருக்கும் பாம்பு வெளிவரமுடியாதபடி தவிக்கின்ற தன்மைபோன்று வேதனையால் புழுங்குகின்ற நெஞ்சினை உடையனானான். 1

ஆயிர மறையுணர்ந் தான்ற கேள்வியான்
தூயநல் லறத்தொடு முறையும் தூக்கினோன்
மாயமும் வஞ்சமும் மரபில் கற்றனன்
தீயதோர் அவுணருள் திறலும் பெற்றுளான்.

அம்மைந்தன் ஆயிரமாக விளங்கிய வேதங்களை நன்கு கேட்டுணர்ந்தவன், தூயதான நல்ல தருமத்துடன் நல்லவாழ்க்கை முறையையும் கடைப்பிடித்தோன். ஆனால் தன் குலத்திற்கேற்ற மாயமும் வஞ்சனையும் குலமரபில் கற்றறிந்தவன். ஆனாலும் தீயதான அசுரர்களிலே மிக்க திறமைகளையும் பெற்றுள்ளவன். 2

தரணியின் கீழுறை அரக்கர் தங்கள்மேல்
விரணம தாகிமுன் வென்று மீண்டனன்
முரணுறு சென்னியோர் மூன்று கொண்டுளான்
இரணியன் என்பதோர் இயற்கைப் பேரினான்.

அவன் இப்பூமியின் கீழ்வாழ்கின்ற இராட்சதர்மேல் போர்புரிந்திடச் சென்று வெற்றி பெற்று மீண்டவன். வலிமையினால் முரண்கொண்ட மூன்று தலைகளை உடையவன். மேனிபொன்னிறமாக இருத்தலால் இரண்ணியன் என்பதொரு இயற்கையான பேருடையவன். 3

இருந்தனன் ஒருபுடை எழுந்து தாதைதன்
திருந்தடி இணையினைச் சென்னி சேர்த்திடாப்
பொருந்துவ தொன்றுள புகல்வன் கேளெனாப்
பரிந்துநின் றினையன பகர்தல் மேயினான்.

சூரபன்மன் கோபித்த இவ்வேளையில் தந்தையின் பக்கரில் ஒருபுடையாக இருந்தவன் எழுந்து தந்தை சூரபன்மனுடைய பாதங்களை தனது தலைசேரத்தொழுது வணங்கி அரசே உமக்கு இப்பொழுது பொருத்தமான ஓர் காரியத்தை நான் சொல்வேன் கேட்பீராக என மிகுந்த பரிவுடன் நின்று இவற்றைச் சொல்கின்றான். 4

தேவரை நாம்சிறை செய்த தன்மையால்
ஆவது பாவமே ஆக்கம் வேறிலை
யாவையும் உணர்ந்திடும் இறைவ திண்ணமே
போவது நம்முயிர் திருவும் பொன்றுமால்.

அரசே! தேவர்யாரையும் நாம் சிறைசெய்துவைத்தமையால் எமக்கு விளையும் பயனுவது பாவமேயன்றி வேறு பயன் இல்லை. எல்லாவற்றையும் நன்கு கற்றுணர்ந்த எம்இறைவா! அந்த ஒரு செயலால் நமது உயிர்போவது திண்ணம்; அத்துடன் எமது செல்வவளங்களும் அழியும். 5

சூருடைக் கானகம் தோற்றும் புன்மைபோய்ப்
பாரிடைப் புவனமோர் பலவும் போற்றியே
சீருடைத் தாகிஇத் திருவின் வைகுதல்
ஆரிடைப் பெற்றனை அதனைத் தேர்திநீ.

அரசே! உட்புகுவதற்கும் அச்சத்தை விளைக்கின்ற காட்டகத்தே நாம் இருந்து வாழவேண்டிய இந்தப் புன்மைகள் யாவும் போய் இப்பூமி முழுவதையும் இன்னும் பல புவனங்களையும் அரசாண்டிருக்கும் பேற்றுடன் இத்தகைய போக போக்கியங்களாகும் செல்வங்களை அனுபவித்து இருக்க, நீ ஆரிடத்து இதனைப் பெற்றாய் அதனை ஒருகால் சிந்தனை செய்வீராக. 6

மாலைமுன் வென்றதும் மலர யன்றனை
ஏலுறு முனிவரை ஏவல் கொண்டதும்
மேலுயர் அமரரை விழுமஞ் செய்ததும்
ஆலமர் கடவுள்தன் ஆற்ற லால்அன்றோ.

நாராயணக்கடவுளை முன்னர் நீர்வென்றதும்; தாமரைமலரை ஆசனமுடைய பிரமதேவரை; ஒருமைப்பாடுடைய முனிவர்களை எல்லாம் உமக்கு ஏவல் புரியும்படி கொண்டதும், மேலோங்கிய தேவ உலகத்தவரை பெரும்துயரம் நீர் செய்ததும், இவையாவும் கல்லாலின்கீழ் யோகத்தமர்ந்த சிவபிரானின் ஆற்றலினாலல்லவோ. ஈசனின் வரத்தினாற்றலால் நீர் எல்லாரையும் வென்றீர் அன்றி உமது ஆற்றலால் அவை நிகழமுடியுமோ? 7

அரிபொர வருவனேல் அமரர் கோனொடும்
பிரமன்வந் தேற்குமேற் பிறர்கள் நேர்வரேல்
பொருவதும் வெல்வதும் புறத்தைக் கண்டுபின்
வருவதும் எளிதரோ கடனும் மற்றதே.

எம்முடன்போர்புரிய நாராயணக்கடவுள் வருவரேல் அல்லாமல் தேவேந்திரனோடும் பிரமதேவன் போரிடவருவனேல் அல்லாமல் வேறு எவராகிலும் எம்முடன் போரிட வருவரேல் அவர்களுடன் நாம் போர்புரிவதும் வெல்வதும் அவர்கள் புறங்காட்டி ஓடும்படி செய்து பின் நாம்வருவதும் அது எளிதான காரியமாகும். அத்துடன் நிச்சயம் செய்யவேண்டிய கடமையுமாம். 8

நோற்றிடு தவத்தினை நோக்கி எண்ணிலாப்
பேற்றினை உதவிய பிரானொர் தீமையான்
மாற்றிட உன்னுமேல் வணங்கி மாறொரீஇப்
போற்றுதல் அன்றியே பொரவுஞ் செய்யுமோ.

அது அல்லாமல் நாம்செய்த தவத்தினை நோக்கி அதற்காக எமக்கு எண்ணில்லாத பேற்றினை அருள்புரிந்த பெருமான் சிவன் நாம்செய்திடும் ஒரு தீமையான செயலுக்காக எமக்கு தந்துள்ளபேற்றை மாற்றிடத் திருவுளம்கொண்டால் அப்போது நாம்செய்யவேண்டிய கடமையாவது எம்பிரானை வணங்கி எம்பிழைபொறுப்பாய் எனவேண்டி எமது தீமையை நீக்கி அவரை போற்றுதல் அல்லாமல் போரும் செய்யலாமோ? 9

ஒன்ருரு பயன்றனை உதவி னேர்மனங்
கன்றிட ஒருவினை கருதிச் செய்வரேல்
புன்ருெழில் அவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடும் அல்லது கூற்றும் வேண்டுமோ.

இவ்வுலகத்து நன்றுடன் வாழ்வதற்குரியதோர் நன்மையை ஒருவர்பால் உதவியோருடைய மனம் கன்றி வேதனையுறுமாறு ஒருசெயலை நன்கு தெரிந்துகொண்டும் செய்தால் என் ஐயனே! அப்படியான தீய செயலைச் செய்திடும் அவருக்குமுன்னர் ஒருவர் செய்துகொண்ட நன்றியே கொன்றிடும் அல்லாது நன்மைசெய்தானுக்கு தீமைபுரிந்த அவனைக் கொல்ல இன்னுமொரு இயமனும் வேண்டுமோ? 10

கந்தனை அருள்புரி கடவுள் ஆணையைச்
சிந்தையின் மாறுகொள் சிறியர் யாவரும்
அந்தம தடைந்தனர் அன்றி வன்மையால்
உய்ந்தனர் இவரென உரைக்க வல்லமோ.

கந்தப்பெருமானைப் பெற்றெடுத்தருளிய கடவுள் சிவமூர்த்தியின் ஆணையை மனதினுல் மாறுபட்டு நின்ற சிறியவர்கள் யாவரும் முடிவாகி அழிந்து போனுர் அன்றி இன்னுர் சிவனுடன் மாறுகொண்டும் தப்பி வாழ்ந்தார் இவர் என்று ஒருவரைச் சொல்லலாமா? 11

கட்டுசெஞ் சடைமுடிக் கடவுள் காமனைப்
பட்டிட விழித்ததும் பண்டு மூவெயில்
சுட்டதும் அந்தகன் சுழலச் சூலமேல்
இட்டதுங் கேட்டிலை போலும் எந்தைநீ.

கட்டிய சிவந்த சடையினை உடைய சிவமூர்த்தி மன்மதனை அழிவுற நோக்கி பொடியாக்கியதும்; முன்னர் முப்புரங்களையும் புன்சிரிப்பால் வேவுறும்படி சுட்டதும்; அந்தகாசூரன் சுழலும்படியாகச் சூலத்தினுல் குத்றி ஏந்திக்கொண்டதும் எந்தையே நீ யாரிடமும் கேட்டாயில்லைப்போலும்? 12

காலனை உதைத்ததுங் கங்கை யென்பவள்
மேல்வரும் அகந்தையை வீட்டிக் கொண்டதும்
மாலயன் அமரர்கள் இரிய வந்ததோர்
ஆலம துண்டதும் அறிகி லாய்கொலோ.

இயமனை உதைத்ததும் கங்கை என்பவள் எல்லாவற்றையும் அழிப்பேன் என்று எழுந்த அகந்தையை அழித்து நீக்கி சடைமீது வைத்ததும், திருமால் பிரமன் முதலியோர்கண்டு அஞ்சி ஓடிட பரந்து எல்லாரையும் கொல்லவந்த நஞ்சினை சிவபிரான் உண்டதும் நீ அறியாயோ? 13

அண்டரை யோர்அரி யலைப்ப அன்னது
கண்டநஞ் சுடையவன் கருதி வீரனுல்
தண்டம திழைந்ததுந் தக்கன் வேள்வியை
விண்டிடு வித்ததும் வினவி லாய்கொலோ.

அன்று ஓர் நரசிங்கம் இரணியனைக் கொன்ற வேகத்தால் நின்ற தேவர்களையும் வானுலகில் சென்று அலைத்து துயர்புரிந்திட; அதனைக்கண்டு நஞ்சினை உண்ட கடவுள் சிவபிரான் அத்துயர் நீக்கிடும்படி கருதி வீரபத்திரக் கடவுளைக் கொண்டு அந்நரசிங்கத்திற்குத் தண்டம் புரிந்ததும், தக்கனுடைய யாகத்தை அழிவித்து வைத்ததும் யாரிடமும் கேட்டறியவில்லையோ? 14

கடிமலர் மேலவன் இகழக் கண்ணுதல்
வடுகனை ஏவிவள் ளுகிரின் அன்னவன்
முடிகளை வித்தது முகுந்தன் தன்னிடை
அடைதரு வித்ததும் அறிகி லாய்கொலோ.

எல்லாரையும் படைக்கின்ற வாசனையுடைய தாமரைமலர் மேலவரான பிரமதேவர் ஈசனை இகழ அதுகண்டு நெற்றிக்கண்ணுடைய அக்கடவுள் வைரவக் கடவுளை ஏவி அவரது நகத்தால் பிரமதேவரின் சிரம் அரிந்ததும் அப்பால் அவரை விஷ்ணுமூர்த்தியிடம் செலவிடுத்து இரத்தப்பலி ஏற்பித்ததும் நீ அறியாயோ? 15

முந்தொரு மகபதி மொய்ம்பை அட்டதும்
ஐந்தியல் அரக்கரை அழித்த செய்கையும்
தந்தியை உழுவையை உரித்த தன்மையும்
எந்தைநிற் குணர்த்தினர் இல்லை போலுமால்.

முன்னர் ஓர் இந்திரனுடைய தோளை முரிப்பித்ததும் பஞ்சராக்கதர் எனும் பொல்லாத இராக்கதரை அழித்த செய்கைகளையும் எம்பிரான்பால் போரிடவந்த யானையை (கயாசூரன்) புலியை தோலுரித்துடுத்த தன்மையையும் எனது ஐயாவே உனக்கு உணரும்படி சொன்னார் ஒருவரும் இல்லையோ? 16

ஏமுற உலகடும் ஏனக் கொம்பினை
ஆமையின் ஓட்டினை அணிந்த தன்மையும்
பூமலர் மிசையவன் முதல புங்கவர்
ம்ாமுடி அணிந்ததும் மதிக்கி லாய்கொலோ.

பன்றிவடிவாகிய விஷ்ணுமூர்த்தி உலகெலாம் காத்து இன்பமுறவைத்தும் பின்னர் மதமிகுதியால் அந்த உலகினை அழிவுசெய்திட அப்பன்றிக்கொம்பினையும்; அதே நிலையில் ஆமை உருக்கொண்டு உலகை அழிவுறுத்திய ஆமை ஓட்டினையும் பிடுங்கி அணிந்ததன்மையையும்; தாமரை மலர் மீதிருக்கின்ற பிரமதேவர் முதல் கடவுளர்களது பெருமண்டை ஓட்டுக்களை அணிந்ததையும் எம்தந்தையே எண்ணி அப்படியான கடவுளின் குமரன் அல்லோ முருகக்கடவுள் என்பதை எண்ணமாட்டீரோ? 17

கதித்திடு முனிவரர் கடிய வேள்வியில்
உதித்திடு முயலகன் ஒல்லென் றூர்த்தெழப்
பதத்தினில் உதைத்தவன் பதைப தைத்திட
மிதித்ததும் மிறவுநீ வினவிற் றில்லையோ.

வேள்வியும் விரதமும் பலன்தருமென்ற அகந்தையால் சிவபிரானின் கருணையினை உணராத தாருகாவனத்து முனிவர்கள்செய்த கொடிய வேள்வியில் உதித்த முயலகன் உலகம் அழிவுற ''ஓ'' என்று கூச்சலிட்டு எழுந்தபோது எம்பிரான் திருப்பாதத்தால் உதைத்து அம்முயலகன் பதைபதைத்திட மிதித்ததும் இன்னும் நெருப்பு உடுக்கு மான் மழு இவைகளை ஏந்தியதும் கேட்டுணரவில்லையோ? 18

ஒன்னலர் தன்மைபூண் டுற்று ளோர்தமைத்
தன்னிகர் இல்லவன் தண்டம் செய்தன
இன்னமோர் கோடியுண் டிருந்தி யான்இவண்
பன்னினும் உலப்புறு செல்லும் பல்லுகம்.

பகைவர் என்ற தன்மைபூண்டுளோர் எவரையும்; தனக்குநிகர் பிறதிலாதது தானேயான சிவபெருமான் தண்டனை செய்தன சொல்லப்போனல் என்தந்தையே! இன்னுமோர் கோடி வரலாறுகள் உண்டு. அவற்றையான் இவ்விடத்து இருந்து சொன்னாலும் அவை சொல்லி ஒழியாதே? பலயுககாலம் செல்லும் எம்பெருமானுடைய அருட்செயல்களை நான் சொல்வதற்கு,

ஆட்பாலவர்க்கருளும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில்அளப்பில கிளக்கவேண்டா —ஞானசம்பந்தப்பிரான்

**வேறு**

ஆதலால் ஈசன் தன்னை அடைந்தவர் உய்வர் அல்லாப்
பேதையர் யாவரேனும் பிழைக்கலர் இனையவாய்மை
வேதநூல் பிறவும் கூறும் விழுப்பொரு ளாகும் நீயும்
ஏதமா நெறியின் நீங்கி இப்பொருள் உணர்தி எந்தாய்.

ஆனதினால் ஈசன் சிவனை அடைந்துகொள்வார் உய்வார்கள், அது அல்லாத பேதையர் எவரென்றாகிலும் பிழைத்துவாழ மாட்டார்கள். இந்த உண்மை வேதநூல்களும் பிறவும் கூறுகின்ற அழிவிலாத மேலான உறுதிப் பொருளாகும். ஆனமையால் எனது தந்தையே நீயும் உனது தவறான நெறிகளை விடுத்து நீக்கி இந்த உண்மைப்பொருளினை உணர்ந்துகொள்வாய். 20

இன்னுமொன் றுரைப்பன் நீமுன் இருந்தவம் இயற்ற இந்த
மன்னிலை புரிந்த மேலோன் மாற்றவும் வல்லனாமால்
அன்னவன் குமரன் தன்னோடமர்செய்வ தியல்போ ஐய
தன்னினும் உயர்ந்தா ரோடு பொருதிடில் சயமுண்டாமோ.

இன்னமும் ஒன்று நான் சொல்வேன். நீ முன்னாக பெரிய தவத்தைச் செய்திட, அதினினுக்காக மேலான இந்நிலையினை உனக்கு அருள்புரிந்த சிவபெருமான் நினைந்தால் அப்பேற்றை மாற்றவும் வல்லமை உடையனே! ஆகையால் அத்தகைய பெருமானின் திருக்குமாரனோடு நீ போர்செய்வது இயல்போ? எனது ஐயனே தன்னிலும் பார்க்க உயர்வாகும் நிலையுடையாரோடு போர்புரிந்தால் எக்காலத்திலும் வெற்றியுண்டாமோ? அதுகைகூட முடியுமா? 21

பூதல வரைப்பும் வானும் திசைகளும் புணரி வைப்பும்
மேதகு வரையும் தொன்னாள் வேறுபா டுற்றநோக்கி
ஈதென மாயம் கொல்லென் றெண்ணினம் அனைய வெல்லாம்
ஆதிதன் குமரன் செய்த ஆடலென் றுரைத்தா ரன்றே.

பூமிமுதல் பல இடங்களும்; வான உலகமும்; திக்கில் உள்ள உலகுகளும்; கடல்களின் வைப்பான இடங்களும் மேலோங்கிய மலைகளும்; முன்னாளில் வேறுபாடு அடைந்ததன்மையை நாம் கண்டு ஈதென்ன மாயம் இப்படி நிகழ்வதற்கு என்று எண்ணினோம். அதுவேளை அந்த வேறுபாடுகள்யாவும் ஆதியான சிவபெருமானின் குமரன் செய்த ஆடலாகும் என்று அன்று சொன்னார்களே. 22

அண்ணலங் குமரன் ஆடல் அறிகிலர் மருளுங் காலைக்
கண்ணிடை அன்னான் மற்றோர் வடிவினைக் காட்டி நிற்ப
விண்ணவர் பலரும் சூழ்ந்து வெகுண்டனர் வெம்போர் ஆற்றத்
துண்ணென அவரை அட்டாங் கெழுப்பினன் தூயோ னென்பர்.

எல்லார்க்கும் மேலோனான குமரனின் திருவிளையாடலை தேவர்கள் அறியாதவர்களாய் மலைவுற்ற பொழுது அவர்கள் கண் முன்னாக குமரக் கடவுள் வேறு ஓர் வடிவத்தைக் காண்பித்து நிற்றலும் அதனை அறியாத அத்தேவர்கள் பலரும் அவரைச் சூழ்ந்து வெகுண்டு கொடிய போரினைப் புரிந்திட உடனேயே அவர்களை எல்லாம் கொன்று மீண்டும் எழுப்பினார் தூயவனான குமரமூர்த்தி என்று சொல்வார்கள். 23

எண்டொகை பெற்ற அண்டம் யாவையும் புவன வைப்பும்
மண்டுபல் வளனும் ஏனை மன்னுயிர்த் தொகுதி முற்றும்
அண்டரும் மூவர்தாமும் அனைத்துமா கியதன் மேனி
கண்டிட இமையோர்க் கெல்லாம் காட்டினன் கந்தன் என்பர்.

பலவகையாக எண்ணிக்கை உடைய அண்டங்கள் யாவையும்; புவனங்களின் வைப்புக்களையும்; பெருகுகின்ற வளங்களையும்; ஏனையபொருள்களையும் மேலான உயிர் வர்க்கம் யாவையும்; தேவர்களையும்; பிரமன் திருமால் உருத்திரன் ஆகிய மூவரையும் கொண்ட எவராலும் காணமுடியாத எல்லாமாய் அல்லவுமாய் இருக்கின்ற கோலத்தை தேவர்கள்யாரும் காணும்படி அன்றுகாட்டினான் ஆறுமுகமுடைய ஐயன் எனச் சொல்வார்கள். 25

மறைமுத லவனை முன்னோர் வைகலின் வல்லி பூட்டிச்
சிறையிடை வைத்துத் தானே திண்புவி அளித்து முக்கண்
இறையவன் வேண்ட விட்டான் என்பரால் இனைய வாற்றால்
அறுமுகன் செய்கை கேட்கின் அற்புத மாகு மன்றே.

வேதங்கட்கு எல்லாம் முதலாயவனும் யாவற்றையும் படைப்பவனுமாகிய பிரமதேவனை முன்னொருநாள் காலில் விலங்கிட்டு சிறையிடத்தேவைத்து; பின்னால் தானே திண்மையான பூமிமுதல் பலஉலகினையும் படைத்து; மூன்று கண்ணுடைய சிவபிரான் வந்து வேண்டிக்கொள்ள பிரமனை சிறையில் நின்றும் விடுதலைசெய்தார் ஆறுமுகத்து ஐயன் என்பார்கள். இத்தன்மையான செயல்களால் ஆறுமுகமுடைய ஐயன் செய்கையை நாம் கேட்குங்கால் அது அற்புதமாகும் அல்லவோ? 25

அங்கண்மா ஞாலம் தன்னை மேலினி அகழு மோட்டுச்
செங்கண்மால் ஏன யாக்கை எயிற்றையோர் சிறுகைபற்றி
மங்குல்வா னுலகிற் சுற்றி மருப்பொன்று வழுத்த வாங்கித்
தங்கணு யகற்குச் சாத்தச் சண்முகன் அளிக்கும் மென்பர்.

அகன்று பரந்த இந்தப் பூமியை வருகின்ற கற்பம் ஒன்றில் பாதாளத்தினின்றும் தேடிக் கொணர்ந்து நிலைநிறுத்தப்போகின்ற செங்கண்ணராகும் விஷ்ணுமூர்த்தி கொண்டிடும் பன்றி உருவதின் கொம்பு ஒன்றினை; குழந்தைவடிவாய முருகப்பிரான் சிறுகையால் பிடித்து அப் பன்றியை மேகம் உலவிடும் வானில் சுழற்றிட; ஆற்ருது நாராயணக்கடவுள் எம்பிரானை வணங்கிட அக் கொம்பைப் பிடுங்கி எடுத்துத் தங்கள் நாயகரான சிவபிரான் அணிந்திடக் கொடுத்திடும் என்பார்கள். 26

நேரலர் புரமூன் றட்ட நிருமலக் கடவுள் மைந்தன்
ஆரினும் வலியோன் என்கை அறைந்திட வேண்டுங் கொல்லோ
பாரினை அளந்தோன் உய்த்த பரிதியை அணியாக் கொண்ட
தாரகன் தன்னை வெற்பைத் தடிந்தது சான்றே அன்றே.

ஆகையால் நேரொருவரிலாத பகைவராகும் முப்புரத்து அசுரரின் புரங்கள் மூன்றினையும் எரித்தருளிய நிருமலக் கடவுள் சிவபிரானது மைந்தன் ஆறுமுகன் ஆரினுமே வலியோன் என்றதை இனியும் நாம் சொல்லவேண்டுமோ? இதற்கு ஈரடியாலே மூவுலகையும் அளந்த நாராயணக் கடவுள் அன்று செலுத்திய சக்கரப் படையை ஆபரணமாகக் கழுத்தில் அணிந்து அவரை வெற்றிகொண்ட தாரகன் தன்னையும் கிரவுஞ்ச மலையையும் பொடியாக்கி அழித்தது ஓர் சாட்சியாக அமைகின்றதே! எனது தந்தையே. 27

அறுமுகத் தொருவனுகும் அமலனை அரன்பால் வந்த
சிறுவனென் றிகழல் மன்னு செய்கையால் பெரியன் கண்டாய்
இறுதிசேர் கற்பம் ஒன்றின் ஈறிலா தவன்பால் தோன்றும்
முறுவலின் அழலு மன்றே உலகெலாம் முடிப்ப தம்மா.

ஆறுமுகமுடைய ஒருவனுகி நின்மலனுகி இருக்கின்ற குழந்தை வடிவான ஈசனை; சிவபிரான்பால் தோன்றிய சிறுகுழந்தைதானே என நீ நினையாதே! அவன் தனது செயல்களாலே அனைத்தையும் ஆக்கும் பகவானுதலின் செய்கையால் பெரியன் என்பதை நீ உனது அறிவில் கண்டுகொள். எல்லாம்முடிவாகின்ற ஒரு கற்பத்திலே முடிவிலாத சிவபெருமான்பால் தோன்றிடும் புன்சிரிப்பின் நெருப்புமல்லோ உலகம் யாவற்றையும் முடிப்பது என்பதை உணர்வாய். 28

வாசவன் குறையும் அந்தண் மலரயன் குறையும் மற்றைக்
கேசவன் குறையும் நீக்கிக் கேடிலா வெறுக்கை நல்க
வாசிலோர் குழவிபோலாய் அறுமுகங் கொண்டான் எண்டோள்
ஈசனே என்ப தல்லாற் பிறிதொன்றை இசைக்க லாமோ.

இந்திரனது குறைகளையும் அழகிய குளிர்மை உடைய தாமரை மலரில் இருக்கும் பிரமதேவனின் குறையையும் மற்றைய விஷ்ணுமூர்த்தியின் குறையையும் நீக்கி கேடில்லாததோர் செல்வத்தை கொடுத்திடவேண்டி குறைவிலா நிறைவான குழந்தை போலாகி ஆறுமுகம் கொண்டருளினர் எட்டுத் தோள்களையுடைய ஈசனுகும் சிவன் என்று நாம் சொல்வதல்லாமல் எம்மோடு போர்புரிந்திடும் ஆடலைகொண்டுவந்த முருகப் பெருமானை சிவன் அல்லாத வேறு ஒருவராக அல்லது பிறிதொருவராக நாம் சொல்லலாமோ? 29

கங்கைதன் புதல்வன் என்றுங் கார்த்திகை மைந்தன் என்றுஞ்
செங்கண்மால் மருகன் என்றுஞ் சேனையின் செல்வன் என்றும்
பங்கயன் முதலோர் தேருப் பரஞ்சுடர் முதல்வன் தன்னை
இங்கிவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பாலதன்றோ.

கங்கா தேவியின் புதல்வன் என்றும்; கார்த்திகைப் பெண்களின் மைந்தன் என்றும்; சிவந்த கண்களையுடைய திருமாலின் மருமகன் என்றும், தேவர்களது சேனையின் நாயகன் என்றும் பிரமதேவன் முதலிய கடவுளர் யாரும் இன்னமுமே தேறித் தெளியமுடியாத பரஞ்சுடராகும் ஈசன் முருகன் தன்னை இங்கு இப்படிப் பல நாமம் எல்லாம் சொல்வது எங்களது ஏழமையாகிய அறியாமையை காண்பிக்கின்ற தல்லவோ. 30

பன்னிரு தடந்தோள் வள்ளல் பரிதியம் பகைவன் சூழ்வால்
தன்னுறு படைஞர் மாய்ந்த தன்மையை வினவித் தாழா
தன்னவர் மீளு மாற்றால் அளக்கர்மேல் விடுத்த வேலை
இந்நகர் தன்னில் தூண்டின் யாரிவண் இருத்தற் பாலார்.

பன்னிரண்டு விசாலித்த தோள்களையுடைய அருள் வள்ளல் ஆறுமுகப் பெருமான்; சூரியனுடைய, பகைவன் பானுகோபன் செய்த சூழ்ச்சியினால் மாயப்படையாலே தனது பக்கராக உள்ள சேனைகளும் வீரர்களும் மாய்ந்துபோன தன்மையை கேட்டருளி; தாமதமின்றி ஆழ்ந்துபோனர் அவர்கள்யாரும் மீண்டுகொள்ளும் தன்மையால் சமுத்திரத்தின்மேல் இபபோது விடுத்த வேற்படையை இந்த நகரிடத்து செலுத்தினல் யார் ஒருவர் பின்னர் இந்த நகரத்து உயிரோடு வாழக்கூடியவர். 31

தாரகற் செற்ற தென்றால் தடவரை பொடித்த தென்றால்
வார்புனற் கடலுள் உய்த்த வலியரை மீட்ட தென்றால்
கூருடைத் தனிவேல் போற்றிக் குமரன்றாள் பணிவ தல்லால்
போரினைப் புரிதும் என்கை புலமையோர் கடன தாமோ.

அந்த வேற்படை தாரகாசூரனைக் கொன்றது என்றால்; பெரிய கிரவுஞ்சமலையை பொடியாக்கியது என்றால்; பெருக்குடைய தூய நீர்கடலுள் போடப்பட்டுமாண்டு போன வீரரை மீட்டருளியது என்றால்; நாம் செய்யவேண்டியது அவ்வாறு சக்தி வாய்ந்த கூருடைய தனியான வேற்படையை போற்றிசெய்து குமரப்பெருமானின் பாதங்களை பணிவதே அல்லாமல் அவரோடும் போர்புரிவோம் கொண்டு வாருங்கள் தேரை என்று சொல்வது அறிவுடையாருடை கடமையாமோ. 32

அரனிடைப் பிறந்த அண்ணல் ஆணையால் வந்த தூதன்
திருநகர் அழித்தான் முன்னஞ் சேனையுந் தானுமேகி
ஒருபகற் பானுகோபன் உலைவறப் பொருது வென்று
கருதரும் அவுணர் தானைக் கடலையுங் கடந்து போனான்.

சிவபிரானது நெற்றியம்தலத்தே தோற்றி அருளிய குமரப் பெருமானின் ஆணைப்படி இங்குவந்த அந்தத் தூதுவன் அன்று இந்தத் திருவுடைய நகரத்தை அழித்தான். முன்ஒருநாள் சேனையும் தானுமாக அத்தூதுவன் வந்து உனது மகன் பானுகோபன் உலைந்தலையும்படி போர்செய்து உன்மகன் ஓிட வென்று நினைக்கமுடியாத பெருந்தொகையுடைய எமது கடலாகும் அசுரச் சேனையையும் வென்று போனான். 33

இப்பகல் வந்து வீரன் இருஞ்சமர் இயற்ற எம்முன்
தப்பினன் மறைந்து மாயைப் படைதொடா உணர்ச்சி தள்ளி
அப்புனல் அளக்கர் உய்ப்ப அறுமுகன் வேலான் மீண்டும்
மெய்ப்பதி யடுவான் என்றால் அவனையார் வெல்லற் பாலார்.

இன்றுபகல் வந்து அந்த வீரனான வீரவாகு பெரும்போர் செய்திட எனக்கு மூத்த பானுகோபன் ஒருவாறு தபபி மறைந்து நின்று மாயைப்படையை விடுத்து அவனின் உணர்வுகளை அழித்திட்டு அம்பாலுள்ள தூய நீர்க்கடலுள் செலுத்தியிட ஆறுமுகமுடைய ஈசனின் வேலினால் அத்தூதுவன் மீண்டு வந்து உனது அழிக்க முடியாத நகரை அழிப்பான் என்றால் அவனைத்தானும் யாரால் வெல்லமுடியும். 34

இறுதியும் எய்தான் என்னின் ஏற்றதொல் லுணர்ச்சி மாய்ந்து
மறியினும் எழுவன் என்னின் மாயையுந் தொலையும் என்னின்
செறியும்விண் முதல்வர் தந்த படைக்குநேர் செலுத்து மென்னின்
அறிஞர்கள் அவன்மேற் பின்னும் அமர்செயக் கருதுவாரோ.

அத்தூதுவன் முடிவு என்பதை எந்நிலையாலும் அடையான் என்றால்; அவனிடத்தாக உள்ள உணர்வுகள் கெட்டழிந்து இறந்தாலும் பின்னர் எழுவான் என்றால் நாம் செய்திடும் மிகு இரகசியமாகும் மாய வல்லபங்களும் அழிந்திடும் என்றால்; வானில் விளங்கிடும் கடவுளர் தந்த படைகளுக்கு மாறுபடைகளாக தானும் அப்படைகளை விடுவான் என்றால் அறிவாளிகளாயினோர் அந்த தூதுவன்மேல் பின்னரும் போர்செயக் கருதிடுவாரோ? 35

தூதென முன்னர் வந்தோன் ஒருவனால் தொலையும் இந்த
மூதெயில் நகர முற்றும் அவுணரும் முடிவர் என்னின்
ஆதியும் முடிவும் இல்லா அறுமுகன் அடுபோர் உன்னிப்
போதுமேல் இமைப்பின் எல்லாப் புவனமும் பொன்றிடாவோ.

தூதாக முன்னர் வந்த அந்த ஒரு வீரவாகு என்பவனாலே இந்த முதிய பெரு மதில் சூழ்ந்த நகரம், முழுவதும் அழிந்திடும் என்றால் அத்துடன் இங்குள்ள அசுரர்யாரும் இறந்திடுவர் என்றால் பின்னராக அவனை தூதாக விடுத்த ஆதியும் முடிவுமாய இரண்டும் இல்லாத ஆறுமுகமுடைய ஈசன் கொலைபுரியும் போரினை எம்முடன் நிகழ்த்த நினைந்து வருவாரென்னின் ஒரு இமைப்பொழுதின் முன்பே நாமல்ல நமது ஊரல்ல எல்லாப் புவனங்களும் அழித்திடாவோ? 36

கரங்கள்பன் னிரண்டு கொண்டகடவுள்வந் தெதிர்க்கின் நந்தம்
வரங்களும் படைகள் யாவும் மாயையுந் திறலுஞ் சீரும்
உரங்களுந் திருவு மெல்லாம் ஊழிநா யகன்முன் னுற்ற
புரங்களும் அவுண ரும்போற் பூழிபட் டழிந்தி டாவோ.

பன்னிரண்டு கைகளையுடைய கடவுள்வந்து நம்முடன் எதிர்த்தால் எங்களது வரங்களும் படைகள் யாவும் மாய வித்தைகளும் வல்லபங்களும் சீரும் உரமும் செல்வமும் எல்லாம் ஊழியின் ஒருவராகும் சிவபிரான் முன்நின்ற முப்புரங்களும் அசுரரும் அழிந்து அவர்முறுவலால் பொடியாய வாறுபோல, பகவான் முன் நமது புரமும் யாவும் பொடியாகி அழிந்திடாவோ. 37

ஒற்றனை விடுத்து நாடி உம்பரை விடாமை நோக்கி
மற்றிவட் போந்து நம்மேல் வைகலும் வந்திடாது
சுற்றுதன் தானை யோடுந் தூதனைத் தூண்டி அங்கண்
இற்றையின் அளவு நம்பாற் கருணைசெய் திருந்தான் ஐயன்.

எனது தந்தையே! உன்பால் ஓர் தூதுவனை முன்னர் விடுத்து நீ தேவரை சிறை விடாதது அறிந்து; இந்த நகரிலே வந்தருளி போரிட நினைந்து தான் இங்கு வந்தும்கூட; தான் நேரில் வந்து எம்முடன் போரிடாது தன்னைச் சூழ்ந்த சேனையுடன் அந்தத் தூதுவன் வீரவாகுவை எம்முடன் போர்செய்திட செலுத்திவிட்டு அவர் அங்கு இன்றளவும் இருப்பது; நாம் இன்னமும் சிந்தித்துத் திருந்துவோமா என்ற கருணையைப் புரிந்துகொண்டு எம்ஐயன் அங்கு இருந்தான். 38

கருணைகொண் டிருந்தவள்ளல் கருத்திடைத் தொலைவில் சீற்றம்
வருவதன் முன்னம் இன்னே வானவர் சிறையை மாற்றி
உரியநந் தமரும் யாமும் ஒல்லையின் ஏகி ஐயன்
திருவடி பணிந்து தீயேஞ் செய்தன பொறுத்தி யென்று.

ஆதலின் எம்பால் உண்மையில் கருணைகொண்டிருக்கும் அருள்வள்ளல் தமது கருத்திடை எமது தீயசெயலால் நீக்கமுடியாத கோபம் கொள்வதன்முன்பு இப்பொழுதே நாம் தேவர்களுடைய சிறையைநீக்கி எமக்கு உரிய பந்துக்களும் சுற்றமும் நாமும் விரைவுடனே சென்று ஆறுமுகமுடைய ஐயனின் திருவடிபணிந்து பெருமானே நீயேங்கள் இதுகாறும் செய்தவற்றைப் பொறுத்தருள்க என வேண்டிக் கொண்டு, 39

பணிந்துழி அமல மூர்த்தி பலவுநாம் புரிந்த தீமை
தணிந்தருள் செய்து தானுந் தணப்பிலா வரங்கள் நல்கி
அணிந்ததன் தானை யோடும் அகலுமால் உய்தும் யாமும்
துணிந்திது புகன்றேன் ஈதே துணிவென மதலை சொற்றான்.

நாம் பணிந்திட்டபோது நின்மலமூர்த்தியாகும் முருகன் நாம் செய்ததீமைகள் பலவையும் பொறுத்தருள்செய்து தாமும் தந்தைபோல் குறைவிலா பெருவரங்களை நிறைவாகக் கொடுத்துத் தம்முடன் சேரக் கொண்டுவந்த துணைவருடனும் சேனையுடனும் அகன்றிடுவார். நாங்களும் உய்ந்திடுவோம். என்தந்தையே எல்லாவற்றையும் நான் சிந்தித்து இதுதான் செய்யக்கூடிய காரியமெனத் துணிந்து இதனைச் சொன்னேன். இதுதான் உமக்கும் ஏற்றதுணிவாகும் என்று மைந்தனான இரணியன் சொன்னான். 40

பரிந்துதனக் குறுதியிவை தெருட்டுதலும் அதுகேளாப் பகுவாய் கால. விரிந்தபுகைப் படலிகைபோய்த் திசையனைத்தும் விழுங்கியிட வெகுளி மூளக், கரிந்ததன துடல்வியர்ப்ப உயிர்ப்புவர இதழ்துடிப் பக் கண்கள் சேப்ப, எரிந்துமனம் பதைபதைப்ப உருமெனக்கை எறிந்து நகைத் தினைய சொல்வான்.

இரணியன் மிகவும் இரங்கியவாறு தனக்கு உறிதியான வார்த்தை இவைகளை விளக்கமாக எடுத்துக் கூறிடுதலும் அதுகேட்ட சூரபன்மன் பெரிய வாயினின்றும் கோப நெருப்பு கான்றிட அதனால் எழுந்து விரிகின்ற புகைப்படலம் சென்று திசை அனைத்தையும் விழுங்கிட; கோபம் மூண்டிட; உடலம் வியர்வைகொள்ள பெரு மூச்செடுப்ப, இதழ்கள் துடிப்ப, கண்கள் சிவப்பேற, மனம்கோபத்தால் எரிந்து பதைபதைப்ப இடியேறுபோன்று கைகளை அடித்து ஏளனமாகச் சிரித்து இதனைச் சொல்வான். 41

தாவுடைய நெடுஞ்சுடர்வேல் ஒருசிறுவன் ஆற்றலையும் தூதாய் வந்த, மேவலன்தன் வலியினையும் யான்செய்யப் படுவனவும் விளம்பா நின்றாய், ஏவருனக் கிதுபுகன்றார் புகன்றாரை உணர்வேனேல் இன்னே அன்னோர், ஆவிதனைக் களைந்திடுவேன் ஆங்கவர்தொல் குலங்களெலாம் அடுவன் யான.

மாலையணிந்த நெடிய ஒளியுடைய வேல்கொண்ட ஒரு சிறுவன் முருகனது ஆற்றலையும்: அவன் தூதாய்வந்த பகைவன் வீரவாகுவின் வலியினையும்; பின்னர் யான் செய்யப்படவேண்டியதையும் நீ சொல்லிநின்றாயடா. யார் உனக்கு இதைச்சொன்னார்கள். சொன்னார்களை ஒருகால் அறிவேனாகில் இப்பொழுதே அவர்கள் உயிரைக் களைந்து நீக்குவேன். அம்மட்டோ அவர் குலமெலாம் நான் நாசம் செய்வேன். 42

ஞாலமெலா முன்படைத்த நான்முகன்ஐந் தியலங்கம் நவின்று போவான், ஆலமிசைத் துயில்கூர்வான் என்னிளவல் தனக்குடைந்தான் அமரர் கோமான். வேலைகளின் மீன்முழுதும் என்பணியில் தந்தனனால் வெள்ளி வெற்பின், நீலமிடற் றவன்மகனே தொலைவறுமென் பேராற் றல் நீக்குகின்றான்.

இப்பூமி எவற்றையும் முன்னர் படைத்த நான்குமுகமுடைய பிரமன் நாள் தோறும் வந்து பஞ்சாங்கம் சொல்லிப்போவான். ஆலிலையில் பள்ளிகொள்ளும் நாராயணன் என் தம்பி தாரகனுக்குத் தோல்வியுற்றான். தேவ அரசன் இந்திரன் இக்கடல்மீன் முதுவதும் எனது கட்டளைப்படி பிடித்துத்தந்தவனல்லவோ? அப்படி இருப்ப வெள்ளியங்கிரியில் வாழும் நீலநிறமுடைய கண்டத்துக் கடவுளின் மகனா எனது பெரிய ஆற்றலை நீக்கப்போகின்றவன், 44

அரியயனும் புரந்தரனும் விண்ணவர்க ளெல்லோரும் அகிலந் தன்னின், விரவுகணத் தவரெவரும் யார்க்குமுத லாகுமுக்கண் விமலன் தானும், பொருசமரின் ஏற்றிடினும் எனக்கழிவ தன்றிவென்றுபோவ துண்டோ, ஒருசிறிதும் புந்தியிலா மைந்தாயான் பெற்றவரம் உணர்கி லாயோ.

திருமாலும் பிரமனும் விண் உலகங்களில் உள்ளோர் யாவர்களும் இந்த அகில உலகமெல்லாம் வாழும் கடவுளர்கள் யாவர்களும் எல்லார்க்கும் முதலான முக்கண்ணுடைய சிவபெருமானும் என்னுடன் போரிடுதற்கு திரண்டு வரினும்; எனக்குத் தோற்பதேயன்றி வெற்றிகொண்டுபோவது நடக்கக்கூடிய காரியமோ? ஒருசிறிதும் நல்லுணர்வில்லாத மகனே நான்பெற்ற வரத்தின் இயல்பை நீ அறியாயோ? 44

**வேறு**

ஆற்றல் விட்டனை குலமுறை பிழைத்தனை அரசின்
ஏற்றம் நீங்கினை ஒன்னலர்க் கஞ்சினை இசைத்தாய்
மாற்றம் ஒன்றினி உரைத்தியேல் உன்றனை வல்லே
கூற்று வன்புரத் தேற்றுவன் யானெனக் கொதித்தான்.

உன்வலிமை கெட்டாயடா; எங்கள் குலத்தின் வீரநிலையை தவறினாய், அரசனுக்குரிய உயர்வு நீங்கினாய்; பகைவர்க்குப் பயந்தா இப்படிப்பேசினாய்! இனி ஒரு வார்த்தை மேற்கொண்டு பேசுவாய் எனின் உன்னை இந்தநேரமே இயமனுடைய ஊருக்குயான் அனுப்பிவைப்பேன் பார் எனக்கொதித்து நின்றான் சூரபன்மன். 45

கொதித்த வேலையின் மைந்தனும் நம்முரை கொடியோன்
மதித்தி லன்இவன் மாய்வது சரதமே வான்மேல்
உதித்த செங்கதிர்ப் பரிதியங் கடவுள்சூழ் உலகில்
விதித்தி றந்தனை யாவரே வன்மையால் வென்றோர்.

தந்தை கோபத்தால் கொதித்த நேரத்தில் அதுகேட்ட மகன் இரணியன் நினைக்கின்றான்; நமது நல்வார்த்தைகளை கொடியோனானை இவன் மதித்திலன். இனி இவன் மாய்வது சரதமே! வான மீதில் உதித்துவரும் சிவந்த கிரணங்களையுடைய அழகிய சூரிய பகவான் சூழ்ந்துவரும் இவ்வுலகில் இப்படித்தான் ஆயிடும் எல்லாம் என முன்பே விதிக்கப்பட்ட விதியின் தன்மையை யாவரே தனது வலியினால் அல்லது புத்தியினால் வென்றுள்ளோர்? 46

இறுதியாகிய பருவம்வந் தணுகிய திவனுக்
குறிதி யாம்பல கூறினென் பயனென உன்னா
அறிவன் நீசில அறிந்தனன் போலநிற் கறைந்தேன்
சிறுவன் ஆதலிற் பொறுத்தியென் றாற்றினன் சீற்றம்.

என் தந்தையாகிய இவனுக்கு முடிவான காலம்வந்து அணுகியது. ஆதலின் இன்னமும் நான் முன்னின்று ஏற்கும் உறுதி மொழிகள் பலவற்றைக் கூறினும் இவன் கேட்கான். கேளாத ஒருவனுக்கு நாம் சொல்லியும் பயன் ஆவதென்ன? என இரணியன் நினைந்து தந்தை சூரபன்மனை நோக்கி அறிவில் சிறந்த பெரியோய் உனக்கு நானும் சில அறிந்தேன்போல் பேசிவிட்டேன் அது தவறாகும். சிறுவன் ஆதலினால் நான் சொல்லியவற்றை பொறுத்திடுவாய் என ஆறுதல் வார்த்தை பலசொல்லி தந்தையின் கோபத்தை தணியச்செய்தான், 47

வெஞ்சி னந்தனை ஆற்றியித் தாதைதான் விரைவில்
துஞ்சு முன்னர்யான் இறப்பது நன்றெனத் துணியா
எஞ்ச லில்லவன் தாளிணை வணங்கிநீ யிசைத்த
வஞ்சி னந்தனை முடிப்பன்யான் என்றனன் மைந்தன்.

சூரபன்மனின் கொடிய கோபத்தைத் தணிவித்து விட்டபின் மைந்தன் இரணியன் இனி எனதுதந்தை விரைவில் இறப்பான்; அதற்குமுன்பு நான் இறத்தலே நலமாகும் என மனதில் எண்ணித் துணிந்து முடிவிலாதவரமுடைய சூரபன்மன் திருவடிகளில் தாழ்ந்து வணங்கி ஐயனே நீமுன்னர் சொல்லிய கொடிய சினத்தை நான் போய்முடித்து வருவேன் விடைதாரும் எனக் கூறினான். 48

அனைய வேலையில் ஐயநீ மாற்றலர்க் கஞ்சி
வினையம் யாவுமுன் னுரைத்தனை அவர்கள்பால் வீரம்
புனைய உன்னிய தென்கொலோ என்றலும் பொன்னேன்
உனது மைந்தன்யான் அஞ்சுவ னேவென உரைத்தான்.

அவ்வாருக இரணியன் கூறிய நேரத்தில் சூரபன்மன் மகனைப் பார்த்து ஐயனே! நீ முன்னர் பகைவர்க்கு பெரிதும் பயந்தவனைப் போன்று பல காரியங்களை என்னைச் செய்யுமாறு பேசினுய். இப்போது அவர்களை எல்லாம் வென்றிடுவேன் என வீரம் கொள்கின்ருய் இதன் தன்மை எப்படி? எனக்கேட்டலும்; பொன்நிறமான இரணியன் சொல்வான்: நான் உனது மைந்தன்! ஆதலால் நான் அச்சமும் கொள்வேனே என்ருன். 49

தாதை அன்னதோர் வேலையின் மைந்தனைத் தழீஇக்கொண்
டூது நன்றுநன் றுன்பெருந் தானையோ டெழுந்து
போதி யென்றலும் விடைகொடு புறந்தனில் போந்து
மாதி ரம்புகழ் கின்றதன் னுறையுளில் வந்தான்.

தந்தையான சூரபன்மன் அவ்வாருன நேரத்தில் மகனைத் தழுவிக்கொண்டு; மகனே! இது நன்று நன்று. உன்பெரும் சேனையோடு நீ எழுந்து போரிடச்செல்வாய் என்றலும் அதுவேளை தந்தையிடம் விடைகொண்டு தனது நகரிடை இரணியன் சென்று திக்கெல்லாம் புகழ்கின்ற தனது அரண்மனையின் உட்புகுந்தான். 50

நிறங்கொள் மேருவை நிலாக்கதிர் உண்டநீர் மையைப்போல்
மறங்கொள் சூர்மகன் ஆடக மெய்யில்வச் சிரத்தின்
திறங்கொள் சாலிகை கட்டினன் தூணிபின் செறித்தான்
பிறங்கு கோதையும் புட்டிலும் கைவிரல் பெய்தான்.

பொன்நிறமான மேருமலையை பூரணசந்திரனின் நிலவுவெளிச்சம் மூடினுல்போன்று; கொடும் தன்மையுடைய சூரபன்மன் மகன் இரணியன் தனது மேனியில் வச்சிரத்தினுல்திறம்பட இயற்றிய ஓர் கவசத்தை அணிந்தான். அம்பின் கூட்டை புறமுதுகில் தூக்கினுன். மிகச்சிறந்த போர் உறைகள் புட்டில்கள் இவைகளை கைகளிலும் விரல்களிலும் போட்டுக்கொண்டான். 51

அடங்க லர்க்குவெங் கூற்றெனும் ஆடல்வில் லொன்றை
இடங்கை பற்றினன் வலங்கையில் பலபடை எடுத்தான்
தடங்கொள் மோலியில் தும்பையஞ் சிகழிகை தரித்தான்
மடங்கல் ஆயிரம் பூண்டதேர் புக்கனன் வந்தான்.

பகைவர்க்கு இது ஒரு இயமன் எனும்படியான திறங்கொண்ட வில் ஒன்றை இடக்கையில் பிடித்தான். வலக்கையில் பல படைகளை எடுத்தான். பருத்த தனது முடியின்மீது அழகிய தும்பை மாலையைச் சூடினுன். ஆயிரம் சிங்கங்கள் பூட்டிய தேர் ஒன்றில் ஏறினுன். புறப்பட்டுவந்தான். 52

ஆற்றல் மிக்குறு துணைவர்ஆ யிரவரும் அனிகம்
போற்று மன்னர்ஆ யிரவரும் போரணி புனைந்து
காற்றெ னப்படர் கவனமான் தேரிடைக் கலந்து
நாற்றி றற்படை தன்னெடு புடைதனில் நடப்ப.

வலியால் மிகுந்த தோழர்களாகும் ஆயிரம்பேரும்; சேனைகட்குத் தலைவராகும் வீரர் ஆயிரம்பேரும்; ஆகிய இவர்களும் தங்கட்குரிய போர் அணிகளை அணிந்து காற்றெனும்படி வேகமாகச் சென்றிடும் பெரிய குதிரைகள் பூட்டியதேர் மேலாகி நான்கு வகையான தேர், குதிரை, யானை, காலாள் என்னும் படையுடன் கூடி: இரணியன் பால் பக்கராகச் சூழ்ந்து வரவும்; 53

நூறெ டேயெழு நூறுவெள் ளந்நெறி லுடைத்தேர்
சீறும் யானையும் அத்தொகை அவுணர்தஞ் சேனை
ஆறு நூற்றிரு வெள்ளத்த பரிகளும் அனைத்தே
சூறை மாருத மாமென அவன்புடை சூழ்ந்த.

இவர்களது படைகளில் எண்ணூறு வெள்ளம் கடினமான தேரும்; சீறுகின்ற யானைகளும் எண்ணூறு வெள்ளம்; அசுரராகும் காலாட்படைகளும் ஆயிரத்திருநூறு வெள்ளம்; குதிரைப்படையும அப்படியே ஆயிரத்திருநூறு வெள்ளம்; இச்சேனை யாவும் சூறையான பெருங்காற்றைப் போன்ற வேகமுடன் இரணியன் புடையில் சூழ்ந்தன. 54

துடிக றங்கின கறங்கின பேரிதுந் துபிப்பேர்
இடிக றங்கின வலம்புரி கறங்கின எடுக்கும்
கொடிக றங்கின தானைகள் கறங்கின குனித்துக்
கடிக றங்கின கறங்கின கழுகொடு காகம்.

உடுக்கைகள் ஒலித்தன; பேரிகை துந்துபிகள் பேரிடிபோல் முழங்கின; வலம் புரிச்சங்குகள் ஊதின; எடுத்துப் பிடிக்கும் கொடிகள் படபடத்தன; சேனைகள் இரைந்தன; குனித்துக் கூத்தாடிய பேய்கள் கூச்சலிட்டன; காகமும் கழுகும் வட்ட மிட்டு பறந்து கத்தின. 55

வசலை மென்கொடி வாடிய தன்னநுண் மருங்கில்
கிசலை யம்புரை சீறடிக் கிஞ்சுகச் செவ்வாய்ப்
பசலை சேர்முலை மங்கையர் விழிக்கணை பாய
வசலை மங்கைதன் மெய்த்தனு வளைந்திட அகன்றான்.

வசலை என்னும் மெல்லிய கொடி வாடிய தன்மையைப்போன்ற நுண்ணிய இடை யும் மாந்தளிர் போலும் அழகிய மிருதுவான பாதமும் செம்முருக்கம் பூப்போன்ற சிவந்தவாயும் பசலை சேர்ந்த கொங்கையும் உடைய பெண்கள் இரணியன்மேல் மோகமாகி கண்கள் என்னும கணைகளை வீசிட; பூமிதேவியும் தனது அழிவிலாத உடலம் நெளியும்படி சென்றான் இரணியன். 56

அறந்த லைப்படும் இரணியன் அனிகநால் வகையும்
புறந்த லைப்படத் துயரமும் தலைப்படப் போந்து
மறந்த லைப்படு பூதர்கள் ஆர்ப்பொலி வழங்கும்
பறந்த லைக்களம் புக்கனன் அமரர்மெய் பனிப்ப.

தருமத்தில் ஈடுபாடுடைய இரணியாசுரன் நால்வகைச் சேனையும் நகரத்தைவிட்டு வெளியில் வந்திட துயரமும தன்னுள் பெருகிடவந்து; கொடுமையின் ஆற்றலில் ஈடுபட்ட பூதங்கள் கூச்சலிடும் ஓசை விளங்கிய போர்க்களத்தில் புகுந்தான். அவன் வரவினைக்கண்ட கடவுளர் யாவரும் மேனிநடுங்கிட. 57

விண்ணு ளோர்களும் பிறருமவ் வியனகர் நோக்கித்
துண்ணெ னத்துளங் குறுவதுங் கண்டனன் தொன்னாள்
மண்ணி னுள்ளபா ரிடமெலாம் வல்லைவந் தழித்து
நண்ணு கின்றதுங் கண்டனன் நன்றென நக்கான்.

தேவர்களும் ஏனையோரும் தனது வருகை கொண்ட பெருநகரத்தை நோக்கி நடுங்கிடுவதும் கண்டான். அத்துடன் முன்னாள் பூமியில் உள்ள பூதங்கள் விரை வாக வந்து அவ்விடத்து சேர்ந்து நகரத்தை அழித்து நிற்பதையும் கண்டான். ஓகோ! இவையாவும் நன்று எனச் சிரித்தான். 58

தனது மாநகர் அழிந்தது கண்டனன் தணியா
முனிவு கொண்டனன் வெய்துயிர்த் தனன்உடல் முற்றும்
நனிவி யர்ப்புள தாயினன் மருங்குற நணுகும்
அனிக வேந்தரைத் துணைவரை நோக்கியீ தறைவான்.

தனது பெருநகரம் அழிந்ததும் கண்டனன். தணித்திட முடியாத கோபம் கொண்டனன். கோபத்தால் பெருமூச்சுக் கொண்டனன். உடல் முற்றும் மிக வியர்வை கொண்டனன். இத்தன்மையால் இரணியன் கோபமடைந்து தனது பக்கருள்ள சேனைத்தலைவர்களை நோக்கி இதனைச் சொல்வான். 59

ஆயி ரம்வெள்ளம் ஓரொரு திசையினில் ஆக்கி
நீயிர் யாவரும் நால்வகைத் தாகியே நீங்கி
மாயி ருந்திறற் சாரதன் வீரரை வளைந்து
போயெ திர்த்துவெஞ் சமர்புரி வீரெனப் புகன்றான்.

சேனைத்தலைவர்களே! நீங்கள் ஆயிரம் வெள்ளம் சேனைகளை ஒவ்வொருதிசைக்கும் அணியாக நிரைத்து நீங்களும் நான்கு திக்குக்கும் நான்கு வகையாகப் பிரிந்து மிக மேம்பாடுடைய பூத வீரரைவளைந்துபோய் எதிர்த்து கொடிய போரினைப் புரிவீராக எனக் கூறினான். 60

அக்க ணந்தனில் துணைவரும் அனிகமன் னவருந்
தக்க தேயென இரணியன் மொழிதலைத் தாங்கித்
திக்கி லாயிரம் வெள்ளமாச் சேனையைக் கொண்டு
தொக்க பாரிட வெள்ளமேற் போயினர் சூழ.

சொல்லிய அக்கணம் தன்னிலே தோழர்களும் சேனாதிபதிகளும் இதுதக்கது எனப் புறப்பட்டு இரணியனின் வார்த்தையை தலைமேற்கொண்டு திக்கு ஒவ்வொன்றிற்கும் ஆயிரம்வெள்ளம் சேனையாக வகுத்துக்கொண்டு சென்று; தொகுதியாய் நின்ற பூத வெள்ளங்கள்பால் சூழ்ந்து வளைந்து போரிட்டார்கள். 61

தானை மன்னரும் துணைவரும் திசைதோறும் தழுவிப்
போன காலையில் ஆடகன் குடபுலம் புகுதுஞ்
சேனை முன்கொடு சென்றனன் இன்னதோர் செய்கை
மான வேற்படைக் காவலன் கண்டனன் மன்னோ.

சேனாதிபதிகளும் தோழர்களும் திக்குகள் ஒவ்வொன்றிற்குமாக அணிவகுத்து போன நேரத்தில்; இரணியாசுரன் மேற்குப்புறம் போகின்ற சேனையைமுன்கொண்டு போரிட வந்தனன். அவ்வாறய அவன்செயலை கூரிய வேற்படையைக்கொண்ட வீரவாகுதேவர் கண்டுகொண்டார். 62

வீர மொய்ம்பினன் அதுகண்டு வெஞ்சமர்க் குறுவான்
சூரன் மைந்தருள் ஒருவனோ சுற்றமா யினனோ
ஆரி வன்கொலென் றையுறு காலையின் அயலே
நார தன்எனும் முனிவரன் வந்திவை நவில்வான்.

வீரத்தோளுடைய வீரவாகுதேவர் அதனைக்கண்டு கொடிய போருக்கு வருபவன் சூரபன்மன் மைந்தருள் ஒருவனோ அல்லது அவன் மந்திரிகள் சேனைத்தலைவர்களில் ஒருவனோ ஆராக இவன் இருப்பான் என்று ஐயம் கொள்கின்ற காலையில் அவர் அயலாக நாரதன் என்னும் முனிவன் வந்துதோன்றி இவ்வார்த்தைகளைச் சொல்வான்; 63

இரணி யன்எனும் மைந்தனைச் சூரன்இங் கேவ
அருணன் என்னவந் தடைந்தனன் னம்படை யலைப்ப
வருணன் இந்திரன் மந்திரி மறலிமா திரத்தின்
முரணு றும்படை நான்கையும் முன்னுறச் செலுத்தி.

இரணியன் என்னும் மகனை சூரபன்பன் இங்குபோரிட ஏவுதலும் இன்று இரவில் அவன் சூரியதேவனைப்போன்று நமது படைகளை அலைத்திட இங்கு வந்துள்ளான். மேற்கிலும் கிழக்கிலும் வடக்கிலும் தெற்கிலுமான நான்கு திக்குகளிலும் தனது படையைப்போரிட அணிவகுத்து முன்னே செலுத்தியபின் பின்னால்வந்துள்ளான். 64

மாயை லல்லவன் படைபல பரித்தவன் வஞ்ச
மாய சூழ்ச்சிகள் பற்பல தெரிந்தவன் அவனை
நீய லாதுவெல் கின்றவர் இல்லையால் நினக்கிங்
கேய தன்மையின் அமர்தனைப் புரிதியா லென்றான்.

இந்த இரணியன் மாயையில் வல்லவன். பலவிதமான படைகளைக் கையில் கொண்டவன். வஞ்சனையின் பாற்பட்ட மாய வித்தைகளையும் போர்களையும் தெரிந்தவன். ஆதலால் வீரவாகுதேவனே நீயல்லாது வேறு எவரும் இந்த இரணியனை வெல்கின்றவர் இல்லையாகும் ஆதலினால் உனக்கு இங்கு பொருந்திய வகையால் போரினை அவனுடன் புரிந்திடுவாய் என்றான் நாரதன். 65

என்று கூறியே நாரதன் விண்மிசை ஏக
நன்று நன்றென அன்னதை வினவியே நகைத்துத்
துன்று பாரிடத் தலைவரைச் சுற்றமா யுளரை
வென்றி மொய்ம்புடை ஆண்டகை நோக்கியே விளம்பும்.

என்று கூறிவிட்டு நாரதமுனிவன் வானமீது சென்றிட; வீரவாகுதேவர் நன்று நன்று என அவ்வரலாற்றைக் கேட்டு சிரித்து; தன்னுடன் பரந்து நின்ற பூத சேனாதிபதிகளை மற்றைய சோதரராகிய வீரரை; வெற்றிதரும் தோளினையோடு ஆண்டகைமையுடைய வீரவாகுதேவர் நோக்கி; இதனைச் சொல்கின்றார். 66

ஏற்ற தானையை நமையெலாம் சூழ்ந்திட ஏவி
மாற்ற லன்மகன் குறுகுவான் நீவிரும் வல்லே
நாற்றி சைக்கணும் சாரதப் படையொடு நடந்து
வீற்று வீற்றுநின் றமர்புரி வீரென விளம்பி.

தனக்கென ஏற்றதாகும் பெரும் அசுரச்சேனையை நம்மை யெல்லாம் சென்று சுற்றி வளைந்திடும்படி ஏவிவிட்டு; எமது பகைவன் சூரபன்மனின் மகன் வந்து கொள்ளுவான். ஆதலின் நீவிரும் விரைவாக பூதப்படைகளுடன் நான்கு திக்கிலும் சென்று வேறு வேறு வருகின்ற அசுரரை எதிர்த்து முறைமுறை போரிடுங்கள் எனக் கூறிவிட்டு. 67

வீரர் எண்மரை இலக்கரை வியன்கணத் தவரைப்
பாரி டங்களை நால்வகைப் படும்வகை பகுத்தே
ஈரி ரண்டுமா திரத்தினும் சென்றிட ஏவிச்
சூரன் மாமகன் வருதிசைப் படர்ந்தனன் தோன்றல்.

எட்டுவீரரை; இலக்கம் வீரரை பூதசேனாதிபதிகளை; பூதகணங்களை நால்வகையாக பிரித்து நான்கு திக்கிலும் அசுரரை எதிர்த்து போரிடச் செல்ல ஏவிவிட்டு சூரபன்மனின் பெருமகன் இரணியன் வருகின்ற திசையை நோக்கியவாறு நின்றார் எல்லார்க்கும் தலைவரான வீரவாகுதேவர். 68

காலை யாங்கதின் அவுணமாப் பெரும்படை கடிதின்
நாலு மாதிரந் தன்னினும் நரலைசூழ்ந்தென்ன
ஓல மோடுவந் தணுகலும் உருத்துவெம் பூத
சாலம் யாவையும் ஏற்றன சமரினைப் புரிய.

அவ்வாறான காலையில் அசுரராகும் பெரும்படை எழுந்து நாலு பெருந்திக்கிலும் விரைவுடன் சமுத்திரம் வந்து சூழ்ந்ததற்கு ஒப்ப பெரும் ஓலத்தினுடன் வந்து பூதங்களை அணுகலும் அதுகண்ட பூதங்கள் யாவும் வேகத்துடன் சினம் கொண்டு வந்த அசுரருடன் போர்புரிந்திட ஏற்றனர். 69

மற்ற வேலையில் அவுணர்கள் மழுப்படை நாஞ்சில்
கற்றை யஞ்சுடர்ப் பரிதிவாள் சிலையுமிழ் கணைகள்
கொற்ற மிக்குறு தோமரந் தண்டெழுக் குலிசம்
ஒற்றை முத்தலை வேல்முதற் படையெலாம் உய்த்தார்.

மற்று இந்த நேரத்தில் அசுரர்கள் பூதங்கள் மேலாக மழுப்படை நாஞ்சில் கற்றைகற்றையாகும் ஒளியுடைய சக்கரம்; வார்பூட்டிய வில்லுகள் பொழியும் அம்புகள் கொற்றம் மிகுந்த தோமரம் தண்டாயுதம் எழுவாயுதம் குலிசம் ஒற்றை சுடருடைய வேல் முச்சுடருடைய வேல் முதலான கொடிய படைகளைச் செலுத்தினார்கள். 70

தோடு சிந்திய தேனரு மராமரத் தொகையின்
காடு சிந்தினர் கதைகளுஞ் சிந்தினர் கணிச்சி
நீடு சிந்துரப் பருவரை சிந்தினர் நேமி
மாடு சிந்தினர் சிந்தினர் பூதரில் வலியோர்.

அசுரர் படைவீசக்கண்ட பூதர்களில் பலசாலிகளான பலர் இதழ்களால் சிந்தப் படும் தேன்சொரிதலைவிடாத பூக்கள் நிரம்பிய மராமரங்களின் தொகைகொண்ட பல காடுகளை தூக்கி எறிந்தார்கள். தண்டாயுதத்தை சுழற்றி எறிந்தார்கள். கணிச்சிகளை எறிந்தார்கள். நீண்ட பெரிய யானைகள் சஞ்சரிக்கும் பருத்த மலைகளை எறிந்தார்கள். பெரிய சக்கரங்களையும் இடையில் எறிந்தார்கள். 71

தலையி ழந்தனர் கரங்களும் இழந்தனர் தாளின்
நிலையி ழந்தனர் சாரதர் அவுணரும் நெடுங்கை
மலையி ழந்தனர் தேர்பரி இழந்தனர் மறவெங்
கொலையி ழந்தனர் மடிந்தனர் குருதியுட் குளித்தார்.

இவ்வாறு போரிடும் பொழுது பூதங்கள் தலைகளை இழந்தார்கள்; கைகளை இழந்தார்கள்; கால்களின் அடி இழந்தார்கள்; அசுரர்களோ நீண்ட துதிக்கையுடைய யானைகளை இழந்தனர்; தேர்களை குதிரைகளை இழந்தனர்; தாம்செய்திடும் கொடிய கொலைத்தொழில் இழந்தார்கள்; இவ்விதமாக அழிந்திறந்து இரத்தத்தில் குளித்தார்கள். 72

வசையில் பூதரும் அவுணரும் இவ்வகை மயங்கித்
திசைதொ றும்பொரு கின்றுழித் தனித்தனி சேர்ந்து
விசைய மொய்ம்பினுன் விடுத்திடு வீரரும் விறல்சேர்
அசுர வேந்தரும் வெஞ்சமர் விளைந்தனர் அன்றே.

வசைபெறுத பூதங்களும் அசுரரும் இவ்வண்ணமாக படைவீசிக் கலந்து நான்கு திக்குகள்தோறும் போரிடும் நேரத்தில்; தனித்தனியாக எதிர்த்து வீரவாகுதேவரால் நான்கு திக்கிலும் சென்று போர்புரியும்படி விடப்பட்ட வீரர்களும் இரணியனுல் விடப்பட்ட அசுரமன்னவர்களும் கொடும்போர் புரிந்தனர். 73

அனைய எல்லையின் வீரவா குப்பெயர் அறிஞன்
கனகன் முன்வரும் சேனைமாப் பெருங்கடல் கண்டு
முனிவு கொண்டுதன் பாணியின் மூரிவெஞ் சிலையைக்
குனிவு செய்தனன் அறத்தனிக் கடவுளும் குனிப்ப.

அவ்வாருகிய நேரத்தில் வீரவாகுதேவன் என்னும் பெயருடைய அறிவிற் பெரியவர்; இரணியாசுரன் முன்பாகவருகின்ற பெருங்கடல்போன்ற சேனைகளைக்கண்டு மனதில் முனிவுகொண்டு தமதுகையில் உள்ள வரியுடைய முதிய வில்லைவளைத்துக் கொண்டார்: அதுகண்டு எமது பகையான மறக்கொடியோர் இனி இறப்பார் என அறக்கடவுளான தருமதேவதையும் கூத்தாட. 74

மலைவ ளைந்திடு தன்மைபோல் வானுற நிமிர்ந்த
சிலைவ ளைத்தனன் நாணெலி யெடுத்தனன் தெழித்தான்
அலைவ ளைந்திடு கடலெலாம் நடுங்கிய அனந்தன்
தலைவ ளைந்தனன் எண்டிசை நாகமும் சலித்த.

ஓர் மலையை வளைக்கு மாறு போல வீரவாகுதேவர் வானுற ஓங்கிநின்ற தனது வில்லைவளைத்தார்; அதனில் நாணோசையைச் செய்தார்; கர்ச்சித்தார்; அதனுல் அலைகள் நிறைந்த கடல்கள் எல்லாம் நடுங்கின; ஆதிசேடனுன பாம்பும் அஞ்சி தன் தலைவளைத்தான். எட்டுத்திக்குயானைகளும் சலித்தன. 75

காலை யங்கதின் வீரமொய்ம் புடையதோர் காளை
கோலொ ராயிரப் பத்தினைக் குனிசிலைக் கொளுவி
மேல தாகிய கானிடைப் பொழிதரும் மேக
சால மாமெனப் பொழிந்தனன் அவுணர்தா னையின்மேல்.

அவ்வாறாகிய காலையில் வீரத்தோளினையுடைய விடலைப் பருவமுடைய வீரவாகு தேவர் பதினாயிரம் அம்புகளை வளைத்த வில்லிலேகோத்து; மேலாக வளர்ந்துயர்ந்த காட்டினிடத்தே மழைபொழிகின்ற மேகங்களின் தன்மைபோன்று அசுரச் சேனை மேல் அவ்வம்புகளைச் சொரிந்தார். 76

பிடிகு றைந்தன களிற்றினம் குறைந்தன பிடிக்கும்
கொடிகு றைந்தன கொய்யுளைப் புரவிதேர் குறைந்த
அடிகு றைந்தன தலைகளும் குறைந்தன அம்பொன்
தொடிகு றைந்தன குறைந்தன அவுணர்தம் தோள்கள்.

அவ்வாறு சென்ற அம்புகள் படுதலும் பெண்யானைகள் இறந்தன ஆண்யானை கள் கூட்டம் இறந்தன; கையில்பிடிக்கும் கொடிகள் முறிந்தன; பிடரிமயிர் உடைய குதிரைகள் தேர்கள் அழிந்து கெட்டன; அசுரர்களது கால்கள் அறுந்தன; தலை களும் அறுந்தன; அழகிய பொன்னுலான தோள் வளையங்கள் அறுந்தன; அவைகளு டன் அசுரரின் தோள்களும் அறுந்தன. 77

எறித லுற்றிடு சூறையால் பல்கவ டிற்று
முறித லுற்றுவீழ் பொதும்பர்போல் மொய்ப்பன்வா ளியினால்
செறித லுற்றதம் வடிவெலாம் சிதைந்துவே றாகி
மறித லுற்றன நால்வகைப் படைகளும் மயங்கி.

வீசுகின்ற சூறாவளிக் காற்றினால் பெரியதோர் சோலையில் உள்ள மரங்களின் பலகொம்புகளும் முறிதல் உற்று மளமளவென வீழ்கின்றது போன்று; வீரவாகுதேவர் விடுத்த இந்த அம்புகள் வேகமாகவந்து படுதலால் அசுரர்களின் நான்குவகையான படைகளும் வடிவம் முற்றிலும் சிதைந்து வேறாகி மடிந்து வீழ்வுற்றன. 78

வேறு

ஆரியன் விட்ட அயிற்கணை பாய
ஊரி மதக்கரி முற்றுயர் யாக்கை
சோரி உகுப்பன தொல்பக லின்கண்
மாருதம் உய்த்திடு வன்னியை யொப்ப.

அழகுடைய மேனிகொண்ட வீரவாகுதேவர் விட்டவேல்போன்ற அம்புகள்பட் டிட பெருகும் மதமுடைய யானைகள் முழுதும் உயர்ந்த மேனியினின்றும் இரத் தம் சொரிகின்றன; எதுபோலெனின் மத்தியான வேளையில்; காற்றுத் தூண்ட சுரீரென எரிகின்ற நெருப்பைப் போன்றது. 79

விறல்கெழு மொய்ம்பன் விடுத்திடு கின்ற
பிறைமுக வாளி பெருங்கரி யின்கை
அறைபுரி கின்றஅ ராத்தொகை தன்னைக்
குறைமதி சென்று குறைப்பன போலாம்.

வலிகொண்ட தோளுடைய வீரவாகுதேவர் விடுத்திடுகின்ற பிறைபோலும் நுனி யுடைய அம்புகள் பெரிய யானைகளின் துதிக்கையினை அறுக்கின்றது எப்படி இருப்ப தெனில் பெரிய பாம்பின் தொகைகளை சென்று அறுக்கின்ற இளம்பிறை போன்று விளங்குவன. 80

வித்தக வீரன் விடுங்கணை வேழ
மத்தக முற்றிட மற்றவை போழ்ந்தே
முத்தம் உகுப்ப முகந்திடு கும்பம்
உய்த்திடும் நல்லமு தச்சுதை யொக்கும்.

வித்தகமுடைய வீரவாகுதேவர் விடுகின்ற அம்புகள் யாவும் யானைகளின் எருத்தத்தில்பட்டு அதனால் எருத்தம்பிளந்து உள்ளிருந்த முத்துக்கள் சொரிகின்றன எப்படி எனில் அமுதம் வைத்திருக்கின்ற குடங்களில் நின்றும் வெளிவரும் வெண்மையான அமுதம் சொட்டுவது போன்று விளங்கும். 81

கரம்பட ருங்கவி கைத்தொகை தேரின்
உரம்படு கால்கள் உலம்புரை தோளான்
சரம்பட விற்ற தலைத்தலை உற்ற
வரம்பின் மதிக்குறை மல்கிய வென்ன.

கையில் பிடித்துவரும் குடைகளின் தொகையும்; தேரினது உரமான சில்லுகளும்; மாலையணிந்த தோளுடைய வீரவாகுதேவரால் விடப்படும் அம்புகள் பட்டிடப் பிரிந்து வீழ்ந்து வெவ்வேறாக கிடப்பன அளவிறந்த இளம்பிறைகள் சிதறுண்டு கிடப்பனபோலும். 82

மேக்குயர் மொய்ம்பன் விடுங்கணை யால்பாய்
மாக்கள் துணிந்து மறிந்து கிடந்த
தேக்கிய தெண்கட லிற்றிரை முற்றும்
தாக்கிய சூறை தனக்கழிந் தென்ன.

மிக உயர்ந்த தோளினை உடைய வீரவாகுதேவர் விடுகின்ற அம்புகளால் பாய்கின்ற குதிரைகள் மாண்டு கிடப்பன; மோதிஅலைக்கும் தெள்ளிய கடல்மீது வீசிய சூறைவளிக்காற்றால் அலைகள் சிதறுண்டு அழிந்திடுதலைப் போன்று காட்சிபெற்றன. 83

பெருந்தகை விட்ட பிறைதலை வாளி
திருந்தலர் தோலுறு செங்கை துணிப்ப
வருந்திட மாமதி வெளவும்அ ராவைத்
துரந்திடு கின்றதன் கற்றம தென்ன.

எம்பெருந்தகையான வீரவாகுதேவர் விட்ட பிறையின் தலையினைஉடைய அம்புகள் யாவும் பகைவருடைய தோல் என்னும் உறை அணிந்து சிவந்த கைகளை வெட்டுதல்; பூரண சந்திரனை வருந்தும்படி கிராண மாக கௌவுகின்ற பாம்பினை கலைத்துச்சென்று அறுக்கின்ற சந்திரனின் துணைவர்கள் போன்றது. 84

**வேறு**

தக்க தன்மையால் சிறந்துளோர் தமதுமாற் றலர்மேல்
மிக்க வெஞ்சினத் தேகல்போல் அனிகவெள் ளத்தில்
தொக்கு வந்துவந் திழிந்தசெஞ் சோரியின் வெள்ளம்
மைக்க ருங்கடல் வெள்ளத்தி னூடுபோய் மடுத்த.

தகுதியான வன்மையால் சிறந்துளோர்கள் தமது பகைவர்மேல் கொடுங்கோபத்துடன் செல்லல்போன்று அசுரச் சேனைவெள்ளங்களில் நின்றும் பெருகி திரண்டு வந்து வடிகின்ற சிவந்த இரத்தமான வெள்ளம்; இருண்ட மைபோலுங் கரிய கடலூடுசென்று அதனுடன் கலந்து கொண்டது. 85

குரைத்தி டும்பெரு ஞாளியும் குறுநரிக் குழாமும்
நிருத்த மேயின கவந்தமும் நிணனுண்டு செருக்கி
உருத்த குந்திறல் காளியும் கூளியும் ஒருசார்க்
கிருத்தி மங்களும் தலைத்தலை மயங்கின கெழுமி.

அப்போர்க்களத்தை நோக்குங்கால் குரைக்கின்ற பெரிய நாய்களும்; குறும்புடைய சிறு நரிக்கூட்டமும்; ஆடிக்கொண்டிருக்கும் உடற்குறையாய கவந்தங்களும்; பிணங்களை உண்டு செருக்கி அதனாலே உருத்துக்கொள்ளும் வலியுடைய காளிக்கூட்டமும் பேய்களும் ஓர்சார் பிணம் உண்ணும் ஒருவகைப் பூதங்களும்; ஆயவை முற்றும் தத்தமக்குரிய செயல்களால் மாருட்டம்கொண்டு நிற்பன. 86

சிலையின் வல்லவன் இல்வகை கணைமழை சிதறி
நிலைய வெல்லையின் மலைந்திடும் தானவர் நீத்தம்
உலைப டுங்கனல் முன்னுறும் இழுதென உடைந்து
குலைகு லைந்துதம் உயிருடன் யாக்கையுங் குறைந்த.

வில்லில் வல்லவரான வீரவாகுதேவர் இவ்வகை நிகழ அம்பாகும் மழைகளைச் சொரிந்து நின்ற காலையில் அங்குபோரிடுகின்ற அசுரச்சேனையாகும் கடல்கள் கொல்லன் நெருப்புலையில் வைக்கும் நெய் உருகிடல்போன்று தங்கள் வலிகெட்டு நிலைகுலைந்து தங்கள் உயிருடன் உடல்களும் அழிந்தன. 87

ஆளி யாயிரம் பூண்டதேர் மிசைவரும் அவுணர்
மீளி யாயது கண்டனன் எடுத்ததோர் வில்லின்
வாளி யாயிரம் ஒருதொடை தூண்டியே மறவெங்
கூளி யாயிர கோடியோ ரிமைப்பினில் கொன்றான்.

இந்நிலையை ஆயிரம் சிங்கங்கள் பூட்டப்பட்டு வருகின்ற தேர்மீது உள்ள மிகு வீரமுடைய இரணியன் கண்டான். தனது வில்லை எடுத்தான். வளைத்து ஒரு தொடுப்பிலே ஆயிரம் ஆயிரம் அம்பாக தொடுத்து விடுத்து கொலைமிகுந்த கொடிய பூதங்கள் ஆயிரம் கோடியை ஓர் இமைப்பொழுதில் கொன்றான். 88

கொன்ற காலையில் பூதவெம் படைகளும் குலைந்து
சென்ற மாதிரம் தெரிந்தில தழல்விடம் தெறக்கண்
டன்று போகிய தேவரே ஆயினர் அதனை
நின்ற தானையம் தலைவரில் கண்டனன் நீலன்.

இரணியன் இப்படிக் கொன்ற நேரத்து பூதங்களாய கொடிய படைகளும் சீர் குலைந்து பயத்தால் ஓடுகின்றது எத்திசை என்பது தெரியாதபடி ஓடின. அவைகள் அன்று பாற்கடலில் எழுந்த நெருப்பாகும் நஞ்சு தம்மை கொல்லவருதலைக்கண்டு அச்சத்தால் ஓடிய தேவர்கள்போல ஆயினர்கள். அச்செயலை அங்கு நின்ற பூத சேனைத் தலைவர்களில் நீலன் என்பான் கண்டான். 89

கண்ட நீலனும் இறுதிநாள் அழலெனக் கனன்று
திண்டி றற்கெழு மன்னவன் மதலைமுன் சென்றே
அண்ட மும்தலை பனித்திட உருமென ஆர்த்தான்
உண்டு போரினி என்றனர் அமரரா யுள்ளோர்.

அதனைக்கண்ணுற்ற நீலன் உலக முடிவுநாளின் நெருப்பு எனும்படி கொதித்து; திண்மை சான்ற சூரபன்மன்மகன் இரணியன் முன்சென்று அண்டங்களும் தலைநடுங்கிட எழும் இடியேறு போன்று கர்ச்சித்தனன். அதனைக்கேட்ட தேவர்கள்யாவரும் ஓகோ கண்ணுக்கு குளிர்ச்சியான போர் இனிஒன்று உண்டு என்றனர். 90

காலை யன்னதில் அவுணர்தம் இறைமகன் கனன்று
வேல தொன்றினை ஆகமூழ் குற்றிட விடுப்ப
நீலன் வன்மைபோய் நின்றிலன் சென்றனன் நெடிய
சால மொன்றுகொண் டவன்தடந் தேரினைத் தடிந்தான்.

அவ்வாறான காலையில் அதனை சூரபன்மன்மகன் இரணியாசுரன் கோபமுற்று; வேல் ஒன்றினை எடுத்து நீலனின் மேனியில் பட்டிடும்படியாக விடுத்தலும், அவ்வேல் வந்து நீலன்மேல் பட்டாலும் தனது வலிமையை நீங்காதவனாய் அங்கு நின்றிடாது சென்று நெடிய மரம் ஒன்றினைப் பிடுங்கி எடுத்துக்கொண்டு அம்மரத்தால் இரணியன் தேரினை அடித்து நொறுக்கினான். 91

வையம் அங்கழி வெய்தலும் அவுணர்கோன் மற்றோர்
செய்ய தேரிடை வல்லையில் தாவிநாண் செறித்துக்
கையில் வாங்கிய சராசனத் திடையுறக் கடைநாட்
பொய்யின் மாமுகி லாமெனச் சுடுசரம் பொழிந்தான்.

தேரானது நொருங்கி அழிவெய்தலும்; இரணியாசுரன் வேறுஒரு செப்பமான தேரிடத்து விரைவாகப் பாய்ந்து வில்லைவளைத்து நாணினை ஏற்றிவைத்திருந்த தனது வில்லிலே உலகமுடிவுகாலத்து பொய்த்தலின்றி ஓயாது மழைபொழியும் பெருமேகம் போல் தானும் சோர்வின்றி அக்கினி அம்புகளை நீலன்மேல் சொரிந்தான். 92

பொழிந்த வார்கணை முழுவதும் அவனுரம் புகலும்
அழிந்தி லன்சிறி தஞ்சிலன் குலகிரி அன்றி
ஒழிந்த குன்றெலாம் பறித்தனன் வீசியே உடலத்
திழிந்த சோரிநீர் சொரிதர நின்றனன் இமையான்.

இரணியன் பொழிந்த வடித்த அக்கினிக் கணைகள் முழுவதும் நீலன் நெஞ்சிலே ஊடுருவிப்போதலும்! நீலன் அழியவில்லை: சிறிதேனும் அஞ்சவில்லை; குலமலை ஒன்றை விட மற்றைய எல்லாமலைகளையும் பறித்துப் பறித்து வீசிக்கொண்டு தனது உடலால் வடிகின்ற இரத்தம் சொரிந்திட நீலன் நின்றான். 93

நிருப னாகிய ஆடகன் தன்னெதிர் நீலன்
மரபின் நூக்கிய வரையெலாஞ் சரங்களால் மாற்ற
விரைவி னோடுபோய் அவன்தடந் தேரினை வெகுளா
ஒருகை யாலெடுத் தெறிந்தனன் அமரரும் உலைய.

அரசனான இரணியன் முன்பாக; நீலன் முறையாகச் செலுத்திய மலைகள் யாவையும் இரணியன் அம்பினைவிடுத்து அழித்துவித்தலும்; நீலன் கோபம் மிகுந்து விரைவினோடு சென்று இரணியனின் பெருந் தேரினை ஒருகையால் தூக்கி வானில் எறிந்தான், அங்கு நின்று போரினைக் கண்ணுற்ற தேவர்களும் மருண்டோடிஉலைய. 94

ஆற்ற லந்தடந் தேரினை வீசிட அதுவுங்
காற்று லாய்நிமிர் விண்ணுறப் போயது காளை
மாற்றொர் வையமேற் பாய்ந்திட உன்னினன் வரலும்
ஏற்றெ மூந்தெதிர் புக்கனன் நீலனும் இகலோன்.

மிகுவலிமையுடைய அழகிய பெருந்தேரை தூக்கி எறிதலும் அதுவும் காற்று உலாவி விளங்கிடும் வானில் மேலுற போயது; அதுவேளை இரணியன் இன்னுமொரு தேர்மேல் பாய்வேன் என எண்ணிவரலும் அப்போதும் நீலன் என்னும் வலியுடையவன் இரணியனை போகவிடாதபடி எதிர்த்து நேர்போயினன். 95

நிற்றி நிற்றிநீ என்றுகொண் டேகியே நீலன்
எற்றி னான்அவன் உரத்திடை அவுணனும் இவனைப்
பற்றி வீசினன் பூதனும் மீண்டுதன் பதத்தாற்
செற்ற மோடுதைத் துருட்டிவான் உருமெனத் தெழித்தான்.

இரணியனை நீ நில்லடா நில்லடா எனக் கூறிக்கொண்டு சென்ற நீலன் இரணியனது நெஞ்சில் அடித்தான். இரணியனும் நீலனைப் பிடித்துத் தூக்கி வீசினான்: நீலனும் மீண்டும் தன்பாதத்தால் இரணியன்மீது வெகுகோபமுடன் உதைத்து அவனை உருட்டித்தள்ளி வானில் வரும் இடியின் முழக்கம்போல் கர்ச்சித்தான். 96

நெறித்த பங்கிசேர் நீலனங் குதைத்திட நிருதர்
முறிந்து நீங்கிய களத்திடை வழுக்கிவீழ் முகில்போல்
மறிந்து வீழ்தரும் அவுணன்மேற் பாய்ந்தனன் மகவான்
எறிந்த வச்சிரப் பெரும்படை இதுகொலென் றிசைப்ப.

நெறியாகி நிமிர்ந்த சடையுடைய நீலன் அங்கு உதைத்த நேரத்தில் இரணியன்; அசுரர் உடலம் அழிந்து பின்னிட்டோடிய போர்க்களத்தினிடை; வானில் நின்றும் வழுக்கி வீழ்முகில் வீழ்தலும்; வீழ்ந்த இரணியனுடைய நெஞ்சின்மீது பாய்ந்து ஏறினான் நீலன். அவன் பாய்ந்தமை இதுதானோ இந்திரனுடைய வச்சிரப் படையாகும் எனச் சொல்லும்படி இருந்தது. 97

வீழ்ந்த காளையைத் தன்பெருந் தாள்களால் மிதிப்பக்
கீழ்ந்து போயது மாநிலம் அவன்முடி கிழிந்த
போழ்ந்த தாகமும் வாய்வழி குருதிநீர் பொழிய
ஆழ்ந்து வெந்துயர் உழந்தனன் செய்வதொன் றறியான்.

வீழ்ந்த இரணியனை நீலன் அவன்மேல் பாய்ந்து தனது காலாலே உளக்குதலும்; அதனால் இப்பெரியபூமியே கிழிந்துபோயது. இரணியன் முடிகிழிந்தது. இரணியனது உடம்புபிளந்தது. வாய்வழியாக இரத்தம் பொழிந்திட இரணியன் அதில் மூழ்கிக் கொடும் துயரை அனுபவித்தான். அந்நிலையில் இரணியன் செய்வதுயாதொன்றும் அறியான். 98

திறல ழிந்தனன் சீற்றமும் அழிந்தனன் செங்கோல்
மறலி கொள்வதற் கணியனே ஆதலும் மனதில்
இறுதி எய்திய திங்கினிச் செய்வதென் எமக்கோர்
உறுதி யானதென உன்னினன் பின்னரொன் றுணர்ந்தான்.

இரணியன் திறல் அழிந்தனன். கோபமும் அழிந்தான், செங்கோன்மை உடைய இயமன் அவனது உயிரைப் பற்றிக்கொள்வதற்கு கிட்டலாக ஆதலும்; தன்மனதில் எனக்கு முடிவு வந்தடைந்தது. இங்கு நான் என்செய்வேன், இன்னிலையில் எமக்கு ஓர் உறுதியாவதாகும் என நினைந்தான். அப்போது பின்னால் ஈதொன்றை உணர்ந் தான். 99

மாயம் ஒன்றினைப் புரிகுதும் யாமென வல்லே
ஆய மந்திரம் புகன்றனன் பூசனை அனைத்தும்
தூய சிந்தையால் நிரப்பினன் வேண்டிய துணியா
ஆய தெய்வதம் உன்னினன் அன்னதோர் எல்லை.

யாம் மாயமொன்றினை இவ்விடம் புரிவோம் என நினைந்து விரைவாக அதற் குரிய மந்திரம் ஒன்றைச் செபித்தான். செய்யவேண்டிய பூசனை அனைத்தையும் தனது தூயமனதால் இரணியன் செய்து நிரப்பி தான்வேண்டியபடி அருள்தரும் தெய்வம் ஒன்றை நினைந்தான். அவ்வாறான அந்த எல்லையில். 100

வேறு

தன்போலொரு வடிவன்னதொர் சமரின்தலை அணுகா
மின்போலொளிர் தருபல்படை விரவும்படி பரியா
என்போலெவர் பெருகின்றவ ரெனவீரம துரையா
வன்போரது புரியும்படி வலிகொண்டுமுன் வரலும்.

தன்னைப்போலொத்த வடிவம் ஒன்று அந்த போர்நிலையத்தில் வந்து மின்னலைப் போல ஒளிர்கின்ற பலபடைகளையும் கையில் தாங்கி; என்னைப்போல் யார் இங்கு போரிட வல்லார் என வீரம்பேசி பெரும் போரினைப் புரியும்படி வலிகொண்டு; இர ணியனை மிதித்த நீலன் முன்புவரலும். 101

கண்டானது வருகின்றது கடிதேயெதிர் நடவா
எண்டானவர் அமரின்தலை யிட்டேகிய தொருபொற்
றண்டானது கொண்டேஅதன் தலைமோதினன் இமையோர்
விண்டான்இவற் கழிந்தானென நீலன்தனை வியந்தார்.

நீலன் மாயஇரணியன் வருகின்றதைக் கண்டான். விரைவுடன் அதன்முன் எதிரிட்டுப்போனான். வலிமையுடைய அசுரர் போர்க்களத்து போட்டுவிட்டோடிய ஒரு பொன்னின் தண்டாயுதத்தைக் கைக்கொண்டுசென்று அம்மாயத்தின் தலையில் அடித்தனன். அதுகண்டு தேவர்களும் இவன் இறந்தான். நீலனுக்கு தோற்றான் என நீலனை வியந்தார்கள். 102

வியக்கும்பொழு தினில்அன்னவன் விடுமாயமும் விசையால்
உயக்குற்றவ ரெனவிண்மிசை உயர்கின்றது காணுத்
துயக்குற்றிடு நீலன்னது தொடர்ந்தான்கரந் திடலும்
மயக்குற்றனன் நெடிதுன்னினன் மண்மீதுறக் கண்டான்.

தேவர்கள் வியக்கின்ற நேரத்தில் இரணியன் விடுத்துள்ள மாயவடிவமும்; விசையால் தள்ளுண்டார்போல அடியை வாங்கியும் வானில்மேல் உயர்ந்தெழுதலைக் கண்டு; ஆச்சரியமடைந்த நீலன் அந்த மாயவடிவத்தை தொடர்ந்தான். அதுமறைதலும் நீலன் இதென்ன என மயங்கினுன். அதைப்பற்றி மிக யோசனைசெய்தான். இதுவேளை மறைந்த மாயஇரணியவடிவம் பூமிமீது நிற்பதைக் கண்டான். 103

காணுவல மருவானிது கரவாமென உணரான்
நாணுல்மிகு சீற்றத்தொடு நணுகுற்றனன் அதுவும்
தூணுர்தடந் தோள்கொண்டமர் தொடங்குற்றது தொடங்கி
சேணுகிய தணித்தாயது திசையெங்கணுந் திரியும்.

காணுது ஏங்கிடுவோனுன நீலன் இதைக் கண்டபோது ஓகோ! இதுஒருமாயம் என உணராது நாணினுல் மிகுகோபத்துடன் பூமியில் நின்ற மாயவடிவத்தை அணுகினுன். அம்மாயவடிவமும் தூண்போன்ற தனது தோள்கொட்டி போர் தொடங்கியது. தொடங்கிக் கொண்டு வானில் சென்றது. மண்ணில் அருகாக வந்தது. அல்லாமலும் திசைஎங்கும் திரிந்தது. 104

பாரிற்புகும் விண்ணிற்புகும் பரிதிச்சுட ரெனவே
தேரிற்புகும் மாவிற்புகும் சிலையிற்புகும் திரைமுந்
நீரிற்புகும் வடவாமுக நெருப்பிற்புகும் நீலக்
காரிற்புகும் நிரயத்திடை கடிதிற்புகும் எழுமே.

இரணியனின் மாயமானது பூமியில் வரும்; வானில்போகும்; சூரியனின் ஒளிபோன்று தேரில்போகும்; குதிரைமேல்போகும்; வில்லில் போய்ப் புகும்; திரையுடைய கடலில்போகும்! வடவாமுகாக்கினி என்னும் நெருப்பில் போகும்; நீலநிறம் பொருந்திய மேகத்தில் புகும்; நரகத்திடத்து விரைவுடன்போகும் எழுந்தும் கொள்ளும் .105

முன்னேவரும் இடத்தேவரும் முதுவெம்பிடர் தழுவிப்
பின்னேவரும் வலத்தேவரும் பெரும்போரினைப் புரியும்
பொன்னேகரு தியமங்கையர் புலனுமெனத் திரியும்
என்னேஅதன் இயல்யாவையும் யாரேபுகல் வாரே.

நீலன் என்பான் முன்னேவரும்; இடப்பக்கமாகவரும்; நீலனது முதுகையும் பிடரியையும் தழுவிக்கொண்டு பின்னுல் வரும்; வலப்பக்கமாகவரும்; பெரியபோரினைப் புரியும்; வாழ்வில் பொன்னே மேலான பொருள்எனக் கருதி; மானம்விற்றுண்ணும் பெண்கள் மனம் மாறுபடும்தன்மைபோற் திரியும். யாரே அதன் இயல்பை எல்லாம் எடுத்துச்சொல்வார். 106

மாலுந்திறம் இதுபெற்றியின் வருகின்றதோர் மாயக்
கோலந்தனி தொடராவலி குறைந்தான்திரிந் துலேந்தான்
காலுந்தளர் கின்றுனவன் கல்வித்திறம் புகழா
மேலென்செய லெனஉன்னி வெகுண்டான் அடல் வீரன்.

மயக்கம்கொள்ளும் நிலையாக இத்தன்மையால் வருகின்ற மாயக்கோலத்தை தனியே நீலன் தொடர்ந்து செல்வதாலே தனது வலியெல்லாம் குறைந்தான். அதன் பின்னுகத்திரிந்து உலேந்தான். காலும் தளர்ந்து ஒய்கின்றுன். இரணியனது போர்க் கல்வியின் திறத்தினைப் புகழ்ந்து; இனிமேலாக நான் என் செய்வது என்று நினைந்து வெகுண்டான் மிகுவன்மையாகப் போரிடவல்ல வீரன் நீலன். 107

வென்றார்புகழ் தருவீரனும் வினையந்தனை உன்னி
நின்றான்அது காலந்தனில் நிருதன்றன துருவம்
ஒன்றாயது பலவாயுல கெல்லாமொருங் குறலால்
நன்றாமிது மாயம்மென நாணத்தொடு நவின்றான்.

வெற்றியுடையார் பலரும் புகழ்கின்ற நீலன் என்னும் வீரனும் தன் மனதில் செய்யவேண்டிய கருமத்தை நினைந்துகொண்டு நின்றான். அக்காலம் தன்னில் இரணியாசுரனுடைய மாய உருவம் ஒன்றாய் நின்றது பலவுருவங்களாக மாறி உலகெல்லாம் ஒருங்கே அதன்வடிவாகிப் பரத்தலும் அது கண்ட நீலன் நன்றாயிருக்கின்றது இது; ஓகோ! இது மாயம் என மிகுநாணத்துடன் கூறினான். 108

திண்டோளுடை நீலன்னிது தெளிகின்றுழி அவனால்
புண்டோய்தரு குருதிப்புனல் புடைபோதரப் புவிமேல்
விண்டோனென மறிகின்றவன் மிடல்பெற்றெழுந் திதனைக்
கண்டோர்தடந் தேரேறினன் மாயத்தொடு கலந்தான்.

திண்மையான தோளுடைய நீலன் இதை மாயம் என தெளிவுகொள்ளுங்கால்; அந்த நீலனால் புண்படும்படியான இரத்த நீர் வெளியே பாய்ந்திட பூமிமேல் மிதிக்கப்பட்டு கிடந்து இறந்துபோவான்போல்சோர்கின்ற இரணியன்; இப்பொழுது வலியடைந்து எழுந்து; நீலன் மயங்கி நாணுவதையும் மாயத்தின் வலியையும் கண்டு ஓர் பெரும் தேரில் ஏறினனாய் தனது மாய உருவத்துடன் கலந்து கொண்டான். 109

கலந்தானொரு சிலைவாங்கினன் கனல்வாளிகள் தெரியா
உலந்தானுறழ் தருமெய்யிடை உய்ந்தானுவன் பொங்கர்
மலர்ந்தாலென உரம்புண்பட வடிவாளிகள் படநின்
றலந்தான்மன மெலிந்தான்பொரு தலுத்தான்மிகச் சலித்தான்.

மாயத்துடன் இரணியன் கலந்தான். ஒருவில்லை வளைத்தான். நெருப்பாகும் அம்புகளைத் தெரிந்து எடுத்து அவைகளை மலைபோன்று விளங்கிடும் தோளினை உடைய நீலனது மேனி எங்கும் படுமாறு செலுத்தினான். அவை வந்து படலால் நீலன்; சோலைபூத்து மலர்ந்தாற்போல மேனிபுண்பட நின்று அலைந்தான். மனம் சோர்ந்தான் போரிட்டு அலுத்தான் மிகவும் சலித்தான். 110

**வேறு**

ஈண்டு சீர்த்தி இரணியன் மாயமும்
ஆண்டு நீலன் அயர்வது நோக்குறாப்
பூண்ட வாகைப் புயத்தவன் சீறியே
தூண்டு தேரொடு துண்ணென நண்ணினான்.

இவ்வாறு இவ்விடத்து வஞ்சனையால் மாயத்துடன் கலந்து அம்பு சொரியும் சிறப்புடைய இரணியனின் மாயமும்; அம்புபடலால் நீலன் அவ்விடம் அயர்வதும் கண்டுகொண்டு வெற்றிமாலைசூடிய தோளுடைய வீரவாகுதேவர் சீற்றம்கொண்டு செலுத்தப்பெற்ற தனது தேருடன் விறுக்கென அவ்விடம் வந்தார். 111

தாங்கு கின்றதன் தாழ்சிலை தோள்கொடே
வாங்கி நாணியின் வல்லிசை கோடலும்
வீங்கு மொய்ம்பின் விறல்கெழு தானவர்
ஏங்கி யாரும் இரிந்தனர் போயினர்.

வீரவாகுதேவர் கையில் பிடித்த வில்லை தோள்கொடுத்து வளைத்து நாண் ஏற்றி கடூரமான நாணோசை செய்தலும்; வளர்ந்த தோளுடையவரும் வலிகொண்டவருமாய் அவ்விடம் நின்ற அசுரர் எல்லாருமே ஏங்கி அங்கு நின்றிடாது அச்சத்தால் அகன்று ஓடிப்போயினர். 112

சோதி நெற்றிச் சுடர்த்தனி வேலினன்
பாத மெய்த்துணை பன்முறை போற்றிடா
ஆதரத்தின் அருச்சனை ஆற்றியே
சேத னப்படை செங்கையின் வாங்கினன்.

பிரகாசமுடைய சுடர்கொண்ட வேலினைக் கைக்கொண்டருளிய ஆறுமுகப்பெருமானின் உண்மைத் துணையாகும் பாதமலர்களை பன்முறைபோற்றி உள் அன்பினால் அருச்சனைபுரிந்து ஞானப்படையை வீரவாகுதேவர் சிவந்த திருக்கையில் எடுத்துக் கொண்டார். 113

தூய போதகத் தொல்படை அன்னவன்
மாயை மேல்விட மற்றதன் பட்டிமை
ஆயி ரங்கதிர் ஆதவன் நேர்புறப்
போய கங்குல் நிசியெனப் போந்ததே.

தூயதான ஞானப்படையை அந்த இரணியாசுரனுடை மாயத்தின்மேல் விடுதலும்; ஞானப் படைவரல்கண்டு அந்த வஞ்சனையாகும் மாயமானது; ஆயிரம் கதிருடைய சூரியதேவன் நேர்வரலும் உடன்நீங்கும் இரவின் இருள்போன்றுபோயது. 114

போந்த காலைப் புலம்புறு தானவர்
ஏந்தலேத மியாக எரியெனக்
காந்தி நின்றவன் காமர்வில் வாங்கியே
ஆய்ந்து தீங்கணை ஆயிரம் தூண்டினன்.

மாயம்போனகாலையில் அங்கு அதுகண்டு துக்கத்தால் புலம்பி அழுதிடும் அசுரர்க்கெல்லாம் தலைவனான இரணியன் தனித்தவனாகி; நெருப்பு எனும்படி உள்ளம் கொதித்துநின்றவன்; அழகிய தனது வில்லைவளைத்து அதிலே தெரிந்து எடுத்த கொடிய நெருப்பாகும் அம்புகள் ஆயிரத்தை பூட்டி வீரவாகுதேவர்மேல் செலவிட்டான். 115

தூண்டுகின்ற சுடுகணை வீரமார்த்
தாண்டன் முன்னவன் தன்வரை மார்புறு
மீண்டு நுண்டுகள் ஆதலும் மேலது
காண்ட லுஞ்சுரர் கையெடுத் தார்த்தனர்.

இரணியன் செலுத்திய நெருப்பு அம்புகள்; வீரமார்த்தாண்டன் என்பவருக்கு மூத்த வீரவாகு தேவரின் மலைபோன்ற நெஞ்சிடத்து பட்ட உடனே அந்த அம்புகள் மீண்டு துகளாகி அழிந்துபோதலும்; அதுகண்டு மேல்நின்ற தேவர்கள்யாவரும் கைகொட்டி மகிழ்ந்து கூச்சலிட்டனர். 116

பொறுத்த வாகைப் புயன்வலி வெவ்விடம்
நிறத்த நூறு நெடுங்கணை தூண்டியே
எறித்த சீர்த்தி இரணியன் கேதனம்
அறுத்து வில்லொ டரணமுஞ் சிந்தினன்.

வெற்றிதங்கும் தோளுடைய வீரவாகுதேவர் அதன்பின் நஞ்சின் கொடிய வலி கொண்ட நீலநிறமுடைய நீண்ட அம்புகளைச் செலுத்தி புகழ்விளங்கிய சிறப்பினை உடைய இரணியாசுரனின் கொடியை அறுத்து அவன் வில்லையும் முறித்து நெஞ்சில் அணிந்த கவசத்தையும் பொடிசெய்தார். 117

பொருவில் சாலிகை போதலுஞ் சூர்தரும்
இழிவில் கோமகன் செங்கரம் தன்னில்வே
றொருவில் கொள்ளவொ ராயிரம் வெங்கணை
விரைவில் தூண்டின னல்விறல் மொய்ப்பினன்.

போர்க்கேற்ற வலிமையுடைய கவசம் அழிதலும்; சூரபன்மன்பெற்றெடுத்த திருவுடைய இரணியாசுரன் வேறொரு வில்லை கையில்எடுப்ப அதுவேளை மீண்டும் வீரவாகுதேவர் கொடிய ஆயிரம் அம்புகளை இரணியன்மேல் செலுத்தினர். 118

விடுத்த வாளிகள் வெவ்விறல் ஆடகன்
எடுத்த வாளி இருஞ்சிலை பின்னுறத்
தொடுத்த தூணிமுன் தூண்டிய பாகுதேர்
படுத்து மார்பகம் பஃறுளை செய்தவே.

வீரவாகுதேவர் விடுத்த அம்புகள்; கொடும் வலியுடைய இரணியனின் தொடும் படி எடுத்த அம்புகள்; பெரியவில்; பின்னல் தூக்கிய அம்பின்கூடு; தேரைமுன்போயிட செலுத்தும் சாரதி, தேர்; எல்லாவற்றையும் அழித்து இரணியனுடைய நெஞ்சை யும் பலதுளைகளாக்கியது. 119

செய்ய வேறொரு தேர்மிசைச் சூரருள்
வெய்யன் வாவலும் வீரருள் வீரனும்
ஐயன் வாளிகொண் டன்னது மட்டிட
மையல் எய்தி இழந்தனன் வன்மையே.

அந்நிலையில் அவலமுற்ற சூரபன்மன் மகன் கொடிய இரணியன் வேறொரு செப் பமாகிய துணைத் தேர்மீது பாய்தலும் அதுகண்ட ஐயன் வீரவாகுதேவர் அம்பினை விடுத்து அந்தத் தேரையும் அழித்திட இரணியன் ஏங்கி மயங்கி தன்வலிமையாவும் இழந்தனன். 129

வேறு பின்னரும் மேதகு சூர்மகன்
ஏறு தேர்க ளியாவையும் செல்லுமுன்
நூறுநூறு கணைகளின் நூறியே
ஈறு செய்தலும் ஏங்கியி தெண்ணினன்.

மேன்மையுடைய சூரபன்மன்மகன் இரணியன் ஏறுதற்கு எடுத்துக்கொண்டு வந்த துணைத்தேர்கள் யாவையும் அவன் மாறிமாறிச் செல்வதன் முன்பாக நூறு நூறு அம்புகளை வீரவாகுதேவர் விடுத்து அழித்திடலும் அத்துரிதத்தைக்கண்ட இர ணியன் ஏங்கி இதனை எண்ணுகின்றான். 121

இந்த வேலை இடர்ப்படு மென்றனக்
கந்த மெய்திய தன்னவ னால்உயிர்
சிந்தும் என்னொடு தீர்வது வோஇனித்
தந்தை யாரும் இறத்தல் சரதமே.

இந்தநிலையில் யாவும் இழந்து இடர்படுவேனான எனக்கு முடிவு வந்து எய்தி யது; இந்த வீரவாகு தேவனால் எனது உயிர் அழியும்; என்னோடு மட்டும் இது முடியப்போகின்றதோ? இல்லை இனி எனது தந்தையாரும் இறப்பது உண்மை. 122

இற்றகாலை இருங்கடன் செய்திட
மற்றி யாவரும் இல்லைஇம் மாநகர்ச்
சுற்ற மானவ ருந்தொலைந் தார் இனி
உற்று ளோரும் இறப்பரி துண்மையே.

எனது தந்தை இறந்தக்கால் அவருக்குக் கடன்செய்திட ஒருபிள்ளையும் இருக் கார்காள். இந்த நகரத்து எமக்கு துணையாய் இருந்தோரும் தொலைந்தார்கள். இனி எமதுபாலாக மிச்சமாகி இருப்பவர்களும் இறப்பது உண்மையேயாகும். 123

உறுதி யாவ துரைக்கவும் ஆங்கது
வறிது மோர்கிலா மன்னவன் மாயுமுன்
இறுவ தேகடன் இற்றில னேயெனின்
அறுவ தோஎன் அகத்திட ராயினும்.

உறுதியான வார்த்தைகளை நான் எடுத்து உரைக்கவும் அதனைக் கொஞ்சமேனும் உணர்கிலாத எனது தந்தையாகும் அரசன் இறப்பதன் முன்னம் நான் இறப்பதுதான் கடமை; அப்படிநான் இறவாதுபோனல் எனது உள்ளக் கவலைகள் துயரங்கள்யாவும் அறுமோ? 124

ஒய்யெ னச்சுர ரோடவென் கண்டஎன்
ஐயன் மற்றினித் துஞ்சின் அருங்கடன்
செய்வ தற்கொரு சேயுமின் றுலெனின்
வைய கத்தில் வசையதுண் டாகுமே.

தேவர்கள்யாரும் ஐயகோ என அஞ்சியோடிட வெற்றிகொண்ட எனது ஐயன் சூரபன்மன் இனி இறந்தால் அவனுக்கு ஈமக்கடன்செய்ய ஓர் மைந்தனும் இல்லாமல் போவது என்றால்: இதனல் இப்பூமியில் என் தந்தைக்கு வசை உண்டாகுமே? 125

மைந்த னைப்பெறு கின்றது மாசிலாப்
புந்தி அன்பொடு போற்றி வளர்ப்பதும்
தந்தை மாண்டுழித் தம்முறைக் கேற்றிட
அந்த மில்கடன் ஆற்றுதற் கேயன்றோ.

ஓர் பிள்ளையைப் பெறுகின்றதும்; மறுவிலாது அப்பிள்ளையின்மேல் மிக்கதொரு அன்பினேடு போற்றி வளர்ப்பதும்; அப்பிள்ளையின் தந்தை இறந்த நேரத்து தங்கள் குலமுறைக்கு ஏற்றபடி முடிவில்லாத கடனை செய்துவரும் பொருட்டாலன்றோ. 126

அசைவி லாத அமரிடைத் துஞ்சிடின்
இசைய தாகும்இ றந்தில னேயெனில்
தசையு லாமுடல் தாங்கிஉய்ந் தானெனு
வசைய தாகுமென் வன்மையும் துஞ்சுமே.

அசைவிலாத பெரிய போரிடத்து பின்னிடாமல் இறந்தால் அதுபெரும் புகழாகும். அப்படி இறந்துபோகாமல் தப்பி ஓடுவனே எனில் தசைகொண்ட இந்த உடலைத்தாங்கி உய்ந்துபோனனே இரணியன் என்ற வசையாய் வந்து முடியும். இத்துடன் எனது வலிமையும் நீங்கிடும். 127

என்னை எய்தும் இசையது வேயெனின்
மன்னை எய்தும் வசையுரை ஆங்கதன்
றென்னை எய்தினும் எய்துக தந்தைபால்
அன்ன தாதல் அழகிதன் றுலென.

இப்போது நான் இறந்தால் பெரும் புகழ்தான் என்னைவந்து அடையும் என்றுலும்; எனது அரசன் இறந்தால் கடன்செய்யப் பிள்ளையும் இலாது இறந்தான் என்ற வசையான வார்த்தையை உலகம் சொல்லும். ஆகையால் எனக்கு வருகின்ற வசைவருகினும் வரட்டும் ஆனல் என்தந்தைக்கு அப்படி ஒருவசை வருதல் அழகல்ல என்றான். 128

ஆவ துன்னிஎன் னுருயிர் போற்றியே
போவ தேகடன் என்று பொருக்கெனத்
தாவி வான்முகில் தன்னிடைப் போயொரு
தேவு மந்திரம் சிந்தையில் உன்னினன்.

என்று இரணியன் மனதில் எண்ணி தனது உயிர் போகாதபடி பேணிக்கொண்டு போர்க்களம் விடுத்து போவதே கடன் என்று விறுக்கென்று வானில்தாவி வான் முகட்டில்போய் அங்குநின்று ஓர் தெய்வமந்திரத்தை சிந்தையில் தியானித்தான். 129

உன்ன லோடும் உருவரு வாதலும்
தன்னை யாரும் தெரிவரும் தன்மையால்
பொன்னு லாய புணரியுட் போயினன்
மின்னு தன்சுடர் மீனுரு வாகியே.

அம்மந்திரத்தைத் தியானித்ததும் இரணியனின் உருவம் அருவாதலும்; தன்னை யாரும் அறியாதவகையால் மகாஇலக்குமி வீற்றிருக்கும் பாற்கடலுள் போய்; மின்னுகின்ற குளிர்ந்த சுடருருவம் கொண்ட மீனாகி அங்கு ஒளித்திருந்தான். 130

ஆண்டு போன அவுணன்அம் மாநகர்
மீண்டு செல்கிலன் மேல்விளை கின்றன
காண்டும் நந்தம் கடன்முடிக் குந்துணை
ஈண்டு வைகுதும் என்றவண் மேவினன்.

அவ்விடத்து மீனாகிப்போன இரணியன் அங்குவிடுத்து தனது நகரம் மீண்டு செல்லவில்லை. அங்கிருந்தே மேலாக என்ன இங்கு நடைபெறுகின்றது என்பதை தனது கடனை முடிக்கும் துணையும் இங்கிருந்தே காண்பேன் என்று அங்கு பாற்கடலில் ஒளித்திருந்தான். 131

ஆய காலையில் ஆடகன் செய்திடு
மாயை யாமெனக் கங்குலு மாய்திடத்
தூய போதகத் தொல்படை தோன்றல்போல்
சேயி ருங்கதிர்ச் செல்வன்வந் தெய்தினன்.

அவ்வாறாகிய நேரத்து இரணியன் அங்கு செய்திட்ட மாயை அழிந்து போனதைப்போன்று மூன்றாம்நாள் இரவும் மாய்ந்திட; இரணியன் கொண்ட மாயத்தை நீக்கி ஞானப்படைதோன்றுதல்போல சிவந்த கிரணங்களை உடைய சூரியதேவன் கிழக்குத் திக்கில் தோன்றினான். 132

ஆங்கு வெய்யவன் அப்படை போலெழ
நீங்கு மாயையின் நீள்நில வற்றிட
ஏங்கி யோடும் இரணிய னாமென
ஓங்கு திங்கள் உததியில் போயினான்.

அந்த போர்க்களத்து நான்காம்நாள் சூரியபகவான் உதயமாகி அந்த ஞானப் படைபோல எழுதலும், அதுவேளை ஞானப்படையால் இரணியனின் மாயவடிவின் ஒளிகுன்றியது போன்று வானில் நின்ற சந்திரதேவனின் நிலவும் நீங்கிட, தனது மாயவடிவமான ஒளி நீங்கிடக்கண்டு ஏங்கி ஓடும் இரணியன்போல மேலோங்கிய சந்திரனும் கடல்மீது அத்தமனமாகிப் போயினான். 133

நீங்கு சூர்மகன் நீர்மையை நோக்கியே
வீங்கு தோளுடை வீரன்நம் மாற்றலன்
ஓங்கும் ஆழியுள் ஓடினன் தோற்றெனா
ஏங்கு சங்கம் எடுத்திசைத் தானரோ.

அவ்விடம் விட்டோடிய சூரபன்மன் மகன் இரணியனது ஆற்றலை பருத்த தோளுடைய வீரவாகுதேவர்கண்டு; எமது பகைவன் மிக ஓங்கி ஆழ்ந்த பாற்கடலுள் தோற்றோடினான் எனக்கூறி; எங்கும் வெற்றிஓசை சத்தமிடும்படி தனது வெற்றிச்சங்கை எடுத்து ஊதினார். 134

சங்கம் வாயிடைக் கொண்டுதன் சீர்த்தியை
எங்கு ளோரும் தெளிய இசைத்துழிப்
பொங்கு பூதர் புகழ்ந்தனர் வாழியென்
றங்கண் வானவர் ஆசிசெய் தார்க்கவே.

வீரவாகுதேவர் தமது திருவாயில் சங்கைவைத்து எங்குளோர்களும் தனது வெற்றியை அறியும்படி ஊதுதலும், அச்சங்கோசை கேட்டு பூதர்கள்யாவரும் வீர வாகுதேவரைப் புகழ்ந்தார்கள். தேவர்கள்யாவரும் வீரனே வாழ்க! என ஆசி புகன்று வானில் நின்று மகிழ்வால் ஆர்ப்பரித்தார்கள். 135

நின்ற வீரர்கள் நேரலர் சேனையைப்
பொன்று வித்தனர் போரிடைத் தூதுவர்
சென்று காலொடு சிந்தையும் பிற்பட
மன்றன் மாநகர் மந்திரம் எய்தினர்.

அங்குநின்ற வீரர்கள் மிகுதியாய் நின்ற அசுரருடைய சேனைகளைக் கொன்றனர்; இதையெல்லாம் போர்க்களத்து நின்ற அசுரதூதுவர்கள் கண்டு கலங்கி காற்றுவே கமும் மனோவேகமும் பிற்படும்படி ஓடி சூரபன்மனுடைய அரண்மனை நகரின் சபா மண்டபத்தை அடைந்தார்கள். 136

மந்தி ரத்துறை மன்னை வணங்கிநீ
தந்த அக்கும ரன்சமர்க் காற்றலன்
உய்ந்தி டக்கொல் உவரையொர் சூழ்ச்சியால்
சிந்தி டக்கொல் அகன்றனன் சிந்துவில்.

சபையில் வீற்றிருக்கும் சூரபன்மனை அணுகிநின்று வணங்கி ஐயனே! நீர்பெற்ற மைந்தனை இரணியன் வீரவாகுதேவருடன் போரிட்டு வெல்ல ஆற்றல் இலாத வனுகி ஒருகால் அவன் உய்ந்திடவோ! அல்லது பகைவரை ஓர் சூழ்ச்சிசெய்து வென் றிடவோ அறியமாட்டோம் சமுத்திரத்திடத்து ஒளித்து ஓடினன். 137

என்று தூதர் இசைத்தலும் மன்னவன்
குன்றி வெள்கிக் கொடுஞ்சினம் கொண்டிடா
ஒன்று மாற்றம் உரைத்திலன் அவ்வழிச்
சென்ற னன்கனல் மாமுகச் செம்மலே,

என்று இந்த வரலாற்றைத் தூதுவர் இசைத்த நேரத்தில் சூரபன்மன் கேட்டு உள்ளம் குன்றி வெட்கி கொடுங்கோபம்கொண்டு ஒன்றொருவார்த்தையுமே பேசிடா திருத்தலும் அவ்வழியாக அக்கினியின் பெருமுகமுடைய அக்கினிமுகாசூரன் என் னும் தலைவன் தந்தைமுன் வந்தான், 138

இரணியன் யுத்தப்படலம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் 1303.

---

## அக்கினிமுகாசூரன் வதைப்படலம்

எட்டாசையு ளோர்களை எண்கரியைக்
கட்டாவுறு சில்கதி ரைப்பரியை
முட்டாவரு தேரினை முன்கொணரா
வட்டாடிய தோர்வலி பெற்றுடையான்.

இந்த அக்கினிமுகாசூரன் எட்டுத்திக்கின் அதிபராக உள்ள இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் எனும் கடவுளரையும் எட்டுத் திக்கிலும் பூமியைத்தாங்கும் யானைகளேயும்; கண்ணுக்கு ஒளியாக விளங்கிடும் சூரிய தேவனை; அவன் குதிரைகளை; அந்தரத்தே எழுந்துமுட்டின்றிவரும் சூரியனதுதேரினை; முன்னர்க் காலத்து பிடித்து வந்து சூதாடு கருவிபோல் பாவித்து ஆடியவீரம் பெற்றுடையவன். 1

கருவாயுறு கின்றதொர் காலைமுதல்
திருமாதுடன் முற்றழல் சிந்திடலும்
பெருமாயவள் வந்துபி றந்திடுவோன்
எரிமாமுகன் என்ற இயற்பெயரான்.

பதுமகோமளை என்னும் தாய்வயிற்றிலே இவன் கருவாய் உற்றகாலம் முதல் அழகிய அப்பெண்ணின் உடல் முழுவதும் நெருப்பின் வெப்பம் பரத்தலும் அதனை உணர்ந்த பெரிய மாயவள் அங்குவந்து பதும கோமளையைநோக்கி உனக்கு பிறக்கப்போகும் பிள்ளை அக்கினி முகனுவன் என கூறியமையால் அதன்காரணமாக அக்கினிமுகாசுரன் என்னும் இயல்பான பெயருடையவன். 2

பன்னகை மிசைத்துயில் பண்ணவனூர்
பொன்னூர்சிறை கொண்டதொர் புள்ளிலுடன்
அந்நான்முக னூர்தியும் ஆடுறுவான்
முன்னாட்கொடு வந்ததொர் மொய்ம்புடையான்.

அநந்தன் எனும் பலதலையுடைய நாகபாம்பில் பள்ளிகொள்ளும் நாராயணக் கடவுளின் வாகனமாய் பொன்னுக விளங்கிக்கொண்ட சிறகுடைய கருடனுடன் அந்த நான்குமுகமுடைய பிரமனின் வாகனமான அன்னப்பறவையையும் தான் விளையாடுவதற்காக முன்னாளில் பிடித்துவந்ததொரு வீரத்தினை உடையவன். 3

முன்னுற்றவன் வானெழு மொய்கதிரோன்
தன்னைச்சிறை யிட்டது தான்வினவா
மன்னுற்றிடு சோமனை வைகல்பல
இன்னற்பட வேசிறை இட்டுடையான்.

தனக்கு மூத்தவனுன பானுகோபன் வானத்தில் எழுந்து செல்கின்ற சூரிய தேவனைச் சிறைசெய்தமை கேள்வியுற்று மிக சிறந்துற்ற சந்திரனை பிடித்துவந்து பலநாட்கள்வரை அந்தச் சந்திரன் இன்னல்படும்படி சிறைபூட்டி வைத்த பெருமையை உடையவன். 4

தெய்வப்படை தாங்கிய செங்கையினுன்
ஐவர்க்குள தாகிய ஆற்றலுளான்
மைவைத்திடும் வஞ்சனை மாயம்வலான்
எவ்வெப்படை தன்னையும் ஈறுசெய்வான்.

தேவப்படைக் கலங்களானவற்றைத் தாங்குகின்ற செங்கைகளை உடையவன்; பஞ்ச இராக்கதர் என்னும் அந்த ஐந்து பேருக்கும் உடைய வலிமையை தனியே தான்கொண்டவன். கருமையாக விளங்கிடும் வஞ்சனை மாயம் இதுபோன்ற தீமைகள் பலவற்றைப் புரிபவன்; எந்த விதமான படையையும் அழிவு செய்வான். 5

அந்தார்முடி கொண்டிடும் ஐயன்முனம்
வந்தானடி தன்னை வணங்கியிவண்
எந்தாய்மெலி வுற்றனை என்னெனலுஞ்
சிந்தாகுல மோடிது செப்பிடுவான்.

அவ்வாறுன இயல்புடைய அக்கினிமுகன் அழகிய மாலையணிந்த முடியுடைய தந்தை சூரபன்மன்முன்பு வந்தான்; பாதத்தில் வணங்கினுன். தந்தையே! நீ இவ்விடத்து மெலிவுற்றிருக்கின்றுய் யாது காரணமோ எனக் கேட்டலும்; அப்போது மனதில் பெருகும் ஆகுலத்துடன் சூரபன்மன் இதைச் சொல்கின்றுன். 6

உண்ணுடிய மாயைகொ டொற்றுமையால்
விண்ணுடர் பொருட்டிவண் மேவியுளான்
கண்ணுரெயில் வேலி கடந்துநமை
எண்ணுது புரத்திடை ஏகினனுல்.

உள்ளத்து மிகு வல்லபமான மாயையால்; யாருக்கும் அகப்படாதபடி முன்னர் இங்கு தேவர் சிறைமீட்கும்பொருட்டாக தூதாக வந்துள்ளவனுன வீரவாகு அழகிய மதில்கொண்ட நமது நகரின் எல்லையைத் தாண்டி நமையும்கூட மதியாமல் எமது வீரமகேந்திர புரத்திடை வந்துள்ளான். 7

ஏகுந்தொழில் வெய்யவன் இந்நகரம்
வேகும்படி செந்தழல் வீசிடலும்
மாகொண்டல்கள் ஏவினன் மற்றவைமா
ருகும்புனல் சிந்தி அவித்தனவே.

நகரின் காவலை அழித்துக் கொடிய செயலுடைய தூதுவன்; இங்குவந்து இந்த எமது நகரம் எரிந்து வேகும்படி செந்நிறமான நெருப்பை வீசிடலும் அந்நெருப்பைத் தணிக்க பெருமேகங்களை யான் ஏவினேன். அம்மேகங்கள் சென்று அங்கு எரிந்த நெருப்பிற்கு மாருக மழைபொழிந்து தீயை அவித்தன. 8

மடல்கொண்டிடு தாரினன் மற்றதுகண்
டுடல்கொண்ட சினத்தொ டொருங்குலகங்
கடைகொண்டிடு கின்ற கனற்படைதொட்
டடல்கொண்ட முகிற்றிறல் அட்டனனே.

மடலுடைய அழகிய பூமாலையணிந்த அத்தூதுவன் இந்நிலைமைகண்டு உடலிலே கொண்ட கோபத்தனுல் உடனுகவே எல்லா உலகையும் கடைநாளில் அழிவுசெய்கின்ற ஊழித்தீப்படையை தொடுத்து விடுத்துத் தன்னுல் மூட்டப்பட்ட நகரத்தீயை அவித்த முகில்களின் வலியை அழித்தான். 9

அட்டானது கேட்டனம் ஆடகனை
விட்டாம்அனி கத்தொடு வெஞ்சமர்செய்
தொட்டார்வலி நோக்கி உடைந்தவனும்
நெட்டாழி புகுந்து நிமிர்ந்தனனுல்.

மேகங்களை அழித்தான்; அதைநான் கேள்வியுற்று இரணியனை பெருஞ்சேனையுடன் அவனுடன் கொடிய போரிடவிட்டேன். இரணியனும் போர்க்களம்போய் பகைவரின் வலிகண்டு பயந்து பின்னிட்டோடி நீண்ட சமுத்திரத்து மீனுக ஒளித்திருந்து வாழ்கின்றனன். 10

நங்கொற்ற மிகுந்திடு நாற்படையும்
அங்குற்றிடு கின்றன மாகரை
உங்குற்றிடு தூதன் ஒறுத்தனனுல்
இங்குற்ற நிகழ்ச்சியி தென்றனனே.

மாநகரை மாநகரை

நம்முடைய கொற்றம் மிகுந்த நான்கு விதமான சேனைகளும் பகைவரால் அழிக்கப்படுகின்றன. எமது பெரிய நகரை உங்கேவந்திருக்கும் தூதன் மீண்டும் அழிக்கின்றான். இங்குள்ள நிகழ்ச்சிகள் இவைதானுகும் என சூரபன்மன் அக்கினிமுகனிடம் கூறினன். 11

செங்கோன்முறை கோடிய தீயவுணன்
அங்கோதிய கேட்டலும் ஆரழல்கால்
வெங்கோரமு கத்து வியன்புதல்வன்
தங்கோமுக மாவிது சாற்றிடுவான்.

செங்கோன்முறையால் அரசாள்வதை நீக்கியுள்ள தீயவனுன சூரபன்மன் அங்கு ஓதிய வார்த்தைகளை கேட்டலும்; நெருப்பின் அனல் வீசிடும் கொடும்கோரமான அக்கினிமுகமுடைய மிகு மேன்மையான மைந்தன்; தங்கள் முதல்வனுன அரசனுக்கு முன்பாக முகநோக்கி இது சொல்கின்றான்: 12

மன்னர்க்கிறை யாகிய மன்னவநீ
உன்னுற்றுள மீதில் உருத்திடவே
முன்னுற்றிடு தூதுவன் மொய்ம்பினனே
என்னுக்கவன் ஆற்றலை எண்ணுதிநீ.

எல்லா அரசர்க்கும் அரசனும் தலைவனுன நீ இப்படி உனது உள்ளத்தில் எண்ணி கோபித்திடுதற்கு எமது நகரின் முன் வந்துள்ள அந்தத் தூதுவன் அவ்வளவு வலியுடையானே? யாதினுக்காக நீ அவனது ஆற்றலை நினைந்துகொண்டு வருந்துகின்றுய். 13

மிடல்கொண்டிடு தூதனை மிக்கவரைப்
புடைகொண்டமர் செய்திடு பூதர்தமை
அடல்கொண்டிவண் நின்னை அடைந்திடுவன்
விடைதந்தரு ளென்று விளம்பினனே.

மிகுமிடல்கொண்ட அந்தத் தூதுவனை அவனுடன் கூடிய ஏனைய மிகுவீரமுடைய இலக்கத்தெட்டு வீரரை அவர்பாங்காக நின்று போரிடுகின்ற பூதங்களை எல்லோரையும் அழித்து வெற்றிகொண்டு யான் இங்கு உன்னைவந்தடைவேன். எனக்கு போரிடப்போம்படி விடைதந்தருள்வீர் என்று விளம்பினன் அக்கினிமுகாசுரன். 14

நன்றேயிது செப்பினை நண்ணலனை
வென்றேவரு கென்று விடுத்திடலும்
நின்றேதொழு தவ்விடை நீங்கினனுல்
குன்றேநிகர் தோள்வலி கொண்டுடையோன்.

மகனே! நன்றுதான் நீ இப்போது சொல்லியவை. என்பகைவனை வென்று நீ வருகென்று விடுத்திடலும்; அங்குநின்றவாறு தந்தையை வணங்கி விடைபெற்று மீண்டு சென்றுன் மலைபோன்ற பெரும் தோள்வலியுடைய அக்கினிமுகாசுரன். 15

கார்கோலமும் வெய்ய கருங்கடலின்
நீர்க்கோலமும் அன்னவன் நீடியதன்
சீர்க்கோநக ரத்திடை சென்றனனுல்
போர்க்கோலம் அமைந்து புறம்படர்வான்.

கருமையாகும் மேகத்தின் கோலமும்; கொடிய கருங்கடலின் கோலமும் ஒருங்கு திரண்டுள்ளதை ஒத்த வண்ணமுடைய அக்கினிமுகன்; நீண்ட சிறப்புகளை உடைய தனது அரண்மனை நகரத்திடத்துச் சென்றனன். அங்கு போர்க்கோலம்கொண்டு வெளியே புறப்பட்டு வருவான, 16

மைக்கொண்டல் படர்ந்திடு மால்வரைபோல்
மொய்க்கொண்டிடு சாலிகை முன்னுறவே
மெய்க்கொண்டணி புட்டில் விரற்பரியாக்
கைக்கொண்டனன் விண்ணவர் கைப்படையே.

கரிய மேகங்கள் சுற்றிப் படர்ந்திருக்கும் பெரிய மலைபோல்; அழிவிலா வலியுடைய ஓர் கவசத்தை முன்னுக மேனியில் அணிந்து; அழகிய புட்டில்களை விரல்களில் அணிந்து; தேவர்களது படைகளை தனதுகையில் எடுத்துக் கொண்டான். 17

தன்ருதையி னைத்தரு தாயுதவும்
பொன்ருழ்சிலை கைக்கொடு பொள்ளெனவே
ஒன்ருகிய தேரிடை யொல்லைபுகாச்
சென்ருன்விழி யிற்கனல் சிந்திடுவான்.

தனதுதந்தை சூரபன்மனை பெற்றெடுத்த தாயான மாயவள் முன்னர் கொடுத்த பொன்னுக விளங்கியதோர் வில்லைக் கையில்கொண்டு திடீரென முன்னின்றதோர் அழகிய தேர்மேல் விரைவாக ஏறிப் போர்க்களம் சென்றுன் அக்கினிமுகன் கண்களால் கோபநெருப்பைச் சொரிபவனுக. 18

அறமற்றிடு தீயன் அகன்றுநகர்ப்
புறமுற்றனன் அங்கது போழ்துதனில்
திறமற்றது தூதுவர் செப்புதல்முன்
மறமுற்றிடு தானைகள் வந்தனவே.

தருமத்தை நீக்கிய தீயவனை அக்கினிமுகன் இவ்வாறு புறப்பட்டு தனது நகர்ப் புறத்து வந்தனன். அங்கே அதுபொழுதில் அக்கினிமுகன் போரிடச் செல்லும் திறத்தைத் தூதுவர் சொல்லுவதன்முன் மறங்கொண்ட அசுரச்சேனைகள் புறப்பட்டு வந்தன. 19

ஓராயிர வெள்ளம் ஒருத்தலினம்
தேரானவும் அத்தொகை திண்டிறல்மா
ஈராயிர வெள்ள மியாவர்களும்
ஆராய்வரி தாலவு ணக்கடலே.

இச்சேனைகளில் ஓராயிரவெள்ளம் யானைப்படையும்; தேர்களும் அத்தொகையான ஓராயிர வெள்ளமும்; திண்மை உடைய குதிரைகள் இரண்டாயிரம் வெள்ளமும்; அப்பால் காலாட்படையாகவரும் அசுரக்கடலின் கணக்கை யாராலும் ஆராய்தற்கு அரியதாய் இருந்தது. 20

ஆன காலையில் அங்கி முகாசுரன்
மான மேற்கொண்டு மாற்றலர் யாரையும்
யானொர் கன்னல்முன் ஈறுசெய் வேனெனுச்
சேனை தன்னொடுஞ் சென்றிடல் மேயினன்.

அவ்வாறானகாலையில் அக்கினிமுகாசுரன் மனதில் மானம் பெரிதும் கொண்டு பகைவர்ய யாரையும் யான் ஓர் நாழிகைப்பொழுதின்முன் அழித்து முடிவாக்கிவிடுகின்றேன் என்று பெருசேனைதன்னொடும் போர்க்களம் நோக்கிச் செல்வானாயினன். 21

நல்கு மாறின்றி நாள்பல நீங்கியே
மல்கு காதலர் வந்து கலந்துழிப்
பில்கு காமத்துப் பெய்வளைப் பேதையர்
அல்கு லென்ன அசைந்தகல் வுற்றதேர்.

அவனது சேனைகளோடு தேர்கள் அசைந்து அசைந்து செல்கின்றன எதுபோல் எனில் தமக்குப் பொருள் கொடுப்பதற்காகப் பொருள் இலாமையால் நாட்கள்பல கழித்துப் பொருள்கொண்டு தம்பால் விருப்பமுற்ற காதலர் வந்து தம்முடன் உடலுறவு கொண்டபோது காமவேட்கை பெரிதுடைய வளையல் அணிந்த பெண்களது அல்குல் விரிந்து அசைவது போன்று இருப்பன. 22

அருத்தி மெல்லியர் ஆதரங் கொண்டுழல்
விருத்தர் கூட்டம் வெறுத்திடு மாறுபோல்
எருத்த மீதில் இடிப்பவர் தம்முரைக்
கருத்தின் நிற்கில காய்சின வேழமே.

அழகும் மென்மையுமுடைய பெண்கள்மேல் ஆசைகொண்டு அப்பெண்களை அணுகின்ற வயதுவந்தோரின கூட்டத்தை அவர்கள் வெறுத்துத்தள்ளி விடுவதுபோன்று தமது மத்தகத்தில் இடிக்கின்ற பாகருடைய சொல்லின் வழிநிற்காது முரண்படுகின்றன கொலைபுரியும் கோபவெறிசொண்ட யானைகள். 23

மண்ணிற் பாய்வன மாதிரஞ் சூழ்வன
விண்ணிற் றுவுவ வீதியிற் செல்வன
எண்ணிற் பல்பொருள் இச்சைகொள் வேசியர்
கண்ணிற் கொப்பன கந்துக ராசியே.

மண்ணில் பாய்வன; திக்குகளில் ஓடிச்சூழ்ந்துவருவன; வானில் தாவுவன; வீதிகளிலும் செல்வன எதுபோலும் என்றால் எண்ணற்ற பலபொருள்களையும் விரும்புகின்ற வேசையர்களின் கண்ணைப்போல அங்கிமிங்கு மெங்குமாக பலதிக்கிலும் சுழன்று வருவன குதிரைகள். 24

வஞ்சம் நீடி அருளற்று மாயமே
எஞ்ச லின்றி இருள்கெழு வண்ணமாய்
விஞ்சு தம்மல்குல் விற்றுணும் மங்கையர்
நெஞ்ச மொத்தனர் நீள்படை வீரரே.

வஞ்சனையே பெருக்கி அருட்டன்மையின்றி குறைவிலாத மாயங்களைச் செய்து கொண்டு இருள்கொண்ட மேனி உடையராய் வரும் பெரும்படை வீரர்கள்; தம் மானத்தை விற்று உண்கின்ற வேசிகளது கொடிய நெஞ்சைப்போல் ஒத்திருந்தனர். 25

தார்த்த டம்புயத் தானவர் பல்லியம்
ஆர்த்த ஓசை அகிலமும் புக்கதால்
தூர்த்த மங்கையர் சோர்வினிற் செய்பழி
வார்த்தை எங்ஙணும் வல்லையிற் சேறல்போல்.

மாலையணிந்த தோளுடைய அசுரர்கள் வாத்தியங்களை முழக்கிடும் ஓசை அகில உலகமும் புகுந்தது. எப்படியெனில் கெட்டநடத்தை உடையபெண்கள் கணவனிருக்கவும் வேறு ஒருவனுடன் களவிலே உறவுகொள்கின்ற பழியான வார்த்தை எல்லா விடமும் மிகு தீவிரமாக பரவி சேர்தல்போன்று. 26

சோதி மெய்யெழில் தூயன மாற்றியே
மீது செல்லரும் வெவ்விருள் உய்த்ததால்
ஏதின் மாதரை எய்திடும் புன்மையோர்
காதல் போன்ற கடிதெழும் பூழியே.

வானத்தில் இயல்பாக விளங்கிடும் சோதிவடிவான ஒளியையும் தூய்மையையும் கெடுத்துக்கொண்டு மேல் செல்லமுடியாத கொடிய இருளைப் பெருக்கி நிற்றலால்: குற்றமான நடத்தையுடைய பெண்ணென அறிந்தும் அவளுடன் அணைகின்ற அற்பத்தனமான செயலுடையோரின் காதல்போன்று! விரைவாகச் செல்லும் சேனையின் வேகத்தால் புழுதி எழுந்து கொண்டது. 27

பீட்டின் மிக்க பெரும்பணை தாங்கிய
மோட்டின் ஒட்டக முந்திய கந்தரம்
நீட்டி வாங்குவ நேர்ந்தவர் முன்தலை
காட்டி வாங்குங் கணிகையர் போலவே.

பெருமையின் மிகுந்துள்ள பெரிய முரசப் பறையை முதுகின்மேல் சுமந்து செல்லும் ஒட்டகங்கள் முன்நீண்ட கழுத்தினை நீட்டியும் உள்இழுத்தும் வாங்கிநிற்பது வேசிகள் தன்னிடத்து வந்துள்ளார் முன்னுகத் தனது தலைகாட்டி பொருள்வாங்கிடும் தன்மைபோன்றது. 28

சீறு மால்கரி தேர்மிசைப் பூண்டுவிண்
ஆற ளாவினின் றுடுவ கேதனம்
ஊறு காதல் ஒருவன்கண் வைகினுள்
வேறு ளாரையும் வெஃகிவி ளித்தல்போல்.

அக்கினிமுகாசுரனுடைய தேரில் சீறிடும் மதயானைமேல் நாட்டப்பெற்று நின்றிடும் கொடிகள் வான கங்கையை அளாவிநின்று ஆடுவது எப்படி என்றால் தன்னிடத்துப் பெருகுகின்ற விருப்பமுடைய ஒருவனிடம் இருப்பவள்; வேறுபலரையும் வாருங்கள் என்று சேர்க்கைக்கு அழைத்திடுமாறு போன்றது. 29

வீழு மும்மத வேழங்கள் மத்தகம்
சூழி காலின் அசைதொறும் தோன்றுவ
மாழை நோக்கியர் மைந்தற்கு மாலுறக்
காழ கத்தனம் காட்டி மறைத்தல்போல்.

மும்மதம் பொழிகின்ற யானைகள் மத்தகம்மேலாக இடப்பெற்ற உறைகள் காற்றினுல் தள்ளுண்டு அசைய அவை தோவ்றுவதெப்படி எனில் பொன்னுன கண்ணுடைய அழகிய மங்கையர் தம்மேல் ஆடவர் மயங்கிடும்படியாக நெஞ்சில்மீது அணிந்த போர்வையை நீக்கிப் பொன்னுன தனங்களைகாட்டி மறைப்பது போன்றது. 30

தோம ரஞ்சிலை சூலம் மழுப்படை
நாம வெங்கதை நாஞ்சில் முசலம்வேல்
நேமி தானவர் நீள்கரம் செல்வன
காமர் மங்கையர் கட்டொழில் தாங்கியே.

தோமரம் வில்லு சூலம் மழுவாயுதம் கொடிய கதாயுதம் நாஞ்சில் முசலம் வேல் சக்கரம் ஆகிய படைகளை அசுரர் நீண்டகைகளில் தாங்கிச் செல்வார்கள்; அவர் அழகிய உருவத்துடன் காமமயக்கமுடைய பெண்களின் கண்கள் செய்கின்ற தொழிலினைத் தாங்கினுர்போல் செல்கின்றுர். 31

**வேறு**

எற்றின பறையின் வீழ்ந்த எழிலிகள் எழுந்த பூழி
சுற்றின வான மீப்போய்த் தூர்த்தன கங்கை நீத்தம்
வற்றின படையும் பூணும் வயங்கின மயங்கி எங்கும்
செற்றின பதாகை ஈட்டம் இருண்டன திசைக ளெல்லாம்.

போர்ப்பறைகளின் முழக்கத்தால் மேகங்கள் வீழ்ந்தன. எழுந்த புழுதிகள் சுழன்று வானத்தின் மேலாகச் சென்று ஆகாயகங்கையையும் தூர்த்தது. இதனுல்கங்கை நீர் வற்றியது. வீரர்கள் ஏந்தியபடைகளும் அணிந்த ஆபரணங்களும் ஒளிவீசின. கொடிகள் திசைகள் தெரியாத வண்ணம் எங்கும் கூட்டமாகப் பரந்து மயங்கிடச் செய்தன, திசைகள் எல்லாம், கொடிய இவர்கள் வரவால் இருண்டது. 32

சோமகண் டகனே சோமன் சூரியன் பகைஞன் மேகன்
காமர்பிங் கலனே ஆதிக் கடிதெழு தானை வீரர்
மாமருங் கதனிற் செல்ல மன்னவர் மன்னன் மைந்தன்
ஏமரு பூத சேனைக் கெதிருற எய்தி னுனல்.

சோமகண்டகன், சோமன், பானுப்பகை, மேகன் அழகியபிங்கலன் ஆதியாக உள்ள வீரம் படைத்த சேனுதிபதிகள்; பெரும்பக்கரில் திரண்டு செல்ல அரசர்க்கரசனுன சூரபன்மன் மைந்தன் அக்கினிமுகாசுரன் இறுமாந்து நிற்கும் பூதசேனைக்கு எதிர்ப்பட்டுச் சென்றுன். 33

எதிர்த்தனர் பூதர் தாமும் அவுணரும் இடிப்பிற் பேரி
அதிர்த்தன துடியுஞ் சங்கும் ஆர்த்தன அண்ட மீன்கள்
உதிர்ந்தன அனையர் கூடி உடன்றுபோர் புரிய வையம்
பிதிர்ந்தன பொதிந்த அண்டப் பித்திகை பிளந்த தன்றே.

பூதங்களும் அசுரரும் போரிட எதிர்த்தனர். இடிபோல் பேரிகை முழங்கி எங்கும் அதிர்ந்தது. உடுக்கும் சங்கும் ஆர்த்தன. வானில் உள்ள வெள்ளிகள் நிலைகெட்டு உதிர்ந்தன, அவர்கள் கூடிநின்று போர்புரிதலால் பூமிபிதிர்ந்து போயது. அண்டப் பித்திகைகளும் பிளந்து போயின. 34

தொட்டனர் வேலும் வாளுந் தூண்டினர் பகழி மாரி
விட்டனர் பிண்டி பாலம் வியன்மழுத் தண்ட மோச்சிக்
கிட்டினர் சூலம் வீசிக் கிளர்ந்தனர் அவுணர் பூதர்
பட்டனர் அளப்பி லோர்கள் பரந்தன குருதி நீத்தம்.

வேலும் வாளும் வீசினர். அம்புகளை மழைபோல் தூண்டினுர்கள். பிண்டிபாலம் முதலிய படைகளை விட்டனர். மேலான மழு தண்டு செலுத்தி அசுரர்கள் பூதங்களை எதிர்த்தார்கள். சூலத்தால் வீசிக் கிளர்ந்தெழுந்தார்கள்; இவ்வண்ணம் போர் புரிந்த அசுரரின் செய்கையால் இப்பக்கம் பூதங்களும் அளவுகடந்ததோர் இறந்து பட்டார்கள். இரத்தவெள்ளம் பரந்து கொண்டது. 35

முத்தலைக் கழுவைத் தண்டை முசலத்தை நேமி தன்னைக்
கைத்தலத் திருந்த கூர்வாய்க் கணிச்சியைப் பிறங்கால் தன்னை
எத்திறத் தவரும் பூதர் எறிந்தனர் எறிந்த காலை
அத்தலை அவுண வீரர் அளப்பிலர் பட்டா ரம்மா.

மூன்று கூரான சுடருடைய கழுமுள்படையை தண்டாயுதத்தை சக்கரத்தை கையில் இருந்த கூரிய வாயுடைய கணிச்சியை மலைகளை எத்திறத்தினை உடைய பூதரும் அசுரர்மேல் வீசி எறிந்தார்கள். இப்படைகளை எறிந்த நேரத்து அப்பக்க ராக உள்ள அகரர் அளவிறந்தோர் இறந்தார்கள். 36

தறித்தன புரவித் தாளுந் தலைகளுந் தடந்தேர் அச்சும்
முறிந்தன துவசம் அற்ற மும்மதக் கோட்டு மாக்கண்
மறிந்தன உடலம் வேறு மடிந்தனர் வயவர் எங்கும்
செறிந்தன கழுகு காகம் திரண்டன கூளி திண்பேய்.

அசுரர்களது குதிரைகளின் கால்கள் தலைகள் தறிபட்டன. பெரிய தேர்கள் அச்சு முறிந்தன. கொடிகள் அறுந்தன. மும்மதம் பொழியும் கொம்பன் யானைகள் வெட்டுண்டு இறந்து வீழ்ந்தன. உடலம்வேறுகி அசுரவீரர்கள் இறந்தார்கள். எங்கும் கழுகும் காகமும் திண்மையுடைய பேய்களும் பிணம் தின்னும் ஆசையால் மொய்த்தன. 37

இருபெரும் படையும் இவ்வா றேற்றிகல் புரியும் வேலை
வெருவரு வேற்கண் மாதர் வியர்ப்பின்வந் துதித்த வீரர்
பொருவருஞ் சிலைகள் வாங்கிப் புங்கவம் பொழிந்து சூழ
ஒருவரும் அவுணர் நில்லா தோடினர் உடைந்து போனர்.

இரண்டு பகுதிப் படையும் இவ்வாறு எதிரேற்று போர்புரிகின்ற காலையில் அச்சந்தரும் வேல்போன்ற கூரிய கண்ணுடைய நவசத்திகளின் வேர்வையில் வந்துதித்த இலக்கம் வீரர்கள் தங்களது நிகரற்ற வில்லைவாங்கி அம்பினைச் சொரிந்து அசுரச் சேனையை வளைந்து போரிட அசுரவீரர் ஒருவரும் அங்கு நில்லாது உடைந்து சிதறி ஓடினர்கள். 38

உடைதலும் அவுணன் மைந்தன் ஒய்யென விடுப்ப மேகன்
கடுமுரட் சோமன் சோம கண்டகன் முதலா வுள்ள
படையுறு தலைவர் பல்லோர் பகழியின் மாரி தூவி
அடுசிலை வீரர் மேற்சென் றமரினை யிழைத்தா ரன்றே.

சேனைகள் அணிஉடைத்து சிதறிடும் நிலையைக் கவனித்த அக்கினிமுகாசுரன் விரைவாக நீங்கள் அங்குபோங்கள் என விடுப்ப; மேகன், கடிய வலியுடைய சோமன், சோககண்டன், முதலாகவுள்ள படைகளைக் கைக்கொண்ட அசுரசேனதிபதிகள் அவ்விடம் விரைந்து அம்புகளின் மழை சொரிந்தவாறு தமது சேனையை வதைக்கின்ற வில்வீரர்முன் சென்று போரினைச் செய்தனர். 39

இழைத்திட அதனை நோக்கி இலங்கெழில் தாளில் வீரக்
கழற்புனை கின்ற வீர புரந்தரன் கடிய சீற்றத்
தழற்பெருங் கடவுள் போல்வான் அசனியே றஞ்ச ஆர்க்கும்
முழக்கினன் ஒருதன் சேனை முன்னுறக் கடிது வந்தான்.

போர் இழைத்தலும் அதனை நோக்கி பிரகாசமுடன் விளங்கிடும் அழகிய காலில் வீரகெண்டை அணிந்த வீரபுரந்தரன் என்பவன் கொடிய கோபத்தைக் கொண்ட அக்கினிக் கடவுள்போல்வான்; இடியேறும் அஞ்சிட முழங்கும் சத்தத்தை உடையனாய் தனது பூதச்சேனையின் முன்பாக விரைவுடன் வந்த அசுர சேனதிபதிகளை எதிர்த்து வந்தான். 40

வந்தனன் அங்கைச் சாபம் வாங்கினன் வாளி மாரி
சிந்தினன் தலைவர் தேரைச் சிதைத்தனன் சென்னி தள்ளி
இந்துகண் டகனை வானில் ஏற்றினன் ஏனை வீரர்
உந்திய சேமத் தேர்மேல் உற்றிகல் புரிந்து சூழ்ந்தார்.

வீரபுரந்தரன் வந்தான். அழகிய கையில் உள்ள வில்லை வளைத்தான். அம்புகளை மழைசொரிவதுபோன்று சொரிந்தான். அசுரசேனாதிபதிகள் தேரை அழித்தான். சோமகண்டன் என்னும் அசுரத் தலைவனின் சிரசை அம்பால் கொய்து அவனை வானில் சேரவைத்தான். சோமகண்டன் இறப்ப மற்றைய அசுரத் தலைவர்கள் தமது சேமத்தேரில் ஏறி மீண்டும் வீரபுரந்தரனுடன் போரிட்டு வளைந்தார்கள். 41

சுற்றினர் வீரன் மேனி சோரிநீ ரொழுகும் ஆற்றால்
முற்றுறு பகழி தூவ முழங்கழ லென்னச் சீறி
மற்றவர் சிலையுந் தேரும் மண்மிசை வீட்டி வல்லே
நெற்றியின் உரத்தின் தோளின் நெடுங்கணை பலவும் உய்த்தான்.

வீரபுரந்தரனை அவர்கள் சுற்றி வளைத்து அவன் மேனியிலிருந்து இரத்தம் வடியும்படியாக முழு அம்புகளையும் அவர்கள் சொரிதலும், அதுகால் வீரபுரந்தரன் முழங்கிடும் நெருப்புப்போல் சீறி; அம்புகளைவிடுத்து அவர்களது தேரையும் வில்லையும் அழித்து பூமியில் வீழ்த்தி அந்த அசுரர்களது நெற்றியில், நெஞ்சில், தோளில் நேர் இலக்காக சென்று பட்டுருவ நெடிய அம்புகள் பலவும் விடுத்தார். 42

உய்த்தலும் அவுணர் வேந்தற் குற்றுழி யுதவ நின்ற
மெய்த்திற லாற்ற லாளன் மேகனென் பவனோர் தண்டங்
கைத்தல மிசையி லேந்திக் கணப்படை வீரன் தேர்மேல்
மத்திகை முட்கோல் கொண்ட வலவனை மோதி ஆர்த்தான்.

இவ்வாறு செலுத்தலும் அசுரத் தலைவர்கட்கு வேண்டியபோது; போர்செய்ய உதவநின்ற உண்மையான திறலுடையவீரன் மேகன் என்பவன் ஓர் தண்டாயுதத்தைக் கையில் பிடித்துக்கொண்டு; பூதப்படைக்கு தலையாய வீரராகும் வீரபுரந்தரனது தேர்மேல் சவுக்கும் கடிவாளமும் கையில்கொண்டு தேர் செலுத்திய சாரதி உட்கும்படி தலையில்மோதி அடித்து சத்தமிட்டான். 43

மோதலுந் தனது பாகன் முடிந்திடு தன்மை காணூஉ
மேதகு தலைவன் வீர புரந்தரன் வேலொன் றேந்தி
ஈதினின் முடிதி என்றே ஏவினன் ஏவ லோடும்
பூதல மிசையே வீழாப் பொன்றினன் புயலின் பேரோன்.

மேகன் மோதுதலும் தனது சாரதி இறந்ததன்மையை மேன்மையான கணத் தலைவர் வீரபுரந்திரர் கண்ணுற்று ஓர் வேலாயுதத்தை எடுத்தேத்தி மேகனே! இவ் வேலால் நீமுடிவாய் என்று வேலைச் செலுத்தினான். அவ்வணம் வேலைச் செலுத்தலும் அதுவந்து படுதலும பூமியில் சாய்ந்து விழ்ந்து இறந்தான் மேகன் என்னும் பெயருடையவன். 44

புயலுறு நாமத் தண்ணல் பொன்றலு அதனை நாடி
அயலுறு தானை வீரர் அஞ்சினர் அகன்று போக
இயலது தன்னை நோக்கி எரிமுகன் எரியிற் சீறிப்
பயிலுறு சிலையொன் றேந்திப் படையொடுங் கடிது வந்தான்.

மேகன் என்னும் நாமமுடைய அசுரவீரனனவன் இறந்துபோதலும் அதனைக் கண்டு அயலாக நின்ற அசுரசேனைத் தலைவர்யாரும் அஞ்சினராய் அவ்விடம் விட்டு அகன்றுபோய்விட; இந்த இயல்பினை நோக்கிய அக்கினிமுகாசுரன் நெருப்பினைப் போல்சீறிக்கொண்டு தான்பயின்றதொரு வாலாயமான வில்லை எடுத்து படையுடன் அவ்விடம் விரைவில் வந்தான். 45

**வேறு**

வளைந்தான் தனிப் பெருவில்லினை மருவார்மனம் வளைய
விளைந்தான் அவட் சிறுநாணொலி மிகவார்த்தனன் விண்மேல்
முளைத்தார்தரு பிறைபோல்வதொர் முனைவாளிகள் தெரியாக்
கிளைத்தார்தரு பூதப்படை கேடுற்றிடப் பொழிந்தான்.

அக்கினிமுகன் தனியான பெருவில்லை வளைத்தான். பகைவர் மனம்கோணிச் சலித்திடச் சிறிதே அதில் நாணோசை செய்தான். மிகக் கூச்சலிட்டான். வானின்மேல் முளைத்தெழுந்ததொரு இளம்பிறை போன்ற முகமுடைய கணைகளை தெரிந்தெடுத்து கூட்டமாக நின்று ஆரவாரிக்கும் பூதப்படை கேடுற்றழியும்படி அம்புகளைப் பொழிந்தான். 46

தலையற்றனர் கரமற்றனர் தாளற்றனர் தோளா
மலையற்றனர் மார்பற்றனர் வாயற்றனர் செய்யுங்
கொலையற்றனர் செவியற்றனர் கூறுற்றிடு நாவின்
நிலையற்றனர் படையற்றனர் நெடும்பூதர்கள் எவரும்.

அம்புகள் படப்பட நெடிய பூதங்கள் எவரும் தலையற்றார்கள்; கையற்றார்கள்; காலற்றார்கள்; மலைபோன்ற தோளற்றனர்; நெஞ்சற்றனர்; வாயற்றனர்; செய்கின்ற கொலைகெட்டழிந்தனர்; காதுகள் அற்றனர்; கூறும்நாநின்ற நிலையறுபட்டனர். கைப்பிடித்த படைகளும் அறுந்தனர். 47

ஆரிற்றன சகடிற்றன அச்சிற்றன கிடுகின்
ஏரிற்றன கொடியிற்றன முடியிற்றன ஈர்க்கும்
மூரிப்பரி மாவிற்றன முருகன்படை வீரர்
தேரிற்றன படையிற்றன செருவிற்றன அன்றே.

முருகப்பெருமான் படைவீரர்கள் ஏறிய தேர்கள்மேலும் அக்கினிமுகன் அம்புகள் படலால் தேரின் பண்டியகவாய் அழிந்தன; சில்லுகள் உடைந்தன; அச்சுமுறிந்தன; மரச்சுற்றுக்களின் எழில் அழிந்தன; கொடிகள் அறுந்தன; முடிகள் முறிந்தன; இழுத்திடும் பலமான குதிரைகள் இறந்தன; இவ்வாறு தேர்கள் அழிந்தன; வீரர்கள் பிடித்தபடைகள் அழிந்தன) அவர்கள் போரிட இயலாது வலியிழந்தனர். 48

ஓடுற்றன குருதிப்புனல் உலகச்சுற வொலியா
ஆடுற்றன கவந்தக்குறை அலகைக்குல மிகவே
பாடுற்றன ஞமலித்தொகை பரவுற்றன கொடிமேற்
கூடுற்றன பாறுற்றன குறுகுற்றன கழுகே.

எங்கும் இரத்தம் ஓடியது: உலகம் அச்சுறும்படி உடற்குறைகள் ஆடுற்றன; பேய்கள் கூட்டம் பெருமிதத்தால் பாடுற்றன; நாய்கள் தொகை எங்கும் பரவுற்றன! காகங்கள் மேல் பறந்தோடிவந்தன; பருந்துகளும் மொய்த்தன; கழுகுகளும் குறுக்குற்றோடி வந்தன. 49

அக்காலையின் அதுகண்டனன் அழல்கான்றிட நகையா
மைக்காலனும் வெருவுற்றிடு வலிசேர்திறல் மகவான்
கைக்கார்முகந் தனைவாங்குபு கணைமாரிகள் சொரியாப்
புக்கான் அவு ணனுமாங்கெதிர் பொழிந்தான் சர மழையே.

அக்காலையில் அதைக்கண்டு கொண்டு மைபோலும் இருண்ட வடிவுடைய இயமனும் அஞ்சிடும் வீரம்கொண்ட வீரபுரந்தரன் நெருப்புக்கக்கிடச் சிரித்தான்; கையின் கொண்ட வில்லைவளைத்தான்; அம்புகளை மழைபோன்று சொரிந்தான்: அக்கினிமுகாசுரனும் வீரபுரந்திரன் அம்பிற்கு எதிர்தானும் அம்புகள் சொரிந்தான். 50

கரவன்விடு நெடுவாளிகள் கந்தன்படை ஞன்மேல்
வருகின்றன உறுகின்றன மன்னன்மகன் முன்னம்
பொருகின் றநம் வீரன்விடு புகர்வெங்கணை பலவும்
இரிகின்றன படுகின்றன விருவோர்பக ழியுமே.

வஞ்சனையுடைய அக்கினிமுகன் விடுகின்ற நீண்ட அம்புகள் கந்தக் கடவுளின்படை வீரன்வீரபுரந்தரன்மேல் வருகின்றன படுகின்றன; வீரபுரந்தரன் விடும்கூரிய அம்புகள் சென்று சூரன்மகன் முன்னம் போய் போரிடுகின்றன; இருவருடைய அம்புகளும் மாறுமாறி பட்டுப்பட்டு ஓடுகின்றன முறிகின்றன அழிகின்றன. 51

போரிவ்வகை புரிகின்றுழிப் புரைதீர்விறல் மகவான்
தேரும்பொரு சிலையுங்கணை செறியாவமுஞ் சிதையா
ஈரைம்பது சரமார்புற எய்தேயிகல் அவுணர்
ஆரும்படி புகழும்படி ஆர்த்தான் அறம் பேர்த்தான்.

போர் இவ்வகையாகப் புரிகின்ற நேரத்தில்; தீங்கு நீங்கிய வலியுடைய வீரபுரந்திரன் தேரையும் போரிடும் வில்லையும் அம்புவைத்த கூட்டையும் சிதைத்து; நூறு அம்புகளை நெஞ்சிற்கு நேராக விடுத்து அங்குநின்ற வீரமுடைய அசுரர் கொக்கரித்துப் புகழ்ந்து கூச்சலிடும்படி ஆர்த்தான் அறம் நீங்கிய அக்கினிமுகாசுரன். 52

மாறுகிய அவுணர்க்கிறை வலியுந்திறல் மகவான்
வீறனவை இழந்திட்டதும் விழிதீயுற நோக்கிச்
சீறுச்சிலை வளையாக்கணை சிதறுவசை பலவுங்
கூறுவெதிர் புகுந்தாரவன் துணையாமெழு குமரர்.

பகையாகிய அசுரர்க்கு தலைவனான அக்கினிமுகன் திறம்படச் செய்த செயலையும், அதனால் வீரபுரந்தரர் தேரிழந்து படையிழந்து வலியிழந்து நின்றிட்ட தன்மையையும் அவரின் மற்றை ஏழுதம்பியரும் கண்ணில் நெருப்பெழப் பார்த்து; சீறி வில்லை வளைத்து அம்பு சொரிந்து வசைவார்த்தைகள் பலவும் கூறி அக்கினிமுகனுடன் போரிட வந்தார்கள். 53

இடிகாலுறு முகிலாமென எழுவீரரும் ஏகிக்
கடிதேமுனி வொடுசிந்திய கணையாவையும் விலக்கா
விடமாகிய எரிமாமுகன் விறலோர்புய வரைமேல்
வடிவார்கணை பலசிந்துபு மழையாமென மறைத்தான்.

இடியைக்கக்கிடும் பெருமுகில்போல் வேகமுடன் எழுவீரரும் முன்வந்து முனிவுடன் விரைவாக செலுத்தியிட்ட அம்புகள் யாவையும் அறுத்துத்தள்ளி; அவர்க்கொரு நஞ்சான அக்கினி முகாசுரன் வீரமுடைய அந்த ஏழுபேரின் மலைபோன்ற தோள் மேல் வடிக்கணைகள் பலவற்றை மழைபோலச் சொரிந்து அவர்களை அம்பினால் மறைத்தான். 54

சகத்தானவர் புகழப்படு தலைவன் மகன் சரங்கள்
மிகத்தான்விட மெலிவுற்றிடும் எழுவீரரும் வெய்யோன்
முகத்தாயிரங் கரத்தாயிரம் உரத்தாயிரம் மொய்ம்பின்
அகத்தாயிரங் கணைபாய்ச்சினர் அவன்றேரையும் அறுத்தார்.

உலகில் உள்ள அசுரர்களால் புகழப்படும் தலைவன் சூரபன்மன் மைந்தன் அக்கினிமுகன் விடுத்த அம்புகள் மேன்மேலும் வந்து படுதலால் மெலிந்திடுகின்ற ஏழுவீரரும்; பதிலாக அக்கினிமுகன் முகத்தில் ஆயிரம் அம்பும் கையில் ஆயிரம் அம்பும் செலுத்தி; அக்கினி முகன் தேரையும் அறுத்தெறிந்தார்கள்; 55

## வேறு

அறுத்திடும் எல்லையின் அழலின் மாமுகன்
மறித்துமொர் தேரிடை வாவி வல்லைபோய்
எறித்தரு கதிருடை யெழுவர் தம்மையுஞ்
செறுத்தெரி விழித்திவை செப்பல் மேயினான்.

தேரையும் அறுத்திட்ட நேரத்தில்; அச்கினியின் பெருமுகமுடைய அசுரன் மீண்டொரு தேரிடைப் பாய்ந்து விரைவாகச் சென்று எறிந்திடும் கதிருடைய மேனி கொண்ட ஏழுவீரரையும் கோபித்து நெருப்பெழப் பார்த்து இந்த வார்த்தையை சொல்லல் உற்றான். 56

ஒன்றொரு படையினால் உங்கள் ஆவியைத்
தென்றிசை மறலியார் தெவிட்ட நல்கியே
வென்றிகொள் மொய்ம்புடை விடலை தன்னையுங்
கொன்றிடு கின்றனன் என்று கூறினான்.

ஒரேஒரு படையினால் உங்கள் எழுவரின் உயிரையும் தென்திசையுள்ள இயமனுக்கு உண்டு தெவிட்டும்படி இனித்திடக் கொடுத்து; பின்பு வெற்றிதரும் தோளு வீரவாகுவையும் கொன்றிடுகின்றேன் பார்த்திருங்கள் என்று கூறினான். 57

கூறுபோ தத்தினிற் குமரன் தானையோர்
வேறுவே றடுகணை வீசி வெய்யவன்
ஏறுதேர் தன்னையும் இவுளி தன்னையும்
நூறினார் அவனுடல் நூழை யாக்கினார்.

கூறுகின்ற வேளையில் குமரதேவனின் சேனைத்தலைவர் எழுவரும் வேறுவேறு தாம்தாம் அம்புகளைச் சொரிந்து அக்கினிமுகன் ஏறிய தேரினையும் குதிரைகள் தன்னையும் அழித்ததுடன் அவன் உடல் முழுவதையும் அம்பினால் துளைசெய்தார்கள். 58

ஆயது காலையில் அவுணன் வேறொரு
பாயிருந் தேரிடைப் பாய்ந்து கண்ணுதல்
தூயவன் படையினை எடுத்துத் துண்ணென
நேயமொ டருச்சனை நிரப்பித் தூண்டினான்.

அவ்வேளையில் அக்கினிமுகன் வேறொரு மிகப்பெரிய தேரிடைப் பாய்ந்து நெற்றிக்கண்ணுடைய சிவமூர்த்தியின்படையைக் கையில் எடுத்து உடனே உள்ளன்பால் அருச்சனை புரிந்து நிரப்பி சிவப்படையை எழுவர்மீதும் செலுத்தினான். 59

அடலெரி முகத்தினான் ஆதி நாயகன்
படைதொட அன்னது படியும் வானமும்
வடவையின் உருவமாய் வரலும் அச்செயல்
விடலைகள் எழுவரும் வெகுண்டு நோக்கினார்.

அனைத்தையும் அழித்திடும் அக்கினியின் முகமுடைய அசுரன் ஆதியான பெருமானின் சிவப்படையை விடுத்திடலும், அப்படையானது வானமும் பூமியும் தழல் சிந்திட வடவை என்னும் நெருப்பின் வடிவாகி வரலும் அந்தப் படையின் செயலை இளந்தாரிகளான ஏழுவீரரும் கோபமுடன் பார்த்தார்கள். 60

அனற்படை அன்னதால் அற்கு மாறதாப்
புனற்படை விடுக்குவ மென்று புந்திகொண்
டினப்படு துணைவர்கள் யாவரும் வாருண
முனைப்படை தூண்டினர் முடியுஞ் செய்கையார்.

கண்டதும் எழுவரும் நினைத்தார்கள் இதைப்பார்க்கும்போது இது அக்கினிப் படையாகும்; ஆதலின் அதற்கு மாறாக வருணப்படையை விடுப்பதே முறையாகும் என மனதில் தேறிக்கொண்டு ஒரே தன்மைவாய்ந்த எழுவரும் வருணாஸ்திரத்தை முறையாகச் செலுத்தினார்கள். முடிவாகும் விதியால் இச்செயல் கொண்டார்கள். 61

தூண்டிய வாருணத் தொல்லை மாப்படை
சேண்டொடர்ந் திடுதலும் தேவன் தீப்படை
ஆண்டெதி ராகியே அவற்றை நுங்கிற்றால்
ஈண்டொரு முனிகடல் ஏழும் உண்டென.

இவர்கள் செலுத்திய மிகமுதுமையான வருணப்படை வானில் எழுந்துவரலும் தேவாதி தேவனின் தீவடிவான சிவப்படைக்கலம் சென்று தன்முன்வந்த வருணப் படையை விழுங்கியது. எதுபோலெனின் ஏழு கடலினையும் இங்கு ஒரு அகத்திய முனி வன் உண்டவாறுபோல். 62

சலபதி படைகளைத் தடிந்து வாய்மடுத்
துலகுளோர் வெருவர ஊழி யான்படை
வலியுட னேகிஏழ் வயவர் தம்மையும்
மெலிவுசெய் துயிர்கொடு மீண்டு போயதே.

சலக்கடவுளின் படையான வருணப்படையை விழுங்கி அழித்து உலகுளோர் அஞ்சிட ஊழிக்கெலாம் ஒருவனாய சிவன்படை மிகு வலியுடன் சென்று அந்த வீரர் எழுவரையும் ஊடுருவி மெலியவைத்து முடிவில் அவர்களை நாசஞ்செய்து உயிரை நீக்கிவிட்டு மீண்டு அக்கினிமுகன்பால் போயது. 63

மீண்டது போதலும் வீரர் அவ்விடை
மாண்டனர் கயிலையின் மருங்கு போயினார்
மூண்டிடு பெருங்கனல் முகத்தன் அங்கது
காண்டலும் ஆர்த்தனன் களிப்பில் உம்பரான்.

சிவப்படைக்கலம் மீண்டு போதலும் வீரர்கள் எழுவரும் அவ்விடத்து வீழ்ந்து மாண்டார்கள். அவர்கள் உடல் இறந்திட உயிர் நீங்கி கைலமலையின்பால் போயினார்கள். அதுகால் மூண்டிடும் பெரும் தீப்போன்ற முகமுடைய அக்கினிமுகாசுரன் அங்கு அதனைக் காண்டலும் மகிழ்வால் ஆர்த்தான். அவன் களிப்பின் உன்னத நிலையிலானான். 64

ஒருங்குற வீரர்கள் உலந்து வீடலும்
மருங்குற நோக்கிய வயவெம் பூதர்கள்
கரங்களை மறித்தனர் கலங்கி வாய்புடைத்
திரங்கினர் வெருவினர் இரிந்து போயினார்.

எழுவீரரும் ஒருங்கே இறந்து வீழ்தலும்; அதனை பக்கரில் நின்று கண்ட வீரமுடைய பூதங்கள் யாவும் கைகளை உதறினார்கள். கலக்கமடைந்து வாயில் அடித்து ஆ! ஆ! எனக் கதறி பயந்து அவ்விடம் நில்லாது பறந்தோடிப்போயினார்கள். 65

நெற்றியில் வீரர்தம் விளிவு நீங்கலா
துற்றிடு பூதர்கள் உலேந்து சாய்வதுந்
தெற்றென நோக்கினன் செயிர்த்து விம்மினன்
வெற்றியின் கிழவனும் வீர வாகுவே.

முன் அணியில் நின்ற ஏழுவீரரும் அழிந்ததும்; எதுவரினும் நீங்காது நிற்கும் பூதங்கள் உலேந்தலேந்து பின்னிடுவதும்; மிக்கதொரு விரைவுடன் கண்டார்; பெருமூச்செறிந்து அப்படியுமாமோ? என இரங்கி விம்மினர். வெற்றிக்கு ஓர் விண்ணன வீரவாகுதேவர். 66

வீரமொய்ம் புடையவன் வெருவ லீரெனப்
பாரிடக் கணங்களேப் பாணி யாலமைத்
தோரிறை முன்னரே ஒருவன் தேரொடும்
ஆரழல் முகத்தன்முன் அணுகப் போயினன்.

வீரத்தோள்உடைய அண்ணல் வீரவாகுதேவர் பின்னிட்டோடும் பூதங்களே நோக்கி அஞ்சாதீர் என கையமைத்துக் காட்டி; ஒரு இமைப்பொழுதின் முன்பாக தனது தேருடன் கொடிய அக்கினிமுகன் முன்பாக மிகநெருங்கப் போயினர். 67

போய்க்குறு குற்றுழிப் பொருநர்த் தேய்த்தலின்
வீக்கிய கனேகழல் வீர வாகுவைத்
தாக்கெரி முகமுடைத் தறுகண் வெய்யவன்
நோக்கினன் வெகுண்டிவை நுவறல் செய்குவான்

அக்கினிமுகனேச் சென்று அணுகியகாலேயில்; பகைவரை அழித்தலாலே சிறப்புடன் அணிந்திட்ட வீரகெண்டைகள் ஒலித்திடும் காலுடைய வீரவாகுதேவரை; சுட்டெரிக்கும் அக்கினிமுகமுடன் தறுகண்மைமிக்க கொடிய அசுரன் கண்டு இதனேச் சொல்கின்றன்: 68

எதிரா கியபூ தரைஏ னேயரை
மதியேன் நினேயே அடவந் தனன்நீ
அதுகா லேயின்இங் ஙன்அடைந் தனேயால்
விதியே உனேஎன் முன்விடுத் ததுவே.

வீரனே! எனக்கு எதிராக வந்த பூதங்களேயோ அன்றி மற்றையோரையோ நான் வெல்வது ஒருபொருளாக மதிக்கமாட்டேன். உன்னேக் கொன்றிட எண்ணியே இங்குவந்தனன், நீயோ அதுகாலேயிலே நேரிட்டு என்முன்வந்தாய். விதிதான் உன்னே என்முன்னர் கொண்டு வந்து விடுத்தது: 69

கொன்றய் பலரைக் கொடுவெஞ் சமரின்
வென்றய் பலரை மிகைசெய் தனேயாய்
நின்றய் வருவாய் நினதா ருயிருக்
கின்று குவதோ இறுதிப் பகலே.

எம்அசுரர் பலரை நீகொன்றய்; கொடிய வெம்போரில் பலரை நீவென்றய்: இன்னும் பலமோசமான செயல்புரிந்தவனுய் அங்கு நின்றய்; இப்போது என்முன் வருகின்றய். இன்றுபோலும் உனது உயிருக்கு முடிவாகும் ஓர்நாள். 70

முன்னர் பொருதே முரிவுற் றவர்போல்
என்னைக் கருதேல் இனிஓ ரிறையில்
உன்னைத் தலைகொய் தொருசென் னியையும்
மன்னர்க் கிறைசே வடிவைத் திடுவேன்.

முன்னர் உன்னுடன் போர்செய்து ஓடினரைப்போன்று என்னை எண்ணாதே! இனி ஓர் இறைப்பொழுதில் உன்னைத் தலைகொய்து அந்த ஒரு தலையையும் நான் எடுத்துச்சென்று எல்லா அசுரர்க்கும் இறைவனை என்தந்தையின் சேவடிகளில் காணிக்கையாக வைத்திடுவேன். 71

பூண்பால் முலைமா தர்புணர்ச் சியெனும்
ஆண்போர் தனிலே வலியற் றழியும்
ஆண்பால் ஒருவன் அவனே அலனே
ஏண்பால் உனையான் இவண்வென் றிலனேல்.

பூண் அணிந்த பருத்த தனங்களையுடைய பெண்களுடன் உறவு கொள்கின்ற ஆண்மை விளங்கும் போரில் அவர்களை திருப்தியாக்க முடியாது வலிகெட்டு சோர்வுறும் ஓர் ஆடவன் நான் என்று என்னை நினைத்துக்கொள் உன்னை எனது வலியால் யான் இவ்விடம் வென்றிலேன் எனின்! 72

என்னா எதிரா இவையொப் பனசொற்
சொன்னான் அதுகேட் டிடுதொல் விறலோன்
பொன்னார் தருசெங் கைபுடைத் துநகைத்
தொன்னான் முகநோக் கியுரைத் திடுவான்.

என்றுகூறி வீரவாகுதேவரை எதிர்த்து இவை போன்ற வார்த்தைகளை சொன்னான் அக்கினிமுகன். அதைக் கேட்டிட்ட மிகுமுதுமையான வலியுடைய வீரவாகு தேவர் பொன்னார்ந்த தமது சிவந்தகையை அடித்து சிரித்து பகைவன் அக்கினி முகன் முகம் நோக்கி சொல்கின்றார். 73

முளையார் தருபொன் னவன்முந் துசமர்
விளையா வடிவந் தனைவிட் டகலா
வளையார் புனல்புக் கனன்அன் னவனுக்
கிளையாய் ஒருநீ எவணுய் குதியோ.

அழகிய பொன் உருவம்கொண்ட இரணியன் முன்னே இங்கு வந்து போரிட்டு தோற்று தனது வடிவத்தை விடுத்து இவ்விடம் விட்டகன்று ஓடிச்சென்று சங்குகள் இரைகின்ற சமுத்திரத்துப் புகுந்து கொண்டான். அவனுக்குத் தம்பியாக வருகின்ற நீ எங்கு ஓடி ஒளிப்பாய் அதை இப்பொழுதே சொல்? 74

மூண்டார் அமர்செய் திடுமொய்ம் பரெலாம்
மாண்டார் கதிரோன் பகைமற் றொருவன்
மீண்டான் அவனும் விளிவுற் றிடுநீ
ஈண்டா ருயிர்தோற் றிடவே கினையோ.

எம்முடன் போர்மூண்டுவந்து போரிட்ட உங்களது வலியுடையார் எல்லாரும் மாண்டார்கள். சூரியன் பகைவனை பானுகோபன் மட்டும் தப்பி திரும்பிப்போனான். அவனும் இறப்பான். நீயும் இங்கு உனது அருமையான உயிரைத் தோற்கடிக்க வந்தாயோ? 75

வீடிச் செருவில் விளிவா குதியோ
பேடித் தொழில்கற் றிடுபின் னையென
ஓடிக் கடல்புக் குயிருய் குதியோ
நாடிக் கடிதொன் றைநவிற் றுதியே.

அக்கினிமுகனே! நீ போரில் வீரமுடன் போரிட்டு இறந்து அழியப்போகின்ருயோ? அல்லது பேடித்தொழிலை கற்றுள்ள உனது தமையன் ஒருவன் போன்று பயந்தோடி கடலினுள் புகப்போகிருயோ? இப்போதே எப்படிச் செய்வாய் என உணர்ந்து செய்திடும் இரண்டில் ஒன்றை விரைவாகச் சொல்? 76

பார்காத் திடினும் பலதா னவரும்
நேர்காத் திடினும் நிலைபெற் றழியாச்
சூர்காத் திடினுந் தொலைவில் விறலோர்
ஆர்காத் திடினும் அடுவேன் உனையே.

இப்பூமி உன்னைக் காத்திடினும்; பல அசுரரும் வந்து நேர்நின்று உன்னை மறைத்துக் காத்திடினும்; நிலைபெருக வாழ்ந்திடும் அழிவிலாத சூரபன்மன் உன்னைக் காத்திடினும்; அல்லது அழிவிலாத வீரர் ஆர்கார்த்து நின்ருலும் உன்னை விடாது நான் கொல்வேன். 77

என்றிங் கிவைவீ ரன்இசைத் திடலுங்
குன்றன் னசினத் தழல்கொம் மெனவே
சென்றுள் ளமலைத் துழிதீ முகவன்
வன்றின் சிலையொன் றைவளைத் தனனே.

என்று இங்கு இவைகளை வீரவாகுதேவர் சொல்லலும் அதுகேட்ட அக்கினி முகன் மலைபோன்ற கோபநெருப்பு விரைவாக எழுந்து உள்ளத்தை அலைத்திடலும் வேறு பேச்சின்றி உடனே மிக்கதொரு வலியான வில்லை எடுத்து வளைத்தான். 78

**வேறு**

நடுத்தான்அகன் றிடுசூர்மகன் நாணோதையைச் சிலைநின்
றெடுத்தான்எடுத் தலும்வெய்யவன் இரவோனுடன் இரிந்தான்
உடுத்தான்உதிர்ந் தனசேடனும் உலைந்தான் உலகனைத்துங்
கெடுத்தான்இவ னெனவானவர் கிளையோடின அன்றே.

நடுவான நீதி நிலையை அகன்றுநின்ற சூரபன்மன் மகன் அக்கினிமுகன் வளைத்த வில்லில் நின்றும் நாணோசையை எடுத்தான். அவ்வணம் எடுத்தலும் அதுகேட்ட சூரியன்; சந்திரனுடன் கூடியே அச்சத்தால் ஓட்டமெடுத்தான். வெள்ளிகள் உதிர்ந்தன. ஆதிசேடனும் உலைந்தான். ஐயய்யோ உலகனைத்தையும் இந்த அக்கினிமுகன் கெடுத்தான் எனக் கூறி தேவர்கூட்டம் ஓடிப்போயின. 79

அக்காலையின் முகமாறுடை அமலன்றனக் கன்பன்
கைக்கார்முகம் இருகால்வளைந் தொருகாலொலி காட்டத்
திக்கானன முடையான்முதல் தேவாசுரர் துளங்கி
இக்காலம தோபார்முழு திறுங்காலம தென்றார்.

அக்காலையில் ஆறுமுகமுடைய நின்மல மூர்த்தியாகும் முருகப் பெருமானுக்கு அன்பன் வீரவாகுதேவர் கைக்கொண்ட வில்லை இருபக்கமும் நன்கு ஒன்றவளைத்து ஒரு கால் நாணின் ஓசையைக்காட்ட; திக்குகள்தோறும் முகமுடைய பிரமன்முதல் தேவர்களும் அசுரர்களும் திடுக்கிட்டு நடுங்கி இக்காலத்திலோ பூமிமுழுவதும் அழிந்திடும் காலம் எனக் கூறினார்கள். 80

என்னுவிசைத் திடுமெல்லையில் எரிமாமுகன் ஈரேழ்
கொன்னார்கணை விடுத்தார்த்தனன் குறுகுற்றது வருமுன்
மின்னுமெனப் பதினாற்கணை விடுத்தேயவை விலக்கிப்
பொன்னார்தரு திறல்மொய்ம்பினன் புயலேறெனத் தெழித்தான்.

என்று அவர் கூறிடும் எல்லையில் அக்கினிமுகாசுரன் பதினான்கு மிகவும் தலை சிறந்த அம்புகளை விடுத்து ஆர்ப்பரித்தலும்; அவைகள் நெருங்கி வருதற்கு முன்பே மின்னலைப்போன்று பளிச்சிடும் பதினான்கு அம்புகளை இலக்குமிவாழும் தோளுடைய வீரவாகுதேவர் விடுத்து அவைகளை அழித்து இடிபோலப்போல கர்ச்சித்தார். 81

செஞ்ஞாயிறு கதிர்கான்றெனத் தீமாமுகத் தவுணன்
ஐஞ்ஞான்கெனுந் தொகைபெற்றிடும் அயில்வெங்கணை தொடுப்ப
எஞ்ஞான்றுமுற் றிடுசீர்த்தியன் இருபான்கணை துரந்து
மைஞ்ஞான்றிடு முகில்மேற்செலு மருத்தாமெனத் தடுத்தான்.

செங்கிரணங்களை உடைய சூரியன் ஒளி வீசினாற்போலும நெருப்புச் சுவாலிக்கும் முகமுடைஅசுரன் அதன்பின் இருபது வேல்போலும் கூரிய கொடும் அம்பினை விடுப்ப; அதனை எந்நாளும் சீராகிய புகழினையுடைய வீரவாகுதேவர் தாமும் இருபது அம்பினை; கருமைசெறிந்த மழைமுகில்மேல் செல்லும் காற்றைப்போல் விடுத்து அழித்தார். 82

கண்டங்கது கனல்மாமுகன் கணையாயிரந் துரந்து
புண்டங்கிய தனிவேலுடைப் புனிதன்றன திளவல்
முண்டம்புக உய்த்தேதிறல் முதுவால்வளை அதனை
அண்டங்கிழி படஊதினன் அவுணப்படை புகழ.

தனது அம்புகள் அழிந்ததனை அக்கினி முகன் கண்டு ஆயிரம் அம்பினை விடுத்து; பகைவரின் நிணம் தோய்ந்த தனி வேலுடைய புனிதனாகும் குமரமூர்த்திக்கு இளையோரான வீரவாகுதேவரின் நெற்றியில் புகச்செய்து; அதனால் தனது திறமையான வெள்ளைச் சங்கை வாயில்வைத்து அண்டங்கள் கிழிபடவும் அசுரர்களின் படைகள் புகழவும் ஊதினான். 83

ஆராரும் வியக்குந்திறல் அடல்மொய்ம்பினன் அங்கண்
ஓராயிரம் வடிவாளிகள் ஒருங்கேதொடுத் துய்த்துச்
சூராகிய அவுணன்தரு தொல்லைத்தனி மைந்தன்
தேரானதும் பரியானதும் சிலையானதுஞ் சிதைத்தான்.

ஆராரும் வியந்து பாராட்டும் படி வெற்றி கொண்டிடும் திறமையுடைய தோளினைக்கொண்ட வீரவாகுதேவர் அவ்விடத்து ஓர் ஆயிரம வடிக்கணைகளை ஒரேகாலத்துத் தனது வில்லிலே தொடுத்து விடுத்து சூரனாகிய அசுரன் பெற்ற மிகுமுன்னையோனாகும் தனிமைந்தன் அக்கினி முகாசுரனுடைய தேரையும் குதிரையையும் வில்லையும் சிதைத்தழித்தார். 84

சிதையும்பொழு தயல்வேறொரு தேரின்மிசைப் பாயாக்
கதையொன்றினை விடுத்தான்எரி கனல்மாமுகன் அதன்மேல்
குதையொன்றினைத் துரந்தேயருட் குமரேசனுக் கிளையோன்
சுதையொன்றியக் களத்தேவிழத் துண்டம்பல கண்டான்.

இவைகளை அம்பால் சிதைவாக்கிடுங்கால் அக்கினிமுகன் வேறொரு தேர்மேல் பாய்ந்து ஏறி ஓர் தண்டாயுதத்தை எடுத்து வீரவாகுதேவர்மேல் வீசிடுதலும், அது கண்டு அருளாகும் ஆறுமுகமுடைய ஈசனுக்கு இளையவரான வீரவாகுதேவர் அத்தண்டிற்கு மாறாக; தாம் ஓர் குதாயுதத்தை விடுத்து அத்தண்டு கெட்டழிந்து நீறாகி அப்போர்க்களத்தே வீழும்படி பலதுண்டமாக்கினார். 85

மற்றோர்சிலை யினைவாங்கி வளைத்தேகனல் முகத்தோன்
காற்றோன்படை துரக்கின்றுழி இவனும்மது கடவக்
கூற்றோன்படை தொடுத்தானவன் குமரன்றனக் கிளையோன்
வேற்றோர்படை துரந்திட்டிலன் அதுவே செலவிட்டான்.

வேறொருவில்லை அக்கினிமுகன் எடுத்து வளைத்து வாயுதேவன்படையை அதில் பூட்டி விடுத்தபோது, வீரவாகுதேவரும் அப்படையையே தானும் விடுத்து மாற்றிட; அக்கினிமுகன் பின்னர் இயமனதுபடையை விடுதலும் குமரப்பெருமானுக்கு இளையோரான வீரவாகுதேவர் வேறொருபடையை விடாது, தாமும் இயமனதுபடையை அப்படைக்கு மாறாகச் சென்றிட விடுத்து அதனை அழித்தார். 86

மாகத்துறு கதிர்வெம்படை மன்னன்தரு மதலை
வேகத்தினில் விடவாங்கது விடுத்தேயது விலக்கி
நாகத்தமர் கறைநீவிய நனிகூரிய கணைநூ
றுகத்திடை படவேதுரந் தடல்மொய்ம்பினன் ஆர்த்தான்.

பின்னர் சூரன்தந்த அக்கினிமுகன் வானத்தில் விளங்கிடும் சூரியதேவனின் படையை வேகமாக விடுத்துள்ளபோது வீரவாகுதேவர் தாமும் சூரியன் படையை விடுத்து நீக்கி; பின்னர் தொடர்ந்து நாகபாம்பினிடத்தினுள்ள நஞ்சைப் பூசியதும், மிகவும் கூரியதுமான நூறு அம்புகளை அக்கினிமுகாசுரன் உடல் எங்கும் சென்று படும்படி விடுத்து வீரத்தோளுடைய வீரவாகுதேவர் பேரோசையுடன் ஆர்த்தார். 87

தருமத்தியல் நிறுவுற்றிடு தக்கோன்விடு சரங்கள்
மருமத்தினிற் படுகின்றுழி வானோரமு தருந்தும்
கருமத்தினில் விரவிக்கடல் கடையக்கவிழ்ந் திட்ட
பெருமத்தென நிலைசோர்ந்துதன் பெருந்தேர்மிசை வீழ்ந்தான்.

தருமத்தின் இயல்பை உலகில் நிறுவிடும் தகுதியுடைய வீரவாகுதேவர் விடுத்துள்ள அம்புகள் அக்கினிமுகன் உடலில் சென்றுபடுகின்றபோது; தேவர்கள் அமுதம் உண்கின்றமைக்கு கொண்ட செயலிலே நெருக்கமாகக் கடலைக்கடைந்திட்ட போது மத்தாக பாவித்த மந்தரமலை சரிந்ததுபோன்று அக்கினிமுகன் நின்ற நிலை சோர்ந்து தனது பெரிய தேர்மீது விழுந்தான். 88

விழுகின்றதொ ரெரிமாமுகன் வியன்மார்பெனும் வரைநின்
றிழிகின்றன நதியாமென எருவைப்புனல் உயிரும்
ஒழிகின்றது வருகின்றது லாவுற்றது தேற்றம்
அழிகின்றது வருமந்தகன் அச்சுற்றனன் அணுக.

விழுந்துள்ள அக்கினிமுகாசுரனுடைய பெரும் மார்பு என்னும் மலையில் நின்றும் பெருகிடும் அருவியாறுபோல இரத்த நீர் வடிகின்றது. உயிரும் மங்குகின்றது. பின்பு வருகின்றது. இப்படி உயிர் ஊசலாடுகின்றது. அறிவு அழிகின்றது. ஆனால் இந்நிலையில் இவனது உயிரைப் பிடிக்கலாமெனவரும் இயமன் அவனைக் கிட்ட நெருங்க அச்சம் கொள்கிறான். 89

விளிந்தானென மயங்குற்றவன் வெஞ்சூர்உரும் ஏற்றால்
நெளிந்தாடர வசைந்தாலென நெடுந்தேர்மிசைப் பெயராத்
தெளிந்தாயிடை யிரங்கிப்பொரு திறல்வன்மைய திலனாய்
எளிந்தான்எளிந் திடுகின்றவன் இத்தன்மைசிந் தித்தான்.

இறந்தான்போல் மயக்கமுற்ற அக்கினிமுகாசுரன், கொடிய இடியேற்றால் தாக்குண்ட பாம்பு கிடந்து நெளிந்து அசைந்தாலென, நெடிய தனது தேர்மீது கிடந்து நெளிந்து அந்தரப்பட்டுப் பின்னர் ஒருகால் தெளிவுற்றபோது மனம் இரங்கி போரிடும் திறமைக்கு ஏற்ற வலியில்லாதவனாய் எளிமையானான். அவ்வாறு தாழ்வுற்றவன் தனது நெஞ்சினில் இவ்வாறு நினைந்தான். 90

மொழிபட்டிடு திறல்மாற்றலர் முனைவெஞ்செருத் தனில்யான்
அழிபட்டிடின் வருவாயென அந்நாட்சிறு காலைப்
பழிபட்டிடும் வெறியாட்டினைப் பயின்றேபலி யூட்டி
வழிபட்டதன் நகர்க்காளியை மனத்தின்மிசை நினைத்தான்.

பலராலும் புகழப்படுகின்ற திறமைசாலிகளாகும் பகைவர்களுடன் செய்திடும் கொடிய பெரும் போரில் யான் அழிந்துபோனால் நீ வரல்வேண்டும் என அந் நாளில் சிறு நாள்வரை பெரும் பழியினைப் பின்னர் தேடித்தரும் ஆட்டுப் பலியுடன் வெறியாடல் விழாவைச் செய்து வழிபட்டு நின்று வரம்பெற்ற தனது நகரில் உள்ள காளியைத் தனது மனதின் மீது நினைந்தான். 91

### வேறு

விஞ்சுந் தொல்விறல் மேவு சூர்தரு
மைஞ்சன் தன்னை மனத்தில் உன்னலும்
நஞ்சுந் துண்ணென நண்ணு காளிதன்
நெஞ்சந் தன்னில் நினைத்தல் மேயினள்.

அழிகின்ற தனது திறல்கள் யாவும் திரும்பவும் தெளியப் பெறுகின்ற; சூரபன் மன் பெற்ற மேகம்போலும் கருநிறமுடைய மைந்தன் அக்கினி முகன் தன்னை மனதில் அங்கு வரும்படி நினைத்தலும், அதனைத் தனது நெஞ்சிலே உணர்ந்து கொண்டாள். நஞ்சும திடுக்கிட்டு நடுங்கும்படியான கொடுமை உடைய காளி தேவி. 92

சூலங்கொண்ட லமர்ந்து தோன்றுவாள்
சூலங்கொண்ட லமந்த தோளினள்
கோலம்பெற்ற குலிங்க வேணியாள்
கோலம்பெற்ற குறுங்கொ லைக்கணள்.

அந்தக் காளிதேவி சூல்கொண்ட கருமேகத்தைப் போன்று கரிய நிறமுடைய வளாய்த் தோன்றுவாள். சூலப்படையை அணைத்திடும் தோள்கள் அசைய வருப வள். மிக்க அழகு பொருந்திய சிவந்த சடை உடையவள். குழிந்த கோலம் பெற்றதும் குறுகியதும் கொலை புரிவதுமான கண்ணை உடைவள். 93

போதங் கொன்று பொறுமை மிக்குளாள்
போதங்கொன்று பொலஞ்செய் தாளினள்
ஏதந் தீர்ந்திடும் எண்ண லார்சிரம்
ஏதந் தீர்ந்திடும் ஏம வாளினள்.

ஞான உணர்வை நீக்கிப் பொறுமையே மிகுந்து உடையவள். தாமரை மலரை ஒத்த செவ்விய சிலம்பணிந்த காலை உடையவள். எக்குறையுமில்லாத வலியான பகைவருடைய தலைகளை அறவே வெட்டிடும் மிகவும் அழகுடைய வாளை உடையவள். 94

சங்கா ரத்தணி தாங்கு கொங்கையாள்
சங்கா ரத்தணி தந்த செங்கையாள்
உங்கா ரத்தின் உரத்த ஆடையாள்
உங்கா ரத்தின் உரப்பும் ஓதையாள்.

சங்கில் நின்று பெறப்படும் முத்தின் மாலையை அணிந்தவள். சங்கினால் செய்துள்ள காப்பினை அணிந்த சிவந்த கையையுடையவள். இயல்பாகவே சிவந்துள்ள உரமான ஆடையை உடையவள்; உங்காரித்து அதட்டிடும் ஓசையை உடையவள். 95

ஞாலத் தேவரும் நாகர் வேந்தரும்
ஞாலத் தேவரும் ஏத்த நண்ணுவாள்
காலத் தீயர்க ளிற்றின் மேலையோர்
காலத் தீயர் கலங்கு காட்சியாள்.

பூமியில் உள்ள அந்தணர்களும், நாக அரசர்களும் தேவ உலகில் உள்ள தேவரும் வணங்கிட வருபவள். ஊழிக்காலத்துத் தீயும், யானைமேல் வரும் இந்திரரும் இயமன் என்னும் கொடியோனும் கண்டு கலங்கிடும் கோரக் காட்சி உடையவள். 96

அஞ்சத் தானடி யான வானவர்
அஞ்சத் தானடி பேர்த்து லாவுவாள்
நஞ்சத் தானவர் நைய வெம்மைசெய்
நஞ்சத் தானவர் சுற்றம் நல்குவாள்.

பிரமதேவர் வழித்தோன்றலான தேவர்கள் நடுங்கிடத் தனது காலினை எடுத்தசைத்து உலாவுவாள். நமது திடசத்தாக உள்ள முனிவர்கள் நைந்து வருந்திட, அவரினை நன்கு வருத்திடும் நஞ்சுபோலும் அசுரர்கள் குலம் பெருகிட அனுக்கிரகம் செய்பவள். 97

அங்கத் தன்மை யளாய மர்ந்திடும்
அங்கத் தன்மை யளாய காளிமால்
சிங்கத் தேறிய செல்வன் மைந்தன்முன்
சிங்கத் தேறினள் செல்லல் மேயினள்.

அவ்வாறன இயல்பான குணங்களை உடையவளாய் இருந்திடும் எண்கரமுமுடைய வளுமாகிய காளி. பெரியதோர் சிங்கத்தின் மீது ஏறிவரும் செல்வனுய சூரபன்மன் மகன் முன்னர் சிங்கவாகனத்தில் ஏறிக்கொண்டு வருவாளாயினள். 98

வில்லுச் சூலம் வியன்ம ழுக்கதை
எல்லைப் பல்படை யாவை யுங்கொளா
மல்லற் காளிகள் மாப்பெ ரும்படை
செல்லக் கூளி செறிந்து சூழ்தர.

கைகளிலே வில்லு, சூலம், பெரியதொரு மழுவாயுதம், கதாயுதம் ஆகிய எல்லையில்லாத பலபடையாவற்றையும் கையில் ஏந்தி மிகு வலிமை கொண்ட காளிகள் பெரும் சேனையாகத் திரண்டு செல்லக் கூளிப்படைகள் சூழ்ந்து வரவும். 99

மூதக் காார்ப்பொடு விண்ணை முட்டுற
வேதக் கூளிகள் ஏறு கேதனம்
ஊதச் சங்கம் ஒழிந்த பல்லியம்
மேதக் கோசை மிகுத்து மேவவே.

மிகு ஆரவாரத்துடன் வானை முட்டுறும்படி சிங்கங்கள் எழுதிய கொடிகளைத் துயர்புரியும் கூளிகள் பிடித்துவர; அவைகள் சங்குகளையும் ஊதிட; இதுவன்றி மற்றைய வாத்தியங்கள் யாவும் மேன்மையுடன் முழங்கி ஓசை மிகுந்துவர; 100

**வேறு**

விரைவொடு பறந்தலை மேவி வீழ்ந்தயர்
எரிமுக மதலையை எய்தி நோக்கியான்
உரமிகு ஒன்னலர் உயிரை உண்பன்நீ
பரிவுறல் என்றனள் அமைத்த பாணியாள்.

விரைவுடன் காளிதேவியானவள் போர்க்களத்தை அடைந்து; கீழே வீழ்ந்து அயர்கின்ற அக்கினிமுகாசுரனை அடைந்து நோக்கி: மகனே! யான் வலிமை உடைய உனது பகைவரின் உயிரை உண்பேன். நீ பரிவு கொள்ள வேண்டாம் என கையமைத்து நின்றாள். 101

இவ்வகை அருளியே இளவல் பாற்படும்
தெய்வதப் பூதர்தஞ் சேனை மேற்செலாக்
கவ்வைகொள் செருத்தொழில் கருதி ஆர்த்தனள்
ஐவகைப் பூதமும் அச்சங் கொள்ளவே.

இவ்வகை அக்கினிமுகாசுரனுக்கு அருள் புரிந்து எமது வீரவாகு தேவர்பால் நின்ற தெய்வீக முடைய பூத சேனையின் மேற் சென்று; கறுவியம் கொள்ளும் போர்த்தொழிலைப் புரிய எண்ணி ஆரவாரித்து கூச்சலிட்டாள். அதுகேட்ட மண் முதலிய ஐந்து வகையான பூதமும் அச்சம் கொண்டன. 102

ஆர்த்திடும் எல்லையில் அளக்கர் சூழ்ந்தென
ஆர்த்திடும் எல்லையில் அடல்வெம் பூதரும்
வேர்த்தனர் அழுங்கினர் மேற்சென் றேற்றனர்
வேர்த்தனர் அழுங்கினர் விண்ணு ளோரெலாம்.

காளிகள் உங்காரித்துச் சத்தமிட்ட எல்லையில் அவர்களை சமுத்திரம் வளைந்து கொண்டது போல; பேரிரைச்சலுடன் எல்லையிலாத கொடும் கொலை செய்திடும் பூதங்கள் கோபத்தால் வேர்த்து ஆத்திரம் கொண்டு காளிகள் முன்போய் எதிர்த் தனர். இச்செயல்கண்ட தேவர்கள் யாவரும் பயத்தால் வேர்த்தார்கள். மேலும் என்ன விளையுமோ எனக் கவலையுற்றனர். 103

காளிகள் சூலம்வேல் கணிச்சி கார்முகம்
வாளிகள் சிந்தினர் வரைநெ டுந்தரு
நீளிகள் எழுக்கதை நேமி இன்னன
கூளிகள் வீசினர் குறுகிப் போர்செய்தார்.

எதிர்த்த பூதங்கள் மேல் காளிகள் சூலம் வேல் கணிச்சி பெருவில்லால்விடுத் திடும் அம்புகள் ஆகிய படைகளைச் சொரிந்தார்கள். பூதங்கள் அக்காளிகள் மீது மலைகள் நெடிய மரங்கள் நீளமான எழுவாயுதங்கள் சக்கரம் இவ்வாறான படை களை வீசி மிக ஆளைஆள் நெருங்கிப் போர் செய்தனர். 104

அத்திறன் நோக்கியே ஆடற் பூதர்கள்
எத்திறத் தவரையும் ஈறு செய்கெனக்
கைத்தலத் திருந்ததோர் கழுமுள் வீசினள்
பத்திரை தன்னருள் படைத்த காளியே.

அத்திறத்தை நோக்கிய பத்திரகாளிதேவியின் அருள்கொண்ட காளியானவள்; இதோ எம்முடன் போரிட்ட எத்திறத்திலுள்ள கொடிய பூதங்களையும் நீ முடிவு செய்வாய் என்று தனது கையினிடத்தே இருந்த சூலப் படையை வீசினள். 105

வீசிய முத்தலை வெய்ய வேற்படை
காய்சின எரிபுகை கான்று காளிகள்
மாசகல் உருப்பல வகுத்துப் பாரிடர்
பாசன மருளுறப் படர்தல் உற்றதே.

காளிதேவி வீசிய முச்சுடருடைய கொடிய வேற்படை யானது யாரையும் கொன்றிடும் தன்மையுடைய நெருப்பையும் புகையையும் கக்கி காளிகளின் மாசு அடையாத பல கோலங் கொண்டு முன்னின்ற பூத சேனைகள் கண்டு மருண் டோடிடும்படி முன்னுகவரத் தொடங்கியது. 106

சண்டிகை விடுபடை தனது வன்மையைக்
கண்டனன் இளையவன் கணங்கள் ஆருயிர்
உண்டிடும் இஃதென உன்னி யேழிரு
புண்டரு சிலீமுகம் பொள்ளென் றேவினுன்.

காளிதேவி விடுத்துள்ள அந்த சூலப்படையின் வலிமையைக் கண்டனர் எங்கள் வீரவாகு தேவர். ஓகோ இச் சூலம் பூதங்களின் அருமையான உயிரினை உண்டிடுமே என நினைந்து, பதினுன்கு கூரியதும் பட்டால் தவறிட முடியாததுமான அம்புகளைத் திடீரெனச் செலுத்தினுர். 107

தீக்கலுழ் வேலினுன் செலுத்தும் ஆசுகம்
மேக்குறு முத்தலை வேலை நுண்டுகள்
ஆக்கிய தாக்கலும் அனைய தன்மையை
நோக்கினள் காளியென் றுரைக்கும் நோன்மையாள்.

நெருப்பைக் கக்கிடும் வேலினை உடைய வீரவாகுதேவர் செலுத்துகின்ற அம்பு கள் விரைவுடன் சென்று மிக்க வீரத்துடன் வந்த அந்த சூலப் படையை முறித் தெறிந்து நுண்ணிய பொடியாக்கி விடலும்; அவ்வாருனதன்மையை நோக்கினுள்; காளி எனச் சொல்லப் பெறும் மிகுவலிமை கொண்டவள். 108

துண்ணென யான்விடு சூலந் தன்னையும்
அண்ணலம் பகழியால் அறுத்தென் ளுற்றலை
எண்ணலன் நிற்பனல் இன்னும் அங்கவன்
உண்ணிகழ் உயிரினை உண்குவேன் என்ருள்.

யாரும் நடுங்கும்படியாக யான் விடுகின்ற சூலப்படையையும் மிகு திறமான அம்புகளால் அறுத்து எனது ஆற்றலைக் கொஞ்சமேனும் மதியாது வீரவாகு இன்ன மும் நிற்கின்ருன். அப்படியாயின் அங்கு அவனிடத்திலுள்ள உயிரை இப்பொழுதே உண்பேன் என்ருள்; 109

என்றிடு காளியோ ரிமைப்பின் முந்துற
நின்றிடு சேனையங் கடலை நீங்கியே
வென்றிடு வயப்புலி மிசைக்கொண் டார்த்திடாச்
சென்றனள் வீரன்முன் செப்பல் மேயினுன்.

என்று சொல்கின்ற காளிதேவி ஓர் இமைப் பொழுதில் தன்முன்னுக நின்றிட்ட சேனையான கடலை விடுத்து நீக்கி எழுந்து; வெற்றியுடைய சிங்கவாகனத்தின் மேல் ஏறி; இரைச்சலிட்டுக் கொண்டு சென்று வீரவாகுதேவர் முன்னின்று இதனைச் சொல்லத் தொடங்குவாள்: 110

முன்னுற யான்விடு மூவி லைப்படை
தன்னைவெங் கணைகளால் தடுத்து நின்றனை
இன்னுமொர் சூலமுண் டெறிவன் வீகுதி
அன்னது காத்திடல் அரிது காணென்றாள்.

முன்னாக நான் பூதம் மேல் செலுத்திய முச்சுடருடைய சூலப்படையை கொடிய அம்புகளை விடுத்து அறுத்து நிற்கின்றாய். சரி! இன்னுமோர் சூலம் என்னிடம் இருக்கின்றது. அதனை நான் இப்போது எறிவேன் அதனால் நீ இறப்பாய். அந்த சூலப்படையைத் தடுத்து உன்னைக் காத்திட முடியாது. என்றாள். 111

என்றலும் முறுவல்செய் திலங்கு சூலமாங்
கொன்றல ஆயிரம் ஒருங்கு வீசினும்
நின்றவை முழுவதும் நீறு செய்வனென்
வன்றிறல் தெரிந்திலை மாதுநீ யென்றாள்.

என்றலும் எம்பிரான் வீரவாகு தேவர் புன்சிரிப்புக் கொண்டு காளியே! நீ சொல்லும் அந்தச் சூலம் ஒன்றல்ல அதைப்போல் ஆயிரம் சூலத்தினை ஒருங்கு வீசினாலும் நான் இங்கு நின்று அச் சூலம் முழுவதையும் முடிவு செய்வேன். எனது மிக்கதொரு வலியை நீ உணர்ந்திலைப் போலும் பெண்ணாகியவளானதினால் என்றார். 112

கொற்றமொய்ம் பினன்இவை கூறக் கேட்டுளஞ்
செற்றம தாகியே தெழித்துச் சண்டிகை
மற்றுமொர் சூலவேல் வல்லை வீசினாள்
சுற்றிய பாரிடத் தொகுதி யுட்கவே.

கொற்றம் கொண்ட தோளுடைய வீரவாகு தேவர் இவைகளைக் கூறக் கேட்டலும் உள்ளம் கோபமாகி கர்ச்சனை கொண்டு காளியானவள் தன்னிடத்திலுள்ள இன்னுமொரு சூல வேல் இருந்ததை எடுத்து உடனே வீசினாள். அச் சூலவேல் வருதலைக் கண்டு வீரவாகுதேவரைச் சூழ்ந்து நின்ற பூதப்படைகள் ஏங்கி மனம் உக்கின. 113

அருந்திறல் அமரர்கள் அதுகொல் ஆலமென்
றிரிந்தனர் பணியெனா இனனும் இந்துவும்
வருந்தினர் சூலமுன் வந்த தன்மையைத்
தெரிந்தனன் வீரமொய்ம் புடைய செம்மலே.

அச் சூலத்தைக் கண்ணுற்ற அருமையான திறலுடைய தேவருமே; ஐயய்யோ ஈது நஞ்சுதானோ என அஞ்சி ஓடினார்கள். இதுகண்டு இது எம்மை பற்றவரும் பாம்புகளோ என்று சூரியனும் சந்திரனும் வருந்தினார்கள். சூலப்படை தனது முன்பு வருவதைக் கண்டு தெரிந்துகொண்டார் வீரத்தோளுடைய தலைவர் வீரவாகு தேவர். 114

எட்டுடன் இரண்டுநூ றெனுந்தொ கைப்படு
நெட்டிரும் பகழிகள் நிகரத் தூண்டியே
அட்டனன் துணிபட அரியின் மேலவள்
தொட்டிட வருவதோர் சூலந் தன்னையே.

உடனாக ஆயிரம் எனும் தொகைப்பட் நீண்ட அம்புகளைத் தனது வில்லில் பூட்டி ஒருங்கே செலுத்தி அவைகளால் சிங்கத்தின் மேல்வரும் காளிதேவி செலுத்தியிட அங்குவருகின்ற சூலப்படையை துண்டுதுண்டாகப் போயிட முரித்தெரிந்தார். வீரவாகு தேவர். 115

எறித்தரு சூலம திற்று வீழ்தலுஞ்
செறுத்தனள் இங்கிவன் சிரத்தை வாளினுல்
அறுத்துதி ரப்புனல் சுவைத்திட் டாவியைப்
பறித்திடு வேனெனப் பகர்ந்திட் டாளரோ.

பிரகாசமுடைய அந்த சூலமானது அழிவுற்று வீழ்தலும்; காளிதேவி கண்டு கோபமுற்று இந்த வீரவாகு என்பவரின் தலையை இங்கு நான் வாளினுல் வெட்டி அவனுடைய இரத்தத்தை உறிஞ்சிக் குடித்து உயிரைப் பறித்தெடுப்பேன் எனக் கூறினுள். 116

நாலிரு தோளுடை நங்கை தோன்றல்முன்
வாலுளை மடங்கலின் இருத்தல் மாண்பொரீஇப்
பாலுறு திரைக்கடற் பரப்பை விட்டகல்
ஆலம தாமென ஆர்த்திட் டேகினுள்.

எட்டுத் தோள்களை உடைய காளிதேவி வீரவாகுதேவர் முன்பு, தான் அழகிய பிடரிமயிருடைய சிங்கத்தின் மேல் இருப்பதை விடுத்து நீங்கி; பால் கொண்ட திரைக்கடலாகும் சமுத்திரத்தை விட்டு நீங்கிச் செல்கின்ற ஆலகாலம் என்னும் நஞ்சு போன்று; வீரவாகுதேவர்முன் கறுமிக் கர்ச்சித்தவாறு சென்ருள். 117

ஆர்த்திடு சண்டிகை அங்கை தன்னிலோர்
கூர்த்திடும் வாட்படை கொண்டு கொம்மெனத்
தீர்த்தனுக் கினியதோர் செம்மல் நிற்புறுந்
தார்த்தடந் தேர்மிசைத் தனிவந் தெய்தினுள்.

அவ்வாறு கர்ச்சித்த காளிதேவி அழகிய கையிலே ஓர் கூரிய வாளை ஏந்திக் கொண்டு வீராவேசமுடன்; எமது ஞான முதலான குமரப் பெருமானுக்கு இனியவரான வீரவாகுதேவர் நிற்கின்ற பெருமாலைகளுடன் பொலிந்திடும் பருத்த தேர் மீது தனியே வந்து சேர்ந்தாள். 118

நோக்கினன் மொய்ம்பினுன் நோன்மை பூண்டுளான்
தாக்கணங் காம்இவள் தன்ன தாவியை
நீக்குதல் செய்வது நீர்மைத் தன்றெனுத்
தூக்கினன் அவள்வலி தொலைக்க உன்னுவான்.

தேர் மேல் வந்த காளிதேவியை வீரவாகுதேவர் பார்த்தார். மிக்கதொரு வலியுடையார் அவர் ஆதலினுல் காளியின் இயல்பை எண்ணி: இவள் ஓர் உரமான தெய்வப் பெண்; ஆதலால் அவளின் உயிரை நீக்குவது சரியான செயல் அன்று என நினைத்து; அக்காளியின் உக்கிரமான வலியை மட்டும் தொலைத்திட நினைத்தார். 119

இடித்தென உரப்பினன் எண்கை தன்னையும்
ஒடித்தன னுமென ஒருகை யாலுறப்
பிடித்தனன் மற்றெருரு பெருங்கை யாலுரத்
தடித்தனன் காளிவீழ்ந் தவச மாயினுள்.

இடி இடித்தால் போல் காளிதேவியை நோக்கி உரப்பினுர்; எட்டுக் கையையும் தனது ஒரு கையால் முறித்தார் போன்று சிக்காராய் இறுகப் பிடித்து; மற்ருெரு பெருங் கையால் காளிதேவியின் நெஞ்சில் ஓங்கி அடித்தார். அந்த ஒரு அடியுடன் காளிதேவி கீழே வீழ்ந்து மயங்கினுள். 120

கரங்கொடு சேவகன் கல்லென் றெற்றலும்
உரங்கிழி வுற்றனள் உமிழ்ந்த சோரிநீர்
தரங்கம தெறிகடல் தன்னைப் போன்றுலாய்
இரங்கிய தவள்துயர் யாவர் கூறுவார்.

வீரவாகுதேவர் தனது கையாலே கல்லால் அடித்தது போன்று கணீரென காளியின் நெஞ்சில் அடித்தலும், காளிதேவி நெஞ்சு கிழிபட்டாள். அதினின்றும் பெருகுகின்ற இரத்தம் பூமியை வளைகின்ற பெரிய கடல்போன்று பெருகிப் பரந்து கொண்டது. அடியின் வேதனையைப் பொறுக்காது அழுகின்ற அக் காளியின் துயரை ஆர்தான் எடுத்துப் பேசிவிட முடியும்? அவ்வளவு வேதனை கொண்டாள். 121

எண்கையும் ஒருகையால் ஏந்தல் பற்றியோர்
ஒண்கையின் நீலிதன் உரத்தில் எற்றலும்
மண்கிழி வுற்றன வரைகள் கீண்டன
விண்கிளர் அண்டபித் திகையும் விண்டதே.

காளியின் எட்டுக் கைகளையும் வீரவாகுதேவர் தனது ஒருகையால் பிடித்து மற்றொரு கையால் காளியின் நெஞ்சில் அடித்தலும், அந்த அடியின் அதிர்ச்சியால் பூமி கிழிபட்டது; மலைகள் பிளந்தன; வானில் எழுந்துமேல் நிற்கும் அண்டச் சூழலும் உடைந்து போயது. 122

திரைபெறு கடலெனக் கான்ற செம்புனல்
வரைபெறு தனதுமெய் மறைத்த லால்துயர்க்
கரைபெறல் இல்லவள் காளி என்றுமுன்
உரைபெறு பெயரையும் ஒழிவுற் றுளரோ.

திரைகொண்ட கடல் போன்று அவள் நெஞ்சில் நின்றும் பாய்ந்த இரத்தம் காளியின் மலைபோன்ற உடலைச் சுற்றி மூடி மறைத்தலால்; அடிவாங்கி வேதனையுற்ற அவள் படுகின்ற துயரம் என்னும் கடலுக்கு கரைகாண முடியாது அவதியுறல் போன்று; அந்த இரத்தத்தில் மூழ்கியமையால் காளி என்று சொல்லப் பெறும் கறுத்த வடிவத்தையும் நீங்கி நின்றுள். காளி என்பது கருமையைக் குறிக்கும். 123

இவ்வகை அவசமாய் இம்பர் வீழ்ந்தபின்
ஐவகை உணர்ச்சியும் அனுதி யானவுஞ்
செவ்விது தொன்மைபோற் சேரச் சூர்மகள்
வெவ்வலி இழந்துகண் விழித்து விம்மினுள்.

காளிதேவி இவ்வகையாக அடியினுல் சோர்வுற்று இந்நிலத்தில் வீழ்ந்தபின், சிறிது நேரத்தில் அவளுக்கு மயக்கம் தெளிந்து ஐந்து புலன்களும் அனுதியாகவுள்ள நிலையும் செப்பமுடன் முன்போல் சிறப்புடன் அடைந்து கொள்ளலும்; அதுவேளை ஆரையும் அஞ்சவைக்கும் கோலமுடைக் காளிதேவி தனது வலி இழந்து மானமிகுதியால் விம்மி அழுதாள். 124

ஆண்மையின் மேலவன் அகலத் தெற்றிட
ஏண்மையும் வீரமும் இழந்து வீழ்ந்ததும்
நீண்மய லானது நினைந்து நெஞ்சிடை
நாண்மலி வுற்றனள் நடுங்கும் ஆவியாள்.

ஆண்மையில் மிகுந்துள்ள பெரியோனுகும் வீரவாகுதேவர் அவளின் நெஞ்சில் அடித்தபோது அதனுல் காளிதேவியின் இறுமாப்பும் வீரமும் இழந்து வீழ்ந்ததும், நெடுநேரம் வரையும் மயக்கமாகிக் கிடந்ததும்; இவையாவையும் நினைந்து தனது நெஞ்சினிடத்தாகப் பெரும் நாணத்தினைக் கொண்டாள். பின்னரும் பயத்தால் நடுக்கம்கொள்ளும் உயிரினை உடையளாயினுள். 125

அந்தமில் அறுமுகத் தமலன் ஏவலால்
வந்தவ னொடுபொரின் வாகை எய்துமோ
புந்தியி லாதிவட் புக்க னன்எனாச்
சிந்தைசெய் தெழுந்தனள் வன்மை தீர்ந்துளாள்.

அதுவேளை காளிதேவி எண்ணுகிறாள். அந்தமிலாது விளங்கிடும் ஆறுமுகமுடைய நின்மலப்பொருளாகும் முருகப்பிரான் ஏவலால் இங்குபோரிடும்படி வந்த வீரவாகுவோடு யான் போரிட்டால் வெற்றி அடையமுடியுமோ? புத்தியிலாது நான் இங்கு வந்துவிட்டேன் என்று காளிதேவி தனது மனதில் எண்ணிக்கொண்டு எழுந்தாள், தன்வன்மையாவும் தீர்ந்துபோனவளாகியே. 126

இகழ்ந்தவர் உரத்தினை இகழ்ந்து கூர்நகத்
தகழ்ந்துயி ருண்டிடும் அணங்கு தேர்மிசைத்
திகழ்ந்தனன் நின்றிடு திறலி னான்றனைப்
புகழ்ந்தனள் இளையன புகல்வ தாயினாள்.

தன்னை இகழ்ந்தாருடைய வீரத்தைத் தான் இகழ்ந்து அவர் தலையை தனது கூரிய நகத்தால் கிள்ளி எடுத்து உயிர் உண்கின்ற காளிதேவி; தேர்மேலாகத் திகழ்ந்தவாறு நிற்கின்ற மிக்கதொரு திறலுடைய வீரவாகுதேவரை நோக்கி பலஇன்மொழிகளால் புகழ்ந்து; இந்த வார்த்தைகளைச் சொல்கின்றாள். 127

கன்றிய கற்புடைக் கனலி மாமுகன்
இன்றெனை அருச்சனை இயற்றி ஏத்தியே
ஒன்றல வுயிர்ப்பலி யுதவி வேண்டினான்
நன்றிய தயர்த்திலன் நானிங் கெய்தினேன்.

கறுவியமுடைய தீய கற்பனைகளைக்கொண்டு துன்பம் விளைக்கும் அக்கினிமுகாசுரன் இன்று என்னை அருச்சனை புரிந்து வழிபட்டு ஒன்றுஅல்ல பல கடாகோழி முதலிய உயிர்களைப் பலிகொடுத்து என்னை இப்போரில் தனக்கு உதவுமாறு வேண்டினான். அவன் செய்த இப்பூசையாகும் நன்றியை நான்மறவாதவளாய் இங்கு போரிடவந்தேன். 128

உன்னுடை வன்மையும் உனது வீரமுஞ்
சின்னமும் உணர்ந்திலன் செருவின் முந்துறீஇ
நின்னுடன் இகலியிந் நிலைமை யாயினன்
இன்னினி ஏகுவன் இருந்த தொல்லிடை.

வருங்கால், வீரனே உன்னுடைய வன்மைப்பாட்டையும் உனது வீரத்தையும் குறியையும் நான் எண்ணிப்பார்க்கவில்லை, அவ்வாறு ஒன்றையும் எண்ணாது போரிட அவசரமாய் முந்தி ஓடிவந்து இப்போது இந்தநிலைமையாய் விட்டேன். இனிமேல் நான் இருந்த எனது பழைய இடத்திற்கு போய்விடுவேன். 129

கறுத்தினி வல்லையில் கனன்மு கத்தனை
ஒறுத்துயிர் உண்குதி ஒழிந்து ளாரையும்
அறுத்தனை நிற்குதி அலரி தன்னைமுன்
செறுத்தவன் தன்னையும் அடுதி செம்மல்நீ.

மனதில் மிக்க கோபமுடன் இனி விரைவாக; அந்த அக்கினியின் முகமுடைய அசுரனைக் கொன்று அவன் உயிரை உண்டிடுவாய். அவனை விட்டொழிந்த மற்றைய எல்லா அசுரரையும் வேரோடு அறுத்துக் கொன்றவாறு இப்போர்க்களத்து நிலவிடுவாய். சூரியதேவனை முன்னர் சிறைவைத்த பானுகோபனையும் எம்தலைவா! நீ கொன்றிடுவாய். 130

அடையலர் தம்மைவென் றாறு மாமுகம்
உடையவன் கருணைபெற் றுவகை மேவுதி
நெடிதுபல் லூழியும் நீடி வாழ்தியால்
கடைமுறை இவையெலாங் காண்டி நீயென்றாள்.

பகையசுரர் யாவரையும் நீவென்று எங்கும் நிறையும் ஆறு முகமுடைய பெருமானின் கருணையைப் பெற்று பேரின்பம் அடைவாயாக. இஃதன்றி நெடிதாகத் தொடர்ந்துவரும் பல ஊழிக்காலமாகப் நீடி நீ வாழ்ந்திடுவாயாக. இவைகள் யாவும் செவ்வனே நடக்கும் என்பதனை பின்னால் நீ காண்பாயாக. 131

இத்திறம் யோகினி இசைத்து வெஞ்சமர்
வித்தகன் விடைகொடு மீண்டு கோளரிச்
சித்திர வெருத்தமேற் சேர்ந்து தொல்படை
மொய்த்திடப் போயினள் முந்து வந்துழி.

இத்திறமாக யோகத்திருந்திடும் காளிதேவி புகழ்ந்து கூறி கொடும் போரில் மிக்க வித்தகமுடைய வீரவாகுதேவரிடம் நின்று மீள்வதற்கு உத்தரவைப் பெற்றுக் கொண்டு திரும்பி; வலிமையுடைய சிங்கவாகனத்தின் மேலாக ஏறிப் பழைய படி தனது படைகளாகும் காளிகள் சூழ்ந்து மொய்த்துவர; முந்தித் தான் வந்த வழியால் இருப்பிடம் போயினாள். 132

**வேறு**

சண்டிகை போந்த காலைத் தழல்முகன் அனைய வெல்லாங்
கண்டனன் வெகுண்டு நன்றிக் கள்வன தாற்றல் என்னாத்
திண்டிறல் ஆற்றல் சான்று சேண்கிடந் துருமுக் கான்று
கொண்டல தெழுந்தா லென்னக் கொம்மென எழுந்து சொல்வான்

காளிதேவி போனகாலையில் அக்கினிமுகாசுரன் அந்த நிகழ்ச்சிகள் யாவற்றையும் கண்டான். மிகுகோபமடைந்து நன்றாயிருக்கின்றது இந்தக் கள்வன் வீரவாகு தேவனின் ஆற்றல் என்று கூறி; திடமுடைய ஆற்றல்கொண்டு வானில் எழுந்து நின்று இடிகளை சொரிந்த மேகம் மேலெழுவதைப்போன்று; முன்னர் அம்புபட்டு சாய்ந்துகிடந்தவன் விருக்கென எழுந்து நின்று இதனைச் சொல்வான். 133

கொன்றுயிர் பலவும் நுங்கிக் குருதியும் வடியும் மாந்தி
ஒன்றுதன் னகடுதூரா துலப்புறுப் பசிநோய் மிக்குச்
சென்றிடு காளி யாலோ தெவ்வர்தஞ் செருவை யான்முன்
வென்றனன் சூரன் சேய்க்குந் துணைகளும் வேண்டு மோதான்.

பல உயிர்களையும் கொன்று அவற்றினை உண்டு; இரத்தத்தையும் கள்ளையும் நன்றாக வேண்டியமட்டும் பருகி; அப்படிச்செய்தாலும் அவள்தனது வயிறு நிரம்பாது மீண்டு மீண்டு பசிநோய் மிகுந்து இன்னமும் உயிர்ப்பலி கேட்டுத் திரிகின்ற அந்தக் காளியைக் கொண்டோ எனது பகைவருடன் முன்னர் செய்த போரை வென்றனன்? அப்படியாயிருக்க சூரபன்மனுடைய மைந்தனுக்கு இனி ஓர் துணையுமாவேண்டும்? ஆகையால். 134

சூலமுந் தண்டும் வாளுஞ் சுடர்மழுப் படையுஞ் சீற்றக்
கோலமுங் கொண்டு பாங்கிற் கூளிகள் சூழ வைகும்
நீலிதன் வன்மை காண்பான் நினைந்திவண் விளித்த தன்றி
வேலவன் படையை அன்னாள் வெல்லுமென் றுளங்கொண்டேனே.

சூலமும் தண்டும் வாளும் சுடருடைய் மழுவாயுதமும் ஆன ஆயுதங்களை ஏந்தி, கோபமான கோலமும் கொண்டு பக்கரிலே கூளிகள் சூழ்ந்திட இருக்கின்ற நீல நிறமுடைய இவ்ளின் சாமர்த்தியவலிமை எவ்வளவு என்று நான் காணும்படி நினைந்து இவளை இங்கு அழைத்ததே அல்லாமல் வேலேந்திய முருகனின் படையை இவள் வெல்வாள் என்று நினைந்தனனே? அப்படி இல்லையே. 135

வாவியுங் குளனும் பொய்தீர் நதிகளும் மற்று மெல்லாந்
தூவுநுண் பனியா லன்றே துளும்புவ அஃதே போலத்
தேவரை ஏவல் கொண்ட சிறப்புடைத் தமியேன் இங்ஙன்
மேவிய காளி யாலோ எய்துவன் வீரத்தன்மை.

நீர் நிறைந்த வாவிகளும், குளங்களும் தப்பின்றிப் பெருகிடும் ஆறுகளும் இவையன்றி வேறு நீர்த்தேக்கமும்; தூத்தலாகச் சொட்டும் குளிர்ந்த பனி நீரினாலோ நிறைகின்றன? இல்லையே மழையால் அல்லவோ. அதனைப்போல் தேவர்கள் பலரையும் ஏவல்செய்யும்படி வெற்றிகொண்ட சிறப்புடைய தமியனுக்கு; இங்கு எனது நகரில் இருந்த காளியாலோ வீரத்தன்மையை நான் அடையப்போகின்றேன். 136

இன்னினிக் கணம தொன்றின் இளவளா ருயிரை வெளவி
முன்னுற அகன்ற ஒற்றன் முரண்வலி அதனைச் சிந்தி
அன்னவன் ஆவி கூற்றுக் கடிசிலா அளிப்பன் அல்லான்
மன்னன்முன் போவ தில்லை வஞ்சினம் இஃதே என்றான்.

இனி ஒரு கணப்பொழுதில் எனது தம்பி வச்சிரவாகுவின் அரிய உயிரைக் கொன்றுவிட்டு பின்னர் தப்பியோடிய இந்தத் தூதுவனுடைய மிக்க முரணுடைய வலியைச் சிந்தி; அவனுடைய உயிரை எமனுக்கு சோற்றுணவாக உண்ணும்படி கொடுப்பேன். இதைச் செய்யாது அரசனும் என்தந்தை சூரபன்மன் முன்னர் நான் செல்வதில்லை. இதுதான் எனது கொடிய சபதம் என்றான் அக்கினிமுகன். 137

கனல்முகன் இனைய மாற்றங் கழறியே அவுணத் தொல்பேர்
அனிகம்வந் தயலின் ஈண்ட ஆழியந் தேரிற் சென்று
வனைதரு சிலையொன் றேந்தி வன்மையால் வாங்கி நூறு
முனையிரும் பகழி வீர மொய்ம்பன்மேல் தூண்டி ஆர்த்தான்.

அக்கினிமுகன் இந்த வார்த்தையைக் கூறியே அசுரர்களின் மிகு தொன்மையான பெரும் புகழுடைய சேனைகள் வந்து அயலிலே சூழ்ந்திட; பெரும் சில்லுடைய ஓர் தேர்மேல்சென்று வலியுள்ள ஓர் வில்லையும் எடுத்து மிகுவலியால் அதனை வளைத்து அதினின்றும் நூறு கூரிய அம்புகளை வீரவாகுதேவர்மேல் செலுத்தி வீர முழக்கம் செய்தான், 138

கொடுந்தொழி லாளன் செய்கை குரைகழல் வீரன் காணு
முடிந்திட வந்தாய் போலும் முயற்சியீ தழகி தென்னு
நெடுந்தனிச் சிலைகா லூன்றி நெரேலென வளைத்துத் தானும்
அடுந்திறற் கணைநூ றேச்சி அறுத்தனன் அவுணன் வாளி.

கொடும் தொழிலையே செய்துவரும் அக்கினிமுகமுடையோனுடைய செய்கையை; ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த வீரவாகுதேவர் கண்ணுற்று; அவனை நோக்கி இவ்விடத்து நீ இறந்திடும் படியாகத்தான் வந்துள்ளாய்போலும்; உனது செயல் நன்றாக இருக்கின்றது எனக் கூறியவாறு தனது நெடிதான தனிவில்லை காலால் ஊன்றி நேர்ப்பட வளைத்து அதிலே தானும் நூறு அம்பினைத் தொடுத்துவிடுத்து அக்கினி முகாசுரனின் அம்பை அறுத்தார். 139

வேறு

அறுத்தபொழு தத்தில்அவு ணர்க்கரசன் மைந்தன்
மறத்திநெடு நூறுசரம் வாலியன பூட்டிச்
சிறப்புடைய செம்மலுறு தேரினை யழித்துக்
குறித்தவிறல் கொண்டுசமர் வால்வளை குறித்தான்.

வீரவாகுதேவர் அக்கினிமுகன் அம்புகளை அறுத்தநேரத்து; அசுரர்க்கெல்லாம் அரசனான சூரபன்மன் மகன் அக்கினிமுகன் மிகு வீரத்துடன் நூறு அம்புகள் மிகவும் திறமானவற்றை வில்லில் பூட்டி விடுத்து; சிறப்புடைய வீரவாகுதேவர் நின்ற தேரை அழித்து; தான் குறித்தபடி வெற்றி கொண்டமைக்காக போர்ச்சங்கை எடுத்து ஊதினான். 140

தேரழித லும்வெகுளி செய்திளவல் ஈரேழ்
கூரிய நெடும்பகழி கொம்மென விடுத்தே
ஆரழல் முகத்தவுணன் அங்கையிடை கொண்ட
மூரிவரி வெஞ்சிலை முரித்தமர் விளைத்தான்.

வீரவாகுதேவர் தனது தேர் அழிந்து போதலும் கோபமடைந்து பதினான்கு கூர்மையான நீண்ட அம்புகளை சட்டென விடுத்து; ஒளிர்கின்ற அக்கினியின் முக முடைய அக்கினிமுகாசுரன் அழகிய கையில்கொண்ட கொடியவில்லை முரித்து பெருமட்டகாசம் செய்தார். 141

வில்லது முரிந்திடலும் வேறோர்சிலை வாங்கிக்
கல்லென வெயிற்றணி கறித்திவனை இன்னே
கொல்வனெனும் வெய்யமொழி கூறிமண நாறும்
அல்லிமல ரோன்படையை அண்ணல்மிசை உய்த்தான்.

அக்கினிமுகன் வில் முறிந்து போதலும் வேறொருவில்லை வளைத்து, கறுவியத்துடன் கற, கறவென பற்களை நிரையாக நெருமி; இந்த வீரவாகுவை இப்பொழுதே கொல்வேன் என்னும் கொடியவார்த்தையைக் கூறி; அந்த வில்லில் நல்ல இதழு டைய தாமரை மலரில் இருக்கும் பிரமதேவரின் படையினைத் தொடுத்து வீரவாகு தேவர் மேல் விட்டான். 142

அத்தகைமை நோக்கினன் அயன் படையை யானும்
உய்த்திடின் எனக்குவரும் ஊதியம்என் என்னாச்
சித்தமுறு பூசனை செலுத்திவிறல் வீர
பத்திர நெடும்படையொர் பாணிகொடு விட்டான்.

அத்தன்மையை வீரவாகுதேவர் நோக்கினவராய்; இவனது பிரமன் படைக்கு மாறாக நானும் பிரமன் படைவிடுத்தால் எனக்கு வரும் பேறு யாது ஒன்றுமில்லை அவைபோரிட்டு அழிவதல்லால் வேறொன்றும் ஆகாது என எண்ணி; வீரபத்திரப் பெருமானின் நெடிய படையை தமது கையில் எடுத்து மனதால் சிறந்த பூசனையை அன்புடன் செலுத்திப் படையை அக்கினிமுகன்மேல் விடுத்தார். 143

வாரிதி வளாகம்அரை மாத்திரையின் உண்ணும்
வீரனெடு வெம்படை விரைந்துபடர் காலை
நாரணன் மகன்படை நடுங்கிநனி தாழா
யாருநகை செய்திட இரிந்துளதை யன்றே.

சமுத்திரங்கள் அனைத்தையும் அரைமாத்திரைப் பொழுதில் உண்டு அழிவு செய் திடும் வீரத்துடன் வீரபத்திரப் படைக்கலம் விரைவுற்றுவரலும்; அதனைக் கண்ட நாராயணக்கடவுளின் மகன் பிரமதேவரின் படையானது, நடுங்கி மிகவும் தாழ்ந்து யாவரும் பார்த்துச் சிரித்திடும்படி அவ்விடம் விட்டு ஓடிப்போயது. 144

அன்னமிசை யோன்படை அழிந்திடலும் வீரன்
தன்னது நெடும்படை தடுப்பில்வகை யேகி
வன்னிமுகன் ஆவிகொடு மாமுடிகள் தள்ளி
மின்னுவென வீரனிடை மீண்டுபடர்ந் தன்றே.

அன்னப் பறவையின் மேல் வரும் பிரமதேவன் படை ஓடி அழிதலும், வீரபத் திரப் பெருமானின் படை யாவரும் தடுக்கமுடியாத வகை மின்னல்போல் சென்று அக்கினிமுகாசுரன் மேல்பட்டு அவன் தலையை அறுத்து அவன் உயிரைநீக்கித் திரும்பி வீரவாகுதேவர் பால் வந்து அமர்ந்துகொண்டது. 145

### வேறு

வெய்யஅக் கனல்முகன் விளிந்து வீழ்ந்தனன்
ஒய்யென அச்செயல் உம்பர் நோக்குறூ
ஐயனை வாழ்த்திநின் றலரின் மாரிதூய்
மெய்யணி துகிலெலாம் வீசி யாடினர்.

கொடிய அக்கினிமுகாசுரன் இறந்து வீழ்ந்தான், உடனேயே அச்செயலை தேவர்கள் கண்டு எமது ஐயனை வீரவாகுதேவரை வாழ்த்தி நின்று பூக்களின் மழையைச் சொரிந்தும்; தமது மேனியில் உடுத்திருந்த ஆடைகளையும் எடுத்து வானில் வீசி மகிழ்வால் ஆடினர்கள். 146

புறந்தரு கலிங்கமுங் பூணும் நாணமும்
துறந்தனர் உவகையால் சொல்லும் ஆடலர்
சிறந்துடன் ஆர்த்தனர் தேவர் அற்றைநாட்
பிறந்திடு மைந்தர்தம் பெற்றி எய்தினர்.

தமது மேனியில் அணிந்த ஆடைகளையும் ஆபரணங்களையும் எடுத்து மகிழ்ச்சியால் வீசினர்கள்: அப்படிச் செய்தலால் வரும் வெட்கக்கேட்டையும் மகிழ்வின் நிலையால் மறந்து நீங்கினர். மகிழ்வால் சொல்லும் பேசமுடியாதவராயினர்; எல்லாரும் சிறந்து நின்று ஆர்த்தார்கள், இத்தேவர் யாவரும் அன்றைய நாளிலே பிறந்த குழந்தையின் நிலைபோல் ஆனர்கள். 147

எரிமுகன் அவ்விடை இறப்ப ஆங்கவன்
பெரும்படை வீரர்கள் புலம்பி யாமெலாம்
ஒருசிறு தூதனுக் குடைது மோவெனச்
செருவினைக் குறித்தனர் உலப்பில் தீமையோர்.

அக்கினிமுகாசுரன் அவ்விடத்து இறந்திடலும் அதுகண்டு அவனுடைய பெரும் படைக்குத் தலைவராய வீரர் யாவரும் புலம்பிஅழுது நாங்கள் எல்லோருமாக இந்த ஒரு சிறிய தூதுவனுக்குப் பயந்தோடுவதோ? என்று எல்லோரும் திரண்டு வீரவாகு தேவருடன் போரிடக் குறிப்பாயினர்கள். அப்பாடா! இவர்கள் அளவிற்கு மிஞ்சிய தீமைபுரிவோர்கள். 148

முற்படுந் தலைவர்கள் மூவெண் ணாயிரர்
பொற்புடை இளையவன் புடையிற் சுற்றிடாக்
கப்பணந் திகிரிகோல் கணிச்சி வேல்கதை
சொற்படு படையெலாஞ் சொரிந்து போர்செய்தார்.

இவ்வாறு போர்குறித்து முற்பட்டு வரும் தலைவர்கள் இருபத்து நாலாயிரம் அசுரசேனாதிபதிகள் வந்து பொற்புடைய இளையோராகும் வீரவாகுதேவர் பெருமானின் பக்கராகச் சுற்றி வளைத்து நின்று கப்பணம் சக்கரம் அம்பு வச்சிராயுதம் வேல் கதாயுதம் எனச் சொல்லப்படும் படைகள் யாவற்றையும் வீரவாகுதேவர் மேல் சொரிந்து போர்செய்தார்கள். 149

செய்தது நோக்கியே செயிர்த்துச் சேவகன்
கைதனில் இருந்ததோர் கார்மு கம்வளைஇ
நொய்தினில் ஆயிர நூறு கோடிகோல்
எய்தனன் தெழித்தனன் அவுணர் ஏங்கவே.

அசுர சேனாதிபதிகள் செய்ததை வீரவாகுதேவர் நோக்கிக் கோபமடைந்து கையில் இருந்த பெருவில்லைவளைத்து மிகுவிரைவாக ஆயிர நூறு கோடி அம்புகளை எய்தார், அத்துடன் அங்குள்ள அசுரர்கள் ஏங்கிடும்படி கர்ச்சித்தார். 150

இத்திறங் கணமதொன் றிடைய ருமலே
கைத்தனு உமிழ்ந்திடுங் கணையின் மாமழை
உய்த்தனன் திரிந்தனன் உலகம் பேர்த்திடும்
மெய்த்திறல் மருத்தினும் விரைவின் மேவியே.

இத்திறமாக வீரவாகுதேவர் கணப்பொழுதிலே; இடையருமல் தமது கைத்தலத்து இருந்த வில்லின் நின்றும் சொரிகின்ற அம்பின் பெருமழையைச் சொரிந்துகொண்டு பலபக்கரிலும் திரிவாராயினர்; மிக்க திறல் உடைய சூருவாளிக்காற்றினும் பார்க்க அதிவிரைவுடனக சென்று கொண்டு. 151

எறிந்திடு படைகளும் எய்த கோல்களும்
முறிந்தன துணிந்தன மொய்ம்பு மார்பமுஞ்
செறிந்திடு கரங்களும் சிரமும் தாள்களும்
தறிந்தன அவுணர்தந் தலைவர் வீடினர்.

இப்படியாக வீரவாகுதேவர் அம்பு சொரிதலும், அசுரர் எறிந்திட்டபடைகளும் அவர்கள் எய்த அம்புகளும் முறிந்துபோயின; துணிபட்டுப்போயின: அசுரர்களது தோளும் நெஞ்சும் பலவாகச் செறிந்த கைகளும் தலைகளும் கால்களும் தறிபட்டன; இப்படி அறுபட்டு அசுரர்களின் தலைவர்கள் இறந்தார்கள். 152

வேழமும் புரவியும் துணிந்து வீழ்ந்தன
வாழியம் தேர்நிரை அனைத்தும் இற்றன
சூழுறும் அவுணரும் தொலைந்து போயினர்
பாழியம் தோளினன் பகழித் தன்மையால்.

அசுரர்களது யானையும் குதிரையும் துணிபட்டு வீழ்ந்தன: பெரும் சில்லுடைய தேர்கள் அனைத்தும் அழிந்தன: அவரைச் சூழ்வுற்று நின்ற அசுரரும் தொலைந்து போயினர்கள், மலைபோன்று பருத்த அழகுடைய தோளுடைய வீரவாகு தேவரது அம்புகள் பட்டுக்கொள்வதாலே. 153

பாறெழுக் குற்றன ககனம் பார்மிசை
வீறெழுக் குற்றதொல் படைகள் வீந்திடச்
சேறெழுக் குற்றன தசைகள் செம்புனல்
ஆறெழுக் குற்றதால் அமர்செய் ஆறெலாம்.

வானத்தில் பருந்துகள் வரிசையாகப் பறந்து வட்டமிட்டன பூமியில் வீறுடன் வீசிய முதிய படைக்கலங்கள் யாவும் முரிவுற்று அழிந்திட்டு நிணத்தசைகளுடன் சேருகிக்கிடந்தன. சிவந்த இரத்தம் ஆருகிப் பெருக்குற்றது; இந்நிலையாகப் போர் செய்யும் இடமெலாம் இருந்தன. 154

பலவுடை நெடுந்தலைப் பதகர் துஞ்சலும்
நிலவுடை எயிற்றிடை நிவந்த தீக்கனல்
புலவுடை விழுநிணம் புழுக்கல் செய்ததால்
கலிகெழு கொடியொடு கணமுந் துய்க்கவே.

பல தொகைப்பட்ட நெடிய தலைகளை உடைய பாதகராகும் அசுரர் இறந்தாலும்; அவர்களது நிலவின் ஒளி கொண்ட பற்களிடையாகத் தோன்றிடும் கோபாக்கினி அவர்களது இறந்து வீழ்ந்த புலால் நிணங்களை பொரிசெய்துவைத்தது; அதன் மேல் இச்சையுற்ற கழுகும் கூளிகளும் விரும்பி உண்ணும்படியாக 155

மாமையில் செறித்தன வடிவின் மால்கரி
தாமயிர்ப் புறவடி தடக்கை வன்றலே
ஏமயிர்த் தோகையோ டிற்று நீங்குற
ஆமையிற் போவன குருதி ஆற்றிலே.

பெரிய மயில் செறிந்து இருக்கின்றது என்ற வடிவினை ஒத்த பெரிய உப்பரிகை கொண்ட யானைகளது மயிர் செறிந்த புறவடிகளும்; துதிக்கைகளும்; பெரும் தலைகளும்; மேல்உற்ற பிரகாசமுடைய பீலித்தோகையுடன் அறுத்து வீழ்ந்து இரத்தாற்றில் முண்டமாக போவது, ஆமை ஓடுவது போன்று இருக்கின்றது. 156

கார்கெழும் அவுணருட் கலந்த சோரியின்
தாரைகள் நீத்தமாய் எழுந்து தக்கவர்
பேருட லுட்கொடு பெயர்ந்த பின்னுற
வாரிதி வடவையுண் டுலவு மாண்பென.

மேகத்தை ஒத்த கறுத்த அசுரரின் உடலில் கலந்த இரத்த நீர்த்தாரைகள் கடல் போலெழுந்து தகுதியுடைய பெரிய அசுரர்களின் உடலங்களையும் உள்ளடக்கிக் கொண்டு புரண்டோடுதல் சமுத்திரமானது, வடவை என்னும் நெருப்பை உண்டு உலவுகின்ற மாண்பாக இருந்தது. 157

கரியினும் பரியினுங் கால்கொண் டோங்கிய
குருதியம் புனல்மழை குலாவும் வைகலின்
வரைதொறும் வரைதொறும் மாறு மாறெழா
அருவிகள் சென்றென அழுங்கிச் செல்லுமால்.

பெரிய யானைகளினும் குதிரைகளினும் நின்றும் சீறி வடிந்து, வாய்க்கால் நீர் போல் பெருகி ஓடிடும் இரத்த நீரானது; மழை ஓயாது பொழிகின்ற நாளிலே மலைகள் தோறும் மலைகள் தோறும் இருந்து மாறி மாறி எழுகின்ற அருவிகள் சென்றது போன்று இரைந்து ஓடுகின்றன. 158

மீளிகள் குருதிநீர் வெள்ள மாயதில்
வாளுறு வேல்களும் வாளும் மற்றவுங்
கோளுறு மயிலையிற் குலவக் கண்டுதங்
கேளிரென் றெதிர்வன கெழும வேலைமீன்.

அசுரசேனாதிபதிகள் உடலில் இருந்து வடிந்த இரத்த நீர் வெள்ளம்போல் பெருகி, கடலிடை ஓடலும் அதனிடை அவர்கள் கையில் கொண்ட ஒளியுடைய வேலும் வாளும் மற்றைய படைகளும் அழகிய மீன்கள் போல் விளங்கிடக் கண்டு; அவைகளை தங்கள் உறவினர் என ஏற்றுக்கொள்ள எதிர்ப்பன சமுத்திரத்துள்ள மீன்கள். 159

அழல்பொரு செக்கர்வா னகத்தின் மாமதிக்
குழுவினர் சேர்ந்துறக் குலவுங் கொள்கைபோல்
நிழல்பொதி கவிகைதந் நெடிய தாளற
ஒழுகிய குருதியின் ஒருங்கு செல்வவே.

நெருப்பை ஒத்த செக்கர் பரவிய வானிலே பெரிய சந்திரர்களாய கூட்டத்தினர் சேர்ந்து ஒருங்கு உலவிடுகின்ற கொள்கையைப்போன்று; அசுரர் பிடித்த நிழல்தரும் குடைகள் அதன் கால்கள் அம்பினல் அறுந்து போதலும்; அவைகள் ஓடுகின்ற இரத்த ஆற்றில் கூட்டமாக அள்ளுண்டு மிதந்து செல்கின்றன. 160

அலைகெழு குருதியா றழுங்குற் றேகலால்
தலைகளும் உடல்களும் தசையும் வாரிடக்
கொலைபுரி மறவர்தங் குடரிற் பின்னியே
வலையெறிந் தீர்த்தனர் வயவெம் பூதரே.

அலைகொண்ட இரத்த ஆறு இரைந்து கொண்டு செல்வதால் அதனில் அசுரர்களுடைய தலைகளும்; உடல்களும், தசைகளும் வாரிக்கொண்டு போகப்படலால்; அதனைக் கண்ணுற்ற பூதங்கள் சில அசுரர் இதற்குள் ஒளித்துத் தப்புவார்கள் என அவைகளை கொலையுண்ட அசுரவீரரின் குடல்களாய வலையால் பின்னி ஈர்த்து; வலை வீசி மீன் பிடிப்பார் போன்று இழுத்து நின்றார்கள் வீரமுடைய பூதர்கள். 161

ஞாளிகள் திரிவதோர் மருங்கு நாமவெங்
கூளிகள் திரிவதோர் மருங்கு கூளியாம்
மீளிகள் திரிவதோர் மருங்கு வென்றிடும்
காளிகள் திரிவதோர் மருங்கு கண்ணெலாம்.

கண் பார்வைக்கு எட்டும் இடம் எங்கெங்கும் நாய்கள் திரிகின்றன ஓர்புறமும்; கொடுமைக்கு பேர்போன கூளிகள் திரிவது ஓர்புறமும்; கூளிகளுக்கெல்லாம் தலைவர்கள் திரிவது ஓர்புறமும்; வெற்றிகொள்ளும் காளிகள் பிணமும் இரத்தமும் தின்னும் ஆசையால் திரிவது ஓர்புறமுமாகக் காணப்படுவன. 162

தேரிடை உலந்தவன் சிரத்துந் துஞ்சிய
சாரதி தலையினும் புரவி தம்மினுஞ்
சோரிகள் இழிவன தொலைந்த வையமும்
ஆருயிர் எய்தியாங் கதுபெற் றென்னவே.

அழிவுற்ற தேரில் நின்று போரிட்டு வீழ்ந்து இறந்து கிடப்பானுடைய தலையில் நின்றும், தேரைச் செலுத்திய சாரதியின் தலையினின்றும்; தேரில் பூட்டிய குதிரைகளின் தலையில் நின்றும்; இரத்தம் வடிகின்றது; எப்படிக் காணப்படுவதெனில்; அழிவுற்ற தேருக்கும் உயிர் இருந்தபடியால் அதனின் நின்றும் இரத்தம் வடிகின்றதோ எனச் சொல்லும் படியாய் இருந்தது. 163

சினவலி அவுணர்தந் திகிரி பூண்டிடு
துனைவரு கேசரி துஞ்சச் சோரிநீர்
கனைகட லிடைசெலக் கண்டு தேரைதம்
இனமென எதிர்தழீஇ யிரங்கு கின்றவே.

கோபத்தில் மிக்க வலியுடைய அசுரர்தேரில் பூட்டப்பெற்ற வலி கொண்ட சிங்கங்கள் இறந்திட; அது இரத்த ஆற்றினுடன் கடல் இடத்தாகச் சென்றபோது அதைக்கண்டு அங்குள்ள தேரை மீன்கள் இறந்த சிங்கத்தின் உடலை தனது இனத்தின் உடல் எனக்கருதி அதை நேரிட்டுத் தழுவி அழுகின்றன. 164

விரிந்தஇத் திறமியல் வெங்க ளத்திடை
இரிந்திடு தானவர் இறந்து நீங்கினர்
கருந்தலை அடுக்கலிற் கழல்கள் தாக்குறத்
திரிந்தனர் அயர்ந்தனர் சிலவர் துஞ்சினர்.

பரந்து காணப்பெறும் இத்தன்மையுடைய இப்போர்க் களத்திடை ஓடிப்போகின்ற அசுரர்கள்; முன்னர் இறந்து ஒழிந்தாருடைய கறுத்த தலையாலாய மலைகள் இடத்துத் தங்கள் கால்கள் தடக்குண்ண; தடக்குண்டு தடக்குண்டு திரிகின்றார்கள். திசைதெரியாது மயங்கிறார்கள்; இப்படியான நிலையில் பயத்தால் பல அசுரர் இறந்தார்கள். 165

மழுக்களும் அயில்களும் வாளும் முத்தலைக்
கழுக்களுங் கால்படக் கவலுற் ருர்சிலர்
விழுக்கொடு வள்ளுரம் விராய பூழியில்
இழுக்கினர் அழுந்தினர் இறந்துற் ருர்சிலர்.

சில அசுரர் ஓடிடும் வேகத்தில் வீழ்ந்துகிடந்த மழுவாயுதமும்; வேல்களும்; வாளும் முச்சுடருடைய கழுமுட்படையும் காலில் பட்டிடுதலாலே பெரும் வேதனை யுறுகிருர்கள். இறந்த அசுரர்களின் உறுப்புகளும் மார்புகளும் பெருகிக்கிடந் திடும் பெரும் சேற்றிடத்து ஓடும்போது வழுக்கிவீழ்ந்து அழுந்தி இறந்தார்கள் சில அசுரர். 166

பாய்ந்திடு குருதியம் பரவை ஆற்றிடை
நீந்தினர் ஒருசிலர் நீந்திக் காலெழா
தோய்ந்தனர் ஒருசிலர் ஓடி ஞர்சிலர்
மாய்ந்தனர் ஒருசிலர் மாய வீரரே.

பாய்கின்ற இரத்த மான கடலிலும் ஆற்றிலும் நீந்தியவராகி ஓர் சில அசுரர் ஓடுகின்றனர். சில அசுரர் நீந்திப்போய் காலெடுக்க முடியாது காலோய்ந்து போகின் றனர். ஒரு சில அசுரர் ஓடுகிருர்கள். மாயம்புரிந்து போரிட்ட ஒரு சிலர் மாய்ந்தே போயினுர்கள் 167

காண்டொறுங் காண்டொறும் அவுணர் கண்ணிடை
ஈண்டிய வெள்ளிடை இளவல் மேனியாய்
நீண்டதொர் பையுளாய் நிகழ ஏங்கியே
மாண்டனர் சிலர்சிலர் வாய்வெ ரீஇயினுர்.

போர்க்களத்து வீரவாகுதேவரின் அம்புகளுக்கு இரையாகி அசுரர்கள் இறந்த வேகத்தைக் கண்டு ஏக்கமுற்ற அசுராகள் தாங்கள் காணும் காணும் வெளி இட மெல்லாம் வீரவாகு தேவரின் வடிவமாகவே பிரமையாக காணப்பெறுதலும் நீண்ட தொரு பெரும் துயருற்று ஏங்கி வாய்குழறிக் கத்துவார். 168

துப்புறு பூதர்பின் தொடரத் தாடொழா
மெய்ப்படை முழுவதும் வீசி ஆயிடைத்
தப்பினர் இறுதியில் சாய்ந்து மாய்ந்தவர்
கைப்படை வாங்கியே கடிதுற் ருர்சிலர்.

தப்பியோடும் அசுரரைப் பூதங்கள் பின் தொடர; அவர்களது காலிலே இந்த அசுரர்கள் தாழ்ந்து வணங்கி தங்கள் கையில் பிடித்த படைகள் பலவற்றையும் வீசி எறிந்துவிட்டு தப்பி ஓடிப்போகும்பொழுது அவ்விடம் நீங்கிடும் முடிவான இடத் திலே இறந்து கிடப்பாருடைய ஓர் படையை கையில் எடுத்துக்கொண்டு தாமும் ஒரு வீரர் என்று காண்பிக்குமாறு ஓடிப்போகின்ருர் சில அசுரர். 169

எண்ணமில் படைக்கலம் யாவும் வீசியே
தண்ணுமை வரிதுடி தக்கை பேரியாம்
பண்ணமை இயம்பல பற்றி ஆர்த்திடா
நண்ணினர் நடுவனை நடுக்குந் தானவர்.

**முன்னர்க் காலங்களில் இயமனையும் நடுங்கவைத்த சில அசுரர்கள் தங்கள் கையில் உள்ள பெரும் படைகளை பரவாய் பண்ணுது வீசி எறிந்து விட்டு; அதற்குப் பதிலாக மத்தளம்; உடுக்கு; கொம்புவாத்தியம்; பேரிகை ஆதியான இசை அமைந்த வாத்தியங்கள் பலவற்றையும் எடுத்து அவற்றை வாசித்துக்கொண்டு தாங்கள்போர் வீரர் அல்ல வாத்தியகாரர் எனப் பயத்தால் காண்பித்து நின்றனர். 170**

பரிக்குவை அரிக்குவை படைத்த மாமுகத்
திரக்கமில் அவுணர்கள் இரத்தத் தில்தம
நெருக்குறு சிரத்தொகை நீட்டி மெய்யெலாங்
கரக்குநர் ஒருசிலர் உயிரின் காதலார்.

குதிரைமுகம், யானைமுகம் இவற்றை எடுத்துக் கொண்ட இரக்கமற்ற அசுரர்கள் சிலர் இரத்த ஆற்றில் தமது நெருக்கமாகிய பலதலைகளை மட்டும் வெளியே நீட்டிக் காண்பித்து உடலம் யாவையும் இரத்தத்தில் மறைத்துக் கொண்டு தம் உயிர் மேலுள்ள இச்சையால் இப்படியும் ஒளித்திருக்கின்றார்கள். 171

சூளுறு போரிடைத் தொலைந்து போகியே
நீளிகல் உறுகிலா நிருதர் சம்புவாய்
ஆளுடை வ்யவர்ஊன் அருந்த ஆயிடை
ஞாளிகள் கவர்தலும் நடுக்குற் றார்சிலர்.

சபதம் பேசிப் போரிட்ட போரில் தோல்வியுற்று நீண்ட போரை மீண்டும் செய்ய இயலாது போய்விடும் சில அசுரர்; அங்கு நரிவடிவம் எடுத்துக்கொண்டு இறந்துள்ள தமது அசுரர் உடலங்களை உண்போராகி, தம்மைக் காட்டிக்கொடாது நிற்கும்போது நாய்கள் ஓடிச்சென்று அவர்கள் உண்ணும் ஊனைப் பற்ற நடுங்கிக்கொள்கிறார் சில அசுரர். 172

தீயினை முருக்குறுந் திறல்வெம் பூதர்கள்
தாயினர் தொடர்தலுஞ் சாய்ந்து ளோர்சிலர்
நாயின துருக்கொடு நடக்க ஞாளிகள்
ஆயின அடர்த்தலும் அஞ்சி னார்சிலர்.

நெருப்பின் வேகத்தையும் அடக்கவல்ல வீரமுடைய கொடிய பூதங்கள் தாவிப் பாய்ந்து தொடர்ந்து கலைத்துப்போம் பொழுது பின்னிட்டோடும் அசுரர் சிலர் நாய்வடிவம் எடுத்து ஒளித்தோடலும், அப்போது போர்க்களத்து பிணம் தின்ற நாய்கள் கண்டு கலைத்துக்கொண்டு போதலும் பெரும் பயம்கொண்டு செய்வதறியாது நிற்பார் அந்த அசுரர். 173

விசையொடு சாரதர் விரவ வேற்றுரு
இசைகிலர் இறந்தவர் இனத்துள் மேயினர்
தசைகவர் ஞமலிகள் தலைச்சென் றீர்க்கவும்
அசைவில ராகியே அழுங்கி னார்சிலர்.

விசையோடு பூதங்கள் கலைத்துப்போதலும்; வேறு வடிவத்தை எடுத்துக்கொண்டு ஓடமுடியாத சில அசுரர்கள் இறந்த தமது மக்களின் பிணக்கு வியலுக்குள் மூச்சுப்பேச்சின்றி ஒளித்துக் கிடந்தார்கள். அப்போது பிணம் தின்னும் நாய்கள் வந்து பிணங்களோடுசேர அவர்களது தலையில் கடித்து இழுக்கவும் அசையாதவராய் வருந்திக் கிடப்பார்கள். 174

புண்டரு குருதிநீர் புறத்துச் சிந்திட
மண்டமர் தன்னிடை மாண்ட கேள்வரைக்
கண்டிலர் சிரந்தெரீஇக் கவன்ற ரற்றிய
ஒண்டொடி மாதரின உலவி னார்சிலர்.

சில அசுரர்கள் பூதங்களுக்கு அஞ்சி; பெரும் புண்களால் இரத்தம் வடிகின்றபடி இறந்துகிடக்கின்ற தமது கணவன்மாரைத் தேடிக்காணமுடியாது ஏதோ ஒரு தலையை கணவனுடையது என நினைந்து கட்டி அழுகின்ற பெண்களைப் போன்று வடிவு கொண்டு தம்மை மறைத்து உலவிடுவார் சில அசுரர். 175

சூர்த்திடு நோக்கொடுந் துண்ணென் றெய்தியே
ஆர்த்திடு பூதர்வந் தணுக வாய்வெரீஇ
வேர்த்துடல் பனிப்பவீழ்ந் துதைத்தும் வெய்யதாள்
பேர்த்திடல் இன்றியும் பேதுற் றூர்சிலர்.

அச்சம் விளைக்கும் பார்வையோடு திடுக்கிடும்படி திடிரெனப் பூதங்கள் வந்து அணுகலும் அதுவேளை வாய் குழறி ஐயோ என்று பயந்து உடல் வேர்த்து நடுங்கக் கீழே வீழ்ந்து வலிப்பான நோய்கொண்டார் போன்று காலால் பூமியை உதைத்தும் காலைத் தூக்கமுடியாது விறைத்துப் போயும் நடுங்கிக் கிடக்கின்றூர் சில அசுரர் 176

அழிதரு வோர்தமை அவரின் முன்னரே
கழிதரும் உயிரினர் கணங்க ளாகிவிண்
வழிதரு செலவினில் வந்து பற்றியெம்
பழிதரு வீரெனப் பணிக்கின் றூர்சிலர்.

இறந்துபோன சில அசுரர்களின் ஆவி வானில் சென்றிடும்போது அந்த அசுரரால் கொல்லப்பட்ட உயிர்கள் வானில் கணங்களாகி வான் வழியில் வந்து இவர்களைப் பிடித்து நின்று எம்முடைய பழியை தாருங்கள் என்று பணிக்கின்றூர்கள்.

கொல்வார் இறந்துற்றபோது கொல்லப்பட்டார் வானவழியில் பழிகேட்பது இங்கு குறிப்பிடப்படுகின்றது. கொலையுண்ணும் உயிர் நற்கதியாகிய கணமாக மாறும் என்பதும் இப் பாடலால் குறிப்பிடப்படுகின்றது. ஆகவே மேலான கொலைப்பாதகருக்கு இறந்தாலும்கூட ஆறுதல் இல்லை; இது ஓர் அழிவிலாத உண்மை என உணர்க. 177

வல்விரை பறவையை நோக்கி மற்றவட்
செல்லுதிர் பூதர்கள் தெரியக் கண்டிரேல்
இல்லையிந் நெறிதனில் இறந்து ளோரெனச்
சொல்லுதிர் நீரெனத் தொழுகின் றூர்சிலர்.

சில அசுரர் ஓடிப் போகும்போது வலு விரைவாக ஓடிவரும் பறவைகளைப் பார்த்து, நீங்கள் இப்படி நேரே நாம் வரும் வழியால் போவீர்கள்; பூதங்கள் பின்னுல் எம்மைக் கலைத்து வருவார்கள். அவர்களை நீங்கள் கண்டால் இந்தவழியே அசுரர் ஓடிப்போகவில்லை. அவர்கள் யாவரும் இறந்து போனூர்கள் என்று நீங்கள் சொல்லுங்கள் என்று பறவைகளைக் கெஞ்சிக் கும்பிடுகிறூர் சில அசுரர். 178

காசினி அதனிடைக் கவிழ்ந்த கேள்வரை
ஆசையி னெடுதழீஇ அலமந் தேங்கிய
பாசிழை மாதரிற் பரவப் பூதர்கள்
நாசியீர்ந் திடுதலும் நாணுற் றூர்சிலர்.

சில அசுரர்கள்; இப்போர்ப் பூமியிடத்து இறந்துபோன தமது நாயகரை ஆசையோடு அணைத்து அலமந்து ஏங்கி அழுது புலம்புகின்ற பசிய அழகிய ஆபரண மணிந்த பெண்கள்போன்று வடிவங்கொண்டு; இறந்த அசுரரின் உடல்களை பாசாங்காகக் கட்டிப்பிடித்து அழுதலும்; பூதங்களும் அவைகளை அசுரப் பெண்களெனநினைந்து அப்பெண்களின் மூக்கை அறுத்தலும் நாணமடைந்தார்கள் அந்த அசுரர். 179

அடல்கெழு தூதனல் அவுணர் யாவருங்
கெடுவது திண்ணம்யாங் கெடுகி லோமெனுக்
குடர்கெழு சோரியங் குடிஞைக் கண்ணுறீஇக்
கடலுறு வரையினுட் கலந்து ளார்சிலர்.

**வலிமைமிக்க இந்தத் தூதுவன் வீரவாகுதேவரால் அசுரர் எல்லோரும் இறப்பது நிச்சயம். ஆதலால் நாமும் ஏன் இறப்பான். இறக்கமாட்டோம் என எண்ணிய சில அசுரர் குடல்கள் மிதந்தோடும் இரத்த ஆற்றில் குதித்து மறைந்தோடிப் போய் கடலிடை சேர்ந்து அங்குள்ள மலைகளில் ஒளித்திருந்தார் சிலர். 180**

சாரதர் குழுவினைத் தப்பித் தத்தம
தாருயிர் உய்ந்தபின் அங்கண் மாண்டவர்
சோரிய துரமிசை துதையப் பூசியே
வீரர்கள் இவரென மேவு வார்சிலர்.

பூத கூட்டத்தை ஒருவாறு தப்பித் தவறிக்கொண்டு ஓடிமறைந்த சில அசுரர் தங்களது அரிய உயிர் ஆபத்தின்றி உயந்தது என உணர்ந்த பிற்பாடு தமது இருப்பிடம்போகும்கால் தாம் ஒரு வீரன் என மற்றையோர்க்குக் காட்டவேண்டி அங்கு இறந்த அசுரரின் இரத்தத்தை தமது உடம்பெல்லாம் பூசிக்கொண்டு தாமும் போரிட்டு வரும் வீரர்கள் இவரென்று பார்த்தவர் சொல்லும்படி போகின்றூர்கள். 181

இவ்வகை துஞ்சினர் அன்றி எண்ணிலா
வெவ்வலி அவுணர்கள் வெருவி ஓடலும்
மைவரு நெறிமுயல் மகேந்தி ரப்புரங்
கௌவையின் அரற்றின கடலு டைந்தபோல்.

இவ்வகையாக இறந்துபோன அசுரர்கள்போக; மற்றைய எண்ணற்ற கொடிய வலுவுடைய அசுரர்கள் அஞ்சி ஓடிப்போதலும், வஞ்சனையும் கொடுமையுமான மார்க்கத்தைப் பேணி நின்ற சூரபன்மனது வீரமகேந்திரபுர நகர்மக்கள் மிகு கவலையால் வாடித் துயருற்று அழுது புலம்பினர், கடல் கட்டுடைந்து இரைவது போன்று. 182

அங்கது பொழுதினில் ஆடல் முற்றியே
செங்களம் நடுவுறு செம்மல் தன்புடை
எங்கணும் நீங்கிய இலக்க வேந்தருஞ்
சங்கையில் பூதருந் தலைச்சென் றீண்டினர்.

அவ்வாறாகிய பொழுதில் போர்முடிந்து வெற்றியாகிச் சிவந்த போர்க்களத்து நடுவில் நின்ற வீரவாகுதேவரை எப்பக்கமும் போரிட நீக்கிப்போன இலக்கம் வீரரும் குற்றம் இல்லாத பூதவீரரும் முறையாக வந்து கூடினுர்கள். 183

எரிந்திடு கனல்முகன் எய்த வெஞ்சரம்
உரந்தனை யகழ்ந்திட ஒருதன் வன்மைபோய்
அரந்தையின் மூழ்கியே அழிந்த வீரமா
புரந்தரன் எழுந்தொரு புடையில் எய்தினன்.

அதுவேளை எரிகின்ற நெருப்பின் முகமுடைய அக்கினிமுகாசுரன் முன்பு எய்த அம்புகள் வந்து மார்பை அழுந்திடுதலும் அதனல் தன் வலிமைகெட்டு துயரத்தில் மூழ்குண்டு மயங்கிப்போன வீரபுரந்தரன் கவர்ச்சி நீங்கித் தெளிவுற்று எழுந்து வீரவாகுதேவரின் ஒருபக்கரில் வந்தான். 184

புண்டர நீறணி புனிதன் பாங்கரின்
மிண்டினர் இவரெலாம் மேவி நிற்றலும்
எண்டகும் இளையவர் எழுவர் தம்மையுங்
கண்டிலன் கவன்றனன் கழறல் மேயினன்.

மூன்று குறியாய் நிலவும்படி திருநீறணிந்த மேனியுடைய புனிதராகும் வீரவாகுதேவர் பக்கரில் இவர்கள்யாவரும் வந்து நெருக்கமாய் அடைந்து நிற்றலும்: அவர்கள் கூட்டத்துள்ளே வீரவாகுதேவர்; அக்கினிமுகாசுரனுடைய சிவப்படையால் இறந்துபோன அந்த எழுதம்பியரை மட்டும் காணுதவராய்; என்ன நேர்ந்தது என அறியாது மனம் கவற்சியடைந்து அங்குள்ளாரை நோக்கி இவற்றைச் சொல்கின்ருர். 185

ஆண்டகை வீரர்கள் அடைய லார்க்கெதிர்
மூண்டமர் இயற்றிய மூவர் நால்வரும்
மாண்டன ரேகொலோ மயங்கி னர்கொலோ
யாண்டவர் கிடந்தனர் இயம்பு வீரென்ருன்.

ஆண்டகைமை கொண்ட எனது தம்பியர் ஏழுபேரும் பகைவராகும் அசுரர்க்கு எதிராக மூண்டு கொள்ளும் பெரும் பாரைப்புரிந்து நின்றவர்கள்; இவர்கள் ஏழுபேரும் இறந்து போனுர்களோ? அல்லது மயக்கமடைந்துள்ளார்களோ? எவ்விடத்து அவர்கள் கிடக்கின்றனர். அதனை நீங்கள் சொல்லுங்கள் எனக் கேட்டருளினுர். 186

என்றலும் உக்கிரன் என்னுஞ் சாரதன்
உன்றுணை யார்களை ஒன்ன லன்மகன்
கொன்றனன் அவருயிர் கூற்றும் வௌவினுன்
பொன்றிய வைப்பினைப் புகலக் கேட்டியால்.

அவரது வார்த்தையைக் கேட்டு கூட்டத்தில் நின்ற உக்கிரன் என்னும் பூதத் தலைவன் சொல்கின்ருன்: ஐயனே உமது துணைவராகும் அந்த ஏழுபேர்களையும் எங்கள் பகைவனை சூரபன்மன் மகன் அக்கினிமுகன் படைவிடுத்துக் கொன்ருன். இறந்த அவர்களது உயிரை இயமனும் பற்றிக்கொண்டு போய்விட்டான். அவர்களின் உடலங்கள் இறந்து கிடக்கின்ற இடத்தை நான் சொல்கிறேன் கேட்பீராக. 187

இம்பரின் முன்னுற இயம்பும் யோசனை
ஐம்பதிற் றிரண்டின்மேல் ஆலம் ஒன்றுள
தும்பருஞ் சிறிதென ஓங்கும் ஆயிடைத்
தம்பியர் மாய்ந்தனர் சரத மேயென்ருன்.

நாம் நிற்கும் இடத்திற்கு நேர்முன்னுக நூறு எனச் சொல்லப்பெறும் யோசனை தூரத்தில் ஓர் ஆலமரம் நிற்கின்றது. அந்த ஆலமரமோ வானமும் சிறிது எனும் படி அவ்வளவு உயரஓங்கிநிற்பது. அந்த மரத்தடியில்தான் உமது தம்பிமார்கள் இறந்துகிடக்கின்றனர், இது உண்மையாகும் என்று உக்கிரன் கூறினுன். 188

உக்கிரன் இனையன உரைப்ப யாரினும்
மிக்கவன் வினவியே விழும நோயுறீஇப்
பக்கம தாயினர் படர ஏகினுன்
தொக்குறும் இளைஞர்கள் துஞ்சும் எல்லைவாய்.

உக்கிரன் என்னும் பூதவீரன் இவற்றைச் சொல்லிட எல்லாரிலும் மேம்பட்ட வீரவாகுதேவர் இதனைக் கேட்டமாத்திரத்து சோகமான துயர நோயுற்று மிகு கவலையுடன் உக்கிரன் என்னும் பூதசேனுபதி குறிப்பாகச் சொல்லியபடி; தனது தம்பியர் ஏழுபேரும் இறந்து கிடக்கும் அந்த ஆலமரத்தடியின் எல்லையை நோக்கி தனது பக்கராக உள்ள படைவீரர் சூழ்ந்திடப்போயினர். 189

வேறு

ஓசனை நூறு நீங்கி ஒலிகழல் வீரன் எய்தப்
பாசிலை வடத்தின் பாங்கே பரிவுடைத் தம்பி மார்கள்
காய்சின அங்கி செங்கண் கான்றிடக் களேவ ரத்து
வாசமென் பள்ளி மீது மாய்ந்தனர் கிடப்பக் கண்டான்.

ஒலித்திடும் வீரக் கழல் அணிந்த வீரவாகுதேவர் நூறுயோசனை தூரம் வரை கடந்து சென்று பசியதான பச்சை இலைகளுடன் தளிர்த்து நின்ற அந்த ஆலமரத்தை அடைந்து அங்கு தனது பரிவுடைய தம்பியர் ஏழுபேரும் சிவந்த கண்களில் காய்கின்ற கோபத்தீ கக்குவது போன்ற காட்சியுடன்; பிணங்கள் கிடந்த போர்க்களத்து வாசமுடைய பூக்களான சயனத்தில் துயிலுறுவார் போன்று மாய்ந்து கிடக்கக் கண்டார். 190

கண்டனன் விழிகள் செந்நீர் கான்றிட வீழ்ந்து புல்லிக்
கொண்டனன் இளைஞர் தம்மைக் கூவினன் அரற்றிச் செவ்வாய்
விண்டனன் உயிர்த்து மேனி வியர்த்தனன் வீரன் ஆவி
உண்டில தென்னச் சோர்ந்தான் உணர்ந்துபின் இரங்க லுற்றான்.

இவர்களை வீரவாகுதேவர் கண்டபோதே கண்களினின்றும் இரத்தமே கண்ணீராகச் சொட்டும்படி உருகி வீழ்ந்து தம்பிமாரைத் தழுவினர்; ஐயோ எங்கடா போனிர்கள் வாருங்கள் எனக் கதறி அழைத்தார். அழுதழுது வாயில் அடித்தார். பெருமூச்செறிந்து மேனி வியர்த்தார். இந்நிலையான சோகத்தால் வீரவாகுதேவருக்கு உயிர் இருக்கோ இல்லையோஎனச்சோர்வுற்று வீழ்ந்தார். பின்னல் உணர்வு கொண்டு எழுந்து இப்படி இரங்கி அழுது புலம்புகின்றார். 191

தம்பிமீர் தம்பி மீர்என் றுரைத்திடும் தழுவிக் கொள்ளீர்
எம்பிமீ ரென்னும் ஐயோ எங்ஙனஞ் சென்றீ ரென்னும்
வெம்பினேன் என்னும் என்னை விட்டகன் றீரோ என்னும்
நம்பினேன் உம்மை என்னும் நானுமக் கயலோ என்னும்.

என்தம்பிமாரே! என்தம்பிமாரே என்று கதறியே கூப்பிடுவார். என்னைத் தழுவிக்கொள்வீர் என்பார். எனக்கு உறுதுணை நீங்களல்லவோ என்பார். ஐயோ எங்கு போயினிர்கள் என்பார். நான் கவலைத் தீயால் வெம்பினேனே என்பார். என்னை விட்டுப் போனீரோ என்பார். நாம் உம்மை நம்பி இருந்தேனே என்பார். சரி நான் உமக்கு புறமானவன் என நினைத்தீரோ என்பார் 192

அங்கிமா முகனே நும்மை அடல்செய வல்லான் என்னும்
இங்குநீர் முடிந்தீர் என்றால் என்செய்வன் தமியேன் என்னும்
துங்கவெம் படைகள் ஏந்திச் சூழ்ந்துடன் துணையாய் வந்த
உங்களைத் தோற்றி யானே உய்ந்தனன் போலும் என்னும்.

அந்த அக்கினிமுகாசுரனே உம்மைக்கொல்ல வல்லான் என்பார். இங்கு நீர் இறந்தீர் என்றால் நான் என்னசெய்யவல்லேன் என்பார். மிகவும் மேன்மையான படைகளைக் கையிலே பிடித்துக்கொண்டு என்னைச் சூழ்ந்து வந்த உங்களைத் தோற்று நான் தப்பிப் பிழைத்திருந்தேன் போலும் என்பார். 193

அம்மவோ விதியே என்னும் ஆதகா துனக்கீ தென்னும்
இம்மெனச் செல்லா தின்னும் இருத்தியோ உயிரே என்னும்
செம்மைகொள் குணத்தா ரோடு பிறப்பரே சிலரிங் கென்னும்
எம்மையா ளுடைய வள்ளற் கென்னினி உரைக்கேன் என்னும்.

ஐயோ விதியே! உனக்கு இச் செயல் தகாது என்பார். என் உயிரே நீயுமா இம்மென உடன் நீங்காது இங்கு இருக்கிறாயோ என்பார். இப்படியான செம்மையான குணம்மிக்க சகோதரரோடு பிறக்கக்கூடிய பேற்றை ஆரேனும் பெறுவாரோ என்பார். என்னை ஆளுடைய ஆறுமுக வள்ளலுக்கு என்னினி நான் சென்று சொல்வேன் என்பார். 194

சீரிள மைந்தர் துஞ்சச் சிலையொடு திரிவேன் என்னின்
ஆரெனக் கொப்புண் டம்மா அழகிதென் னாற்றல் என்னும்
சூரர்தங் கிளையை எல்லாந் துண்ணெனச் சென்று சுற்றி
வேரொடு முடித்தால் அன்றி அகலுமோ வெகுளி யென்னும்.

சீருடைய எனது இளைய இப்பிள்ளைகள் இறப்ப நான் வில்லும் கையுமாகத் திரிவன் என்னின் ஆர் எனக்கு ஒப்பான வஞ்சவீரன்? அம்மாவோ! எனது ஆற்றல் அழகாயிருக்கின்றது என்பார். ஐயகோ அசுரனுடைய கிளை முழுவதையும் துண்ணென உடன் நான் சென்று சுற்றிவளைத்து வேரோடுகொன்றால் அன்றி என் கோபமும் தீருமோ என்பார். 195

துப்புடை வில்லின் கல்வித் துணைவர்கள் ஈண்டு துஞ்ச
வெப்படை தூண்டி ஞனே எரிமுகத் தவுணன் என்னும்.
அப்படை நல்கு தேவர் ஆர்கொலோ அறியேன் என்னும்
மெய்ப்படை வேலி ஞருக் கடியரோ வினையேம் என்னும்.

மிக்க மேம்பாடுடைய வில்வித்தையின் சிறப்புடைய வீரர் இறந்திடும்படி இந்த அக்கினிமுகாசுரன் எப்படையைத் தூண்டினனே என்பார், அந்தப்படையை அவனுக்கு கொடுத்த தேவர் ஆர் என அறியமுடியவில்லையே என்பார். இந்நிலைநமக்கு எய்தியதால் வினையுடைய நாமும் உண்மை வடிவான வேலினை ஏந்திய பெருமானுக்கு அடியவரோ என்பார். 196

அடுவனே அவுணர் சூழ்வை என்றிடும் அனலி உண்ண
விடுவனே இவ்வூர் என்னும் எந்தைதன் படையைச் சூர்மேல்
விடுவனே என்னும் அந்தோ அஞ்சினேன் வேலுக் கென்னும்
படுவனே துயரத் தென்னுஞ் செய்வதென் பாவி என்னும்.

அசுரரது குலம் முழுவதையும் கொல்வேனே என்பார்; இந்த ஊர் முழுவதையும் நெருப்பு எரித்து உண்டிடச் செய்வேனே என்பார். எந்தைபெருமானின் சிவப்படையை இங்கிருந்தே சூரன்மேல் விடுவேனே என்பார். அந்தோ அப்படிச் செய்வதற்கு ஆணையுடைய வேற்படைக்கு அஞ்சினேன் என்பார். நானும் இப்படித் துயரப்படுவேனே என்பார். அல்லாது பாவியேன் இங்கு என் செயவேன் என்பார். 197

ஒன்றிய துணைவர் தம்மை ஒருங்குடன் படுத்த நீரால்
இன்றமர் செய்து பட்ட எரிமுகன் தன்பால் அன்றே
வென்றிய தென்னும் என்றன் வீரமா சுண்ட தென்னும்
பொன்றிலன் அளியன் போலப் புலம்பினன் வறிதே என்னும்.

ஒருங்கே என் உடன் பிறந்த தம்பிமார் எழுவரையும் அக்கினிமுகன் கொன்ற அத்தன்மையால்; இன்று போரிட்டு இறந்துபோன அக்கினிமுகன் பக்கரில் தான் வெற்றி என்பார். எனது மாசுபடாத வீரம் இன்று தம்பிமாரைத் தோற்றூர் எனும் மாசுபட்டது என்பார். நான் இன்னும் இறக்கவில்லையே ஓர் எளியவன் போல வீணே நின்று புலம்புகின்றேனே என்பார். 198

வில்லினைப் பார்க்கும் செங்கேழ் வேலினைப் பார்க்கும் ஏனை
மல்லலம் படையைப் பார்க்கும் வாளியைப் பார்க்கும் வீரச்
சொல்லினைப் பார்க்கும் வந்து சூழ்தரு பழியைப் பார்க்கும்
கல்லென எயிற்றின் பந்தி கறித்திடும் கவலு மன்றே.

தனது வில்லைப்பார்ப்பார். சிவந்த ஒளியுடைய வேலைப்பார்ப்பார். மற்றைய வலியுடைய படையைப் பார்ப்பார் அம்பினைப்பார்ப்பார் தான் முன்பேசிய வீரச் சொல்லைப் பார்ப்பார். தனக்கு வந்து சூழ்ந்துள்ள பழியைப் பார்ப்பார். நெறுநெறு வென தனது பல்வரிசையை நெருமிக் கடிப்பார். கவலைப்பட்டு நிற்பார் வீரவாகு தேவர். 199

அருந்துயர் எய்தி இவ்வா றழுங்கினேன் எளிய ஞகி
இருந்தனன் அல்லன் ஏங்கி யாதுமோர் செயலும் இன்றி
வருந்தினன் அல்லன் கானின் மருந்தினுக் குழன்றூன் அல்லன்
விரைந்துதன் இளையர் தம்மை எழுப்பவோர் வினையங் கொண்டான்

சொல்லற்கரிய துயரமடைந்து இவ்வாறு அழுதுபுலம்பிய வீரவாகுதேவர் மிக வலியிலாதவன் போன்று இருந்தார் அல்ல; அல்லாதிருந்தால் சோகத்தால் ஏங்கி யாதொரு செயலுமின்றி இருந்தார் அல்ல; காட்டிலே சென்று புண்ணுண்டாருக்கு நோய் நீங்கி எழுப்பிட அமிர்தமான மூலிகைகளுக்கு உழன்று திரிந்தார் அல்ல; ஏதோ வகையால் இறந்துபோன தனது தம்பியரை எழுப்புவதற்கு ஓர் கருமத்தை மேற்கொண்டார் அவர். 200

நாற்றலை யுடைய அண்ணல் நாரணன் முதலோர் நல்க
ஏற்றிடு படையில் ஒன்றை இளையர்கள் எழுவர் மீது
மாற்றலன் விடுத்தான் என்னின் மற்றவர் ஆவி உண்டோன்
கூற்றுவன் அன்றோ என்னுக் குறித்திவை கூற லுற்றான்.

நான்கு தலையுடைய கடவுள் பிரமன் திருமால் முதலியோர் கொடுத்தலும் பெற்றுக்கொண்ட ஓர் படையை என் ஏழுதம்பியர்மீதும் விடுத்துள்ளான் இந்த அக்கினிமுகன் என்று நான் நினைப்பதாகில். இப்பிள்ளைகளின் உயிரை உண்டவன் இயமன்தான் அல்லவோ என்று தனது மனதில்குறித்து இவைகளை எண்ணத்தொடங்குவார் வீரவாகுதேவர். 201

வேறு

ஊனோ டாவிக் கின்பம் விரும்பி உழல்கின்ற
வானோ ரேபோல் தானவ ரேபோல் வழிசெல்லா
ஏனோ ரேபோல் எண்ணின னேகொல் எமர்ஆவி
தானே உண்பான் கூற்றுவன் என்னும் தமியோனே.

ஊனோடு கூடிய உயிருக்கு இன்பம்வேண்டி உழல்கின்ற தேவர்களைப்போல், அல்லது அசுரரேபோல், அல்லது நல்வழி சென்றிடாத மற்றைய மனிதரைப் போன்று இந்த இயமன் எம்மையும் நினைத்தானே? தொண்டு செய்து எம்பிரான் கழல் போற்றும் எமதுமக்களின் உயிரை உண்பானு இந்த இயமன் என்னும் தனியாயவன். 202

விரியு முணர்ச்சியை மாற்றுவ தல்லால் விண்ணோர்கள்
ஒருபடை தானும் நங்கள் இனத்தை உயிருண்ணு
எரிமுக னென்பான் அட்டனன் அன்றே இளையோரைத்
தரியல னாகிக் கொன்றவ னம்மா தானன்றோ.

தேவர்கள் படைக்கலங்கள்யாவும் விரிகின்ற எமது உணர்வை தெளிவு பெறுது மாற்றுவதல்லாமல் தங்கள் இனத்தை உயிருண்ணமாட்டா. அப்படி இருப்ப அக்கினிமுகன் என்பவன் தேவர் படைவிட்டுக் கொன்றானல்லன். எனது தம்பியரை உண்மையில் பொறுமை இலாதவனாகிக் கொன்றவன் அம்மாடி இந்த இயமன் அல்லோ? 203

போதத் துக்கோர் வைப்பிட மாயோர் பொறியாகி
மூதக் கோர்எண் டாரக மூல மொழிகேட்டு
வேதத் தோனை வெஞ்சிறை பூட்டி விதியாற்றும்
ஆதித் தேவன் தம்பியர் என்ப தறியானோ.

ஞானத்திற் கொருவைப் பிடமாகி, அதற்கு ஓர் ஒளியாகி; மிகவும் மேலோர் உணரும் பொருளான ஓங்காரமாகும் மூல எழுத்தின் மொழிகேட்டு வேதத்திற்குரிய கடவுளாகும் பிரமதேவனை கொடிய சிறைபூட்டி தானே பின்னர் உயிர்களைப்படைத்தருளிநின்ற ஆதியான தேவன் ஆறுமுகப்பிரானின் தம்பியர் இந்த எழுவரும் என இயமன் அறியானோ? 204

ஆறுட் பட்ட ஐயிரு காலத் தரன்நாமங்
கூறிட் டோவாச் சேய்உயிர் வவ்வக் குறுகுங்கால்
சீறித் தாளால் தாக்கிய சின்னஞ் சிறிதுந்தான்
மாறிற் றில்லைக் கூற்றது தானும் மறந்தானோ.

பதினாறுவது வயதில் காலமுடிவானாலும் ஈசனின் நாமத்தை அங்குகூறி ஓயாது பூசைபுரிந்துநின்ற மார்க்கண்டர் என்னும் பிராமணப் பிள்ளையின் உயிரைப்பிடிக்கும்படி கோபமுடன் வந்த இயமனை எமது பெருமான் சீறி தமது தாளினால் தாக்கி உதைத்தபோது உதைவாங்கிய குறி இன்னமுமே சிறிதுந்தான் மாறவில்லை; அதைக்கூட இந்த இயமன் மறந்தானோ. 205

சீலந் தன்னுல் ஓர்விழு போதைச் சிவனுக்கென்
ஞேலங் கொண்டே விண்ணிடை புக்கோன் உயிர்வெளவிச்
சூலந் தன்னிற் கண்ணுதல் ஏற்றச் சுழலுற்றுக்
காலன் பன்னுள் தூங்கிய வண்ணங் காணுனே.

ஓர் அந்தணன் தான் வேறொரு காதலியிடம் பூவெடுத்துச் சென்றபோது ஓர் பூவிழ அதனைச் சிவபிரானுக்கு என்று ஓலமிட்டு வானில் இறந்துபோம்பொழுது அவன் உயிரை பிடித்தமைக்காக இந்த இயமனை எமது பெருமான் சூலத்தினுல் குற்றிட அதனுல் சுழலுற்று இந்த இயமன் பலநாள் துன்பப்பட்டதை மறந்தனனே? 206

நஞ்சிற் றீயன் வேட்டுவன் அன்ருேர் நாள்முற்றும்
துஞ்சற் றூணற் றரன்மிசை வில்வந் தூர்த்தோனை
வெஞ்சொற் கூறிப் பற்றலும் யாங்கண் மிகஎற்ற
அஞ்சித் தன்தூ தாயினர் போன தறியானே.

நஞ்சிலும் பார்க்கத் தீமையுடையதோர் வேடுவன் அன்று ஓர் நாள் முழுவதும் கீழேயுள்ள புலியினுல் தாக்குண்ணுதிருப்பதற்காக; ஒரு வில்வ மரத்தின் மேல் சிவராத்திரிப் பொழுதில் ஏறி இருந்துகொண்டு ஓயாது வில்வத்தினை கீழே இருந்த சிவலிங்கத்தின் மீது உணவுமின்றி உறக்கமும் இன்றி சொரிந்திட அந்த வேடனை பிடிப்பதற்கு இந்த இயமனின் தூதுவர் கொடுஞ் சொற்கூறிப் பிடித்தபொழுது, நாங்கள்போய் அவரை மிகஅடிப்ப அதனுலே அத்தூதுவர் அவ்வேடனைவிட்டுப் போனதை இந்த இயமன் அறியானே? 207

அக்கா லத்தின் எல்லையின் மைந்தற் கரவென்றே
முக்கா லோதித் தீமை குறித்தே முடிவோனை
மெய்க்கா லன்தூ தாயினர் பற்ற விடுவித்தேம்
இக்கால் கொண்டே அவரை உதைத்தேன் யானன்ருே.

அக்காலத்திலே ஒரு வேடுவன் தனது உயிர்நீங்கிடும் அந்திய காலத்து; தனது பிள்ளைகளை கூப்பிட்டு தனது வேடப்பாஷையில் ஆகர பிரகர சங்கர என்று ஆரையும் பிடித்து அடியுங்கள்; பொருளை பிடுங்குங்கள் கொல்லுங்கள் இதுவே உமது தொழிலாக இருக்கட்டும் என தனது பாஷையில் கூறும்பொழுதே அர என்னும் ஓசைதொனிப்பக் கூறிஇறந்தோனை பிடிக்கும்படி வந்த அழிவிலாத இயமதூதுவரை அவ்வேடன் அறியாமலே அர என்னும் நாமம் சொன்னமைக்காக பிடிக்கச்கூடாது என்று அந்த தூதுவரை இந்தக் காலாலே உதைத்தேன் நான் அல்லவோ? 208

மெச்சியல் கொள்ளாத் துன்மதி யாலும் மிகவெய்ய
துச்சக ஞலும் ஏனைய ராலுந் தொன்ஞளின்
இச்சக மாற்றுந் தன்னிறை நீங்கி இடரெய்தி
அச்ச முழந்தே பட்டது சண்டன் அயர்த்தானே.

மெய்ம்மையான இயல்பைப் பெருது இருக்கும் துன்மதி என்னும் மந்திரியாலும், மிகவும் கொடிய துச்சகன் என்னும் மந்திரியாலும் ஏனைய துர்ப்போதனை கூறிடுவோரின் சொற்களைக்கேட்டமையாலும் இந்த இயமன் பூமியில் தான் செய்கின்ற அரசியல் தொழிலை நீங்கி இடரெய்தி அச்சம்கொண்டு பரிபவப்பட்டு உழன்றதை மறந்தானே? 209

நீறு முகத்தார் கண்டிகை பூண்டார் நிமலன்பேர்
கூறு முகத்தார் தம்புடை செல்லக் குலேகூற்றன்
ஆறு முகத்தான் அடியவர் ஆவி யலேத்தானே
சேறு முகத்தாழ் கரியை யடாதோ சிறுபுள்ளும்.

**நீறு அணிந்த முகமுடையார், உருத்திராக்கம் பூண்டார், ஈசனின் நாமத்தை கூறுமுகத்தார் ஆகியோரின் பக்கராகவும் செல்வதற்கு நடுங்குகின்ற இந்த இயமன், ஆறுமுகமுடைய அப்பனின் அடியவருடைய ஆவியை அலைத்தான் என்ருல், இனிமேல் சேற்றுக்குள் அகப்பட்ட யானையை சிறு குருவிதானும் கொல்லமாட்டாதோ? 210**

வேறு

என்னு மாற்றங்கள் இயம்பியே இளையவன் எழுந்து
பின்னர் யாத்திடு தூணியில் ஒருசரம் பிடுங்கித்
தன்ன கங்கொடே யன்னதன் தலைதனில் தரும
மன்னர் மன்னவன் கண்டிட இத்திறம் வரைவான்.

என இந்த வார்த்தைகளை வீரவாகுதேவர் இசைத்து எழுந்து நின்று பின்முதுகில் அணிந்திருந்த அப்புக் கூட்டில் நின்றும் ஓர் அம்பினைப் பிடுங்கி; தனது நகத்தைக்கொண்டு அந்த அம்பின் தலையில் தருமத்திற்கு அரசனான இயமராசன் கண்டிட இத்திறம் அதில் எழுதினார். 211

வேலு டைத்தனி நாயகற் கிளையவன் விடுத்தேன்
கால நாடுறு கூற்றுவ னென்பவன் காண்க
கோல வெஞ்சிலைத் துணைவர்தம் ஆருயிர் கொண்டாய்
வாலி தோவிது விடுக்குதி கடிதென வரைந்தான்.

வேலுடைய தனிநாயகரான ஆறுமுகப்பிரானுக்கு இளையோனான வீரவாகு இதனை எழுதி இந்த அம்பை விடுத்தேன். உயிர்கள் வாழவேண்டிய காலத்தை அளவிட்டறிகின்ற இயமன் என்பவனே நீ காண்க; அழகிய கொடிய வில்லை ஏந்திய என் சகோதரரின் உயிரினைக் கைக்கொண்டாய்; இது உனக்குப் பொருத்தமாமோ? உடனே அவர்களை விடுப்பாய் என அதில் எழுதினார். 112

செந்ந லங்கிளர் தன்னகத் தின்னவா தீட்டிப்
பொன்னெ டுஞ்சிலை வாங்கியப் பகழியைப் பூட்டிப்
பன்னிரண்டுதோள் விமலனை மனங்கொடு பரவி
மின்னெ னச்சென்றி யமபுரம் புகும்வகை விடுத்தான்.

செம்மை வாய்ந்த நலங்கொண்ட தனது நகத்தால் இன்னவாறு அம்பின் தலையில் வீரவாகுதேவர் எழுதி பொன்னுக விளங்கிடும் வில்லைவளைத்து அதில் அந்த அம்பைப்பூட்டி பன்னிரண்டு தோளுடைய பகவானை மனதால் அன்புடன் துதித்து: மின்னல்போல் அந்த அம்பு வேகமுடன் இயமபுரம்போகும்படி விடுத்தார். 213

கரந்தை சூடுவான் திருமகற் கிளையவன் கணைமுன்
விரைந்து தெண்கடல் ஏழையுங் கடந்துவிண் ணோங்கி
இருந்த மானசோத் தரகிரித் தென்புறத் தியம
புரந்த னிற்சென்று மறலிதன் முன்புபோந் ததுவே.

கொன்றைமாலை சூடிய சிவபிரான் திருக்குமரன் முருகனுக்கு இளையோரான வீரவாகுதேவர் விடுத்த அம்பு விரைவுடன் சென்று தெள்ளிய ஏழு கடலையும் கடந்து வானில் ஓங்கி சிறப்புற்றிருக்கும் மானத சோத்திரம் என்னும் மலைக்குத் தென்புறமாயுள்ள இயம புரத்திற்சென்று; இயமன் முன்புபோயது 214

தொடுத்த அக்கணை அந்தகன் முன்புதுண் ணெனப்போய்
அடுத்து வீழ்தலும் விம்மிதம் எய்தியே அவன்சென்
றெடுத்து நோக்கினன் வீரவா குப்பெயர் இளவல்
விடுத்த தாகலு முற்றுற உணர்ந்தனன் விரைவில்.

வீரவாகுதேவர் தொடுத்த அந்தக் கணையானது இயமன்முன்பு துண்ணெனப் போய் அவன் முன் வீழ்தலும்; அதனைக் கண்டு இயமதேவன் ஆச்சரியம் கொண்டு அந்த அம்பை எடுத்து நோக்கினான்; வீரவாகுதேவர் விடுத்ததாக அது இருத்தலும் அதில் உள்ள வரலாற்றை முற்றிலும் படித்து விரைவில் ஊர்ந்தான் இயமன். 215

அயில்நெ டுங்கணைப் பாசுரத் தகலம துணர்ந்து
துயரு ழந்தஞ்சி ஈண்டிலர் இளையவன் துணைவர்
பயில எங்ஙனஞ் சென்றன ரோவெனப் பார்த்தான்
கயிலை யேகியே இருப்பதா உணர்ச்சியிற் கண்டான்.

சூரியவேல்போலும் நெடுமுகமுடைய அம்பில் எழுதப்பட்ட வார்த்தையின் விரிவை நன்கு இயமன் உணர்ந்து பயந்து அவ்விடம் வீரவாகுதேவரின் தம்பியர் இலாமையை உணர்ந்து; எவ்விடம் அவர்கள் ஆவிசென்றதோ என தனது ஞான உணர்வினல் பார்த்தான். பார்த்தபோது அவர்கள் எழுவரும் கயிலையில் இருப்பதாக அறிந்தான். 216

கண்டு தேறினன் கடாமிசை ஏறினன் கடுங்கால்
கொண்ட தானைகள் சூறையங் காலெனக் குழுமப்
பண்டு தானுறை பதியினை நீங்கினன் படரா
அண்டர் நாயகன் கயிலையஞ் சாரலை யடைந்தான்.

கண்டுதேறிக்கொண்ட இயமன் எருமைக்கடாமீது ஏறினன்; கடியகால்கொண்ட சேனைகள் சூருவளிக்காற்றைப் போன்று பின்தொடர்ந்து சூழ்ந்துவர முன்னர் தான் உற்ற இயமபுரத்தினை விடுத்து நீங்கிச்சென்று தேவாதிதேவர்க்கெல்லாம் தலைவரான சிவபிரான் இருந்திடும் கைலைமலையை அடைந்தான். 217

ஆன காலையில் ஆயிடைப் பொதும்பரொன் றதனின்
மான வேற்படை அவுணர்தம் படைகளின் மாண்ட
சேனை வீரர்கள் சூழ்தர எழுவருஞ் சிறந்து
கான விஞ்சையர் பாடல்கேட் டிருப்பது கண்டான்.

அவ்வாறு இயமன்சென்ற காலையில் அவ்விடத்து உள்ள சோலை ஒன்றினில்; மானமுடைய வேலேந்திய அசுரர்கள் தாக்கிட அதனல் மாண்டுபோன பூதச்சேனை வீரர்கள் சூழ்தர ஏழுவீரர்களும் சிறந்த இனிய இசைபாடும் விஞ்சையர்களின் பாடல்கேட்டிருப்பதைக் கண்டான் இயமதேவன். 218

தொழுது மற்றவர் முன்னுற மறலிபோய்த் துன்னி
முழுது ணர்ந்துளீர் நுங்களை நாடுவான் முன்னோன்
அழகி தென்றிவண் இருப்பதென் என்னையும் அயிர்ப்பான்
எழுவி ருங்கடி தெழுவிர்இப் பூதரோ டென்றான்.

அந்த ஏழு வீரர்களின் முன்பு இயமராசன் தொழுதுபோய் அவர்களை அடைந்து; எல்லாம் உணர்ந்துளீர்களே உங்கள் ஏழுபேரையும உங்கள் தமையன் வீரவாகு தேடியவாறு இருக்கின்ற நேரத்தில் நீவிர் இந்த விஞ்சையர்களின் பாடல் கேட்டிருப்பது அழகிது என்று இங்கு இருப்பது எப்படி? என்னையும் உமது தமையன் வீரவாகு கோபிக்கின்றார். ஆதலின் நீங்கள் ஏழுபேரும் இப்பூதங்களுடன் விரைவாக எழுந்து வாருங்கள் என்றான். 219

என்ற காலையின் எழுவரும் எழுந்திரு மருங்கு
நின்ற பூதர்கள் யாவரும் போந்திட நீங்கி
ஒன்றொர் மாத்திரை ஒடுங்குமுன் அவுணர்கோன் உறையும்
மன்றல் மாநகர் அடுகளம் புக்கனர் மன்னோ.

என்று இயமதேவன் கூறியகாலையில் ஏழுபேரும் எழுந்து தமது இருமருங்கும் நின்ற சேனையாகும் பூதங்கள் உடன்வந்திட அவ்விடம் நீங்கி ஒரு மாத்திரைப் பொழுது ஒடுங்குமுன்பே சூரபன்மன் இருந்திடும்; மாட்சிமை மிகுந்த பெரு நகரிடத்து வந்து போர்க்களம் புகுந்து கொண்டனர். 220

புக்க காலையின் எழுவரும் தம்முடல் புகுந்தார்
மிக்க பாரிடத் தலைவர்கள் யாவரும் விரைவில்
தொக்கு வீழ்தரு மியாக்கைகள் உற்றனர் சுரர்கள்
அக்க ணந்தனிற் பூமழை தூவிநின் றார்த்தார்.

இங்கு வந்து சேர்ந்த காலையில் அந்த ஏழுவீரரும் ஆலமரத்தடியில் இறந்துற்ற தமது உடலில் புகுந்தார்கள். மிகுதொகையாகி அவருடன் கூடி வந்த பூதசேனை வீரர்கள் யாவரும் விரைவில் தத்தமக்குரிய உடலில புகுந்தனர். தேவர்கள் யாவரும் அக்கணமே பூக்களாய மழையைச் சொரிந்து நின்று ஆரவாரித்தனர். 221

இன்ன வேலேயின் எழுவரும் பதைபதைத் தெழுந்து
முன்ன வன்றன தடிக்கம லங்களே முறையால்
சென்னி தாழ்வுற வணங்கினர் செங்கையால் எடுத்துப்
பொன்னின் மார்புறப் புல்லினன் எல்லேதீர் புகழோன்.

இன்னதாகிய நேரத்தில் இறந்துள்ள அந்த ஏழுபேருங் பதைபதைத்துக்கொண்டு எழுந்து தங்கட்கு முன்னவராய வீரவாகுதேவரின் பாத கமலங்களே முறையாக தலேயால் தாழ்ந்து வணங்கினுர்கள். வணங்குவாரை தனது அழகிய கைகளால் எடுத்து பொன்னுக விளங்கிடும் மார்புடன் சேர அணேத்துத்தழுவி மகிழ்வுற்ருர் எல்லேயிலாத புகழுடைய வீரவாகுதேவர். 222

புல்லி னன்இள வீரரைப் புயங்கமுண் டுமிழ்ந்த
எல்லி னனென விளங்கினன் அவுணரை இனிநான்
வில்லி னல்அடல் செய்வதோ அரிதென விறலும்
சொல்லி னன்மகிழ் வாயினன் புன்கணும் தொலேந்தான்.

வீரவாகுதேவர் இவர்கள் எழுவரையும் தழுவினர், பாம்பு உண்டு உமிழ்ந்து விட்ட சூரியன்போன்று மகிழ்ச்சியால் திகழ்ந்து நின்ருர். இந்த அசுரரை இனி நான் என் வில்லினுல் வெல்வதும் ஓர் அரிய காரியமா என வீரமும் சொல்லினன்; மகிழ்ச்சியடைந்தார். இதுவன்றி முன்னுள்ள கவலேயாவும் நீங்கப்பெற்ருர் வீரவாகு தேவர். 223

எண்ட குந்திறல் எழுவரும் பிறரும்உய்ந் தெழுதல்
கண்டு வீரமா புரந்தர னுங்கணத் தவரும்
திண்டி றற்புனே இலக்கரும் உவகையிற் சிறந்து
கொண்டல் கண்டிடு சாதகம் போல்உளங் குளிர்ந்தார்.

யாவராலும் மதித்து எண்ணப்படும் திறமைசாலிகளான ஏழுவீரரும் பிற பூத சேனேகளும் உயிர்பெற்றெழுதலேக் கண்டு வீரமாபுரந்தரனும் பூத கணத்தவரும் திண்மைகுன்ருத வலியுடைய இலக்கரும் மகிழ்ச்சியிற் சிறந்து மேகத்தைக் கண்டிடும் சாதகப் பறவைபோல் உள்ளம் சிறந்தார். 224

அன்ன தாகிய எல்லேயில் கூற்றனும் அனிகம்
துன்ன ஆயிடை வந்தனன் இளவலேத் தொழுது
மின்னு லாவிய வேலினுய் தமியனே வெகுண்டாய்
முன்னி கழ்ந்திடு வரன்முறை கேளென மொழிவான்.

அவ்வாருகிய நேரத்து இயமனும் தனது சேனேசூழ்தர அவ்விடத்து வந்தான். வீரவாகுதேவரைத் தொழுது நோக்கி; மின்னல் தோன்றிடும் வேலினே உடையோய்! என்னே நீர் கோபித்தீர்; ஆனல் இச்செயல்களுக்கு முன்பாக நிகழ்ந்திடும் காரியங்களேக் கேட்டுக்கொள்ளும் எனச் சொல்கின்ருன். 225

எழுதி றத்தரும் இங்ஙனம் தம்முடல் விட்டுக்
குழுவி னேடுபோய்க் கயிலேயஞ் சாரலில் குறுகி
பழிப டுஞ்சில பூதரும் சுற்றிட வதிந்தார்
அழிபெ ருந்துயிர் உழத்தலில் தெரிந்திலே அதனே.

உமது சகோதரராகிய ஏழு வீரரும் தமது உடலே இங்குவிடுத்து கூட்டமாகப் போய் கைலேமலேயின் சாரலேஅடைந்து இவர்களே வழிபட்டிருக்கும் சில பூதங்களும் சுற்றியிருக்க அவ்விடத்து இருந்தார்கள். உமது தம்பியர் இறந்ததால் கொண்ட சோகத்தால் பெரும் துயரை நீர் அநுபவித்தபடியால் இந்த உண்மை நிலேயை தெரியாது போய்விட்டீர். 226

அங்க மீதினில் நீறுகண் டிகையினே அணிந்தார்
தங்கள் பாலினுஞ் செல்லுதற் கஞ்சுறுந் தமியேன்
இங்கு நின்இளே யார்உயிர் கொள்வனே எவரும்
வெங்க னற்பொறி யுண்பரோ பசிப்பிணி மிகினும்.

தமது உடல்மீதில் திருநீறும் உருத்திராக்கமும் அணிந்தார்களின் பக்கரிலும் செல்வதற்கு பயந்திருக்கும் தமியேனை நான் இவ்விடத்து உமது தம்பிமாரின் உயிரைப்பிடிப்பேனே. யாரென்றாலும் கொடிய நெருப்புத்தணலை உண்பாரோ எவ்வளவு பசிவந்துற்றாலும். 227

வினைய முன்னிநீ விடுகணை நோக்கியான் வெள்ளித்
தனிவ ரைப்பெருஞ் சாரலில் போந்துசா ரதரோ
டுனது தம்பியர் தங்களை விளித்திவண் உய்த்தேன்
முனிவு கொள்ளலை ஐயஎன் னிடையென மொழிந்தான்.

உமக்கு நேர்ந்துள்ள கருமத்தால் நீர் அதற்குத்தீர்வு கண்டிடுதற்கு என்னிடத்து விடப்பெற்ற அப்பினை யான்கண்டு வெள்ளிமயமான தனிமலையாகும் கைலைமலையின் சாரலில் சென்று அங்கு பூதகணங்களோடு இருந்த உனது தம்பியர் எழுவரையும் இங்கு வரவழைத்துக் கொண்டுவந்துவிடுத்தேன். ஆதலால் என்னுடன் முனிவு கொள்ளாதீர் ஐயனே! எனக் கூறினான் இயமதேவன். 228

அந்த கன்மொழி வினவலும் ஐயனுக் கிளவல்
நந்து யர்க்கடல் சுவற்றினை கயிலையின் நமர்கள்
வந்த தன்மையைத் தேற்றில மயங்கியீண் டுற்றாம்
புந்தி கொள்ளலை யாவது நீயெனப் புகன்றான்.

அந்த நல்மொழியினைக் கேட்டலும் எமது ஐயராகும் முருகப்பெருமானுக்கு இளையோரான வீரவாகுதேவர் இயமதேவனை நோக்கி நமது துயரமாகும் கடலை நீ வற்றிடச் செய்தாய்; கைலாய மலைச்சாரலில் நமது குல மைந்தர் எழுவரும் இருந்தார்கள் என்பதைத் தெளிய முடியாது இங்கு இருந்தேன். ஆதலால் அதன் பயனாக நிகழ்ந்தமைபற்றி நீ ஏதும் மனதில் எண்ணிவிடாதே என மொழிந்தார். 229

புகல லுற்றபின் விடைகொண்டு கூற்றெனும் புத்தேள்
உவகை தன்னொடு தன்புரத் தேகினன் ஒன்னார்
இகலை வெஃகியே பூதரும் துணைவரும் ஏத்த
நிகரி லாதவன் அன்னதோர் களத்திடை நின்றான்.

வீரவாகுதேவர் இதனைச் சொல்லியபிற்பாடு அதுகேட்டு இயமதேவன் எனும் கடவுளும் செல்வதற்குரிய விடையைப் பெற்றுக்கொண்டு மனதில் பெருமகிழ்வும் கொண்டு; தனது இயமபுரத்துச் சென்றனன். அதுவேளை பகைவரின் போரினை விரும்பியே பூதரும் தம்பிமாரும் வணங்கிடத் தனக்கு நிகரிலாத வீரவாகுதேவர் அந்த ஒரு போர்க்களத்து நின்றார். 230

நின்று மற்றிவை நாடிய ஒற்றர்நீள் நகரில்
சென்று சூரனைத் தொழுதுநின் மதலைபோர் செய்து
வென்றி மொய்ம்பினன் விடுத்திடு வீரன்மாப் படையால்
பொன்றி னன்பொடி யாகிவீழ்ந் தனனெனப் புகன்றார்.

அப்போர்க்களத்து நின்று மற்று இவைகள் யாவற்றையும் நாடி அறிந்த அசுர தூதுவர்கள் நீண்ட சூரபன்மனது நகரில் சென்று சூரபன்மனைக் கண்டு தொழுது; ஐயனே! நினது மகன் அக்கினிமுகாசுரன் போர்புரிந்து வெற்றிதரும் தோளுடைய வீரவாகுதேவர் விடுத்துள்ள வீரபத்திரப் பெரும் படையால் இறந்து பொடியாகி வீழ்ந்தான் எனச் சொன்னார்கள். 231

**வேறு**

அக்கா லைதனில் அவுணர்க் குளெலாம்
மிக்கான் புவியின் மிசைவீழ்ந் தயரா
எக்கா லுமுறா தவிடர்க் கடலுட்
புக்கான் மெலிவோ டுபுலம் புறுவான்.

சொன்ன அக்காலையில் தானே அசுரர் குலத்தவருக்கெல்லாம் மிகுமேம்பாடுடைய சூரபன்மன் சோகமயக்கத்தால் பூமியின் மீது வீழ்ந்து மயங்கி. எக்காலத்தும் தான் அநுபவித்திராத இடர்என்னும் கடலுள் மூழ்கினன். அத்துயரினுல் உள்ளம் மெலிவாகி இதனைச் சொல்லிப்புலப்புறுவான். 232

உண்ணே யமதாம் உயிரே உறவே
கண்ணே மணியே கனல்மா முகனே
விண்ணே கினையோ இவண்மீள் கிலையால்
எண்ணேன் உயிர்வாழ்க் கையையிங் கினியே.

எனது உள்ளத்து நேயமான எனது உயிரே என் உறவே என்கண்ணே கண்ணின் மணியே என்மைந்தா அக்கினிமுகவா! ஐயோ நீ இவ்வுலகை விடுத்து விண்ணிலும் போனுயோ! இனி இங்கு வருவாயில்லை. ஐயனே நான் உன்னைத் தோற்று இங்கிருந்து உயிர்வாழ்வதை இனி எண்ணமாட்டேன். 233

எந்தைக் கிளையான் தனையிந் நகரின்
வந்துற் றதொர்தூ தன்மலைந் திடலான்
நொந்துற் றனைமெய் யுநுடங் கினையால்
அந்தத் துயர்இங் ஙனமா றியதோ.

என் ஐயா! உனக்கு இளையோனுன வச்சிரவாகுவை இந்த நகரின் வந்துற்ற தொருதூதுவன் கொன்றிடலால் அதுகேட்ட நாள்முதல் நீ நொந்திருந்தாய். அதுவன்றி கவலையாலும் மேனி மெலிவுற்றிருந்தாய் அந்தத் துயரமும் இன்றோடு உனக்கு மாறியதோ? 234

தேரு இகல்செய் திடுதே வரெலாம்
மாரு மகிழ்வுற் றிடவைத் துமனத்
தாரு இடர்என் வயின்ஆக் கினையால்
கூருய் இதுவுங் குமரற் கியல்போ.

வெளியில் காட்டாது உள்ளப்பகைகொண்டு திரிந்த தேவரெலாம் தம்பகையும் பயமும்மாறி மகிழ்ந்திட அவரைவைத்துவிட்டு; என் மனதில் மட்டும் ஆருத துயரம் ஆகிட ஆக்கி வைத்தாய். என்ஐயனே ஒருகால் நீ சொல்; ஓர்மைந்தன் தன் தந்தைக்கு இவ்வணமும் செய்வதியல்பாமோ? 235

காரேச திமருங் குளகா ரணனே
சீரோ திமனே திருமா லவனே
நேரோ தியவொற் றடநீ முடிகென்
ருரோ தினரோ அதறிந் திலனே.

கரிய கூந்தலையுடைய உமையம்மையார் பாகரான சிவபிரானே; அல்லது சிறப்புடைய அன்னப் பட்சியை வாகனமாகக்கொண்ட பிரமதேவனே; அல்லது அந்த திருமாலோ மிகுவீரனுகும் என் மகனுன உன்னை; நேற்று என்னிடம் வந்து தூது மொழிந்த அந்தத் தூதுவன் வீரவாகு கொல்வான் எனச் சாபமிட்டார். அதை அறியேன். 236

பொய்விட் டிடுதூ துவர்போ ரிடைநீ
மெய்விட் டனையென் றுவிளம் பினரால்
நெய்விட் டவயிற் படைநே ரலன்முன்
கைவிட் டெனையே குவதுன் கடனே.

பொய்புகல்தலை விட்டுள்ள எனது தூதுவர் என்முன்வந்து போர்க்களத்திடை நடந்ததொரு போரில் உனது உடலைவிடுத்தாய் எனக் கூறினர் ஐயோ! நெய் பூகிய வேற்படையை ஏந்திய எனது பகைவனுன குமரமூர்த்தியின் முன்பு என்னைத் தனியே விடுத்து நீ போவதுதான் உனக்குரிய கடனே? 237

தூதா னவன்வா ளிதுணித் திடவிண்
மீதே கினையென் றுவிளம் பினர்அப்
போதே அதுணர்ந் துபொறுத் தனனுல்
ஏதே துபொரு தினமென் னுயிரே.

தூதான வீரவாகுவின் படை உன்னை துணித்து வீழ்த்தியிட நீ வான்மீது ஏகினை என்று இத்தூதுவர் சொன்னார்கள். எனது ஐயனே! அப்போது அதைக்கேட்டும் இந்த உடலைச் சுமந்து பொறுத்திருந்தேன். இந்தவொரு கவலையையும் தாங்கிய எனது உயிர் இனியும் ஏதேதைப் பொருது. 238

ஆவா தமியேன் அயர்வுற் றிடவே
மூவா இளமைந் தமுடிந் தனையே
ஓவா துமகப் பெறவோங் குதவத்
தேய்வார் களுமுண் டுகொல்இன் னமுமே.

ஆ! ஆ! என்று தமியேன் அலறிப் புலம்பி அயர்வுகொள்ள இன்னமும் செவ்விய முதுமையை அடையாத என் இளையமகனே நீ முடிந்தாயே. ஐயயோ! நான் படும் வேதனையைக் கண்டும் இனிமேலும் தமக்கு பிள்ளைஇலாது போகக்கூடாது என்று உயர்ந்த தவத்தைச் செய்வாரும் உண்டு கொல்லோ? இப்பூமியில்: 239

எல்லே உனைநம் புவதென் அகல்வாய்
சொல்லே துமுரைத் திலைதுன் புறுவேன்
கல்லே புரைநின் கவினமார் பதனை
வல்லே தழுவிக் கொளவந் தருளே.

அடமகனே என் ஒளியே உன்னை எப்படி நம்புவது. என் மகனாக இருந்தும் என்னை விடுத்து நீங்குவாய்; நீங்கும்போது ஒரு சொல்லேனும் சொன்னாயில்லை. ஐயா என்மகனே! கல்லைப்போலும் கடினமான உனது நெஞ்சை இங்கு வீணே கிடந்து துன்புறுவேன் மிகு விரைவுடன் தழுவிக்கொள்ள வந்தருள்வாய். 240

செய்யாய் கரியாய் திருவே சிறுவா
மெய்யா ருயிரே விடலாய் அடல்வேற்
கையாய் அரசே களிறே தமியேற்
கையா வெனைநீ யும்அயர்த் தனையோ.

செம்மையான மைந்தனே! கரியமேனி யுடையானே; என்செல்வமே! என் சிறுவா என் உடலின் உயிரே: விடலைப்பருவத்தினனே! கொலைவேல் ஏந்திய கையுடையானே! என் அரசே! என் மதகளிறே! தவித்திடும் தமியேனை என் ஐயா! நீயும் மறந்தனையோ! 241

என்றின் னனபன் னியிரங் குதலும்
நன்றன் னையதோர்ந் துநடுக் கமுறுத்
துன்றுந் துயரக் கடல்துன் னினளால்
அன்றந் நகர்மிக் கதழுங் குரலே.

என்று இன்னஇன்ன வார்த்தைகளைச் சொல்லி சூரபன்மன் அழுது புலம்புதலும்; அதை நன்குகேட்ட பதுமகோமளை முதல் தாய்மார் எவரும் நடுக்கமுற்றுப் பெருகி நிற்கும் துயரமாகும் கடலில் அமிழ்ந்திய அவலப்பாட்டால் அன்று அந்த நகரம் முழுமையும் அழுகுரலால் மிகுந்தது. 242

அக்கினிமுகாசுரன் வதைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1543.

# 9. மூவாயிரர் வதைப் படலம்

ஆயதோர் காலைமூ வாயி ரத்தொகை
மேயின மைந்தர்கள் வினவி ஈதெலாம்
மாயிரு விசும்பினை அளாவு மன்னவன்
கோயிலை யடைந்தனர் குழுவொ டேகினர்.

அன்று அந்த நகரம் முழுமையும் அழுகுரலால் வேதனையுகின்ற காலையில் அவற்றையெல்லாம் மூவாயிரம் என்னும் தொகைப்பட்ட சூரபன்மனது பிள்ளைகள் கேட்டு; உடனே அவர்கள் யாவரும் பெரிய வானினைத் தொடும்படி உயர்ந்த கோபுரங்களை உடைய சூரபன்மனது அரண்மனையை; கூட்டமாக வந்து அடைந்தனர். 1

துன்னுறு பழியெனும் சூறை எற்றிட
இன்னலந் தெண்டிரை எறிய வைகிய
மன்னியல் நோக்கியே வணக்கம் செய்தெழீஇ
முன்னர்நின் றினையன மொழிதல் மேயினர்.

உட்புகுந்த அவர்கள் யாவரும் கொடுமை நிறைந்த பழி என்கின்ற சுழல் காற்று சுழற்றி அடிப்ப; துயரம் என்கின்ற திரைக்கடல் மோதிட, இவற்றால் செய்வதறியாது பிரமைகொண்டு இருக்கும் சூரபன்மனின் இயல்பை முன் நோக்கி; அவனை வணக்கம் செய்து எழுந்து முன்நின்று இந்த வார்த்தைகளைத் தந்தையாகும் அவனுக்கு எடுத்துக் கூறுகின்றார்கள் 2

உரமிகும் இலக்கரும் ஒழிந்த எண்மரும்
பெருவிறல் மொய்ம்பனும் பிறரும் உற்றுழி
எரிமுக னொருவனை ஏவி னைஅவன்
செருவினை அவரொடு செய்ய வல்லனே.

அண்ணலே! மிகுந்த வலிமை உடைய இலக்கரும், அவர் நீங்கிய மற்றைய எட்டுப்பேரும்; பெருந் திறமைசாலியாகும் வீரவாகுதேவரும் மற்றும் பிறவீரரும் இருக்கும் ஒரு போர்முனையில் உனது ஒரு மகனை அக்கினிமுகா சூரனைத் தனியே போரிட விடுத்தாயே? அந்த அக்கினிமுகன் அவர்களுடன் போரிட வலிமை உடையவனா? 3

வலியவர் தம்மையும் வரம்பின் மிக்குறின்
மெலியவ ராயினும் வென்று போவரால்
உலகினில் வழக்கமீ துணர்ந்தி லாய்கொலோ
கலைபயில் கற்புடைக் காவல் மன்னனே.

மிகுவலிமையுடையராக ஒருவர் இருந்தாலும்; அவரை வலியில்லாதவரும் பல பேராக வந்து போரிட்டால் வெற்றிகொண்டு போவார்களே? இது உலகில் நடக்கின்ற வழக்கம்: இதனை நீ உணரவில்லைப்போலும். பல கலைகளையும் கற்றுத் தெளிந்து அதனாலே செய்யும் கருமங்கட்கெல்லாம் மிகு நுட்ப அறிவு கொண்ட எம் காவல் அரசே எனக் கேட்டார்கள் மூவாயிரம் பிள்ளைகளும். 4

ஒட்டலர் குழுவினுள் ஒருமகன் றனை
விட்டனை மேல்வரும் வினையம் ஓர்ந்திலை
அட்டுறு தாரினய் அமரில் அங்கவன்
பட்டனன் என்றிடிற் பரிதற் பாலயோ.

பகைவர் கூட்டமாகத் திரண்டுநிற்கும் போர்க்களத்தே உமது ஒரு மகனை தனியே போரிட விடுத்தாய். அப்படிச் செய்தால் பின் என்ன வரும் என்னும் நிலையை நினைக்கவில்லை. தேன் சொரியும் மாலையணிந்த அண்ணலே! யோசியாது நீ கருமத்தைச் செய்துவிட்டு; போரில் உன்மகன் இறந்தான் என்ருல் நீ அதற்கு இரக்கப்பட்டு நிற்பதா? 5

தீமுகன் ஒருவனுக் கிரங்கித் தேம்பலே
யாமுளம் இரணியன் இன்னும் உற்றுளன்
தாமரை மகிழ்நனைத் தளைப டுத்திய
கோமகன் உளன்ஒரு குறையுண் டாகுமோ.

அக்கினிமுகாசூரன் ஒருவனுக்காக நீ வருத்தப்பட்டுக் கவலையுருதே. நாங்கள் மூவாயிரம் பேர் உன் பிள்ளைகளாக இருக்கின்ருேம். இரணியன் இறக்கவில்லை உயிரோடு இருக்கின்ருன். தாமரைப் பூவின் நாயகன் எனப்படும் சூரியதேவனைச் சிறையிட்டு வைத்த பெருமை உடைய பானுகோபன் இருக்கின்ருன். ஆதலினலே, இவ்வளவுபேரும் உன் பிள்ளைகளாக உயிரோடு இருப்ப உனக்கு ஒரு குறையுண்டாகுமோ? 6

நண்ணல ராயினேர் நலிந்து செற்றிடக்
கண்ணகல் தேர்பரி களிறு தானவர்
எண்ணில மாய்ந்தவென் றிறையும் ஆகுலம்
பண்ணலை ஐயஅப் பரிசு கேட்டிநீ.

பகைவராயுள்ளோர்கள் வந்து துயர்படுத்தி அழிவு செய்திட; மிகவும் பருத்தகன்ற தேர்கள், குதிரைகள், யானைகள், அசுரர்கள் மாய்ந்தனர் என்று ஓர் இறையேனும் நீ கவலை கொண்டு துன்பமடையாதே. ஐயனே! ஏன் அப்படி என்பதற்கு ஒரு காரணம் சொல்வோம் நீர் கேட்டிடும். 7

ஏழெனுங் கடல்வறந் திடினும் நின்னடி
சூழ்தரு படைக்கொரு தொலைவும் இல்லையால்
ஊழியும் அழிகுரு ஒருவ நீயிவண்
பீழையின் உறுவதும் பெருமைப் பாலதோ.

ஏழு என்று சொல்லப்பெறும் கடல்கள் வற்றினுலும் உன்னுடைய காலடியில் சூழ்ந்து வணங்கி எங்குமாகிச் செறிகின்ற படைகளுக்கு ஓர் அழிவும் இல்லையாகும் நீரோ எனின் ஊழியும் அழிவுருத ஒருவன். ஆதலினல் நீ இவ்விடத்துத் துயரத்தில் உறுவதும் பெருமைக்கு உரிய ஒரு செயலாகுமோ? 8

நின்றுவா னளவெலாம் நிவந்த மேருவாங்
குன்றினேர் தினைத்துணை குறைந்த தன்னதால்
துன்றுநந் தானையுள் துன்ன லார்பொர
இன்றுகா ருகவே இறந்த சேனையே.

அழிந்துபோன எமது சேனையின் தொகையைக் கணக்கெடுப்போமென்றால் அது வானில் உயர ஓங்கி வானமெல்லாம் அளவிடும் மேரு என்னும் மலையில் ஒரு தினையளவு குறைந்துள்ளது என்னும் தன்மைபோல; அளவிடமுடியாத எமது பெருஞ் சேனை வெள்ளங்களிலே பகைவர் போரிட்டதனால் இறந்துபோனவையும் ஒரு சிறிதளவேயாகும். 9

சிறந்திடு தலைமையுந் திறலும் ஆக்கமும்
மறந்தனை யாகியே வலிய னாகுநீ
இறந்தவர் தமைநினைந் திரங்கற் பாலையோ
புறந்தரு கின்றதோ ரமரர் போலவே.

சிறந்திடுகின்ற உமது தலைமையும், திறலும், செல்வமும் பெருமையான பலவற்றையும் நீர் மறந்துபோனவனாகி; மிக்க வலியவனாகின்ற நீ இறந்துபோனாரையும் எண்ணித் துயரப்படலாமோ? எங்களை முன்னர் கண்டபோதெல்லாம் நடுங்கிக்கொண்டு ஓட்டம் பிடிக்கின்ற தேவர்கள் போன்று நீயும் ஆகிவிட்டனையோ? 10

அண்டர்தம் முதல்வனை அயனை மாயனைச்
சண்டனைப் பவனனைத் தழலை யாரையும்
விண்டொடர் செலவினில் விரைந்து பற்றியே
கொண்டணை கின்றனம் குறிப்ப தாகுமேல்.

தேவர்கட்கு முதல்வனான இந்திரனை, பிரமதேவனை, நாராயணக்கடவுளை, இயமனை, வாயுதேவனை, அக்கினிதேவனை ஆகிய எல்லாரையும் இப்பொழுதே நாம் வானவழிச் சென்று பற்றிக் கொணர்ந்து உனது முன் விடுப்போம். அப்படிச் செய்திடவேண்டுமென்பது உமது எண்ணமாயின், நாம் செய்திடுவோம் என்றனர். 11

விண்ணினை அலைக்கவும் மேரு வெற்பொடு
மண்ணினை மறிக்கவும் வடவை மாற்றவும்
எண்ணினை என்னினும் யாங்கள் எந்தையின்
உண்ணினை வின்படி முடித்தும் ஒல்லையில்.

அல்லது நீர் தேவ உலகுகளை அலையச் செய்யவும்; மகாமேரு மலையோடு பூமியைப் பிளந்தெறியவும், வடவை என்னும் நெருப்பைத் தணிக்கவும் எண்ணினீர் என்றாலும்; எமது தந்தையே நாங்கள் உமது உள்ள எண்ணப்படி அதனை உடனே முடித்து வைப்போம். 12

பன்னுவ தெண்பல பணித்தி யாங்கள்போய்
முன்னுறு பூதரை முரண்கொள் வீரரைப்
பின்னுறு கந்தனைப் பிறரை ஈண்டொரு
கன்னலின் வென்றுநின் கழல்கள் காண்டுமால்.

உமது முன்பு பலவற்றையும் சொல்வதேன்? இப்பொழுதே எங்களுக்கு உத்தரவு தாரும் நாங்கள் போய் போர்க்களத்து முன்நின்ற பூதங்களையும்; முரண்கொண்ட இலக்கத்தொன்பது வீரரையும் இவரைப்போக விட்டுப் பின் நின்ற குமரனையும், பிறர் யாரையும் இப்போ ஒரு நாழிகைப் பொழுதில் வெற்றிகொண்டு திரும்ப வந்து உமது காலடிகளைக் காண்போம். 13

என்றிவை புகறலும் இடுக்கண் நீங்கியே
நன்றிது மைந்தர்காள் நடமின் போர்க்கென
வன்றிறல் முதல்வனை வணங்கிக் கைதொழா
நின்றவர் ஏவரும் நீங்கி னாரரோ.

என்று இந்த வார்த்தைகளை அவர்கள் சொல்லலும் சூரபன்மன் தனது இடுக்கண் யாவும் நீங்கித் தேறுதல் கொண்டு அவர்களை நோக்கி; மக்களே! இது நல்லது நீர் போர்க்கு போவீராக என்று கூறிட, அதுவேளை அம்மூவாயிரம் பிள்ளைகளும் அசைவற்ற மிகு திறமைசாலியான சூரபன்மனை வணங்கி கை தொழுது எல்லாரும் அவ்விடம் விடுத்து நீங்கினார்கள். 14

வேறு

வன்னச் சிலைகொண் டனர்வான் கவசந்
துன்னுற் றிடுவித் தனர்தூ ணியினை
வென்னிற் செறிவித் தனர்வெவ் விரலிற்
பொன்னுற் றிடுபுட் டில்புனைந் தனரால்.

தமது நகர அரண்மனையிடத்து மூவாயிரம் மைந்தரும் சென்று அழகிய வில்லைக் கையில் எடுத்துக்கொண்டனர். அழிவின்றி உயர்வுற்றதொரு விசேட கவசத்தை நெஞ்சில் அணிந்தார்கள். அம்புக்கூட்டினை முதுகில் தூக்கினார்கள்; தங்கள் கொடிய விரலில் பொன்னிலான உறைகளைப் போட்டுக் கொண்டனர்.

சீர்புக் குறுகைப் படைசெங் கைகொளாத்
தார்புக் கமர்தும் பைதனைத் தரியா
மார்புக் கலமாக் கலன்வர்க் கமிடாத்
தேர்புக் கனர்வந் தனசே னைகளே.

சீர்கொண்டு நின்ற திறமான படைகள் எல்லாவற்றையும் தமது செவ்விய கைகளில் கொண்டு; பெரிய மாலைகளாகக் கட்டப்பட்ட தும்பை மாலையை முடிமேல் சூடி: நெஞ்சில் நிறைய தங்க வைர நகைகள் விதம்விதமாக அணிந்து எழுந்து சென்று தங்கள் தேர்களில் ஏறிக்கொண்டனர். 16

சங்கங் கள்முழங் கினதண் ணுமைகோ
டெங்கெங் குமியம் பினவெண் படகந்
துங்கங் கெழுபே ரிதுவைத் தனவால்
அங்கங் குருமுற் றனவா மெனவே.

அதுவேளை சங்குகள் முழங்கின; மத்தளமும், கொம்பு வாத்தியமும் எங்கும் இயம்பின. வெண்மையான படகங்கள்; பிரமாதமான பேரிகைகள் துவைத்தன; இவை யாவும் அந்தந்தப் பகுதியில் இடிஇடிப்பது போன்று இருந்தன.

அவுணப் படையெண் ணிலஆற் றல்மிகுங்
கவளக் கரிஎண் ணிலகா மருசீர்
இவுளித் தொகைஎண் ணிலவீட் டமுரு
உவணுற் றிடுதே ரும்உலப் பிலவே.

அசுரப் படைகள் எண்ணற்றனவும்; ஆற்றல் மிகுந்த யானைகள் எண்ணற்றனவும்; பேரழகுடன் சிறந்திட்ட குதிரைக்கூட்டம் எண்ணற்றனவுமாக ஓய்வின்றித் தொடர்ந்தோடிவரும் தேரும் எண்ணற்றனவா உள்ளன. 18

முழங்குற் றனபல் லியமும் மதமாத்
தழங்குற் றனதேர் ஒலிதந் தனவால்
அழுங்குற் றனவாம் பரியாங் கவைகள்
விழுங்குற் றனபா ரொடுவிண் ணினையே.

வாத்தியங்கள் முழங்குற்றன மும்மதம் பொழியும் யானைகள் பிளிறுற்றன. தேர்கள் ஓசைகொண்டன. பெரிய குதிரைகள் கனைத்து இரங்குற்றன: அவ்வாறாக அழுகின்ற பேரோசை வானையும் உலகையும் விழுங்குற்றது. 19

நீடுற் றிடுதேர் களின்நீள் துவசம்
ஆடுற் றனதா ரில்அளித் தொகுதி
பாடுற் றனவெங் கொடிபா றுமிசை
கூடுற் றனகூ ளிகுனித் தனவே.

நீண்டு விளங்கிய தேர்களில் நாட்டிய நீண்ட கொடிகள் ஆடுற்றன. வீரர்களின் மாலைகளில் வண்டின் தொகுதிகள் ரீங்காரம் செய்து பாடுற்றன; கொடிய காகமும், பருந்தும் வானமீது கூடிக்கொண்டன. கூளிகள் உணவு எமக்கு வரும் எனக் களிகூர்ந்து கூத்தாடுகின்றன. 20

தொகையா னைகடம் மொடுசூழ் கரியின்
தகையா யினதா னவர்தம் முருவஞ்
சிகையா ரழலா யினசென் னியெழும்
புகையா னதுவான் எழுபூ ழியதே.

தொகையாகிக் கூடிநின்ற யானைகளும் அசுரரும் கருமை நிறத்தால் நெருப்பு எரிதற்கேற்ற கரியாயின; அசுரர்களது உருவின் தலைமீதுள்ள செம்மயிர் நெருப்புப் போலாயின; அவர்கள் செல்லும்போது எழுந்த புழுதி வானில் எழுதல் நெருப்பின்மேல் தோன்றும் புகை போலாகி நின்றது. 21

இப்பான் மையதா கியெழுந் துபடை
அப்பால் விரவுற் றுழிஅன் னதுகண்
டொப்பா ருமில்சூ ரன்உகந் தருள்கூர்
மெய்ப்பா லகர்சென் றனர்வெய் தெனவே.

இன்னவாறான பான்மைகளாக அசுரப் படைகள் எழுந்து அப்புறமாகத் திரண்டுள்ளபோது; அதனைக் கண்டு தனக்கு ஒப்புவேறு ஒருவருமே இல்லாத சூரன் மிகு மகிழ்வுடன் அன்பாகிக் கசிவுகொண்டுள்ள உண்மையுள்ள மைந்தர்கள் மூவாயிரம் பேரும் மிகுவிரைவாகப் போர்க்களம் நோக்கிச் சென்றனர்;

மூவா யிரர்தா னைகள்முந் துசெல
ஏவா மெனவெம் மைகொட குதலுந்
தேவா னவர்கண் டனர்சிந் தைவெரீஇ
யாவா வெனஅஞ் சியழுங் கினரே.

மூவாயிரம் பிள்ளைகளும் தமது சேனைகள் முன் சென்றிட, தாங்கள் பின்னால் ஏவாயுதம் செல்வதுபோன்று மிகும் கொதிப்புடன் செல்லுதலும்; அதனைத் தேவர்கள் எல்லாரும் கண்டனர்களாகித் தங்கள் மனம் நடுங்கி ஐயோ! ஐயோ! எனவே பெரிதும் பயந்து துயருற்றனர். 23

அக்கா லையின்மூ வகையா யிரரும்
மெய்க்கார் புவிசென் றுவிரைந் தனபோல்
தொக்கா டல்புரிந் திடுதொல் நிலமேற்
புக்கார் அதுகண் டனர்பூ தர்களே.

அக்காலையில் மூவாயிரம் அசுரமைந்தரும்; கரிய மேனியுடைய மேகம் பூமி மீது புகுந்து விரைவாகப் போதல்போன்று; தொகுதியாக நின்று போரிடும் முன்னைய போர் நிலத்தின்மேல் சென்று புகுந்தார்கள் அதனைப் பூதர்கள் கண்டு கொண்டார்கள். 24

எதிர்கின் றனர்பூ தர்களேற் றனரால்
முதிர்கின் றசினங் கெழுமொய் யவுணர்
அதிர்கின் றனபே ரிகள்அண் டமெலாம்
பிதிர்கின் றனநே மிபிளந் ததுவே.

கண்டவுடனே பூதங்கள் ஓடிவந்து எதிர்க்கின்றனர். அசுரர்களும் முதிர்ந்திடுகின்ற சினத்துடன் எதிரிட்ட பூதங்களை எதிர்த்தார்கள். பேரிகைகள் முழங்கி அதிர்கின்றன. போர் செய்கின்ற வேகத்தால் அண்டங்கள் எல்லாம் பிதிர்கின்றன. பூமி பிளக்கின்றது 25

வாள்கொண் டெறிகின் றனர்வல் லெழுவுத்
தோள்கொண் டிடுவெங் கதைதூண் டினரால்
தாள்கொண் டசிலைக் கணைதாஞ் சொரிவார்
நீள்கொண் டலையன் னநிசா சரரே.

வாள்கொண்டு வெட்டுகிறார். வலியுடைய எழுவையும்; தோளிற் சாத்தி வந்த கொடுங் கதையையும் சுழற்றி வீசுவார். கால்கொடுத்து வில்லை வளைத்து அம்புகளைச் சொரிவார். நீண்ட பெரிய முகிலை ஒத்த அந்த அசுரர் யாவரும்;

சூலப் படைவிட் டனர்தொல் பரிதிக்
கோலப் படைவிட் டனர்குந் தமுடன்
ஆலப் படைவிட் டனர்ஆ டுகுறட்
சாலப் படைநின் றுதளர்ந் திடவே.

இத்துடன் சூலப்படையை விடுவார். மிகுதொன்மையான சூரியன் போலும் சக்கரத்தை விடுவார்கள் குந்தப் படையுடன் கலப்பை படையையும் விடுவார்கள். இப்படி ஓய்வின்றிப் பல படைகளையும் அசுரர் செலுத்தினார்கள் அங்கு ஆடிக்கொண்டு நின்ற குறள் வடிவாய பூதப்படைகள் தளர்ந்திடுமாறு.

27

அடுகுற் றிடுசூ லமடற் கதைகள்
தொடுகுற் றனர்நே மிகள்தூண் டிடுவார்
விடுகுற் றனர்வெற் பினைவெவ் வசுரர்
படுகுற் றனர்ஆர்த் தனர்பா ரிடரே.

அது கண்ட பூதர் யாரும் அசுரர்மீது கொலை செய்யும் சூலமும், அடலுடைய கதாயுதமும் எடுத்தெறிவார். சக்கரப்படை செலுத்திடுவார் மலைகளைத் தூக்கி எறிவார்கள். இப்படைகளை வீசி எறிதலும், கொடிய அசுரர்கள் அழிந்து மாய்ந்திடுதல் கண்டு பூதங்கள் கூச்சலிட்டு ஆரவாரங் கொண்டனர். 28

வீழ்கின் றனபட் டிடும்வீ ரருடல்
தாழ்கின் றனசெம் புனல்சாய்ந் தனவால்
ஆழ்கின் றனவே லையில்அங் கதன்வாய்
மூழ்கின் றனபேய் கொடிமொய்த் தனவே.

படைகள் பட்டிடும் வீரர்களது உடல் வீழ்கின்றன அவைகளில் நின்றும் பெருகும் இரத்த வெள்ளத்தில் உடல்கள் தாழ்கின்றன. இரத்தம் சமுத்திரம் போன்று பெருகுகின்றது. அதனிடத்துப் பேய்கள் மூழ்குகின்றன. காகங்கள் மொய்க்கின்றன. 29

மறக்குஞ் சரமா யினவாம் பரிதேர்
சிறக்கின் றனபட் டனதீ அவுணர்
துறக்கின் றனர்ஆ விதொலைந் திடுவார்
இறக்கின் றகணங் களுமெண் ணிலவே.

கொலை செயும் யானை, அழகில் சிறந்த குதிரை, தேர் யாவும் பட்டழிகின்றன: கொடிய அசுரர்கள் யாவரும் அடுகளத்து வீழ்ந்து உயிர்நீங்கித் தொலைகின்றார்கள். இவைகளுடன் இறக்கின்ற பூதகணங்களும் எண்ணற்றன. 30

வேறு

காணுவது மூவாயிரர் கனல்வெஞ்சினந் திருகிக்
கோணுகம தெனவேயடுங் கொடும்பூதரைக் குறுகி
நீணுகம தெனவிண்டொட நிமிர்வெஞ்சிலை குனியா
வேணார்குணத் தொலிகொண்டனர் இதுகொல்லுரு மெனவே.

மூவாயிரம் அசுர மைந்தரும் அதனைக் கண்டு நெருப்பினைப் போன்று கொடிய கோபம் அடைந்து; கறுவியமுற்ற யானைகள் போன்று அசுரரைக் கொன்று வீழ்த்தும் கொடிய பூதங்களை அடைந்து; தங்கள் கையில் பிடித்த நீண்ட மலைபோன்று வானினைத் தொடும்படி நிமிர்ந்து நின்ற கொடிய வில்லை வளைத்து. எங்கும் பரவிடும் நாணோசையைச் செய்தனர் இது கேட்டோரெல்லாம் இதுதானோ இடி எனும்படியாக 31

வாங்குற்றிடு சிலைதன்னிடை வல்லேசர மாரி
தூங்குற்றிடு புயலாமெனச் சொரிந்தார்சொரிந் திடலும்
ஏங்குற்றன பூதப்படை இரிகின்றன அதுகண்
டாங்குற்றிடு கணவீரர்கள் அவுணர்க்கெதிர் புகுந்தார்.

அவர்கள் வளைத்துக்கொண்ட வில்லினின்றும் உடனே அம்புகளை மாரி மழைபோல் ஓயாது செலுத்தினார்கள். அவ்வணம் செலுத்திட, அவைகள் வருதல் கண்டு பூதங்கள் ஏங்குற்றனராய் ஓடுகிறார்கள்; இப்படிப் பூதங்கள் ஓடுதலைக் கண்ட அங்குள்ள பூதசேனாதிபதிகள் அசுரர்க்கு எதிராக வந்து போரிடச் சேர்ந்தார்கள். 32

தண்டத்தவர் தடந்தேரினைத் தகர்ப்பார்சிலர் தருவின்
துண்டத்தவர் பரிமான்தொகை தொலைப்பார்சிலர் பாகன்
கண்டத்தலை உருளும்படி யுதைப்பார்சிலர் கரத்தால்
அண்டத்தினில் அவர்தேரெடுத் தெறிவார்சிலர் அம்மா.

சில பூதசேனாதிபதிகள் அசுரருடைய பெரும் தேர்களைத் தண்டினால் மோதி நொருக்குவார். சிலர் மரங்களால் அசுரனின் குதிரைகளை வீசி அடித்துக் கொல்வார். சில பூதத் தலைவர் தேர்ப்பாகனுடைய கழுத்தும் தலையும் பிய்ந்து உருளும்படி உதைப்பார். சில பூதசேனாதிபதிகள் அசுரரின் பெருந்தேரினைக் கையால் தூக்கி அப்பாலுள்ள அண்டங்களில் போகுமாறு எறிவார். 33

எழுகொண்டவர் தடமார்பினில் எறிவார்சிலர் எரிவாய்
மழுக்கொண்டவர் சிலையிற்றிட எறிவார்சிலர் வரையின்
குழுக்கொண்டவர் அனிகந்தனைக் கொல்வார்சிலர் வார்வில்
பழுக்கொண்டிடு கவடாமெனப் பறிப்பார்சிலர் முறிப்பார்.

சிலர் எழுவாயுத்தால் அசுரரின் பருத்த நெஞ்சில் எறிவார். சிலர் நெருப்பாகும் வாயுடைய மழுவாயுதத்தால் அசுரர் விற்கள் முரிய வெட்டுவார். சில பூதசேனாதிபதிகள் கூட்டாக மலைகளைப் பிடுங்கி அசுரரின் சேனைகளைக் கொல்வார். சிலர் அசுரர் கைக்கொண்ட வில்லை, பெருமரத்தின் கொம்பைப் பிடுங்குவதுபோன்று பறிப்பார்கள். சிலர் அவைகளை முறிப்பார்கள். 34

தாவாதுயர் கணவீரர்கள் சமர்இவ்வகை புரிய
மூவாயிர ரெனுமைந்தர்கள் முனியாச்சிலை குனியா
ஓவாதுக முடிவெல்லையில் உருமுச்செறி வனபோல்
தீவாயுமிழ் கனல்வாளிகள் சொரிகின்றனர் தெரிந்தே.

ஓயாது உயர்வான வீரமுடைய பூதத்தலைவர்கள் போரினை இவ்வாறு புரிதலும், அது கண்ட மூவாயிரம் எனச் சொல்லப்பெறும் அசுர மைந்தரும் கோபமுற்று வில்லை வளைத்து ஓயாது யுகங்களின் முடிவில் இடிவீழ்வதுபோன்று வாயால் நெருப்பினைச் சொரியும் அக்கினிக் கணைகளைத் தெரிந்து தெரிந்து சொரிகின்றார்கள். 35

நேர்புற்றமர் புரிகின்றவர் நெடுந்தீவடிக் கணைகள்
மார்புற்றிடத் தடந்தோளெனும் வரையுற்றிட முகத்தின்
சார்புற்றிடக் கரமுற்றிடத் தாளுற்றிடச் செந்நீர்
சோர்புற்றிடத் தளர்ந்தேமனந் துயருற்றிட நின்றார்.

அசுரர் முன்னால் நேரிட்டுப் போர் புரிகின்ற பூதத்தலைவர்கள் மேலாக அசுரர் விடுத்த நெடியதும், நெருப்பில் வடித்தெடுத்ததுமான அம்புகள் நெஞ்சில் படுதலும்; விசாலித்த தோளெனும் மலையில் படுதலும், முகத்தில் எங்கும் படுதலும், கைகளில் படுதலும், கால்களிற் படுதலும் அதனால் இரத்தம் வடிந்திடத் தளர்வுற்று மனம் துயருற்றிடப் பூதத்தலைவர்கள் செயலிலாது நின்றார்கள். 36

கலக்கித்தட மலர்சிந்திடு களிறுமென அடல்செய்
விலக்கற்கரு மூவாயிரர் வில்லாண்மையும் வல்லார்
அலக்கட்படு கணவீரர்கள் அழிகின்றது நோக்கி
இலக்கத்தரி லோராயிரர் எரியாமெனச் செயிர்த்தார்.

குளத்தினைக் கலக்கி அங்குள்ள பூக்களைச் சிந்திடும் மதயானையின் செயல் போன்று போர்செய்யும், யாராலும் விலக்க முடியாத வலியுடைய மூவாயிரம் அசுரருடைய வில்லின் ஆண்மையினையும், அவர்களால வலியுடைய பகைவர்களும் அலைந்திடப் போரிடும் பூதத்தலைவர்கள் அழிவுறுவதையும் நோக்கி; இலக்கம் வீரரிலே ஆயிரம் வீரர்கள் நெருப்பினைப் போன்று கோபத்தால் கொதித்தார்கள். 37

குன்றேயென மிசைபோகிய கொற்றப்புயத் தவன்முன்
சென்றேதொழு திப்போரினைச் சிறியேங்களுக் கருண்மோ
என்றேயுரைத் தனர்வேண்டலும் இளையோன் அதற்கிசையா
நன்றேயமர் செயநீவிர்கள் நடமின்னென அகன்றார்.

இந்த ஆயிரம் வீரரும் மலைபோன்று மேலோங்கிய வீரத் தோளினை உடைய வீரவாகு தேவர் முன்புபோய்த் தொழுது; அண்ணலே, இந்த மூவாயிரருடன் செய்திடும் போரினைத் தனித்து நாம் ஆயிரவரும் புரிந்திட எங்கட்கு மட்டுமே தாரும் என்று கூறி அப்போரை வேண்டி நிற்றலும்; வீரவாகு தேவர் அதற்கு இசைவுகொண்டு; நன்று நீங்கள் போரிடச் செல்வீராக என விடுத்தார். 38

விசயன்சயன் இடபன்கர வீரன்அதி கோரன்
அசலன்அதி குணன்வாமனன் அனந்தன்அக ளங்கன்
வசையில்புகழ் அனகன்சத வலிமாருதன் வருணன்
சசிகண்டகன் முதலாயிரர் சமரின்றலை புகுந்தார்.

விசயன் சயன் இடபன் கரவீரன் அதிகோரன் அசலன் அதிகுணன் வாமனன் அனந்தன் அகளங்கன் வசைபெருத புகழ்கொண்ட அனகன் சதவலி மாருதன் வருணன் சோமகண்டகன் முதலாய இந்த ஆயிரம் வீரரும் உடன் சென்று போர்முனையில் புகுந்தார்கள். 39

முந்துற்றிடும் அவர்யாவரும் மூவாயிரர் எதிர்போய்க்
கந்தக்கட வுளைஅன்பொடு கருத்திற்றொழு தேத்தி
மைந்துற்றிடு தங்கார்முகம் வளையாவடி வாளி
அந்தத்தினின் முகிலாமென அவர்மேற்சொரிந் தார்த்தார்.

முந்தி விரைவுற்ற இவர்கள் மூவாயிரம் அசுர மைந்தர்கள் யாவரும் எதிர் சென்று; கந்தக் கடவுளை அன்பினால் மனதில் நினைந்து தொழுது வணங்கி; தமது திருக்கரத்துச் சிறந்து விளங்கிய வில்லினை வளைத்து வடிக்கணைகளைப் பூட்டி, யுக முடிவில் மழைபெய்யும் முகில்போல் அம்புகளை அசுரர்மேல் சொரிந்தார். 40

ஆர்க்கின்றதோர் பொழுதத்தினில் அவர்வில்வலி தன்னை
மூர்க்கன்தரு மறமைந்தர்கள் மூவாயிரர் காணுக்
கூர்க்கின்றதோர் நெடுவாளிகள் குணிப்பில்லன பூட்டிச்
சூர்க்கொண்டல்கள் தம்மோடமர் புரிந்தாலெனச் சொரிந்தார்.

ஆர்க்கின்றதோர் நேரத்தினில் அவர்களின் வில்வலி தன்னை மூர்க்கக் குணமுடைய சூரபன்பன் பெறும் கொடிய மைந்தர்கள் மூவாயிரம் பேரும் கண்டு கூர்மை பொருந்திய நெடிய அம்புகள் அளவற்றனவற்றைத் தமது வில்லிலே பூட்டி, கருக்கொண்ட மேகங்களுடன் போரிடுதல் போன்று ஆயிரவர் மேல் அம்பினைச் சொரிந்தார்கள். 41

மூவாயிரர் விடும்வாளிகள் முடுகிக்கடி தேகித்
தாவாவிற லோர்ஆயிரர் தம்வாளியை அடுமால்
மேவார்புகழ் விறல்மைந்தர்கள் வெவ்வாளிகள் அவுணர்
ஏவானவை துணியும்படி எதிர்சிந்திடும் விரைவில்.

மூவாயிரம் அசுர குமாரரும் விடுகின்ற அம்புகள் மிகுவாகும் விசையுடன் கடிதுசென்று குறைவிலாத விறல் படைத்த ஆயிரம் வீரர்கள் விடுத்த அம்பினை அழிப்பன. பகைவரும் புகழும் வீரமுடைய இலக்கம் வீரரில் போரிட வந்த ஆயிரம் வீரர்களும் விடுகின்ற கொடிய அம்புகள், அசுர மைந்தர்களின் அம்புகளானவை எதிரே போய் அவைகள் துகளாகிப் போம்படி விரைவில் சிதைப்பன. 42

இவ்வாறமர் புரிகின்றுழி இலக்கத்தவர் தேரைத்
தெவ்வாகிய மூவாயிரர் சிதைவித்தனர் சரத்தால்
அவ்வாறுதெ ரிந்தேயெமர் அவுணன்தரு மைந்தர்
கைவார்சிலை யொடுதேரினை அழித்தார்கணை தூண்டி.

இவ்வாறு இருபகுதியினரும் போரிடும் நோத்து இலக்கம் வீரரில் உள்ள ஆயிரம் பேரின் தேரை, பகைவரான மூவாயிரம் அசுரர்கள் அம்பால் சிதைவித்தார்கள். அந்த நிலை உணர்ந்துகொண்ட எமது வீரர் ஆயிரவரும்; சூரபன்மன் பெற்ற பிள்ளைகள் மூவாயிரவரும் ஏறிவந்த தேரினையும் கையில பிடித்த வில்லையும் அம்புகளைச் செலுத்தி அழித்தார்கள். 43

இலக்கத்தவர் எதிர்கின்றவர் ஏமப்படு தேரைச்
சிலைக்கட்படு நெடுவெங்கணை சிந்திச்சிதை வித்தே
நிலக்கட்பட மூவாயிரர் தொகைதன்னையும் நிறுவி
மலைக்கட்படும் அரிபோற்புடை வருதேரிடைப் புகுந்தார்.

இலக்கத்தவரில் ஆயிரம் பேரும் தம்மை எதிர்க்கின்ற மூவாயிரம் அசுர மைந்தர்களின் இன்பமுடைய தேருடன் வில்லையும் அழித்தொழித்து, நிலமிசை மூவாயிரவரையும் நிறுத்திவிட்டு மலைமேல் குதித்தோடும் சிங்கங்கள்போல் தமது பக்கராக வருகின்ற சேமத்தேர்களில் சென்று ஏறிக்கொண்டனர். 44

சிலைபோய்க்கட விச்சென்றிடு தேர்போயடல் செய்யும்
கொலைபோயனி கம்போயுளங் கொள்ளும்பெரு மிதத்தின்
நிலைபோய்வெகு ளுற்றேபுவி நின்றோர்தமைப் பிணித்த
வலைபோகிய மானேயென வளைத்தார்வய மைந்தர்.

மூவாயிரம் பிள்ளைகளும் தங்களது வில் முறிந்துபோய்ச் செலுத்திச்சென்றிடும் தேர் அழிந்துபோய்; தாக்கிக் கொல்லும் கொலைபோய்; சேனைகளும் அழிந்துபோய்; மேம்பாடுடைய அசுரர்குலம் யாம் என்னும் பெருமிதத்தின் நிலைபோய் வெகுட்சி கொண்டவாறு பூமிமீது நின்றிடும் இந்த அசுரர்களை வலையில் சிக்குண்ட மான்போல எம்பிரான் படைவீரராயோர் ஆயிரவரும் சுற்றிவளைத்தார்கள்.

வேறு

பொலம்படு தேரொடு பொன்ற வன்மைபோய்த்
தலம்படும் அவுணர்கள் தளர்தல் மேயினர்
இலம்படை வந்துழி ஈதல் சானறவர்
குலம்படு துயரொடு குறையும் தன்மைபோல்.

அழகு நிரம்பிய தேர்களுடன் சேர தங்கள் வன்மையும் அழிந்து, பூமியில் நின்ற அசுரர்கள் மிக்க தளர்ச்சி யடைந்தார்கள். எதுபோலும் எனில், வறுமை வந்துற்றபோது மிகு கொடையாளியாக விளங்கிய ஒருவன் தன் குலத்துடன் ஒருங்கே படுகின்ற துயரத்துடன் தமது கொடையிலும் குறைதல் போன்று. 46

பறித்தனர் வரைகளைப் பழும ரம்பல
முறித்தனர் வியர்ப்புறு மொய்ம்பர் தம்மிசைச்
செறித்தனர் அண்டமும் திசையும் ஞாலமும்
மறைத்தனர் அமரரும் மருட்கை எய்தினர்.

அசுரமைந்தர் மூவாயிரவரும் பெருமலைகளைப் பிடுங்கினர்கள்; பெரிய பருத்த மரங்களை முறித்தார்கள். நவசக்திகளின் வேர்வையில் தோன்றிய வீரர் கள்மேல் இவற்றை வீசினர்கள். மலையாலும் மரத்தாலும் அண்டங்களையும் பூமி யையும் திசைகள் முழுவதையும் மறைத்தார்கள். இதுகண்ட தேவரும் மயக்க மடைந்தனர் 47

தெவ்வரை யாகிய சிறுர்கள் தொன்மரங்
கைவரை விசலுங் கணைகள் தூண்டியே
இவ்வரை யெனுங்கணத் திறுத்து வீட்டினர்
ஐவரை வென்றிகொள் அனிக வீரரே.

பகைவராகிய மூவாயிரம் பிள்ளைகளும் மிகுமுதிமையான மரங்களையும் மலை களையும் கைக்கொண்டு வீசுதலும்; அவற்றை எல்லாம் இந்த ஒரு கணத்திலே அறுத்து வீழ்த்தினர்கள் பஞ்ச இராக்கதரையும் வெற்றிகொள்ளும் பூதசேனைத் தலைவர் ஆயிரம்பேரும். ஐவரை என்றால் ஐந்து புலன்களை வென்றோர் என்றும் பொருள் கொள்வதுமுண்டு; 48

அட்டடல் கொண்டிடும் அவுணர் இவ்வகை
விட்டன கிரியெலாங் கணையின் வீட்டியே
நெட்டழற் பகழிகள் நிறத்தின் மூழ்குறத்
தொட்டனர் உறுப்பெலாந் துளைத்தல் மேயினர்.

அழிவின் மூலம் உலகை அடிமைப்படுத்தும் அசுரர் இவ்வகையால் விட்டுள்ள மலைகள் யாவற்றையும் இலக்கம் வீரரில் ஆயிரம் பேரும் அம்பினால் அறுத்துத் தள்ளி மீட்டும் நெடிய அம்புகள் நெருப்பின் தன்மையானவற்றை எடுத்து மூவா யிரவர்களது நெஞ்சில் பட்டுருவ விடுத்து மூவாயிரம் அசுரரது உறுப்புக்களைத் துளைத்தல் செய்தனர். 49

துளைத்திடு கின்றுழிச் சோரி சாய்ந்திட
விளைத்தனர் ஒருசிலர் இரிந்திட் டார்சிலர்
களைத்தனர் ஒருசிலர் கனன்று நின்றுபோர்
விளைத்தனர் ஒருசிலர் பிறங்கல் வீசுவார்.

துளைக்கின்ற நேரத்தில் அந்த அசுரரில் ஒருசிலர் இரத்தம் வடிய இளைப் புற்று நின்றனர். சிலர் அவ்விடம்விட்டு ஓடிப்போயினர் சிலர் களைத்துச் சோர்ந் தார்கள். ஒருசிலர் கோபமுற்று அங்கு நின்று போர்செய்தவாறு பெருமலைகளைப் பிடுங்கிப் பின்னரும் வீசுவார்; 50

தேவரை வென்றுளார் சிலவர் மால்வரைக்
காவலர் தேரினைக் கரங்க ளாலெடா
மேவரும் புணரியுள் வீசி யார்த்தனர்
ஓவென அமரர்கள் புலம்பி யோடவே.

தேவர்களை வென்றுள்ள சில அசுரர்; கைலையங்கிரிக் காவலராகிய கணங்களாகும் ஆயிரம் பேருடைய தேர்களைக் கையால் தூக்கிச் சென்றிட முடியாத தூரத்திருக்கும் சமுத்திரங்களில் வீசி ஆர்த்தார்கள் தேவர்கள் யாரும் ஐயோ எனப் பயந்து புலம்பி ஓடும்படியாக. 51

நீசர்கள் ஒருசிலர் நேமி சென்றிட
வீசிய தேரினும் விரைவின் நீங்குருக்
காசினிப் பாலராய்க் கார்மு கம்வளை இ
ஆசுக மழைசொரிந் தார்த்துப் பொங்கினர்.

நீசராகிய ஒரு சிலர் அசுரர் கடலிற்போய் வீழுமாறு தூக்கி வீசிய தேர்களினின்றும் ஆயிரவரும் விரைவின் நீங்கி; பூமியில் குதித்து நின்று வில்லை வளைத்து அசுரர்மீது அம்பினை மழைபோலச் சொரிந்து ஆர்ப்பரித்துப் பொங்கினர்கள். 52

மீண்டிடு பொருநர்கள் விசிக மாமழை
தூண்டிட அவுணர்கள் தொகையிற் பற்பலர்
காண்டலும் வடவையின் கணத்திற் சீறியே
ஆண்டெதிர் புகுந்தனர் அசனி ஆர்ப்பினர்.

தேர்களினின்றும் குதித்து மீண்டிட்ட ஆயிரவர்களும் அம்பாகும் பெரு மழையைச் சொரிதலும்; அசுரர் தொகையில் பற்பலர்கள் அதனைக் காண்டலும் கணப்பொழுதில் கோபமுற்று இடியேறுபோல ஆர்ப்பரித்துக்கொண்டு ஆயிரவர் முன் சென்றார்கள். 53

மறத்தொடு மருத்தின மரங்கொள் கொம்பரை
இறுத்திடு தன்மைபோல் எந்தை பின்வரு
திறத்தவர் சிலைகளைச் செங்கை வன்மையாற்
பறித்தனர் முறித்தனர் படியில் வீசினர்.

கொடுமையுடன் வீசிடுங் காற்று மரத்தில் கொண்ட கொப்புகளை முறித்திடும் தன்மை போன்று எந்தை பெருமான் முருகன் பின்னால் அவதரித்த சேனை வீரர் ஆயிரவரது கைகளில் பிடித்த விற்களைத் தமது சிவந்த கைகளின் வலியால் பிடுங்கி எடுத்தார்கள்; முறித்தார்கள்; பூமியில் வீசினார்கள். 54

பற்றலர் கொடுமரம் பறித்துச் சிந்துழிச்
செற்றமொ டெம்பிரான் சேனை வீரர்கள்
மற்றவ ரும்பதை பதைப்ப மாண்கையால்
எற்றினர் அனையரும் இடியிற் றாக்கினர்.

பகை அசுரர்கள் வில்லினைப் பறித்துச் சிதைத்த நேரத்தில் மிகுகோபத்துடன் எம்பிரானது சேனை வீரர்கள் இந்த அசுரர்கள் பதைபதைத்திடத் தமது மாண்புடைய கையால் அடித்தார்கள். அதுவேளை அசுரரும் விடாது இடிபோல் தாமும் கைகளால் இவர்களைத் தாக்கினார்கள். 55

பரவிய உவரியும் பாலின் வேலையுந்
திரைகளை எதிரெதிர் சிதறி யார்த்தெழீஇப்
பொருதிற மேயெனப் பொருவில் மற்றெழில்
இருதிற வயவரும் மிகலி ஆற்றினர்.

பரந்த கருமையான உப்புநீர்க் கடலும், பாலினால் ஆய சமுத்திரமும் திரைகளை ஒன்றின்மீது எதிர்த்து வீசி ஆர்த்து எழுந்து போரிடும் செயல் போன்று நிகரற்றதொரு மல்யுத்தத்தை இரு பக்கத்து வீரர்களும் வலிமையுடன் புரிந்தனர். 56

கொடுந்தொழி லாரொடு கொற்ற வீரர்கள்
அடைந்தனர் இவ்வகை யாண்மைப் போரினைத்
தொடர்ந்துநின் றியற்றியே தொல்லை வன்மைபோய்
உடைந்தனர் விசயன்அங் கொருவன் அன்றியே.

கொடுந்தொழில் உடைய மூவாயிரம் அசுரரோடு கொற்றம் மிகுந்த ஆயிரம் எம்பிரானது சேனைத்தலைவரும் நெருங்கிநின்று இவ்வகையாக ஆண்மையின் போரான மல்யுத்தத்தைத் தொடர்ந்தும் நின்று செய்திட்ட; அப்போரில் ஆயிரம் பேரில் விசயன் ஒருவன் மட்டும் அன்றி மற்றைய எல்லாரும் தங்கள் முன்னைய வலி இழந்து ஓடிப்போயினர்கள். 57

இசையுறு தமரெலாம் இரிந்து போதலும்
விசயனே யெனப்படும் வீரன் சீறியே
வசையுறும் அவுணர்கோன் மகாரைக் கூற்றுவன்
திசையுறு நகரிடைச் செலுத்து வேனென்றான்.

வெற்றிப் புகழ்கொண்ட தனது இனத்தவர் யாவரும் பின்னிட்டு ஓடிப் போதலும், அதுகண்டு விசயன் எனப்பட்ட வீரன் சீறி, வசை அடைந்திடும் சூரபன்மன் மக்கள் மூவாயிரவரையும் தென்திசையில் இயமன் உலகிற்கு நான் ஒருவனே தனித்து நின்று அனுப்பிவைப்பேன் என்றான் 58

வேணியின் மதியுடை விமலன் நல்கிய
வேணுறு வரிசிலை ஈறி லாதது
தூணியி னிடையுறத் துன்னிற் றன்னதைப்
பாணியில் எடுத்தனன் சமரில் பாணியான்.

அவ்வாறு கூறிய விசயன்; சடைமீது இளம்பிறையணிந்த கடவுள் கொடுத்த பிரமாண்டமான வில் ஒன்று அழிவிலாதது அவன் புறமுதுகின் பின்னர் தொங்கிய அம்புக் கூட்டுடன் பொருந்தியதைக் கையில் எடுத்தனன் போரில் எந்நிலையிலும் பின்னிடாத அந்த விசயன். 59

கரதலத் தெடுத்திடு கார்மு கந்தனை
விரைவொடு கோட்டியே விசயன் என்பவன்
ஒருதனி மாருதத் தோடிச் சூழ்வுறுச்
சரமழை பொழிந்தனன் அவுணர் தங்கள்மேல்.

கையில் எடுத்த வில்லை விரைவாக வளைத்துக்கொண்டு அந்த விசயன் என்பவன் ஒரு தனியான சூறாவளிக் காற்றைப்போல் ஓடிஓடிச் சுழன்று மூவாயிரம் அசுரர் மேலும் அம்பு மழையைச் சொரிந்தனன். 60

கரங்களை அறுத்தனன் கழல்கள் ஈர்ந்தனன்
உரங்களை அறுத்தனன் உயர்திண் டோளொடு
சிரங்களை அறுத்தனன் சிலரைக் கானிடை
மரங்களை அறுத்திடும் வண்ண மென்னவே.

அசுரர்களில் சிலரின் கைகளை அறுத்தான்; சிலரின் கால்களை அறுத்தான். சிலரின் நெஞ்சினை அறுத்தான்; உயர்ந்த திண்மையுடைய தோள்களை அறுத்தான்; சிலரின் தலைகளை அறுத்தான். இவ்வணமே காட்டில் இருந்திடும் மரங்களை வெட்டி வீழ்த்துவார் போன்று அறுத்திட்டான். 61

அற்றன உறுப்பெலாம் அணுகித் தம்மில்வந்
துற்றன கூடிய வுணர்வும் ஆவியும்
மற்றவர் எழுந்தனர் வாகை வீரன்மேல்
பொற்றைக ளாயின பொழிந்து போர்செய்தார்.

அவ்வாறு விசயன் அறுத்தெறிந்த அசுரரின் உறுப்புகள் யாவும் மீண்டும் வந்து தம்பாட்டில் கூடிக்கொண்டதன்றி; இறந்த அசுரரின் உணர்வும் உயிருமே வந்து ஒருங்கே கூடிட அவர்களும் உய்ந்தெழுந்தனர். எழுந்த அவர்கள் பெரு மலைகளைப் பிடுங்கி விசயன்மேல் எறிந்து போர் செய்தனர். 62

தலையொடு கரங்களும் தாளுந் தோள்களும்
மெலிவொடு துணிந்தவர் மீட்டுங் கூடினர்
அலர்தரு பங்கயத் தண்ணல் தன்னிடை
வலிதவர் பெற்றிடு வரத்தின் தன்மையால்.

தலையொடு கைகளும் காலும் தோள்களும் துண்டமாக அறுபட்டுத் துணிந்து வீழ்ந்த அசுரர்கள் மீண்டும் அவைகள் திரும்பவும் உடலுடன் சேர உய்ந்து எழுந்தார்கள். முற்காலத்தில்; அலர்ந்திருக்கும் தாமரைப்பூவில் இருந்த கடவுள் பிரம தேவரிடத்து வலியுடன் அந்த அசுரர் பெற்றுக்கொண்ட வரத்தின் சிறினல்; 63

கண்டமும் மொய்ம்புங் கழலும் வாளியால்
துண்டம தாயினர் தொக்கு மேயினர்
சண்டவெங் கால்பொரத் தணந்து சிந்திய
தெண்டிரை நெடும்புனல் மீட்டும் சேர்தல்போல்.

கழுத்தும் தோளும் காலும் அம்புகளாலே துண்டாடப்பட்டார் மீண்டும் உறுப்புகள் ஒன்றிட எழுந்து நின்றார் எப்படி எனில். சண்டமாருதமான காற்று வீசிடச் சிதறுண்டு சிந்திப்போகும் கடல் அலைகள் மீண்டும் தோன்றிக்கொள்ளும் இயல்பைப் போன்று. 64

பன்னரும் திறலினன் பகழி பாய்தொறும்
மன்னவன் மைந்தர்கள் மாண்டு தோன்றுவார்
மின்னது வந்துழி விளிந்து வெவ்விருள்
தொன்நிலை எய்தியே தொடர்ந்து தோன்றல்போல்.

சொல்லற்கரிய திறலுடைய விசயன் வீசிய அம்புகள் பாயும்தோறும் சூரபன்மன் மக்கள் மூவாயிரம்பேரும் மாண்டு தோன்றுகின்றார்கள்: எப்படி எனில், மின்னல் இராக்காலத்துப் பளிச்சிடும்போது கொடிய இருள நீங்கிப் பின்னர் பழமை யாகும் நிலை அடைந்து; தொடர்ந்தும் அந்த இருள் தோன்றுவது போலும். 65

கையொடு சென்னியும் கழலும் மார்பமும்
கொய்யுமுன் தொன்மைபோல் கூட மைந்தர்கள்
ஓய்யென எழுந்தனர் உலகில் தேர்வுறில்
செய்யுறு தவத்தினும் சிறப்புண் டாங்கொலோ.

கைகளோடு தலையும் காலும் நெஞ்சும் அம்பினல் கொய்யும் முன்பே தொன்மைபோல் கூடிக்கொள்ளலும் மூவாயிரம் அசுர மைந்தர்களும் விரைவுடன் எழுகின்ருர்கள்! ஆகையால் முனிவர்களே, உலகில் நாம் தேறித் தெளியுங்கால் செய்திடும் தவத்திலும் பார்க்கச் சிறந்த பொருள் ஒன்று உண்டாமோ? 67

கண்டனன் விசயனுங் காளை ஆவிபோய்த்
துண்டம தாகியே துஞ்சி ஞர்எழீஇ
மண்டமர் புரிவது மனத்தின் விம்மிதம்
கொண்டனன் பொருதிறல் குறைந்து நின்றனன்.

இதனை விசயனுகும் வீரன் கண்டான். உடல் துண்டாடப்பெற்று உயிர் நீங்கி இறந்திடும் இந்த அசுரர் மீண்டும் எழுந்து வந்து போர் புரியும் தன்மையை மனதில் கொண்டு விம்மிதம் கொண்டான். மனச்சலிப்பால் போரிடும் திறனை குன்றியவனுய் நின்ருன். 67

அகத்திடை விம்மிதம் அடைந்து நின்றுளான்
திகைத்தனன் வரங்கொல்இச் செய்கை என்றனன்
புகைத்தென உயிர்த்தனன் பொங்கு கின்றனன்
நகைத்தனன் இவர்செயல் நன்று நன்றெனு.

மனதில் விம்மிதம் அடைந்த நின்ற விசயன் என் செய்யலாம் எனத்திகைத்தான். இது பெரிய வரத்தின் சீரோ இந்த அசுரரின் செயலாகும் என்ருன்: புகை தோன்றினுற்போல் பெருமூச்செறிந்தான். கோப அழல் மனதில் பொங்குகின்றனன். இவர்கள் செயல் நன்று நன்றெனச் சிரித்தான். 68

தொட்டிடு பகழியால் துணிந்து போரிடைப்
பட்டவர் எழுந்தனர் பகழி பின்னரும்
விட்டிடின் ஆவதென் மேவ லார்தமை
அட்டிடல் இன்றெனக் கரிது போலுமால்.

நான் தொடுகின்ற அம்பினல் துணிபட்டுப் போர்க்களத்து இறந்தார்கள்; பின்னரும் உயிர்பெற்றெழுந்தனர் ஆதலால் பின்னரும் யான் அம்பினை விடுத்தால் என்ன பிரயோசனம் ஆவது. பகைவரை இன்று கொன்று வெற்றிபெறல் எனக்கு அரிதுபோலும். 69

அன்னவர் தமையடல் அரிய தாமெனில்
ஒன்னலர் படையொடும் ஒன்றிச் சுற்றியே
பன்னெடு நாளமர் பயின்று நிற்பினும
என்னுயிர் கொள்வது மெளிதன் ருலரோ.

அவர்களைக் கொன்றிடல் எனக்கு முடியாததாமென்ருல்; என் பகைவர் பெரும் படைகளுடன்கூடி என்னைச் சுற்றி நின்று பலநாள் போர் செய்து நிற்பினும் எனது உயிரைக் கொல்வதும் அவரால் இலேசில் முடியாத காரியம் 70

வென்றிலன் இவர்தமை வென்றி லேன்எனில்
சென்றெதிர் மாற்றலர் செருவில் வன்மைபோய்ப்
பொன்றுதல் பெற்றிலன் பொதுவ னோர்மகன்
கொனறிடும் உலவையின் கொள்கை யாயினேன்.

இவர்களை நான் வென்றிலேன். சரி, இவர்களை வென்றிடாது போனேன் என்றால், என்னை வந்து எதிர்த்த அசுரருடன் செய்த போரிலே என் வலிமை எல்லாம் கெட்டு இறக்கவும் நான் பெற்றிலேன்! எனது நிலை, விவேகமில்லாத ஒருவன் ஒரு மரத்தை வெட்டுதற்குப் பதில் அதன் கொம்பை வெட்டியபோது மீண்டும் அம்மரம் தளைத்திடக் கொம்பை மட்டும் வெட்டி வெட்டிச் சலித்து நிற்கும் அவன் தன்மைபோலாயினேன் 71

பற்றலர் தங்களைப் படுப்பன் யானென
வெற்றிகொள் வானென விளம்பி வந்தயான்
செற்றில னாகியே சிலையுங் கையுமாய்க்
கொற்றவ னோடுபோய்க் கூட லாகுமோ.

பகைவர் எல்லாரையும் நான் வெல்வேன் என்று வீரம் பேசிவந்த யான். அவர்களை நான் அழித்திடாமல் வில்லுங் கையுமாக இவ்விடம் விடுத்து எங்களது தலைவன் வீரவாகுதேவரிடம் போய்க் கூடிக்கொள்வது முறையாகுமோ? 72

மாற்றலர் வரத்தினர் மாயப் பான்மையர்
ஆற்றவும் வலியரென் றறைந்து மீள்வனேல்
தோற்றனன் என்றெமர் துறப்பர் அன்றியும்
போற்றலர் விடுவர்கொல் புறந்தந் தேகவும்.

எனது பகைவர் வரம்பெற்றுடையர். இறந்தும் எழுவார். மாயத்தன்மை நிரம்பியவர். மிகவும் வலியுடையவர். இவர்களை வெல்வது முடியாது எனக் கூறிவிட்டு நான் மீண்டும் போனால், நான் தோல்வியுற்று வந்துள்ளேன் என்று எனது சுற்றத்தவர் என்னைப் புறக்கணிப்பர். அதல்லாமலும், என்னைச் சுற்றி வளைத்துப் போரிடும் இவர்கள் என்னைப் பின்னிட்டோடிப் போகவும் விடுவாரோ?

பித்தரின் மயங்கிலன் உணர்வும் பெற்றுளேன்
எய்த்திலன் வலியொடும் இன்னும் நின்றனன்
வைத்திலன் புகழினை வசையொன் றெய்துவேன்
செத்திலன் இருந்தனன் செயலற் றேனென்றான்.

நான் பைத்தியக்காரனைப் போல் மயக்கமடையவில்லை. உணர்வுடன் இருக்கின்றேன். களைப்படையவில்லை; இன்னமும் வலியுடன் நின்றேன். வெற்றியுற்றேன் என்று புகழும் பெறவில்லை. பகைவரிடம் அகப்பட்டுத் தவிக்கிறார் என்று உலகும் இகழும் வசை ஒன்றை அடையப்போகின்றேன். நான் சாகவும் இல்லை. இருந்தேன் என் செயலற்றேன் என்றான். 74

விண்டினை மாறுகொள் விசயன் இவ்வகை
அண்டரும் துனபுகொண் டகத்தி லுன்னுழி
உண்டொரு செய்கையான் உய்யு மாறெனக்
கண்டனன துயர்க்கடல் கடக்கும் பெற்றியான்.

விஷ்ணு மூர்த்தியையும் மாறுபட்டுப் போர் புரிந்து வென்றிடும் விசயன் இவ் வகையாகச் சகிக்க முடியாத துன்பத்தைக் கொண்டு தனது உள்ளத்திடத்து ஒரு வழியை எண்ணியபோது, ஓகோ! எனக்கு இப்பொழுது இந்நிலையில் யான் உய்ந்திட ஒரு செயல் உண்டு எனக் கண்டான்; அதனுல் துயர்க்கடலைக் கடக்கும் நிலையும் ஆயினுன். 75

ஆறுமா முகப்பிரான் அன்றி இவ்விடை
வேறொரு துணையிலை மெய்மை ஈதெனத்
தேறினன் அவனடி சிந்தை செய்தனன்
மாறிழி அருவிநீர் வழியும் கண்ணினுன்.

ஆறுமுகமுடைய பெருமான் அன்றி எனக்கு இவ்விடம் வேறு யாருமே துணை இல்லை. இது மெய்மையாகும் எனத் தனது உள்ளத்தில் விசயன் தேறினுன். அங்கு நின்றவாறு அவருடைய திருவடி மலர்தனைச் சிந்தை செய்தான். சிந்தை செய்தலும் அன்பினுல் உருகி ஓய்வின்றி; பெருகிடும் அருவி நீர்போல் பெருகி வழிந்தோடும் கண்ணீருடைய கண்களுடையனுயினுன். 76

அண்ணலங் குமரனை அகத்துட் கொண்டுழி
எண்ணிய எண்ணியாங் கெவர்க்கும் நல்குவோன்
விண்ணிடை ஒல்லையின் விசய னென்பவன்
கண்ணிடைத் தோன்றியே கழறல் மேயினுன்.

எவர்க்கும் மேலானவராகும் குமரப் பெருமானை விசயன் உள்ளத்துள் தியானித்துக் கொண்ட நேரத்து; எண்ணியவாறே நண்ணுமாறு எவர்க்கும் அருள்புரிபவன் ஆதலால், வானிடை விரைவுடன் விசயன் என்பவன் கண்முன்னுகத் தோன்றியருளி இவ்வார்த்தைதனை எம்பிரான் கூறியருள்கின்றுர். 77

வேறு

கேளிது விசய ஒன்னுர் கிளையினை முடிப்பான் உன்னித்
தாளொடு முடியுங் கையும் தடிந்தனை தடிந்த தெல்லாம்
மீளவும் தோன்றிற் றன்றே மேவலர் பெற்ற தோராய்
நீளமர் வயமின் ருகி நின்றனை தளரேல் நெஞ்சம்.

விசயனே, இதைக் கேள். பகைவரது கிளைகளை அழித்திடும்படி நீ நினைத்து அவர்களுடைய காலோடு தலையும் கையும் வெட்டி வீழ்த்தினுய்; வெட்டிய அவயவங்கள் யாவும் மீளவும் வந்து தோன்றிக் கொண்டதல்லோ! இதற்கு அந்தப் பகைவர் முன்னர் பெற்றுக்கொண்ட வரத்தை உணராய், நீண்டநேரமாக நீ செய்த போரில் வெற்றியின்ருகி நின்ருய். இனி உனது மனம் தளராதே. 78

ஏற்றபல் படைகள் தம்மால் இவர்தமைப் பன்னுள் நின்று
வீற்றுவீற் றடுவை யேனும் விளிகிலர் ஒருங்கு வல்லே
ஆற்றல்சேர் படையொன் றுய்க்கின் அனைவரும் முடிவர் ஈது
நாற்றலை யுடையோன் தொன்னுள் நல்கிய வரம தென்றுன்.

இவர்களைக் கொல்வதற்கு ஏற்ற ஏற்ற பலவிதமான படைகளாலும் பன்னாளும் இங்கு நீ நின்று வேறு வேறாக வெட்டி வீழ்த்திடுவாயேனும்; இவர்கள் ஒரு போதும் இறக்கார்கள். ஆனால், ஒருங்காக எல்லாரையும் ஒரே காலத்தில் சங்கரிக்கக்கூடிய ஒரு படையை நீ விடுத்தால் அனைவரும் முடிவார்கள்; இது நான்கு தலையுடைய பிரமதேவர் கொடுத்த வரம்தான். இப்படி இவர்கள் எல்லாரையும் ஒருபடையால் கொல்வது என்றார். 79

என்றிவை உரைத்து வள்ளல் இம்பரை அளித்தோன் சென்னி
ஒன்றினை வாங்கி ஏனோர் உளமயல் அகற்றும் எந்தை
வென்றிகொள் படையை நல்கி விசயனுக் களித்து மேவார்
பொன்றிட இதனை இன்னே விடுகெனப் புகன்று போனான்.

என்று இவற்றை எமது அருள் வள்ளலாகும் முருகப்பிரான் உரைத்துவிட்டு, தேவர்களுடன் இவ்வுலகனைத்தையும் படைத்த பிரமதேவரின் தலையினை ஒன்றை அரிந்து ஏந்தி மற்றையத் தேவர்களின் உளமயல்கள் யாவற்றையும் நீக்கிடும் எந்தையாகும் வைரவப் பெருமானின் வெற்றி கொள்ளும் படையை உண்டாக்கி; அப்படையை விசயனிடம் கொடுத்தருளி; விசயனே, உனது பகைவர்கள் அழிவுற இந்த வைரவப் படையை இப்பொழுதே விடுவாய் எனக் கூறியருளி அங்கு நின்றும் மறைந்தருளினர் எமது ஆறுமுகமுடைய பெருமான். 80

தேர்ந்தனன் முருகன் வாய்மை சிறந்தனன் மகிழ்ச்சி உள்ளங்
கூர்ந்தனன் ஞமலி யூர்தி கொற்றவெம் படையை வாங்கி
ஆர்ந்தநல் லன்பில் பூசை ஆற்றினன் அதனை யெல்லாம்
ஓர்ந்தனன் அவுணர் தம்முள் ஒருவன் உன்மத்தன் என்போன்.

முருகப் பெருமானது திருவாக்கினை விசயன் உணர்ந்து கொண்டான். உள்ளம் சிறந்தனன்; களிகூர்ந்தனன் நாய் வாகனமுடைய வைரவப் பெருமானின் கொற்றம்மிக்க கொடிய படையைக் கையில் எடுத்து உள்ளத்தில் பெருகிடும் அன்பினால் பூசை புரிந்தான். அச்செயல் யாவற்றையும் அங்குள்ள அசுரரிலே உன்மத்தன் என்பவன கண்டு உணர்ந்து கொண்டான். 81

ஈண்டிவன் நமர்கள் எல்லாம் இசைவரப் படைய தொன்றால்
மாண்டிட அடுவான் போலும் மற்றதன் முன்னர் மாயம்
பூண்டிடு படையால் இன்னோற் கிறுதியைப் புரிவ னென்னா
ஆண்டுதன் னுளத்தில்உன்னி அவுணனப் படையை விட்டான்.

இதைக் கண்டுகொண்ட உன்மத்தன் என்பவன், இந்த விசயன் என்பவன் நம் எல்லோரையும் இப்பெரும் படை ஒன்றினால் ஒருங்கு சேரக் கொல்லப் போகின்றான் போலும். அதற்கு முந்தி மாயம் நிறைந்த படை ஒன்றால் இந்த விசயனுக்கு முடிவைச் செய்வேன் என்று உள்ளத்து நினைந்துகொண்டு தானும் உடனே மாயப்படையை எடுத்து நினைந்தபடி விசயன்மீது விட்டான். 82

மாயவள் படையை முன்னம் விடுத்தலும் வள்ளல் நோக்கித்
தீயுமிழ் கின்ற காரி திண்படை செலுத்தச் சென்று
பாயிருள் பரந்து நேரும் படையினைத் தடிந்து முப்பால்
ஆயிரர் தமையுஞ் சுற்றிஅடல் செய்து மீண்ட தன்றே.

மாயவன் கொடுத்த படையை முன்னாக உன்மத்தன் என்னும் அசுரன் விடுத லும், அவற்றை எமது வள்ளல் விசயன் கண்ணுற்று நெருப்பினை உமிழ்கின்ற வைரவக் கடவுளின் படையினைச் செலுத்திட; அப்படை சென்று பெரிய இருள் பரந்துகொண்டு முன்வருகின்ற மாயப்படையினை அழித்து அப்பால்போய் மூவாயிரம் அசுர குமரரையும் சுற்றி வளைத்துக்கொன்றருளி மீண்டு விசயன்பால் வந்து அடைந்துகொண்டது. 83

ஒருகணப் பொழுதின் முன்னர் ஓராயிர முப்பா லோருஞ்
செருநிலத் தவிந்தா ரன்ன செய்கையை விசயன் காணு
முருகனைப் பரவி நின்றான் முழுமதி தன்னைக் கண்ட
பொருதிரைப் புணரி யென்ன ஆர்த்தனர் பூத ரெல்லாம்.

ஒரு கணப் பொழுதின் முன்பு மூவாயிர மைந்தர்களும் போர்க்களத்து வீழ்ந்து இறந்தார்கள். அச்செய்கையை விசயன் கண்ணுற்று முருகப்பிரானை வணங்கி மகிழ்வாகி நின்றான். அதுபோது பூரண சந்திரனைக்கண்டு பொருதலைக் கும் திரையுடைய சமுத்திரம் பொங்குதல் போன்று மகிழ்ந்து ஆர்த்தார்கள் பூதங்கள் எல்லாம். 84

ஏமுறும் அவுணர் தானை இறந்திடா தெஞ்சிற் றெல்லாம்
காமரு திசைகள் முற்றும் கதுமென விரிந்து போன
மாமலர் பொழிந்தார் விண்ணோர் மற்றிவை அனைத்தும் நாடிக்
கோமகன் முன்பு சென்றார் குரைகழல் அவுணர் தூதர்.

இறுமாப்புடைய அசுரச் சேனைகள் இறந்திடாது அங்கு மிச்சமாக நின்றன எல்லாம் அழகிய திசைகள் முழுவதிலும் விரைவுடன் பறந்தோடிப் போயின; தேவர்கள் பூக்களை மழைபோன்று சொரிந்தார்கள். மற்று இச்செயல் யாவையும் கண்டுகொண்ட அசுரத் தூதுவர்கள் தங்கள் அரசன் சூரபன்மன் முன்பு மிக வேகமாக ஓடிச்சென்றார்கள். 85

வெய்யவன் பகைவன் தாதை வியன்கழல் பணிந்து தூதர்
ஐயநின் மைந்தர் முப்பா லாயிரர் தம்மை யெல்லாம்
ஓய்யென இலக்கர் தம்முள் ஒருவனே முடித்தான் ஈது
பொய்யல சரத மென்னப் பொருக்கெனப் புலம்பி வீழ்ந்தான்.

கொடிய சூரிய தேவனின் பகைவனான பானுகோபனின் தந்தை சூரபன்மனுடைய காலில் அத்தூதுவர் பணிந்து; ஐயனே! நினது மைந்தர் மூவாயிரவர் தங்களை எல்லாம் எமது பகைவராகும் இலக்கம் வீரரில் ஒருவனான விசயன் என்பவனே கொன்றான்; இது பொய்யல்ல உண்மையெனலும், அது கேட்ட சூரபன்மன் பொருக்கென உடனே புலம்பியவாறு சிம்மாசனத்தினின்றும் கீழே புரண்டு வீழ்ந்தான். 87

வீழ்ந்தனன் பதைத்துச் சோர்ந்து வெய்துயிர்த் தசைந்து விம்மிப்
போழ்ந்திட நிலத்தைக் கையாற் புடைத்தனன் புரண்டு வெற்பில்
தாழ்ந்திடு மருவி யென்ன இழிபுனல் தாரை பொங்கச்
சூழ்ந்தவர் அரற்ற மன்னன் துன்பமேல் துன்பம் வைத்தான்.

வீழ்ந்த சூரபன்மன் புத்திர சோகத்தால் பதைபதைத்துச் சோர்ந்து பெரு மூச்செறிந்து வாடி, விம்மி அழுது நிலம் பிளந்திடுமாறு கையால் அடித்தான்; புரண்டான். கண்களினின்றும் மலையிலிருந்து வழிகின்ற அருவியாறுபோலக் கண்ணீர் தாரையாகச் சொரிந்து பெருகிட, அவனைச் சூழ்ந்தவர்களும் கண்டு கலங்கி அழுதிடத் துன்பத்தின்மேல் துன்பம் கொண்டான். 87

அன்னதோ ரெல்லை மைந்தர் அனைவரும் முடிந்த தோரா
மன்னவன் இசைமை நீங்கி மாயிருந் தவிசில் தப்பி
இன்னலின் மறிந்த தென்ன இரவியங் கடவுள் மேல்பால்
பொன்னெடுங் கிரியின் எய்தி ஒளியிலன் புணரி வீழ்ந்தான்.

அவ்வாறாகிய எல்லையில் தனது பிள்ளைகளனைவரும் முடிந்ததை உணர்ந்து சூரபன்மன் தனது சிறப்பு நீங்கி மிகப் பெரிய சிம்மாசனத்தினின்றும் தவறி வீழ்ந்துள்ள தன்மையைப் போன்று, சூரியபகவானான கடவுளும் மேற்குத் திசையில் இருந்திடும் பொன்னாகி நீண்ட அத்தமன மலையில் அடைந்து ஒளி குன்றிக் கடலில் மூழ்கினான். நான்காம் நாள் பகல் நீங்கி இரவாயது. 88

மூவாயிரவர் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவித்தம் - 1,633

# 10. தருமகோபன் வதைப் படலம்

முடிவுறு புதல்வரை முன்னி முன்னியே
இடரினை உழந்திடும் இறைவன் தன்முனம்
படியறு நல்லறப் பகைஞன் போந்திடா
அடிமுறை பணிந்துநின் றறைதல் மேயினான்.

இறந்துபோன தனது பிள்ளைகளை நினைந்து நினைந்து இடர்பட்டுப் புலம்பிடும் அரசனாகும் சூரபன்மன் முன்பாக; நிகரற்று விளங்கிடும் நல்ல தருமத்தின் பெரும் பகைவன் தருமகோபன் வந்து சூரபன்மன் காலில் பணிந்து நின்று இவற்றைச் சொல்கின்றான். 1

மன்னவர் மன்னநீ மனத்தில் இவ்வகை
இன்னல்செய் தாற்றவும் இரங்கு வாயெனில்
துன்னலர் மகிழுவர் சுரர்கள் யாவரும்
நன்னகை செய்குவர் நமரும் வெள்குவார்.

அரசர்க்கரசே! நீர் மனதில் இன்னவகையாகப் புலம்பி இன்னலுற்று மிகவும் பெருவாரியாக அழுதிடுவாய் என்றால் எமது பகைவரான தேவர்கள் யாவரும் மகிழ்ச்சியுறுவார்கள். அதுவன்றி உனது இந்நிலையைக் காணப்பெறின், எமது மக்களான அசுரரும் வெட்கமடைவார்கள். 2

முந்துறு மாற்றலர் முனைவெம் போரிடைத்
தந்தையர் விளியினுந் தமர்கண் மாயினும்
மைந்தர்கள் விளியினும் மான வீரர்கள்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தீர்வரோ.

உன்னுடை சேடு - அனிவசிப்பு பொறுத்திய

அரசே கேட்பீராக! முந்தி வருகின்ற பகைவரது கொடிய போர்முனையில் நடத்திடும் போரினிலே தமது தந்தையர் இறந்தாலும் அல்லது சகோதரர் மற்றும் சுற்றத்தவர் இறந்தாலும் மானமுடைய வீரர்கள் தமது சிந்தையிற் கொண்ட வலிமையிலே சிறிதளவாயினும் தளர்வுறுவாரோ? எது போனாலும் வெற்றியைத்தான் நோக்கி நிற்பார்கள். 3

ஏற்றிகல் புரிந்திடும் எமரை வௌவிய
கூற்றுளன் தொன்மைபோற் படைத்துக் கூட்டுவான்
நாற்றிசை முகனுளன் நாமு ளோம்நம
தாற்றலும் இருந்துள அயர்வும் வேண்டுமோ.

அஃதிருப்ப, போர்க்களத்துப் பகைவருடன் எதிரேற்றுப் போர்செய்து இறந்தார்களுடைய உயிரைப் பிடித்துக்கொண்டு போன இயமன் இருக்கின்றான். அவன் அவர்களது உயிரைக் கேட்டால் தருவான். அடுத்ததாக அவர்களை எல்லாம் முன்புபோல் படைத்துக் கூட்டுதற்குப் பிரமதேவன் உளன். நாமும் இருக்கின்றோம். நமது ஆற்றலும் கெடாது இருந்துளது; இனி எமக்கு அயர்வும் வேண்டுமோ? 4

அந்தமில் வெறுக்கையும் அழிவில் ஆயுளும்
நந்தலில் வன்மையும் நடாத்தும் ஆணையும்
இந்திர ஞாலமும் இருக்க எந்தைநீ
புந்தியில் அமரர்போற் புலம்ப லாகுமோ.

முடிவிலாத செல்வமும்; அழிவில்லாத ஆயுளும் குறைவிலாத வலிமையும்; எல்லாரும் அஞ்சிப் பணிகேட்கின்ற ஆணையும்; இந்திர ஞாலம் என்னும் நினைத்தபடி செல்லும் தேரும் இருந்திட; எந்தை அரசே, நீருமா புத்தியில்லாத அந்தத் தேவர்களைப் போன்று புலம்பப் போகின்றாய். 5

விண்ணவர் சிறையினை விடாது வைத்திடக்
கண்ணிய விரதமுங் கழிந்த மானமும்
நண்ணலர் தங்களை நலியுந் தன்மையும்
எண்ணலை இடையரு திடுக்கண் போற்றுமோ.

தேவர்களது சிறையினை விடாது வைத்திருப்பதற்கென உறுதிபூண்ட விரதத்தையும் எதுவரினும் மானமே மேல் எனக் கொண்ட கொள்கையும்; பகைவர் எவரையும் நலிகின்ற தன்மையும் எண்ணிப் பார்க்கின்றாயில்லை. இதைவிட்டு உனது புத்திரர்கள் இறந்தார்கள் என இடையறாது புலம்பித் துன்பத்தையே பேணி நிற்கலாமோ? 6

மாற்றல ராகிய அமரர் மானவர்
கோற்றொடி மடந்தையர் குழவிப் பாலகர்
ஆற்றிடு துயருனக் காவ தன்றெனத்
தேற்றினன் அமைச்சருள் தீமை மிக்குளான்.

எமது பகைவராகும் தேவர்களும், அவர்களைப் போன்ற வலியற்றோரும்; வளையல் அணிந்த பெண்களும்; குழந்தைப் பாலகரும்தான் துன்பம் வந்தபோது வலியிழந்து புலம்பிப் பதைத்திடுவர். அவர்கள் அடைகின்ற துன்பம் உனக்கு ஆகாது எனத் தேற்றினான் சூரபன்மனுடைய மந்திரிகளிலே மிக்க தீமையுடைய தருமகோபன். 7

வேறு

ஆற்றிடு தருமம் நீத்த அமைச்சன்வந் தினைய வாற்ருல்
தேற்றிடு கின்ற காலைச் சிறிதுதன் அவலம் நீத்துக்
கூற்றென யானே சென்று கூடலர் தொகையை விண்மேல்
ஏற்றுவ னென்று சீறி அவுணர்கோன் எழுந்து சென்ருன்.

செய்யப்பட வேண்டிய தருமத்தை நீக்கிய மந்திரி தருமகோபன் சூரன் முன்வந்து இத்தன்மையான வார்த்தை சொல்லித் தேற்றிடுகின்ற நேரத்து; சூரபன்மன் அதனல் சிறிது தனது துயரை விடுத்து; இப்பொழுது எனது பகைவர்க்கு இயமன் எனும்படி நானே சென்று பகைவரது தொகையை வான்மேல் ஏற்றிவைப்பேன் என்று சீறிக்கொண்டு அசுரர்க்கெல்லாம் அதிபனுன அவன் எழுந்து போனுன். 8

சென்றிடு மன்னர் மன்னன் சேவடி முறையிற் ருழா
இன்றிவண் இருத்தி யானும் அனிகமும் இன்னே யேகி
வன்றிறற் பகைஞர் தம்மை வளைத்துவல் விரைந்து சாடி
வென்றியுற் றிடுவ னென்ன வேண்டினன் அமைச்சர் மேலோன்.

செல்கின்ற அரசர்க்கரசனுன சூரபன்மனது சிவந்த கால்களில் முறையாகத் தாழ்ந்து வணங்கி; அரசே, இன்று நீர் இங்கு இரும், யானும் சேனையும் இப்பொழுதே சென்று மிக்க வலியுடைய எம்பகைவரை வளைத்து மிகு விரைவுடன் அவர்களைக் கொன்று வெற்றியினைச் செய்திடுவேன். என்னை அப்படிப் போரிட விடுவீராக என வேண்டினுன் தருமகோபன் என்னும் மந்திரிகளில் தலைவன். 9

அறந்தவிர் அமைச்சன் வேண்ட அவுணர்கள் முதல்வன் மீண்டு
சிறந்திடு மடங்க லாற்றுஞ் செம்பொன்செய் பீட மேவி
உறைந்தனன் அனைய காலை ஒல்லையில் விடைகொண் டேகிப்
புறந்தனில் வந்து வல்லே போர்ப்பெருங் கோலங் கொண்டான்.

அறத்தினைத் தவிர்ந்த மந்திரி தருமகோபன் இவ்வகை வேண்ட, அசுரர்க்கெல்லாம் முதல்வனுன சூரபன்மன் திரும்பி வந்து சிறப்புற்ற சிங்கங்கள் சுமந்திடும் செம்பொன்னிற் செய்த பீடத்தில் பொருந்தி வீற்றிருந்தான்; அவ்வாருகிய நேரத்து தருமகோபன் அதிவிரைவாகச் சூரபன்மனிடம் விடைபெற்றுத் திரும்பிச் சென்று தனது அரண்மனை புகுந்து அங்கு போர் புரிதற்குரிய பெருங்கோலத்தைக் கொண்டான். 10

போதகத் தரசு தம்முட் புண்டரீ கப்பேர் பெற்ற
மாதிரக் களிற்றை அன்னேன் வல்லையிற் கொணர்தி ரென்னுத்
தூதுவர்க் குரைத்த லோடுந் துண்ணென அனைய ரோடி
மேதகு நிகளம் நீக்கி விடுத்துமுன் னுய்த்து நின்ருர்.

யானைகளுக்கெல்லாம் தலைமையான யானைகள் எனச் சொல்லப்பெறும் திக்கு யானைகளில் ஒன்ருகிய புண்டரீகம் என்னும் பேர்பெற்ற திக்கு யானையை இங்கு விரைவில் கொண்டு வாருங்கள் எனத் தருமகோபன் தூதுவரிடம் சொல்லுதலும்; அத்தூதுவர் துண்ணென ஓடிச்சென்று அந்த யானையைக் கட்டிய கட்டை நீக்கி விடுத்து அதனைத் தருமகோபன் முன் கொணர்ந்து நிறுத்தினுர்கள்; 11

புந்தியிற் குறிப்பிற் செல்லும் புண்டரீ கப்பேர் பெற்ற
தந்தியந் தலைவன் மீது தருமத்தை வெகுளும் வெய்யோன்
அந்தமில் படைக ளேந்தி அமைச்சர்கள் பலருஞ் சூழ
இந்திரன் இவன்கொ லென்ன ஏறினன் எழிலி போல்வான்.

மனதில் நினைக்கின்ற குறிப்பை உணர்ந்து செல்கின்ற புண்டரீகம் எனப் பேர்பெற்ற யானைகளின் தலைவனிடத்து; தருமத்தை வெகுண்டு நீக்கிடும் கொடியவன் தருமகோபன் பல படைகளையும் ஏந்திக்கொண்டு; மற்றைய மந்திரிகள் பலரும் சூழ்ந்துவர இவன்தானோ இந்திரன் என்று கண்டோர் சொல்லும்படி; ஏறிக்கொண்டு செல்கின்றான் கருமையான மேகம் போல்பவன். 12

அறைந்தன படகம் பேரி ஆர்த்தன விரலை தீபஞ்
செறிந்தன கரிதேர் வாசி தெழித்தன அவுணர் தானை
நிறைந்தன பதாகை ஈட்டம் நெருங்கிய கவிகை வானம்
மறைந்தன எழுந்த பூழி மாதிரம் இருண்ட அன்றே.

அவ்வாறு அவன் புறப்பட்டதும் படகம் அடித்து முழங்கின. பேரிகைகள் முழங்கி ஒலித்தன. கொம்பு வாத்தியம் ஊதி நிறைந்தன. அஃதன்றி இரவானதினால் எங்கும் தீபச் சுடர்கள் செறிந்தன. யானைகள் தேர்கள் குதிரைகள் எங்குமாகித் திரண்டு பரந்தன. அசுரது சேனை கூச்சலிட்டு முழங்கின; கொடிகளின் தொகுதிகள் எங்கும் நிறைந்தன. குடைகள் வானில் நெருங்கி மறைத்தன. புழுதிகள் எழுந்துகொண்டன; திக்கெலாம் இருண்டது. 13

எண்ணிலா வெள்ள மாவும் இபங்களும் இவுளித் தேரும்
வெண்ணிலா எயிற்றுச் செங்கண் வீரரும் புடையிற் சுற்றப்
புண்ணுலா முகத்துப் பேழ்வாய்ப் புண்டரீ கத்தை யூர்ந்தே
அண்ணல்மா நகரம் நீங்கிப் போயினன் அறத்தை நீத்தோன்.

எண்ணற்ற வெள்ளம் குதிரைகளும் யானைகளும் குதிரைகள் பூட்டிய தேரும் வெண்பிறை போன்று வளைந்த பற்களையுடைய செங்கண்ணராகும் அசுரரும் புடையில் சூழ்ந்து வந்திட, யோர் வடுகொண்ட முகமுடையதும் அகன்ற வாயுடையதுமான புண்டரீகமென்னும் யானையில் ஏறி அதைச் செலுத்தி மிகு மேலோங்கிய நகரை விட்டுப் போயினான் தருமத்தை நீக்கிய தருமகோபன். 14

அண்டர்மற் றிதனை நோக்கி அம்மவோ அறத்தை நீத்த
கண்டகன் சிலையொன் றேந்தி மாதிரக் களிறு தன்னுள்
புண்டரீ கத்தை ஊர்ந்து பொருமெனில் இவனை யாற்றல்
கொண்டிடல் அரிதாம் என்ன இரங்கினர் குலைந்த மெய்யார்.

தேவர்கள் மற்று இதனை நோக்கி; அம்மவோ! தருமத்தை நீக்கிய பாதகன் வில் ஒன்றினை ஏந்தி திக்கு யானைகளிலே; புண்டரீகம் என்பதைச் செலுத்தி வந்து போரிடுவானென்றால் இவனை வெற்றிகொண்டிடல் அரிதாம் என்று இரங்கி வேதனையுற்றனர். அவனைக் கண்ட பயத்தால் நடுங்கிடும் மேனியுடையோராய் நிற்கின்றனர். 15

ஆவணம் அனந்தம் நீங்கி அனிகமும் தானு மேகி
மூவிரு முகத்து வள்ளல் முழுதருள் பெற்ற சேனை
காவலன் வெகுண்டு நின்ற களத்திடை அணுக லோடும்
மேவலர் எதிர்ந்தார் என்ன வியன்கழற் பூதர் ஆர்த்தார்.

இவ்வாறு தருமகோபன் அரச வீதிகள் அனந்தவற்றைக் கடந்து சென்று; சேனையும் தானுமாகப்போய்; ஆறுமுகமுடைய அருளுடை முதல்வனின் முழு அருளையும் பெற்று விளங்கிடுகின்ற; தேவர் சேனைக்கு நாயகரான வீரவாகுதேவர் வெருட்சியுடன் எதிர்வரும் பகைவரை நோக்கியவாறு நிற்கும் போர்க்களத்திடை வந்து சேரலோடும்; ஓகோ! பகைவர் வந்தார் எனக் கூச்சலிட்டு அங்கு நின்ற வீரக்கழல் அணிந்த பூதங்கள் ஆர்ப்பரித்தார்கள்; 16

பொற்றைக ளேந்தி ஆர்க்கும் பூதரை இலக்கர் தம்மைச்
சுற்றுறு துணையி னோரைத் தொல்லைநாள் நகரஞ் செற்ற
கொற்றவன் தன்னை அன்னோர் வயிலினைக் கொடியோன் நோக்கி
இற்றது கொல்லோ நந்தம் வாழ்க்கையென் றிரங்கிச் சொல்வான்.

வலியின
10/1/42

வாருங்கள் வதைப்போம் என மலைகளையும் ஏந்தியவாறு ஆர்த்திடும் பூதங்களை; இலக்கம் வீரர் அவர்களுடன் சூழநின்ற வீரவாகு தேவரின் தம்பியர் எட்டுப்பேரை; முன்னாள் தங்கள் நகரை அழிவு செய்திட்ட தலைவர் வீரவாகு தேவரை; இவர்களின வலியுடைய நிலையை கொடிய தருமகோபன் நன்குடன் கவனித்துப் பார்த்து; ஐயையோ! இன்றுடன் என் வாழ்வு முடிந்ததோ என்றான். 17

வேறு

பகைஞர்க ளாயினோர் பரவித் தன்மிசை
இகல்செய வருவரேல் இரங்கி ஏங்குதல்
மிகுபழி இங்கிது வினவின் மானவர்
நகைசெய்வர் பொருவதே நன்று போலுமால்.

அவ்வாறு ஏங்கித் துயருறும் தருமகோபன் எண்ணிடுவான்; பகைவராய் இருப்பார்கள் அணிவகுத்து சேனையைப் பரப்பி எம்முடன் போரிட வந்தால் அவரைக் கண்டவுடன் இரங்கி ஏங்குதல் மிகுபழியாகும். இதுவன்றி இதை அறிந்தால் வீரர்கள் சிரிப்பார்கள்; ஆனமையால் எந்நிலையிலும் போரிடுவதே நன்று போலும்; 18

எச்சமில் சேனையும் படையும் ஈண்டிய
கைச்சிலை இருந்தது கரியும் ஒன்றுள
தச்சுறு கின்றதென் ஆவ தாகுமால்
பொச்சையர் கடன்நனி பொருமல் கொள்வதே.

இழிமக்கள்

என்னுடன் முடிவென்பதிலாத சேனையும் படையும் நெருங்கி வந்துள்ளது; கையில் நல்லதொரு வில்லும் இருந்தது. மிகுவலியுடைய யானையும் ஒன்றுளது. ஆகையால் இனி அஞ்சுவது எதற்கு; ஆவதுதானே ஆகும்; கோழைகளின் கடன் தான மிகவும் அச்சம் கொண்டு வருத்தப்படுவது. 19

வெல்லினும் செறுநர்முன் வெரிந தீயினும்
அல்லது விளியினு மாக யானினி
மல்லலம் படையொடு மாற்ற லார்மிசைச்
செல்லுவ தன்றியே இரங்கல் சீரிதோ.

நான் இப்போரில் வென்றாலும் அல்லது பகைவர்முன் புறமுதுகிட்டு ஓடினுலும்; அல்லது இறந்தாலும் எது ஒன்ருகுதல் நடப்பது நடக்கட்டும். அதுதான் சரி; ஆனல் நான் என் பகைவர்மீது போரிடும்படி இங்கு திரண்டுள்ள பெரும் படையுடன் செல்லுவதன்றி; இவர்களைக் கண்ட உடனே ஏங்கி இரங்கிக் கவலையுறல் சீரான காரியமோ? 20

கண்ணுறு படையை நோக்கிக் கருத்திடைக் கவலை எய்தி
எண்ணிநின் றயர்தல் வீரர் இயற்கைய தாமோ பின்னர்
நண்ணிய வாறு நண்ண நானினித் தளரேன் என்னுத்
துண்ணெனத் தேறிச் சென்ருன் சூரனுக் கமைச்சன் ஆனேன்.

எமது முன்னல் கண்ணுறுகின்ற படையினை நோக்கி எமது மனதிலே கவலை அடைந்து என் செயலாம். இப்படி நிலையோ என எண்ணி இங்கு நின்று அயர்ச்சி கொள்வது வீரரின் இயல்பா? அல்லவே. ஆதலின், பின்னல் வரவேண்டியவாறு வரட்டும்; நான் இனி எந்நிலையிலும் தளரேன் என்று நினைந்து விறுக்கெனத் தேற்றமடைந்து முன்சென்ருன் சூரபன்மனுக்கு மந்திரியாய தருமகோபன். 21

இங்கிது பொழுது தன்னில் எங்கணும் இருட்கு ழாஞ்சூழ்
கங்குலும் பகலும் மாலைக் காலமும் கலந்த தென்ன
அங்கவன் தானை வெள்ளத் தவுணரும் பூதர் தாமும்
பொங்கொலிக் கடல்போல் ஆர்த்துப் பொள்ளென அமரின் ஏற்ருர்.

இங்கு இந்த நேரத்தில் எல்லா இடமும் இருட்கூட்டம் செறிந்த இரவும் பகலும், மாலைக்காலமான செக்கரும் ஒரு காலத்தில் போர்க்களத்தில் கலந்து காணப்படுவதுபோன்று; அங்கு வந்த தருமகோபனது சேனை வெள்ளங்களாய கருநிறமுடைய அசுரரும்: சிவந்த சடையும் ஒளியுடைய மேனிகொண்ட பூதங்களும்; பொங்கி இரைகின்ற கடலினைப் போன்று ஆரவாரித்து உடனடியாகப் போரிட ஆளை ஆள் ஏற்றுக்கொண்டனர். அசுரர்கள், இரவிற்கும் பூதங்கள் பகலுக்கும் அவர்களின் சடைகள் மாலைக்காலத்திற்கும் உவமையாயிற்று. 22

வேறு

தலைப்பட எழுக்களில் தண்டில் தாக்கினர்
இலக்குற நேமிகள் கணிச்சி ஏவினர்
மலைக்குவை எறிந்தனர் மரங்கள் வீசினர்
சிலைத்தனர் வயிர்துடி செறிவெம் பூதரே.

எதிரிட்டு இருபகுதியினரும் போரிடத் தலைப்படலும், பூதங்கள் தம்மை எதிர்த்த அசுரர்மேல் எழுவாயுதத்தாலும் தண்டாயுதத்தாலும் வீசினர்கள். இலக்காகச் சக்கரத்தையும் வச்சிராயுதத்தையும் எறிந்தார்கள். மலைக் குவியல்களை அசுரர்மீது தூக்கி வீசினர்கள். மரங்களைப் பிடுங்கி வீசினர்கள். போர் துரிதமாக நடைபெறும் பொருட்டு அங்கு நின்ற சில பூதங்கள் கொம்பினை ஊதியும், உடுக்கை அடித்தும் நின்ருர்கள். 23

வில்லுமிழ் சரத்தினில் வேலில் வாளினில்
கல்லினில் நாஞ்சிலில் கழுமுள் ஆயதில்
வல்லையந் தனில்உடை வாளில் வச்சிரச்
செல்லினின் நுதிகெழு திகிரி நேமியில்.

அசுரர்கள்; பூதங்கள் மீது வில்லால் உமிழ்ந்திடும் அம்பாலும்; வேலாலும்; வாளினுலும்; கவண் கல்லாலும்; நாஞ்சில் படையாலும்; கழுமுள் படையாதி யான பல படைகளாலும் இன்னமும் வல்லயங்களாலும் உடைவாளாலும்; வச்சி ராயுதத்தாலும் கூரிய சக்கரப் படையாலும் விட்டெறிந்தார்கள். 24

தண்டினில் தோமரம் தன்னில் சங்கினில்
பிண்டிபா லத்தினில் ஆற்றப் பீடுமேல்
கொண்டதோர் எழுவினில் பிறவில் கொட்புறு
அண்டரும் அவுணரும் அணிந்து போர்செய்தார்.

இன்னமும் பூதங்களும்; தண்டினுலும் தோமராயுதத்தாலும் சங்கினுலும் பிண்டி பாலங்களாலும் மிகவும் பெருமையிற் சிறந்து கொண்டதொரு எழுவா யுதத்தாலும், பிற ஆயுதங்களாலும் மிகவும் கொடியவரான அசுரருடன் அணி வகுத்துப் போரிட்டனர். 25

அயர்ப்புறு தானவர் அமைச்சர் யாவரும்
வியர்ப்பினில் வந்திடு வெங்கண் வீரரும
வயப்பெரும் சிலேயினை வணங்கி வாளிதூய்ப்
புயற்படு பெயலெனப் பொழிந்து போர்செய்தார்.

முன்னர் வீரவாகு தேவரின் பெரும் படையைக் கண்ணுற்று நிலேயழிந்த சிந்தையரான அசுர மந்திரிகள் யாவரும்; நவசத்திகளின் வேர்வையில் உற்பவித்த கொடிய இலக்கம் வீரரும் நேர்ப்பட்டு வெற்றிதரும் பெரு வில்லினை எடுத்து வளேத்து அம்புகளேச் சொரிந்து; மேகங்கள்பால் மழை சொரிவது போன்று ஒருவர்மீது ஒருவர் அம்பினை இடைவிடாது சொரிந்து போரிடுவாராயினர். 26

பெய்வதொத் தெங்கணும் பெரிதும் வீழ்தலால்
உய்வதெத் தன்மையென் றுலகம் அச்சுற
இவ்வகைத் திறத்தினர் இரண்டு சாரினும்
தெய்வதப் படைகளும் மரபில் சிந்தினுர்.

அம்புகள் மழை பெய்வதொத்து எங்கணும் சென்று பெரிதும் வீழ்தலினுலே நாங்கள் உய்வது எப்படியாமோ என்று உலகத்தவர் யாரும் அச்சுறவும், இவ் வகையாகிய திறத்தினராகி இரண்டு பாலாகவும் நின்று அம்பு விடுத்ததுமன்றி தெய்வப் படைகளேயும் விடுத்து இலக்கரும் அசுரரது மந்திரிகளும் போரிட்ட னர். 27

மாய்ந்தனர் பூதரும் வரம்பில் தானவர்
சாய்ந்தனர் கரங்களும் தலேயும் சிந்தினர்
வீந்தன கரிபரி விளிந்த தேர்நிரை
பாய்ந்தன செம்புனல் பரந்த கூளியே.

இப்படிப் போர் புரிந்திடப் பூதரும் பலர் மாய்ந்தார்கள். இதுவன்றி அள விறந்த அசுரரும் சாய்ந்து மடிந்தனர்; கைகளேயும் தலேகளேயும் சிந்திடப் பெற் ருர்கள். யானைகள், குதிரைகள் பல அழிந்து இறந்தன. தேர் நிரைகள் முறிந்து நாசமாயின. எங்கும் இரத்தம் பாய்ந்தது. பிணம் தின்னும் கூளிகள் மொய்த் தன. 28

நொந்தனர் இலக்கரும் நோன்மை நீங்கினர்
முந்துறும் அமைச்சர்போர் முயன்று நின்றனர்
அந்திலவ் வேலையில் அதனை நோக்கியே
வெந்திறல் வெய்யவன் வெகுண்டு சென்றனன்.

இப்படிப் போரிடும் பொழுது அசுரரது மந்திரிமாருடன் போரிட முடியாது இலக்கம் வீரர் நொந்து போனார்கள். தமது வலியாவும் நீங்கினார்கள். முன்னின்ற அசுரர்களது மந்திரிகள் விடாது போரிட்டார்கள். இலக்கர் அந்நிலையிலான சமயத்தில் அதனைக் கண்டு மிகு ஆற்றலும் வீரமுற்றிருந்த வீரமார்த்தாண்டர் மிகு கோபத்துடன் அசுரர் முன் சென்றார். 29

இடித்தென உரப்பினன் இமைப்பில் எய்திமுன்
வடித்திடு சிலையினை வாங்கித் தானவர்
முடித்தலை பனித்திட முழுதும் யாக்கைகள்
பொடித்தென வழுத்தினன் புங்க வாளியே.

இடி இடித்தால்போல் உரப்பினர்; ஓர் இமைப்பொழுதில் முன்பாகச் சென்று வலிமை கொண்ட வில்லினை வளைத்து, அசுரருடைய முடிகள் அணிந்த தலைகள் நடுங்கிடுமாறு அந்த அசுரரின் உடம்புகள் கூச்செறிந்து, மயிர் சிலிர்ப்பன போன்று காணப்பெறும்படி; அவருடைய உடலில் தைத்திடுமாறு உயர்வான அம்புகளை எய்தார் வீரமார்த்தாண்டர். 30

நீண்டதோர் சிலீமுகம் நெடிது மேலவன்
தூண்டிய காலையில் துணிந்த கையினர்
வீண்டிடு தலையினர் விளிந்த மெய்யினர்
மாண்டனர் அமைச்சர்கள் வறந்த தானையே.

வளைத்த வில்லில் நீண்ட சிலீமுகக் கணைகளை வீரமார்த்தாண்டர் தொடுத்து நெடுகச் சொரிந்த நேரத்து; அந்த அம்புகள் படுதலாலே துணிபட்ட கையினை உடையராயும், தறிபட்ட தலை உடையராயும், சிதைந்த உடல் உடையராயும் பல அசுர மந்திரிகள் மாண்டார்கள். இதனால் அசுரச் சேனைகள் குறைந்து அழிந்தது. 31

துறக்கம தலைத்திடு தொலைவில் தானவர்
மறுக்கமுற் றசைந்தனர் வந்து போர்செய
விறற்படு சாரதர் வெகுண்டு மேற்செலா
இறப்புறு வரைபல எடுத்து வீசினர்.

சொர்க்க உலகை அலைவித்த தொலைவிலாத அசுரர் பலர் முன்னர் தோல்வியுற்று பின்னிட்டோடியவர்கள் இப்பொழுது மறுபடியும் வந்து போர் செய்ய அதுகண்டு வலிமை கொண்ட பூதங்கள் வெகுண்டு மேற்சென்று பெரிய பல மலைகளை எடுத்து வீசினார்கள். 32

வீசிய வேலையில் வெதும்பி விம்மியே
மாசுறு தானவர் வாகை சிந்தியே
ஆசறு போனகத் தட்டில் சூடுறு
பூசைய தாமென உடைந்து போயினர்.

பூதங்கள் மலைகளை வீசிய வேளையில் அவை படலால் வெதும்பி விம்மி அழுது கொண்டு குற்றம் நிறைந்த பல அசுரர்கள் தமது வீரத்தையும் இழந்து ஓட்ட மெடுத்தனர்; எப்படியெனில் குறைவிலாத அடுக்களையில் பலநாள் களவெடுத்த பூனை ஒருநாள் சூடு வாங்கிக்கொண்டு அப்பக்கமே நினையாது ஓடுதல் போன்று;

இடைந்தனர் ஆகியே அவுணர் யாவரும்
உடைந்தனர் போதலும் உலப்பில் பூதர்கள்
படர்ந்தனர் தெழித்தனர் பையுள் மாலையில்
தொடர்ந்தனர் பற்றினர் தொலைத்தல் மேயினர்.

அசுரர் யாவரும் மெலிவுற்று வாடியவராய். அங்கு நீங்கி தோல்வியுற்று பின்னிட்டோடலும் அளவிறந்த பூதங்கள் பின்னல் கலைத்துச் சென்று கர்ச்சித்துக்கொண்டு துயர்தரும் இருளில் தொடர்ந்தார்கள். விடாது அந்த அசுரரைப் பிடித்தார்கள்; அடித்துக் கொன்றனர். 34

கண்டனன் ஆங்கவை அறத்தைக் காய்ப்பவன்
புண்டிகழ்ந் தனையகட் பூதர் மேற்செலா
விண்டொடர் பெருந்தனு வாங்கி வெவ்வுயிர்
உண்டிடு சரந்தெரீஇ உலப்பின் றேவினன்.

இவற்றை எல்லாம் தருமத்தை அழித்திடும் தருமகோபன் கண்டான். உடனடியாகப் புண்கள் திகழ்ந்த தன்மை போன்ற கண்ணை உடைய பூதங்கள் மேற் சென்று வானினைத் தொடும்படியான வில் ஒன்றை எடுத்து வளைத்து கொடிய உயிரினை உண்டிடக்கூடிய அம்பினைத் தெரிந்தெடுத்து ஓய்வின்றி அதனைச் செலுத்தினன். 35

ஏவிய நோன்கணை யாவும் ஏன்றெழு
தீவிழிப் பூதர்பால் சேறல் இந்திரன
வாவிய ஊர்திகள் வாரி நேமியில்
தூவிய துள்ளியின் தோற்றம் போன்றதே.

தருமகோபன் செலுத்திய வலிமையான அம்புகள் யாவும் அங்கு போர் ஏற்ற நின்ற நெருப்பினை ஒத்துச் சிவந்த கண்ணுடைய பூதங்கள்பால் சேருதல்; இந்திரன் ஏறிச் சென்றிடும் வாகனமாகிய மேகங்கள் பெரும் பாற்கடல் மேல் சென்று சொரிந்திடும் மழைத் துளிகளின் தோற்றம் போன்றது. 36

கைச்சிலை உகைத்திடு கணைகள் யாவையும்
நச்சென விடுத்தலும் நடுங்கிப் பூதர்கள்
அச்சுற மெலிந்தனர் அமரர் கோமகன்
வச்சிரம் எய்திய வரைகள் மானவே.

தருமகோபனுடைய கையில் செலுத்திடுகின்ற அம்புகள் யாவற்றையும் நஞ்சு எனும்படியாக விடுத்தலும், அவைகள் வந்து படலால் பூதங்கள் நடுங்கி அச்சுற்று மெலிவுற்றனர். அவர்களைப் பார்த்தால் தேவேந்திரன் விடுத்த வச்சிராயுதம் தைத்திட நின்ற மலைகள் போலாயினர். 37

வானவர்கள் கோமகன் வயக்களிறி தென்னத்
தானவர்கள் போற்றுதரு மப்பகைஞன் ஊர்ந்த
ஆனையது பூதர்தமை அங்கைகொடு வாரி
ஊனெடுயிர் சிந்திட உடற்றியதை அன்றே.

தேவர்கட்கு எல்லாம் அரசனுன இந்திரனுடைய வீரம் பொருந்திய யானை இது என்று சொல்லும்படியாக; அசுரர்கள் போற்றிடும் தருமகோபன் ஏறி ஊர்ந்து வந்த புண்டரீகம் என்னும் ஆனையானது, பூதங்கள் யாவற்றையும் தனது கைகொண்டு வாரி வாரி ஊனேடு உயிரும் சிதறுண்ண அடித்துக்கொன்றது. 38

கோடதொரு நான்குகொடு குத்தியது தாளின்
ஊடுறமி தித்தவண் உழக்கியது வாலால்
பாடுற எறிந்தது பனைக்கைய துகொண்டே
வீடுறமுன் எற்றியது வீரர்படை தன்னை.

அந்த யானை தனது நான்கு கொம்பரினுலும் பூதங்களைக் குற்றியது. காலின் கீழ் போட்டு உழக்கி மிதித்தது; வாலினுல் பூதங்கள் பாடுற அடித்து வீழ்த்தியது; பெரிய துதிக்கையைக் கொண்டு பூதவீரர் பலர் அழிவுறும்படி தூக்கி அடித்தது. 39

மாறகலும் வெங்கரியிவ் வாறடல்செய் காலை
வீறுகெழு சாரதர்கள் வெற்புமிசை வீசி
ஊறுசெய அங்கதின் உலப்பில்கணை ஓச்சி
நாறுநடு வார்தொகையின் நண்ணினர்கள் வீரர்.

தனது காவல் தொழிலை நீங்கிய பெரிய இந்த யானை பல பூதங்களையும் இப்படிக் கொல்கின்ற நேரத்து, வீறுகொண்ட பூதங்கள் அந்த யானைமேல் பெரு மலைகளைத் தூக்கி வீசி அந்த யானையைக் காயப்படுத்த; அத்துடன் இலக்க வீரரும் அந்த யானை மேல் கொடிய அம்புகளைச் செலுத்தி, நாற்று நடுவார் போன்று அந்த யானையின் உடல் எங்கும் தைத்திட வைத்தார்கள். 40

காயமுழு தொன்றிய கணக்கில்படை யாவும்
மூயதவ ளக்களிறு முற்றுமெழு சோரி
பாயவனை கிற்பது பணிக்குழுவு கவ்வச்
சேயபணி சுற்றமறை திங்கள்படர்ந் தென்ன.

யானையின் உடல் முழுதும் பட்டுருவிய கணக்கற்ற படையாவும் பட்டிடலும்; வெண்மை நிறம் படைத்த அந்த யானையின் மேனியில் நின்றும் முழுதும் இரத்தம் பாய்ந்திட அந்த யானை போரிட்டு நிற்பது எப்படி இருந்ததெனில், ஓர் பூரணச் சந்திரனைப் பல பாம்புகளின் கூட்டம் கவ்வவும், சிவந்த பாம்புகள் சந்திரனைச் சுற்றிக் கொண்டு நிற்பது அச்சந்திரன் செல்வது போன்றது. 41

வெந்திறல்கொள் புண்டரிக வேழமிது தன்மை
நொந்ததெனி னுந்தனது நோன்மையழி யாதாய்
முந்தியிடு சேனையை முருக்கவது நோக்கித்
தந்திநிரை சாரதர் தமைத்தடித லுற்ற.

கொடும் திறலுடைய புண்டரீகம் என்னும் யானை இத்திறமாகப் படைகள் பட்டு நொந்து போனதென்ருலும் தனது வலியாவும் கெடாததாய் முன்னின்ற பூத சேனையை அழித்துக் கொன்றிட, அது நோக்கி அங்கிருந்த அசுரரது யானையின் நிரைகளும் பூதங்களைச் சாடின. 42

கண்டைகெழு தாரிஞெலி கல்லென விரைப்ப
அண்டமுடைந் தென்னநனி ஆர்த்தவுணன் ஊரும்
புண்டரிக வெங்களிறு போர்த்தொழில் இயற்ற
உண்டைகெழு பூதநிரை ஒய்யென உடைந்த.

தருமகோபன் ஏறிவரும் புண்டரீகம் என்னும் யானை; வீர கண்டைகளுடன் அணியப்பெற்ற சதங்கைகளின் மாலைகள் கல்லென்று கணீரிட்டு இசைப்பவும், அண்டமுடைந்தது போன்று அந்த யானை ஆர்ப்பரித்து முழங்கிக்கொண்டு போர்த் தொழிலை அந்த யானை செய்ய, அந்த யானையின் தாக்குதலுக்கு நிற்க முடியாமல் பூதங்கள் திடீரென அணி கெட்டு உடைந்து பின்னிட்டோடின. 43

தண்டமுடை கின்றசெயல் தன்னைவிறல் வெய்யோன்
கண்டனன் அழன்றுதன கார்முகம தொன்று
கொண்டனன் எடுத்தது குனித்தழலின் வாளி
அண்டர்பகை யூர்தியின் அடைச்சிநனி ஆர்த்தான்.

தனது சேனையின் அணி உடைகின்றதை வீரமார்த்தாண்டன் என்னும் வீரவாகு தேவரின் தம்பி பார்த்து, மனம் அழன்று தனது வில் ஒன்றை எடுத்து வளைத்து அதனில் நெருப்பின் தன்மை வாய்ந்த அம்பினைச் செலுத்தி தேவர் பகைவனை தருமகோபனின் யானை புண்டரீகத்தின் நெற்றியில் தைத்திடவைத்து மிகவும் வீர முழக்கம் செய்தான்; 44

ஆர்த்தடரும் வேலையில் அடற்களிறும் அங்கோர்
மூர்த்தமயர் வுற்றது முனிந்தவுணர் கோமான்
பார்த்திறையின் நூறுகணை பாலமிசை ஓச்சத்
தேர்த்துலவு சோரியொடு தேர்மிசை இருந்தான்.

வீரமார்த்தாண்டர் ஆர்த்து அடல் புரியும்படியாக அம்பினைச் செலுத்தி விடலும், அது படலால் அந்தக் கொலைபுரியும் யானையும் அங்கு ஒரு மூர்த்த காலம் அயர்வு கொண்டது. அது கண்டு அசுரர் தலைவன் தருமகோபன் ஓர் இறைப்பொழுதின் முன்னர் நூறு அம்புகளை வீரமார்த்தாண்டரின் நெற்றிக்கு இலக்காக விட்டிடலும், அவை வந்து படுதலாலே பெருகிடும் இரத்தத்துடன் வீரமார்த்தாண்டர் களைத்துத் தேர்மீது இருந்தார். 45

இருந்ததிற லோன்மிசையொ ரெஃகமது வாங்கி
விரைந்துதரு மப்பகை விடுத்திடலும் நோக்கி
மருந்தெனமுன் வந்துதிறல் வாசவன்அவ் வைவேல்
முரிந்துதுணி யாகவொர் முரட்கணை தொடுத்தான்.

தேர்மீது இருந்த வீரன் வீரமார்த்தாண்டன்மீது பின்னரும் தருமகோபன் ஒரு வேலை எடுத்து விடுத்திடலும் அதனைப் பின்னின்று கண்டு கொண்ட வீர புரந்தரன், ஒருவனுக்கு நோயுற்றபோது அதனைத் தடுக்க உதவுகின்ற மருந்தெனும்படி வந்து; அந்தக் கூரிய வேல் முரிந்து துணிபடும்படி மிகு வலியுடைய அம்பினை விடுத்தான். 46

மத்தகைய மன்னதிறல் வாசவன் விரைந்தே
பொத்திரம தொன்றுகொடு போரயில் முருக்கிக்
குத்திரம தொன்றவுணர் கூவிவெருக் கொள்ள
அத்திரமென் மாரிகொட வன்றனை மறைத்தான்.

மதம் பொழியும் யானையை ஒத்த திறலுடைய வீரபுரந்தரன் விரைந்து வந்து ஓர் அம்பினை விடுத்து அந்த போர்வேலை முரித்து; ஐயோ! கொடுமை கொடுமை என்று கதறி அங்குள்ள அசுரர் வெருக்கொண்டிடும்படி அம்பாகிய மழையைச் சொரிந்து தருமகோபனை மறைத்தான். 47

மறைத்தலும் மறப்பகைஞன் வாளிமழை தூவிக்
குறைத்தனன் அளப்பில்கணை ஏனவை குழீஇப்போய்ச்
செறுத்தவன தாகமிசை சென்றுசெருக் கின்றி
விறற்கவச நக்குபு விளிந்துபுடை வீழ்ந்த.

அம்பினால் மறைத்தலும் தருமகோபன் தானும் அம்பினை மழைபோலச் சொரிந்து வீரபுரந்தரன் விடுத்த அம்பின் தொகையில் சிலதைக் குறைத்தான். அப்படிச் சில அம்பு குறைந்தும் மற்றவை கூடிச்சென்று தருமகோபனுடைய வலியுடைய கவசத்தை அழித்து அப்பால் அவன் உடலைத் தைத்திடமுடியாது அந்த அம்புகள் செருக்கு நீங்கிக் கீழே வீழ்ந்தன. 48

வேறு

மீண்ட வேலையின் வெய்ய சூழ்ச்சியோன்
மாண்டு ளானென வாகை வீரன்மேல்
பூண்ட யங்குறு பொன்னந் தண்டமொன்
றீண்ட வீசினன் யாரும் அஞ்சவே.

அம்புகள் அயலில் வீழ்ந்து மீண்ட வேளையின் தருமகோபன் அதுகண்டு பூண் விளங்கிடும் ஒரு பொன்னின் தண்டாயுதத்தை எடுத்து அங்குள்ளார் யாரும் அஞ்சிடும்படி அங்கு சோர்வுற்று தேர்மேல் இருந்த வீரமார்த்தாண்டர் மேல் படுமாறு வீசினன். 49

எழுவின் நீள்கதை இமைப்பில் சென்றவன்
பழுவின் மார்பகம் பட்ட வேலையின்
விழுமநோயுழு விம்மி னனரோ
வழுவை மேலையோன் வயத்தின் மேவவே.

எழுவாயுதம் போன்று நீண்ட கதாயுதம் ஓர் இமைப்பொழுதில் சென்று குறைவிலாத பெருநெஞ்சிற் பட்டகாலையில் பெரும் துயரப்பட்டு வீரமார்த்தாண்டர் விம்மினன். அங்கு யானை மேல் நின்ற தருமகோபன் வெற்றியின்பாலுற.

கருத்தில் நல்லறங் காய்ந்த வன்செயல்
தெரித்து நின்றிடும் திறல்கொள் வாகினன்
உருத்து நோக்கியே உரையும் தன்னுளக்
கருத்தும் பிற்படக் கடிது செல்லுவான்.

அந்நேரம் தனது மனத்தில் நல்ல தரும சிந்தனையை நீக்கிடும் தருமகோபனின் இச்செயலைத் தெரிந்து அங்கு நின்றிட்ட வலியுடைய தோள்கொண்ட வீரவாகுதேவர் உருத்துப் பார்த்து; தனது வாயால் சொல்லிடும் வாக்கின் வேகமும் மனதின் வேகமும் பிற்பட, தருமகோபன் நின்ற இடத்திற்கு விரைவிற் சென்றூர்; 51

நின்னில் ஐயநின் நேர லன்புயந்
தன்னை யாத்துநிற் றருவம் யாமெனப்
பன்னு மானவர் பௌவம் நீத்தோராய்
முன்னு தானவர் முதல்வன் நேர்புக.

அப்படிச் செல்வாரை நோக்கி ஐயா! நீங்கள் நில்லுங்கள் நில்லுங்கள் யாங்கள் போய் அந்தத் தருமகோபனை வென்று தோளினைக் கயிற்றால் கட்டி இங்கு தந்திடுகின்றோம் எனச் சொல்கின்ற வீரர் கூட்டத்தையும் விடுத்துச் சென்று போரிட முயலும் அசுரர் தலைவன் முன் புகுந்தார் வீரவாகுதேவர்.

எதிரி லாமையால் யாரும் அஞ்சவே
அதிரு நோன்கழல் ஆடல் மொய்ம்பனை
மதியில் தானவன் மழைகள் மின்குழுச்
சிதறி யென்னத்தீச் சிந்த நோக்கினான்.

தனக்கு வேறு யாரும் நிகர் இலாமையால் யாரும் அஞ்சிடும்படி வருகின்ற அதிர்கின்ற சிலம்பணிந்த வீரக்கழலுடைய போர்வல்லபம் மிகுந்த வீரவாகு தேவரை; மதியில்லாத தருமகோபன் மேகங்கள் மின்பொறிகள் சிதறினாற் போலும் கண்ணினின்றும் தீப்பொறிகள் சிந்திடப் பார்த்தான். 53

நோக்கி நீகொலோ நோன்மை யோடெனைத்
தாக்கு மாறுவந் தனையை யானுனை
யாக்கை சிந்திய அமைந்து நின்றனன்
காக்க வல்லையேல் காத்திநீ யென்றான்.

பார்த்த தருமகோபன் ஓகோ! நீயா நம்மைத் தாக்கிக் கொல்லுமாறு மிகு வீரத்துடன் வந்துள்ளாய் உன்னை யான் உனது உடலைச் சிந்தும்படி ஆயத்த மாக நின்றேன். உன்னை நீ காக்கவில்லையேல் காத்திடுவாய் என்றான். 54

மொழியும் ஆடல்சேர் மொய்ம்பன் கேட்டிது
விழுமி தாரினும் வெற்றி பெற்றனன்
அழிவ னேநினக் காடல் கொள்வன்யான்
கழியை நீந்துதல் கடலின் பாடதோ.

இப்படி மொழியும் தருமகோபனது வார்த்தையைப் போர்வலி கொண்ட வீரவாகுதேவர் கேட்டு, தருமகோபனே! இது சிறப்புத்தான். ஆரையும் யான் வெற்றி பெற்றுள்ளேன் ஆதலின் உனக்கு அழிந்து தோற்பனோ? கடலைக் கடந்து வருவார் கரையில் உள்ள சதுப்பு நிலத்தைக் கடந்திட முடியாதோ? 55

மற்றுன் வன்மையும் மதர்ப்பும் நின்பெருங்
கொற்ற மானதும் வரத்தின் கொள்கையும்
இற்றை வைகலே ஈறு செய்வன்நீ
கற்ற போரினைக் கடிது செய்கென.

அடே தருமகோபனே! இதுவேளை உனது வன்மையும், மதர்ப்பும், நினது பெருங் கொற்றமான சிறப்புகளையும், வரங்களின் கொள்கைகளையும் இன்றைய நாளிலே நான் முடிவு செய்திடுவேன். நீ கற்றுள்ள போரினை விரைவுடன் செய்திடுவாயாக என்றார் வீரவாகுதேவர். 56

**வேறு**

கானக்களி வரிபம்பிய கமழ்தார்புனை அகலம்
வானக்கிறை தனதூர்திகள் மரபோடுசென் றிசைக்கும்
தீனக்குர லெனநாணொலி திசையெங்கணும் செல்லக்
கூனற்சிலை தனையொல்லையில் தருமப்பகை குனிந்தான்.

**இசையுடன்** களிகொண்டு பாடும் வண்டுகள் மொய்த்திடும் வாசமுடைய மலர் மாலை அணிந்த நெஞ்சுடைய தேவர் அரசனான இந்திரனது வாகனங்களாய மேகங்கள் முறையாக எழுந்து முழங்கிடும் கொடிய இடியின் ஓசைபோன்று நாணோசை திசை எங்கும் சென்றிட; கூனிய தனது வில்லை தருமகோபன் அதிவிரைவாக வளைத்தான். 57

மற்கொண்டிடும் மிடல்மொய்ம்புள மதியில்லவன் ஒருபால்
எற்கொண்டெழு களிற்றின்மிசைச் சிலைவாங்கினன் இருத்தல்
கற்கொண்டதொர் வெள்ளிக்கிரி மிசைகாணிய கணைதூய்
விற்கொண்டொரு பசுங்கார்முகில் மேவுற்றென லாமால்.

மல்யுத்தத்திற்கு ஏற்ற வலிபொருந்திய தோளுடைய நன்மதியில்லாத தருமகோபன் என்பவன்; ஒருபுறத்து பிரகாசமுடைய புண்டரீகம் என்னும் யானையின் மீது வளைத்தவில்லுடன் இருத்தல்; கற்களால் சிறந்து ஓங்கிய ஓர் வெள்ளிமலை மீது யாரும் காணும்படி அம்பான மழைசொரிந்து கொண்டு வில்லைத்தாங்கியவாறு ஓர் பசுமையான கரியமேகம் தங்கி இருப்பது போன்றது எனச் சொல்லலாம். 58

அதுவன்றியும் அவனுந்திய அடுவெங்களி றலர்தண்
கதிரின்குழு முழுதொன்றுபு ககனந்தனில் எழுசெம்
மதியந்தன தொருபங்கையொர் வயவெம்பணி நுகரப்
புதிதொண்பிறை யதுவொன்றிடை புகநின்றது பொருவும்.

அதுவல்லாமலும் அவன் ஏறி நடத்திவந்த கொலைபுரியும் கொடியயானை; அலர்கின்ற குளிர்ந்த நிலாக்கதிர் முழுவதும் ஒருங்கு கூடியவாறு வானில் எழுகின்ற செழுமை மிக்க பூரணசந்திரனின் ஓர் பாதியை ஓர் வீரமுடைய பாம்புபற்றிக் கௌவ; அதற்கிடையாக ஓர்புதிய வெண்மையான மெல்லிய பிறை புகுந்து நிற்பதுபோலும். யானை பாதிச் சந்திரனுக்கும் தருமகோபன் பாம்பிற்கும் வில் அதற்குள் நுழைந்த இளம்பிறைக்கும் உவமை. 59

முந்தேயவன் எடுக்கின்றதொர் முரண்வெஞ்சிலை குனியாக்
கந்தேயென நிமிர்தோளுடைக் கடுஞ்சூழ்ச்சியன் ஒழுகும்
செந்தேனுறழ் குணத்திற்சரம் செலுத்தாத்திறன் மொய்ம்பற்
கந்தேயுமெய் வெளியின்றென அவனைக்கரந் தார்த்தான்

தூண்போல நிமிர்ந்த தோளுடையவனும்; மிகுநுட்பமான கடுஞ் சூழ்ச்சிகளை உடையவனுமான தருமகோபன் முன்னமே கையில் எடுத்துள்ள முரண்கொண்ட வில்லைவளைத்து; செழுமையான தேன் ஒழுகுவதைப்போன்று ஓய்வின்றி அம்பினைத் தொடுத்து செலுத்தி திறமைகொண்ட தோளுடைய வீரவாகுதேவர்க்கு எந்தளவு மாகுதல் உடலில் வெளிக்காணமுடியாதபடி அம்பால் மறைத்தான். 60

கரக்கின்றவன் விடுவாளிகள் கந்தபடை ஞன்மெய்
அரக்குன்றுபட் டயின்மாய்ந்தவை அயல்வீழ்ந்தன கண்டான்
இரக்கின்றவர்க் குதவான்கரந் தேற்காத்திரு வினர்பால்
பரக்கும்பொரு ளுகுத்தன்னதிற் பயன்பெற்றிலன் எனவே.

உண்மைக்கு மாறாக வஞ்சனைபுரிகின்ற தருமகோபன் விடுகின்ற அம்புகள் கந்தப்பெருமானின் படைவீரன் வீரவாகுவின் மேனியில் படுகின்றதும்: இரும்பினாலாய மலைமீது பட்டு அயலே வீழ்வதுபோன்று அந்த அம்புகள் வீழ்வதைக்கண்டான். தருமகோபன் விடுத்த அம்புகள் இயல்பு எதுபோல் என்றால் இரந்து பொருள்கேட்பார்க்கு ஈயாமல் ஒளித்து வைத்திருந்து புகழுக்காகவேண்டி பொருள் தேவையில்லாத செல்வருக்கு மிகுந்த அப்பொருளைக்கொடுத்து அதனால் பிரயோசனமேதுமடையாதவர் போன்று இருந்தது.

இரந்து கேட்கின்ற பொருள்தேவையானவருக்கு பொருளைக் கொடாது ஒளித்து வைத்து; வீணான விளையாட்டுக்கும் புகழுக்கும் அரசபவனிகளுக்கும் கூத்துக்கும் விழாக்களுக்கும் பிறந்தநாட் கொண்டாட்டங்கட்கும் பொருளை அள்ளிக்கொடுத்தது ஏதும் மோர் பயன்பெறாப்போன்று தனது அம்பை வீரவாகுதேவர்மேல் விட்டதால் ஏதும் பிரயோசனப் படாது நின்றுன். 61

அயில்சிந்திட முரண்வெங்கணை அயல்வீழ்தலும் அடுபோர்
முயலுந்திறல் கெழுமொய்ம்பினன் முனிந்தெஃகமொன் றெடுத்துப்
புயலன்னதொர் வடிவத்தவன் பூணுருநெஞ் செறியச்
செயலன்னது கண்டாங்கெதிர் தீவாளிகள் உய்த்தான்.

கூர்மழுங்கிட அந்த வலியான அம்புகள் அயலாக வீழ்தலும், அதுவேளை பகைவரைக் கொல்லும் கொடும்போரை புரியும் திறமுடைய வீரவாகுதேவர் கோபமுற்று ஓர் வேலாயுதத்தை எடுத்து மேகம் போலும் கருநிறமுடைய தருமகோபனின் ஆபரணமணிந்த நெஞ்சின்மீது எறிந்தார். எறிதலும்: அந்த வேல்வருகின்ற செயலைத் தருமகோபன் கண்டு அவ்வேலுக்கு மாருக தீ மயமான அம்புகளைச் செலுத்தினுன். 62

உய்க்குஞ்சுடர் வடிவாளிகள் ஒருங்கேதவ முருக்கி
மைக்கொண்டலை நிகர்மேனியன் மனந்துண்ணென அணுகி
மெய்க்கொண்டதொர் நெடுஞ்சாலிகை விளியும்படி வீட்டிப்
புக்குள்ளுற மூழ்கித்தனி புறம்போந்தது விரைவில்.

தருமகோபன் செலுத்துகின்ற சுடருடைய அம்புகளை ஒருங்கே வரவர அவை கெடுமாறு அவ்வேல் அழித்துச்சென்று இருண்ட மேகத்தை ஒத்த கரிய மேனியை உடைய தருமகோபனின் மனம்திடுக்கிடும்படி அவன் மேனியில் அணிந்த பெரிய கவசம் அழியும்படி நொருக்கி நெஞ்சில் புகுந்து உள்ளே ஊடுருவி விரைவில் புறமாகப்போயது 63

புறம்போதலும் இகல்மந்திரி பொருமிப்புகை உயிர்த்து
நிறம்போகிய செந்நீரொடு நினைக்கின்றி லன்இருப்ப
மறம்போகிய தனிவெங்கரி மகிணன்செய லோரா
அறம்போகிய மனத்தான்றனை அடவுற்றதை யன்றே.

நெஞ்சைத் துளைத்து வெளியே புறமுதுகால் போதலும் அதுவேளை மிகு வன்மையான தருமகோபன் விம்மி புகைதோன்றப் பெருமூச்செறிந்து மார்பினுல் பெருகிடும் இரத்தவெள்ளத்துடன் நினைவற்றவனுகி யானைமீது மயங்கி இருத்தலும்; அதுகாலை அவனது செயலை உணர்ந்துகொண்ட அந்த கொடுமைகொண்ட மதயானை தருமமே நினைவாகின்ற மனமுடைய வீரவாகுதேவரை தான் கொல்லுமாறு எதிர்த்துச் சென்றது. 64

முந்துற்றிடு கரிதிண்டிறல் மொய்ம்பன்னி ரதத்தைத்
தந்தத்தொகை கொடுதாக்குபு சமரத்திடை இட்ட
கந்தொத்ததொ ரெழுவொன்றது கைக்கொண்டவன் வலவன்
சிந்தப்புடைத் ததுகாண்டலுஞ் செந்தீயெனக் கனன்றுன்.

முன்னுக எதிர்ப்பட்டு வந்தயானை; திண்மையான தோளுடைய வீரவாகுதேவரது இரதத்தை தனது நான்கு தந்தங்களாலும் குத்தித்தாக்கியதன்றி அப்போர்க்களத்து விடுபட்டிருந்த ஓர் தூண்போன்ற எழுவாயுதத்தை துதிக்கையால் எடுத்து தேர்ச்சாரதிமேல் அவன் சிதறும்படி அடித்தது. அதைவீரவாகுதேவர் கண்டதும் சிவந்த அக்கினிபோலும் சுரீரெனக் கோபமுற்றுர். 65

வையந்தன தீருதலும் வறிதேயயல் பாயா
மெய்யங்கைய தொன்றாலவன் மேல்வந்திடும் வேழக்
கையங்குறப் பற்றுக்கடங் கலுழுங்கவுண் மோதி
ஒய்யென்றெடுத் தப்பாலையின் உலகம்புக உய்த்தான்.

யானையின்குற்றால் தனதுதேர் முறிந்திடலும் உடனாக வீரவாகுதேவர் மிகு விரைவாக வெறுமனே அயலில் பாய்ந்து; தன்து மேனியின் அழகிய கைஒன்றினால் தன்மேல் எதிர்த்து வந்திடும் யானையின் துதிக்கையானதை செப்பமாக எட்டிப் பற்றிக்கொண்டு; மற்றக்கையால் அந்த யானையின் மதம் ஒழுகிடும் கபோலத்து ஓங்கி அடித்து ஒய்யென அதைத்தூக்கி அப்பாலுள்ள உலகில்போய் விழுமாறு எறிந்தார். 66

எறிந்தானெடுத் ததுகாலையில் இபம்விண்ணிடை யேகிப்
பிறிந்தாகவம் இயற்றெல்லையில் பெயர்காலையின் அமைச்சன்
அறிந்தான்கயம் இழந்தேன்கொலென் றயராவத னோடு
மறிந்தான்புனை கலந்தன்னொடு மணிமாமுடி சிந்த.

வீரவாகுதேவர் எடுத்து எறிந்த நேரத்தில் அந்த யானை வானமீது சென்று திரும்பி போர் நிகழும் இடத்துத் திரும்பி வருங்கால் அப்பொழுது தருமகோபன் மயக்கம் நீங்கி சிறிது உணர்ச்சியுடன் ஐயய்யோ எனது யானையையுமா! இழந்தேன் எனச்சொல்லி மறுபடியும் ஏக்கத்தால் மயங்கி அந்த யானையுடன் தனது மணிமா முடி சிதறுண்ணும்படியும் நகைகள் அழியும்படியும் விழுந்தான். 67

வீழ்கின்றதொர் களிறுற்றவும் வெருவிப்பதை பதைத்து
மாழ்கின்றது புடைபோகிய மதியில்லவன் எழுந்தே
காழ்கொண்டதொர் கதையொன்றுதன் கைக்கொண்டுரத் தெறியத்
தாழ்கொண்டதொர் கரத்திற்கடுத் தலைகொண்டது தறித்தான்.

வீழ்கின்ற அந்தவொரு யானை மிகவும் வெருவி பயந்து பதைபதைத்து சோர்கின்றது: அதன்புடையில் வீழ்ந்த நன்மதியில்லாத மந்திரி எழுந்து மிகவும் பெரியதொரு கதாயுதத்தை எடுத்து தன்கையில் பிடித்து அதனை வீரவாகுதேவர் நெஞ்சின்மீது எறிந்திட அதுபோது வீரவாகுதேவர் நீண்ட தமது உரமான கையில் கொண்டவாளினால் அக்கதாயுதத்தை வெட்டித்தள்ளினர். 68

வலிகொண்டதொர் தனித்தண்டது மடிவாதலும் மற்றோர்
குலிசந்தனை விடவாங்கெதிர் குறுகக்கரம் பற்றிப்
புலிகண்டதொர் கலைமானெதிர் புக்காலென அவுணர்
தலைவன் றனை அடல்மொய்ம்பினன் தடமார்பிடைப் புடைத்தான்

வலியுடைய அந்த தனியான தண்டு உடைந்தபோதலும் தருமகோபன் அது கண்டு மீண்டும் ஓர் குலிசாயுதத்தை வீரவாகுதேவர் மேல் விடுதலும் அதுவர; அதனை கையால் பிடித்து எடுத்துக்கொண்டு; புலிதான் கண்டகலைமானின் எதிர்புகுவது போன்று சென்று; பகைமையை அழித்திடும் தோளுடைய வீரவாகுதேவர் அந்த குலிசாயுதத்தால் அசுரர்தலைவனை தருமகோபனின் அகன்றமார்பில் அடித்தார். 69

மூளாவுருத் தறைகின் றுழி முதலற்றிடு தருப்போல்
வாளாபுவி மிசைவீழ்தலும் வயமிக்கவன் ஒருகால்
தாளாலுதைத் தனன் அத்துணை தருமப்பகை வீழ்ந்தான்
கேளாகிய அவுணப்படை கெட்டோடிய தன்றே.

மிகு கோபத்துடன் தருமகோபனை வீரவாகுதேவர் அடித்த நேரத்தில் அது கால் அடியற்று வீழும் ஓர் மரத்தைபோல் அறிவிழந்து பூமியில் தருமகோபன் வீழ்தலும்; வீரமிக்க வீரவாகுதேவர் தமது ஒரு பாதத்தால் ஒருகால் தருமகோபனை உதைத்தார். அந்நிலையில் தருமகோபன் வீழ்ந்தான். அது கண்டு தருமகோபன் துணையாய் வந்த அசுரப்படை நிலைகெட்டோடியது 70

வேறு

விழுந்தயர் புண்டரீக வெங்கரி உயிர்த்து மெல்ல
எழுந்தது தரும கோபன் இறந்தபா டதனை நோக்கி
அழுந்திடும் இன்னல் வேலைக் ககன்கரை கிடைத்தா லென்னத்
தொழுந்திறல் வீரவாகுத் தலைவனை நேர்ந்து சொல்லும்.

முன்னர் வீழ்ந்து சோர்ந்த புண்டரீகம் என்னும் யானை மயக்கம் தெளிந்து மெல்ல எழுந்து தருமகோபன் வீழ்ந்து இறந்து பாடாய்க்கிடப்பதை நோக்கி; தான் இதுகாறும் அழுந்தித்துயருற்ற அடிமைத்துயரமாகும் கடலுக்கு ஓர் கரை கிடைத்தது போன்று; யாவராலும் தொழும்படியான வீரமுடைய வீரவாகுதேவராய எமது தலைவனை அடைந்து அவரைநோக்கி இதனை பணிவுடன் சொல்லும். 71

செய்யலை வெகுளி எந்தாய் சிறியனை அருளிக் கேண்மோ
பொய்யென நினையல் வாழி புண்டரீ கப்பேர் உள்ளேன்
வையகம் போற்றுஞ் சீரேன் மாதிரங் காவல் கொண்டேன்
கையனித் தரும கோபன் கடுஞ்சிறைப் பட்டேன் பன்னாள்.

எந்தைபிரானே! என்மீது கோபம் கொள்ளாதீர். சிறியேன் சொல்வதை மிகு தயவுடன் கேட்டருளும். நான் சொல்வதை பொய் என்று நினைத்தல் வேண்டாம் வாழ்வீராக! நான் புண்டரீகம் என்னும் பேருடையேன். இப்பூமியைத் தாங்கிடும் சீர் உடையேன் திக்குகளை காவல் புரியும் தொண்டுபூண்டேன். அவ்வண்ணமான பேறுடையேன் இந்த வஞ்சகனாய தருமகோபனிடத்து அகப்பட்டு கடுமையான சிறை வாசத்தை அனுபவித்தேன் பல நாளாக. 72

வன்றளை மூழ்கும் தீயேன் மதியிலா அமைச்சற் போற்றி
இன்றுகா றூர்தியானேன் ஏவின பலவும் செய்தேன்
ஒன்றுநான் மறுத்த துண்டேல் உயிர்குடித் தூனும் வல்லே
தின்றிடு மென்றே அஞ்சித் திரிந்தனன் செயல்வே றில்லேன்.

கொடிய இவனிடத்து சிறையில் மூழ்கிட்ட தீவினையாளனான யான் மதி இலாத கெட்ட இந்த மந்திரி தருமகோபனின் ஏவலாளனாகி இன்றுவரையும் அவனது வாகன மானேன். அவன் ஏவின பலவற்றையும் நான் செய்தேன். அப்படி அவன் ஏவியதை நான் மறுத்ததுண்டாகில் அவன் எனது உயிரைக் குடித்து ஊனையும் தின்றிடும் என்ற பயத்தால் திரிந்தேன். எனக்கு வேறு ஒரு செயலும் இலாது போனேன். 73

எட்டுள திசையில் வைகும் அரக்கர்தன் இகழ்ந்தா ரென்று
மட்டறு வெகுளி வீங்கி மற்றெனை ஊர்ந்து தொன்னாள்
கிட்டினன் அவரை யெல்லாங் கிளையொடு முடித்தோன் தன்னை
அட்டனை நீயே யல்லால் அவனையார் அடுதற் பாலார்.

எட்டுத்திக்கிலும் உள்ள இராட்சதர்கள் தன்னை இகழ்ந்தார்கள் என்றமைக்காக; இந்த தருமகோபன் மட்டில்லாத கோபங் கொண்டு என்மேல் சென்று முன்னாள் அந்த இராட்சதரை கிட்டி அவரையெல்லாம் கிளையோடு கொன்ற பெரும் பொல்லாத இவனை நீர்தான் கொன்றீர் அல்லாது வேறுயார் அவனை வென்றிட முடியும். 74

புந்தியில் அறத்தைக் காயும் புரைநெறி அமைச்சன் தன்னை
வந்துநீ அடுதலாலே வானவர் கவலை தீர்ந்தார்
உய்ந்தனன் சிறந்தேன் எற்கும் ஊதியம் இதன்மேல் உண்டோ
முந்துறு தளையின் நீங்கி முத்திபெற் றுரை ஒத்தேன்.

மனதிலே தருமம் என்ற எண்ணம் வந்தாலே அதனையே உடன் நீக்கிடும் தீய நடத்தையுடைய மந்திரி தருமகோபனை தேவரீர் வந்து அடுதலாலே தேவர்கள் கவலை தீர்ந்தார். அதுவன்றியானும் உயர்ந்து சிறந்தேன். எனக்கும் இப்பிறவியில் கிடைத்திடும் செல்வம் இதன்மேல் வேறுண்டோ? இல்லையே? யான் முன்னர் பிறவிதோறும் தொடர்பாக வந்த வினையான பந்தங்களின் நீங்கி முத்தி பெற்றாரை ஒத்தேன். 75

தீதுகொள் பவத்தின் நீரால் அவுணர்தஞ் சிறையிற் புக்கேன்
மாதவஞ் செய்தேன் கொல்லோ மற்றுனை எதிரப் பெற்றேன்
ஆதலின் உய்ந்தேன் என்றன் ஆசையை அளிக்கு மாற்றாற்
போதுவன் தமியன் என்று தொழுதது புண்டரீகம்.

தீமையை விளைவிக்கும் பாவ நிலையால் அசுரர்களுடைய சிறையில் அகப்பட்டேன. ஏதோ நானும் பெரும் தவஞ்செய்தேன் போலும் ஆதலின் உம்மை தரிசிக்கப்பெற்றேன. ஆதலால் யான் உய்ந்தேன். இன்னினி எனக்கு உரியதிசையை காவல் புரியுமாறு போவேன் எனக்கூறி புண்டரீகம் என்னும் யானை வீரவாகுதேவரைத் தொழுதது. 76

புண்டரீ கத்தின் வாய்மை பொருக்கென வினவு வீரன்
அண்டரும் உவகை பொங்க அகலுதி இருக்கைக் கென்ன
விண்டொடர் நெறியிற் சென்றுங் கவுணர்க்கு வெருவ லின்றிப்
பண்டமர் திசையின் நண்ணிப் பரிவற வைகிற் றன்றே.

புண்டரீகம் என்னும் இந்த யானையின் உண்மை நிலையான வார்த்தையை விறுக்கெனக் கேட்ட வீரவாகுதேவர். அளவு கடந்த பெரு மகிழ்வு பெருகிட; யானையை நோக்கி புண்டரீகமே உவது இருப்பிடத்திற்கு நீ செல்வாயாக என்று விடைகொடுத்தலும் அந்த யானையும் அதுவேளை அவரது வார்த்தையைக் கேட்டு வான நெறியாகச் சென்று அங்கு அந்த அசுரர்க்கும் இனி அச்சமிலாது தான் முன்னிருந்த திக்கை அடைந்து துயரம் அகன்றிட வீற்றிருந்து. 77

மாதிரங் காவல் பூண்ட மதக்களிற் றரசு செல்ல
ஆதியில் அறத்தைக் காயும் அழிதகன் இறுதி நோக்கிப்
பூதர்கள் ஆர்த்து வீரன் புயவலி புகழ்த லுற்றார்
தூதுவர் அதுகண் டோடிச் சூரனைத் தொழுது சொல்வார்.

திக்கினைக் காவல் கொண்ட மதயானைகளுக்கும் அரசு சென்றிட; ஆதியாய காலம் தொட்டே தருமத்தை வெறுத்து நீக்கிய பாவி தருமகோபனின் முடிவைக் கண்டு பூதங்கள்யாவும் ஆர்த்து மகிழ்ந்து வீரவாகுதேவரின் தோள் வலியினை புகழ்ந்து கொண்டாடினார்கள். அச்செயலை அசுர தூதுவர் கண்டு ஓடிப்போய் சூரனைத் தொழுது சொல்வார்கள் 78

தண்டக முதல்வ கேண்மோ தானையும் தானு மேகி
மண்டமர் புரிந்து வீர வாகுவால் அமைச்சன் மாய்ந்தான்
உண்டையும் அழித லுற்ற உங்குவன் ஊர்ந்து சென்ற
புண்டரீ கப்பேர் பெற்ற தந்தியும் போய தென்றார்.

யாவர்க்கும் மேவான அரசியலைத் செலுத்திடும் முதல்வா! இதனைக் கேட்பீராக சேனையும் தானுமாக எமது மந்திரிதருமகோபன் சென்று பெரும் போரினைப் புரிந்து அந்தத் தூதுவன் வீரவாகுவால் மந்திரி இறந்து போனான். எமது சேனையும் அழிந்து போயின. அங்கு தருமகோபன் ஏறிச்சென்ற புண்டரீகம் என்னும் பெயர் பெற்ற யானையும் இறந்து போயது என்றார்கள் 79

வேறு

பழுது டைத்திறன் மந்திரி பட்டசொல் வினவி
முழுது சுற்றிய இன்னலம் புணரியின் மூழ்கி
அழுது யிர்த்துமெய் யுயிர்பதை பதைத்திட அங்கண்
எழுது சித்திரப் பாவைபோல் உணர்வுபோய் இருந்தான்.

பழுதான செயலில் வீரமுடைய மந்திரிதருமகோபன் இறந்து போனான் என்ற சொல்லைக் கேட்டபோது தன்னை முழுவதும் வந்து சுற்றி அலைக்கின்ற துன்பமாகும் கடலில் அமிழ்ந்தி அழுது பெருமூச்செறிந்து உடலின் உயிர்பதை பதைத்திட அவ்விடத்து எழுதப்பட்ட ஓர் சித்திரப்பாவை போன்று உணர்வழிந்து சோகத்துடன் இருந்தான் சூரபன்மன். 80

தருமகோபன் வதைப்படலம் முற்றிற்று

ஆகதிருவிருத்தம் 1718

---

# பானுகோபன் வதைப்படலம்

எள்ளல் செய்தெனைப் பற்றியே சிறையகத் திட்ட
கள்வன் இப்பகல் முடிந்திடும் அன்னது காண்பான்
பொள்ளெ னப்படர் வேன்எனப் புந்திகொண் டவன்போல்
ஒள்ள ழற்கதிர் வீசியே இரவிவந் துதித்தான்.

முன்னர் ஓர் நாள் என்னை இகழ்ந்து ஓடிவந்து பிடித்துச் சென்று சிறையிடத்து வைத்த கள்வனை என்பகைவன் பானுகோபன இன்று பகல் இறப்பான். அதை நான் காண்பேன். ஆதலால் விரைவுடன் நான் செல்லல் வேண்டுமென நினைந்து கொண்டுள்ளான் போன்று ஒளிவீசிடும் வெப்பமான கிரணங்களை வீசிக்கொண்டு சூரியதேவன் கிழக்குத்திசையில் வந்து உதித்தான். 1

சுருதி நீங்கிய அவுணர்கோன் இத்திறந் துயரம்
பெரிதும் எய்தியே இருந்துழிக் கண்டனர் பெயர்ந்து
குருதி நோக்குடை ஒற்றரில் ஒருசிலர் குறுகிப்
பரிதி தன்பகை அடிபணிந் தினையன பகர்வார்.

தனது மேம்பாடான நிலைகள்யாவும் நீங்கி சூரபன்மன் இத்திறமான துயரம் பெரிதும் அடைந்து இருந்த நேரத்து அதைக் காணுற்ற இரத்தக் கண்ணுடைய தூதுவரில் சிலர் ஓடிச்சென்று சூரியன் பகைவனை பானுகோபனை அடைந்து அவன்காலில் பணிந்து இந்த வார்த்தைகளைச் சொல்வார்கள். 2

முன்ன மாயமாப் படைக்கலந் தூண்டியே மொய்ம்பு
பன்னி ரண்டுளான் தூதனைப் படையொடும் படுத்துத்
தொன்னெ டுங்கடல் இட்டனை இட்டதைச் சுரர்கள்
அன்ன காலையே விளம்பினர் அறுமுகத் தவற்கே.

அரசகுமாரனே! முன்னம் நீர் மாயமாகும் பெரும் படையினைச் செலுத்தி அதனால் பன்னிரண்டு தோள்களை உடைய முருகப்பிரான் தூதுவனை அவனைச் சூழ்ந்த பூதப்படையுடன் கொன்று மிக முதியதாகும் நீண்ட கடலிடத்துப் போட்டீர். அவ்வாறு நீர் அவர்களை இட்டதன்மையை தேவர்கள் அக்காலையில் சென்று ஆறுமுகமுடைய பெருமானிடம் எடுத்துக் கூறினர்கள், 3

வெங்கண் மால்கரிக் கிளையவன் ஆங்கது வினவிச்
செங்கை வேலினை ஆயிடை இருந்தனன் செலுத்த
அங்க தொல்லையின் மூவிரு புணரிகள் அகன்று
பொங்கு தூயநீர் அளக்கரின் நடுவுபுக் கதுவே.

கொடுமையான கண்ணுடைய பெருயானையின் முகமுடைய விநாயகக் கடவுளுக்கு இளையோனை முருகக்கடவுள் அதனைக்கேட்டு; தாம் இருந்த இடத்திருந்தே செங்கையில் தரித்திருக்கும் வேலினை அங்கு செலுத்தியிடலும்; அந்தவேல் மிகு விரைவாக உவர்க்கடல் பாற்கடல் தயிர்க்கடல் நெய்க்கடல் கருப்பஞ்சாற்றுக்கடல் தேன்கடல் ஆகிய ஆறையும் அகன்று அப்பாலுள பொங்கிடும் தூய நீர்க்கடலுள் நடுவே சென்று புகுந்தது. 4

புக்க வேலையின் மாயமாப் பெரும்படை புறந்தந்
தக்க ணந்தொலை வெய்திய தயர்வுயிர்த் தறிந்து
தொக்க பாரிடர் யாவரும் வீரர்தந் தொகையும்
மிக்க திண்டிறல் வாகுவும் எழுந்திவண் மீண்டார்.

வேல்படை புகுந்தகாலையில் மாயத்தன்மை கொண்ட உமது பெரும்படை கண்டு அஞ்சி புறமிட்டு அக்கணமே ஓடி அழிந்து போயது. அதுபோது அப்படையால் மங்கியயாவரும் அதுநீங்கி நல்உணர்வுவர உணர்ந்துகொண்டு தொகுதியாய பூதங்களும்மற்றும் வீரரின் தொகையும் மிகு திண்மைபான வலியுடைய வீரவாகுவும் எழுந்து எமதுநகரில் மீண்டு கொண்டார்; 5

ஆண்டவ் வெல்லவந் திறுத்திடும் வேற்படை அருளி
மீண்டு கந்தவேள் இருந்துழிப் போந்தது விரைவால்
ஈண்டிம் மாநகர் சுற்றியே செறுநர்கள் இகலின்
மூண்டு போர்செய்வான் புரிசையுட் புகுந்தனர் முரணால்.

ஆண்டு தூய நீர் கடலில் வந்து மாயப்படையை அழித்து அவர்கட்கு அருள் புரிந்த வேற்படை முருகப்பெருமான் இருந்த பாசறை போயது. அதிவிரைவாக எழுந்து கொண்ட வீரர்கள் எம் நகரிடை வந்து சுற்றிவளைத்து வலிமையுடன் போரிட்டுக்கொள்ளும் பொருட்டு எமது நகரின்மதிலை அழித்து வலியால் உட் புகுந்து கொண்டார்கள். 6

அரண முற்றுளார் இந்நகர் அலைத்தலும் அவற்றைத்
தரணி காவலன் வினவியே தன்னயல் நின்ற
இரணி யன்றனைக் கனல்முகத் தண்ணலை ஏனை
முரணில் மக்களை அமைச்சனை விடுத்தனன் முறையால்.

நகரினுள் பிரவேசித்தார் எமது இந் நகரை அலைத்தலும் அவற்றை; பூமியை காத்து அரசாளும் சூரபன்மன்மன் கேட்டு; தனது அயலில் நின்ற இரணியாசூரனை அக்கினி முகாசுரனை ஏனைய வலியில் சிறந்த மூவாயிரம் பிள்ளைகளை மந்திரி தரும கோபனை ஒருவர்பின் ஒருவராகப் போரிடும்படி விடுத்தான். 7

ஆன காலையில் வந்துவந் தடுசமர் ஆற்றி
மான வேற்படைப் பண்ணவன் தூதனல் மற்றை
ஏனை யோர்களால் முத்திற வீரர்கள் இறந்தார்
மீன மாய்க்கடல் புகுந்தனன் இரணியன் வெருவி.

அவ்வாறான காலங்களில் வந்து வந்து இவர்கள் யாவரும் இம்முறையாகப் கொலையுடைய போரினைச் செய்து; மானமுடைய வேற்படையை திருக்கரத் தேந் திய பெருமான் தூதுவனாலும் மற்றைய ஏனைய வீரராலும் அக்கினிமுகன் மூவாயி ரர் தருமகோபன் என்னும் முத்திறத்து வீரர்களும் இறந்துள்ளார்கள். ஆனால் இர ணியன் மட்டும் போரிடமுடியாது அஞ்சி கடலிடையில் சென்று மீனாகி ஒளித்துக் கொண்டான். 8

மன்னர் மன்னவன் இவையெலாம் வினவியே மனதில்
உன்ன ருந்துயர் வேலைபுக் காற்றலா துழந்தான்
இந்ந கர்ப்படை யாவையும் வறந்தன இன்னும்
துன்ன லார்இவண் நின்றனர் என்றிவை சொற்றார்.

அரசர்க்கரசன் சூரபன்மன் இவையாவற்றையும் கேள்வியுற்று மனதில் நினைக் கவும் முடியாத அத்தகைய துயரம் கொண்டு அத்துன்பமான கடலில் மூழ்கி அதைச் சகிக்க முடியாது தவிக்கின்றான். இந்த நகரில் இருந்தபடைகள் யாவும் அழிந்து ஒழிந்தன. இன்னமுமே எம்பகைவர் போய்விடாது நின்றனர் என அத்தூதுவர் சொன்னார்கள். 9

சொற்ற வாசம் வினவலுஞ் சூரியன் பகைஞன்
இற்ற வேகொலாம் நம்பெரும் வாழ்க்கையென் றிரங்கிச்
செற்ற மோடுதுன் பெதிரெதிர் மலைந்திடச் செங்கேழ்ப்
பொற்றை யன்னதன் இருக்கையை ஒருவினன் போந்தான்.

தூதுவர் சொல்லிய வாசகங்களை சூரியன் பகைவன் பானுகோபன் கேட்ட லும் ஐயய்யோ! எம்முடைய வாழ்க்கை எல்லாம் ஒழிந்தவோ! என இரங்கி அழுது ஆத்திரத்துடன் துன்பமும் எதிரெதிர் உள்ளத்தில் மலைந்திட செம்மையாகிச் சிவந்த தாமரை மலரினலாய மலைபோன்று விளங்கிய தனது அரண்மனையை விடுத்து நீங்கிச்சென்றான். 10

போந்து கோநகர் அணுகியே துன்பொடு புணர்ந்த
வேந்தன் மாமலர் அடிகளை உச்சியின் மிலைச்சி
ஆந்த ரங்கமாம் அளியொடு முந்துநின் றவுணர்
ஏந்தல் இம்மொழி கேண்மியா நன்றென இசைப்பான்.

சென்று தனது தந்தையின் அரண்மனையை அடைந்து அங்கு துன்பத்துடன் உறவு பூண்ட சூரபன்மனது பெருமைமிக்க மலரடிகளில் தாழ்ந்து தனது உச்சிபடும்படி வணங்கி முன்னின்று மிகவும் அந்தரங்கமான அன்புடன் அவனை நோக்கி அசுரர்க்கு அரசே! இதனை நன்றாக நீர் கேட்டிடுவீராக என சொல்கின்றான் பானுகோபன். 11

மாயை தந்தசொல் படையினால் செறுநரை மயக்கித்
தூய நீர்க்கடல் இட்டனன் சுரரது புகல
ஆய காலையில் வேல்விடுத் தவர்தமை மீட்ட
சேயை வெல்வது கனவினும் இல்லையால் தெரியின்.

மாயவள் எனக்குத் தந்த மிகு பழமையாகும் சத்திவாய்ந்த படையால் எமது பகைவரை யான் மயக்கி அவர்களை எல்லாம் தூயதான சமுத்திரத்து போட்டேன். தேவர்கள் அதனைக்கண்டு சென்று சொல்லிய அக்காலையில்தானே வேற்படையை விடுத்து அவர்கள் யாரையும் மீட்ட குழந்தையை நாம் வெல்வது கனவிலும் முடியாது. இதன் தாற்பரியத்தை நன்கு நாம் உணர்வோமேல் என்றான். 12

தெரிந்த மற்றுனக் குரைப்பதென் முற்பகற் செவ்வேல்
பொருந்து கைத்தலத் தாறுமா முகனொடு பொருது
வருந்தி வன்படை ஆற்றலும் இழந்தனை வறிதாய்
இரிந்து மற்றிவண் வருதலால் உய்ந்தனை எந்தாய்

எல்லாம் தெரிந்த உமக்கு வேறு நான் என் இனிச்சொல்வேன். இதற்கு முந்திய நாள் நீர் செவ்வியவேலை கைத்தலத்து பொருந்திய குழந்தைவடிவாகும் ஆறுமுக ஈசனுடன் போரிட்டு; வருத்தமடைந்து உன்வலியான பெரும் படைகளையும் உனது ஆற்றலையும் இழந்தாய். அம்மட்டன்றி எல்லாம் இழந்து வெறிவிலியாகி ஓடிவந்தமையால் ஒருவாறு உயிர்தப்பினாய். என்தந்தையோ இதை நன்குஅறி 13

ஏற்ற தோர்சிலை இழந்தனை மானமும் இன்றித்
தோற்று வந்தனை தொல்வரத் தியற்கையும் தொலைந்தாய்
சீற்ற முற்றிலன் முருகவேள் அவன்சினஞ் செய்யின்
ஆற்று மோவெலா அண்டமும் புவனங்கள் அனைத்தும்.

மிகவும் உமக்கு பொருத்தமான வில்லை இழந்தாய். மானமும் இலாது தோல்வியுற்று வந்தாய். உனது மிகுமுந்திய வரங்களின் இயல்பும் தொலைந்தாய். இந்நிலையிலும் அந்த முருகக்கடவுள் கோபிக்கவில்லை அதை உணர். அப்படி அவர் சினம் கொண்டால் அதனை இந்த எல்லா அண்டமும் புவனங்களும் தாங்கிடுமாமோ. 14

ஆர ணன்தனை உலகொடும் உண்டுமுன் னளித்த
கார ணன்தனி ஆழியைக் களத்திடை அணிந்த
தார கன்தனை நெடியமால் வரையொடு தடிந்த
வீர வீரனை யாவரே வன்மையால் வெல்வார்.

பிரமதேவனை இந்த உலகுடன் ஒருங்கே உண்டுபின்னர் இவ்வுலகு அனைத்தையும் காத்திருக்கின்ற கடவுளாகும் நாராயணரின் தனியான வலியுடைய சக்கரப்படையை தன் கழுத்தின்மீது மாலையாக அணிந்துள்ள தாரகாசூரனை; அவன் தீங்கு புரிய உதவிய நெடிய கிரவுஞ்ச மலையுடன் அழித்த வீரவீரனை முருகனை யார்தான் இவ்வுலகில் தனது வலியால் வெல்பவர். 15

புல்லி தாகிய விலங்கினைப் படுப்பவர் புதலுண்
வல்லி யந்தனக் குண்டியாய் மாய்ந்திடுங் கதைபோல்
எல்லை யில்பகல் அமரரை அலைத்திடும் யாமும்
தொல்லை நாள்வலி சிந்தியே குமரனல் தொலைந்தோம்.

மிகவும் அற்ப பிராணி யாகிய மிருகத்தைக் கொன்று வருபவர் கடைசியில் ஓர் நாள் பற்றைக்குள் மறைந்திருக்கும் புலியால் கொல்லப்பட்டு மாய்ந்தார் என்று சொல்கின்ற ஒரு கதைபோல்; எல்லையில்லாத நாட்கள்வரை தேவரை அலைத்து துன்புறுத்திய நாமும் எமது முன்னையநாளின் வலியெலாம் நீங்கிடப்பெற்று குமரனல் அழிவுறுகின்றோம். 16

கோட லுஞ்சுனைக் குவளையுங் குளவியுங் குரவும்
ஏட லர்ந்திடு நீபமும் புனைந்திடும் இளையோன்
பாட லந்திறல் உரைப்பதென் ஆங்கவன் பணித்த
ஆட லம்புயத் தண்ணலை வெல்வதும் அரிதால்.

வெட்சி மலரையும் நீர்ப்பொய்கையில் மலர்ந்த குவளைப் பூவையும் செங்காந்தள் பூவையும் குராமலரையும் இதழ்விரிந்து தேன்சொரியும் கடப்பமாலையையும் அணிந்திருக்கும் இளமைகுன்றுத தெய்வமாகும் முருகப்பெருமானின் பெருமையாகும் திறத்தை நாம் என்னென்றுரைப்பது. அவன் எம்முடன் போரிடுமாறு பணிந்த வீரவாகு தேவரை வெல்வதும் எம்மால் முடியாதகாரியம். 17

நெடிது பற்பகல் செல்லினும் நிரம்புவ தொன்றை
இடைவி டாமலே முயன்றுபெற் றிடுகின்ற தியற்கை
உடல்வ ருந்தியும் தங்களால் முடிவுறு ஒன்றை
முடியு மீதெனக் கொள்வது கயவர்தம் முறையே.

மிகவும் நீண்டகாலம் சென்றாலும் முடியக்கூடிய ஓர் காரியத்தை இடைவிடாது முயன்று அதை வெற்றியுடன் முடித்துக்கொள்வதுதான் நல்ல இயற்கையாகும். அஃதிலாது தமது உடல் வருந்தினலும் தங்களால் செய்து முடிக்கமுடியாத தொன்றை இது முடிக்கலாம் எனச் செய்துகொள்வது அது வஞ்சனையுடைய கபடரின் செயலன்றி வேறு என்னவாகும். 18

ஆற்றல் மைந்தரை இழந்தனை நால்வகை அணிகத்
தேற்றம் அற்றனை என்னுடன் ஒருவன்நீ இருந்தாய்
மேற்றி கழ்ந்தநின் குலத்தினை வேரொடு வீட்டக்
கூற்றம் வந்ததும் உணர்கிலை இகலைமேற் கொண்டாய்.

மிகு ஆற்றலுடைய உன் மக்களை இழந்தாய்; நால்வகையாகும் உனது சேனையையும் தோற்று அதன் எண்ணிக்கையும் குறைவுபட்டாய். என்னுடன் ஒருவனுகவே நீ தனித்து நிற்கின்றாய். மேலாக இது காலும் சிறந்திருந்த உனது குலத்தை வேரோடும் அழித்திட இயமன் வந்திட்டான். உனக்குநேர்ந்து வரும் இயல்பு பற்றியும் அதனைத் தெளிந்து கொள்கின்றாய்இல்லை. இன்னமுமே பகைமையைத் தான் மேற்கொண்டுள்ளாயே. 19

வெஞ்ச மஞ்செய வல்லவர் கிடைத்திடின் மிகவும்
நெஞ்ச கந்தளிர்ப் பெய்துவன் நேரலர் சமருக்
கஞ்சி னேன்என்று கருதலை அரசநீ இன்னும்
உஞ்சு வைகுதி யோவெனும் ஆசையால் உரைத்தேன்.

கொடும்போர் புரிய வல்லமை உடையோர் கிடைத்திட்டால் மிகவும் எனது நெஞ்சு குளிர்ந்திடுவேன். இது எனது இயல்பு. ஆதலினல் பகைவருடைய போருக்கு நான் பயப்பட்டு இப்படிச் செய்கின்றேன் என எண்ணுதே. அரசே நீ இன்னமும் உய்ந்து வாழ்வாயோ! வாழவேண்டு மென்கின்ற அந்த ஒரு ஆசையால் இத் தன்மையான உண்மை நிலையை உனக்கு எடுத்துக் கூறினேன் என்றான் பானுகோபன். 20

உறுதி ஒன்றினி மொழிகுவன் பொன்னகர் உள்ளார்
சிறைவி டுக்குதி நம்மிடைச் செற்றம தகற்றி
அறுமு கத்தவன் வந்துழி மீண்டிடும் அதற்பின்
இறுதி யில்பகல் நிலேக்குநின் பெருவளம் என்ருன்.

தந்தையே உமக்கு உறுதியாய ஒன்றைச் சொல்வேன். அஃது தான் நீ பொன்னின் மயமான தேவ உலகில் உள்ளாரின் சிறையை விடுப்பாயாக; அவ்வளவும் செய்து விட்டால் நம்மிடத்துப் பகைமையான கோபத்தை நீக்கிவிட்டு, ஆறுமுகமுடைய பக வான் தான் வந்த வழியே மீண்டு சென்றிடுவார். அதன் பின்னுக நீ முடிவில்லாத பல நாட்களாக வாழ்ந்திடுவாய். உன் பெருவளங்களெல்லாம் நிலேத்திருக்கும் எனக் கூறினுன் பானுகோபன். 21

வெம்பு தொல்கதிர் வெகுண்டவன் உரைத்தசொல் வினவித்
தும்பை யந்தொடை மிலேச்சிய மணிமுடி துளக்கி
மொய்ம்பும் ஆகமுங் குலுங்கிட முறுவலித் துயிர்த்து
நம்பி மந்திரச் சூழ்ச்சிநன் ருலென நவில்வான்.

யாவரையும் வெப்பமுறவைக்கும் முன்னேப் பழம் பொருளான சூரியனே வெகுண்டு சிறையிட்ட வீரன் பானுகோபன் உரைத்த வாக்கியத்தை சூரபன்மன் கேட்டு; தும்பை மலரின் அழகிய மாலேசூடிய இரத்தின முடியணிந்த தலேயை அசைத்து தோளும் உடலும் குலுங்கிட நன்கு சிரித்து பெருமூச்சுவிட்டு; மகனேநோக்கி தம்பி உனது மந்திராலோசனேயின் நுட்பம் மிகவும் நன்ருயிருக்கின்றது என்று சொல்லிப் பின்னரும் சொல்கின்ருன். 22

### வேறு

என்னிவை உரைத்தாய் மைந்த இன்றியான் எளிய ஞகிப்
பொன்னுல குள்ள தேவர் புலம்புகொள் சிறையை நீக்கின்
மன்னவர் மன்னன் என்றே யாரெனே மதிக்கற் பாலார்
அன்னதும் அன்றி நீங்கா வசையுமொன் றடையு மாதோ.

மகனே! என்ன வார்த்தையை நீ இப்போது சொல்கின்ருய். இன்று நான் மிக வும் எளியேனுகிப் பொன்னுலகில் இருந்து புலம்புகின்ற தேவர்களுடைய சிறையை நீக்கினுல் அரசர்க்கரசனுன வீரன் யான் என்று யார் என்னே மதிப்பார்கள். இது வல்லாமலும் எக்காலமும் நீங்கிடாத வசையும் ஒன்று என்னே வந்து சேர்ந்து கொள்ளுமே. 23

கூனெடு வெதிரே பங்கு குருடுபே ரூமை யானேர்
ஊனம தடைந்த புன்மை யாக்கையோ டொழியும் அம்மா
மானம தழிந்து தொல்லே வலியிழந் துலகில் வைகும்
ஏனேயர் வசையின் மாற்றம் எழுமையும் அகல்வ துண்டோ.

மகனே கூனும் செவிடும் முடமும் குருடும் பேருமையும் ஆகிய அங்கக் குறை பாடுகள் உடைய ஒருவனுக்கு அவைகள் இகழ்ச்சியாக அப்பிறவி ஒன்றில் தான் இருந்திடும். அந்தக் குறைபாடுடைய உடம்பும் அழிந்திட அந்த உடற் குறையால் வந்த வசையும் அழியும். ஆனுல் இப்பிறவியில் மானமிழந்து முதுமையான வலி யிழந்து இவ்வுலகில் வாழ்வாருடைய வசையின் வார்த்தையானது ஏழுபிறவியிலும் நீங்குவதொன்ருே? இல்லேயே. உடலில் ஊனப்பட்டவசை உடம்புடன் அகலும் ஆனுல் மானமிழந்ததால் வரக்கூடிய வசை ஏழுபிறப்பிற்கும் தொடருமே என்ருன் சூர பன்மன். 24

தேவரும் மலர்மே லோனுஞ் செங்கண்மால் முதலா வுள்ள
ஏவரும் ஆணே போற்ற இருந்தர சியற்றல் உற்றேன்
மூவரின் முதலா முக்கண் மூர்த்திதன் வரங்கொண் டுள்ளேன்
மேவலர் சிறையை இன்று விடுவனே விறலி லார்போல்.

தேவர்களும் தாமரை மலர் மேல் இருக்கும் பிரமதேவனும் சிவந்த கண்ணுடைய நாராயணக கடவுளும் முதலாக உள்ள மற்றைய எல்லாக் கடவுளரும் எனது ஆணைக்கு உட்பட்டிருந்து என் ஏவல் கேட்க நான் வீற்றிருந்து அரசாண்டேன். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலைச் செய்கின்ற மூவர்க்கும் முதலாக உள்ள சிவமூர்த்தியின் வரம்பெற்றுள்ளேன்; ஆனமையால் பகைவருடைய சிறையை இன்றுயான் விடுவேனே வலியிலேன்போல என்றான். 25

பேரெழில் இளமை ஆற்றல் பெறலரும் வெறுக்கை வீரம்
நேரறு சுற்றம் யாக்கை யாவையும் நிலைய வன்றே
சீரெனப் பட்ட தன்றோ நிற்பது செறுநர் போரில்
ஆருயிர் விடினும் வானோர் அருஞ்சிறை விடுவ துண்டோ.

மகனே! எமது பெருமைமிக்க எழிலும்; இளமையும்; ஆற்றலும்; பெறுதற்கரிய செல்வமும் வீரமும்; நிகரில்லாத அன்புடைய சுற்றமும் உடலும் ஆகிய இவை யாவும் நாம் நிலையான ஒரு பொருள் எனக் கொள்ளலாமோ? ஆகாது அழிவுறுவன தானே. ஆனால் இவைகளுடன் சேர அமைந்த எமது வாழ்விலே நாம் வாழ்வுறுதற்கு ஏற்றதொரு சீர் எனப்பட்டதுதான் நிலையாக என்றும் நிற்பது. ஆகவே பகைவருடன் செய்திடும் போரில் எனது அரிய உயிரைவிட நேரினும் யான் ஒருபோதும் தேவருடைய அரிய சிறையை விடேன் என்றான் சூரபன்மன். 26

இறந்திட வரினும் அல்லால் இடுக்கணொன் றுறினுந் தம்பால்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரிய ரானோர்
சிறந்திடும் இரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானும்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரனென் றொருபேர் பெற்றேன்.

தனக்கு மரணம் வரினும் அல்லது அதற்கு ஒப்பான ஒரு கொடிய துன்பம் நேர்ந்தாலும் பெரியோர்களாய் இருக்கப்பட்டோர் தம்மிடத்துத் தோற்றிய மானத்தைக் கைவிடுவாரோ? ஆகமாட்டாதே: ஆதலினால் தேவர்கள் சிறைவிடுவதால் எனக்கு கிடைக்கப்பெறுவது இரண்டு நாள் சிறப்பு வாழ்க்கை. அதனினுக்காக விரும்பியானும் பிடித்த எனது கொள்கையை எந்நிலையிலும் நீங்கிக்கொள்ளேன். சூரன் என்று ஒருபேர் பெற்றேன் என்றான் சூரபன்மன். 27

இன்னுமோர் ஊழி காலம் இருக்கினும் இருப்ப தல்லால்
பின்னுமிங் கமர்வ துண்டோ பிறந்தவர் இறக்கை திண்ணம்
மின்னெனும் வாழ்க்கை வேண்டி விண்ணவர்க் கஞ்சி இந்த
மன்னுயிர் சுமக்கி லேன்யான் மாயவன் றனையும் வென்றேன்.

மகனே இன்னுமோர் ஊழிகாலம் வரை நாம் இப்பூமியில் இருந்தாலும் என்றோ ஒருநாள் இறக்கத்தானேவேண்டும். இறந்தபின்பும் நாம் இங்கு இருக்கலாமோ? பிறந்தவர் எல்லாரும் இறப்பது உண்மை. ஆகவே மின்னலைப்போன்று தோன்றி மறைந்திடும் இந்த வாழ்க்கையை விரும்பி; தேவர்க்குப் பயந்து; இந்த உயிரைச் சுமந்து கொண்டு நான் இருக்கப் போகின்றவன் அல்ல. நாராயணக் கடவுளையும் வென்றேன் என்பதை நீ அறிவாயாக என்றான் சூரபன்மன். 28

அஞ்சினை போலும் மைந்த அளியநின் இருக்கை போகித்
துஞ்சுதி துஞ்ச லில்லா வரத்தினேன் தொலைவ தில்லை
நெஞ்சிடை இரங்கி யாதும் நினையலை நேர லார்மேல்
வெஞ்சமர் புரியப் போவேன் என்றனன் வெகுளி மேலான்.

மகனே நீ போரிட்டால் இறந்திடுவேன் என்று பயந்துள்ளாய் போலும்: ஆகையால் குளிர்ச்சியான உனது இருப்பிடத்தில் சென்று சேமமுடன் படுத்து நல்ல நித்திரை செய்வாயாக. நான் அழிவென்பதில்லாத வரமுடையேன். ஆதலின் தொலையமாட்டேன். நீ என்னைப்பற்றி நெஞ்சிடத்தாக இரங்கி ஏதும் நினையாதே. நீ சுகமாயிரு நான் பகைவருடன் போரிடப் புறப்பட்டு போவேன் என்றான் பேசிடப்பேசிட வெகுளிமூளும் உள்ளமுடைய சூரபன்மன். 29

இவ்வகை தாதை கூற இரவிதன் பகைஞன் கேளா
உய்வகை இல்லை போலும் உணர்ந்திலன் உரைத்த தொன்று
மெய்வகை விதியை யாரே வென்றவர் வினையிற் கேற்ற
செய்வகை செய்வேன் என்னாச் சிந்தைசெய் தினைய சொல்வான்.

இவ்வகை தந்தையான சூரபன்மன் கூறிட அதுகேட்டு நின்ற மைந்தன் பானு கோபன் ஐயய்யோ எனது தந்தைக்கு உய்கின்ற காரணம் ஏதும் இல்லைப்போலும்; நான் உரைத்தது எதையும் உணர்ந்து கொண்டானில்லை. இவற்றிற்கெல்லாம் உண்மையாக இருப்பது விதி. அந்த விதியின் முடிபை யாவர்தான் வென்றிட முடியும்; ஆகையால் இப்போதுள்ள எமது வினையின் விளைவிற்கு ஏற்றசெய்வகையை நான்செய்வேனென்று மனதில் சிந்தை செய்துகொண்டு இனையவற்றை தந்தையை நோக்கிச் சொல்வான். 30

அறிவொரு சிறிதும் இல்லேன் அடியனேன் மொழிந்த தீமை
இறையதும் உள்ளங் கொள்ளா தெந்தைநீ பொறுத்தி கண்டாய்
சிறியதோர் பருவப் பாலர் தீமொழி புகன்று ரேனும்
முறுவல்செய் திடுவ தன்றி முனிவரோ மூப்பின் மேலோர்.

அறிவு ஒரு சிறிதும் இல்லாத உனது அடியேன் மொழிந்த இந்தத் தீமையான வார்த்தைகளைப் பற்றி ஓர் இறையளவேனும் உள்ளத்து நீர் எண்ணவேண்டாம். எந்தைபெருமானே! இவற்றைப் பொறுத்துக்கொள்ளும். சிறிய தொரு பருவமுடைய பாலர்கள் தமது தந்தையரிடம் தீயதான வார்த்தைகளைச் சொன்னாரேனும் அதைக் கேட்டு முறுவல் செய்வதை விடுத்துக் கோபித்திடுவாரோ வயதால் முதிர்ந்த அவர்கள்! 31

அத்தநீ வெகுளல் நம்மூர் அலைத்திடுங் கணங்கள் தம்மை
வித்தக வன்மை சான்ற விறற்புய னோடும் அட்டுன்
சித்தமும் மகிழு மாறு செய்குவன் விடுத்தி யென்னாக்
கைத்தலம் முகிழ்த்துத் தீயோன் கழலிணை பணிதல் செய்தான்.

அதேபோல எனது அத்தனே நீ கோபிக்கவேண்டாம். நமது ஊரை அலைத்திடும் பூதகணங்கள் தம்மை வித்தக வலியும் திடமுமுடைய தோள்கொண்ட வீரவாகு தேவருடன் சேரக் கொன்று உன்சித்தம் மகிழுமாறு செய்குவன். என்னைப் போரிட விடுவீராக என்று தனது கைகளைக் கூப்பித்தொழுது சூரபன்மன் காலில் விழுந்து வணங்கினான். 32

பணிந்திடு கின்ற காலைப் பதுமைதன் கேள்வன் செற்றந்
தணிந்தனன் உவகை பெற்றான் தனயநின் உள்ளம் போர்மேல்
துணிந்தது போலும் நன்றால் துன்னலார் தம்மை வெல்வான்
அணிந்திடு தானை யோடும் அஃகுதி ஐய என்றான்.

பானுகோபன் பணிந்திடுகின்ற காலையில் பதுமகோமளையின் கணவனாகும் சூரபன்மன் கோபம் தணிந்தானாய் மகிழ்ச்சிபெற்றான். மகனைநோக்கி மகனே உனது உள்ளம் போரிடத்துத் துணிந்துள்ளது போலும்; நல்லது ஐயனே! எம்பகைவர் யாவரையும் வென்றிடுவதற்காக வேண்டிய பெரும் சேனைகளுடன் அணிவகுத்து நீ சென்றிடுவாய் என்றான். 33

தொடையசை காமர் பொற்றோட் சூரிது புகல மைந்தன்
விடையது பெற்று மீண்டு மேதகு துயரி னோடு
கடிதுதன் கோயில் புக்குக் கடவுளர் பலருந் தந்த
அடல்நெடும் படைக ளெல்லாம் ஆய்ந்தனன் எடுத்தான் அன்றே.

மலர் மாலைகள் புரண்டு அசைகின்ற அழகிய பொற்றோளுடைய சூரபன்மன் இதைப்புகன்றிடலும் அதுகேட்ட பானுகோபன் தந்தையிடம் விடைபெற்றுக் கொண்டு மீண்டுசென்று; செல்லும் போதெல்லாம் தமக்கு நிகழப்போகின்ற தீங்கை நினைந்து துயரத்துடனே விரைவுடனாக தனது அரண்மனையில் புகுந்து அங்கு தேவர்கள் பலரும் தமக்குக் கொடுத்திட்ட கொலைபுரியும் பலபடைகளை ஆராய்ந்து எடுத்துக்கொண்டான். 34

மையுறு தடங்கண் மாதர் வனமுலை திளைக்கு மார்பின்
மெய்யுறை யொன்று வீக்கி விரல்மிசைப் புட்டில் சேர்த்திக்
கையுற ஒருவில் லேந்திக் கைப்புடை கட்டி வாளி
பெய்யுறும் ஆவ நாழி பின்னுற வீக்கி யாத்தான்.

மைதீட்டிய விசாலித்த கண்களை உடைய பெண்களது வளமுடைய முலைகள் அழுந்தித் திளைத்திடுகின்ற மார்பிலே அழிவிலாத கவசம் ஒன்றினை அணிந்து இறுக்கி விரல்களிலெல்லாம் புட்டில் என்னும் உறையைப்போட்டு கையிடத்து ஒருவில்லைப் பிடித்து கைகளுக்குரிய உறைகளையும் போட்டு அம்புவைத்திடும் கூட்டைப் பின் முதுகில் சேர்த்து இறுகக் கட்டினன். 35

சேமமா யுள்ள எண்ணில் படைகளுந் தேருஞ் சுற்றத்
தாமநீள் கவிகை வேந்தன் தனிமகன் கடையிற் சென்று
காமர்சூழ் கனக வையம் ஒன்றின்மேற் கடிது புக்கான்
ஏமமால் வரையின் உம்பர் எழிலியே றணைந்த தேபோல்.

சேமமாக வேண்டிய காலத்து உதவிடும்படி எண்ணற்ற படைகளும் தேரும் சுற்றிவர நீண்ட காம்புடன் கூடிய வெண்கொற்றக் குடையுடைய சூரபன்மனது தனியானமகன் அரண்மனையின் கடைவாயிலில் சென்று எல்லா அழகுகளையுமுடைய பொற்தேர் ஒன்றிலே விரைவில் ஏறிவந்தான். பெரியதொரு பொன்மலையின்மீது தலையான ஓர் கருமேகம் ஏறிவருந்தன்மை போன்று. 36

மற்றது காலை தன்னில் வாம்பரி நிரையுந் தேருங்
கொற்றவெங் களிறும் வீரர் குழாங்களுங் குணிப்பில் வெள்ளஞ்
சுற்றின இயங்கள் முற்றுந் துவைத்தன துவச கோடி
செற்றின இரவி செல்லுந் தேயம தடைத்த அன்றே.

இவ்வாறான காலையில் தாவிப்பாயும் குதிரைகளின் நிரையும் தேர்களும் கொற்றமுடைய கொடிய யானையும் வீரரது கூட்டங்களுமாய சேனைகள்; இவ்வளவு எனக் கூறிடமுடியாதபடி வெள்ளம்வந்து சூழ்ந்தன. பலவகையாகும் வாத்தியங்கள் முழுவதும் முழக்கம் செய்தன. கொடிகள் கோடிக்கணக்கில் பிடிபட்டன, எல்லாமாகத் திரண்டு இவைகளின் பெருக்கத்தால் சூரியனின் ஒளியால் விளங்கிடும் உலகுகள் எல்லாம் இருளாக அடைபட்டன. 37

தேரிடைப் புகுந்து நின்றோன் இப்பெருஞ் சேனை வெள்ளம்
பாரிடைக் கொண்டு நின்ற புணரியிற் பாங்கர் சூழச்
சூரிடைக் கொண்ட அன்புந் துயரமும் உளத்தை யுண்ணப்
போருடைத் திசையை நோக்கிப் பொள்ளெனப் போதல் உற்றான்.

தேரினிடத்துப் புகுந்துநின்ற பானுகோபன் இப்பெரும் சேனையாய வெள்ளங்கள்; பூமியை வளைத்துள்ள கடல்போன்று; பக்கரிலே சூழ்ந்துவர சூரபன்மனிடத்தாகப் பானுகோபன் கொண்ட அன்பும் இதனால் விளையும் துயரமும் உள்ளத்தை அறுத்து உண்டிட; போர்நிகழ்வுறும் திசையை நோக்கிப் பொள்ளெனப் போதல் உற்றான். 38

வேறு

மாவாழ் தெருவு பலகோடிகள் வல்லை நீங்கி
மேவார் பொருத களத்தெல்லை விரைந்து நணணி
மூவா யிரரும் பிறரும்முடி வான நோக்கி
யாவா வெனவே இரங்கிக்கலுழ்ந் தல்லல் செய்வான்.

மகாஇலக்குமி வாழ்ந்திடும் தெருக்கள் பலகோடிகளை விரைவில் கடந்து நீங்கி; அப்பால் பகைவர்போரிடுகின்ற எல்லையில் பானுகோபன் வந்து சேர்ந்து அங்கு அப்போர்க்களத்துத் தங்களது உறவினரான மூவாயிரம் பிள்ளைகளும் மற்றும் அக்கினிமுகன் முதல் யாவரும் முடிந்துகிடக்கும் நிலையைக்கண்டு ஆ! ஆ! என்று இரங்கிக் கண்ணீர் விட்டழுது பெரும் துயரமடைந்தான். 39

தாளாண்மை மிக்க அசுரன்மகன் தாங்கல் செல்லா
நீளா குலத்தின் அழிகின்றதன் நெஞ்சு தேற்றிக்
கேளார் தொகைமேற் பெருஞ்சீற்றங் கிளர்ந்து செல்லச்
சூளால் இனைய தொருவாசகஞ் சொல்லல் உற்ருன்.

சோம்பலிலாத மிகுசாமர்த்தியமுடைய சூரபன்மன் மகன் இவர்கள் இறந்து கிடப்பதை நோக்கி நீண்டபெரும் துயரத்தில் மூழ்கி அழிவுறும் தனது உள்ளத்தைத் தேறச்செய்துகொண்டு பகைவர் கூட்டம்மேல் பெரும் கோபம்கொண்டு எழுந்து செல்ல அங்கு நின்றவாறே சபதத்தால் ஈதொருவார்த்தை சொல்லல் உற்ருன். 40

மாசாத்தர் அன்ன வயப்பூதரை மாய வாட்டித்
தேசார்க்கும் வேலோற் கிளையோனைச் செகுத்தி டேனேல்
காசாற் பொலியும் அகல்அல்குலின் காமம் வெஃகி
வேசாக்கள் பின்செல் வறியானில் விளங்க யானே.

மகாசாத்தரை ஒத்த வீரப்பூதரை மாயும்படி வாட்டிக்கொன்று, தேசு விளங்கிடும் வேலேந்திய முருகனுக்கு இளையதம்பியாகும் வீரவாகு தேவனை, நான்கொல்லாது விடுவேனே எனின், காசுமாலை அணிந்திடும் அழகிய அரையில் விளங்கிடும் அல்குலில் மூழ்கிடும் காமஇச்சையான இன்பினை விரும்பி; வேசிகள் பின்னுல்செல்கின்ற ஓர் வறியவனைப்போல யான் விளங்கிடுவேனுக.

உத்தமமான ஒருபெண் பொருளையோ இன்பத்தையோ பெரிதென மதியாது ஓர் கணவனுக்கே உறுதியுடன் வாழ்க்கைபூண்டு இருப்பவளாவள். வேசிகள் அப்படி அல்ல. தம்மை நன்ருக எழிலுடன் விளங்கிடச்செய்து அதனுல் தம்மீது பலரும் இச்சை கொள்ளும்படி செய்வள், இச்செயலால் அவர்கள் விரும்புவது பொன்னும் போகமும். அப்படியான ஓர் வேசியை விரும்பிய வறியோன் தன் எண்ணம் பூர்த்தியாகாது பல நாளும் அவ்வேசியை நாணின்று இரந்து திரிவன். ஆதலால் அப்படி அற்பமானவன் போல நானும் விளங்கிட என்ருன். இன்னமும் உண்மை வீரத்திற்கு துர்நடத்தையுடைய பெண்கள் சகவாசம் புறன் எனவும் இதனுல் தெரிய வருகின்றது. 41

என்னு ஒருசூள் இசையா அவனேக லோடும்
அன்னுன் வரவு தனைநோக்கி அவுணர் தங்கள்
மன்னுகும் நின்ற மகனுகும் மலைவ தற்குப்
பின்னுர் வருவார் எனப்பூதர்கள் பேச லுற்ருர்.

என்று ஓர் சபதத்தைப் பானுகோபன் இசைத்து அவன் தேர்மேல் போதலோடும் அவனுடைய வரவினை நோக்கிய பூதங்கள் இவன் அசுரரின் அரசனுகும், அல்லாதிருந்தால் தப்பிநின்ற மகன் பானுகோபனுகும். அல்லாது வேறுயார் இனி எம்முடன் போரிடற்கு வருவார்கள் எனப் பேசலுற்றனர். 42

பேசற்ற காலை அவுணப்படை பேர்ந்து சென்ருங்
காசற்ற பூதப் படைதம்மெதிர் ஆர்த்து நேரப்
பூசற் பறைகள் இயம்புற்றன பூமி பொங்கி
மாசற்ற வானைத் திசையோடு மறைந்த தன்றே.

இவ்வாறு பூதங்கள் பேசுற்ற நேரத்து, அசுரப் படையாது புறப்பட்டுச்சென்று அங்குநின்ற குறையிலாத நல்நிலையுடைய பூதப்படைகள் முன்பு ஆர்த்து எதிர்தலும் அந்நேரம் போர்ப்பறைகள் முழக்கம் செய்தன. அசுரரது வேகத்தில் புழுதி பொங்கி எழுந்து மாசிலாத வானினைத்திக்கோடு திசைதேசம் தெரியாதபடி மறைத்துக்கொண்டது. 43

ஆர்த்தார் கிடைத்தார் அடற்பூதர் அடுக்கல் மாரி
தூர்த்தார் படைகள் சொரிந்தார் மரந்தூவ லுற்ருர்
பார்த்தார் அவுணர் எழுநாஞ்சில் பரசு தண்டஞ்
சீர்த்தா கியவில் லுமிழ்வாளி செலுத்தி விட்டார்.

இவ்வாறு அசுரர் எதிர்த்தலும் பூதங்களும் எதிரேற்றனர் ஆர்த்தனர். மலைகளைப் பிடுங்கிப் பிடுங்கி மழைசொரிவதுபோன்று எறிந்தார்கள். அத்துடன் மரங்களை அசுரர்மீது அள்ளிவீசினர். இதைப்பார்த்தார்கள் அசுரர் அவர்களும் மழு தண்டு சிறப்புடைய வில்லினின்றும் விடுத்திடும் அம்புகள் ஆகியவற்றைச் செலுத்திவிட்டார்கள். 44

**வேறு**

பொங்கு வன்மைகொள் பூதரும், வெங்கொ டுந்தொழில் வினையரும்
இங்கிவ் வாறெதிர் ஏற்றிடா, அங்கண் வெஞ்சமர் ஆற்றினர்.

தர்மத்தை நிலைநாட்டுதற்கு அதன் பகைவரைக் கண்டவுடன் பொங்கிடும் வன்மைகொள்ளும் பூதரும்; மிக்ககொடும் தொழிலை உடையவராகும் அசுரரும் இங்கு இந்தவாறு படைகளை வீசிப்போரிட எதிரேற்று அவ்விடத்துக் கொடிய போரினைப் புரிந்தனர். 45

அரிய ஒண்பகல் அல்லொடே, பொருது பார்மிசை புக்கபோல்
இருதி றத்தரும் இகலியே, விரவு பூசல் விளைத்தனர்.

இவர்கள் போரிடுவது எப்படியெனில்; அரியதான ஒளியுடைய நல்ல பகலுடன் இருள் மிகுந்த இரவும் பகைகொண்டு இப்பூமியில் இவர்கள் வடிவாய் புகுந்துள்ளதுபோன்று இரு திறத்தராகும் பூதரும் அசுரரும் பகைபூண்டு நெருங்கிய போரைப் புரிந்தனர். 46

உரங்கொள் பாரிடர் உய்த்திடு, மரங்கள் குன்றுகள் மாண்டிட
நெருங்கி நேர்ந்த நிசாசரர், சரங்கள் கொண்டு தடிந்தனர்.

உரங்கொண்ட பூதங்கள் செலுத்தியிட்ட மரங்கள் மலைகள் அழிந்திடும்படி பூதங்களுடன் நெருக்கமாக நின்று போரிட்ட அசுரர்கள் அம்பினை விடுத்து அவைகளை அழித்தனர். 47

விற்கொள் அம்பினை வேலினை, எற்கொள் நாஞ்சில் எழுக்கதை
வர்க்க மானதை வன்கணர், கற்க ளாற்றுகள் கண்டனர்.

அசுரர்கள் விடுத்திடும் வில்நின்று வந்த அம்பினை வேலினை ஒளியுடைய நாஞ்சில் படையை எழுவாயுதத்தை குந்தாயுதம் ஆகிய இவைகள் யாவற்றையும் கொடிய பூதங்கள் இலக்காக கல்லால் எறிந்து அப்படைகளை நாசமாக்கி துகள் செய்தனர். 48

சிவந்த பங்கிகொள் சென்னிகள், நிவந்த மொய்ம்பு நிலத்துகக்
கவிழ்ந்து ருண்டு களத்திடை, அவிந்த பூதம் அனந்தமே.

இப்படிப்போரிடும்பொழுது சிவப்புடைய மயிர்கொண்ட தலைகளும் அழகியதோள்களும் படைகளால் அறுபட்டு கவிழ்ந்து கீழ்வீழ்ந்து உருண்ட பூதங்கள் அநேகமாயின. 49

நெஞ்சம் மொய்ம்பும் நெடும்பதஞ், செஞ்செ வித்தலை சிந்தியே
எஞ்சு தானவர் எண்ணிலார், துஞ்சி னர்பழி துஞ்சவே.

நெஞ்சும் தோளும் நெடியகாலும் சிவந்த தலையுமாக வேறுகிச் சிதறுண்டு அழிந்து அசுரரும் பலர் இறக்கின்றார்கள்; இந்த உலகைவருத்திடும் பெரும்பழி அழிவுற்றது போன்று. 50

பாய்ந்த வாசிகள் பாரிடங், காய்ந்த யானைகள் காசினி
ஏய்ந்த தேர்களி யாவையும், மாய்ந்து பாரின் மறிந்தவே.

பாய்ந்த குதிரைகளும்: பூதங்களை அழித்த யானைகளும், பூமியில் விரைந்தோடி வந்த தேர்களும் எல்லாம் மாய்ந்து அழிந்து சாய்ந்து இப்பூமியில் கிடந்தன. 51

சோரி தூங்கிய தொல்பிணம், மேரு விண்ணை விழுங்கின
காரி யூர்தி கருங்கொடி, ஓரி கங்கம் உலாயவே.

இரத்தம் சொரியும் பெரும் பிணங்களின் குவியல்கள் மேருமலையையும் வானினையும் மூடியதுபோன்று பெருகின. அங்கு இப்பிணக்குவியல்களில் வைரவக் கடவுளின் வாகனமென்னும் நாய்களும், கருமையுடைய காகங்களும் நரிகளும் பருந்துகளும் பிணம்தின்பதற்கு உலாவின. 52

இந்த வாறிரு பாலரும், வந்து நேர்ந்து மலைந்திடப்
புந்தி நோவறு பூதர்தம், முந்து தூசி முரிந்ததே.

இந்தவாறு இருபக்கத்தாரும் வந்து ஒருவரை ஒருவர் நேர்ந்து போரிடும் பொழுது; மனதில் துன்பமானநோய் என்னிலையிலும் இலாத பூதங்களின் முன்னணிப்படை முனைமுரிந்து ஓடிப்போயது. 53

தாழும் ஒன்னலர் தாக்கலால், நீள்கொ டிப்படை நெக்கிடக்
கூழை நின்றிடு கூளிகள், ஆழி யென்ன அடத்தவே.

வலியுடைய பகைவர் தாக்கிடுதலால் முன்னணியில் கொடியுடன் நின்ற தூசிப் படை முரிவுற்று பின்னிட அதுகண்ட பின்னணியில் நின்ற பூதங்கள் கடல்போல் இரைந்து வந்து போரிட்டன. 54

புடைநி ரம்பிய பூதர்வந், திடைவி டாதெதிர் ஏற்றிடா
அடலின் மேதகும் அவுணமாக், கடலை நின்று கலக்கினர்.

பக்கரில் நிரந்து நின்ற பூதங்கள் வந்து இடைவிடாது எதிர் ஏற்றுக்கொண்டு போரில் மிகு சமர்த்தராகும் அசுரராகிய கடலைத்தாக்கி நின்று கலக்கி பல அசுரரைக்கொன்றுர்கள். 55

ஓடிந்த தேர்கள் உலந்துபார், கிடந்த யானை கிளர்ந்தமா
மடிந்த தானவர் மாப்படை, தடிந்து லாயினர் சாரதர்.

அவ்வாறு பின்நின்ற பூதங்கள் வந்து தாக்கிட ஒடிந்து முரிந்து தேர்கள் அழிந்தன; யானைகள் இறந்து பூமியில் கிடந்தன; பாய்ந்து எழுந்த குதிரைகள் இறந்து நிலமிசைக்கிடந்தன. அசுரர்கள் மடிந்துபோயினுர்கள். இவ்வாறு அசுரப்படையைக் கொன்றுகொன்று பூதங்கள் உலாவினுர்கள். 56

**வேறு**

அதிரும் கழல்சேர் அவுணப் படைகள்
முதிரும் குறளெற் றமுடிந் திடலும்
எதிருஞ் சமரத் திடையெய் தியதோர்
கதிரின் பகையங் கதுகண் டனனே.

அதிர்கின்ற கழல்கள் அணிந்த அசுரப்படைகள்; முதிர்ந்த வலியுடைய பூதங்கள் தாக்கிட முரிவுற்று முடிந்துபோதலும் அதனை ஆளைஆள் எதிர்த்துப் போரிடும் போர்க்களத்து வந்துசேர்ந்த சூரியன் பகைவன் பானுகோபன் அங்கு அதனைக் கண்டு கொண்டான். 57

சிந்தாய் வருமிச் சிலசா ரதரே
நந்தா னையெலாம் நலிகின் றனரோ
அந்தா இனிதென் றடுதேர் கடவா
வந்தான் விரைவால் இமையோர் மறுக.

அடே! குறள்வடிவமாய் வரும் இந்த சில பூதமா நமது சேனை எல்லாவற்றையும் வதைக்கின்றரோ? ஆகா இது நன்று என்று; கொலைபுரியும் தேரினைச் செலுத்தி விரைந்து வந்தான் பானுகோபன். அதுகண்ட தேவரெல்லாம் ஐயைய்யோ இவன் வரவை நோக்கும்போது என்ன தீங்குதான் எம்படைகட்கு நிகழுமோ என ஏக்கமுற்றனர். 58

கடிதாய் வருகா லொடுகா ரெழிலி
படிமே லுறவே படர்கின் றதுபோல்
கொடிதா கியவிற் குனியா முனியா
வடிவா ளிகள்தூய் அவுணன் வரலும்.

வேகமாக வீசிடும் காற்றுடன் கறுத்தமேகம் பூமிமேல் படிந்திடப் படர்கின்றது போல் வரும் பானுகோபன், கொடிதாகிய தனதுவில்லை வளைத்து முனிந்து கொண்டு வடிக்கணைகளை சொரிந்தவாறு வருதலும். 59

வண்டார் தெரியல் வலியோன் வரவைத்
தண்டா தமர்செய் திடுசா ரதர்கள்
கண்டார் எதிரே கடிதே நடவா
அண்டார் தொகைஅச் சுறஆர்த் தனரே.

வண்டுகள் மொய்த்து ஆர்க்கின்ற மாலையுடன் வலியுடைய பானுகோபன் வரவை தடையின்றி போர்செய்கின்ற பூதங்கள் கண்டன. கண்டதும் அவன் எதிரே கடிது சென்று தேவர் தொகை அச்சுற இரைந்து கூச்சலிட்டன. 60

தருவுங் கதையுந் தருசூ லமுமால்
வரையுங் கொழுவும் மழுவும் எழுவுஞ்
சொரிகின் றனர்பல் வளனுந் தொலையா
எரியின் மிசையே இடுமந் தணர்போல்.

மரங்களும் கதைகளும் கைபிடித்த சூலமும் பெருமலையும் கொழுவும் மழுப்படையும் எழுப்படையும் ஆகிய எல்லாவற்றையும் எடுத்து பூதங்கள் வீசுகின்றனர். இவர்கள் பல பொருள்களையும் தொலைவாகும்படி நெருப்பில் இடுகின்ற பிராமணர்களைப் போன்றிருந்தார்கள். 61

தொடுகின் றகழல் தொகுசா ரதர்கள்
விடுகின் றவெலாம் மிசைவந் திடலும்
அடுகின் றசினத் தவுணன் தழலில்
படுகின் றசரம் பலதூண் டினனே.

தொடுத்தணியப்பெற்ற வீரககழலுடைய தொகுதியாய பூதங்கள்யாவும் விடுகின்ற படைகள் மேல் எழுந்து வருதலும், அவைகண்ட கொல்கின்ற சினமுடைய பானுகோபன் தீயின்தன்மையுடைய பல அம்புகளைச் செலுத்தினன் 62

பணிபட் டகனற் படைதூண் டுதலும்
திணிபட் டகணத் திறலோர் வரைகள்
அணிபட் டதருக் குலமா தியெலாம்
துணிபட் டனவே துகள்பட் டனவே.

பாம்புபோன்ற பல அக்கினிக்கணைகளைப் பானுகோபன் தூண்டுதலும் அங்கு திரண்டுநின்ற பூதவீரர் எறிந்த மலைகள் வரிசையாய் எறிந்த மரங்கள் ஆகிய படைக் கலமெல்லாம் துணிபட்டதல்ல; துகள்பட்டன. 63

கல்லும் தருவும் கதையும் பிறவும்
சொல்லும் திறலும் துகள்பட் டிடலும்
வெல்லும் தகுவென் மிகுசா ரதர்மேல்
செல்லும் படிவெங் கணைசிந் தினனே.

பூதங்கள் வீசிய கல்லும் மரமும் கதைகளும் பிற ஆயுதங்களும் வீரச்சொல்லும், அவற்றின் வலியும் துகளாகி பானுகோபனது அம்பால் அழிந்து போதலும், வெற்றிக்கு இலக்கான பானுகோபன் மிகுந்த அப்பூதர்மீது பட்டுருவும்படி கொடிய அம்பினைவிடுத்தான். 64

சிந்துற் றிடுசெங் கனல்வெங் கணைகள்
பொந்துற் றிடுகின் றபுயங் கமென
வந்துற் றுடன்முற் றும்வருத் துதலால்
நொந்துற் றனர்அற் றனர்நோன் மையெலாம்.

சிவந்த அக்கினிப் பொறிகளைச் சிந்திடும் அவனது கொடிய அம்புகள்சென்று பொந்தினுள் போகின்ற பாம்பைப்போன்று சுரீரென பூதங்கள் உடலில் தைத்து ஊடுருவிப்போய் உடலைவருத்துவதால் அப்பூதங்கள் சோர்வுற்றார்கள்; வலியெலாம் அற்றுப் போயினார்கள். 65

விடுகின் றகனற் கணைவெந் திறலோர்
உடலம் புழைசெய் திடவுற் றனரால்
படரும் குறியோன் கதைபஃ றுளையா
அடுதொல் கிரவுஞ் சமதா மெனவே.

பானுகோபன் விடுகின்ற அக்கினிக் கணைகள் கொடுந்திறலுடைய பூதங்களின் உடலங்களில் ஊடுருவித் துளைத்திடலாலே ஒவ்வொரு பூதத்தையும் பார்த்தால் அவைகள் முன்னர்வந்த குறுகிய வடிவுடைய அகத்திய முனிவன் தனது தண்டினால் பல துளைசெய்து அழிவுறவைத்த கிரவுஞ்சமலைபோன்று இருப்பன. 66

தெரிகுற் றகனற் கணைசென் றுபுகப்
பொருகொற் றமகற் றியபூ தர்மிசைப்
பெருகுற் றதுசோ ரிபெருங் கருவிண்
டுருகுற் றிடுசெம் பொழுகும் படிபோல்.

தெரிந் தெடுத்துவிட்ட அக்கினிக்கணை சென்று தைத்திட போரிடுதற்குரிய வீரம் அகன்றுபோன பூதங்கள்மீது இரத்தம் பெருக்குற்றது. அதனை நோக்கினால் பெரிய கருவில் இருந்து செம்பு உருகிக்கொண்டு வடிந்தோடுவது போன்றது. 67

கதிரும் கனல்வெங் கணைசா ரதர்மெய்
புதைகின் றுழிசெம் புனல்வந் தெழுவ
உதிரம் பிறவுற் றிடுதீ யுறவால்
எதிர்வந் தவைதன் னிடனுய்ப் பதுபோல்.

ஒளியுடைய அந்தக் கொடிய அக்கினிக் கணைகள் பூதங்கள் மேனியில் ஊடுருவும்கால் அவர் உடலில் நின்றும் சிவந்த இரத்த நீர் வந்து எழுகின்றது; இந்த இரத்தம் தனக்கு உற்ற தீய அக்கினிக்கணையின் உறவால் !அதாவது தீ மயமான அம்பு இங்கே தைத்திடல் இரத்தத்திற்குரிய உறவாகின்றமையால்) அந்த இரத்தம் நிலைகெட்டு வடிந்திடல் நன்னிலையுற்ற இரத்தமும், தீயவர் தன்னிடத்துச் சேர்தல் போன்றது: 68

விடமெய்க் கணைமா ரிகள் தம்மிசையே
படவெய்த் தனர்சிந் தைபதைத் திடுவார்
கடவுட் கதிரைக் கனலும் கொடியோற்
குடைவுற் றனரால் உறுபூ தரெலாம்.

பானுகோபன் அழிவிலாத அக்கினிக் கணைகளை விடலால் அவை மழைபோன்று வந்து தைத்திடலால் பூதங்கள் களைப்புற்றனர் சிந்தைபதைபதைத்தனர்; கடவுளாகும் சூரியதேவனைக் கோபித்த கொடிய பானுகோபனுக்கு முன்னிற்க முடியாது புறமுது கிட்டோடினார்கள் அங்குள்ள பூதர்யாவரும். 69

**வேறு**

நிலைய ழிந்து நெடுங்கடல் பாரிடம்
தொலைய முன்னம் தொலைந்திடு தானவர்
வலிதெ ரிந்து வயம்புனை தானவர்
தலைவன் முன்வந்து சார்ந்தனர் என்பவே.

நெடுங்கடல்போல் பரந்துநின்ற பூதங்கள் நிலையழிந்து தொலைந்தோடிப் போய் விட; முன்னம் அப்பூதங்களால் தொலைவுற்ற அசுரர்கள் பானுகோபனின் வலிதெரிந்து வெற்றிசூடிய அசுரர்தலைவன் பானுகோபனின் முன்வந்து சேர்ந்து கொண்டனர். 70

ஆய காலை அழிந்துவெம் பூதர்கள்
போய வாறும் புரையறு சூர்தரு
சேய வன்திறல் செய்கையும் நோக்கினன்
காயும் வெவ்வெரி கான்றிடு கண்ணினன்.

அவ்வாறாகிய காலையில் பானுகோபனுடன் போரிடமுடியாது பூதங்கள் அழிந்து போன வரலாற்றையும்; குற்ற மற்ற சூரபன்மன் தந்த மைந்தனை பானுகோப னது செய்கையின் திறமைகளையும் பார்த்தருளினர், கொடிய நெருப்பு எரிந்து காய் கின்றது போன்று கோபாக்கினி சொரியும் கண்ணுடைய வீரவாகுதேவர். 71

மலைக்கு லக்கொடி வாமத்தன் மைந்தராம்
இலக்க வீரருள் ஏனைய மைந்தருள்
தலைக்கண் நின்ற சயங்கெழு மொய்ம்பினன்
விலக்கில் தேரொடும் வெய்தென ஏகினன்.

இமயமலையில் அவதரித்த பெருமாட்டியை; அருள் முதல்வியை இடப்பாகத்தி ருத்திய பெருமான் மைந்தர்களாகும் இலக்கம் வீரரும் ஏனைய எட்டுமைந்தர்களுக் கெல்லாம் தலைவனாக உற்ற வெற்றிகொண்ட தோளுடைய வீரவாகுதேவர் தடுக்க முடியாத வேகமுடைய தேரொடும் விறுக்கென பானுகோபன் முன்னாகவந்தார். 72

ஆதிதந்த அறுமுகத் தெம்பிரான்
பாத முன்னிப் பரவிக் கடிதுபோய்
மேத குங்கதிர் வெம்பகை தானையாம்
ஓத முட்கக் குனித்தனன் ஓர்சிலை.

எப்பொருட்கும் ஆதியாகும் சிவமூர்த்தி உலகுய்யத் தந்தருளிய ஆறுமுகம் கொண்ட எம்பிரான் பாதத்தை வீரவாகுதேவர் நினைந்து வணங்கி கடிதுபோய் மேன்மையான ஒளிக்கிரணமுடைய வெம்மைசெய்யும் சூரிய பகவானை முனிந்த பானு கோபனது சேனையாகும் அசுரக் கடல் கலங்கிட ஓர்வில்லை வளைத்தார். 73

காமர் மொய்ம்பினன் கைத்தனுக் கோடலும்
தாமு னிந்து தகுவர்தந் தானைகள்
தோம ரங்கதை சூலம்வை வாளிவேல்
நேமி யாதி நெருக்குற வீசினர்.

அழகிய தோளுடன் கூடிய வீரவாகுதேவர் கையில் வில்லை வளைத்தலும், அது கண்ட அசுரரது சேனைகள் தோமரம் கதாயுதம் சூலம் கூரிய அம்பு வேல் சக்கரம் ஆதியானபடைகளை வீரவாகுதேவர் மேல் ஓய்வின்றி நெருக்குற வீசினர்கள். 74

வீசுகின்ற வியன்படை மாய்ந்துகத்
தேசு லாவு திறலுடை மொய்ம்பினன்
ஓசை கொண்டதன் சாபம் உமிழ்ந்தென
ஆசு கங்கள் அளப்பில தூண்டினன்.

அசுரர் வீசுகின்ற மேலான படைகள் மாய்த்திடுதற்கு தேசு பொருந்தி விளங்கும் திறமையான தோளுடைய வீரவாகுதேவர் நாணோசை கொண்ட தனது வில்தான் கக் கிக்கொள்வது என்பது போன்று ஓய்வின்றிச் சென்றிடும் பல அம்புகளைச் செலுத் தினர். 75

தூண்டும் வாளி துணிபடச் செய்தலும்
மாண்டு போயின மற்றவர் வெம்படை
ஈண்டு தானவர் யாரும் மறைந்திட
மீண்டும் வார்கணை வீசினன் வீரனே.

வீரவாகுதேவர் செலுத்திடும் அம்புகள் அசுரர்விட்ட ஆயுதங்களை துணிபட்டிடச் செய்தலும் அவர்களது கொடிய படைக்கலம் மாண்டு போயின. அப்பால் அங்குநின்ற அசுரர்யாவரும் அழிந்து ஒழிவுற மீண்டும் அம்புகளை வீரவாகுதேவர் செலுத்தினர். 76

கற்றை வார்சடைக் கண்ணுத லோன்சுதன்
கொற்ற வில்லுமிழ் சூர்ங்கணை விட்டன
பற்ற லார்மெய் படுதலும் அன்னவர்க்
கிற்ற தாள்முடி தோள்புயம் யாவுமே.

கற்றையாக விளங்கிடும் அழகிய சடைகொண்ட நெற்றிக் கண்ணுடைய சிவ பெருமான் மைந்தன் வீரவாகுதேவரின் கொற்றமுடைய பெருவில் உமிழ்கின்ற கூரிய அம்புகளாய் விடப்பட்டன சென்று பகைவருடைய மேனிபடுதலும் அந்த அசுரர்க ளுக்கு கால் அறுந்தன தலையறுந்தன தோளறுந்தன பல உறுப்புகளும் அறுபட் டன. 77

ஆர ழிந்தன ஆழி அழிந்தன
தேர ழிந்தன திண்பரி கைமுகக்
கார ழிந்த கடுந்தொழில் தானவர்
போ ரழிந்த புகுந்தன சோரியே.

அசுரர்களது தேரின் மேற்புறம் அழிந்தன, சில்லுகள் அழிந்தன, இப்படியாக பல தேரழிந்தன, திண்மையாள குதிரைகள், மேகம்போலும் கரியயானைகள் அழிந் தன; கடும் தொழிலுடைய அசுரர்களது போர் நிலையழிந்தன. எங்கும் இரத்தம் பெருகியது. 78

மற்ற வெல்லை வலியநந் தானைகள்
இற்ற வேகொல் இவன்சிலை யாலெனுச்
செற்ற நீரொடு செங்கதிர் மாற்றலன்
ஒற்று தேர்வல வற்கிவை ஓதுவான்.

அவ்வாறான நேரத்தில் வலிமையுடைய நமது சேனைகள் அழிந்தனவோ இந்த வீரவாகுவின் வில் வன்மை எனப் பானுகோபன் கூறி மிகு கோபத்துடன் தனது சொற்படி ஒழுகும் தேர்ச்சாரதியிடம் இவற்றைச் சொல்கின்றான். 79

அடுத்து நம்படை அட்டவன் முன்னுற
விடுத்தி தேரை வலவனை வெய்தென
வடித்த விஞ்சையன் வன்மையின் அன்னதேர்
நடத்தி யார்த்தனன் நாகர் நடுங்கவே.

எமது படையை வந்து சேர்ந்து அவற்றை அழித்திட்ட; வீரவாகு முன்னுறை விரைவாக எனது தேரை சாரதியே நீவிடுத்திடுவாயாக என்றிட அதுகேட்ட அவன் சாரதி தான் நுணுக்கமாகக் கற்றுத் தேர்ந்த வித்தையின்படி தேரைச் செலுத்தி; தேவர்கள் நடுங்கிட இரைந்து கூச்சலிட்டான். 80

மாண்ட கொள்கை அவுணன் வலவன்முன்
தூண்டு தேர்மிசைத் துண்ணென நண்ணியே
பூண்ட தன்சிலை கோட்டிப் பெருஞ்சினம்
மூண்டு மேலவன் முன்னிது கூறுவான்.

அழிவுற்ற நற்கொள்கையுடைய பானுகோபன் சாரதி முன்னுகச் செலுத்திய தேர்மீது துரிதமாகச் சென்று கையில் பிடித்த தனது வில்லை வளைத்து பெரும் கோபம் மூளப்பெற்று வீரவாகுதேவர்முன் இதைக் கூறுவான். 81

எஞ்ச லின்றிய என்பெருந் தானைகள்
துஞ்சும் வண்ணந் தொலைத்தனை நீயினி
உஞ்சு போகரி துன்றனை அட்டிட
வஞ்சி னங்கொடு வந்தனன் யானென்றான்.

அழிவற்ற எனது பெரும் சேனைகள் இறந்து போகும் வண்ணம் நீ தொலைத் தாய். நீ இனி உய்ந்து தப்பிப்போகமுடியாது உன்னைக் கொன்றிட வஞ்சினம் பேசிக் கொண்டு இங்கு வந்துள்ளேன் யான் என்றான் பானுகோபன். 82

என்ற லோடும் இருந்திறன் மொய்ம்பினுன்
பொன்று வோரையும் போர்த்தொழில் செய்துபின்
வென்று ளோரையும் விண்ணவர் காண்குவர்
நின்று தாழ்க்கலே நேருதி போர்க்கென்ருன்.

என்று பானுகோபன் கூறலோடும் அது கேட்ட பெரும் திறமையான தோளுடைய வீரவாகுதேவர் சொல்வார்; இறப்பாரையும் போருக்குரிய முறையான தொழில் செய்தும் வெற்றிகொள்வாரையும் மேல் நின்ற தேவர்கள் காண்பர். நின்று நீ தாமதியாது நேரிட்டுப் போரிட வருவாய் என்ருர். 83

விளேத்த சீற்றத்து வெந்திறற் சூர்மகன்
வளேத்த வில்விடை வார்கணே ஆயிரந்
தளேத்த பூந்தொடை வாகையன் தன்னுரந்
றுளேத்தி டும்படி பூட்டுபு தூண்டினுன்.

அது கேட்டலும் விளேந்திடும் பெரும் கோபத்துடன் கொடும் திறலுடைய சூரபன்மன் மகன் தான்வளேத்தவில்லில் நின்றும் வடித்தெடுத்த அம்புகளே பூட்டி தளிர்த்திடும் பூமாலேயணிந்த தோளுடைய வீரவாகுதேவரின் நெஞ்சைத் துளேத்திடும்படி செலுத்திவிட்டான். 84

ஆக மூழ்கி அடற்கணே போழ்ந்துபின்
ஏக வென்றும் இளேயவன் பின்னவன்
சோக மோடுதன் தொல்சிலே வாங்கியே
நாகர் போற்றிட நாணெலிக் கொண்டனன்.

பானுகோபன் விடுத்த அம்புகள் வீரவாகுதேவரின் உடலில் தைத்துப் பின்முதுகாக போயிடலும், என்றும் இளமை குன்ருத தெய்வமாகும் முருகப்பெருமானுக்கு இளேயவரான வீரவாகுதேவர் மிகு சோகம் கொண்டு தனது தொன்மையான வில்லே வளேத்து தேவர்களும் துதித்திடும்படி அந்த வில்லில் நாண் ஏற்றி ஓசைசெய்தார். 85

நாணெ லிக்கொடு நஞ்சழல் கான்றெனத்
தூணி யுற்ற சுடுசரம் ஆயிரம்
வேணு வுய்த்து விரைவினில் தூண்டினுன்
ஏணு டைக்கொடி யோன்புயத் தெய்தவே.

நாணேசைசெய்து நஞ்சை நெருப்புக்கக்கியது போன்று அம்புக்கூட்டில் இருந்த தீக்கணேகள் ஆயிரம் எடுத்து வில்லில் பூட்டி விரைவுடன் செலுத்தினுர் வஞ்சனேயுடைய பானுகோபன் புயத்தில் சென்றுபட்டிடுமாறு. 86

ஆயி ரங்கணே அம்புயம் மூழ்கலும்
நோயு ழந்துள நொந்து நொடிப்பினில்
தீய வன்மகன் செஞ்சரம் நூற்றினுல்
தூய வன்வில் துணிபடுந் தானரோ.

வீரவாகுதேவர் விடுத்த ஆயிரம் அம்புகளும் பானுகோபனது அழகிய தோளில் சென்று தைத்திடலும், பானுகோபன் நோவினுல் வேதனேயுற்று நொந்து ஓர் நொடிப்பொழுதில் தீயவனுன சூரன்மகன் நூறு அம்பை விடுத்து தூயவரான வீரவாகுதேவர் பிடித்தவில்லே துணிபடுத்தினுன். 87

திண்டி றற்புயன் செஞ்சிலே இற்றிட
அண்டர் அஞ்சினர் அன்னவன் ஓரயில்
கொண்டு ருத்துக் கொடுந்தொழிற் சூர்மகன்
முண்ட நெற்றியின் மொய்ம்புடன் வீசினுன்.

திண்மையான தோளுடைய வீரவாகுதேவர் தனது அழகியவில் முரிந்திடலும் அது கண்டு தேவர் அஞ்சினுர்கள்; வீரவாகுதேவர் அந்நிலேயில் ஓர் வேலேக்கையில் எடுத்து கோபமுடன் கொடும் தொழிலுடைய சூரன்மைந்தனது அழகிய நெற்றி மீது பட்டிட வீரமுடன் எறிந்தார். 88

வீசு வெம்படை வெய்யவற் சீறிய
நீசன் மாண்டகு நெற்றியுட் சேறலும்
மாசில் வான்மிசை வந்தெழு செக்கர்போல்
ஆசில் செம்புனல் ஆறெனச் சென்றதே.

வீரவாகுதேவர் வீசிய கொடிய வேல் சூரியதேவனைச் சீறிய நீசன் பானுகோபனின் மாண்புடைய நெற்றியுள் தைத்திடலும் அதுபோது மாசில்லாத வான்மீது வந்து எழுகின்ற செக்கரைப் போன்று அவனது நெற்றியில் நின்றும் குறைவில்லாத இரத்தம் ஆறுபோலப் பெருகியது. 89

சென்ற காலையில் தீயவன் ஓரிறை
நின்று தேரின் நினைவில ளுகியே
பின்றை முன்னுணர் வெய்தப் பெருந்தகை
ஒன்றோர் வெஞ்சிலை ஒல்லையில் வாங்கினன்.

இரத்தம் பெருகிய நேரத்தில் தீயவனை பானுகோபன் ஓர் இறைப்பொழுது அங்கு தேரில் மயங்கி நின்று நினைவற்றோனுகி சிறிது நேரத்தின் பின்னர் முன்னர் உணர்ச்சிவந்திடலும்; அதற்கிடையில் பெருந்தகையாய வீரவாகுதேவர் தாம் வேறொரு வில்லை எடுத்துக்கொண்டார். 90

வாங்கி வாயுவின் மாப்படை தூண்டலும்
ஆங்கவ் வெய்யனும் அப்படை யேவியே
தாங்கி வன்மை தணித்தலுந் தாவிலோன்
தீங்க னற்படை உய்த்தனன் சீறியே.

வில்லை வளைத்து அதனிடத்து வாயுதேவனின் பெரும்படையைச் செலுத்துதலும் அங்கு அதுகண்ட அந்தக் கொடியோனை பானுகோபனும் அப்படையையே எடுத்து விடுத்து அந்த வாயுப்படையை அழிவுறுத்தலும் அது கண்ட வீரவாகு தேவர் சிறு கொடிய அக்கினிப் படையை அடுத்து விடுத்தார். 91

மாரி யன்னகை மன்னவர் கோமகன்
ஆர ழற்படை அவ்வழி தூண்டலும்
வீர வாகு விடுத்திடு தீப்படை
போரி யற்றிப் பொருக்கென மீண்டதே.

மழைபோன்ற கொடையுடைய கைகொண்ட பானுகோபன் அதுகண்டு தானும் கொடிய அக்கினிப்படையை அவ் வழியாகச் செலுத்தலும்; அதுவேளை வீரவாகு தேவர் விட்ட அக்கினிப்படை பானுகோபன் விட்ட படையோடு போரிட்டுப் பின்னர் சீக்கிரம் மீண்டது. 92

சுடுக னற்படை போந்திடச் சூர்மகன்
கடிது பின்னுங் கதிர்ப்படை நூனெடா
அடுதி அன்னவன் ஆவியை நீயெனு
விடுத லோடும் விரைந்தது சென்றதே.

சுடுகின்ற அக்கினிப்படை மீண்டிட சூரன்மகன் பானுகோபன் விரைவில் பின்னர் சூரியன்படையை எடுத்து அப்படையை நோக்கி நீ சென்று விரவாகுவின் உயிரை உண்டிடுவாய் என்று கூறிவிடுதலும் அப்படை விரைந்து சென்றது. 93

விரைந்து சென்றதை வீரமொய்ம் புள்ளவன்
தெரிந்து சேணிடைச் செங்கதி ரோன்படை
துரந்து நீக்கலுஞ் சூர்மகன் பங்கயத்
திருந்த வன்படை ஏவினன் என்பவே.

விரைவாகச் சென்ற சூரியதேவன் படையை வீரவாகுதேவர் தெரிந்து வானின் உள்ள செங்கிரணமுடைய சூரியன் படையைத் தானும் செலுத்தி பானுகோபன் விடுத்த படையை நீக்கிடுதலும், அது கண்ட பானுகோபன பிரமதேவனுடைய படையைப் பின்னர் செனுத்தினுன் என்பார்கள். 94

தேன்மு கத்துத் திருமல ரோன்படை
வான்மு கத்து வருதலும் ஆங்கவன்
ஊன்மு கப்படை ஒய்யெனத் தூண்டினன்
நான்மு கத்தன் அடற்கண நாயகன்.

தேன் சொரியும் தாமரைமலர்மேல் இருந்திடும் பிரமனுடைய படை புறப்பட்டு வானமேல் வருதலும்; அதுகண்டு அப்படையே தானும்விரைவாகச் செலுத்தினர் நான்முகப் பிரமனையும் அடவல்ல கணங்கட்கெல்லாம் தலைவரான வீரவாகுதேவர். 95

தூண்டு வேதன் படைக்கலஞ் சூர்மகன்
ஆண்டு தொட்ட படையை அகற்றியே
மீண்டு வந்திட வெய்யவன் வீரன்மேல்
நீண்ட மாயன் நெடும்படை வீசினன்.

வீரவாகுதேவர் தூண்டிய பிரமன்படையானது பானுகோபன் அங்குவிடுத்த பிரமன்படையை அழிவுறச்செய்து மீண்டுவந்திடலும், கொடிய பானுகோபன் பின்னர் வீரவாகுதேவர்மீது நீண்ட வடிவுடைய நாராயண மூர்த்தியின் படையை விடுத்தான். 96

வீசும் அப்படை தன்னை விலக்கினன்
கேச வன்படை யால்கிளர் மொய்ம்புடை
மாசில் கேள்வியன் மற்றது நோக்கியே
நீசன் மாமகன் உள்ளம் நினைகுவான்.

மாசில்லாத முதிர்ந்த அறிவுடைய வளர்ந்துள்ள வீரத்தோளுடைய வீரவாகு தேவர் அதுகண்டு பானுகோபன் விடுத்த நாராயணரின் படையை; தானும் அதே நாராயணன் படையைவிடுத்து நீக்கினர். இதனைக்கண்ட நீசன் சூரபன்மன் பெருமகன் பானுகோபன் தன் உள்ளத்து நினைக்கின்றான்: 97

தொட்ட தொட்ட படைகள் தொலைவுற
விட்ட னன்படை மேலினி யாவையும்
அட்டு நல்கும் அரன்படை தூண்டுறின்
ஒட்ட லன்கரத் துண்டது கண்டதே.

யான்விடுத்த படைக்கெல்லாம் அழிவுற இவனும் எதிர்த்து படைவிட்டு எனது படைகளை நீக்கினன். இதன்மேல் இனி யான் எல்லாவற்றையும் அழித்தும் மீண்டும் படைத்திடும் சிவன்படையை விடுத்தால் எனது பகைவன் கையில் அப்படையும் உண்டு அதைநான் கண்டுகொண்டேன். 98

ஆத லாலியான் அப்படை தூண்டிடல்
ஊதி யத்தை யுடைத்தன்று மாயையால்
ஏதி லானை இனியடல் செய்வதே
நீதி யென்று நினைந்தனன் நேரலன்.

ஆதலால் யான் சிவன்படையைச் செலுத்திடில் அது எனக்கு நல்ல ஊதியத்தை இங்கு கொண்டதல்ல. இனி மாயத்தன்மையால் என்பகைவனை வெல்வதே போரின் நீதியாகும் என நினைந்தான் பானுகோபன். 99

விஞ்சை மாய வியன்முது மந்திரம்
நெஞ்ச மீது நெறிப்பட எண்ணியே
செஞ்சு டர்க்கதி ரைச்சிறை செய்திடு
வஞ்ச மைந்தன் மறைந்தனன் தேரொடும்.

மாயவித்தையின் பாற்பட்ட முதியதொரு மந்திரத்தை தன் நெஞ்சுள்ளே விதிப்படி நினைந்துகொண்டு; செஞ்சுடருடைய சூரிய தேவனைச் சிறையிட்டு வைத்த வஞ்சன் பானுகோபன் தேரோடும் அம்மாய மந்திரத்தின் வலியால் மறைந்து போயினன். 100

பாங்கு முன்னரும் பின்னரும் பாய்கதிர்
தூங்கு தேரொடு துன்னலன் ஏகுறு
வீங்கும் ஆற்றல் விறலுடை மொய்ம்பன்மேல்
வாங்கு விற்கணை மாரி வழங்கினன்.

பக்கரும் முன்னரும் பின்னரும் எங்கும் ஒளி வீசிடும் பேரழகுடைய தேருடன் பகைவன் பானுகோபன் மறைந்து சென்று அங்கு நின்று வளைத்த வில்லில் நின்றும் பெரும் ஆற்றல் படைத்த வீரவாகு தேவர்மேல் பல அம்புகளை மழைபோலச் சொரிந்தான். 101

சூறை யென்னத் திரிபவன் தூண்டிய
மாறில் வாளிப டப்பட வள்ளல்மெய்
ஊற தாகி உலப்பறு செம்புனல்
ஆற தென்ன வழிக்கொண்ட தாலரோ.

சூறாவளிக் காற்றைப்போன்று சுழன்று திரிகின்ற பானுகோபன் தூண்டிய மாறில்லாத அம்புகள் பலவும் வந்து படப்பட அருள் வள்ளலான வீரவாகுதேவர் மேனி புண்பட்டு ஓய்வின்றி சிவந்த இரத்தம் ஆறு எனும்படி வழிக்கொண்டோடியது. 102

அண்டர் நோக்கி அழிந்தனர் பாரிடர்
தண்ட மோடு தளர்ந்தனர் சார்பினோர்
விண்டு விண்டு வெருவினர் அச்செயல்
கண்டு வீரன் கனலெனச் சீறினன்.

தேவர்கள் இந் நிலமை கண்டு ஐயய்யோ இப்படியா மறைந்து நின்று பானுகோபன் மாயம் செய்வான் என மனக்கவலையால் அழிவுற்றார். பூதங்கள் அணியணியாக நிரைந்து நின்றயர்ந்தனர்; வீரவாகுதேவரின் தம்பிமார் இலக்கத்தெட்டுப் பேரும் சோர்வுற்று தலைத்தலைவெருவுற்றனர். அச் செயலை வீரவாகுதேவர் கண்டு நெருப்பெனும்படி சீறினர். 103

வேறு

ஒன்றொரு மாயை தன்னால் உய்ந்துமுன் வென்று போனான்
இன்றும துன்னி னானே இனியது முடிக்க அற்றோ
நன்றிது நன்றி தம்மா நானிவன் தன்னை இன்னே
கொன்றிடு கிற்பேன் என்னாக் குறித்தனன் குமரன் பின்னோன்.

தான் அறிந்த ஒரு செயலான மாயையால் உய்ந்த தம்பி இதற்கு முன்பும் வென்று போனான். பானுகோபன் இன்றும் அதை நினைத்தானே இனி அதைச் செய்ய முடியுமோ. நன்றிது நன்றிது அம்மம்மா! நான் இவனை இப்போதே கொன்றிடுவேன் என்னா எண்ணினர் குமரக் கடவுளின் தம்பியரான வீரவாகுதேவர். 104

ஈதுதன் புந்தி தேற்றி ஈங்கிவன் சூழ்ச்சி மாய்ந்து
போதரு கின்ற வாறு புரிகுவன் விரைவின் என்னாச்
சேதனங் கொண்ட துப்பின் தெய்வதப் படையைப் போற்றி
மேதகு வழிபா டாற்றி யவுணனைக் குறித்து விட்டான்.

இப்படி வீரவாகுதேவர் எண்ணி இங்கு இந்த பானுகோபன் சூழ்ச்சி மாய்ந்து போகின்ற தன்மையாக யான் ஓர் செயல் விரைவில் செய்வேன் என்று தெளிவைத் தரும் சிறப்பில் மிக்க ஞானமான தெய்வப் படையை கையில் எடுத்து வணங்கி மேன்மையான வழிபாடு செய்து பானுகோபனை குறித்து ஞானப்படையை விட்டார். 105

பொருவருந் திறலோன் விட்ட போதகப் படையே பானாள்
இருளினை இரியல் செய்யும் இரவிபோற் சேற லோடும்
விரைவொடு விஞ்சை மாயம் விளிந்தது வேந்தன் மைந்தன்
ஒருபெருந் தேருந் தானு மாகியே உம்பர் நின்றான்.

நிகரற்ற போர்வலியுடைய வீரவாகுதேவர் விட்ட ஞானப்படையானது புறப்பட்டு இராக் காலத்து இருளினை நீக்கி கலைத்திடும் சூரியன் போன்று வந்து ஒளி மயமாகச் சேரலோடும் விரைவாக பானுகோபனது மாயவித்தை அழிவுற்று; ஒரு பெரும் தேரும் தானுமாகி வானில் நின்றான் சூரபன்மன் பெருமைந்தன். 106

தோன்றிய விண்ணின் நின்ற சூர்மகன் தொலைவில் ஆற்றல்
சான்றதன் மாயம் போன தன்மையுந் தடந்தோள் வீரன்
ஆன்றநல் வலியும் நோக்கி அயர்ந்தனன் அயர்ந்து முன்னம்
மான்றிடும் அமரர் யாரும் மனமகிழ் சிறந்து நின்றார்.

வானில் தோன்றி நின்ற சூரபன்மன் மகன் தொலைவிலாத ஆற்றல்கொண்ட தனது மாயம்போன தன்மையும்: விசாலித்த தோளுடைய வீரவாகுதேவரின் மிக்கதொரு வலியையும் நோக்கி மனம் அயர்ந்தனன். அப்படி அவன் அயர்ந்த நேரத்து முன்னம் அவன் செயல் கண்டு அயர்வுற்று மயங்கிய தேவர்யாவரும் மனம் மகிழ்ந்து சிறந்து நின்றார்கள். 107

அவ்வழி வீர மொய்ம்பன் அந்தர வழிக்கண் நின்ற
மைவழி சிந்தை மைந்தன் மாண்பினை நோக்கி வஞ்ச
வெவ்வழி இனிநீ போதி யானிவண் அடுவன் என்னுக்
கைவழி வரிவில் வாங்கித் தேரொடுங் ககனஞ் சென்றான்.

அவ்வழியாக வீரவாகுதேவர் வானத்தில் நின்ற இருண்ட வஞ்சனையுடைய மனம்கொண்ட பானுகோபன் நின்ற மாண்பினைப் பார்த்து வஞ்சனே! எந்தப் பாதையால் இனி நீ போவாய் இங்கு வைத்தே உன்னைக் கொல்வேன் என்று தனது கையில் இருந்த வலியுடைய வில்லை வளைத்துத் தனது தேருடன் மிகு விரைவில் சென்றார் வீரவாகுதேவர். 108

விண்ணிடைப் புகுந்த வீரன் வெலற்கருஞ் சூரன் மைந்தன்
கண்ணுற முன்பு நேர்ந்து கணைபல கோடி தூர்த்தான்.
நண்ணலன் அவனுஞ் சீறி நவின்றதோர் சாபம் வாங்கித்
துண்ணென விசிக மாரி சொரிந்தனன் சுரர்கள் அஞ்ச.

வானிடைப் புகுந்த வீரவாகுதேவர் வெலற்கரிய சூரபன்மன் மகன் முன்பு அவன் காணும்படி நேரிட்டுப்போய் பலகோடி அம்புகளை அவன்மீது சொரிந்தார். அதுவேளை பகைவனான பானுகோபன் அவனும் சீறி சொல்லப்பெறும் சிறப்புடைய வில்லை வளைத்துத் திடீரென அம்புகளை மழைபோலச் சொரிந்தான். அவன் செயலைக் கண்ட தேவர்கள் அஞ்சிடும்படியாக. 109

நீரொடு கனலும் மாறாய் நெடுஞ்சினந் திருகி நின்று
போரினை இழைப்ப தென்ன இருவரும் பொருது நின்றார்.
ஓரிறை அளவை தன்னில் ஓராயிர நூறு கோடி
சாரிகை திரிந்த அம்மா அனையவர் தடம்பொற் றேர்கள்.

நீருடன் நெருப்பும் தம்மில் மாறுபட்டுப் பெருகிடும் கோபம்கொண்டு நின்று போரினைப்புரிகின்றன என்பதை ஒத்து இருபேரும் போரிட்டு நின்றனர். ஓர் இறைப்பொழுது காலத்தில் இருவருடைய பெரும் பொன்னான தேர்கள் இடம் வலம் எனவளைந்து வளைந்தோடி மாறிமாறித் திரிந்திட. 110

ஏற்றிகல் புரியும் வீரர் எதிரெதிர் துரக்கும் வாளி
நாற்றிசை கொண்ட அண்டப் பித்திகை காறும் நண்ணி
மேற்றிகழ் பரிதிப் புத்தேள் வியன்கதிர் வரவு தன்னை
மாற்றியெவ் வுலகு ளோர்க்கு மலிதுயர் விளைத்த அன்றே.

ஒருவரை ஒருவர் எதிரேற்றுப் போரிடும் வீரர்; ஒருவர் மீது ஒருவர் செலுத்திடும் அம்புகள் நான்கு திக்கிலும் விளங்கிக் கொண்ட அண்டங்களின் சூழ்வுகள் தோறும்போய் மேலாகத்திகழ்கின்ற சூரியக்கடவுளின் சிறந்த ஒளிக்கிரணங்களின் வரவினை மாற்றி எல்லா உலகில் உள்ளோர்க்கும் ஆற்றவும் பெருகிடும் துயரினை அந்த அம்புகள் விளைப்பன. 111

செற்றமொ டிவர்கள் வீசுந் திருநெடுங் கணைகள் யாண்டும்
முற்றிடு கின்ற காலத் துகுவன கவன மான்தேர்
அற்றன புரவி மாலை அவிந்தன களிற்றின் ஈட்டம்
இற்றன அவுணர் சென்னி இறுவன பூதர் யாக்கை.

கோபத்துடன் இவர்கள் வீசுகின்ற சிறப்புடைய நெடுங்கணைகள் யாவும் எங்கும் சென்று பரந்து படுகின்றமையால் அங்கங்குள்ள குதிரை பூட்டிய தேர்கள் முறிபடுகின்றன. குதிரைப்பந்திகள் அழிந்தன. அதுவன்றி யானைக் கூட்டங்கள் அழிந்தன; அசுரர்தலைகள் அறுகின்றன. பூதங்கள் உடலும் அறுந்து வீழ்கின்றன. 112

கிட்டுவ சேணிற் செல்வ கிளருவ கிடைத்துப் பின்னும்
முட்டுவ ஒன்றையொன்றை இடம்வலம் முறையிற் சூழ்ந்து
வட்டணை புரிவ வானோர் மதிக்கவும் அரிய வல்லே
எட்டுள திசையும் விண்ணுந் திரிவன இருவர் தேரும்.

இருவருடைய தேரும் ஒன்றை ஒன்று கிட்டுவ; மிகு தூரத்தில்போவன; மேல் எழுவன மறைந்து பின்னரும் ஒன்றை ஒன்று முட்டிக்கொள்வன; ஒன்றை ஒன்று இடம் வலம் முறையின் சூழ்ந்து ஒன்றை ஒன்று வட்டமாகவருவன. தேவர்கள் இது யாருடைய தேர் என மதித்திடவும் முடியாதபடி வேகமுடன் செல்வன. விரைவாக எட்டுள திசையும் வானும் எங்கும் திரிவன. 113

இகழுவர் முனிவர் வெஞ்சூள் இயம்புவர் வன்மை நோக்கிப்
புகழுவர் உரப்பி வீரம் புகன்றெடுத் தழைப்பர் பூசல்
மகிழுவர் நகைப்பர் வெற்றி வால்வளை முழக்கஞ் செய்து
திகழுவர் கணையின் மாரி சிந்துவர் தெழித்துச் செல்வர்.

ஒருவர் நிலைகண்டு ஒருவர் இகழுவர் முனிவர் கொடிய சபதம் பல பேசுவர். ஒருவர் வலிமை கண்டு புகழுவர் உரப்பி வீரம்பேசி வாவென அழைப்பர். போரை மகிழுவர். சிரிப்பர் வெற்றிச்சங்கை இடை இடை முழக்கம் செய்துதிகழ்ந்திடுவர்; பின்னர் அம்பின் மழையைச் சொரிவர்; கர்ச்சித்தவாறு செல்வர். 114

புரந்தனை அட்ட செல்வன் புதல்வனும் அவுணன் சேயும்
விரைந்தெதிர் மலைந்த காலை முறைமுறை வெகுண்டு விட்ட
வரந்தெறு பகழி மாரி அகிலமும் விரவிச் செல்லக்
கரந்தனன் இரவி திங்கள் கலைகளுங் குறைந்த தன்றே.

திரிபுரமெரித்த சிவபிரானது செல்வக் குமரன் வீரவாகுதேவரும் சூரபன்மன் புதல்வன் பானுகோபனும்; இவ்வாறு அம்பினைச் செலுத்தி விரைவாக எதிரிட்டுப் போர்புரிந்த நேரத்து; அவர்கள் முறை முறை கோபத்துடன் விடுத்த அம்பாகிய மழை அகில உலகமும் பரந்துசெல்ல அவற்றினூடு சூரியனும் சந்திரனும் மறைந்தார்கள். அதுவன்றி அவர்களது கலைகளும் குறைந்தன. 115

**வேறு**

காலொப்பன கூற்றொப்பன கனலொப்பன கடுவின்
பாலொப்பன உருமொப்பன பணியசர்புரம் பொடித்த
கோலொப்பன கதிரொப்பன குன்றந்தனைக் கொன்ற
வேலொப்பன இருவீரரும் விடலுற்றிடு விசிகம்.

இரு வீரரும் விடுகின்ற அம்புகள் புறப்பட்டுச் சென்றபோது காற்றேப்பன சில. இயமனை ஒப்பன சில. நஞ்சின் கடுமைபோல்வன சில. இடியை ஒப்பன சில. பணியாத அசுரரின் புரங்களைப் பொடி செய்த அம்பான விஷ்ணுமூர்த்தியை ஒப்பன சில; சூரியனை ஒப்பனசில. கிரவுஞ்சமலையைப் பொடிசெய்த வேலொப்பன சில. 116

வரைபுக்கன புயல்புக்கன வான்புக்கன மறிதெண்
திரைபுக்கன கடல்புக்கன திசைபுக்கன திசைசூழ்
தரைபுக்கன அண்டத்துழை தனிற்புக்கன பிலத்தின்
நிரைபுக்கன இளையோனுடன் அவுணன்விடு நெடுங்கோல்.

எம்பிரான் ஆறுமுகனின் இளையோரான வீரவாகுதேவருடன் பானுகோபனுன அசுரன் விடுகின்ற நெடிய அம்புகள் மலைகளில் புகுந்தன. மேகத்தில் புகுந்தன; வானில் புகுந்தன மதிக்கின்ற தெள்ளிய திரைகளுடைய கடலில் புகுந்தன; திசைகளில் புகுந்தன; திசைகளில் சூழ்ந்த பூமியில் புகுந்தன. அதுவன்றி அண்டங்களின் சூழலில் தனியே செல்வன. பாதாள உலகின் திசைகளில் புகுந்தன. 117

திரிகின்றன இருவோர்விடு தீவாளியும் அவைபட்
டெரிகின்றன புயலின்குலம் இருநாற்றிசைக் கரியுங்
கரிகின்றன புவிவிண்டன கடல்வற்றின உடுமீன்
பொரிகின்றன உலகெங்கணும் புகைவிம்மிய தன்றே.

இருவரும் விடுகின்ற தீய அம்புகள் எங்கும் திரிகின்றன. அந்த நெருப்பின் அம்பு பட்டு முகில்கள் கூட்டம் எரிகின்றன. எட்டுத்திக்கு யானையும் கரிந்து போகின்றன. பூமி பிளக்கின்றது. கடல் வற்றியது. நட்சத்திரங்களானவை பொரிகின்றன; (மீன் நெருப்பில் பொரிதல் போன்று) இவற்றால் உலகம் எங்கும் நெருப்பின் புகை எழுந்து பரந்து விம்பியது. 118

பொடியோங்கிய திறன்மொய்ம்புடைப் புலவன்விடு சரத்தை
வடியோங்கிய கணைமாரியின் அருக்கன்பகை மாற்றும்
கொடியோன்மகன் விடுவாளியைக் குதைவெங்கணை மழையால்
நெடியோன் தனித் துணையானவன் அறுத்தேயுடன் நீக்கும்.

திருநீறு விளங்கிப் பொலிந்த திருமேனி உடைய அறிவிற் சிறந்த பெரியோன் வீரவாகுதேவர் விடும் அம்பினை வடித்துத்திறம்படச் செய்த அம்புகளாய மழையால் சூரியனுடைய பகைவன் பானுகோபன் மாற்றிடுவான். கொடியோனுன சூரபன்மன் மகன் பானுகோபன் விடுகின்ற அம்புகளை மொட்டம்பின் மாரியில் நெடிய வடிவாகி எங்கும் நிறைகின்ற ஆறுமுகப்பிரானுக்கு இளையோரான வீரவாகுதேவர் அறுப்பார். 119

போரிவ்வகை இருவீரரும் பொரலுற்றிடு பொழுதில்
பாரின்றலை நின்றோர்களும் இமையோர்களும் பார்த்தார்
ஆரிங்குளர் இவரேயென அமர்செய்தவர் அடுபோர்
வீரர்தனில் எவரேயிவர்க் கிணையென்று வியந்தார்.

போரினை இவ்வாறு இருவீரரும் புரிகின்ற காலையில் பூமியின் இடத்து நின்றோர்களும், வானில் நின்ற தேவர்களும் இதைப் பார்த்தாராய் அம்மம்மா! ஆர்தான் இங்கு இத்திறமுடைய போரை இவர் செய்தது போன்று செய்தவர். கொலை நிகழும் போரிலே வல்லமைமிக்க வீரரிலே எவர்தான் இவர்கட்கு இணையாவார் என வியந்தார்கள். 120

அவ்வேலையின் நூறாயிரம் அடுவெங்கணை அதனால்
மைவேலையில் வருபானுவைத் தளைபூட்டிய மைந்தன்
செவ்வேலவன் திருத்தூதுவன் தேரைப்பொடி படுத்தி
எவ்வேலையும் வெருக்கொண்டிட இடியேறென ஆர்த்தான்.

அவ்வாறுனவேளையில் ஓர் இலக்கம் கொடிய அம்பினை; கரிய கடலில் உதித்து வரும் சூரிய தேவனைச் சிறைசெய்தபானுகோபன் விடுத்து; செம்மையான வேலைக் கையில் ஏந்திய பெருமானின் திருவுடைய தூதுவர் வீரவாகுதேவர் ஏறிய தேரைப் பொடியாக்கி அழித்து எந்த ஒரு கடல்களும் அஞ்சிடும்படி இடியேறுபோல பானு கோபன் கர்ச்சித்தான். 121

ஆர்க்கின் றுழி விறல்மொய்ம்புடை அறிவன்சினந் திருகிச்
சீர்க்கின்றவிண் மிசைநின்றுதன் சிலைகாலுற வாங்கிக்
கூர்க்குங்கணை ஓராயிரங் கொளுவித்துரந் திட்டுக்
கார்க்கின் றமெய் அவுணர்க்கிறை கடுந்தேர்துகள் கண்டான்.

பானுகோபன் தேரை அழித்து வீரத்தால் கர்ச்சித்தநேரத்து; வலிமையான தோளுடைய அறிவு சொரூபமான வீரவாகுதேவர் கோபமுற்று; சிறப்புடைய வானில் நின்று தனது வில்லை கால்கொடுத்து நன்கு வளைத்து கூர்மை விளங்கும் அம்புகள் ஓர் ஆயிரத்தை வில்லில் கொளுவி அவைகளைச் செலுத்தி மேகம் போலும் கருமைகொண்ட அசுரர்க்கு தலைவனுகும் பானுகோபனது மிகு விசையுடைய தேரை துகள்படுத்தினர். 122

வையந்துக ளாய்இற்றிட வானத்திடை நின்ற
வெய்யன்பெருஞ் சினஞ்செய்துவில் வீரன்தன துரத்தின்
ஐயஞ்சுநஞ் சயில்வாளிபுக் கழுந்தும்படி தூண்டிச்
சையந்தனைக் கடந்தேவளர் தடந்தோள்புடைத் தார்த்தான்.

தனது தேர் பொடியாகி மாளலும் வானத்திடை நின்ற கொடிய பானுகோபன் பெரும் சினம் கொண்டு; வில்வீரனை வீரவாகுதேவரின் மார்பில் இருபத்தைந்து நஞ்சுடைய அம்புகள் சென்று ஊடுருவித் தைக்கும்படி விடுத்து மலைபோன்ற தனது தோளை அடித்து ஆர்த்தான். 123

உரத்திற்புகு நெடுவாளியின் உளநொந்திடும் உரவோன்
கரத்திற்சிலை தனிலேழிரு கணைபூட்டினன் செலுத்தி
வரத்திற்றனக் கிணையில்லதொர் மன்னன்மகன் தனது
சிரத்திற்பொலி மகுடந்தனைச் சிந்தித்துகள் செய்தான்.

பானுகோபன் விடுத்திடலும் நெஞ்சில் படுகின்ற கொடிய அம்புகள் ஊடுருவ லால் உள்ளம் நொந்திட்ட வலிமைமிக்க வீரவாகுதேவர் வில்லில் பதினன்கு அம்பி னைப் பூட்டிச் செலுத்தி; வரம்பெற்றவர்களில் தனக்கு இணையிலாத சூரபன்மன் மகன் பானுகோபனினது தலையில் பொலிவுறும் முடியினை அழித்து துகளாக்கினர். 124

மாண்கொண்டிடு முடிசிந்திட வறியானெனத் திகழும்
ஏண்கொண்டிடு சூரன்மகன் ஏழேழ்கணை தூண்டித்
தூண்கொண்டிடு திறல்மொய்ம்புடைத் தொல்லோன்உரம் பிணித்த
நாண்கொண்டிடு கவசந்தனை நடுவேதுணித் திட்டான்.

மாட்சிமை உடைய முடி அழிந்து போதலாலே அழகற்று வறியோன் எனும் படி நிற்கும் இறுமாப்புடைய சூரபன்மன் மகன் பானுகோபன் பதினன்கு அம்புகளைத் தூண்டி தூண்கொண்ட வலிபோலும் கடினமான தோளுடைய வீரவாகுதேவர் நெஞ் சில் பூட்டிய நல்ல நாண் கயிறுகள் பின்னப்பட்ட கவசத்தை நடுவிலே துணித்து வீழ்த்தினன். 125

ஆகம்படு நெடுஞ்சாலிகை அழிவெய்தலும் அழல்கால்
நாகம்படு சடையோன்சுதன் நன்றீதென நகையாப்
பாகம்படு பிறைபோலெழு பகுவாய்க்கணை செலுத்தி
மேகம்படு மணிமேனியன் வில்லைத்துணி படுத்தான்.

தனது மேனியில் அணிந்த கவசம் அழிவெய்தலும் அதுவேளை நெருப்பைக்கக்கிடும் நஞ்சுடைய நாகபாம்பினை அணிந்த சடையுடைய கடவுள் சிவபெருமான் குமரன் வீரவாகுதேவர் இது நன்று என சிரித்து; அதுவேளை பிளவுபட்ட பிறை போன்ற அகன்ற முகங்களை உடைய ஏழு அம்பினைச் செலுத்தி மேகத்தை ஒத்த நீல மணி போலும் ஒளிகொண்ட மேனியுடைய பானுகோபனது வில்லை முறித்தார். 126

வில்லொன்றிரு துணியாதலும் வெங்கூற்றினும் வெகுளா
அல்லொன்றிய மனத்தீயவன் அயன்முனகொடுத் துள்ள
எல்லொன்றிய தனிவேலினை எடுத்தீங்கிவன் தன்னைக்
கொல்லென் றுரைத் துரவோன்மிசை குறித்துச்செல விடுத்தான்.

இராப்போலும் பொல்லாங்குடைய தீயமனமுடைய பானுகோபன் கைப்பிடித்த ஒரு வில்லும் துணிபட்டுப் போதலும் கொடிய இயமனிலும் மிகக் கோபமடைந்து பிரமதேவன் முன்னர் நாள் தனக்கு கொடுத்துள்ள ஒளி மிக்க தனியான வேலினை எடுத்து அதனை நோக்கி நீ இங்கு இந்த வீரவாகுதேவனை சொல் எனச் சொல்லி வீரவாகுதேவர் மேல் இலக்காகச்சென்றிட விடுத்தான். 127

வேறு

விடுத்த காலையின் இத்திறந் தெரிந்திடும் விறலோன்
அடற்பெ ருங்கணை ஆயிர கோடிகள் அதனைத்
தடுத்தி டும்படி செலுத்தினன் அவையெலாந் தடிந்து
வடித்த வேற்படை வான்வழிக் கொண்டுவந் ததுவே.

விடுத்த நேரத்து இத்தன்மை தெரிந்த வீரவாகுதேவர் கொலைத்தொழில் மிக்க கொடிய அம்புகள் ஆயிரம் கோடியை அந்த வேலினைத் தடுத்திடும்படி செலுத்தினார்: ஆனால் அவ்வேல் அந்த அம்புகள் யாவற்றையும் அழித்துவிட்டு; வடித்தெடுத்த அந்த வேல் வானவழியால் வீரவாகுதேவர்மேல் வந்தது. 128

வந்த காலையில் அதன்வலி நோக்கியே வள்ளல்
இந்து சேகரன் உதவிய நாந்தகம் எடுத்துக்
கந்த வேளடி வழுத்தியே கருதலன் விடுத்த
குந்த வெம்படை இருதுணி பட்டிடக் குறைத்தான்.

வேல் வந்திடும் காலையில் அதன் வலிநோக்கிய வீரவாகுதேவர்; சந்திரனை முடி மீதணிந்த கடவுள் சிவபிரான் கொடுத்துள்ள வாளை எடுத்து; முருகப்பெருமான் திருவடி மலர்களைத் துதித்து; பகைவன் பானுகோபன் விடுத்திட வந்த கொடிய அந்த வேல் இரு துணியாகும்படி வெட்டினார். 129

குறைத்த காலையில் அமரர்கள் ஆடினர் கொடியோன்
திறத்த ராகிய அவுணர்கள் ஏங்கியே திகைத்தார்
அறத்தை யாற்றிடும் இளையவன் அங்கது நோக்கி
எறித்த ருஞ்சுடர் வாளினை உறையகத் திட்டான்.

வீரவாகுதேவர் வேலினை வெட்டித் துணித்த நேரத்தில் தேவர்கள் அது கண்டு ஆடினார்கள்: கொடியோனாய பானுகோபன்பால் நின்ற அசுரர்கள்ஏக்கமுற்றுத் திகைத்தார்கள். தருமத்தைப் புரிகின்ற இளையோராகும் வீரவாகுதேவர் அதனைப்பார்த்து பரந்து ஒளிவீசிடும் அந்த வாளை மீளவும் உறையிலே போட்டார். 130

அள்ளி லைத்தனி வேற்படை இறுதலும் அதனைக்
கள்ள விஞ்சைகள் பயின்றிடு சூர்மகன் காணாத்
தெள்ளி தம்மவோ என்படை வலியெனச் செப்பிப்
பொள்ளெ னக்கர வாளமொன் றெடுத்தனன் பொருவான்.

கூரிய இலைபோலும் முகமுடைய வலியுடைய வேற்படை அழிதலும் அதனை கள்ளத்தனமான வித்தைகளைப் பயின்று அதில் சமர்த்தனுன சூரபன்மன் மகன் கண்டு; அம்மவோ! மிகு நன்றாயிருக்கின்றது எனது வேற் படையின் வலி எனச் சொல்லித் திடீரெனத் தனது கையில் வாள் ஒன்றினை எடுத்துக்கொண்டான். வாட் போர் புரியும் பொருட்டாக. 131

கருமு கிற்புரை மேனியன் கரத்தில்வாள் பற்றி
விரவு மின்னுவின் கொடியென விதிர்ந்துமுன் வீசி
உருமி டிக்குலத் தாவலங் கொட்டியார்த் துருத்துச்
செருமு யற்சியாற் சீரிளங் கோவின்முன் சென்றான்.

கறுத்த முகில்போன்ற மேனியுடைய பானுகோபன் கையில் வாளினை எடுத்து மிக நெருங்கி பளிச்சிடும் மின்னற் கொடிபோல் அதைச்சுற்றி முன்னாக வீசிக் கொண்டு இடியேற்றின் கூட்டம்போல் உரக்கக் கத்தி ஆவலங்கொட்டி ஆர்ப்பரித்து வாட்போர் செய்திடும் முயற்சியால் சீருடைய வீரவாகுதேவர்முன் சென்றான். 132

சென்ற காலையில் இளையவன் தன்பெருஞ் சிலைகால்
ஒன்ற வாங்கியே பகழிபல் லாயிரம் உய்த்து
வென்றி வாட்படை யானுரங் கிழித்திட விடர்செய்
குன்றில் வீழ்தரும் அருவிபோல் வீழ்ந்தது குருதி.

பானுகோபன் சென்ற காலையில் வீரவாகுதேவர் தனது பெருவில்லை கால் இரு புறமும் ஒன்றும்படி சிக்காராய் வளைத்து அம்புகள் பல ஆயிரத்தைச் செலுத்தி வெற் றிதரும் வாட்படையை கைபிடித்த பானுகோபன நெஞ்சினைக் கிழித்திட; அவன் மார்பில் இருந்தும் இரத்தம்; பிளவுபட்ட மலையிலிருந்தும் வீழ்ந்திடும் அருவிபோல் வடிந்தோடியது. 133

பரிதி மாற்றலன் மிசைவரு பகழியும் பாரான்
குருதி வீழ்தலும் உரம்பகிர் வுற்றதுங் குறியான்
ஒருதன் மானமுந் தானுமா யோடினன் குறுகிச்
சுருதி யன்னவன் சிலையினை வாளினல் துணித்தான்.

சூரியன் பகைவன் பானுகோபன் தன்மேலாக வந்து தைத்திடும் அம்பினையும் பாரான். அல்லது மார்பால் இரத்தம் வடிய நெஞ்சுகிழிபட்டதையே கவனியான்; வென்றிடவேண்டும் என்றும் ஒருதனது மானமும் தானுமாய் ஓடினன்; ஓடிச்சென்று வேதங்களை ஒப்பிடும் அறிவினராகிய வீரவாகுதேவரது வில்லை தனது வாளினல் வெட்டினன். 134

வில்லி றுத்திடு விறலினேன் மிசைபடக் கிளர்ந்து
செல்லெ னத்தெழுந் தொருதன்வாள் வீசினன் திரிய
அல்ல லுற்றிடும் இமையவர் அங்கது நோக்கி
இல்லை மற்றிவன் இறந்தபின் அமரென்ப தென்றார்.

வில்லைவெட்டிய வீரன் பானுகோபன் பின்னர் மேற்பட எழுந்து இடிபோல் முழங்கிச் சத்தமிட்டு ஒரு தனது வலியுடைய வாளைச் சுழற்றிவீசியவாறு திரிதலும்; அல்லல் அடைந்திடும் தேவர்கள் அங்கு அத்தன்மையை நோக்கி இனி இல்லை இந்த பானுகோபன் இறந்தபின் செப்பமான ஒருபோர் என்றார்கள். 135

அங்க வெல்லையில் வீரவா குப்பெயர் அறிஞன்
திங்கள் சூடிய உலகடுந் தாதையிற் சீறித்
துங்க மிக்கதன் வாளுரீஇக் கறங்கெனச் சுற்றி
எங்கண் ஏகுதி என்றுபோய் அவுணனை எதிர்த்தான்.

அவ்வாறாகிய நேரத்தில் வீரவாகு என்னும் பெயருடைய பேரறிவாளர்; பானு கோபன் வானில் வாளை வீசித்திரிவதைக் கண்டு உலகினை அழித்திடும் தந்தை சிவபிரானைப்போன்று உருத்துச்சீறி; மேன்மை மிகுந்த தனது வாளை உருவி காற் றாடிபோல் சுழற்றி பானுகோபனே! எங்கே போகிறாய் நில் எனக் கூறிச் சென்று பானு கோபனை எதிர்த்தார். 136

ஏற்றெ திர்த்திடும் எவ்வேலையின் இரவியம் பகைஞன்
காற்றெ னச்சென்று நேர்ந்தனன் இருவருங் கலந்து
சீற்ற நீர்மையால் வாளமர் உழந்தனர் செங்கட்
கூற்றும் அங்கியுஞ் சமர்புரி கின்றகோட் பென்ன.

வீரவாகுதேவர் எதிரே புகுதலும் அந்த எல்லையில் சூரியனின் பகைவன் பானுகோபன் காற்றைப்போல் வேகமுடன் வந்து வீரவாகுதேவரை எதிர்த்தனன். இருவரும் வாளை ஏந்தி கலந்து கோபத்தின் நிலையால் வாட்போர் புரிந்தனர். எது போல் எனில் சிவந்த கண்ணுடைய இயமனும் அக்கினிக் கடவுளும் இருவரும் எதிரிட்டுப் போரிடுதல் போன்று. 137

மாறு மாறுசென் றடிமுதல் உறுப்பினை வாளால்
வேறு செய்திட எறிகுவர் அன்னது விலக்கி
ஊறு செய்திற நாடுவர் இடைதெரிந் துருமல்
சூறை யாமெனச் சுற்றுவர் வட்டணை சூழ்வார்.

மாறி மாறிச் சென்று ஒருவரது கால் முதல் பல உறுப்புகளையும் வாளால் வேறுக்கி வெட்டிட எறிகுவர். அதனை மற்றவர் வாளால் விலக்கி திரும்ப வாள் வீசினவரை ஊறுசெய்திட ஓர் வாய்ப்பான செயல் தெரிந்து நாடுவர். அப்படியும் தருணம் பாராது சூறுவளிக்காற்றைப்போல் சுற்றுவார்; வட்டமாகவும் வருவார். 138

இன்ன தன்மையில் இருவரும் வாளமர் இயற்றி
மன்னு காலையில் சூர்மகன் விஞ்சையின் வலியால்
தன்னை நேரிலா இளையவன் தடக்கைவாள் அகற்றி
அன்ன வன்திருத் தோள்மிசை எறிந்தனன் அன்றே.

இன்னதன்மையாக வாட்போர்புரியுங்கால் சூரபன்மன் மகன் பானுகோபன் தனது வாள் வித்தையின் வலியால்; தன்னை நேரிலாத வீரவாகுதேவரின் பருத்த திருக்கையால் வீசிய வாள் வீச்சு ஒன்றைத் தட்டிவிட்டு அவருடைய திருத்தோள் மீது தனது வாளால் இலக்காக வீசினன். 139

மாற்ற லன்கர வாளினல் எறிதலும் வள்ளல்
ஆற்றல் மொய்ம்பிடைக் குருதியா றிழிதர அதுகண்
டேற்றம் எய்தினன் சூர்மகன் இவன்றனக் கிளையோன்
தோற்றி டுங்கொலென் றிரங்கினர் வானவர் துளங்கி.

பகைவன் தன்கைவாளினல் எறிதலும் அருள் வள்ளல் வீரவாகு தேவரின் பெருமைமிக்க தோள் நின்றும் இரத்தம் ஆறுபோல் பெருகிடலும்; அதுகண்டு சூரபன்மன் மகன் பானுகோபன் இனி எனதுதான் வெற்றி என தேறுதல் அடைந்தான். அது கண்ட தேவர்கள் கலங்கி நடுங்கி ஐய்யையோ! ஒருகால் இந்த பானுகோபனுக்கு எமது வீரவாகுதேவர் தோற்றிடுவாரோ என்று இரங்கினர்கள். 140

அன்ன காலையில் இளையவன் அறுமுகத் தமலன்
பொன்னின் சேவடி புந்தியில் உன்னியே புகழ்ந்து
மின்னு வானதன் வாட்படை வீசியே விரைந்து
துன்ன லன்வலத் தோளினை வலியொடு துணித்தான்.

அவ்வாறான காலையில் வீரவாகுதேவர் ஆறுமுகமுடைய அமலமூர்த்தியாகும் பெருமானின் பொன்னார்ந்த சேவடிகளை தமது மனதால் நினைந்து புகழ்ந்து துதித்து; மின்னலான தன்மைபோல் ஒளியுடைய தன் வாட் படையை வீசி விரைவாக பகைவன் பானுகோபனது வலத்தோளினை அதன் கையுடன் வெட்டி வீழ்த்தினர்; 141

துணித்த காலையில் வலதுகை தன்னொடு தொடர்ந்த
பணித்த னிச்சுடர் வாளினை இடக்கையால் பறித்து
மணித்த சும்புகொள் மொய்ம்புடை அவுணர்கோன் மற்றும்
தணிப்ப ருஞ்சினந் தன்னேடு முயன் றனன் சமரே.

வலது தோளையும் கையையும் துணித்துவிட்ட காலையில் பானுகோபன் துணிபட்ட வலக்கையுடன் சேரவீழ்கின்ற நாகரெத்தினம் போலும் சுடருடைய வாளை இடக்கையால் பற்றி எடுத்து, முத்தும் பொன்னும் சேர இழைத்த ஆபரணமணிந்த தோளுடைய பானுகோபன் பின்னரும் தணிக்கமுடியாத கோபத்துடன் போர் செய்யமுயன்ருன். 142

தீய வன்றனி முயற்சியை நோக்கியே திறலோன்
தூய வாள்கொடே அன்னவன் இடக்கையைத் துணிப்ப
மாயை தொல்படை விடுத்திடு வேனென மதித்தான்
ஆய காலையில் அறிஞனும் அவன்தலை அறுத்தான்.

ஒற்றைக் கையுடன் பானுகோபன் செய்திடும் முயற்சியை வீரவாகுதேவர் நோக்கி தூய்மையான தனது வாள்கொண்டு பானுகோபனது இடக்கையையும் வெட்டிட; பானுகோபன் இருகையும் இழந்தும் இன்னமும் மாயையாகும் முன்னைய பெரும் படை விடுவேனென மனதில் எண்ணினன் அவ்வாருகிய நேரத்தில் வீரவாகுதேவரும் பானுகோபனுடைய தலையை வாளால் அறுத்தார். 143

வாளில் அங்கவன் அடுதலுஞ் சென்னியும் வரைநேர்
தோளும் யாக்கையும் வீழ்ந்தன சூரியன் பகைஞன்
நாளு லந்தனன் அவனுயிர் வௌவியே நடுவன்
ஆளி மொய்ம்பனை வழுத்தியே தென்புலத் தடைந்தான்.

வாளால் பானுகோபனது தலையினை அறுத்தலும்; மலைபோலும் தோளும் உடலும் வீழ்ந்தன. சூரியன் பகைஞன் பானுகோபன் தன்வாழ்நாள் முடிவுற்று இறந்தான். அவனுடைய உயிரைப் பிடித்துக்கொண்டு இயமதேவன் வீரவாகுதேவரை வாழ்த்திக்கொண்டு தனதுலகான தென்புலத்துப் போயினன். 144

சூரன் மாமகன் முடிந்தது முனிவருஞ் சுரரும்
ஆரும் நோக்கியே ஆடினர் பாடினர் ஆர்த்தார்.
வீர வீரன்நீ யாமென இளவலை வியந்து
மாரி யாமென அவன்மிசை பொழிந்தனர் மலர்கள்.

சூரபன்மனின் பெருமகன் பானுகோபன் முடிவுற்றதும் அதனை முனிவரும் தேவரும் எல்லோரும் நோக்கி ஆடினர்கள் பாடினர்கள் ஆர்த்தார்கள்: வீரவீரன் நீர் தான் ஆகும் என எங்கள் இளையோராகும் வீரவாகுதேவரை வியந்து வாழ்த்தி அவர்மீது மழைபோன்று பூக்களைச் சொரிந்தனர். 145

நுவல ருந்திறல் சூர்மகன் பட்டது நோக்கி
அவ்வலம் எய்தியே அழிந்திடு பூதர்கள் ஆர்த்துத்
தவல ருந்திறல் வீரனை வழுத்தினர் தனது
கவலை நீங்கியே களித்தனன் செங்கதிர்க் கடவுள்.

சொல்லற்கரிய திறமையுடைய சூரபன்மன் மகன் பானுகோபன் வாளால் வெட்டப்பட்டு இறந்ததை நோக்கி; முன்னர் பானுகோபன் அம்பு சொரியும்போது அவனல் அவலப்பட்டு அழிவுற்ற பூதங்கள் யாவரும் துள்ளி ஆர்த்துத் தவறுதல் இலாத வீரமுடைய வீரவாகுதேவரைக் கைகூப்பிக் கும்பிட்டுத் துதித்தனர்; இது காலும் பானுகோபனல் துயருறுத்தப்பட்டு பயந்து திரிந்த சூரியக் கடவுளும் தனது கவலை யாவும் நீங்கிக் களிப்புற்ருன்.
146

அன்ன காலையில் வீரவா குப்பெயர் அறிஞன்
தன்னு ளஞ்சிறந் தகலிரு விசும்பினைத் தணவா
இந்நி லத்திடை வந்துதன் துணைவர்தம் மினத்தைக்
துன்னி யாங்கவர் புகழ்ந்திட இனையன சொல்வான்.

அவ்வாறான காலையில் வீரவாகு என்னும் பெயருடைய அறிஞன் தனது உள்ளம் மகிழ்ந்து அகன்ற பெரிய வானை விட்டு நீங்கி இப்பூமியின் போர் நிலத்து வந்து தனது துணைவர்கள் இனத்தை அடைந்து அங்கு அவர்கள் யாவரும் புகழ்ந்திட இவற்றைச் சொல்லி யருள்கின்றார் வீரவாகுதேவர். 147

ஆன தொல்பெரு மாயையால் நம்மைமுன் அலைத்த
பானு கோபனை அட்டனம் பகர்ந்தசூ ளுறவு
தானு முற்றிய தால்இனி எம்பிரான் தன்முன்
சேனை தன்னொடு மேவுதுஞ் செல்லுதி ரென்றான்.

மிகவும் பழமைகொண்ட பெரு மாயைப்படையால் நம்மை எல்லாம் மயக்கி கடலில் போட்டு முன் அலைத்த பானுகோபனைக் கொன்றனம். நாம் சொல்லிய சபதம் தானும் முடிவாகியது. இனி எமது பெருமான் திருமுன்பு எம்பெரும் சேனையோடு செல்வோம் புறப்படுங்கள் என்றார். 148

மிக்க வீரனித் தன்மையை உரைத்தலும் வினவி
முக்கண் நாயகன் குமரவேள் இணையடி முன்னம்
புக்கு நென்னலுந் தொழுதில நன்றுநீ புகன்றாய்
தக்க தேயிது என்றனர் துணைவராந் தலைவர்.

மிக்க வீரராகும் வீரவாகுதேவர் இத்தன்மையை உரைத்தலும் அது கேட்ட அவர்களும் சொல்வார்கள்; நாங்கள் மூன்று கண்ணுடைய சிவமூர்த்தியின் திருக்குமாரனின் என்றும் எமக்குத் துணையான திருவடிகளை நேற்றும் சென்று தொழுதிலேம். நல்லதை நீங்கள் சொன்னீர் இது தக்கதுதான் என்றனர் தம்பிமாராகிய தலைவர்கள். 149

ஆங்கவ் வெல்லையின் நம்பிதன் இளைஞரும் அடுபோர்
தாங்கு பூதருந் தானையந் தலைவரும் தழுவிப்
பாங்கர் வந்திடப் பொருகளம் ஒருவியே படர்ந்து
பூங்கி டங்குசூழ் பாசறை இருக்கையுட் புகுந்தான்.

அங்கு அந்த நேரத்தில் வீரவாகுதேவர் தமது தம்பிமார்களும் கொடும் போரைப் புரிந்து நின்ற வீரரும் பூதரும், பூத சேனைத் தலைவரும் நெருங்கிச் சூழ்ந்து பக்கர் வந்திட போர்க்களம் நீங்கியே சென்று பூக்கள் மலர்ந்து சிறந்த அகழி வட்டம் சூழ்ந்த பாசறையாகிய இருப்பிடத்தை சேர்ந்தருளினர். 150

சோதி நீடிய பாசறை புகுந்திடு தூயோன்
பூதர் தம்மொடுந் துணைவர்கள் தம்மொடும் போந்து
காத லாகியே அறுமுகத் தையனைக் கண்டு
பாத பங்கயந் தன்னிடைப் பன்முறை பணிந்தான்.

சோதியின் ஒளி நீடிய பாசறையில் புகுந்திட்ட தூயவரான வீரவாகுதேவர் பூதங்களுடனும் தம்பிமார் தம்மொடும்போய்; மனதில் பெருங் காதலாகி ஆறுமுகமுடைய ஐயர் பெருமானைக் கண்டு அவரது பாதபங்கயத்தில் பன்முறை அன்புடன் பணிந்திட்டார். 151

பரிந்து பன்முறை வணங்கியே எழுதலும் பகவன்
தெரிந்து நோக்கிநீ சூர்மக னோடுபோர் செய்து
வருந்தி ஆங்கவற் செற்றனை ஆதலின் மகிழ்ந்தாம்
விரைந்து கேண்மதி நல்குதும் வேண்டுவ தென்றான்.

மிக்க பரிவுடன் எம்பிரானை வீரவாகுதேவர் பலமுறை பணிந்து எழுதலும் ஆறு முகமுடைய பகவான் வீரவாகுதேவரைத் தெரிந்து நோக்கி, நீ சூரபன்மன் மகன் பானுகோபனுடன் போர்செய்து வருந்தி அங்கு அவனைக்கொன்ருய், ஆதலின் மிகவும் மகிழ்ந்தோம். வீரவாகுவே! உனக்கு வேண்டுவதைக் கேள் தந்தருள்வோம் எனத்திருவாய் மலர்ந்தருளினர். 152

என்று மூவிரு முகமுடைப் பண்ணவன் இயம்ப
நின்று போற்றிடும் இளையவன் எம்பிரான் நின்னை
அன்றி யான்செய்த செயலிலை ஆயினும் அடியேற்
கொன்று மற்றிவண் அருளிய வேண்டுமென் றுரைப்பான்.

என்று இன்னவாறு ஆறுமுகமுடைய பெருமான் எடுத்துக் கூறிட; அங்கு நின்று எம்பிரானைப் போற்றி செய்த வீரவாகுதேவர் எம்பெருமானே! தேவரீரை இல்லாமல் யான் செய்த செயல் யாதொன்றும் இல்லை. என்ருலும் அடியேனுக்கு இது ஒருவரம் இவ்விடம் அருள்புரிந்திடவேண்டும் என்று சொல்லியருள்வார். 153

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்.

கோலாகலமாகிச் சிறந்திடுகின்ற சங்கநிதி பதுமநிதி இரண்டுமுடன் தரணியெலாம் ஆள்கின்ற பெருவாழ்நாளைக்கொண்ட குபேரனது வாழ்க்கையையும் அடியேன் விரும்பேன். மேலுலகங்கட்கு அதிபனான இந்திரனது அரசினையும் ஓர் பொருளென கனவிலும் விரும்பேன். திருமால் பிரமன் பெறுகின்ற படைத்தல் காத்தல் என்னும் கடவுளர் பதவியையும் ஓர் பொருளென மதியேன். ஆனல் எக்காலமும் அழிவற்ற இன்பமாகும் நினது திருவடிகளின் அன்பையே வேண்டுவன் தமியேன். 154

அந்த நல்வரம் முத்தியின் அரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும் பெறுகிலர் சிறியேன்
உய்ந்தி டும்வகை அருள்செய வேண்டுமென் றுரைப்ப
எந்தை கந்தவேள் உனக்கது புரிந்தனம் என்ருன்.

அந்த ஒரு வரம் முத்தியிலும்பார்க்க அரியதான தொன்று. இதனைப் பெற வேண்டியே பல்காலும் சிந்தித்து அதற்காகப் பல நாள் தவம்முயன்று கிடக்கின்ற தபோதனர்களும் அதை இன்னமுமே பெறுகின்றிலர். ஆதலின் சிறியேன் உய்ந்திடும் பிரகாரம் எனக்கு ஈதொருவரத்தை அருள் செய்யவேண்டும்மென்று வேண்டி கூறுதலும்; அது கேட்டருளிய எந்தை கந்தக்கடவுள் வீரவாகுவை நோக்கி, உனக்கு யான் அதைக் கொடுத்தருளினேம் எனத் திருவாய் மலர்ந்தருளினர். 155

உடைய தொல்விறல் வாகுவுக் கிவ்வரம் உதவிப்
புடையி னில்தொழு துணைவர்க்கு நல்லருள் புரியா
அடைய மற்றவர் இருக்கைகள் வைகுவான் அருளி
விடைபு ரிந்தனன் யாவர்க்கு மேலதாம் விமலன்.

தம்முடைய மிகுமுன்னைய விறல்பூண்ட வீரவாகுதேவர்க்கு எம்பிரான் இந்த ஒரு வரத்தைக் கொடுத்தருளி; தம்பக்கரில் தொழுதவாறு நிற்கின்ற வீரவாகுதேவரது தம்பியர்க்கும் எம்பிரான் நல்லருள் புரிந்து அவர்கள் யாவரையும் ஒருங்கு தமது இருப்பிடம் சென்று தங்குமாறு நல்லருள்புரிந்து விடைகொடுத்தருளினர் யாவர்க்கும் மேலவரான நின்மலப் பொருளான முருகப்பெருமான். 156

செங்க திர்ப்பகை அட்டவன் முதலிய திறலோர்
புங்க வன்றனைத் தொழுதுதம் இருக்கையிற் போனர்
இங்கு மற்றிது நின்றிட அவுணர்தம் இறைவற்
கங்கண் உற்றிடு செய்கையை மேலினி அறைவாம்.

சிவந்த கிரணங்களையுடைய சூரிய தேவனைச் சிறைசெய்த பகைவனான பானுகோபனைக் கொன்றருளிய வீரவாகுதேவர் முதலிய வீரர்கள்யாவரும், எம்பிரானை ஆறு முகமுடைய ஈசனைத் தொழுது வரம்பெற்று தமது இருப்பிடம் போயினார்கள். இங்கு இது நின்றிட; இப்பால் பானுகோபன் இறந்திட சூரபன்மன் பால் அங்கு நடந்த செயல்களை இனிமேல் சொல்கின்றோம். 157

### வேறு

ஈதிவர் புரிந்ததேல் இறைவன் தன்னையுங்
காதுவர் என்பது கருத்துட் கொண்டெழா
வாதுவர் கவனமா வழிக்கொண் டாலெனத்
தூதுவர் ஓடினர் துளங்கு நெஞ்சினார்.

ஐயய்யோ! இந்த தனிவீரனான பானுகோபனை இப்படி இவர்கள் கண்ட துண்டமாக வெட்டிக் கொலை செய்வரென்றால் எமது அரசனையும் கொல்வார் என்பது நிச்சயம் என்று மனதில் எண்ணிக்கொண்டு அசுரதூதுவர் எழுந்து குதிரைப்பாகர் வேகமுடைய குதிரைமேல் பறந்து செல்வதுபோன்று; படபடக்கும் நெஞ்சுடன் ஓடிப் போனார்கள். 158

மதிதொடு கடிமதில் மகேந்தி ரப்புரத்
ததிர்தரு முரசொலி யவிந்து துன்பினான்
முதிர்வுறும் அழுகுரல் முழங்கும் வீதிபோய்க்
கதுமென அரசவைக் களத்துள் ஏகினார்.

சந்திரனை எட்டித்தொடும்படி ஓங்கிய காவல் மதில் கொண்ட வீரமகேந்திர புரத்து முன்பெல்லாம் சிறப்புடன் அதிர்கின்ற மங்கல முரசப்பறை ஓசை நீங்கி; எங்கும் துன்பத்தினால் மிகுந்துள்ள அழுகுரலோசை முழங்கிடும் வீதியூடு சென்று விரைவுடன் அரசசபையில் போயினார்கள் அந்தத் தூதுவர்கள். 159

துன்னிய பெரும்புனல் தூண்டு கண்ணினர்
உன்னருந் துயரினர் உயிர்க்கு நாசியர்
மன்னவன் இணையடி வணங்கி உன்மகன்
முன்னுறு தூதனால் முடிவுற் றானென்றார்.

ஓய்வின்றி வடிகின்ற பெருநீர் பெருகிடும் கண்ணினை உடையவர், நினைக்கமுடியாத துயரத்தினை உடையவர்; பெருமூச்செறியும் மூக்கினை உடையவர்: இத்தன்மையான சோகம் நிரம்பிய அத்தூதுவர்சூரபன்மன் திருவடிகளை வணங்கி அரசே! உன் மகன் முன்இங்கு வந்துபோன அந்தத் தூதுவனால் முடிந்து போனான் என்றார்கள். 160

தாழ்ந்தவர் மொழிந்திடு தன்மை கேட்டலுஞ்
சூழ்ந்திடு திருவுடைச் சூரன் என்பவன்
ஆழ்ந்திடு துயர்க்கடல் அழுந்தி ஒவென
வீழ்ந்தனன் புரண்டனன் உயிர்ப்பு வீங்கினான்.

காலில் தாழ்ந்த அந்தத் தூதுவர் மொழிந்திடுகின்ற அத்தன்மையுடைய வார்த்தையைக் கேட்டலும் எல்லாச்சிறப்பும் திருவும் சூழ்ந்து விளங்கிடும் சூரன் என்பவன் ஆழ்கின்ற துயரம் எனும் கடலில் மூழ்கி ஐயோ! எனக் கதறியவாறு வீழ்ந்தான், புரண்டான், மூச்செறியத் தொடங்கினான். 161

நக்குறு சுடரென நடுக்கம் உள்ளூற
மிக்கெழு குருதிநீர் விழிகள் கான்றிடத்
தொக்குடல் வியர்ப்பொடு துளக்கங் கொண்டிட
அக்கணம் மயங்கினன் அறிவு சோர்ந்துளான்.

அணைவுறப்போகும் விளக்கின் சுடர்போல நடுக்கம் உள்ளத்தில் தோன்றிட; மிகுந்து எழுகின்ற இரத்த நீரே கண்ணால் பெருகிட: பருத்த உடல் வியர்வையோடு பதைப்புக் கொண்டிட; அக்கணமே மயங்கினான், அறிவு சோர்ந்தான்' 162

தளர்ந்துடல் வெதும்புறத் தன்கண் சோர்வுற
உளந்திரி வுறஉயிர் ஊசல் ஆடிட
விளிந்தவ ராமென வீழ்ந்து மான்றவன்
தெளிந்தனன் இரங்கினன் இனைய செப்பினன்.

தளர்ந்த உடல் வெதும்பிடத் தனது கண் சோர்ந்துவிட, உள்ளமும் நிலைகெட்டு தடுமாற; இன்னிலையில் உயிர் போவதோ விடுவதோ என ஊஞ்சலாட, இறந்தான் என வீழ்ந்து மயங்கியவன், பின்னர் சிறிதுநேரத்தில் தெளிவுறப் பெற்று இரங்கி நின்று இவற்றைச் சொல்லி அழுகின்றான். 163

வேறு

மைந்தவோ என்றன் மதகளிறே வல்வினையேன்
சிந்தையயோ சிந்தை தெவிட்டாத தெள்ளமுதோ
தந்தையோ தந்தைக்குத் தந்தையிலான் கொன்றனனே
எந்தையோ நின்னை இதற்கோ வளர்த்தனனே.

ஐயா என் மைந்தனே! என்னுடைய மதகளிறே! ஆ! கொடுவினையேன் சிந்தையனே! என் சிந்தை தெவிட்டாத தெள்ளமுதே! என் தந்தையே! ஐயனே! தன் தந்தைக்கு தந்தையிலாதவன் வீரவாகு உன்னைக் கொன்றானே! என் ஐயாவோ! உன்னை இதற்கோடா நான் வளர்த்தேன்? 164

வன்னச் சிறுவர்பலர் மாய்ந்தார் அவர்மாய்ந்து
முன்னைத் துணையென் றுளங்கொண் டிருந்தனனால்
என்னைத் தனியேவைத் தெந்தையுமே குற்றனையேல்
பின்னைத் தமியேன் பிழைக்கும் படிஉண்டோ.

மிகு அழகிய என் பிள்ளைகள் பலர் இறந்தார்கள். அவர்கள் மாய்ந்திடவும் உன்னை நான் தஞ்சம் என உளம் கொண்டு இங்கிருந்தேன். அப்படி நினைவுற்ற என்னை நீ தனியேவிடுத்து என் ஐயா நீயும்போய்விட்டாய் என்றால்; பின்னை இனி தனியேன் பிழைக்குப்படியும் இனி வழிஉண்டோ? 165

ஒன்னார் சிறையைவிடின் உய்வுண்டாம் என்றுமுனஞ்
சொன்னாய் அதுவும்இகழ்ந் துன்னைத் தோற்றனனால்
என்னும் இனியதனை எண்ணுவதி யாவருக்குந்
தன்னால் வராத வினையுளதோ தக்கோனே.

அப்போது என்முன்னால் நின்று இரக்கத்துடன் ஐயா! தேவர் சிறையைவிட்டால் எமக்கு உய்வுண்டு எனச் சொன்னாய்; அதையும் நான் கேட்டுச் சொன்ன உன்னை இகழ்ந்தேனடா. இகழ்ந்து உன்னையே நான் இழந்தேன். இனி நான் ஏன் அதனை எண்ணி. இனி யாவருக்கும் தன்னால் வராத ஒரு வினை உண்டோ! எல்லார்க்கும் உறுவன அவரவர் செயலாலேயன்றோ? தக்க என்மகனே சொல்லாயோடா? 166

நன்றீ தலசமர்க்கு நண்ணுவது நண்ணலர்மேல்
என்றீர மாகஇசைத் தாயான் ஏகாமல்
சென்றீ எனவே செலுத்தியுனைப் போக்கினனால்
ஒன்றீங் குளதோ பிழையுன் மிசைஐயா.

ஐயா இந்நிலையில் பகைவருடன் போரிட போர்க்கு நாம் போவது நன்றல்ல என்று என்முன் நின்று மிகு இரக்கமுடன் சொன்னாய்; அப்போது போரிடத்தான் வேண்டுமெனச் சாதித்த நான் போகாமல் நீ போமகனே; என உன்னை விடுத்தேனே! விடுத்து உனைப்போக்கிவிட்டேன். ஐயோ என்ஐயா ஒரு பிழை இங்கு உன்மேல் உளதோ! 167

கைப்போது கொண்டு கடவுளர்க ளெல்லோரும்
முப்போதும் வந்து முறையால் வழிபடுவார்
ஒப்போதல் இல்லா உனதுமே லுள்ளபகை
இப்போ துடன்நீங்கி யேமுற் றிருந்தாரோ.

கையின்கண் அழகிய மலரை ஏந்திக்கொண்டு தேவர்கள் எல்லாரும் காலை மத்தியானம் மாலை என்ற மூன்று காலமும் வந்து உன்னை வழிபடுவாரே. ஐயோ! இப்படியாகப் பிறர் ஒருவர் இவ்வுலகில் இருந்துள்ளார் என்று ஒப்பாகச் சொல்ல முடியாதபடி இருந்தாய் நீ. அப்படியுள்ள உன்மேல் உள்ள பகையை இப்போது உடனுக நீங்கித் தேவர்கள் யாவரும் இன்புற்றிருந்தாரோ! 168

உன்னு ணேக்கஞ்சி உறங்கா துழன்றிடுமால்
இந்நாள் தனில்நீ இறந்தா யெனமகிழ்ந்து
பன்னுகப் பாயல் படுத்திருவர் கால்வருடத்
தொன்னுள் எனவே கவலையின்றித் துஞ்சானே.

உன்னுடைய ஆணைக்குப் பயந்து இவ்வளவு நாளுமே பாற்கடலில் பள்ளிகொள்ளாது உழன்று திரிந்த அந்தத் திருமால் இந்த நாளிலே நீ இறந்தாய் எனக்கேட்டு உடன் மகிழ்ந்து இனி பாற்கடலில் ஆயிரம் தலையுடைய அநந்தன் என்னும் பாம்பின் தடுக்கையிலே படுத்து இருமனைவியர்கள் இரண்டு காலையும் தடவிட முந்திய நாள்போலக் கவலையிலாது நித்திரை கொள்ளாரோ! 169

நந்தா னவர்குலத்து நாயகமே நண்ணினர்க்கோர்
சிந்தா மணியே திருவேயென் தெள்ளமுதே
எந்தாய் தனியேபோய் எங்கிருந்தாய் அங்கேயான்
வந்தாலும் உன்றன் மதுரமொழி கேட்பேனே.

நமது அசுரர் குலத்திற்கு ஒரு நாயகமே! என்மைந்தா; உன்னை அடைந்தார்க்கு வேண்டியதையே கொடுக்கும் சிந்தாமணியே! திருவே! எனது தெள்ளிய அமுதமே என் ஐயா தனியே நீபோய் எங்கடா இருப்பாய். அந்த இடம் தேடியான் அங்குவந்தாலும் கூட உனது மதுரமொழியைக்கேட்பேனே? 170

சோராத சூழ்ச்சித் துணைவர்சிறுர் எல்லாருஞ்
சேரார் பொருதலைப்பச் சென்றெழிந்து போயினரால்
ஆராய்ந் தெனதுதுயர் ஆற்றுவதற் காருமிலை
வாராய் புதல்வா கடிதோடி வாராயே.

சோர்விலாத நல்ல சூழ்ச்சிகளில் வல்ல மந்திரிகள் என்பிள்ளைகள் எல்லாரும் என்பகைவர் போரிட்டு அலைத்திட; இறந்துபட்டு போய்விட்டார்களே! நான்படும் வேதனையைக் கண்டு நீதியை ஆராய்ந்து எனதுயரம் ஆறவைக்க ஆருமில்லை; மகனே! நீயாதல் ஓடிவாடா! கடிதோடி என்ஐயா வாராயோ; 171

நீடித் திகழ்கதிரால் தீண்டி நினதுசிறை
வீடிச் சதுர்முகத்தோன் வேண்டிடநீ விட்டபின்னர்
வாடித் தளர்ந்து வசைபடைத்த வெய்யவனுர்
ஓடிக் ககனத் துளமகிழ்ந்து செல்லாரோ.

முன்னெருநாள் நீண்டு திகழ்ந்திடும் தனது கதிராலே உன்னைத் தீண்டி, அதற்காக நீ பிடித்துவந்து சிறைவைத்து அதில் அவதியுற்ற அந்தச் சூரியனை; அந்த பிரமதேவன் வந்து சிறை விடுவாய் மகனே என வேண்டிட; நீ சிறைவிட்ட பின்னரும் வாடித் தளர்ந்து மானமற்று வசையடைந்த அந்தச் சூரியனுர்! இனி வானில் சுதந்திரமாய் ஓடி உள்ளம் மகிழ்ந்து செல்லானே? 172

பற்றுர் அடித்தொண்டு பேணிப் பரந்துழலும்
ஒற்று னவனே உனைத்தான் அடவல்லான்
அற்றுர் தமதுடலுக் காவியாய்ச் சென்றிடவே
கற்று யேல்என்னை மறந்திடவுங் கற்றுயோ.

எனது பகைவன் முருகனுடைய ஏவற் தொண்டு புரிந்து அவர் சொற்படி அலேந்து உழந்துகொண்டு திரிகின்ற அந்தத் தூதுவனேடா உன்னைக் கொல்லவல்லான் மகனே! என்பகைவருடைய உடலுக்கு அவர்கள் தப்பி உயிர்பெற்று வாழும்படி உயிராகிட நீ இறந்துபோகும்படி கற்றுக்கொண்டாய் அன்றி, என்னை மறந்திடவும் நீ கற்ருயோ? 173

மாகொற்ற மைந்தன் மடிந்தான் எனக்கேட்டும்
ஏகிற் றிலேயால் இருக்கின்ற தின்னும்உயிர்
வேகுற்ற துள்ளம் மிகுதுயரம் வந்தவழிச்
சாகுற்ற தோர்வரமுஞ் சங்கரன்பாற் பெற்றிலனே.

மிகவும் மேன்மையுடைய மகன் இறந்தான் எனக்கேட்டும் எனது உயிர் போய் விடவில்லேயே! சாகாமல் இருக்கின்றது இன்னும் இந்த உயிர். ஐயோ என்னுள்ளம் வேகின்றதே; மிகுதுயரம் வந்த நேரத்தில்; நான் சாகவேண்டும் என்னும் ஒரு வரத்தை நான் சிவபிரான்பால் சாகாவரம பெற்றபோது பெறவில்லேயே! 174

வெற்றி யுளமதலே வீந்தால் விளியாமல்
மற்றும் எனதுயிரும் வைகும் வலிதாகச்
செற்றி டலும்ஆகா தென்செய்கேன் அழியாமல்
பெற்ற வரமும் பிழையாய் முடிந்ததுவே.

வெற்றியுள்ள வீரனை ஒருபிள்ளை இறந்தால் சாகாமல் இங்கு எனது உயிரும் வலிதாக இருக்கின்றது. ஐயய்யோ எனது இந்த உயிரை வலிதாக நான் தற்கொலே செய்யவும் முடியாது: நான் என்செய்வேன். நான் சாகாதிருக்கவேண்டும் எனப் பெற்றுள்ள வரமும் பிழையாக முடிந்ததுவே. 175

ஆவியே கண்ணே அரசே உனேச்சமருக்
கேவியே இவ்வா றிரங்குதற்கோ இங்கிருந்தேன்
கூவியே கொண்டுசெலுங் கூற்றுவன்ஒற் றேஅறியேன்
பாவியேன் இந்தப் பதிபுகுந்த தூதுவனே.

என் ஆவியே! என்கண்ணே! அரசே உனேப்போருக்கு அனுப்பிவிட்டு நீ இறந் தாய் எனக்கேட்டு இவ்வாறு புலம்பி அழுவதற்கோ நான் இங்கிருந்தேன். ஐயோ! என்பிள்ளேகளே உன்னை அழைத்துக்கொண்டு செல்கின்ற இயமனின் தூதுவனே நான் அறியேன்; இந்தப் பதியில் முருகனது தூதுவன் எனவந்த அவன். 176

கூற்றேன் நகரில் குறுகினேயோ அன்னதன்றேல்
வேற்றேர் இடந்தன்னில் மேவினேயோ யானென்றுந்
தேற்றேன் தனியே தியங்குகின்றேன் இத்துயரம்
ஆற்றேன் அரசேயென் னுருயிரே வாராயோ.

மகனே! நீ இயமனுடைய நகரில் போனயோ அல்லது வேறும் ஓர் இடந்தனில் போனயோ யானென்றும் அறியேன்: தனியேகிடந்து தியங்குகின்றேன். ஐயய்யோ இத்துயரை நான் சகிக்கேனடா. என் அரசே! எனது ஆருயிரே! நீவாராயோ! 177

என்னு இரங்கி இறைவன் வருந்துதலும்
அன்னுன் உழையில் அவுணர் சிலரோடித்
துன்னுர் களத்தில் துணிவுற்ற சீர்மதலே
பொன்னுர் உடலங் கொடுபுலம்பிப் போந்தனரால்.

என்று இப்படி இரங்கி அழுது சூரபன்மன் வருந்துதலும் அவன் பக்கரில்; சில அசுரதூதுவர்கள் பகைவருடன் போரிட்ட அப்பெரும் போர்க்களத்து இறந்துபோன சிறப்புடைய மைந்தன் பானுகோபனுடைய உடலே தூக்கிக்கொண்டு புலம்பியவாறு ஓடிவந்தார்கள். 178

**வேறு**

சேந்த குஞ்சிச் சிலதர்செஞ் ஞாயிறு
பாய்ந்த அண்ணல் படிவ மிசைக்கொளா
வேந்தன் முன்னுற உய்த்து விரைந்தவன்
பூந்தண் சேவடி பூண்டு புலம்பினர்.

சிவந்த மயிரினையுடைய அசுரத்தூதுவர் சிவந்த ஒளிக்கிரணமுடைய சூரியதேவனைக் கோபித்த பானுகோபன் உடலைத் தலையில் சுமந்து கொண்டுவந்து அரசனுகும் சூரபன்மன் முன்னால் அந்த உடலை வைத்து சூரனுடைய செந்தாமரைப்பூப்போலும் காலினை விரைவாகக் கைகளால் பற்றி வீழ்ந்து பணிந்து கிடந்தவாறு ஓவெனப் புலம்பி அழுதார்கள்; 179

அண்டர் தம்மை அருஞ்சிறை வீட்டியே
தண்ட கஞ்செய் தனிக்குடை மன்னவன்
துண்ட மாகிய தோன்றல்தன் யாக்கையைக்
கண்ட ரற்றிக் கலுழ்ந்து கலங்கினன்.

தேவர்களை எல்லாம நீக்கிடற்கரிய சிறையில் வைத்து; உலகை அரசாண்டுவரும் தனிக்குடையுடைய அரசன் சூரபன்மன்; துணிபட்டுப்போன தனது பெருமைந்தன் உடலத்தைக் கண்டபோதே கண்ணீர்பெருகிடக் கதறிப் புலம்பிக் கலக்கமுற்றான்; 180

அற்ற மைந்தன் சிரத்தினை அங்கையால்
பற்று நல்லெழில் பார்த்திடுங் கண்களில்
ஒற்றும் முத்தம் உதவும் உரனிலாப்
புற்ற ராவில் உயிர்க்கும் புரளுமால்.

சூரபன்மன் இவ்வாறு கண்ணீர் பெருகிட இறந்த தனது மைந்தனின் அறுபட்ட தலையை தனது அழகியகையால் எடுப்பான். அத்தலையின் அழகிய எழிலைப்பார்ப்பான். தன் கண்களில் அத்தலையை ஒற்றிடுவான். முத்தம் இடுவான். வலியிலாது புற்றில் இருந்திடும் பாம்புபோல் மூச்செறிவான் புரளுவான். 181

துஞ்ச லாகித் துணிவுற்றுந் தெவ்வர்மேல்
நெஞ்சு கொண்ட நெடுஞ்சினந் தீர்கிலை
விஞ்சு மானமும் வீரமும் வன்மையும்
எஞ்சு மேகொல் இனிஉன்னொ டென்னுமால்.

ஐயோடா மகனே! நீ துண்டாடப்பட்டு துணிபட்ட போதிலும் கூட உன்பகைவர்மேற்கொண்ட ஆற்றிடமுடியாத சினத்தை தீர்ந்திலை. உனதுமுகம் அதைக்காண்பிக்கின்றது. மேலோங்கிய மானமும் வீரமும் வலிமையும் இனியும்தப்பி மிஞ்சிடுமோ நீ போன பிற்பாடும் என்றழுவான். 182

கையி லொன்றைக் கதுமெனப் பற்றிடாச்
செய்ய கட்படு செம்புனல் ஆட்டியே
வெய்ய வற்கொடு விண்ணினுந் தந்தகை
ஐய ஈதுகொ லோவென் றரற்றுமே.

வெட்டுண்டகையில் ஒன்றை விரைவாகப் பிடித்து அதனை செவ்வனே தனது கண்ணில் வடிந்த இரத்தநீரில் தோய்வித்து ஐயோ! கொடிய சூரியதேவனைப் பற்றிக்கொண்டு வானில் நின்றும் கொண்டுவந்த கை இதுவோ என்று அழுவான்; 183

வாள ரம்படு வாளிகள் மூழ்கலில்
சாள ரங்க ளெனப்புழை தங்கிய
தோளை மார்பினை நோக்கும் தொலைவிலா
ஆளை நீயல தாருள ரேயெனும்.

கூரிய அரத்தால் தீட்டப்பெற்ற அம்புகள் தைத்து பானுகோபனது உடலை அது உருவிடலால்; யன்னல்போல துவாரங்கள் தங்கி இருக்கின்ற பானுகோபனது தோளை மார்பை எல்லாவற்றையும் பார்ப்பான். ஐயய்யோ இப்படியும் அம்புகள் உடலில் பட்டுருவவும் மானத்தால் நின்று போரிட்டாயே: ஆதலின் தொலைவிலாத வீரமுடைய வீரன் நீ ஒருவனே அன்றி வேறுயார் உளர் என்பான். 184

பாறு லாய பறந்தலை தன்னிடை
வேறு வேறது வாகநின் மெய்யினைக்
கூறு செய்தவன் ஆவி குடித்தலால்
ஆறு மோவென் னகத்துயர் என்றிடும்.

பருந்துகள் ஊன் தின்னும் பொருட்டு வட்டமிட்டு உலவுகின்ற போர்க்களத்திடத்து; இப்படி உனது உடலை வேறுவேருக வெட்டி வீழ்த்திய அத்தூதுவன் உயிரை நான்குடித்தல்லாமல் எனது மனத்துயர் ஆறிடுமோ என்பான். 185

மூண்ட போர்த்தொழில் முற்றிய என்மகன்
ஈண்டு வந்ததொர் தூதுவன் எற்றிட
மாண்டு ளானென் றுரைத்திடின் மற்றியான்
ஆண்ட பேரர சாற்றல்நன் றேயெனும்.

மூண்டுகொண்ட பல போர்த்தொழிலைச்செய்து எல்லா இடங்களிலும் வெற்றி கொண்ட என்மைந்தன் இங்கேவந்த ஓர் தூதுவன் வெட்டிட மாண்டுளான் என்று சொன்னல் இனியான் ஆண்டபெரிய அரசாட்சி மிக நன்ருக இருக்கின்றது என்பான். 186

சிரத்தை மார்பினைச் செங்கையைத் தொன்மைபோல்
பொருத்தி நோக்கிப் புரளுமென் புந்தியை
வருத்தும் ஆகுலம் மற்றது கண்டுநீ
இருத்தி யோவுயி ரேயின்னும் என்றிடும்.

பானுகோபனது வெட்டுண்ட தலையை மார்பை சிவந்த கையினைத் தொன்மை போலப் பொருத்திவைத்து அவன் உடலின் சிறப்பை நோக்கி ஐயோ என்று வீழ்ந்து புரண்டுகொண்டு! அம்மவோ! என்மனதை வருத்துகின்ற கவலையைக் கண்டும் என் உயிரே நீ இன்னமுமா போகாது கிடக்கின்ருய் என்பான். 187

மருளும் அங்கை மறிக்கும் மதலையை
அருளின் நோக்கி அழும்விழுஞ் சோர்வுறும்
புரளும் வாயிற் புடைக்கும் புவியிடை
உருளும் நீட வுயிர்க்கும் வியர்க்குமே.

செய்வதறியாது சூரன் மருளுவான். அழகிய கையை அடித்து உதறுவான். பிள்ளையை இரக்கத்துடன் பார்த்து அழுவான். அடித்துக்கொண்டு வீழ்வான். சோர்வுறுவான், கிடந்து புரளுவான். வாயில் அடிப்பான். பூமிமீது உருண்டு உருண்டு போவான் நெடிய பெருமூச்செறிவான். மேனி எங்கும் வியர்வை கொள்வான். 188

மன்னர் மன்னவன் மற்றிது பான்மையால்
இன்னல் எய்தி இரங்கலும் அச்செயல்
கன்னி மாநகர்க் காப்பினுள் வைகிய
அன்னை கேட்டனள் ஆகுலம் எய்தினாள்.

அரசர்க்கரசனான சூரபன்மன் இப்படி இந்த விதமான தன்மையால் பெரும் கவலை அடைந்து; இரங்கி துயரப்படலும் அச்செயலை; கன்னியாகும் துர்க்காதேவியின் காவல்உடைய நகரத்து அந்தப்புரத்தில் இருக்கும் பட்டத்துத் தேவியான தாய் பதுமகோமளை கேள்வியுற்றனள்; கேட்டபோதே பெரும் ஆகுலம் கொண்டாள். 189

நிலத்தில் வீழ்ந்து சரிந்து நெடுமயிர்
குலைத்த கையள் குருதிபெய் கண்ணினள்
அலைத்த வுந்தியள் ஆற்றருந் துன்பினள்
வலைத்த லைப்படு மஞ்ஞையின் ஏங்கினாள்.

பதுமகோமளை நிலத்தில் வீழ்ந்து சாய்ந்து கொடிய தனது தலையில் மோதியமையால் கூந்தலைக குலைத்திட்ட கையளாய்; கவலைமிகுதியால் இரத்தக் கண்ணீர் வருகின்ற கண் உடையவளாய்; கையால் வயிற்றினை பிசைந்து துயருறுபவளாய் சகித்திட முடியாது துன்பமுடையளாய் வலையிலே அகப்பட்டுக்கொண்ட ஓர் மயில் போன்று கிடந்து துடிப்பவளானாள். 190

அல்லல் கூர்ந்த அவுணன்றன் காதலி
தொல்லை வைகிய சூழலை நீங்கியே
இல்லை யாகிய என்மகற் காண்பனென்
றெல்லை ஆவலித் தோடினள் ஏகினாள்.

இவ்வாறு அல்லல்கொண்ட சூரபன்மனது பட்டத்துத்தேவி தான் இருந்த இருப்பிடத்தை விட்டுநீங்கி, இறந்து போய்விட்ட என் மகனைச் சென்று காண்பேன் என்று எழுந்து அதிவிரைவுடன் உடனடியாக ஓடிச்சென்று அரசசபை மண்டபத்தை வந்து அடைந்தாள். 191

மாவ லிக்கு மடங்கலொப் பான்தனிக்
காவ லிக்குத் துயர்வந்த கன்னிமீர்
நாவ லிக்கண நண்ணுதிர் என்றுகூய்
ஆவ லித்தனர் ஆயிழை மாரெலாம்.

பெரும் வலிமைக்கு சிறந்து சொல்லப்பெறும் சிங்கத்தை ஒத்தவனாகும் சூரபன்மனின் தனிப்பட்டத்திற்குரிய காதல் தேவிக்கு கலக்கம் வந்துள்ளது. கன்னியராகும் பணிப்பெண்களே! யாரும் சொல்லிய இக்கணமே ஓடிவாருங்கள் என்று கூவி அழைத்து ஆவலங் கொட்டி பதைபதைத்தனர் அங்குள்ள பெண்கள்யாவரும். 19

வாங்கு பூநுதல் மன்னவன் தேவிதன்
பாங்கர் மங்கையர் பற்பல ருங்குழீஇக்
கோங்க மன்ன முலைமுகங் கொட்டியே
ஏங்கி யேதுயர் எய்தி இரங்கினார்.

வளைவுற்று அழகுடன் சிறந்து மலர்போன்று மிருதுவான நெற்றியுடைய; அரசனது பட்டத்துத்தேவியான பதுமகோமளை பக்கராக பற்பலராகும் பெண்களும் கூடி; கோங்கம்பூவின் மொட்டினைப் போன்று பருத்துச் சிறந்த முலைகளில் ஓங்கி அடித்து; ஏங்கித் துயரம் கொண்டு அழுதார்கள். 193

இந்தி ரைக்கு நிகர்வரும் ஏந்திழை
அந்த மில்லதொ ராயிழை மாரொடு
முந்தி யேகி முடிந்து துணிந்திடு
மைந்தன் மீமிசை வீழ்ந்து மயங்கினாள்.

மகா இலக்குமிக்கு நிகரான பெண் பதுமகோமளை எல்லையில்லாத இந்த பெண்களுடன் இப்படி சோகமான துயரத்துடன் முந்தி ஓடிச்சென்று வெட்டுண்டு வீழ்ந்து கிடக்கின்ற தன்மகனின் உடலத்தின் மேல்போய் வீழ்ந்து அவன் உடல்மேல் கிடந்தபடியே மயங்கினுள். 194

மயங்கி னுள்பின் மனந்தெளி வெய்தினுள்
உயங்கி னுள்மிக ஒவென் றரற்றினுள்
தியங்கி னுள்உரும் ஏறு திளைத்திடு
புயங்க மென்னப் புரண்டு புலம்பினுள்.

மயங்கிய அவள் தனது மனம் தெளிவடைந்தாள். இளைப்புற்ருள். மிகவும் உரக்க ஐயோ என்று கத்தினுள். செய்வதறியாது தடுமாறித் தியக்கமுற்ருள். இடியேற்ருல் தாக்குண்ட ஓர்பாம்பு பதைத்துப் பதைத்து சோர்ந்திடுமாறுபோன்று துடிதுடித்துப் புரண்டு புலம்பி அழுகிருள். 195

வேறு

வெய்யோன் என்றூழ் தீண்டுத லோடும் விண்ணிற்போய்க்
கையோ டன்னுற் பற்றினை வந்தென் கண்முன்னம்
மெய்யோ டன்று வெஞ்சிறை செய்த முருகாவோ
ஐயோ கூற்றுக் கின்றிரை யாவ தறியேனே.

ஆ என்மகனே! அன்று சூரியனின் வெயில்கதிர் உன்மீது தொட்டிலில் நீ இருக்கும்கால் தீண்டுதலோடும் வானில் நீ சென்று உனது கையினுல் அந்த சூரியனைப் பிடித்துவந்து என்கண்முன்னுல் மிகு வலிமையுடன் சிறைசெய்த என் குழந்தையோ! ஐயோ! இப்படியான நீ இயமனுக்கு இன்று இரையானதை நான் அறியேனே. 196

பண்டே வானஞ் செந்தழல் மூட்டிப் பகைமுற்றுங்
கொண்டே சென்ருய் அப்பகல் உன்றன் கோலத்தைக்
கண்டேன் இன்றே இக்கிடை தானுங் காண்பேனே
விண்டேன் அல்லேன் இவ்வுயிர் தன்னை வினையேனே.

முன்னே வான உலகம் முழுவதையும் நீ நெருப்பிட்டுக்கொளுத்தி விட்டு எமது பகைவர் முழுப்பேரைவும் பிடித்துக்கொண்டு உன்தந்தை கண்டு மகிழ்ந்திட வந்தாயடா, அன்று பகல் உனது கோலத்தைக் கண்டேன். அத்தகைய சிறப்புடன் அன்று உன்னைக் கண்டேன் இன்று இக்கிடையாக நீ கிடப்பவும் காண்பேனே? கண்ட உடனேயே இந்த உயிரை பாவவினையுடைய கொடியவள் நான் விடவில்லையே. 197

செந்தேன் மல்கும் பூமகள் செங்கைக் கிளியொன்று
முந்தே நின்னை வேண்டிட மொய்ம்பால் அதுவாங்கித்
தந்தாய் நொந்தேற் கின்றொரு மாற்றந் தருகில்லாய்
அந்தோ அந்தோ செய்வகை ஒன்றும் அறியேனே.

செழுமைமிக்க தேன்சொரியும் தாமரைமலர்மேல் இருக்கும் மகா இலக்குமி தனது செங்கையில் வைத்திருந்த கிளி ஒன்றினை வாங்கித் தரும்படி முன்னே உன்னை நான் வேண்டிட உன் வலியால் வாங்கி அதைக்கேட்டவுடன் தந்தாய். அன்று ஒரு சொல் சொல்லுமுன் அதைச் செய்த நீ இன்று உன்னைப்பார்த்துப் பதைப்புடன் சொல்வேனுக்கு ஒருவார்த்தையும் சொல்கின்ருயில்லை. அந்தோ! அந்தோ! செய்யும் கருமம் ஒன்றும் யான் அறியேனே. 198

பாபத் தாலோ விண்ணவ ரானேர் பலர்கூறுஞ்
சாபத் தாலோ யாரினும் மேலாந் தனிமூவர்
கோபத் தாலோ எவ்வகை யாலோ குறியேன்யான்
சோபத் தீயால் வாடினன் நின்னைத் தோற்றேனே.

நாங்கள் செய்துகொண்ட பாவத்தின் விளைவாகிய காலத்தாலே: அல்லது பலரும் இட்ட சாபத்தாலேயோ; அல்லது எல்லார்க்கும் முதல்வராகும் பிரமா விஷ்ணு உருத்திரன் என்னும் மூவரின் கோபத்தாலோ? எவ்வகையாலோ நான் அறியேன் இங்கிருந்து சோகத் தீயால் வாடிடும்படி நான் உன்னையும் தோற்றேனே. 199

பொன்போல் மேனிக் கந்தனை இவ்வூர் புகுவித்துக்
கொன்போர் மூட்டி மைந்தரை எல்லாங் கொல்வித்துத்
துன்போ டிந்நாள் நீயும் இறப்பச் சூழ்ந்தாரே
என்போ லாக வானவர் மாதர் எல்லோரும்.

பொன் போன்ற மேனியுடைய முருகனை இந்த ஊரில் வரவைத்து: மிகவும் மேலான போரை உண்டுபண்ணுவித்து; என் மைந்தரை எல்லாம் கொல்வித்து அது மட்டுமன்றி துன்பத்துடன் நீயும் இன்று இப்படி இறந்திடும்படி சூழ்ச்சி செய்வித்தாரே இத்தேவர்கள். ஆதலின் என்னைப்போல இந்தத் தேவர்களின் பெண்கள் எல்லோரும் சோகத்தால் துயருறட்டும் என்றாள். 200

வான்று வுற்ற வச்சிர மொய்ம்பன் வடவைத்தீக்
கான்று லிக்கும் வன்னி முகத்துக் கழல்வீரன்
மூன்று நூற்றுப் பத்தினர் யார்க்கும் முதல்வந்த
தோன்று லென்றே நின்னை இறைஞ்சிச் சூழ்ந்தாரோ.

ஐயா என்மகனே நீ அங்கு சென்றுள்ளபோது; முன்னர் வானை அடைத்த வச்சிரவாகு என்னும் வீரன், வடவைமுகாக்கினி தோன்றி விளங்கும் அக்கினி முகமுடைய வீரக்கழல் அணிந்த வீரன். மூவாயிரம் மற்றையமைந்தர்கள் யாவரும் நீயும் அவர்போன இடத்திற்குப்போய் விடலும் எல்லார்க்கும்மூத்த எமது தோன்றலே நீயும் வந்தனையோ என நின்னை வணங்கிச் சூழ்ந்திட்டாரோ? 201

துன்றேர் பெற்ற மெய்யொடு புந்தி துணிவாகச்
சென்றே வானிற் புக்கனை நின்பாற் செலும்வண்ணம்
ஒன்றே உள்ளந் தான்துணி யாதால் உலைவெய்தும்
நன்றே நன்றே சிந்தையும் யானும் நண்பம்மா.

அழகுவிளங்கிடும் மேனியுடன் உனது மனமும் துணிந்துதான் வானில் சென்று புகுந்துகொண்டதோ. உன்னுடன் வந்து சேர்வதற்கு எனது உள்ளம் மட்டும் துணியாதாம், ஐயோ கிடந்து அலைகின்றதே! நன்றே நன்றே எனது சிந்தைக்கும் எனது உயிர்க்கும் இருந்திடும் பற்றுவது. 202

கருந்தேன் மொய்த்த வண்டென மின்னார் கட்கெல்லாம்
விருந்தே யாகும் நின்னடை காணும் விதியற்றேன்
மருந்தே அன்னாய் நின்னை இழந்தேன் மற்றிங்ஙன்
இருந்தேன் அல்லேன் துஞ்சினன் அன்றே இனியானே.

இனிதாகும் கருந்தேனில் மொய்த்திடும் வண்டுபோல; இங்குள்ள அழகுடைய பெண்களுக்கெல்லாம் பெருவிருந்தாய் இருக்கின்ற உனது அழகிய நடையைக்காணும் விதியை இன்றோடு அற்றேன். ஐயா அமிர்தம்போல்வாய்! உன்னை இழந்தேன் நான் இங்கு இருந்தேன் அல்ல நான் இறந்தேனடா இனியான். 203

நையா நிற்குந் தேவர் தமக்கு நனிதுன்பஞ்
செய்யா நிற்றல் நன்றல என்றேன் அதுதேரா
தையா நின்னைத் தோற்றனன் மன்னன் அவனுந்தான்
உய்வான் கொல்லோ தன்னுயிர் தானும் ஒழியாதே.

இரங்கி வேதனையுற்று நிற்கும் தேவர்களுக்கு மீண்டும் மிக்க துன்பத்தை செய்துகொண்டிருத்தல் நன்றல்லவென்று என் கணவனுக்கு பல நாட்சொன்னேன். அதை உணராத உன்தந்தை தன் செயலால் உன்னைத் தோற்றனன். என் அரசன் அவனும் இனி உய்வானோ? அவன் உயிர் அழியாததே. அழியாத தன்மையின் அகந்தையால் பலரையும் வருத்தி ஈற்றில் உன்னையும் தோற்ற அவனும் உய்வானோ என்றாள். 204

வேறு

என்றிவை பன்னித் தேவி இரங்கினள் இரங்க லோடு
நின்றிடு துணைவி மாரும் நீடுதொல் கிளைஞர் யாரும்
கன்றெழி புனிற்று என்னக் கதறினர் காமர் மூதூர்
வென்றியை நீங்கி அந்நாள் விழுமநோய் மிக்க தன்றே.

என்று இவற்றைத் தேவிபதுமகோமளை சொல்லி அழுது புலம்பி அழுதிடலும் அங்கு நின்ற அவளது துணைவியர்களும் நீண்டபெரு சுற்றத்தவரும் எல்லோரும் கன்றை இழந்த தலையீற்றுப் பசுப்போன்று கதறினர் அழகும் திருவும் பொருந்திய முதிய நகரம் வெற்றியாகும் நிலையை நீங்கி அந்நாளில் பெரும் துயரமான நோயே மிகுந்து எங்கும் கண்ணீரும் கம்பலையுமாக இருந்தது. 205

அன்னது காலை தன்னில் அவுணர்கோன் இரக்கம் நீங்கிப்
பன்னருஞ் சிறப்பின் மிக்க பதுமையே முதலோர் தம்மைத்
தொன்னிலை இருக்கை உய்த்துத் துண்ணெனச் சீற்றங் கொண்டு
தன்னுழைத் தொழுது நின்ற தானவர்க் கிதனைச் சொல்வான்

அவ்வாறாகிய காலையில் சூரபன்மன் தன்மனதில் கொண்ட இரக்கமும் கவலையும் நீங்கி சொலலற்கரிய சிறப்புடைய பதுமகோமளை முதலியோரை அவர்கட்குரிய இருப்பிடமாகும் அந்தப்புரம் சென்றிட விடுத்து அங்கு இருந்து அழவிட்டு; துண்ணெனக் கோபம்கொண்டு தன்பக்கரில் தொழுதவாறு நின்ற அசுரதூதுவர்க்கு இதனைச் சொல்வான். 206

மாற்றலர் தொகையை யெல்லாம் வல்லையில் இன்றே செற்றுச்
சீற்றமாய்க் குருதி வீட்டித் தீமகம் ஒன்றை ஆற்றி
ஈற்றுறு மைந்தன் தன்னை எழுப்புவன் இந்த மெய்யை
வீற்றொரு சாரின் இட்டு விடாதுபோற் றிடுதி ரென்றான்.

என்பகைவர் தொகையை எல்லாம் மிகுவிரைவில் இன்றே மாய்த்து கோபத்துடன் இரத்தாறு பெருகிடச்செய்து அதன்பின் நான் இங்குபெரியதொரு தீ வளரும் யாகம் ஒன்றைச்செய்து இறந்துபோன எனது மகனை எழுப்புவன். இவனது இந்த உடலைக் கைவிட்டிடாது ஓர்புறமாக வைத்திருங்கள் என கட்டளையிட்டான் சூரபன்மன். 207

அன்னது பலருங் கேளா அழகிதென் றெடுத்து மைந்தன்
பொன்னுடல் ஒருசார் உய்த்துப் போற்றினர் போற்ற லோடும்
மன்னவன் வெகுண்டு நந்தம் மாற்றலர் தொகையை யெல்லாம்
என்னிளை யோனுக் கூணா அளிப்பனென் றெண்ணங்கொண்டான்.

அந்த வரலாற்றை பலரும்கேட்டு அழகிது என்று பானுகோபனின் பொன்னுடலத்தினை ஓர்புறமாகவைத்து போற்றினர்கள் அப்படி அவர்கள் போற்றுதலும் சூரபன்மன் வெகுண்டு என்பகைவர்யாரையும் எனது தம்பி சிங்கமுகாசுரனுக்கு ஊணாகக் கொடுப்பேன் என எண்ணம் கொண்டான். 208

தும்பையஞ் சுழியல் வேய்ந்த சூர்முதல் இவ்வா றுன்னிச்
செம்புன லொழுகு பைங்கண் தூதரில் சிலரை நோக்கி
அம்புதி வடாது பாங்கர் ஆசுரத் தரசு செய்யும்
எம்பியை வல்லை ஓடிக் கொணருதிர் ஈண்டை என்றான்.

தும்பை மாலை சூடிய அசுரர் முதல்வன் சூரபன்மன் இவ்வாறு நினைந்து செம்புனல் ஒழுகுவது போன்று கவலைக்கண்ணீருடன் நின்ற தூதுவரில் சிலரை நோக்கி நீங்கள் சமுத்திரத்தின் வடக்கு எல்லையில் இருந்து ஆசுரம் என்னும் நகரில் அரசாள்கின்ற எனது தம்பி சிங்கமுகனை விரைவாக ஓடிச்சென்று இங்கு கொண்டு வாருங்கள் என்றான். 209

பானுகோபன் வதைப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1,922

